த. பா. நி. (க. வெ.) வரிசை எண் —826

# பிரிட்டன் வரலாறு

(கி. பி. 1603 வரை)

பட்டப் படிப்பிற்குரியது

ஆசிரியர்

**ந. சுதர்சன பாபு**, எம்.ஏ.,
பேராசிரியர்,
வரலாற்றுத்துறை,
அரசினர் கலைக் கல்லூரி,
உதகமண்டலம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — November, 1978
Number of Copies — 2000

T. N.T.B.S (C.P.) No. 826



**BRITISH HISTORY (Upto 1603 A.D.)**

R. Sudarsana Babu

**Price Rs. 14-40**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
**Kandeepam Printers,**
**3128-C, Anna Nagar,**
**Madras-600 040.**

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட் டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை குப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர் களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற் கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகை யில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாண வர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சி யைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல் களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **பிரிட்டன் வரலாறு** என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **826**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **861** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப் படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்த தாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவி க்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனங்கலந்த நன்றி உரியதாகுக!

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

தூசு படிந்த குறிப்பேடுகளில் வீணாக்கப்பட்ட காலத்தி[illegible] கதையைத் தெரிந்துகொள்ள விழைவதாக வரலாற்றறிஞர்க[illegible] மீது பொதுவாகக் குறை சொல்லப்படுகிறது. ஆயின், பழ[illegible] காலமே நிகழ்காலத்திற்கும் வருங்காலத்திற்கும் இணைப்பா[illegible] இருக்கிறது என்பது மறைக்க முடியாததும் மறக்கக் கூடாத[illegible]மாகும்.

மனித வரலாறு என்பது ஒரு தொடர்கதை. தொடரு[illegible] கதையில் எங்ஙனம் அத்தியாயங்கள் ஒன்றையடுத்து ஒன்[illegible] அமைகின்றதோ, அதுபோன்று மனிதர்களின் வரலாற்றிலும் தொடர்நிகழ்ச்சிகள் தவிர்க்க முடியாதனவாக அமைகின்றன. பழங்காலம் என்ற அந்தச் சொல்லில் அக்காலத்தில் வாழ்ந்த அந்த மனிதனின் உருவம், உணர்வு, செயல், சிந்தனை, தன்மை[illegible] சாதனைகள், ஏமாற்றங்கள், சுருக்கமாக அவன் வாழ்வு, அரசியல், சமுதாய சமயப் பின்னணியில் நமக்குத் தெரியவருகின்ற[illegible]. புதுமை என்ற ஒவ்வொன்றும் பழமையின் படிப்படியான மாற்ற[illegible] என்பதே அறிஞர்களின் கருத்து. அந்தக் கூற்றிற்கு ஏற்ப வரு[illegible] காலத்தின் இணைப்பாக நிகழ்காலமும், நிகழ்காலத்தின் பாலமா[illegible] அந்தப் பழங்காலமும் அமைகின்றன.

இந்த நூற்றாண்டின் சமீப காலம்வரை உலகின் நான்கிலெ[illegible] பகுதியைத் தன் பேரரசில் உட்படுத்தி வைத்திருந்ததும், உல[illegible] வாழும் மொத்த ஜனத்தொகையில் பத்தில் ஒருவர் பேசும் ஆங்[illegible] மொழியின் தாயகமாகவும், ஆட்சித் திறமை, மக்கள் கட்டுப்பாடு, தனி மனிதனின் உரிமை என்னும் முப்பெரும் சிறப்புகளை இவ் வுலகிற்கு அளித்துப் பெருமைகொண்ட நாடாகவும், மனித இனத் தின் பண்பட்ட வளர்ச்சிக்கு இன்றியமையாததாக அமையும் ஜனநாயக முறைக்கு அடிக்கல்லான பாராளுமன்ற அரசமைப்பை உலகிற்கு எடுத்துக்காட்டிய நாடாகவும் விளங்கும் இங்கிலாந்து, கடந்த நான்கு நூற்றாண்டுகளாகவே மற்றவர்களின் கவனத்தை அதிகமாக ஈர்த்திருக்கின்றது. எதனினும் அந்த நாட்டின் வரலாறு மிகப் பழமையானதே.

உலக நிகழ்ச்சிகளில் பிரிட்டிஷ் தீவுகள் தலைமைதாங்க தொடங்கியதென்னவோ 16ஆம் நூற்றாண்டிலிருந்துதான். எனினு[illegible] அந்த நாட்டின் வரலாறு, அங்கு வாழ்ந்த மக்கள் தனி இனத்[illegible]ராக ஒருமை உணர்ச்சி பெற்றவர்களாக விளங்கப்போவ[illegible] முன்பாகவே, தான் எழுதப்படவேண்டிய அவசியத்தைப் [illegible]கின்றது.

பழங்காலமென்று எதனையும் புறக்கணிக்கப்பட முடிய[illegible] நிலையில் இந் நூல் படைக்கப்படுகிறது.

திருத்தப்பட்ட பல்கலைக்கழகப் பாடத்திட்டத்திற்கேற்ப அரிய நூல்களை அணுகிப் பட்டப்படிப்பு மாணவர்கள் அறி[illegible] வகையில் இந் நூல் எழுதப்பட்டிருக்கின்றது.

# பொருளடக்கம்

# 1. பண்டைக் கால பிரிட்டன்

## பிரிட்டிஷ் தீவுகளின் தோற்றம்

ஐம்பெருங் கண்டங்களில் ஒன்ருன ஐரோப்பா என்னும் அப் பெரும் நிலப்பரப்பிற்கு மேற்கே, ஆய்த எழுத்துப் போல் தென் வடலாக ஒரு நீண்ட தீவும், அதற்கு மேற்கே மற்ருெரு சிறிய தீவுமாக அலைபுரளும் வடகடல் (North sea) பிரதேசத்தில் அமைந்திருக்கும் தீவுக் கூட்டமே பிற்காலத்தில் பிரிட்டிஷ் தீவுகள் (British Isles) எனப் பெயர் பெற்றன.

கால வரைக்குட்படுத்த முடியாத பழங்காலத்தில் (இன்று தீவுகளாகக் காணப்படும்) அந் நிலப்பரப்பு ஐரோப்பாவுடன் இணைந்த பகுதியாக இருந்திருக்கலாமெனப் புவியியல் வல்லு நர்கள் கருதுகின்றனர். இத் தீவில், மேற்குக் கிழக்காகப் பாயும் தேம்ஸ் நதி (Thames), ஐரோப்பாவில் கிழக்கு மேற்காகப் பாயும் ரைன் நதியின் (Rhine) துணையாருக இருந்திருக்கக்கூடும். அத் தீவுகளை ஐரோப்பியப் பெருங் கண்டத்திலிருந்து பிரிக்கும் இன்றைய வடகடல், அப்போது அகன்ற சதுப்பு நிலமாக (Swamp land) இருந்திருக்கலாம். வடகடல் மட்டத்தில் சுமார் 200 அடி நீர் குறையுமானல், பிரிட்டிஷ் தீவுகளும் ஐரோப்பாவும் இணைந்த ஒரே நிலப்பரப்பாக நிலவியிருக்குமெனக் கடல் ஆய்வாளர்கள் (Oceanographers) நினைக்கின்றனர்.

அப் பழங்காலத்தைப்பற்றி உறுதியாக எதையும் சொல்ல முடியாத அந் நிலையில், கடலில் மூழ்கிப் போனதாகக் கருதப்படும் 'அட்லான்டீஸ்' (Atlantis) பெருங்கண்டத்தின் ஒரு பகுதியாகப் பிரிட்டிஷ் தீவுகளின் நிலப்பரப்பு இருந்திருக்கக்கூடும்.

பிரிட்டிஷ் தீவுகள் தனித்தனியோர் தீவாக மாறுவதற்கு முன்னரோ அல்லது மாறிய பின்னரோ மக்களினத்தைப் பெற்றிருக்க வேண்டும். பனி ஊழிகளுக்கு (Ice age) இடைப்பட்ட காலத்தில்தான் இந் நில உலகில் ஆதிமனிதன் (Piltdown man) தோன்றியிருக்க வேண்டும். வட ஐரோப்பாவைப் பொறுத்த வரையில் பனி ஊழிகளுக்குப் பிறகே தற்கால மக்களினம் (Homo

Sapients) தோன்றியிருக்கலாம். அம் மக்களினம், அன்று பிரிட்டனுக்கும் ஐரோப்பாவிற்கும் இடையே இருந்துவந்த நில இணைப்புகள் (land bridges) வழியாகப் பிற்காலத்தில் பிரிட்டிஷ் தீவுகள் என்று பெயர் பெறப்போகும் இந்த நாட்டிற்கு வந்திருக்கலாம். இந்தத் தொல்பழங்காலக் குடியேறிகள் (Immigrants) வருவதற்கு முன்னரோ, அல்லது பின்னரோ கம்பளி யானை (Mammoth) போன்ற வனவிலங்குகளும், கடம்பை, கலைமான் போன்ற மாவினங்களும், செந்நிறக் காட்டுக் கோழி போன்ற பறவையினங்களும் இந் நிலப்பகுதிக்கு வந்திருக்க வேண்டும்.

இயற்கைக் கோள்களால் இந் நில உலகம் அலைக்கழிக்கப்பட்டு வந்த அவ்வேளையில், நிலப்பரப்பில் உறைந்திருந்த பனி உருகி, நீராக மாறிப் பிரிட்டிஷ் தீவுகளிலிருந்து இன்றுள்ள ஐரோப்பியப் பெருங் கண்டத்தைப் பிரிக்கும் வடகடல், ஆங்கிலக் கால்வாய் (English channel) முதலிய நீர்ப் பரப்புகள் தோன்றியிருக்கலாம். அந்தக் காலவரையிலேயே, இன்றைக்கு இத் தீவுகளில் காணப்படும் மலைகளும், ஆறுகளும், படுகைகளும், சமவெளிகளும் தோன்றியிருக்கக் கூடும். அக் காலத்திலேயே நெருக்கமான மரம், செடி, கொடிகளைக் கொண்ட பயங்கரக் காடுகளும் தோன்றியிருக்கலாம்.

பிரிட்டன் தனித்ததோர் தீவாக மாறிய பிறகும் பல நூற்றாண்டுகள் வரையில் கொடிய வனவிலங்குகள் வாழ்ந்த காடாகவே இருந்திருக்கக்கூடும். அப்போது அத் தீவில் வாழ்ந்த மக்களினம், சேறும் சகதியும் நிறைந்த அந்தக் காட்டு நிலங்களில் உலவிய கொடிய விலங்குகளை உணவிற்காகவோ, உடைகளுக்குப் பொருத்தமான தோல்களுக்காகவோ, அல்லது தற்காப்பிற்காகவோ கற்களாலும் கம்புகளாலும் வேட்டையாடி இருக்கக்கூடும். பல சமயங்களில் அந்த வனவிலங்குகளாலும் அக் காட்டு மனிதர்கள் கொல்லப்பட்டிருக்கலாம். வரலாற்றுக்கு முற்பட்ட அக் காலத்தில் மக்களினத்திற்கும் விலங்கினத்திற்கும் ஏற்பட்டிருந்த ஆதிக்கப் போராட்டத்தில் மனிதனே வென்றிருக்க வேண்டும்.

சுருக்கமாகச் சொல்லப்படின், வரலாற்றுக்கு முற்பட்ட அக் காலத்தில் பூகம்பங்களும், எரிமலைக் குமுறல்களும், பனியாற்றுப் பெருக்கும் உண்டாக்கிய குழப்பத்தில் தோன்றிய நில வடிவமே இன்று நாம் காணும் பிரிட்டிஷ் தீவுகளின் உருவ அமைப்பு என்று கருதப்படுகின்றது. அத் தீவில் காணப்படும் இயற்கைத் தோற்றங்களும் மாற்றங்களும் அக் காலத்திலேயே ஏற்பட்டிருக்க வேண்டும்.

ஆரம்பக் காலத்திலிருந்தே பிரிட்டிஷ் தீவுகளுக்கும் ஐரோப்பியக் கண்டத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டும். இத் தீவின் நிலப்படத்தைக் (Physical Map) காணுங் கால், அதன் கிழக்கு, தெற்குப் பகுதிகள் ஐரோப்பாக் கண்டத்தைத் தொடுவதுபோல் சரிந்து காணப்படுகின்றன. பிரிட்டனின் நீண்ட கிழக்குக் கடற்கரை (Coast line), ஐரோப்பிய நாடுகளின் நெதர்லாந்து, ஜெர்மனி, ஸ்காண்டிநேவியா (Scandinavia) ஆகிய பிரதேசங்களை எதிர்நோக்கியும், பிரிட்டனின் தென் கிழக்குக் கடற்கரை ஃபிரான்ஸ் (France) நாட்டை நோக்கியும் அமைந்துள்ளது. பிரிட்டனின் கிழக்கு, தென்கிழக்குக் கடற்கரை களுக்கும் மேற்கு ஐரோப்பியக் கடற்கரைக்கும் இடையேயுள்ள வடகடல், ஆங்கிலக் கால்வாய் ஆகிய நீர்ப் பரப்புகள், பிரிட்டிஷ் நதிகளும் ஐரோப்பிய நதிகளும் கலக்குமிடமாக அமைந்துள்ளன. வடகடல், ஆங்கிலக் கால்வாய் ஆகியன வரலாற்றுக்கு முற்பட்ட அக் காலத்தில் எளிதில் கடக்கக்கூடியனவாக இருந் திருக்கவேண்டும்.

ஐரோப்பாவில், கிழக்கிலிருந்து மேற்கே பாயும் ரைன் (Rhine), சோம் (Somme), சேன் (Seine) போன்ற ஆறுகளின் வழி யாகப் பல இனத்தினர் கூட்டம் கூட்டமாக ஐரோப்பாவின் வட பகுதியிலிருந்தும் மேற்குப் பகுதியிலிருந்தும் வடகடல், ஆங்கிலக் கால்வாய் ஆகிய நீர்ப்பரப்புகளை அடைந்திருக்க வேண்டும். சிறு தோணிகள், படகுகள் மூலமாக அந் நீர்ப்பரப்புகளைக் கடந்து பிரிட்டனின் கிழக்கு, தென்கிழக்குக் கரைகளை அடைந்திருக்க வேண்டும். பிரிட்டனில் மேற்கிலிருந்து கிழக்கே பாயும் அம்பர் (Humber), வாஷ் (Wash), தேம்ஸ் (Thames) முதலிய ஆறுகளின் கழிமுகங்கள் மூலமாக அம் மக்கள் சமவெளிக்குப் பரவியிருக் கலாம். பிரிட்டனை நோக்கிவந்த ஆதிமக்களில் சிலர், தென் மேற்கி லுள்ள கார்ன்வால் (Cornwal) பகுதியை அடைந்திருக்கக்கூடும். பின்னர், மேற்குக் கரையோரமாகப் பயணத்தைத் தொடர்ந்து ஸ்காட்லாந்து, அயர்லாந்து பகுதிகளுக்கும் சென்றிருக்கலாம்.

வடகடல், ஆங்கிலக் கால்வாய் ஆகிய நீர்ப் பரப்புகள் தோன்றுவதற்கு முன்னரே, பிற்காலத்தில் பிரிட்டிஷ் தீவுகள் எனப் பெயர் பெறப்போகும் இந் நிலப்பகுதிக்கு வந்து இயற்கை யோடு ஒட்டி வாழ்ந்த ஆதிமனிதர்கள், இத் தீவின் வடக்கு, வடமேற்கு, மேற்குப் பகுதிகளில் தங்களின் குடியிருப்புகளை அமைத்துக் கொண்டிருக்கலாம். சமீப காலத்தில் கடல்கடந்து வந்த மக்கள் கூட்டம், சமவெளிகளை ஊடுருவிக் காடுகளை யொட்டிய பகுதிகளில் ஆரம்பக் காலத்தில் தங்கள் குடியிருப்பு

களை அமைத்திருக்க முயற்சி செய்திருக்கலாம். ஏனெனில், அக் காடுகளில் வாழ்ந்த மிருகங்களும் பிராணிகளும், அந்த ஆதிமனிதர்களுக்கு உணவு, உடை ஆகிய தேவைகளைப் பூர்த்தி செய்திருக்கலாம். உறுதியான மரங்களை வெட்டிச் சாய்ப்பதற்கேற்ற கூர்மையான ஆயுதங்களைச் செய்யும் வழிமுறைகள் அம்மனிதர்களுக்கு அப்போது தெரிந்திருக்க முடியாத நிலையில் காடுகளை வெட்டித் தங்களின் குடியிருப்பு இடவசதியை விருத்தி செய்ய அம் மக்கள் மேற்கொண்ட முயற்சிகள் அதிகப் பலனளித்திருக்கமாட்டா. மேலும், பிரிட்டனின் வடமேற்குப் பிரதேசத்தில் காணப்படும் ஸ்காட் (Scot), பென்னைன்ஸ் (Pennines), வேல்ஸ் மலைகளும் ஆரம்ப காலத்தில் ஆதிமனிதர்களின் ஊடுருவலுக்கு இடையூறாக அமைந்திருக்க வேண்டும். அந் நிலையில், பிரிட்டனின் தென்கிழக்குப் பகுதியில், ஆற்றுப் படுகையை ஒட்டிய சமவெளிகளிலேயே அம் மக்கள் தங்களின் ஆரம்பக் குடியிருப்புகளை அமைத்திருக்க வேண்டும்.

தேம்ஸ் நதியைச் சுற்றிய பகுதி, மேற்கு வெஸ்ஸெக்ஸ் (Wessex), கிழக்கு ஆங்கிலியா (Anglia) போன்ற இடங்கள் அந்தப் பழைய குடியிருப்புகளைப் பெற்றிக்கவேண்டும்.

வடக்கு, வடமேற்கு, மேற்குப் பகுதிகளில் வாழ்ந்து வந்த அப் பழங்கால மக்களுக்கும் சமீபத்தில் கடல் கடந்து வந்து, பின்னர் சமவெளிகளில் தங்கள் குடியிருப்புகளை அமைத்துக் கொண்டிருந்த அம் மக்களுக்கும் நெருங்கிய உறவு ஏற்பட முடியாதபடி காடுகளும் மலைத் தொடர்களும் தடுத்திருக்கவேண்டும். நல்ல குடிநீரும், விளைச்சல் நிலங்களும், வளமுள்ள மீன் கூட்டங்களையும் கொண்டிருந்த இந்தப் பிரிட்டனின் கிழக்கு, தெற்குப் பகுதிகள் ஆதிகாலத்திலிருந்தே ஐரோப்பிய மக்களைக் கவர்ந்திருக்கவேண்டும்.

சுருக்கமாகக் கூறினல், வரலாற்றுக்கு முற்பட்ட அக் காலத்தில், இத்தீவில் எங்கு, யார், எப்படி வாழ்ந்தனரென்பதை உறுதியாக அறுதியிட்டுக் கூற இயலாதெனினும், ஆதிகாலத்திலிருந்தே மேற்கு, வடக்கு ஐரோப்பியப் பகுதிகளிலிருந்து மக்கள் கூட்டம் இத் தீவில் பரவலாகக் குடியிருப்புகளை அமைத்திருக்கவேண்டும். குறிப்பாக, இத் தீவின் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் மக்கள் இனம் அதிகமாக இருந்திருக்க வேண்டும்.

டர்ஹாமிலிருந்து (Durham) எக்ஸ்டர் (Exeter) வரை ஒரு கோடு வரையப்பட்டால் அது பிரிட்டனின் வடமேற்குப் பகுதியிலிருக்கும் ஸ்காட், பென்னைன்ஸ், வேல்ஸ் மலைகளுக்கும் தென் கிழக்கிலுள்ள தட்டையான சமவெளிகளுக்கும் இடையே அமையும்




படம் 1. பிரிட்டிஷ் தீவுகள் — இயற்கையமைப்பு.

1. பீடபூமிகள்; 2. மத்திய பள்ளத்தாக்கு; 3. தெற்குப் பீடபூமிகள்; 4 வேல்ஸ் மேட்டு நிலங்கள்; 5. ஆங்கிலச் சமவெளி.

எல்லைக் கோடாகக் காணப்படும். அக் கோட்டின் தெற்குப் பகுதியிலேயே ஆதி காலத்தில் பிரிட்டனில் மக்கள் குடியிருப்பு அதிகமாகக் காணப்பட்டது.

பிரிட்டிஷ் தீவுகளின் வரலாறு தொடங்குவதற்கேற்ற கேந்திரமாகவும் அப் பகுதியே விளங்கியது.

## நிலவியல் கூறுகளும் அவற்றின் பலன்களும்

ஒவ்வொரு நாட்டின் வரலாறும் அதனதன் நிலவியலை (Geography) ஒட்டியே அமைகின்றது என்பதை வரலாற்று வல்லுநர்கள் ஒப்புக் கொள்ளுகின்றனர். இவ்வியற்கை நியதியிலிருந்து பிரிட்டிஷ் தீவுகளின் வரலாறு விதிவிலக்கானதன்று.

பிரிட்டிஷ் தீவுகளின் மேற்குப் பகுதி வேல்ஸ் (Wales), இங்கிலாந்தின் (England) கிழக்கு தெற்குப் பகுதிகள் இரண்டும் கூடிய நிலப்பரப்பே பிரிட்டன் (Britain); இத் தீவின் வடக்குப் பகுதி ஸ்காட்லாந்து (Scotland); இந்த நீண்ட தீவின் மேற்குப் புறமாக அமைந்திருக்கும் மற்றொரு தீவான அயர்லாந்து (Ireland) எல்லாம் கூடிய நிலப்பரப்பே பிரிட்டிஷ் தீவுகள் (British Isles) என்றும் மகா பிரிட்டன் (Great Britain) என்றும் அழைக்கப்படுகின்றன.

காலப் போக்கில் ஒரு தீவுக் கூட்டமாக மாறியிருந்த பிரிட்டிஷ் தீவுகள், அட்லான்டிக் பெருங்கடலின் வடகிழக்குப் பகுதியில், வடகடல் பிரதேசத்தில் 2,30,600 சதுரக் கிலோமீட்டர் பரப்பளவு கொண்ட நிலப்பகுதியாக அமைந்துள்ளது. 0° தீர்க்க ரேகை முதல் 10° மேற்குத் தீர்க்கரேகை வரையிலும், 50° வட அட்சரேகை முதல் 60° வட அட்சரேகை வரையிலும் இத் தீவுகள் பரவியுள்ளன.

பிரிட்டிஷ் தீவுகளுக்கு வடக்கிலும் மேற்கிலும் அட்லான்டிக் பெருங்கடலும், கிழக்கில் வடகடலும், தெற்கில் (அட்லான்டிக் பெருங்கடலையும் வட கடலையும் இணைக்கும்) ஆங்கிலக் கால்வாயும் அமைந்துள்ளன. பிரிட்டனும் ஸ்காட்லாந்தும் கூடிய அந்த நீண்ட தீவை மற்றொரு தீவான அயர்லாந்திடமிருந்து, ஐரிஷ் கடல் (Irish sea) பிரிக்கின்றது.

நாற்புறமும் இத் தீவுகள் கடலால் சூழப்பட்டிருப்பதால், மகா பிரிட்டனின் வரலாறு ஆரம்ப காலத்திலிருந்தே கடலைச் சார்ந்த

தாக அமைந்துள்ளது. ஆதிகாலத்திலிருந்து பிரிட்டிஷ் தீவுகளை நோக்கிப் படையெடுத்தும் குடிபெயர்ந்தும் வந்திருந்த கெல்ட்டுகள் (**Celts**), ரோமானியர்கள் (**Romans**), சாக்சானியர்கள் (**Saxons**), டேனியர்கள் (**Danes**), நார்மானியர்கள் (**Normans**), ஃபிளெமிங்குகள் (**Flemings**), யூகோநாட்டுகள் (**Hugunotes**) போன்ருேர் கடலைக் கடந்து வந்தே இத் தீவுகளின் வரலாற்றைச் சிறப்பித்திருக்கிருர்கள். மேற் சொல்லப்பட்ட பல வகை இன மக்களின் குருதிக் கலப்பினைக் கொண்டவர்களே, இன்றைய பிரிட்டிஷ் மக்களின் மூதாதையர்கள் என்று குறிப்பிடத் தக்கவர்களாவார்கள். நார்மானியப் படையெடுப்பிற்குப் பின்னர் (கி.பி. *1066*), பிரிட்டனை நோக்கி எழுந்த எந்தப் படையெடுப்பும் வெற்றிகரமாக முடியவில்லை என்ற உண்மையை நோக்குங்கால், அக் கடலே இத் தீவுகளுக்குச் சிறந்த பாதுகாப்பு அரணக அமைந்திருந்தது என்பது வெள்ளிடை மலையாகும்.

ஸ்பானிய அரசர் இரண்டாம் ஃபிலிப் (கி.பி. *1588*), ஃபிரஞ்சு மன்னன் பதினுன்காம் லூயி (கி.பி. *1690*), மாவீரன் முதலாம் நெப்போலியன் (கி.பி. *1805*), ஜெர்மன் அதிபர் வில்லியம் கெய்சர் (கி.பி. *1914–18*), சர்வாதிகாரி ஹிட்லர் (கி.பி. *1939–44*) போன்ருேர்களின் படையெடுப்பு அபாயத்திலிருந்து பிரிட்டனின் சுதந்திரம், தனித்தன்மை ஆகியவை காக்கப்பட்டனவென்ருல், அதற்கு உறுதுணையாக அக் கடல்களே அமைந்திருந்தன. சுருங்கக் கூறின், ஐரோப்பாவிலிருந்து பிரிட்டனைப் பிரிக்கும் நீர்ப் பரப்பு, தொடக்கத்தில் பல்வேறு இனத்தினர் அங்குப் படையெடுத்துக் குடிபுக ஏதுவாக அமைந்ததெனினும், பிற்காலத்தில் அக் கடல்களே பிரிட்டனைப் பல படையெடுப்பு அபாயத்திலிருந்து காப்பாற்றின என்பதையும் நாம் அறிய முடிகின்றது.

பிரிட்டிஷ் தீவுகளின் கடற்கரை (**Coast line**) மிகவும் பிளவுபட்டிருப்பதால் பல இயற்கைத் துறைமுகங்கள் (**Natural Harbours**) அங்குத் தோன்ற இடமிருந்தது. பிற்காலத்தில், பிரிட்டிஷார் உலக வரலாற்றைச் சிறப்பிக்குமளவிற்குத் தலையாய வணிகர்களாகவும், சிறந்த கப்பல்களைக் கட்டுபவர்களாகவும், புகழ்மிக்க கடலோடிகளாகவும், சீரிய மாலுமிகளாகவும் விளங்குவதற்கு இந் நிலை மிகவும் உதவியாக இருந்திருக்கின்றது.

கடல் சூழ்ந்த அத் தீவுகளின் கரையோரங்களில் மிகுதியாக மீன் கூட்டங்கள் நிலவியதால், மீன் பிடிக்கும் தொழிலும் சிறப்புப் பெற வழியிருந்தது. அதனுல், உணவிற்கும் அந்நியச் செலாவணிப் பெருக்கத்திற்கும் (**Foreign Exchange**) உதவக்கூடிய மீன் பிடிக்கும் தொழிலும், அதனைப் பதப்படுத்திப் பக்குவப்படுத்தும் தொழிலும் வளர்ந்தோங்கின.

கடலையே தங்கள் உயிர் நாடியாக ஆங்கிலேயர்கள் நம்பி வாழ்ந்ததால், 'பிரிட்டன் பெற்ற நற்பேறுகளுக்குக் கடல்களே காரணமாகின்றன' என்று ட்ராவலியன் (**Trevelyan**) என்ற ஆங்கிலப் பேராசிரியர் பெருமையோடு குறிப்பிடுகின்றார்.

கடலின் உதவியால் அந்நியப் படையெடுப்புகளிலிருந்து இங்கிலாந்து பாதுகாக்கப்பட்டிருந்தது. மேலும் கடல் கொடுத்த செல்வத்தால் மக்கள் தொழில் வளர்ச்சி பெற்றிருந்தார்கள். இவை போன்ற காரணங்களால் மன்னரின் தயவு பிரிட்டிஷ் மக்களுக்கு அதிகமாகத் தேவையில்லாமல் இருந்தது. அந்தத் தன்னம்பிக்கையைக் கொண்டு அம் மக்கள் மன்னருக்கிருந்த வரம்பற்ற அதிகாரங்களைக் (**Absolute powers**) குறைத்து, தங்களின் பிரதிநிதிகள் அடங்கிய பாராளுமன்ற (**Parliament**) ஆட்சியை அமைத்தனர். அத்துடன், மக்களின் அடிப்படை உரிமைகள் (**Fundamental Rights**) நன்முறையில் அங்கு வளருவதற்கேற்ற பொருத்தமான சூழ்நிலைகளும் உருவாக்கப்பட்டன.

மேலும், கடலை மையமாக வைத்து அம் மக்கள் வாழ வேண்டியிருந்ததால், கொந்தளிக்கும் அந் நீர்நிலைகளைக் கண்டு அயராது அதனைக் கடந்து, உலகின் நான்கு திக்குகளிலும் பரவிச் சென்று பேரரசு (**Empire**) அமைக்கவும் பிரிட்டிஷாரால் முடிந்தது. கடலைச் சார்ந்த வாழ்க்கையை அம் மக்கள் மேற்கொண்டதோடு, தங்களின் நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் எதிரி நாடுகளை ஆக்ரமிக்கவும், தங்கள் வாணிபத்தைப் பெருக்கிக் கொள்ளவும் பல குடியேற்றங்களை (**Colonies**) அமைத்துக் கொள்ளவும், அக் குடியேற்றங்களுடன் போக்குவரத்துத் தொடர்புகளை வைத்துக் கொள்ளவும் ஏதுவாக இருக்கும்படி பலம் பொருந்திய கப்பற்படையையும் பெற்றிருந்தனர். அக் கப்பற்படை ஏழு கடல்களில் கடுமையான எதிர்ப்பின்றி ஆதிக்கம் செலுத்தி, பிரிட்டிஷ் தீவுகளுக்குக் 'கடலரசி' (**Queen of the Seas**) என்ற சிறப்புப் பெயரைத் தனக்கே உரிமையாக்கிக் கொண்டது.

பிரிட்டனைக் 'கடலாதிக்கத்தின் அடிப்படையில் அமைந்த பேரரசு' எனவும் கூறுவார்கள்.

இத் தீவின் வடமேற்கில் வேல்ஸ் மலைகளும், வடக்கில் பென்னைன்ஸ் (**Pennines**), ஸ்காட் (**Scot**) மலைத் தொடர்களும் 1,200 மீட்டர் வரை உயர்ந்து நிற்கின்றன. அதனால், ஆரம்ப காலத்தில் இத் தீவின் மேற்கு, வடக்குப் பகுதிகளில் வாழ்ந்த

மலைப்புற மக்களினம், தெற்கு, தென்கிழக்குப் பகுதியில் இருந்த சமவெளி மக்களோடு (Plains men) நெருங்கிய தொடர்பு கொள்ள முடியாதிருந்தது. ஆயினும், காலப்போக்கில் சமவெளி மக்கள் காடுகளையும் மலைகளையும் கடந்து, மலைப்புற மக்களை வென்றும் திருமண உறவு கொண்டும் இரண்டறக் கலந்து மக்களினம் பெருக வழிகோலினர்.

வேல்ஸ், பின்னைன்ஸ், ஸ்காட் மலைத் தொடர்களின் சரிவுகளில் மிகச் சிறப்பான புல்வெளிகள் இருந்ததால், ஆடுமாடுகள் போன்ற கால்நடைகளை (Cattle) வளர்ப்பதற்கேற்ற ஊக்கம் பிரிட்டிஷாருக்குக் கிடைத்திருக்கின்றது. அந்த ஊக்கத்திற்கு ஆக்கம் கொடுக்கும் வகையில் சிறந்த கம்பளித் தொழிலும் (Wool Industry), தோல் பதனிடும் தொழிலும் அம் மக்களால் பேணி வளர்க்கப்பட்டன.

தேம்ஸ், ஹம்பர், வாஷ், மெர்ஸி (Mercy), செவர்ன் (Severn) ஃபோர்த் (Forth), கிளைடு (Clyde), டீ (Dee), வை (Wye) முதலிய முக்கிய ஆறுகள் இத் தீவில் பாய்வதால், சிறந்த ஆற்றுப் படுகைகளையும் இந் நாடு பெற்றதாக அமைகின்றது. இத் தீவுகளின் நாகரிகத்திற்கு முன்னோடியாக விளங்கிய பல முக்கியக் குடியேற்றங்கள் இவ் வாறுகளின் படுகைகளைச் சுற்றியே அமைந்திருந்தன. நீளம் குறைந்த இந்த ஆறுகள் பிரிட்டனின் ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்கு வாணிபப் பொருள்களை எடுத்துச் செல்வதற்குப் பேருதவியாக இருந்தன. மேற்சொல்லப்பட்ட ஆறுகள் இத் தீவின் குறுக்கும் நெடுக்குமாக, எதிரும் புதிருமாகப் பாய்வதால் இங்கிலாந்தின் எப் பகுதியும் கடற்கரைக்கு 70 மைல்களுக்குள்ளாகவே இருந்ததால் கடல் கடந்த வணிகத்திற்கு அந் நிலை பெரிதும் பயன்பட்டது.

இத் தீவின் கிழக்கு, மேற்கு, தெற்குப் பகுதிகள் மலைகளாலும், பள்ளத்தாக்குகளாலும், ஆறுகளாலும், சமவெளிகளாலும் இங்கிலாந்து வேல்ஸ், கார்ன்வால் (Cornwall), டெவன் (Devon), ஏரிமாவட்டங்கள் (Lake Districts) எனப் பிரிக்கப்படுகின்றன. இத் தீவிற்கு வடக்கே இருக்கும் ஸ்காட்லாந்து (Scot), மலைத் தொடராலும் மேட்டு நிலங்களாலும் (High Lands) துண்டாடப்பட்டிருக்கின்றது. மேற்கிலிருக்கும் சிறிய தீவான அயர்லாந்து, மலைத் தொடராலும், சதுப்பு நிலங் (Marsh land) கொண்ட பள்ளத்தாக்குகளாலும் பிரிக்கப்படுகின்றது.

இயற்கைத் தடைகளால் பிரிக்கப்பட்டிருந்தபோதிலும், பிரிட்டனைப் பொறுத்தவரையில் அத் தடைகள் நிரந்தரப் பிரிவு உணர்ச்

சிக்குக் காரணமாக அமையவில்லை. இடைக் காலம் வரையில், (**Middle Ages**) சில வேறுபாடுகள் அங்கு வாழ்ந்த மக்களிடையே இருந்திருப்பினும், பின்னர் இப் பகுதிகள் அத்தனையும் ஒரே அரசை ஏற்றுக் கொண்டு ஒருமைப்பாடு அடைவதற்கு உதவியாக இருந்தனவே தவிர, மேற்சொல்லப்பட்ட இயற்கைத் தடைகள் (**Natural Barriers**) நிரந்தரத் தடைகளாக அமையவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்க சிறப்பான அம்சமாகும்.

அதே சமயம் சில இயற்கைத் தடைகள் இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து, அயர்லாந்து போன்ற பகுதிகளுக்கிடையே சில வேறுபாடுகளைத் தோன்றச் செய்துள்ளன என்பதையும் மறுக்க முடியாது.

வேல்ஸ் மலைகளால், இங்கிலாந்தும் வேல்ஸ் நிலப் பகுதியும் பிரிக்கப்படுவதால், பின் சொல்லப்பட்ட இடத்தில் தனி இனம், மொழி, கலாச்சாரம் ஆகியன தோன்றத்தான் செய்தன. ஆனாலும், மலைகள் கடக்கக் கூடியனவாக இருந்ததாலும், வேல்ஸ் பகுதியில்பாயும் இட்டீ, செவர்ன், வை போன்ற நதிகள் இங்கிலாந்தை இணைப்பதாலும், அவ்விரு பகுதிகளும் ஐக்கியமடைய வேண்டிய அவசியத்தைப் பெற்றிருந்தன. இவ்வமைப்பைப் போன்று ஸ்காட் மலைகள் இங்கிலாந்தை ஸ்காட்லாந்துப் பகுதியிலிருந்து பிரிக்கின்றது. அதன் விளைவாக, இவ்விரு பகுதிகளில் வாழ்ந்த மக்களிடையேயும், இனம், மொழி, மதம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் போன்றவற்றில் வேறுபாடுகள் இருக்கத்தான் செய்தன. சில சமயங்களில், இவ்விரு பகுதிகளுக்குள் போர்களும் நடந்திருக்கின்றன. இருப்பினும், பொதுப் பாதுகாப்பின் (**General Security**) காரணமாகவும், அவசியத்தின் பேரிலும் பிற்காலத்தில் இவ்விரு பகுதிகளும் ஒரே அரசின்கீழ் இணைந்தன. அடுத்ததாக ஐரிஷ் கடல் என்னும் குறுகிய நீர்ப்பரப்பு, பிரிட்டனை அயர்லாந்திலிருந்து பிரிக்கின்றது. அதன் விளைவாக அயர்லாந்தில் முற்றிலும் மாறுபட்ட நாகரிகம் பரவியிருந்தது. இனம், மொழி, மதம், வாழ்க்கை முறை போன்றவற்றில் ஐரிஷ் மக்கள் பல வேறுபாடுகளைக் கொண்டிருந்தார்கள். இருப்பினும், அக் கடல் எளிதில் கடக்கக் கூடியதாக அமைந்திருந்ததாலும், இவ்விரு பகுதிகளின் இடைவெளித் தூரம் அதிகமில்லை என்பதாலும், காலப்போக்கில் அரசியல் ஒற்றுமையால் உந்தப்பட்டு இப் பகுதிகள் இணைய வேண்டிய அவசியத்தைப் பெற்றன.

இயற்கைத் தடைகளால் இத் தீவுகளில் வேற்றுமைகள் பல ஏற்பட்டிருந்தும் பிற்காலத்தில் இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து, வட அயர்லாந்து ஆகிய பகுதிகள் 'ஒரே அரசு, ஒரே

கொடி, ஒரே சட்டம்' என்ற கோட்பாடுகளைக் கொண்டு இன்றைக்கு மகா பிரிட்டன் என வழங்கப்படுகின்றது.

பிரிட்டிஷ் தீவுகளின் நில அமைப்பின்படி, அதன் கிழக்கு, தெற்குப் பகுதிகள் ஐரோப்பாக் கண்டத்தைத் தொடுவதுபோல் சரிந்து காணப்படுகின்றன.

ஐரோப்பாக் கண்டத்தின் அண்மையில் அமைந்திருப்பதால் கிடைக்கும் நற்பலன்களையும், அதே சமயம் அக் கண்டத்திலிருந்து சற்றே விலகியிருப்பதால் ஏற்படும் விளைவுகளையும் பிரிட்டிஷ் தீவுகள் ஒருங்கே பெற்றிருக்கின்றன என்பதை இங்கே குறிப்பிடாமல் இருக்க முடியாது.

அவசியமான காலத்தில் ஐரோப்பிய நாடுகளைத் தாக்குவதற்கும், அதே சமயம், தன்மீது ஏவப்படும் ஆக்கிரமிப்புகளிலிருந்து தன்னைக் காத்துக்கொள்வதற்கும் அந் நிலை பெரிதும் உதவியிருக்கிறது. அதேபோன்று, தேவைப்படும்போது ஐரோப்பிய விவகாரங்களில் கலந்து கொள்வதற்கும், வேண்டாத சமயங்களில் விலகி நிற்பதற்கும் அந் நிலை ஏதுவாக அமைந்துள்ளது.

கெல்ட்டுகள் காலத்திலிருந்து நார்மானியர் காலம் வரையும், இத் தீவுகளை நோக்கி மக்கள் பெயர்ச்சி, படையெடுப்புகள் ஏற்பட, அதன் விளைவாக இத் தீவுகளின் வரலாறு சிறப்பிக்கப் பட்டதென்றால், பிரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாக் கண்டத்தின் அருகில் அமைந்திருப்பதன் சிறப்பினை நன்குணரலாம். தன் மக்களினத்தின், பெரும்பான்மையான எண்ணிக்கையையும் உலகில் வாழும் மொத்த மக்கள் தொகையில் பத்தில் ஒருவர் பேசும் தன் மொழியான ஆங்கில மொழியையும் ஐரோப்பிய நாடுகளான ஸ்காண்டிநேவியா, ஜெர்மனி போன்ற நாடுகளிலிருந்து பிரிட்டன் பெற்றது என்பதை நினைவில் நிறுத்தவேண்டும்.

ஐரோப்பியச் சண்டைகளிலோ சமாதானங்களிலோ பல சமயங்களில் பிரிட்டிஷ் தீவுகள் ஈடுபட்டு இருந்திருப்பினும், அந் நாடு அக் கண்டத்திலிருந்து கடலால் பிரிக்கப்பட்டு விலகியிருப்பதால் பல நன்மைகள் ஏற்படத்தான் செய்தன. அந் நாட்டு மக்கள் தனி இனத்தவராகவும், உரிமையுணர்ச்சி பெற்றவர்களாகவும், தனிப்பட்ட பண்புகள் வாழ்க்கைத் தத்துவங்கள் கொண்டவர்களாகவும், பழக்க வழக்கங்கள், கோட்பாடுகள், தனி மொழி போன்றவற்றைப் பெற்றவர்களாகவும் விளங்கிச் சிறப்புற்றனர். மேலும், ஐரோப்பிய அரசியல், சமூகச் சிக்கல்களிலிருந்து விடுபட்டவர்களாகவும் பிறர் உதவியின்றி

எதனையும் நிறைவேற்றிக் கொள்ளக்கூடிய மன உறுதி, தன்னம்பிக்கை கொண்டவர்களாகவும். பிரிட்டிஷ் மக்கள் விளங்கினார்கள் என்பதும், அந் நாடு ஐரோப்பாக் கண்டத்திலிருந்து விலகியிருப்பதால் ஏற்பட்ட சாலச் சிறந்த பயன்களேயாம்.

தென்மேற்கு வியாபாரப் பிரதிகூலக் காற்றுகள் (South west trade winds) வீசும் வழியில், பிரிட்டிஷ் தீவுகள் அமைந்திருப்பதால் மழை இங்கு மிகுதியாகப் பெய்கின்றது. இதனால், செழுமை மிக்க விளைநிலங்களில் கோதுமை, பார்லி (Barley), ஓட்ஸ் (Oats), ரை (Rye) முதலான தானிய வகைகளும் உருளை (Potato), பீட் (Beetroot) போன்ற கிழங்கு வகைகளும் மிகுதியாகப் பயிரிடப்பட்டன. ஸ்காட்லாந்தின் தென்பகுதியிலும் அயர்லாந்தின் சதுப்புநிலச் சமவெளிகளிலும் விவசாயம் ஊக்குவிக்கப்பட்டது. மொத்தத்தில் மக்கள் உணவுப் பொருள்களில் ஓரளவு தன்னிறைவு பெற இந் நிலை உதவியது.

வானுயர ஓங்கி வளரும் ஓக் (oak), ஆஷ் (ash) முதலிய முக்கிய மரங்கள், இத் தீவுகளில் ஏராளமாக வளர்ந்தமையால் பிரிட்டிஷார் மரத்தொழிலிலும், கப்பல் கட்டும் தொழிலிலும் வல்லுநர்களாக விளங்கினர்.

இயற்கையின் வரப்பிரசாதமாகப் பிரிட்டன் மிகுந்த கனி வளங்களைக் (Mineral wealth) கொண்டதாக இருக்க, தொழில் துறையிலும் இந் நாடு வெகுவாக முன்னேறியது.

இங்கிலாந்தின் வடபகுதியிலும், வடமேற்குப் பகுதியிலும், தென் வேல்ஸிலும் நிலக்கரி (coal), இரும்பு, சுண்ணும்புக் கற்கள் (lime stone) முதலிய தாதுப்பொருள்கள் மிகுதியாக அருகருகே கிடைத்தமையால் பல முக்கிய தொழில்கள் இங்கு வளர்ச்சி பெற்றன.

உதாரணமாக, யார்க்ஷயர் (Yorkshire), லங்காஷயர் (Lancashire), மான்செஸ்டர் (Manchester), நாட்டிங்ஹாம் (Nottingham) போன்ற இடங்கள் நெசவுத் தொழிலில் வீறு நடைபோட்டன.

ஸ்காட்லாந்தில் ட்வீட் சமவெளி (Tweed valley), கிளாஸ்கோ (Glasgow) முதலிய இடங்களும், அயர்லாந்தில் பெல்ஃபாஸ்ட் (Belfast) என்ற இடமும் கம்பளி, பருத்தி, லினன் தொழில்களில் சிறப்புற்று விளங்கின. நெசவுத் தொழிலுடன், தங்களிடம் கிடைத்த இரும்பு, நிலக்கரியை நன்கு பயன்படுத்திப் பலவிதமான

ஆக்கத் தொழில்களைத் தொடங்கி அபிவிருத்தி செய்தனர். பிற்காலத்தில் பிரிட்டிஷ் மக்கள் தங்கள் நாட்டை 'உலகத்தின் தொழிற்சாலையாகவும்' (**Workshop of the world**), நுகர்பொருள் (**consumer goods**) உற்பத்தி நாடாகவும், பிற நாடுகளுக்குத் தொழில் துறையில் வழிகாட்டும் ஒளிவிளக்காகவும் உலக அரங்கில் மாற்றியிருந்தனர் என்பது மெச்சத்தக்கது.

பிரிட்டிஷ் தீவுகள் குளிர்க் கேந்திரமான வடதுருவத்திற்கு (**North pole**) அருகிலிருப்பதால், மக்கள் அங்கு வசிக்க முடியாத அளவிற்குக் கடுங்குளிர் கொண்டதாக இருந்திருக்கவேண்டும். அப்படியிருக்குமானால், மக்கள் வசிக்க முடியாத நிலையில், இத் தீவுக் கூட்டம் உலக வரலாற்றில் புறக்கணிக்கப்பட்டிருக்கும்.

ஆயினும், மெக்ஸிகோ வளைகுடாவிலிருந்து (**Gulf of Mexico**) புறப்பட்டு, அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து, இத் தீவுகளைச் சுற்றி வரும் 'வளைகுடா வெப்ப நீரோட்டம்' (**Warm Gulf Current**), மக்கள்வசிப்பதற்கேற்ற தட்பவெப்பநிலையைப் பிரிட்டிஷ் தீவுகளுக்கு அளித்திருக்கின்றது. கடுங்கோடையோ, கடுங்குளிரோ இல்லாத காலநிலை பிரிட்டிஷாருக்குக் கடும் வேலைகளைச் செய்வதற்கான சுறுசுறுப்பையும் எளிதில் சோர்ந்து போகாத உடல் நிலையையும் நெஞ்சுரத்தையும் அளித்திருக்கின்றது. இது மட்டுமன்றி, இத் தீவின் துறைமுகங்கள், பனியால் உறைந்து போகாமல் இருப்பதால், ஆண்டின் எல்லா மாதங்களிலும் போக்கு வரத்தும், வாணிகமும் தடையின்றி நடைபெறுகின்றன. துறைமுகங்களின் வெதுவெதுப்பான நீரோட்டத் தன்மையால் மக்கள் வாழ்வு சிறப்படைகின்றது.

இங்ஙனமாக, நிலவியல் கூறுகள் பிரிட்டிஷ் தீவுகளின் வரலாற்றைப் பெரிதும் சிறப்பித்திருக்கின்றன.

## பண்டைக்கால பிரிட்டன்

ஒவ்வொரு நாட்டிற்கும் இரு கால நிலைகள் உண்டு. அவை வரலாற்றுக்கு முற்பட்ட காலமெனவும் (**Pre-history**) வரலாற்றுக் காலமெனவும் (**Historic Period**) வழங்கப்படுகின்றன. இந் நியதி பிரிட்டிஷ் தீவுகளின் வரலாற்றுக்கும் பொருந்தும்.

பிரிட்டனின் வரலாறு என்பது, அங்கு வாழ்ந்த மக்கள் தனி இனத்தினராகத் தங்களுக்கென்று ஓர் அரசு, சமுதாயம், சமயம் முதலியவற்றுடன் ஒருமையுணர்ச்சி பெற்றவர்களாக விளங்கிய

போதுதான், உலக வரலாற்றில் சிறப்பினைப் பெறும் பேற்றினைப் பெற்றது. ஆயின், அந் நிலையினை அம் மக்கள் பெறுவதற்கு முன்னர் அதாவது, வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தில், அவர்களின் வாழ்க்கைமுறை எவ்வாறு இருந்தது என்பதை நாம் அடுத்துக் காணப்போகின்றோம்.

உறுதிப்படுத்துவதற்கேற்ற சான்றுகள் இல்லாத காலத்தையே வரலாற்றுக்கு முற்பட்ட காலமென வழங்குகின்றனர். பொதுவாக, பண்டைக் காலத்தில் வாழ்ந்த அம் மக்கள் விட்டுச் சென்ற வீடுகள், உபயோகப்படுத்திய மட்பாண்டங்கள், அணிந்து கொண்ட ஆபரணங்கள், பயன்படுத்திய கருவிகள், ஆயுதங்கள், வரைசித்திரங்கள், முக்கியமாக அம் மக்களின் சவக் குழிகள் முதலியவற்றைக் கண்டறிந்த புதைபொருள் ஆராய்ச்சி நிபுணர்கள் (**Archaeologists**) பல உண்மைகளை வெளியிட்டுள்ளனர்.

கண்டெடுக்கப்பட்ட புதைபொருள்களின் அமைப்பினைப் பகுத்தாராய்ந்து தெளிவுபடுத்திய அவர்களின் மூலமாக வரலாற்றுக்கு முற்பட்ட காலநிலையின் தன்மைகளை நாம் அறிய முடிகின்றது.

வரலாற்றுக்கு முற்பட்ட அக் காலத்தைப் பழங் கற்காலம் என்றும் (**Paleolithic Age**), புதிய கற்காலமென்றும் (**Neolithic Age**) உலோகக் காலமென்றும் (**Chalcholithic Age**) வழங்குகின்றனர்.

இன்றைக்குச் சுமார் 5,000 ஆண்டுகளுக்கு முன்னரே, அலைதவழும் வடகடல் பகுதியில் அமைந்த, பெயரிடப்படாத அந் நிலப்பகுதி (பிரிட்டிஷ் தீவுகள்), மங்கலான மூடுபனிகளுக்கிடையே நாகரிகமற்ற மக்களின் கூச்சலையும் சுற்றித் திரிந்து வந்த விலங்குகளின் ஆரவாரத்தையும் கொண்டதாக இருந்திருக்க வேண்டும். அக் கால மக்களது பெயர்ச்சிகளைப் பற்றியோ, வாழ்க்கை முறைகளைக் குறித்தோ உறுதியாக எதையும் சொல்ல இயலவில்லை என்றாலும், ஆங்காங்கே கிடைத்திருக்கும் சிற்சில சான்றுகளைக் கொண்டு ஒருவாறு அப் பண்டைக் காலத்தைப்பற்றி நாம் ஊகித்து அறிய முடிகிறது.

**பழங் கற்காலம் (கி.மு. 5,000 — கி. மு. 3,000)**

இக் கால நிலையில் வாழ்ந்த மக்கள் எந்த மக்கள் வகையினர் (**Human types**) என்று அறுதியிட்டுக் கூறமுடியாமற் போயினும், அவர்களின் வாழ்க்கை முறையினை நாம் ஓரளவு உணர முடிகிறது.

கரடுமுரடான கற்கருவிகளைப் பயன்படுத்திய அம் மனிதர்கள், வேட்டையாடுதலையே முக்கிய தொழிலாகக் கொண்டிருக்கக் கூடும். அவை, அவர்களின் உணவு, உடை அத்தியாவசியங்களை நிறைவேற்றியிருக்கலாம். அக் காலத்தில் பயங்கர வனவிலங்குகள் பலவும் மாவினங்களும் இருந்திருக்கலாம். அக் காலத்தில் தேம்ஸ் நதி வடகடலின் அலைகளுக்கிடையில், இப்போது முழுகிப் போயிருக்கும் சதுப்பு நிலத்தின் வழியாகச் சென்று, ஆர்டிக் பெருங்கடலோடு (Artic ocean) கலந்திருக்கலாம்.

டாங்கர் பாங்கிற்கு அருகிலுள்ள கடலின் மண்ணை எடுக்கும் போது, கம்பளி யானைகளின் எலும்புகளும் கலைமான் எலும்புகளும் கண்டெடுக்கப்பட்டன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஓநாய், பழுப்புக் கரடி, காட்டுப் பூனை, ரெயின்டீர் (Reindeer), காட்டுப் பன்றி (Boar) முதலிய பல்வேறு உயிரினங்களும் இக் காலத்தில் வாழ்ந்திருக்கக்கூடும். இடி, மின்னல், மழை வந்த காலத்தில் தங்களைக் காத்துக்கொள்ள இம் மக்கள் மலையுச்சிகளில் இயற்கையாக அமைந்த குகைகளைத் தங்குமிடங்களாகக் கொண்டிருந்திருப்பினும், பெரும்பாலும் நல்ல குடி நீர் கிடைக்கக்கூடிய ஆற்றுப் படுகைகளிலும் தங்கி வாழ்ந்திருக்கக் கூடும். ஆதலால், இம் மக்கள் வாழ்ந்த இடங்களின் சிதைவுகள், அணி வகைகள், கல்லாலான ஆயுதங்கள், இறந்தவர்களைப் புதைக்கும் அவர்களின் சவக்குழிகள் போன்றவை தேம்ஸ், ஸெவர்ன் ஆற்றுப் படுகைகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன. மீன் பிடித்தலும் அக் கால மக்களின் சிறப்புத் தொழிலாக இருந்திருக்கும். கிழக்கு யார்க்ஷயரிலும் (Yorkshire), வடக்கு வெஸ்ஸெக்ஸ் பகுதியிலும், கிழக்கு ஆங்கிலியா (Anglia) பிரதேசத்திலும் பழங்கற்கால மக்கள் வாழ்ந்ததற்கான சின்னங்களை மக்களினவியல் (Anthropology) மூலமாக நாம் அறிய முடிகிறது.

**புதிய கற்காலம் (கி.மு. 3,000 — கி.மு. 2,000)**

இக்காலத்தின் தொடக்கத்தில்தான் இயற்கைக் கோள்களால் அலைக்கழிக்கப்பட்டு, பிரிட்டன் ஒரு தீவாக மாறி இருக்கலாமென நம்பப்படுகிறது. இக் கால அளவில் மக்கள் கூட்டம் வடகடல், ஆங்கிலக் கால்வாய் ஆகிய நீர்ப் பரப்புகளைக் கடந்து பால்டிக் (Baltic), கவ்ல் (Gaul) போன்ற பகுதிகளிலிருந்து பிரிட்டனை அடைந்திருக்க வேண்டும். சில பிரிவினர், அட்லான்டிக் பெருங்கடலையும், ஐரிஷ் கடலையும் கடந்து இங்கு வந்திருக்கலாம். இக் கால மக்களைப்பற்றி, நாமறியக் கூடிய விபரங்கள் குறைந்த அளவிலேயே கிடைக்கின்றன. டெர்பிஷையர் (Derbyshire)

போன்ற இடங்களில் உள்ள குகைகளில் காணப்படும் முற்றுப் பெருத ஓவியங்கள், இக் கால மனிதனைப்பற்றி அறிய ஓரளவு உதவுகின்றன. புதிய கற்கால மனிதர்கள் கரிய நிறமும், குள்ள உருவமும், நீண்ட தலையும் கொண்டவர்களாக இருந்திருக்கக் கூடும். இக் கால மக்கள் வழவழப்பான கற்கருவிகளையும் எலும்புகளையும் ஆயுதங்களாக உபயோகித்தனர். இக் கருவிகள், முற்காலத்தில் பழக்கத்திலிருந்தவற்றுக்கு முற்றிலும் வேறு பட்டனவாகவே இருந்தன. கைப்பிடிகள் கொண்ட கோடரிகள் (Axe), கல்லுளிகள், கத்திகள் போன்றவை அவற்றில் சில. சஃப்போக்கில் (Suffolk) பிராண்டன் என்னுமிடத்திலும், ஸஸ் ஸெக்ஸ் (Sussex) என்னுமிடத்தில் சிஸ்பரியிலும் இக் கற்கால ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. பட்டைக் கற்கள், தீட்டும் கற்கள் முதலியனவும் அவர்களால் பயன்படுத்தப்பட்டன. இம் மக்கள் வேட்டையாடுதல், மீன் பிடித்தல் போன்ற தொழில் களுடன் கால்நடைகளை மேய்க்கும் தொழிலையும் மேற்கொண் டிருந்தனர். ஆடுமாடுகள், பன்றிகள், நாய்கள், விரிந்த கொம்பு களைக் கொண்ட விலங்குகள் முதலியவற்றைப் பழக்கினுர்கள். இக் காலத்தின் பிற்பகுதியில் கோதுமையைச் சிறிதளவு பயிரிடத் தெரிந்து கொண்டிருந்தனர். இவர்களின் விவசாய முறை மிகவும் பின்தங்கியதாகவே இருந்தது. கைகளால் உருவாக்கப் பெற்ற ஒருவகை மட்பாண்டங்களையும் பயன்படுத்தினர். கம்பளி நெய்யும் தொழிலும் அவர்களுக்குத் தெரிந்திருந்தது. மரத்தி னுலான வீடுகளையும் கட்டினர். தங்களுடைய குடியிருப்புகளைச் சுற்றிக் கூர்மையான மரக்குச்சிகளை நட்டுவித்துக் கொடிய விலங்கு களிலிருந்து தங்களைக் காத்துக்கொண்டனர். சமவெளிகளில் வாழ்ந்தபோது, இம் மக்கள் கூட்டங் கூட்டமாகப் பாசறைகளில் உறைந்ததுடன் விலங்குகளுக்குரிய தொட்டிகளையும் (Cattle shed) அமைத்துத் தக்க பாதுகாப்புடன் வாழ்ந்தனர்.

பிரிட்டனின் மனித வரலாற்றுக்கு முன்னுரையாக அமையும் இந்தப் புதிய கற்கால மனிதர்களின் சவக்குழிகள், பிரிட்டனிலுள்ள வில்ட்ஷயர் (Wiltshire), டோர்செட் (Dorset), சாமர்செட் (Somerset), கிளௌஸெஸ்டர்ஷயர் (Glowcestershire) போன்ற பகுதிகளிலேயே மிகுதியாகக் காணப்படுவதால், சில குறிப்பிட்ட பகுதிகளிலேயே இம் மக்கள் வாழ்ந்திருக்கக்கூடுமெனப் புதை பொருள் நிபுணர்கள் நம்புகின்றனர்.

**வெண்கலக் காலம் (கி.மு. 2,000—கி.மு. 1,000) (Bronze Age)**

இக் காலத்தில் பிரிட்டனை வந்தடைந்தவர்கள் மத்தியதரைக் கடல் பகுதி வகையினராக (Mediteranean type) இருந்திருக்கக்

கூடும். அகன்ற தலையும், உறுதிவாய்ந்த உடற்கட்டும் கொண்ட இம் மக்கள், ஃபிரான்சிலுள்ள பிரிட்டானியாவிலிருந்தும் (Brittania), ஜெர்மனியிலுள்ள ரைன்லாந்து (Rhineland) பகுதியிலிருந்தும் வந்தவர்களாவர். யார்க்ஷயரிலிருந்து தேம்ஸ் நதியின் கழிமுகம் வரையிலுள்ள கிழக்குப் பகுதிவரை இம் மனிதர்கள் தங்கள் இருப்பிடங்களை அமைத்திருந்தனர். இவ் வினத்தினரை பீக்கர்-ஃபோக் (Beaker Folk) எனவும் அழைக்கின்றனர். தங்களுக்கு முன்னர் வாழ்ந்த மக்களைக் காட்டிலும், இவ் வினத்தினர் ஓரளவு நாகரிக முன்னேற்றம் அடைந்திருந்தனர். பெரிய நீல நிறக் கற்களைப் பெம்புரோக்ஷயரிலிருந்து (Pembrokeshire) சேலிஸ்பரி (Salisbury) சமவெளிக்குக் கொண்டுவந்ததும் 50 அடி ஆழமுள்ள குழிகளை வெட்டியதும் செங்குத்தாக நிறுத்தப்பட்ட பாறைகள்மீது குறுக்குக் கற்களை அமைத்ததும் இவர்களின் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். ஸ்டோன் ஹெஞ் (Stone Henge) என்னுமிடத்திலுள்ள கற்கோப்புகளும் ஆவ்பரியிலுள்ள (Avebury) கல் வட்டங்களும் இம் மக்களின் கட்டுப்பாடான திறமைக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டாகும். டிலான், கார்ன்வால், கர்னர்வான் (Carnarvan) போன்ற இடங்களிலும் இவர்களின் கைவண்ணம் தெரிகின்றது.

பசுமையான புல்வெளிகளிலும் ஆற்றுப் படுகைகளிலும் இம் மக்கள் தங்களின் குடியிருப்புகளை அமைத்தனர். ஆடை நெய்யவும், கரியைத் தீயாக மூட்டவும் இவர்கள் அறிந்திருந்தனர். உலோகத் தொழிலிலும் இவர்கள் கைத்திறன் பெற்றிருந்தனர். சிக்கிமுக்கிக் கற்களை உரசித் தீ மூட்டித் தாமிரம், தகரம் போன்ற உலோகங்களை உருக்கி வார்ப்படம் செய்யப்பட்ட போர்க் கருவிகளையும் உபயோகித்தனர். புதுவகையான உலோகக் கோடரிகளையும், ஈட்டிகளையும், அரிவாள்களையும், வாணலிகளையும் செய்யக் கற்றுக் கொண்டனர். பண்டைக் காலக் களை வெட்டிகளை மாற்றிக் கூர்மையான புதிய வகைக் கலப்பைகளைக் கொண்டு நன்முறையில் விவசாயம் செய்தனர். இவர்களுடைய காலத்தை உணர்த்தும் சின்னமாக இன்றும் பிரிட்டனின் சில இடங்களில் சதுர வயல்கள் (Squire fields) காணப்படுகின்றன.

இம் மக்களுக்கு, இரும்பு தெரிந்திருக்கவில்லை எனினும், தங்கம் இவர்களுக்குத் தெரிந்திருந்தது. இந்த உலோகமே இவர்களின் முக்கிய வணிகப் பொருளாக இருந்திருக்கக் கூடும்.

இறந்தோர்கள் ஒருவகைப் பெட்டிகளில் அடக்கம் செய்யப்பட்டனர் எனத் தெரியவருகிறது. இம் மக்கள் இயற்கையை வழிபட்டவர்களாக இருந்தமையால், நரபலியிட்டனரோ (Human sacrifice) என ஐயப்படவேண்டியுள்ளது.

**இரும்புக் காலம் கி.மு. 1,000 — 800 (Iron Age)**

இக் காலத்தின் தொடக்கத்திலேயே ஐபீரியன்கள் (Iberians) என்றழைக்கப்பட்ட இனத்தினர் ஆல்ஃபைன் (Alphine) பிரதேசத்திலிருந்தும் ஸ்பெயினிலிருந்தும், பிரன்னீஸ் (Pyrennees) பகுதியிலிருந்தும் பிரிட்டனுக்கு வந்தனர். இம் மக்கள் குள்ள உருவம் கொண்டவர்களாகவும் கருமையான தலைமுடியை உடையவர்களாகவும் இருந்தனர். பிரன்னீஸ் பகுதியில் வாழும் இன்றைய ஆதிமக்களான (Aborigines), பாஸ்க் (Basque) இனத்தினர் ஏறக்குறைய அதே உருவ அமைப்பினைக் கொண்டிருக்கின்றனர் என்றும் சுட்டிக் காட்டப்படுகிறது. இக் குடியினர், ஏற்கனவே, கிழக்கு, தெற்குப் பகுதிகளில் வாழ்ந்த பழைய மக்களோடு காலப்போக்கில் கலந்து இணைந்தனர். மேற்கு, வடக்கு மலைத் தொடர்களைக் கடந்து கார்ன்வால், வேல்ஸ், ஸ்காட்லாந்துப் பகுதிகளிலும், கடல்கடந்து அயர்லாந்துத் தீவுகளிலும் இம் மக்கள் ஊடுருவ ஆரம்பித்தனர். இம் மக்கள் இரும்பின் (Iron) உபயோகத்தினைப்பற்றித் தெரிந்து கொண்டிருந்தனர். போக்குவரத்துச் சாதனத்தில் புரட்சியை உண்டாக்கிய மரச் சக்கர வண்டிகளைக் கண்டுபிடித்தனர். விவசாய முறையிலும், ஆடை நெய்தலிலும், கட்டடக் கலையிலும் தங்களுக்கு முன் வாழ்ந்தவர்களைவிடச் சிறப்பான திறமையைப் பெற்றிருந்தனர்.

## கெல்ட்டுகளின் வருகை, ரோமானியர்கள் (Romans) வருகை

கி. மு. 10 ஆம் நூற்றாண்டிலிருந்தே பற்பல மக்களினங்கள் இடப் பெயர்ச்சிகளில் ஈடுபட்டு, ஐரோப்பா முழுவதையும் நிலை கலங்கச் செய்திருந்தன. அவற்றில் ஓர் இனத்தினரே கெல்ட்டுகள் (Celts) ஆவர். கிழக்கு ஐரோப்பாவிலிருந்து புற்றீசல்கள் போல் இடம் பெயர்ந்த இவ் வினத்தினர், இல்லிரியா (Illyria), ஜெர்மனி போன்ற பகுதிகளைக் கடந்து ஸ்விட்சர்லாந்து (Switzerland), வட ஃபிரான்ஸ், கீழ் ரைன்(Lower Rhine)போன்ற பிரதேசங்களில் பலகாலம் தங்கியிருந்தனர். அவர்களில் ஒரு பிரிவினர், அங்கிருந்து கிளம்பி, அட்லாண்டிக் கரையை அடைந்து பிரிட்டனுக்குப் படகேறினர்கள். கூட்டங் கூட்டமாக இவ்வாறு இடம் பெயர்ந்து வந்த இக் கெல்ட்டுகள், பிரிட்டிஷ் தீவுகளில்

எப்பொழுது நுழைந்துக் எவ்வாறு தங்களை நிலைப்படுத்திக் கொண்டார்களென்று உறுதியாகக் கூற இயலாது. மீன் பிடிப்பதற்கேற்ற கரையோரங்களும் வேட்டையாடுவதற்கேற்ற காடுகளும் வாணிகத்திற்கேற்ற தகரம் (tin) முதலிய உலோகங்களும் பிரிட்டனில் இருந்தமையே கெல்ட்டுகளின் வருகைக்கு முக்கிய காரணமாக இருந்திருக்கலாம்.

கி.மு. 800–விருந்து கி.மு. 450 வரையிலான காலப்பகுதியில் இவ் வினத்தினரும் இவர்களின் துணை இனத்தினரான டியூட்டானியர்களும் (Teutons) பிரிட்டிஷ் தீவுகளில் இறங்கியிருக்க வேண்டும். பிரிட்டனை நோக்கி வந்த இம் மக்களினம் இரண்டு அல்லது மூன்று அலையினராகப் படையெடுத்தனர். கெல்ட் மொழி பேசிவந்தவர்களை இரு பிரிவினராகப் பகுக்கலாம். அவர்கள் கொய்தெல் (Goidel) என்றும், பிரெட்டானி (Pretanni) எனவும் அழைக்கப்பட்டனர். கொய்தெல்கள் பேசிய மொழி இன்றும் அயர்லாந்திலும் ஸ்காட்லாந்து மேட்டு நிலங்களிலும் (Highlands) பேசப்பட்டு வருகிறது. ஆரம்பத்தில் பிரிட்டனில் கிழக்கு தெற்குப் பகுதிகளில் கொய்தல்கள் ஆதிக்கம் பெற்றிருந்தாரெனினும், அடுத்து வந்த பிரெட்டானியர்கள் முன்னவர்களை மேற்கிலும் வடக்கிலும் உள்ள காடுகளுக்கு விரட்டியடித்தனர். பிரெட்டானியர்கள் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் அதிகக் காலம் தங்கியிருக்க முடியாதபடி அவ் வினத்தின் இன்னொரு பிரிவினர் அலைஅலையாக அப் பகுதியின் கரையோரங்களில் இறங்கி, அங்கிருந்தோரைப் பொருது வென்றனர். அவ்வாறு வந்திறங்கியவர்கள் வெள்ளையர்கள்; திறமைமிக்க போர்வீரர்கள். தங்களால் தோற்கடிக்கப்பட்டவர்களுக்குப் 'பிரெட்டானி', அதாவது 'சாயம் பூசிக்கொண்டவர்கள்' எனப் பெயரிட்டு அழைத்தனர்.

காலப் போக்கில் பிரெட்டானி என்ற இப் பெயரே 'பிரிட்டன்' என்று மருவி, அதுவே இத் தீவுகளுக்கும் பெயராக அமைந்துவிட்டதாகவும் கருதப்படுகிறது.

கடைசியாகப் பிரிட்டன் வந்தடைந்திருந்த இந்த கெல்ட் கிளை இனத்தினர், ஸ்கார்பரோ முனையில் இறங்கித் தேம்ஸ் நதியின் வழியாக ஹாம்ஷயர் (Hameshire) துறைமுகங்களைக் கடந்து இங்கிலாந்தை அடைந்தனர். பற்பல பிரிவுகளாகப் பிரிட்டனை வந்தடைந்த கெல்ட்டுகள் பற்பல பெயர்களிலே தங்களை அழைத்துக்கொண்டு, பற்பல இடங்களிலே தங்களின் ஆதிக்கத்தை நிலைநிறுத்திப் பிரிட்டிஷ் தீவுகள் அனைத்திலும் பரவலாக வாழ்ந்தனர்.

**கெல்ட்டியப் பண்பாடு**

தொடக்க காலத்திலிருந்தே பிரிட்டனில் நிலையான குடியேற்றங்களை அமைத்துத் தங்களின் பண்பாடுகளைக் காத்துக் கொள்வதில் பெரும் திறமை காட்டிய கெல்ட்டுகள், தங்கள் இனத்திற்குரிய பொன் நிறமான தலைமுடியினையும் நெடிய உருவத்தையும் வெள்ளை நிறத்தையும் கொண்டவர்களாக விளங்கினர். எங்ஙனம் இவர்கள் பல்வேறு இனங்களாக அமைந்து தங்களுக்குள் எப்போதும் போரிட்டுக்கொண்டு இருந்தனரோ, அதுபோல் தங்களின் வருகைக்கு முன்னர், இத் தீவுகளில் வாழ்ந்த ஆதி மக்களை வெல்வதிலும், அவர்கள்மீது தங்களின் பழக்க வழக்கங்களைத் திணிப்பதிலும் கெல்ட்டுகள் தவறிவிடவில்லை. பொதுவாக, கி.மு. 8ஆம் நூற்றாண்டிலிருந்தே பிரிட்டனில் கெல்ட்டுகளின் காலம் தொடங்கியிருந்தாலும், கி.மு. முதலாம் நூற்றாண்டு வரை ஒரே மாதிரியான பண்பாடு நடைமுறையில் இருந்ததென்று சொல்ல முடியாது. பிரிட்டனுக்கு வந்திருந்த கெல்ட்டுகள் வேறுபட்ட காலங்களில் கடலைக் கடந்து வந்தமையாலும், பழங்குடி மக்களோடு அவர்கள் கொண்ட தொடர்பினாலும் எட்டு நூற்றாண்டுக் காலங்களில் ஏற்பட்ட மாற்றங்களாலும், அவர்களிடையே வேறுபட்ட பண்பாடுகள் வளர்ச்சியுற்றன. பிரிட்டனின் மக்களோடு இரண்டறக் கலந்து, இங்கிலாந்தின் வரலாற்றுக்குப் பெரும் பங்கினைக் கொடுத்து வந்த கெல்ட்டுகள், போர் வல்லுநர்களாக மட்டுமன்றிப் புதுமையுணர்வு கொண்டவர்களாகவும் விளங்கினர்.

ஸஸ்ஸெக்ஸ், டீன் காடுகளிலிருந்து கிடைத்த இரும்பைப் பயன்படுத்தும் வழிமுறைகள் கெல்ட்டுகளுக்குத் தெரிந்திருந்தது. இதிலிருந்து, ஆறடி நீண்ட வேல்களையும், இரும்புச் சக்கரங்கள் பூட்டப்பெற்ற ரதங்களையும் (Chariots) குதிரைக் கவசங்களைச் செய்யும் திறனையும் இம் மக்கள் பெற்றிருந்தனர்.

பாதுகாப்பு அரண்களாகக் கோட்டைக் கொத்தளங்களையும் கட்டிக் கொண்டு இம் மக்கள் வாழ்ந்தார்களென்று திட்டவட்டமாகத் தெரிகின்றது. டோர்செஸ்டருக்கு (Dorchester) அருகில் கட்டப்பட்டிருந்த மெய்டன் அரண் (Maiden Castle), கோட்ஸ் ஒல்ட்ஸ் (Kotswolds), வில்ட்ஷயர் (Wiltshire) போன்ற பகுதிகளில் காணப்படும் சின்னங்கள் கெல்ட்டுகளின் கோட்டை கட்டும் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

அலங்காரக் கலையிலே தனி ஆர்வம் உடையவர்களாகவும் கெல்ட்டுகள் விளங்கினர்கள். உலோகத்தாலும் கண்ணாடியாலும்

செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்து ஆனந்தித்த இம் மக்கள், தலைக்குத் தொப்பியும் உடலுக்குக் கவசத்தையும் அணிந்து கொண்டனர்.

கெல்ட்டுகள் குலமரபினராகவோ (Tribal group), கூட்டுக் குடும்ப இனத்தினராகவோ (Joint family group) வாழ்ந்திருக்க வேண்டும். ஒழுக்கத்தின் அடிப்படையில் ஏற்பட்டிருந்த சட்ட திட்டங்களுக்குட்பட்டு அவர்களின் சமுதாயம் கட்டுக் கோப்பாக இருந்திருக்க வேண்டும்.

உழவுத் தொழிலில் கெல்ட்டுகள் நல்ல முன்னேற்றம் கொண்டிருந்தனர். இங்கிலாந்தின் தெற்குப் பகுதியில் கோதுமையும், வடக்குப் பகுதியின் எல்லையில் ஓட்ஸ் என்னும் தானியமும் பயிரிடப்பட்டன. தானியங்களோடு தேனினைக் கலந்து காய்ச்சி வடிக்கப்பெற்ற தேறலைக் கெல்ட்டுகள் விருப்பப் பானமாக அருந்தினர்கள்.

வேட்டையாடுதல், மீன் பிடித்தல், ஆடு, மாடு, பன்றிகள், குதிரைகள் வளர்த்தல் போன்ற பண்டைத் தொழில்களோடு நெசவு, தேனீ வளர்த்தல், தச்சு, உலோகத் தொழில் ஆகியவற்றிலும் இம் மக்கள் கைத்திறன் பெற்றிருந்தனர். காடுகளை அழித்தலிலும், சதுப்பு நிலங்களைத் தூர்ப்பதிலும் அக்கறை காட்டிய கெல்ட்டுகள் போர் புரிவதிலும் ஆர்வம் மிக்கவர்களாக இருந்தனர்.

களிமண்ணால் கட்டப்பெற்ற சுவர்களையும், மிலாறுகளால் மூடப்பட்ட கூரைகளையும் கொண்டு, பளுவற்ற மரச் சட்டங்களினால் கட்டப்பட்டிருந்த வீடுகளிலேயே இம் மக்கள் வாழ்ந்தனர். எளிதில் அழியும் தன்மையினைக் கொண்டிருந்த இக் குடில்களைக் கெல்ட்டுகள் 'டிரேவ்ஸ்' (Trevs) என அழைத்தனர்.

மேற்கு, வடக்குப் பகுதிகளில் குடியேறியிருந்த கெல்ட்டுகள் புல்வெளிகளை நாடியும் வேட்டையாடக் காட்டு நிலங்களைத் தேடியும் அடிக்கடி தங்களின் குடிகளை இடம் விட்டு இடம் பெயர்ந்தும் அழைத்துச் சென்றனர். ஆயினும், தானியங்கள் செழிப்பாக வளர்ந்த தெற்கு, கிழக்குப் பகுதிகளில் வசித்த கெல்ட்டுகள் தனித்தனிக் குடும்பங்களாகப் பிரிந்து தடுக்கப்பட்ட விளைநிலங்களுக்கிடையே குடில்கள் அமைத்து நிரந்தர வாழ்க்கையும் (Settled life) நடத்தினர்.

கெல்ட்டுகளின் ஆட்சிமுறை, இனமரபுத் தலைவர்களை (Tribal chiefs) மையமாகக் கொண்டிருக்க வேண்டும். அம்மக்

களிடையே பழக்கத்திலிருந்த சட்ட அமைப்பு, நீதிமுறை (Justice) சமுதாயப் பின்னணியில் அமைந்திருக்கலாம். அவ் வழக்காற்றுச் சட்டத்தினை அளவு கோலாகக் கொண்டு தலைவர்கள், தத்தம் குடியினரைக் காத்தும் ஒறுத்தும் வந்திருக்கலாம். தங்கள் இனப் பிரிவினருக்குக் கொடுமைகள் செய்த பகைவர்களை இத் தலைவர்கள் போரிலே வென்று பழி தீர்த்துக் கொண்டதோடு, சில சமயங்களில் இழப்பீட்டையும் (Compensation) பெற்றனர்.

கெல்ட்டுகளின் சமயம், இயற்கைக் கோள்களையே கருவாகக் கொண்டிருந்தது. தரும சிந்தனையோ, தத்துவப் போதனையோ அதில் இல்லை. போருக்கும் இடிக்கும் (Thunder) கடவுள்கள் இருந்தனர். அவர்களின் சில கடவுள்கள் மரங்களிலும், நீர்நிலை களிலும் உறைந்திருந்தனர். பல தெய்வங்களைக் கொண்டிருந்த கெல்ட்டுகளின் சமயத்தில் மூடப்பழக்க வழக்கங்களே நிரம்பியிருந்தன. மந்திரப் பாடல்களை உணர்ந்தவர்களும், சகுனம் பார்க்கத் தெரிந்தவர்களும், சமய ஆசாரங்களைப் பின்பற்றியவர்களுமான ட்ருயிடுகள் (Druids) என அழைக்கப்பட்ட குருமார்கள் வலிமை மிக்க அதிகாரம் பெற்றவர்களாக இருந்தனர். தங்களுடைய கடவுள்களின் ஆசிகளைப் பெறுவதற்கும், கோபத்தைத் தணிப்பதற்கும் இக் குருமார்கள், விலங்குகளோடு நரபலியையும் கொடுத்தனர்.

கல்வியறிவினைத் தங்களுக்கே உரிய தனி உரிமையாகக் கொண்டிருந்த இக் குருமார்கள், சமூக, சமயக் கட்டுப்பாடுகளை மீறுகின்ற மக்களைத் தங்கள் இனத்திலிருந்து இழிந்தவர்களாகக் கருதி நீக்கி வைத்தனர். இவ்வாறு விலக்கப்பட்ட மக்கள், சமுதாயத்தில் புறக்கணிக்கப்பட்டவர்களாகவும் சமயத்தில் நம்பிக்கையில்லாதவர்களாகவும் கருதப்பட்டு வெறுத்து ஒதுக்கப் பட்டனர். அக் காலத்தில் எந்த இனத்திலும் இல்லாத சில கொடுமையான கட்டுப்பாடுகளைக் கெல்ட்டுகளின் சமயம் கொண்டிருந்தது.

**கெல்ட்டுகளின் இனப் பிரிவுகள்**

கி.மு. 250ஆம் ஆண்டிற்குப் பின்னர், ஃபிரான்சிலுள்ள காள் (Gaul) பகுதியிலிருந்து கெல்ட்டுகளின் மற்றொரு கிளையினர் யார்க் ஷயரில் வந்திறங்கிக் கீழ் ஆங்கிலியப் பகுதிவரை பரவினர். போரில் கொல்லப்பட்ட தலைவர்களை அடக்கம் செய்யும்போது, அத் தலைவர்களின் தேர், குதிரை முதலிய போர்ச் சாதனங்களையும் சேர்த்துப் புதைக்கும் பழக்கத்தை இப் பிரிவினர் வழக்கத்தில் கொணர்ந்தனர்.

அடுத்து வந்த மற்ருெரு பிரிவினர் கிளாஸ்டன்பரி (Glastonbury) என்னுமிடத்தில் தங்கி, ஏரிகளுக்கிடையே உயரமாகக் கட்டப்பட்ட மரமேடைகளின்மீது வீடு கட்டி வாழ்ந்தார்கள். இரும்பு, வெண்கலம் ஆகிய உலோகங்களிலும் கல், எலும்பு ஆகியவற்றிலும் பற்பல கருவிகளைச் செய்யக்கூடிய திறனையும் கண்ணடி மணிகளை ஆக்கும் நயத்தையும் சிறந்த மரவேலைப்பாடுகளைத் தயாரிக்கும் பக்குவத்தையும் இம் மக்கள் பெற்றிருந்தனர். ஈயம் போன்ற உலோகத்தை உருக்கிப் பயன்படுத்தவும் பார்லி (Barley) முதலிய தானிய வகைகளைப் பயிர் செய்யவும் இவர்களுக்குத் தெரிந்திருந்தது. கவண்கல் (Sling) கொண்டு பறவைகளைக் கொன்று தின்பது அவர்களின் பொழுது போக்காகவும் இருந்தது.

கி. மு. 75-லிருந்து வடக்குக் காளில், அதுகாறும் வசித்து வந்த பெல்ஜே (Belgae) என்னுமினத்தினர் கட்டவலானி, (Catuvellani) என்னும் ஒரு சிறு குழுவின் தலைமையில் பிரிட்டனிலுள்ள கென்ட் (Kent) பகுதியில் வந்திறங்கினர். அங்கிருந்து தேம்ஸ் ஆற்றங்கரையோரமாகப் பரவிச் சென்று எஸ்ஸெக்ஸ், ஹெர்ட்ஃபோர்ட்ஷயர் (Hertfordshire) முதலிய இடங்களில் குடியேறி, வீட்தாம்ஸ்டெட் (Wheatthamstead) என்னுமிடத்தில் கோட்டை ஒன்று கட்டித் தலைநகரை அமைத்துக் கொண்டு, ஆக்ஸ்ஃபோர்டுக்கும் (Oxford), கேம்பிரிட்ஜுக்கும் (Cambridge) இடைப்பட்ட பகுதியை ஆண்டனர்.

பின்னர், சில ஆண்டுகள் கழித்து அத்ரபேடிஸ் என்னும் மற்ருெரு பெல்ஜிய இனத்தினர், பிரிட்டனை அடைந்து பெர்க்ஷயரிலுள்ள (Berkshire) ஸில்செஸ்டரில் (Silcester) தங்களது தலைநகரை அமைத்துக் கொண்டு, மேற்கு ஸஸ்ஸெக்ஸ், சாமர்ஸெட் பகுதிகளில் ஊடுருவினர். தகுதியும் திறமையும் கொண்டிருந்த இம் மக்கள் பிரிட்டனின் பல முன்னேற்றங்களுக்கு வித்திட்டனர். 'ஸ்டேட்டர்' (Stater) என்னும் கிரேக்க நாணயத்தைப் போன்று, தங்களுக்கென்று சிறப்பாகப். பொற்காசுகளை அச்சிட்டுக் கொண்டனர். காடுகளை வெட்டி நிலமாக்கி உறுதியான பெரிய கலப்பைகளைப் பயன்படுத்தி, அந் நிலங்களை உழுதுப் பயிரிட்டு விவசாயம் செய்வதில் ஆர்வம் கொண்டனர். சக்கரத்தில் மண்ணை வைத்துப் பெரிய பாண்டங்களையும் இவர்கள் செய்தனர்.

### அந்நியத் தொடர்பு

பிரிட்டனில் இங்ஙனமாகக் குடிபுகுந்திருந்த கெல்ட்டுகளின் பல இனத்தினர், ஆங்கிலக் கால்வாயின் எதிர்க்கரையில் வசித்த

ஐரோப்பிய இன மக்களுடன் நெருங்கிய வாணிபத் தொடர்பை வளர்த்துக் கொண்டிருந்தது போற்றத்தக்கது. கார்ன்வால், சில்லி தீவுகளில் கிடைத்த ஈயமும் பிரிட்டனின் கரை யோரங்களில்கிடைத்த முத்துகளும் மற்றும், தங்கம் போன்ற உலோகப் பொருள்களும் இவ் வாணிபத்திற்குப் பெரிதும் பயன்பட்டிருக்கின்றன.

வாணிபத் தொடர்பேயன்றி, அக் காலத்தில் பிரிட்டனுக்கும் ஐரோப்பியப் பகுதிகளுக்குமிடையே அரசியல் உறவும் இருந்திருக் கின்றது. கி. மு. முதலாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே பிரிட்டனில் வாழ்ந்த கெல்ட்டுகளுக்கும் அவர்களின் துணை இனத்தினரான பெல்ஜேக்களுக்கும் வடக்குக் காளிலிருந்த தங்களின் இனத்தினரோடு நெருங்கிய அரசியல் தொடர்பு இருந்து வந்தது.

ரோமானியர்கள், வடகாளியப் பகுதியில் வாழ்ந்த இனத் தினர்களை அடக்கி ஒடுக்க முற்பட்டிருந்தபோது, பிரிட்டனில் வாழ்ந்தோர் அந்த ஆக்ரமிப்பாளர்களை எதிர்க்க வீரர்களையும் கப்பல்களையும் அனுப்பி வைத்தனர். அதுவே பின்னர், மாவீரன் ஜூலியஸ் சீசர் தலைமையில் ரோமானியர்கள் பிரிட்டன்மீது படையெடுக்கக் காரணமாகியது.

சுருங்கக் கூறின், கெல்ட்டுகளின் காலத்தையே நாம் இத் தீவு களின் வரலாற்றுக் காலமாகக் கொள்ளவேண்டும். இக் காலத்தி லேயே, பிரிட்டன் நாகரிகப் பாதையில் முன்னேறத் தொடங்கிய தெனின் அது மிகையாகாது.

பிரிட்டன்மீது, கி.மு. முதலாம் நூற்றாண்டிலிருந்து நடத்தப் பட்ட ரோமானியர்களின் படையெடுப்பும் அங்கு அவர்கள் நிறுவிய ஆட்சியும் பரப்பிய பண்பாடும் இந் நாட்டின் வர லாற்றுக் கண்ணோட்டத்தில் பதிவாகும் முக்கிய நிகழ்ச்சி களாகும்.

கி.மு. 484 - 425-ல் வாழ்ந்த ஹிரோட்டாடஸ் **(Herodotus)** என்ற கிரேக்க வரலாற்று ஆசிரியர், இத் தீவைத் 'தகரத் தீவு' **(Tin Island)** எனக் குறிப்பிட்டதிலிருந்தே பிரிட்டனின் கனிவளம் ஐரோப்பாவின் கவனத்தை ஈர்த்து வந்ததெனலாம். அரிஸ் டாடில் (Aristotle) என்ற இன்னொரு கிரேக்கப் பேராசிரியரும் இத் தீவை 'அலிபான்' **(Alibon)** என அழைத்ததிலிருந்து, பண்டைய கால ஐரோப்பியர்களுக்குப் பிரிட்டன் நன்கு அறிமுக

மாகி இருந்தது என்ற உண்மை தெரிய வருகின்றது. ஆனாலும் கிரேக்கப் பெருவீரன் மகா அலெக்ஸாந்தரின் காலத்தில் (கி.மு. 325) பித்தியஸ் (Pythias) என்ற கிரேக்க மாலுமி, பிரிட்டனின் கடற்கரையோரப் பகுதிகளைக் கண்டறிந்த காலத்திலிருந்தே அதன் நீர்வளம், நிலவளம் ஐரோப்பாவைக் கவர்ந்திருந்தது.

ரோமுலஸ்—ரீமஸ் (Romulus—Remeus) என்ற இரு சகோதர்களால் (கி.மு. 753) இத்தாலியில் டைபர் (Tiber) நதிக்கரையில் உருவாக்கப்பட்ட ரோம் (Rome), காலப் போக்கில் இத்தாலி முழுவதையும் வென்றதோடு அல்லாமல், 'கார்த்தேஜ்' (Carthage) உள்பட்ட மத்தியதரைக்கடற் பகுதிகளையும் கிரீஸ், சிரியா, ஆசியா மைனர்கள் (Asia Minor) பகுதிகளையும் தன்னுதிக்கத்திற்குள் கொண்டுவந்தது.

அந் நிலையில், ரோமானியப் பேரரசின் இத்தாலிய எல்லைகளை வடக்கிலிருந்தும், வடமேற்கிலிருந்தும் முரட்டு இன மக்கள் (Barbarians) தாக்கத் தொடங்கினர். அந்த மிலேச்சர்களின் கேந்திரமாக இன்றைய ஃபிரான்ஸ் நாடான காள் (Gaul) இருந்தது. கி.மு. 71-லிருந்து கி.மு. 58 வரை இம் முரட்டு இன மக்கள் ரோம் பேரரசுக்குத் தீராத தொல்லைகளைக் கொடுத்துக் கொண்டுவர, ஜூலியஸ் சீசர் (Julius Caesar) என்ற பெருவீரர், ரோமானிய அரசால் காளுக்கு அனுப்பப்பட்டார். இக் கட்டத்திலிருந்தே பிரிட்டனுக்கும் ரோமானியருக்கும் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது.

**ஜூலியஸ் சீசரின் காலம்**

கி.மு. 58-ல் காளை வென்று அடக்குவதற்கு ரோமானியக் குடியரசிடமிருந்து ஐந்தாண்டுப் படைத் தலைமை பெற்றுவந்த தளபதி ஜூலியஸ் சீசர், தன் போர்த் திறனைக் காட்டிக் காளில் அய்சினி (Aisne) முதல் ஷீல்டெட் (Scheldt) வரையிலிருந்த, பெல்ஜேக்கன் என்ற முரட்டு இன மக்களை விரட்டி மூன்றுண்டுகளிலேயே பெரும் வெற்றியைக் கண்டார். கைப்பற்றப்பட்ட இப் பகுதிகளில் சீசர், ரோமானியரின் நாகரிகத்தைப் புகுத்தியது அவருக்கு அழியாப் புகழைத் தேடிக் கொடுத்தது.

**பிரிட்டன்மீது படையெடுக்கக் காரணங்கள்**

காளில் படை முகாமிட்டுத் தங்கியிருந்த சீசர், கி.மு. 55-ல் ஒரு நாள் டோவர் இடைகழி (Dover straits) நிலமுனைக்கு அப்பால், தொலைவிலுள்ள செங்குத்தான வெள்ளைப் பாறைகளைக் கண்டார்.

அவர் பிரிட்டனைக் கண்ட காட்சியே அது. அப்போதுதான், பிரிட்டன்மீதும் படையெடுக்க வேண்டுமென்ற எண்ணம் சீசருக்கு உதித்திருக்க வேண்டும். சீசரின் 'காள் போர்க் குறிப்பி' லிருந்து (De Bello Gallico) அவர் ஏன் பிரிட்டனைத் தாக்க முனைந்தாரென்பது ஓரளவு தெரியவருகிறது.

சீசர், பிரிட்டனுக்குச் சென்றுவர எத்தனித்தால் அவரைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் அத் தருணத்தில் யாருக்குமில்லை. ஆயினும், காளுக்கும் பிரிட்டன் கரைக்கும் குறுக்கே இருந்த ஆங்கிலக் கால்வாயைக் கடப்பதரிது என்பதை அவர் அறிந்தார். பிரிட்டன்மீது படையெடுக்க வேண்டும் என்று சீசர் நினைத்தது, அங்கு ரோமானியர்களின் ஆட்சியை நிலைநிறுத்த வேண்டும் என்ற எண்ணமாக இருந்திருக்காது. அதற்கு நேரமும் போதிய படையினரும் சீசருக்கு இல்லை. ஆயினும், பிரிட்டனை அடையவேண்டிய அவசியம் மட்டும் சீசருக்கு இருந்தது.

காளில் தனக்களிக்கப்பட்டிருந்த படைத்தலைமையைக் காத்துக்கொள்ள வேண்டிய நிலையும், ரோமானிய அரசியலில் தனக்கொரு நிரந்தரப் பெருமையைத் தேடிக்கொள்ள வேண்டிய நிலையும், சீசருக்கு இருந்தது. தான் தொடர்ந்து படைத்தலைமையில் இருக்கவேண்டுமென்றால், பகட்டான வீர தீரச்செயல்களைச் செய்து காட்டவேண்டும். அதனால், அப்போதைய ஆட்சியாளர்களின் கவனத்தையும், முக்கியமாக ரோமானிய மக்களின் அபிமானத்தையும் பெறலாம். அது, வருங்காலத்தில் தனக்கு அரசியல் உயர்வைக் கொடுக்கலாம் எனச் சீசர் நினைத்தார். தன் வீரர்களுக்கு ஊதியம் கொடுக்கவும் தன்னைச்சேர்ந்தோர்க்குப் பரிசுகள் அளிக்கவும் போர்க் கைதிகளை விற்பனை செய்யவும் காளில் நடந்த கடும் போர்களால் உண்டான பெரும் செலவை ஈடுகட்டவும் திறைப் பொருள்களையும், அடிமைகளையும் பிரிட்டனிலிருந்து கைப்பற்றி ரோமாபுரிக்கு அனுப்பவும் இப் படையெடுப்புத் தனக்குத் தேவையாக இருக்குமென்பதைச் சீசர் உணர்ந்தார். ஏற்கனவே பிரிட்டனில் நில, கனி வளங்களைப்பற்றிக் கேள்வியுற்றிருந்த சீசருக்குப் புது இடங்களை அடைந்து ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்ற இயல்பான ஆசையும் இப் படையெடுப்பிற்குத் துணை புரிந்தது.

பிரிட்டன்மீது படையெடுப்பதன்மூலம், இத் தேவைகள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொள்ள விழைந்த சீசருக்கு, இன்னொரு இராணுவ அவசியமும் இருந்தது. பிரிட்டனிலிருந்த பெல்ஜேக்களில் சிலர் காளில் ஆட்சி புரிந்து வந்த தங்கள் இனத்தி

னரின் மேலாட்சியினை ஒப்புக் கொண்டிருந்தனர். அக் காரணத்தினால், சீசர் காளில் கடுமையாகப் போர் செய்து, அம் மக்களையடக்கி வந்த நேரத்தில் பிரிட்டிஷ் பெல்ஜேக்கள் காளிலிருந்தோர்க்கு உதவியைக் கொடுத்து வந்தனர். மேலும், சீசரால் காளிலிருந்து விரட்டப்பட்டவர்களுக்கும் பிரிட்டிஷ் பெல்ஜேக்கள் அடைக்கலமும் கொடுத்திருந்தனர். அதற்காகப் பிரிட்டிஷ் பெல்ஜேக்களைத் தண்டிக்க சீசர் விரும்பினார். மேலும் காளினை அடக்கி ஒடுக்கி, ரோமானியப் பேரரசின் பகுதியை நிலைக்கச் செய்ய வேண்டுமென்றால், இவ் வினத்தினரோடு நெருங்கிய உறவு கொண்டிருந்த பிரிட்டானிய மக்களையும் ஒடுக்க வேண்டுமென்று சீசர் நினைத்திருந்தார்.

அண்டைய நாடான பிரிட்டனும் தனக்கு அடங்கியதாக இருந்தால்தான் காள், தான் ரோமுக்குச் செலுத்த வேண்டிய திறைப் பணத்தைத் தவறாது செலுத்தி அடங்கிய நாடாகவும் இருக்குமெனச் சீசர் நினைத்தார். காளை, ரோமானியப் பேரரசின் நிரந்தரமான பகுதியாகக் கொண்டிருக்க வேண்டுமென்றால், அந் நாட்டின் அண்டைய நாடான பிரிட்டனின் அரசியல், நிலவியல் போன்றவற்றைப்பற்றி ரோமானியர்கள் அறிந்திருக்க வேண்டியது அவசியமெனவும் சீசர் கருதினார்.

பிரிட்டன்மீது படையெடுக்க வேண்டிய அவசியத்தைப் பெற்றிருந்த சீசருக்கு, அந் நாட்டிலிருந்த உள்பூசல்களும் இனப் போராட்டங்களும் தெரிந்திருந்தன.

தென் பிரிட்டனில் அப்போது ஆதிக்கம் பெற்றிருந்த பெல்ஜேக்களின் இனத்தைச் சேர்ந்த கட்டவலானியரின் தலைவர் காசிவலானஸ் (Casivalonius) என்பவர், பெரிய ஓர் அரசை நிறுவ முயற்சி செய்து வந்தார், பெல்ஜேக்கள் அல்லாத இசேனியரும் (Isanians) திரிநோவான்டியரும் (Trinovantes) காசிவலானசை எதிர்க்க காளில் படையோடு தங்கியிருந்த ஜூலியஸ் சீசரின் உதவியை நாடினர். முக்கியமான பல பணிகள் தனக்குக் காளில் இருக்க, பிரிட்டனுக்கு எந்த நேரத்தில் படைகொண்டு செல்வது எனத் தயங்கி வந்த சீசருக்கு இந்த அழைப்பு வரப்பிரசாதமாக அமைந்தது. எத்தகைய இடையூறுமின்றித் தான் பத்திரமாக மீண்டும் காளுக்குத் திரும்பலாமென்ற உறுதி சீசருக்குத் தோன்றவே, பிரிட்டனின் மீது படையெடுப்பு முயற்சியில் உடனடியாக இறங்கினார்.

**சீசரின் முதலாம் படையெடுப்பு (கி.மு. 55)**

பேராசை கலந்த சுயநலத்தினலும், அரசியல் அவசியத்தின் பேரிலும் பிரிட்டனைத் தாக்க வேண்டியிருந்த சீசர், கி.மு. 55 ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் 26 ஆம் நாள் நள்ளிரவில், 8,000 ரோமானிய வீரர்களோடு ஆங்கிலக் கால்வாயைக்கடந்து,அடுத்த நாள் காலை பிரிட்டனின் கரையை நெருங்கினர். பிரிட்டானியர்கள் கரையோரங்களில் ரோமானியர்களின் படையெடுப்பை எதிர் பார்த்துத் தங்களின் போர் இரதங்களையும் வீரர்களையும் தயா ராக நிறுத்தி வைத்திருந்தனர். அண்மையிலிருந்த குன்றுகளின் உச்சியில் இன்னும் ஏராளமான பிரிட்டிஷ் வீரர்கள் நின்றிருந் தனர். கடுமையான எதிர்ப்புத் தங்களுக்கு இருக்குமெனஎண்ணிய முன் அணியிலிருந்த ரோமானிய வீரர்கள், கப்பல்களை விட்டுக் கீழே இறங்கத் தயங்கினர்கள். அந் நிலையில் துணிச்சல் கொண்ட ஒரு ரோமானிய வீரன், பயந்து தயங்கிய படையினரைக் கண்டு 'ரோமானிய பேரரசுக்கும் பெருந்தளபதி சீசருக்கும் செய்ய வேண்டிய கடமை காத்திருக்கிறது. நம் வீரத்தின் பெருமையைக் குலைத்து விடாதீர்கள்' என்று சொல்லிக் கொண்டே கரையில் குதிக்க, அவ் வீரனைத் தொடர்ந்து எல்லோரும் கரையிறங் கினர்.

வால்மர், (Walmer) டீல் (Deal) என்ற பகுதிகளுக்கிடையே இருந்த தட்டையான இடத்திலேயே சீசர் தன் ரோமானிய வீரர் களைக் கரை இறக்கியிருந்தார். தொடர்ந்து நடந்த சண்டையில் பிரிட்டிஷ் வீரர்கள் தோற்கடிக்கப்பட்டுப் பின்னுக்கு விரட்டப் பட்டனர்.

சீசரின் இந்த முதலாம் படையெடுப்புப் பெரும் வெற்றி பெற்றது என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், இவருடைய இராணுவ முகாம் அடிக்கடி தாக்கப்பட்டுக்கொண்டே இருந் தது. இருப்பினும், எதிர்ப்புகளைச் சமாளித்து, சீசர் பத்து மைல் வரை நாட்டினுள் ஊடுருவிச்சென்றார். இராணுவத்துடன் சென்று, வேவு பார்க்கும் பணியாகத்தான் அஃது அமைந்தது. அயராது தாக்கி வந்த பிரிட்டிஷ் வீரர்களை சீசர் விரட்டிவந்தா ரெனினும், ரோமானியர்களின் நிலை ஆட்டம் கொடுப்பதாகவே இருந்தது. குதிரைப்படையினரை (cavalry) ஏற்றிக் கொண்டு வரவேண்டிய ரோமானியக் கப்பல்கள் புயற்காற்றினல் வரும் வழியில் சேதமடைந்தன. இச் சூழ்நிலையில் சீசருக்கு அவர் எதிர் நோக்கிய உதவியும் கிடைக்க வழியில்லாமல் போய்விட்டது. தம் அபாரத் திறமையினல் நிலைமையைச் சமாளித்துத் தம்மிட மிருந்த பழைய கப்பல்களைப் பழுதுபார்த்து, அவற்றிலேறிப் பாது

காப்பாகத் தம் படைகளுடன் சீசர் திரும்பினர். சில போர்க் கைதிகளைத் தவிர, சீசர் எப்பயனையும் பெறவில்லை.

**சீசரின் இரண்டாம் படையெடுப்பு (கி. மு. 54)**

முதல் படையெடுப்பில் பெற்றிருந்த தம் அனுபவத்தைப் பயன்படுத்திக் கொண்டு, இம்முறை காலாட்படை, குதிரைப்படை கொண்ட 20,000 ரோமானிய வீரர்களுடன் சீசர் கென்ட்விட்ச் (**Kentwitch**)என்னுமிடத்தில் கரையிறங்கினர். இப் படையெடுப்பு, தமக்கு மாபெரும் வெற்றியாக அமைய வேண்டுமென்று சீசர் திட்டமிட்டுச் செயல்பட்டார்.

பகைவர்களின் பார்வையிலே படகுகள்மூலம் பாலம் கட்டி தேம்ஸ் நதியைப் பிரன்ட்ஃபோர்டுக்கருகே (**Brentford**) கடந்து, வடகரையில் காத்திருந்த கட்டவலானியரைத் தாக்கி, சீசர் விரட்டியதோடன்றி, மேலும் முன்னேறி அம் மக்களின் கேந்திரமான வீட்தாம்ஸ்டெட் (**Wheatthamsted**) என்ற இடத்தைத்தாக்கி, ஹெட்போர்ட்ஷியர் (**Herdfordshire**) பகுதியை வென்றார். கட்டவலானியர்களின் தலைவரான காசிவெலானியஸ், பிரிட்னில் வாழ்ந்த கெல்ட்டுகள் உள்பட பிற இனத்தினரையும் இணைத்துக் கென்ட் பகுதியில் சீசரை எதிர்த்தார். இந்தப் பிரிட்டிஷ் தலைவரின் விரோத இனத்தினர் சிலர், எஸ்ஸெக்சில் வாழ்ந்த டியோர் உள்படச் சீசருக்குத் துணைபுரிந்தனர்.

சீசரை எதிர்த்துப் போரிட்டவர்களில் மஞ்சள் நிறத் தலைமுடியினையுடைய கெல்ட்டுக்களின் உயர்குடித் தலைவர்களே அதிகம் இருந்தனர். உறுதியான போர்த்தேர்களில் ஏறி வீராவேசமாக அவர்கள் சண்டையிட்டும் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட கட்டுப்பாடுடைய ரோமானியப் படையினரை வெல்லமுடியவில்லை. ரோமானியர்களின் குதிரைப்படைகள், தம் படையினரின் அணி வகுப்புக்குப் பெருந்துணையாக இருந்தது. எதிரிகளை ஓட ஓட விரட்டினர். பிரிட்டானியர்களின் தேர்ப்படைகளைக் கண்டு, ரோமானியர்கள் இனி அஞ்சத் தேவையில்லை என்பதை இப் பெரும் வெற்றியால் சீசர் நிரூபித்துவிட்டார்.

சீசரின் முதலாம் படையெடுப்பின்போது, பிரிட்டிஷ் வீரர்கள், தங்களின் போர் இரதங்களை இன்னும் மிகுதியாகப் பயன்படுத்திக் கடற்கரையிலேயே சண்டையிட்டு இருப்பார்களேயானல், ரோமானியர்களால் அன்று வெற்றி பெற்றிருக்க முடியாது என நம்பப் படுவதுபோல் கென்ட் சண்டையில் கெல்ட்டுகள் குதிரைப்படைகளைக் கொண்டு போரிட்டு இருப்பார்களேயானல், சீசர் தோற்கடிக்கப்பட்டிருப்பாரெனவும் யூகிக்கப்படுகின்றது.

இதற்கிடையே, வெர்சிங்கடோரிக் (Vercingatorix) என்பவரின் தலைமையிலே, காளில் கலகம் தோன்ற, அதை அடக்கக் கடமைப்பட்டிருந்த சீசர், மேற்கொண்டு பிரிட்டனில் தங்க முடியாத நிலையில் நாடு திரும்பினர்.

**சீசரின் படையெடுப்பால் ஏற்பட்ட விளைவுகள்**

கி.மு. 54-ல் நடந்த படையெடுப்புச் சீசருக்குத் தோல்வியாக இல்லையெனினும், மாபெரும் வெற்றி எனவும் சொல்வதற்கில்லை.

பிரிட்டனில் ரோமானியர்கள் எதிர் நோக்கியதுபோல் தங்கமும், பெருஞ் செல்வமும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இதையே சீசரின் அரசியல் எதிரியும் ரோமானிய செனட் (Senate) அங்கத்தினரும் சிறந்த பேச்சாளருமான சிசிரோ (Cicero), 'புகழ் மிக்க பிரிட்டானிய நாட்டின் பொன் நம் தேவைக்குக் குறைந்த அளவிலேயே கொண்டுவரப்பட்டது' என்று சொல்லி நையாண்டி செய்தார்.

ரோமானியரின் ஆதிகத்தினை ஏற்றுக் கொண்ட இனத் தலைவர்களிடமிருந்து சீசர் திறை வசூலித்து வந்தாரெனினும், அதுவும் காலப்போக்கில் நிறுத்தப்பட்டதால் இவ்விளைவும் நிரந்தரமாக இல்லை. ரோமானியர்களின் ஆடம்பரப் பொருள்களை வாங்கும் சக்தியற்றவர்களாக அப்போது பிரிட்டிஷார் இருக்க, அங்கு ரோமானியர் உடனடியாக வியாபாரம் செய்யவும் வழி இல்லாமல் இருந்தது. பிரிட்டனிலிருந்து சீசரால் கொண்டுவரப்பட்டிருந்த அடிமைகளும் (slaves) ரோமாபுரிச் சந்தையில் விற்கப் படவில்லையாதலால் அதனல் இவருக்கும் இலாபமில்லை.

ஆங்கிலக் கால்வாயின் இரு பக்கங்களிலும் (பிரிட்டன், காள்) வாழ்ந்த மக்களின் மனத்தில் சீசரின் படையெடுப்பு நிலையான இடத்தைப் பெற்றதே தவிர, வேறு எந்தப் பயனும் நிலையாக அமையவில்லை என்று சொல்லப்பட்டாலும், வருங்காலத்தில் பிரிட்டனில் ரோமானியர்களின் பேராதிக்கம் ஏற்பட இவரது படையெடுப்பு வழிகோலியது என்பதை மறுக்கமுடியாது. மேலும், இவரது படையெடுப்பு, பிரிட்டனை இலத்தீன் நாகரிகத் தோடு, (Latin Civilization) நேரடியாகத் தொடர்பு கொள்ளச் செய்தது. சுருக்கமாகக் கூறின், பிரிட்டனைச் சீசரின் படையெடுப்பு முழுக்கமுழுக்க ரோமானிய ஐரோப்பாவிற்கு அறிமுகம் செய்து வைத்தது.

தாம் கண்ட அந் நாட்டின் செழிப்பு, இரும்பு, தகரம் நிறைந்த கனி வளம், நேர்த்தியான உலோக வேலைப்பாடு போன்ற

வற்றைப் பற்றிச் சீசர் எழுதிவைத்த குறிப்புகள் ஆவலைத்தூண்ட, வருங்காலத்தில் பிரிட்டன்மீது ரோமானியப் பேரரசர்களின் கவனம் திரும்பியது.

**சீசருக்குப் பிற்பட்டகாலம்**

சீசர் பிரிட்டனில் இருந்தவரையில், ரோமானியர் படைப் பலத்திற்குப் பிரிட்டானிய கெல்ட்டுகளும் பெல்ஜேக்களும் அடங்கி இருந்தனரேயன்றித் தங்களின் சுதந்திர உணர்வை இம் மக்கள் முற்றிலும் இழந்துவிடவில்லை என்பதை அடுத்துவரும் தொடர் நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன.

சீசர், பிரிட்டனிலிருந்து திரும்பிய இரண்டாண்டிற்குள்ளாகக் காளில் இருந்து அகதியாக இந் நாட்டிற்குக் கோமியஸ் (Commius) என்ற தலைவர், தம் இன மக்களான ஆராஸ் அட்ரி பேடிஸ் என்பவர்களுடன் வந்து, வெஸ்ஸெக்ஸ் பகுதியில் அரசை அமைத்துக் கொண்டார். இதற்கிடையே, முன்பு சீசரால் அடக்கப்பட்டிருந்த கட்டவலானியர், ரோமானியர்களால் ஆதரிக் கப்பட்ட மற்ற பிரிட்டானிய இனத்தினரை ஒடுக்கியிருந்தார்கள். ரோமானியர்களுக்குச் செலுத்தப்படவேண்டிய திறைப் பணமும் நிறுத்தப்பட்டது.

இக்காலத்தில்தான் ரோமாபுரியில் கிளர்ச்சி ஒன்றுதோன்றிச் சீசர் கொலை செய்யப்பட்டு, அகஸ்டஸ் (Augustus) என்பவர் ரோமனிய அரசுக்கு அதிபரானார். கிளியோபாட்ரா என்ற அழகிய எகிப்து அரசியின் காதல் வலையில் சிக்குண்டிருந்த மார்க் அன்டணி (Mark Antony) என்ற ரோமானியத் தளபதி, ரோமாானியப் பேரரசைப் பிரிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்க, அம் முயற்சி, ரோமானியர்களிடையே உள்நாட்டுப் போரைத் தொடங்கியது. அப் போரில் வெற்றிகண்ட அகஸ்டஸ் ரோமா னியப் பேரரசை நிறுவும் முயற்சியில் ஈடுபட்டிருந்ததால், பிரிட்டன் அரசியல்மீது தம் கவனத்தைச் செலுத்தாமலிருந்தார்.

இத் தருணத்தில் பிரிட்டனில் முக்கியமான ஒரு மாற்றம் ஏற்பட்டது. சீசரால் முன்பு அடக்கப்பட்டிருந்த கட்டவலானியர் களுக்குத் திறமை சார்ந்த தலைவராகச் சிம்பலின் (Cymbeline) என்பவர் கிடைத்தார். சிம்பலின் தம் காலத்தில் (கி. மு. 5 — கி. பி. 40) கென்ட், சஸ்ஸெக்ஸ் பகுதிகளை வென்று, தேம்ஸ் நதிக் கரை நெடுகப், பிரிட்டனின் தென்கிழக்குப் பாகத்தில் ஆட்சியை அமைத்தார். இவர் வெளியிட்ட வெள்ளிக் காசின் பின்புறத்தில் 'பிரிட்டனை ஆளும் அரசன்' (Rex Brittonum) என்று இலத்தீன்

மொழியில் பொறிக்கப்பட்ட வாசகம் காணப்படுவதால், பிரிட்டனின் பல பகுதிகளைச் சிம்பலின் ஆண்டிருக்கலாமென நினைக்க வழியிருக்கின்றது. இவ் வரசர், ரோமானிய அதிபதியான அகஸ்டசோடும். அவரது வழித்தோன்றலான டைபீரியசோடும் (Tiberius) நெருங்கிய நட்புக் கொண்டிருக்கவேண்டும். சிம்பலின், ரோமானிய வணிகர்களையும் தொழில் வல்லுநர்களையும் பிரிட்டனுக்கு வரவழைத்து நகரங்களில் குடியேற்றங்களை அமைத்துக் கொள்ள உதவினர். இதன்மூலம் இலத்தீன் மொழியையும் ரோமானியர் நாகரிகத்தையும் பிரிட்டானியப் பழங்குடி மக்கள் நன்கறியுமாறு செய்தார். சிம்பலின், செயின்ட் ஆல்பன்சுக்கு அருகிலிருந்த வெருளாமியம் (Verulamium) என்னும் தலைநகரைக் கோல்செஸ்டருக்கு அருகிலுள்ள கமுலோடோனம் (Camulodunum) என்னும் நகருக்கு மாற்றிக் கொண்டதிலிருந்து, தம் இனத்தாரின் பழைய எதிரிகளான திரினோவான்டியரை முற்றிலும் வெற்றி கொண்டதாகத் தெரிகின்றது. அங்குக் கிடைத்த தங்கத்தைக் கொண்டே சிம்பலின், ரோமானிய நாணய முறையினைப் பின்பற்றிப் பொற்காசுகளை வெளியிட்டார்.

உலக வாலாற்றினை வருங்காலத்தில் உருவாக்கப்போகும் லண்டன், இவரது ஆட்சிக் காலத்திலேயே ஒரு நகரமாக வளர்ச்சியுற்றிருக்கவேண்டும்.

சீசரின் வெளியேற்றத்திற்குப் பிறகு பிரிட்டனில் ரோமானியர் ஆதிக்கம் மறையத் தொடங்கியிருந்தாலும், இத் தீவிற்கும் ரோமாபுரிக்கும் இடையே நெருக்கமான வணிகத் தொடர்பு இருந்து வந்திருக்கின்றது.

தானியங்கள், ஆடுமாடுகள், தங்கம், வெள்ளி, இரும்பு, தகரம், வேட்டை நாய்கள் போன்றவை பிரிட்டனிலிருந்து ஏற்றுமதி ஆயின. உயர்ரக மண்பாண்டங்கள், தந்தம் போன்ற அழகுப் பொருள்கள், மதுவகைகள், கண்ணாடி, வெண்கலப் பாண்டங்கள் போன்றவை பிரிட்டனுக்கு இறக்குமதியாயின. அகஸ்டஸ் என்ற ரோமானியப் பேரரசர் காலத்தில் பிரிட்டனோடு செய்யப் பட்ட வியாபாரப் பொருள்கள்மீது தனிவரிகள் விதிக்கப்பட்ட தாகத் தெரிகிறது.

இந்த, இறுக்கமான வியாபாரத்தைத் தொடர்ந்துதான், வருங்காலத்தில் ரோமானியர்களின் அடுத்தடுத்த படையெடுப்புகள் ஏற்படப் போகின்றன.

**பேரரசர் கிளாடியசின் காலம் (Emperor Claudius)**

சீசரின் காலத்தைத் தொடர்ந்து, குறிப்பாகச், சிம்பலின் காலத்தில் பிரிட்டனின் கிழக்கு, தென்கிழக்குப் பகுதிகளில் ரோமானியரின் பழக்க வழக்கங்கள், நாகரிகம், மொழி, மதம் போன்றவை ஓரளவு வேரூன்றியிருந்தன. இவ்வாறு ரோமானியமயமாக்கப்பட்ட பிரிட்டனைப் படைகொண்டு வெல்ல வேண்டுமென்ற கருத்துச் சில காலமாகவே ரோமானியர்களுக்கு இருந்து வந்தது. பிரிட்டனில் தங்கியிருந்த ரோமானிய வணிகர்களும் வீரர்களும் அப் படையெடுப்பை மனமாற வரவேற்றனர். ரோமாபுரிப் பேரவை உறுப்பினர்களும் (Senate), புதிய பதவிகளையும் நிலங்களையும் அடிமைகளையும் பெறவேண்டிப் பிரிட்டன் மீது போர் தொடுக்க விரும்பினர். ஆயினும், சில தவிர்க்க முடியாத காரணங்களால் அப் படையெடுப்புத் தள்ளிப் போடப்பட்டு வந்தது.

பல ஆண்டுகளாகவே, பிரிட்டன்மீது படையெடுக்கத் துடிதுடித்து வந்த ரோமானியர், அதற்குரிய திட்டங்களைத் தீட்டி, முற்போக்குக் கொள்கையுடைய ஒருவர் தங்கள் அரசரானதும் தங்கள் விருப்பத்தை அவர் மூலம் நிறைவேற்றிக் கொள்ளக் காத்திருந்தனரென்று பேராசிரியர் ஹோரேஸ் (Horace) என்பவர் குறிப்பிடுகின்றார்.

சிம்பலின் மரணத்தைத் தொடர்ந்து பிரிட்டனில் குழப்பமான நிலை ஏற்படவே, அங்குப் பல இனத்தினரிடையே ஆதிக்கப் போர் தோன்றியிருந்தது. பிரிட்டனிலிருந்த துருவிதர்கள் என்ற சமய குருமார்களும் தங்கள் நாட்டாரை அங்குத் தங்கியிருந்த ரோமானியர்கள்மீது எதிர்த்துக் கிளர்ச்சி செய்யுமாறு தூண்டிவிட்டனர்.

கிழக்கே யூஃப்ரெடிஸ் (Euphrates) நதிக் கரையிலிருந்து மேற்கே அட்லாண்டிக் கரைவரை பரவியிருந்த ரோமாபுரிப் பேரரசுக்குக் கிளாடியஸ் பெருமன்னரானார். முற்போக்குக் கொள்கை படைத்த இம் மன்னருக்குப் பிரிட்டன்மீது படையெடுக்கப் போதிய அவகாசம் மட்டுமன்றி, அதற்கான ஆசையையும் அவசியத்தையும் ஏற்படுத்தும் சூழ்நிலைகளும் ஒருங்கு சேர்ந்திருந்தன.

நாகரிக வளர்ச்சி முற்றுப்பெறாத பிரிட்டன்மீது ரோம் வல்லரசின் அதிகாரத்தைத் திணிக்க வேண்டியது தம் கடமை என நினைத்த கிளாடியசுக்குப் பிரிட்டிஷ் அரசர்களிடமிருந்து கிடைத்த கனிப் பொருள்களும் படையெடுப்பிற்கான ஆசையைத் தூண்டி

விட்டன. காளில் அவ்வப்போது ஏற்படும் கலகங்களைத் தீவிரமாக ஒடுக்க வேண்டுமென்றால், அதற்கு அடுத்தாற்போல் இருந்த பிரிட்டனை ஒடுக்கி, அங்கு ரோமானியர்களின் படைத் தளமொன்றை அமைக்க வேண்டிய அவசியமும் இம் மன்னருக்கு ஏற்பட்டது.

உள்பூசல்களால் பிளவுபட்டிருந்த பிரிட்டனை எளிதாக ரோமானியர் வெல்லலாம் என்று நினைத்த கிளாடியசுக்கு, அங்கு வாழ்ந்த மக்கள் ரோமானியர்களை எதிர்க்கும் திறனில்லாதவர்களாக இருந்தார்கள் என்று தெரியவர, அதுவே அடுத்த ரோமானியப் படையெடுப்பிற்கு அடிப்படையாக அமைந்தது.

கி.மு. 43 ஆம் ஆண்டில் காளில் அப்போதிருந்த ரோமானியப் படைத் தளபதியான அனுலஸ் பிளாட்டியஸ் (Anulas Plautius) என்பவரைப் பிரிட்டன்மீது படையெடுக்கும்படி பேரரசர் கிளாடியஸ் பணித்தார். 15,000 போர் வீரர்களோடு அனுலஸ் பிளாட்டியஸ், பிரிட்டனில் கரையிறங்கியதை அடுத்தே, கி. பி. 410 ஆம் ஆண்டு வரை தொடர்ந்து இத் தீவில் இருக்கப் போகும் ரோமானிய ஆதிக்கம் தொடங்குகிறது.

எதிர்த்த பிரிட்டானியரை விரட்டித் தேம்ஸ் கழிமுகத்தின் வழியாக ரோமானியப் படை, கோல்செஸ்டரை நோக்கி முன்னேறிச் சென்று கொண்டிருந்த வேளையில் பேரரசர் கிளாடியஸ், 35,000 வீரர்களுடன் பிரிட்டனை வந்தடைந்தார். பேரரசின் மேற்பார்வையில் பெல்ஜேக்கள் ஆதிக்கம் பெற்றிருந்த வில்ட் (Wilt), சாமர்செட் (Somerset) பகுதிகளை ரோமானிய வீரர்கள் தாக்கிப் பிடித்துக் கொண்டனர். டார்செட்டில் (Dorset) ரோமானியர்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்த மாபெருங் களிமண் கோட்டைகள் தரை மட்டமாக்கப்பட்டன. தொடர்ந்து, கட்டவலானியர்களின் தலைநகரான கோல்செஸ்டர் பகுதியை நோக்கி விரைந்த ரோமானியப்படை, அங்கு ஆண்டு வந்த சிம்பலினின் மைந்தனை கரக்டகஸ் (Caretacus) என்பவரை விரட்டியது. சுதந்திரப் பற்றை இழக்க மனமில்லாத கரக்டகஸ், வேல்ஸ் பகுதிக்கு ஓடி ஆக்ரமிப்பாளர்களை எதிர்த்துக் கலகத்தில் ஈடுபட்டார்.

பேரரசர் கிளாடியஸ், இதற்கிடையில் ரோமுக்குத் திரும்பியிருந்த போதிலும், புதிதாக அனுப்பப்பட்டிருந்த அஸ்டோரியஸ் ஸ்காபுலா (Ostorius Scapula) என்ற படைத்தலைவரின்கீழ், ரோமானிய வீரர்கள் பிரிட்டனில் மேற்கொண்டு ஊடுருவி, அதன் தாழ்ந்த நிலப்பகுதிகளான லிங்கன், எக்ஸ்டர், கிளௌ

செஸ்டர் (Glowcester), ஒரேக்ஸ்டர் (wraxter) ஆகிய இடங்களைக் கைப்பற்றிக் கிழக்கு, தென்கிழக்குப் பகுதிகளில் தங்களின் ஆதிக்கத்தைப் பலப்படுத்தினர்.

வேல்ஸ் பகுதியில் வீராவேசமாகப் போரிட்ட கரக்டகசும் கைப்பற்றப்பட்டு ரோமாபுரிக்கு அனுப்பப்பட்டுவிட்டிருந்ததால், பிரிட்டானியர்களுக்குத் தலைமை தாங்கிச் சுதந்திரப் போரை நடத்த ஒரு தலைவரும் அப்போதைக்கு இல்லை. ஆயினும், இன்னமும் கெல்ட்டுகளின் கேந்திரமாக விளங்கிய மேற்குப் பகுதியான வேல்சும், மூரியர்கள் (Moors) என்ற முரட்டு இனமக்கள் வாழ்ந்த மத்தியப் பகுதியும், பிக்ட்டுகள் (Picts) என்ற போர் வெறியர்கள் வசித்த வடபகுதியும் ரோமானியர்களின் ஆதிக்கத்திற்கு அப்பாற்பட்டனவாகவே இருந்தன.

ஆயினும், இக் காலவரையில், (கி.பி. 43 — 57) வேல்ஸ் பகுதியைச் சிறிது சிறிதாக அடக்கிக் கைப்பற்றும் பணியில் ரோமானியர் ஈடுபட்டிருந்தனர். தென் வேல்ஸிலிருந்த சில்லூரியர், வடவேல்ஸின் ஆர்டோவிஸ் இனத்தாரின் திடீர்த் தாக்குதல்களைச் சமாளிக்கும் பொருட்டுச் செஸ்டர் (Chester), ரோசெஸ்டர் (Rochester) என்ற இடங்களில் ரோமானியப் படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன.

பிரிட்டனில் ஓரளவு பேராதிக்கம் பெற்றிருந்த ரோமானியர்கள், தொடர்ந்து கடுமையான முடிவற்ற போர்களைச் செய்த வண்ணமேயிருந்தனர்.

**பேரரசர் நீரோவின் (Nero) காலம்**

கிழக்கு, தென்கிழக்குப் பகுதிகளில் ரோமானியர்களின் அதிகாரம் நிலை நிறுத்தப்பட்டிருந்தபோதிலும், அடக்கப்பட்ட மக்கள், அந்நிய ஆட்சிக்கெதிராகப் பொருமிக்கொண்டே இருந்தனர். ரோமானியர்களின் கடுமையான வரிச் சுமையும், கட்டாய இராணுவ ஆள்சேர்ப்புக் கொள்கையும் (Conscription) மக்களிடையே வெறுப்புணர்ச்சியை வளர்த்தன.

ரோமானியர்களோடு எவ்வகையிலும் பகைமை கொள்ளாத இசேனியரையும் (Iceni), ரோமானியர் இக் கட்டத்தில் பகைத்துக் கொள்ள ஆரம்பித்தனர். அவர்கள் நிலங்கள் பறிக்கப்பட்டமையாலும், சொத்துகள் கொள்ளையிடப்பட்டமையாலும் இசேனியர் ரோமானியரை வெறுத்தனர். ஆயினும், தங்கள் அரசி போடிசியாவுக்கும் (Bodicea) அவளது குடும்பத்தினருக்கும் மானக்கேடு

உண்டாகுமாறு ரோமானிய வீரர்கள் முறையற்ற செயல்களில் ஈடுபட்டதும் அவரது பரம்பரை உரிமையைப் பறித்துக்கொண்டதும் ஏற்கனவே வெகுண்டிருந்த இசேனியர்களைக் கார் போக்கில் (Corkfolk) போர்க்கோலம் பூணச் செய்தன.

கி. பி. 61ஆம் ஆண்டில் பிரிட்டனுக்கு ரோமானிய கவர்னராக வந்திருந்த சுடோனியஸ் பாலினஸ் (Suetonius Paulinus), கார்ஃபோக்கில் போடிசியாவின் தலைமையில் கலகம் பரவியபோது வடவேல்ஸ் பகுதியில் ஆர்டோவிஸ் இனத்தினரை எதிர்த்துப் போர் செய்து வந்தார். கலகத்தை உடனடியாக நசுக்கப் போதிய பலம் தென் பிரிட்டனில் விடப்பட்டுச் சென்ற ரோமானிய உதவித் தளபதிகளுக்கு இல்லாத அந் நேரத்தில், கோல்செஸ்டர், வெருலாமியம், லண்டன் ஆகிய இடங்களிலிருந்த ரோமானிய வியாபாரிகளையும் வீரர்களையும் அனுதாபிகளையும் ரோமானிய நாகரிகத்தினை ஏற்றுக்கொண்டிருந்தவனையோரையும் சேர்த்துச் சுமார் 70,000 பேர்களை இசேனியர் படுகொலை செய்தனர். ரோமானியர் ஆதிக்கத்திற்கு எதிராகப் பிரிட்டனில் நடத்தப்பட்ட சுதந்திரப் போராக இக் கலகம் கருதப்பட்டது.

கெல்ட் (இசேனியப் பிரிவு) உயர்குடி இனத்தைச் சேர்ந்த போடிசியா, அச் சுதந்திரப் போருக்குத் தலைவியாக இருந்து, ரோமானியர் ஆதிகத்திற்கு முடிவுகட்டுவதற்கு முன்பாக, வேல்ஸிலிருந்து சுடோனியஸ் பாலினஸ், தம் பெரும் படையோடு திரும்பியிருந்தார். தொடர்ந்து நடந்த கைகலப்பில், இசேனியர்கள் ஒடுக்கப்பட்டனர். அண்மையில் நடத்தப்பட்ட படுகொலைக்காகக் கார்ஃபோக்கைச் சார்ந்த இசேனியர்கள் சொற்களால் சொல்ல முடியாத அளவிற்கு ரோமானியர்களால் கொடூரமாகப் பழிவாங்கப்பட்டனர். நிலைமை மீறிவிட்ட நிலையில் தலைவி போடிசியா நஞ்சுண்டு தற்கொலை செய்துகொண்டார். இதனைத் தொடர்ந்து மீண்டும் ரோமானியர் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் தங்களின் ஆட்சி அமைப்பினையும் முறைகளையும் நிறுவிக்கொண்டனர். இசேனியர்களால் அழிக்கப்பட்ட நகரங்களும் புதுப்பிக்கப்பட்டன.

**பேரரசர் வெஸ்பேசியன் (Emperor Vespasian) காலம்**

கி.பி. 77-ல் வெஸ்பேசியன் என்ற ரோமானியப் பேரரசர் திறமைமிக்க அக்ரிகோலா (Agricola) என்பவரை ஆளுநராகப் பிரிட்டனுக்கு அனுப்பி வைத்தார்.

அதற்கு முன்பே, அக்ரிகோலா பிரிட்டனில் போர்வீர ராகப் பணியாற்றியவராதலால், நாட்டை ஆள்வதில் இருந்த தொல்லைகள் அவருக்குத் தெரிந்தே இருந்தன.

தனக்கு முன்பு பிரிட்டனில் பணியாற்றிய ரோமானிய ஆளுநர் களின் கொள்கை கண்டிக்கத்தக்கதென திடமாக நம்பிய அக்ரி கோலா, நேர்மையான அரசியலில் நம்பிக்கை கொண்டிருந்தார். வரிக் கொடுமை குறைக்கப்பட்டது. கட்டாய இராணுவ சேவை முறையும் இவரது ஆணையினால் கைவிடப்பட்டது.

பிரிட்டனில் ரோமானியர் ஆதிக்கம் நிலைத்து நிற்க வேண்டு மெனின், இந் நாட்டை ரோமானியர் மயமாக்க வேண்டும் என நினைத்த அக்ரிகோலா, அதற்கேற்ப ரோமானியப் பழக்க வழக் கங்களை இத் தீவில் புகுத்த முற்பட்டார்.

பெரும் பொருள் செலவிட்டு ரோமானிய நாகரித்தின் அடிப் படையில் நீதிநிர்வாகம், மதம், இலத்தீன் கல்வி போன்றவற்றை இந் நாட்டில் புகுத்தினர். குறிப்பாக, பிரிட்டிஷ் தலைவர்கள் (Chiefs) தங்கள் பிள்ளைகளுக்கு இலத்தீன் மொழியில் பயிற்சி கொடுக்க வேண்டுமென வற்புறுத்தினர். ரோமானியர் பாணியிலே வில்லாக்கள் (Villas) என வழங்கப்பட்ட நாட்டுப்புற மாளிகை களைப் பிரிட்டானியர்கள் கட்டிக்கொள்ளும்படி ஊக்குவிக்கப்பட் டனர். ரோமானியரின் டோகா (Toga) என்ற போர்வை உடை, வெப்பக் குளியல் (Steam bath), கூட்டு விருந்து (Banqute) போன்ற நடை உடை பாவனைகளையும் இந் நாட்டு மக்கள் பின் பற்றுமாறு செய்தார். சுருக்கமாகக் கூறின், அக்ரிகோலாவின் காலத்தில் பிரிட்டன் ரோமானிய மயமாகியது.

ரோமானியரின் ஆதிக்கத்தை மேற்கு, வடக்கு திக்குகளிலே பரப்புவதில் ஆர்வம் காட்டிய அக்ரிகோலா, வட வேல்ஸைத் தாக்கி, ஆர்டோவிங்களை இறுதியாக ஒடுக்கி, அங்கில்சி (Angle sey) என்ற பகுதியை வென்றார். மேற்கொண்டு, வேல்சில் தாக்கு தல்கள் நடத்தவும் எதிர்த் தாக்குதல்களைச் சமாளிக்கவும் பிரிக்கன், கார்னர்லான் பகுதிகளில் கல்லாலான கோட்டைகளைக் கட்டினர். வேல்ஸ் பகுதியை ரோமானியரின் ஆட்சிக்குட்பட் டிருந்த தெற்குப் பகுதியுடன் இணைக்கும்படியான புதிய சாலைகளை அமைத்தார்.

வட இங்கிலாந்தில் (ட்ரென்ட் என்ற பகுதிக்கு வடக்கே) இருந்த பிரிகண்டியரையும் அக்ரிகோலா வெற்றி கண்டார். தீராத் தொல்லைகளைக் கொடுத்துவந்த அம் முரட்டு இனத்தினரை

அடக்கிவைப்பதற்காகவும், ரோமானியர் எல்லேகளேக் காத்துக் கொள்வதற்காகவும் யார்க், மால்டன் (Malton) என்னுமிடங் களிலும் பாசறைகளே (Military camp) அமைத்தார்.

கோட்டைகள் கட்டுவதில் மிகுந்த அக்கறை காட்டிய அக்ரி கோலா, மேலும் ரோமானியர் ஆட்சிக்குப் பாதுகாப்பாக ஸ்கிப்டன் (Skipton), ஆம்பல்சைடு (Ambelside), போவஸ் (Bowes), காட்ரிக் (Catterick) என்ற இடங்களிலும் அரண்களே அமைத்திருந்தார்.

கார்லேக்குக்கும், கார்பிரிட்ஜுக்குமிடையே இராணுச் சாலே களே ஏற்படுத்திக் குறிப்பிட்ட இடங்களிலே பாதுகாப்பு அரண் களேயும் பாசறைகளேயும் இவர் அமைத்தார். இதுவேபின்னர் 'ஸ்டேன்கேட்' (Stanegate) என வழங்கப்பட்டது. பிக்ட்டுகள், ஸ்காட்டுகள் என்ற கொள்ளேக் கூட்டத்தினரிடமிருந்து நாட்டைக் காக்க, கிளேடிலிருந்து (Clyde) ஃபோர்த் (Forth) வரையிலிருந்த முப்பத்தேழு மைல் நீளத்திற்குத் தற்காலிகப் பெருஞ் சுவரொன் றையும் கட்டி முடித்தார். அவற்றைச் சாலேகள் மூலம் இணேத்துக் கார் ப்ரிட்ஜுடனும் கார்லேக்குடனும் சேர்த்தார்.

இதுவரையில் தாக்கப்படாமலிருந்த ஸ்காட்டிய மேட்டு நிலப் பகுதிகளே ஆக்ரமிக்க, மோன்ஸ் கிரௌபியஸ் (Mons Craupius) என்னுமிடத்தில் சண்டையிட்டு எதிர்த்த முரட்டு இனத்தினரை அழித்தார்.

ஸ்காட்டிய மேட்டு நிலங்களேயும் அயர்லாந்து தீவையும் தாக்கி, அங்கும் ரோமானியரின் ஆட்சியைப் புகுத்த நினேத்த அக்ரிகோலா, அதற்குள்ளாக (கி.பி. 84-ல்) ரோமானியப் பேரரச ரால் திருப்பி அழைக்கப்பட்டதால் ரோம் திரும்பினர்.

ஆயினும், அக்ரிகோலா முடிக்காமல் விட்டுச் சென்ற இப் பணியினே அடுத்து வந்தோரால் உடனடியாகச் செய்ய முடிய வில்லே எனினும், இவர் காலத்தில் செய்து முடிக்கப்பட்டிருந்த பிரிட்டனே ரோமானிய மயமாக்கும் முறையை வருங்காலத்தோர் செவ்வனே செய்தனர்.

**அக்ரிகோலாவிற்குப் பிற்பட்ட காலம்**

அமைதியான, பாதுகாப்பான வாழ்வுக்கு அக்ரிகோலா அடிகோலிச் சென்றதையொட்டி, அவருக்குப் பின்வந்த ஆளு நர்கள் காலத்தில் ரோமானிய பிரிட்டன் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது.

படைகள் எவ்விதத் தடையுமின்றிக் குறுகிய காலத்தில் விரைவாகச் செல்வதற்கேற்ப திட்டமிடப்பட்ட பல உறுதியான சாலைகள் லண்டன் நகரை மையமாக வைத்துப் போடப் பட்டன.

லண்டன் மாநகர் மட்டுமன்றிச் சில்செஸ்டர் போன்ற ஏனைய சிறு நகரங்களும் பெருஞ் சுவர்களோடு திட்டமிட்டுச் சதுர வடிவில் அமைக்கப்பட்டன.

நாட்டில் வேளாண்மையைப் பெருக்க காடுகள் அழிக்கப் பட்டு, நிலங்கள் விரிவுபடுத்தப்பட்டதோடன்றிச் சதுப்பு நிலங் களும் மீட்கப்பட்டன.

உலோகத் தொழில்களை விருத்தி செய்ய வேண்டித் தங்கம், இரும்பு, பித்தளை, தகரம் போன்ற கனிப் பொருள்களைத் தேடி நிறைய சுரங்கங்கள் வெட்டப்பட்டன.

இத்தாலியக் கட்டடக்கலை முறையின் அடிப்படையில் அழகு மிக்க நாட்டுப்புற மாளிகைகள் (வில்லாக்கள்) கட்டப்பட்டன.

ஆயினும், இதே காலத்தில் முன்பு அடக்கப்பட்டிருந்த வட இனத்தினரிடமிருந்து ரோமானியப் பிரிட்டனுக்கு அடிக்கடி தொல்லைகள் நேர்ந்தவண்ணமிருந்தன. ட்ராஜன் **(Trajan)** என்ற ரோமானியப் பேரரசர் கி.பி. 117-ல் இப் பகுதிக்கு வருகை தந்து ஸ்டேன்கேட் தடுப்புச் சுவரைப் பழுதுபார்த்துப், பாதுகாப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டாரென்பது குறிப்பிடத் தக்கது. சமவெளிப் பகுதிகளிலிருந்த சில கோட்டைகளும் எதிரிகளால் கைப்பற்றப்பட்டிருந்தன. இருப்பினும், ரோமானியர் ஆதிக்கம் மேற்கே வேல்ஸில் சில பகுதிகள் நீங்கலாக, வடக்கே ஸ்காட்லாந்திய மேட்டு நிலங்கள் வரை தொடர்ந்து பரவி யிருந்தது.

### பேரரசர் ஹாட்ரயின் (Emperor Hodrain) காலம்

கி.மு. 122ஆம் ஆண்டில் ரோமானிய மாமன்னர் ஹாட்ரயின் பிரிட்டனுக்கு வருகை தந்தது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். நாட்டின் வடஎல்லைகளைத் தீவிரமாகத் தாக்கிவந்த பிக்ட்டுகள்-ஸ்காட்டுகளின் ஆபத்தைத் தவிர்ப்பதற்காக, அப் பகுதியில் ரோமானியப் பெருஞ்சுவர் கட்டப்படுவதற்கு இப் பேரரசர் காரணமானார். பல சோதனைகளுக்குப் பின்னர், கட்டிமுடிக்கப் பட்ட இச் சுவர் ஒரு சிறந்த பாதுகாப்பு அரணாக அமைக்கப்

பட்டது. 20 அடி உயரமுள்ளதும், 75 மைல் நீளமானதுமான இம் மதில், 'ஹாட்ரயின் சுவர்' (Hadrain wall) என வழங்கப் பட்டு, ரோமானியர் ஆட்சியின் அழியாச் சின்னமாகக் காட்சி தருகிறது. ஆங்காங்கே சைகைச் சின்ன நிலையங்களையும் (Signal posts) ஒரு மைல் இடைவெளிக்கு ஓர் இராணுவப் பாசறை யையும் சுற்றிலும் 7 அடி அகழியையும் 17 பெருங் கோட்டை களையும் தன்னுள் கொண்டிருந்த இப் பெரும் மதில், சோல்வே (Solway), டைன் (Dyen) என்ற இடங்களை இணைத்தாற்போல் கட்டப்பட்டிருந்தது. இம் மதிலையொட்டி, கிழக்குக் கடலிலிருந்து மேற்குக் கடலுக்குச் செல்ல வாய்ப் பேற்படுத்த ஓர் இராணுவச் சாலையும் கட்டப்பட்டது.

**அன்டோனியஸ் பயஸின் (Antonius Pius) காலம்**

வட ஸ்காட்லாந்திய மேட்டுப் பகுதிகளில் வாழ்ந்த அம் முரட்டு இனங்களின் தாக்குதல்களிலிருந்து தங்களின் ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்ளவும், அம் மக்களை அடக்கவும் கடமைப்பட் டிருந்த ரோமானியர்கள், ஹாட்ரயின் மதிலுக்கு வடக்கே முன் னேறி, லோதியன் (Lothian), டம்ஃப்ரிஷயர் (Dumbreshire) என்ற பகுதிகளில் கோட்டைகளையும் கட்டிக்கொண்டனர்.

கி.பி. 140ஆம் ஆண்டில் ரோமாபுரிப் பேரரசர் அந்தோனி யஸ் பயஸ் காலத்தில் அவரது பெயரால் ஹாட்ரயின் மதிலுக்கு வடக்கே இன்னொரு பாதுகாப்புச் சுவர் கட்டப்பட்டது. களி மண்ணால் அமைக்கப்பட்ட இம் மதில் 37 மைல் நீளம் கொண்ட தாகவும் 19 கோட்டைகள் கட்டப்பட்டு அமைக்கப்பட்டதாகவும் இருந்தது. 'அந்தோனியஸ் மதில்' என அழைக்கப்படும் இச் சுவர், ஃபோர்த்திலிருந்து (The Forth) கிளைடு வரை (Clyde) வியாபித்து நின்றது.

சில காலத்திற்குப் பின்னர், பிக்ட்டுகள்—ஸ்காட்டுகளின் முரட்டுத் தனமான தாக்குதல்களைச் சமாளிக்க முடியாமல் ரோமானியர்கள் 'அந்தோனியஸ் சுவரைக்' கைவிட்டுத் தெற்கே பின்வாங்க வேண்டியிருந்ததெனினும், கி.பி. 2ஆம் நூற்றாண்டின் இடையில் ரோமாபுரியின் ஆதிக்கம் பிரிட்டனில் வடக்கே, 'ஹாட்ரயின் மதில்' வரை பரவி இருந்தது. வேல்ஸ், வட இங்கிலாந்துப் பகுதிகளில் வாழ்ந்த முரட்டுக் கெல்ட்டுகள் அடக் கப்பட்டிருந்தும், இங்குமங்குமாகக் கலகங்கள் தோன்றிய வண்ணமேயிருந்தன. இருப்பினும் கிழக்கு, தெற்கு, தென்கிழக்குப் பகுதிகளில் ரோமானியரின் ஆதிக்கமும் ஆட்சியும் நாகரிகமும் பண்பாடும் வேரூன்றி நின்றன.

**பிரிட்டனில் ரோமானியரின் கடைசிக் காலம்**

பிரிட்டனில் ரோமானியர் ஆட்சிக்கு வடக்கிலும் மேற்கிலும் எதிர்ப்புத் தொடர்ந்து இருந்து வர, கி.பி. 3ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே இவர்களின் நிலை ஆட்டங் காண ஆரம்பித்தது. ரோமானியரின் ஆட்சியைக் கவிழ்க்க உரிய கால வாய்ப்பை அம் மக்கள் எதிர்நோக்கியிருந்தனர். பிரிட்டனிலேயே பல காலம் தங்கிவிட்டிருந்த ரோமானிய வீரர்களும் காலப் போக்கில் ரோமானியப் பழக்க வழக்கங்களைக் கைவிட்டுப் பிரிட்டிஷ் பழக்க வழக்கங்களில் ஒன்றியிருந்தமையால், ரோமானியர் ஆட்சியை எதிர்ப்பதற்கும் தயாராக இருந்தனர்.

இதற்கிடையே, ரோமானியப் பேரரசு குலையப் போவதற்கான அறிகுறிகள் தென்படலாயின.

ரோமானியர் ஆட்சி ஐரோப்பா, வட ஆப்ரிக்கா, ஆசியா மைனர், மேற்கு ஆசியா போன்ற பரந்த இடங்களிலே விரிந்து கிடந்த பேரரசாகும். பல இனத்தினர், மொழியினர், மதத்தினர் வாழ்ந்த இப் பேரரசு முழுமையையும் கட்டிக்காக்கும் திறன் வாய்த்த தலைவர்களும், போதிய படைப்பலமும், பொருளும் ரோமானியருக்கு அப்போதைக்கு இல்லை. பேரரசின் கிழக்கு, வடக்கு எல்லைகள் முரட்டு இன மிலேச்சர்களால் இடையருது தாக்கப்பட்டு வந்தன. ரோமாபுரியில் நடந்த வாரிசுப் போர்களும் (Wars of Succession) உள்பூசல்களும் அப் பேரரசு சிதையப் போவதற்கான அறிகுறிகளைக் காட்டின.

அல்பீனஸ் (Albinus) என்பவர், ரோமுக்கு அரசராக இருந்த போது பிரிட்டனில் ரோமானியரின் ஆட்சி பெரிய அதிர்ச்சிக்குட்பட்டது. நாட்டின் பல பாகங்களிலே கலகங்கள் தோன்றின. வேல்ஸ் பகுதியிலிருந்த சில கோட்டைகள் எதிரிகளால் பிடித்துக் கொள்ளப்பட்டன. வடபுறத்திலிருந்த முரட்டு இனத்தினர் தீவிரத் தாக்குதல்களில் இறங்கியிருந்தார்கள்.

ஆயினும், அடுத்து வந்த பேரரசர் செவிரஸ் (Severus) காலத்தில் பிரிட்டனில் ரோமானியர் நிலை சற்று விருத்தியடைந்தது. வயதில் செவிரஸ் முதியவராக இருந்தபோதிலும், மனவலிமை கொண்டவராக விளங்கினர். பிரிட்டனின் ஆட்சி முறையை அப்போதைய தேவைக்கு ஏற்ப மாற்றி அமைத்து, உள்நாட்டுக் கலகங்களைத் தவிர்த்தார். வட ஸ்காட்லாத்தில் ரோமானியர்களால்கட்டப்பட்டிருந்த இருபாதுகாப்பு மதில்களைப் பலப்படுத்தினர். ஸ்காட்லாந்து மேட்டு நிலங்களைத் தாக்கி, அம்

முரட்டு இனத்தாரை அடக்க அபெர்டீன் (Aberdeen) வரை படைகளை நடத்திச் செல்லும்போது திடீரெனக் கடுமையான நோய்வாய்ப்பட்டதால், அத் திட்டத்தைக் கைவிட்டவராக யார்க் நகருக்குத் திரும்பி, அங்கு கி.பி. 211-ல் காலமடைந்துவிட்டார். இவரது மரணத்தைத் தொடர்ந்து பிரிட்டனில் ரோமானியரின் ஆட்சி மீண்டும் சீர்குலைய ஆரம்பித்தது.

பேரரசிலும் பிரிட்டனிலும் அப்போது நிலவியிருந்த குழப்பங்களைப் பயன்படுத்திக்கொண்டு கேரோசியஸ் (Carausius) என்ற ரோமானியக் கப்பற்படைத்தளபதி தம் வீரர்களோடு காளிலிருந்து கிளம்பி, ரோமானிய பிரிட்டனை அடைந்தார். ரோமானியப் பேரரசுக்குப் கட்டுப்படாத நிலையில் சுதந்திரமாக கி. பி. 287-லிருந்து கேரோசியஸ் பிரிட்டனில் சர்வாதிகாரம் பெற்றிருந்தார். கி.பி. 293ஆம் ஆண்டில் ரோமப் படைத்தலைவரான அலெக்டஸ் (Allectus) என்பவர் கேரோசியசைக் கொலை செய்து பிரிட்டனில் தன் அதிகாரத்தை நிலைநிறுத்தினர்.

கேரோசியஸ், அலெக்டஸ் என்போரின் காலத்தில், ரோமானியப் பிரிட்டன் பேரரசிலிருந்து பிரிந்த நிலையில், சுதந்திரமாகவே இருந்தது. அதேசமயம் தெற்கிலும், தென்கிழக்கிலும் ரோமானியர் ஆதிக்கம் தொடர்ந்து பரவியிருந்த போதிலும், அவர்களின் எல்லைகள் பல முரட்டு இனத்தினர்களால் ஓயாமல் தாக்கப்பட்டு வந்தன.

கி. பி. 296ஆம் ஆண்டில் கான்ஸ்டான்ஷஸ் (Constantius) என்பவர், ரோமாபுரியில் ஆட்சியை ஏற்றபோது பிரிட்டன் நிலையில் அபிவிருத்தி காணப்பட்டது. அலெக்டஸ் என்பவரைப் பணிய வைத்து, மீண்டும் பிரிட்டனைப் பேரரசின்கீழ்க் கொண்டு வந்த கான்ஸ்டான்ஷஸ் இத்தீவுகளின் கிழக்கு, தெற்குஎல்லைகளைத் தாக்கி வந்த சாக்ஸானியர்களின் தொந்தரவுகளைத் தவிர்ப்பதற்காக லிங்கன்ஷயரிலிருந்து (Lincolnshire) வைட் தீவு (Isle of weight) வரை புதிய கோட்டைகளைக் கட்டுவித்தார்.

மேற்குப் புறத்தில், கடல்வழியாகத் தொல்லைகள் கொடுத்து வந்த ஐரிஷ் கப்பற்கொள்ளையர்களையும் (Irish Pirates) எதிர்த்துத் தாக்குதல் நடத்துவதற்காகக் கார்டிஃப் (Cardiff), கரெனர்வான் என்ற இடங்களில் கோட்டைகளை எழுப்பச் செய்தார்.

பிரிட்டனின் நிர்வாக முறையிலும் சில மாற்றங்களை இப் பேரரசர் செய்வித்தார். ரோமானியப் பிரிட்டன் நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுத், தனித்தனி இராணுவஅதிகாரிகளின்கீழ்க்கொண்டு வரப்பட்டது. எல்லாப் பகுதிகளுக்குமாக ஒரு சிவிலியன் அரசாட்

சியும் நிறுவப்பட்டது. இராணுவத்தினரும் சிவிலியன்களும் (Civilians) ஆட்சியை மற்றவர்கள் கைப்பற்றுவண்ணம் ஒருவரையொருவர் கண்காணித்து வந்தனர். மேற்பார்வையிடும் வேலையில் ஈடுபட்டிருந்த இராணுவ அதிகாரிகள், 'டுக்ஸ் பிரிட்டானியே' (Dux Britannia) என அழைக்கப்பட்டனர். சாக்ஸானியர்களின் தொல்லைகளைத் தடுக்கப் பிரிட்டனின் கடற்கரை, கப்பற்படைப் பாதுகாப்பும் 'சாக்சன் கடற்கரை அதிகாரி' (Count of Saxon shore) என்பவருக்கு அளிக்கப் பட்டது. இவர்களின் தலைமையில் சப்ஃபோக்கிலிருந்த (Suffolk) பர்க் கோட்டை (Burqe) கென்டிலிருந்த ரிச்பரோ (Richbourough) கோட்டை, சால்செக்ஸில் இருந்த பிவென்சி (Pevensey) கோட்டை உள்படக் கடற்கரையோரமாக 12 கோட்டைகள் கட்டப்பட்டன. தரைப்படைகளைக் கவனிக்க 'கோமஸ் பிரிட்டானியாரம்' (Commes Brittanniarum) என்று வருங்காலத்தில் அழைக்கப்பட இருக்கும் தனிக்குழு ஒன்றும் நிறுவப்பட்டது.

கான்ஸ்டானியஸ் காலத்தில் ரோமானியர் ஆதிக்கம் பிரிட்டனில் மீண்டும் நிலைநிறுத்தப்பட்டதென்றால் அது மிகையாகாது. இவர் காலத்திய நாணயங்களில் சில பிரிட்டனில் கிடைத்துள்ளன. இவர் காலத்தில் நிலவிய அமைதி இவரது மகனும், அடுத்த வாரிசுமான பேரரசன் கான்ஸ்டன்டைன் (Constantine) காலம் வரையில் (கி. பி. 337) நீடித்தது.

கான்ஸ்டன்டைன் காலமான முப்பது ஆண்டுகளுக்குள் பிரிட்டனில் ரோமானியர் ஆட்சி அவல நிலைக்குள்ளாகியது.

வடக்கே பிக்ட்டுகள், ஸ்காட்டுகள், மேற்கே கெல்ட்டுகள், கிழக்கே சாக்சானியர்களின் நெருக்கல் அதிகமாயிற்று. கி.பி 367-ல் பிக்ட்டுகளும், ஸ்காட்டுகளும் சாக்சானியர்களுடன் இணைந்து ரோமானியப் பாதுகாப்புப் பெருஞ்சுவர்களைத் தகர்த்துத் தென் பிரிட்டனுக்குள் நுழைய ஆரம்பித்தனர். பிரிட்டனிலிருந்த ரோமானியத் தளபதிகளும் நாட்டின் பாதுகாப்பைப் பற்றி அதிக அக்கறைகாட்டாமல் ரோமாபுரியில் அப்போதைக்கப் போது நடந்து வந்த வாரிசுப் போர்களிலே கவனம் செலுத்தினர். பிரிட்டனிலிருந்து தம் வீரர்களுடன் வெளியேறி ரோமாபுரியின் உள்நாட்டுச் சண்டையில் கலந்து கொண்ட (கி.பி. 383) தளபதி மாக்ஸிமஸின் (Maximus) செயல் இதற்கோர் உதாரணமாகும்.

கி.பி 400ஆம் ஆண்டில் எதிரிகள் நாட்டின் எல்லைகளை இறுக்க, ரோமானியர்கள் வட புறத்துப் பாதுகாப்புச் சுவர்களையும் மேற்கிலிருந்த கோட்டைகளையும் கைவிட்டனர். அப்போது, சீர்

குலைந்து வரும் ரோமானியப் பேரரசின் தலைவராக இருந்த தியோடோசியஸ் (Theodosius) என்பவர், பிரிட்டனைக் காக்க நினைத்




படம். 2 ரோமானியப் பிரிட்டன்.

தார் எனினும், அதற்கானபடைப்பலம், பொருள் வளம் அவருக்கு இல்லை. நிலைமை மேலும் மோசமடையும்படியாகக், கோத்துகள்

(Goths) என்ற முரட்டு மிலேச்சர்கள், பேரரசின் ஐரோப்பிய எல்லைகளைக் கடந்து இத்தாலிக்குள் நுழைய ஆரம்பித்தனர். தங்களின் தற்காப்புப் போர்களிலே கவனம் செலுத்த வேண்டியிருந்த ரோமானிய அரசர்கள், பிரிட்டனைப் புறக்கணித்ததன்றி, அங்கிருந்த படைகளையும் சிறிது சிறிதாக அழைத்துக் கொண்டனர். கி.பி. 407-ஆம் ஆண்டில்ரோமானியரின் கடைசிப் படைகள் பிரிட்டனை விட்டு வெளியேறின. கி.பி. 410-ல் அலாரிக் (Alaric) என்ற கோத் இனத்தலைவனால் தலைநகரான ரோமாபுரியே தாக்கப்பட்டபோது, செயலற்றுப்போன பேரரசர் ஹோனாரியஸ் (Honorius) பிக்ட்டுகள், சாக்சானியர்களின் தாக்குதல்களிலிருந்து தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும்படி பிரிட்டானியர்களுக்கு வேண்டுகோள் விடுக்க, அதுவே பிரிட்டனில் ரோமானியர் ஆட்சியின் இறுதிக் கட்டமாக அமைந்தது.

## பிரிட்டனில் ரோமானியர் ஆட்சியால் ஏற்பட்ட விளைவுகள்

சுமார் 360 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து ரோமானியர் ஆதிக்கம் பிரிட்டனில் இருந்து வந்தமையால், அதனால் ஏற்பட்ட விளைவுகள் நம் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பதிவாகின்றன.

### ஆட்சி முறை

ரோமானியரின் ஆதிக்கம், உச்ச கட்டத்தில் இத் தீவில் பரவியிருந்தபோது தேம்ஸ் நதிக்குத் தெற்குப் பகுதியெனவும், செவர்ன் நதிக்கு மேற்குப் பகுதியெனவும், தேம்ஸ்-ஹம்பர் நதிகளுக்கு இடைப்பட்ட பகுதியெனவும், ஹம்பர்-ஸ்டேன் கேட்டுக்கு இடைப்பட்ட பகுதியெனவும், ஸ்டேன்கேட்-ஹாட்ரியன் மதிலுக்கு இடைப்பட்ட பகுதியெனவும் பிரிட்டன் 5 மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. கான்ஸ்டானியஸ் காலத்தில், இது நான்கு பிரிவுகளாக மாற்றப்பட்டது. பொதுவாக, ரோமானியப் பிரிட்டன் தெற்கு, வடக்கு என்ற இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது.

ஒவ்வொரு பிரிவுக்கும் ஓர் இராணுவத் தளபதி உயர் அதிகாரியாக இருந்தார். அவரின்கீழ் 10.000 வீரர்கள் வைக்கப்பட்டனர். ஒவ்வோர் இராணுவ அதிகாரிக்கும் உதவியாகப் பல அலுவலர்களிருந்தனர். தங்களின் உத்தியோகக் காலக்கெடு முடிந்ததும், ரோமுக்கு இந்த அதிகாரிகள் திருப்பி அழைத்துக் கொள்ளப்பட்டார்கள். மேலும் பிற்காலத்தில் ஏற்பட்ட சிக்கல்களையும் அந்நியப் படையெடுப்புகளையும் பிரிட்டனில் சமாளிப்பதற்காக "டுக்ஸ் பிரிட்டானிக்', 'சாக்சன் கடற்கரை அதிகாரி'' 'கோமஸ்

பிரிட்டானியாரம்' போன்ற உயர்தர அதிகாரிகளும் நியமிக்கப்பட்டிருந்தனர். மேற்கண்ட அரசியல் முறையை ரோமானியர் பிரிட்டனில் புகுத்தியிருக்க அம் மக்களுக்குச் சீரான அரசியலில் ஓரளவு அனுபவம் கிடைக்க வழி ஏற்பட்டது.

யார்க், செஸ்டர் (York, Chester), கார்லியன் (Carlean) என்ற கேந்திரங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த 50,000 வீரர்களே ரோமானிய நாகரிகத்தின் காவலர்களாக இருந்தனர். இவர்களில் பலர் பிரிட்டிஷ் பெண்களை மணந்து இங்கேயே நிரந்தரமாக வாழ ஆரம்பித்தனர். எழுபது சில்லறைப் படைகள் **(auxiliary army)** இவர்களுக்கு உதவின, அப் படைகளில் பெல்ஜியர், ஸ்பானியர், ஜெர்மானியர், கிரேக்கர் முதலிய பல நாட்டவர்கள் இருக்க இந்தப்படையினர் நெடுநாள்களாகப் பிரிட்டனிலேயே தங்கிவிட்டமையால், பிரிட்டிஷ் மக்களாகவே மாறியிருந்தனர். இதனால், ரோமானியர் உள்பட வேறு பல நாட்டினரும் பிரிட்டிஷ் மக்களிடையே இனக்கலப்பு அடைவது சாத்தியமாயிற்று.

ரோமானியர்கள் பிரிட்டனைக் கைப்பற்றிய பிறகு, பல நகரங்கள் உருவாக்கப்படுவதற்கு வழி கோலினர். இலண்டன், கார்னியம், வீரோகோனியம், யார்க், கோல்செஸ்டர், செஸ்டர், லிங்கன், கிளௌசெஸ்டர் ஆகிய நகரங்கள் ரோமானிய நாகரிகத்தின் உயிர் நாடிகளாக விளங்கின. ரோமானிய நாகரிகம் மிக அதிகமாகப் பரவிய இடம் இலண்டன்மாநகரம்தான். இங்கு வாழ்ந்த மக்கள் இனவழியிலே கெல்ட்டுகளாக இருந்தும், மொழி, மதம் பழக்கவழக்கங்களிலே ரோமானியர்களாகவே விளங்கினர். இந் நகரங்களில் ரோமானியர்களின் கோயில்கள், வாணிகத் துறைகள், வசதிகள் கொண்ட பெரிய வீடுகள், போன்றவை அதிகமாகக் காணப்பட்டன. நகர வாழ்க்கையை ஊக்குவித்த ரோமானியர், கிராமிய வாழ்க்கையையும் பேணிக் காத்தனர். சிறிய கட்டுக்கோப்பான வீடுகள், குளியலறை, பளிங்குத்தரை போன்ற அமைப்புகளைக் கொண்டு விளங்குமாறு கட்டப்பட்டன. கிளௌசெஸ்டருக்கு அருகில் செட்வொர்த் **(Chedworth)** என்னுமிடத்தில் காணப்படும் புராதன இடிபாடு இதற்கோர் உதாரணமாகும்.

கட்டட அமைப்பு முறையிலும், ரோமானியர் தங்களின் கைவண்ணத்தைப் பதியவைத்திருந்தனர். நகர்ப்புறங்களில் கட்டப்பட்டிருந்த வீடுகள் விசாலமாகவும், மாடிகளைக் கொண்டனவாகவும் செங்கற்களால் எழுப்பப்பட்டுமிருந்தன. இவ் வீடுகள் ரோமானியர் பாணிக்கேற்ப நீண்ட தாழ்வாரம், கற்கள்

பதிக்கப்பட்ட தரை, அகன்ற குளியலறை, அனல் அடுப்பு (Furnace) போன்றவற்றைக் கொண்டு சீரிய அமைப்புகளாய் விளங்கின. நாட்டுப்புறங்களில் பெரும் பண்ணைகளுக்கிடையே வில்லாக்கள் (Villas) என வழங்கப்பட்ட பொலிவுமிக்க நாட்டுப்புற மாளிகைகள் நெடுந்தொலைவிற்கிடையே ஒவ்வொன்றாகக் கட்டப்பட்டிருந்தன. இத்தாலியக் கட்டட முறையினை அடிப்படையாகக் கொண்டு கற்களால் கட்டப்பட்டிருந்த இம் மாளிகைகளில் பல வண்ணம் தீட்டப்பெற்ற தரையும் படைப்புச் சிற்பங்களும் (Statues) நீராடும் குளங்களும் இருந்தன.

ரோமானியப் பிரிட்டனில் அவர்களின் சீரிய பணிகளாக விளங்கியவை ரோமானியர்களால் அமைக்கப்பெற்ற மாபெரும் சாலைகளே (போர்கள் இல்லாத அமைதிக் காலத்தில்) இராணுவப் பொறியியல் நிபுணர்கள், ரோமானிய வீரர்களைக் கொண்டு பல நெடுஞ்சாலைகளை அமைத்தனர். ரோமானியப் படைகளின் போக்குவரவுக்குப் பெரிதும் பயன்பட்ட இச் சாலைகள், பல நூற்றுண்டுகள் வருங்காலத்தவரால் பிரிட்டனில் பயன்படுத்தப் பட்டன. ரோமானியர்கள் பிரிட்டனில் அமைத்த சாலைகளுள் பாதிக்கு மேற்பட்டவை, இலண்டனையே மையமாகக் கொண்டிருந்தன. இந் நகரை வடக்கிலும் தெற்கிலும் வேறு பகுதிகளோடு இணைத்த இச் சாலைகள், குன்றுகளையும், முகடுகளையும் (Ridges) கடந்து செல்லுவதாக இருந்தன. இன்று நவீன முறையில் பிரிட்டனில் அமைக்கப்பட்டிருக்கும் பல சாலைகள், அன்று ரோமானியர்களால் போடப்பட்ட சாலைகளை ஒட்டியனவே. இலண்டனிலிருந்து யார்க் நகருக்கும் செஸ்டருக்கும் பாத் (Bath) நகருக்கும் போடப்பட்ட சாலைகளுள் இலண்டனிலிருந்து டோவருக்குப்போடப்பட்ட வால்டிங் (Walting), சாலை அக்ஸ்டர்லிருந்து, லிங்கனுக்கு அமைக்கப்பட்ட ஃபோஸ்வழி (Foss way), லிங்கனிலிருந்து இலண்டனுக்கு அமைக்கப்பட்டிருந்த எர்மைன் (Ermine) சாலை போன்றவையும் இதற்குச் சிறந்த எடுத்துகாட்டுகளாகும்.

ரோமானியர் காலத்தில் பிரிட்டன் வர்த்தக ரீதியில் ஐரோப்பாவுடன் மிக நெருக்கமாக இணைக்கப்பட்டிருந்தது. தகரம், தோல், முத்துகள், அடிமைகள் போன்றவை சிறந்த ஏற்றுமதிகளாகும். பட்டு, மது (wine) வாசனைத் திரவியங்கள் போன்ற பகட்டுப் பொருள்கள் முக்கிய இறக்குமதிகளாகவும் இருந்தன. ஐரோப்பாவிலிருந்து கொண்டு வரப்படும் பண்டங்களை உள் நாட்டிற்குள் கொண்டு சென்று, எளிதாக இறக்குமதி செய்வதற்குரிய இடத்தில் அமைந்திருந்த இலண்டன் நகரம், இதனால் மாபெரும் வர்த்தகக் கேந்திரமாக மாறியது. யார்க், லிங்கன்,

செயின்ட் ஆல்பன் போன்ற நகரங்களும் சிறந்த சந்தைப் பட்டணங்களாக இருந்தன. பிரிட்டனின் கரையோரப் பட்டினங்களில் துறைமுகங்களும் கட்டப்பட்டன.

நாட்டில் சீரான விவசாய முறையும், ரோமானியரால் புகுத்தப்பட்டிருந்தது. காடுகள் அழிக்கப்பட்டும், சதுப்பு நிலங்கள் தூர்க்கப்பட்டும் நிலங்கள் மீட்கப்பட்டன. இந் நிலங்கள் மக்களின் குடியிருப்பிற்கும் விவசாயத்திற்கும் பேருதவியாக இருந்தன. மீட்கப்பட்ட நிலங்களிலிருந்து ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்வதற்குத் தேவையான அளவிற்குத் தானியங்களை விளைவித்தனர். இதனால் ரோமானியர் காலத்தில் பிரிட்டன், 'ஐரோப்பாவின் தானியக் களஞ்சியமாக' (Granary of Europe) விளங்கியது. ஆப்பிள், செர்ரி போன்ற பழவகைகளும் பட்டாணி, (Peas) போன்ற பயறு வகைகளும் பிரிட்டனில் ரோமானியரால் விவசாயத்திற்குக் கொண்டு வரப்பட்டன.

மேலும், உயர்ரக ஆடுமாடுகள், பறவையினங்கள் (Fowls, Gheese) பிரிட்டனுக்கு ரோமானியரால் அறிமுகப்படுத்தப் பட்டன. ரோமானியர் காலத்தில் நாட்டில் கனி வளமும், தொழில்வளமும் விருத்தி செய்யப்பட்டன. மிட்லாந்து (Midland), டீன் (Dean) காடுகளில் இரும்புச் சுரங்கங்களும், கார்ன்வால் (Cornwall), டெர்பி (Derby) பகுதிகளில் தகரம், செம்பு போன்ற உலோகங்களும், மென்டிபஸ்(Mendipps) என்னுமிடத்தில் ஈயமும் (Lead), நார்தம்பர்லாந்துப் (Northumberland) பகுதியில் நிலக்கரியும் வெட்டப்பட்டன. நாட்டின் கனிவளம் பெருகி வந்த இவ்வேளையில் சாமர்செட் பகுதியில் கல்வேலைப்பாடு, கண்ணாடி தயாரித்தல் போன்ற தொழில்களும் வளர்ந்தன. இத்துடன் கூந்தல் ஊசிகள் (hair pin), கரண்டிகள் (spoons), இடைக்கச்சம் (belts), சிலைகள் போன்றவற்றை ஆக்கும் தொழில்களும் மேலோங்கின.

ரோமானியரின் ஆட்சி மொழியாக இருந்த இலத்தீனும் (Latin) பிரிட்டனில் புகுத்தப்பட்டது. அக்ரிகோலாவின் மருமகனை டாக்டியஸ் (Tactius) குறிப்புகளிலிருந்து இம் மொழி பிரிட்டனரால் விரும்பிக் கற்கப்பட்டது எனத் தெரிகின்றது. தம் பாடல்கள் பிரிட்டானியரால் புரிந்து கொள்ளப்பட்டதென்று கி.பி. 96ஆம் ஆண்டில் வாழ்ந்த மார்ஷியல் (Martial) என்ற இலத்தீன் கவிஞர் பெருமையோடு குறிப்பிடுகின்றார்.

சமயத்தின் பெயரால் பல கொடுமையான பழக்க வழக்கங்களைமக்கள்மீது திணித்துக் கொடூரமாக நடந்துகொண்டு

வந்த துருவிதர் (Druids) என்ற அப் பழங்குடிக் குருமார்களின் ஆதிக்கம் முற்றிலும் அழிக்கப்பட்டது. தங்கள் ஆதிக்கத்திற்கு ஊறு விளைவிக்குமென்ற காரணத்தினால் துருவிதர்களின் புரோகிதத்துவத்தைப் பிரிட்டனில் ரோமானியர் ஒழித்ததைத் தொடர்ந்து எண்ணற்ற தங்களின் தெய்வங்களையும் சமயப் பழக்கவழக்கங்களையும் பிரிட்டன்மீது திணித்தனர். ரோமானியத் தெய்வங்களுக்கு அர்ப்பணிக்கப்பட்ட பல கோயில்கள் நகரங்களில் நிர்மாணிக்கப்பட்டன.

கான்ஸ்டன்டைன் என்னும் பேரரசர், கிறித்துவ சமயத்தைப் பேரரசின் சமயமாக்குவதற்கு முன்பாகவே, பிரிட்டனில் கிறித்துவ மதம் சிறிதளவு பரவ ஆரம்பித்தது. ரோமிலிருந்தோ, பேரரசின் மற்றப் பகுதிகளிலிருந்தோ பிரிட்டனுக்கு வந்திருந்த போர்வீரர்களால் இம் மதம் இங்குப் புகுத்தப்பட்டிருக்கலாமென நம்பப்படுகிறது. செயின்ட் ஆல்பன் என்ற கிறித்துவ மதப் போதகர், கி.பி. 304 ஆம் ஆண்டில் வெருலாமியம் என்னுமிடத்தில் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து அவரது தியாக மரணத்தை மறக்க முடியாத மக்களில் சிலர், இம் மதத்தைத் தழுவியிருக்கக்கூடும். கி.பி. 323ஆம் ஆண்டிலிருந்தே கிறித்துவ சமயப் போதகர்கள் பிரிட்டனுக்கு வரத் தொடங்கியிருந்தும் இத் தீவில் கிருத்துவ சமயம் நீறுபூத்த நெருப்பாகத்தான் இருந்தது. இம்மதம் பரவியது, ரோமானியரின் பிணைப்பால் பிரிட்டனுக்கு ஏற்பட்ட நன்மையான மற்றுமொரு விளைவாகும்.

அந்நியப் படையெடுப்புகளிலிருந்து காத்துச் சுமார் 3½ நூற்றாண்டுக் காலத்திற்கு ஓர் அமைதியான நிலையினை ரோமானியர் பிரிட்டனுக்குக் கொடுத்ததும் மற்றுமொரு சிறப்பு அம்சமாக விளங்கியது. இருப்பினும், ரோமானியரின் உறவினால் பிரிட்டனில் ஏற்பட்ட விளைவுகளில் ஒரு சிலவற்றைத் தவிர, காலப்போக்கில் மற்றவை மறையத் தொடங்கின. அதைத்தான் தொல்பொருளாராய்ச்சி வல்லுநரான ஹாவர்ஃபீல்டு (Haverfield), 'பிரிட்டனை ஒரு காலத்தில் ஆண்ட ரோமானியரிடமிருந்து பிரிட்டானியர்களாகிய நாம் எதையுமே மரபுரிமைகளாகப் (தொன்றுதொட்டு) பின்பற்றவில்லை' என்று குறிப்பிடுகின்றார்.

ரோமாபுரிப் பேரரசு, பிரிட்டனில் தன் இனமரபின் பழக்கவழக்கங்களை வலுக்கட்டாயமாகப் புகுத்தவில்லை என நாம் அறியும்போது, இக் குறிப்பிட்ட காலத்தில் மக்கள் வாழ்க்கையில் ஏற்பட்டிருந்த மாறுதல்கள் மேற்போக்காகவே இருந்தன.

# 2. ஆங்கிலோ சாக்சானியர் காலம்

## ஆங்கிலோ-சாக்சானியர்

ஆங்கிலோ-சாக்சானியர்களின் (Anglo-Saxons) வருகையைத் தொடர்ந்தே இந் நாட்டின் வரலாறும் சிறப்புப் பெறுகிறது.

**ரோமானியர் வீழ்ச்சிக்குப் பின்**

ரோமானியர் இனி, பிரிட்டனைக் கட்டிக் காக்க இயலாதென உணர்ந்ததும், மேற்கொண்டு இங்கிருப்பதில் பயனெதுவுமில்லை என்ற முடிவுக்கு வந்த நிலையில், பிரிட்டானியர்களைத் துணையற்றவர்களாகக் கைவிட்டுச் சென்றனர். இதனை அன்று ரோமானிய ஆட்சியால் ரோமானியத் தன்மை பெற்ற கலப்புச் சாதியினரும், ரோமானியர்களால் அடக்கப்படாமலிருந்த சில கெல்ட்டுகளும் தனித்தனி அரசுகளை நிறுவிக் கொண்டிருந்தனர் என்பதனால் அறியலாம். அவர்கள், தங்களுக்குள் போரிட்டுக் கொண்டதோடன்றி, 'பிரிட்டிஷ் வரலாற்றின் இருண்ட காலம்' (Dark Age) என வழங்கப்படும் அடுத்த ஒரு நூற்றாண்டுக் காலத்தில் இவர்கள் பல எதிர்ப்புகளுக்கிடையே வாழ வேண்டியிருந்தது. வடக்கேயிருந்து பிக்ட்டுகளும், ஸ்காட்டுகளும், தங்களுடைய தாக்குதல்களைத் தீவிரமாக்கியிருந்த வேளையில், கடல் மார்க்கமாகப் படையெடுத்து வந்த இன்னொரு இனத்தினரும் பிரிட்டனின் கிழக்குக் கரைகளைத் தாக்கி அடிக்கடி கொள்ளையடித்து வந்தார்கள். பல காலம் தங்கள் பாதுகாப்புக்காகப் பிரிட்டனில் ரோமானியர் போர்களைச்செய்து வந்தமையால், பிரிட்டானியர் போர் செய்யும் தொழிலில் உற்சாகம் குன்றியவர்களாக இருந்தனர். ஆயினும், சில சமயங்களில் எதிர்த்துப் போர் செய்யவேண்டிய நிலையில் பிரிட்டானியர் வீராவேசம் காட்டத்தான் செய்தனர். இதற்கோர் எடுத்துக்காட்டாக, கி.பி. 429ஆம் ஆண்டில் 'ஜெர்மானஸ்' (St. Germanus) என்ற பாதிரியாரின் தலைமையில் பிரிட்டானியர் ஆங்கிலோ-சாக்சானிய படையெடுப்பாளர்களை 'ஹலேலுஜா' (Hallelujah) என்னுமிடத்தில் தோற்கடித்த நிகழ்ச்சியினைக் கூறலாம். ஆயினும், ஒரு வெற்றியினைக் கொண்டு கூட்டம் கூட்டமாக அடுத்தடுத்து வந்த படையெடுப்புகளைப் பிரிட்டானியரால் சமாளிக்க முடியவில்லை.

இங்ஙனமாக உள்நாட்டுப் பூசல்களாலும் கடல்வழிப் படையெடுப்பாலும் பிரிட்டன் அலைக்கழிக்கப்பட்டு வந்த வேளையில்





படம் 3. 8ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து

ஆங்கிலோ—சாக்சானியர்கள் தங்களின் படையெடுப்பை மும்முரமாக்கத் தொடங்கினர்.

இத் தீவுக்கு 'இங்கிலாந்து' எனப் பெயர் வரக் காரணமான வர்களும் பிரிட்டனின் மொழி, தனித்தன்மை, சமூக அமைப்பு, அரசியல் மரபு, தேசியப் பண்பு ஆகியவற்றை உருவாக்குவதில் சிறப்பான பங்கு கொண்டவர்களுமான ஆங்கிலோ–சாக்சானி யரின் தொடக்க வரலாற்றைப்பற்றி அறிவதற்குச் சில சான்று களே கிடைத்திருக்கின்றன.

**சாக்சானியரின் தோற்றம்**

ரோமானிய வரலாற்றாசிரியர் 'டாஸிட்டஸ்' (Tacitus) என்ப வரின் 'ஜெர்மனி வரலாற்றிலும்' (Germanica), கெல்ட்டுகளின் வரலாற்றாசிரியரான 'கில்டாஸ்' (Gildas) என்பவரின் 'பிரிட்டன் வரலாற்றிலும்' (Histariio Brittanum), 'பீடு' (Bede) என்ற பாதிரியாரால் தொகுக்கப்பட்ட 'கிறித்துவ திருச்சபையின் வரலாற்றிலும்' (Ecclesiastical History), ஆங்கிலோ-சாக்சானி யரின் சரிதையைக் கூறும் 'ஆங்கிலோ-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பி'லிருந்தும் (Anglo—Saxon Chronicle) இவ்வினத்தாரைப் பற்றிய சில வரலாற்று உண்மைகள் தெரியவருகின்றன.

வடஜெர்மனி, தென் டென்மார்க் (Denmark), நெதர்லாந்து, (Netherland) ஆகிய பகுதிகளைத் தங்களின் ஆதி இருப்பிடமாகக் கொண்டிருந்த ஆங்கிலோ-சாக்சானியர், டியூடானிய (Teutonic) இனத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்தே பிரிட்டனின் கிழக்குக்கரைகளைத் தாக்கி வந்த ஆங்கிலோ-சாக்சானியர், நெடிய உருவம் கொண்ட இவ் வினத்தினர், கொடுமைக்குணம் கொண் டவர்களாகவும் நாகரிகமற்றவர்களாகவும் கிறித்துவர் அல்லாத வராகவும் இருந்தனர். கொலை, கொள்ளை போன்ற செயல்களில் ஈடுபாடு கொண்டிருந்த இம் மக்கள், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் இடையில் பிரிட்டன்மீது படையெடுப்பைத் தொடங்கினர்.

அக் காலத்தில் வடகடலில் பொதுவாகக் காணப்பட்ட புயலையும் கடலின் கொடிய விலங்குகளையும் கடற் கொள்ளையர் களையும் அலட்சியத்தின் காரணமாகவும் தற்காப்பிற்காகவும் எதிர்த்துப் போரிட்டு நன்கு பழகியிருந்தமையால், இவ் வினத் தினர் எத்தகைய துன்பத்தையும் பொறுத்துக்கொள்ளக்கூடிய மன உறுதியையும் உடல் உரத்தையும் பெற்றிருந்தனர்.

**படையெடுப்பின் நோக்கம்**

இம் மக்கள் பிரிட்டன்மீது ஏன் படையெடுத்தார்கள் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.

ஐரோப்பாவில், ரோமானியப் பேரரசு குலைந்துபோனபின்னர், ஏற்பட்டிருந்த குழப்பங்களில் உண்டான இனப் பெயர்ச்சியின் எதிரொலியாக இவ் வினத்தாரின் பிரிட்டிஷ் படையெடுப்பு ஏற்பட்டிருக்கலாம். மணல் வெளிகளும், பொட்டல்களும், சதுப்பு நிலங்களும், காடுகளும் கொண்ட தங்களுடைய நிலப்பகுதிகளுக்கு மாருகப் பிரிட்டனின் செழிப்பு மிக்க விளை நிலங்களைத் தேடி வந்தர்வர்களாகவும் இருந்திருக்கலாம்.

**படையெடுப்பின் தொடக்கம்:** ஆங்கிலோ-சாக்சானியர் எனப் பொதுவாக அழைக்கப்படும் இவ் வினத்தாரில் மூன்று பிரிவினர் இருந்தனர். 'எல்ப்' (Elbe) கரையோத்திலிருந்து வந்த 'சாக்சானியர், 'ஸ்லீஸ்விக்' (Schleswig) பகுதியிலிருந்து வந்த 'ஆங்கிலர்' (Angles), 'ஜூட்லாந்தி'லிருந்து (Juteland) வந்த 'ஜூட்டுகள்' (Jutes) என்பவர்களே அம் மூன்று பிரிவினரென்று 'ஆங்கிலோ சாக்சானியக் குறிப்புத்' தெரிவிக்கிறது.

கி.பி. 449ஆம் ஆண்டில் பிரிட்டனில் ஆண்டு வந்த தலைவர்களில் ஒருவரான 'வோர்ட்டிஜர்ன்' (Vortigern) என்பவர், தம் எல்லைகளைத் தாக்கிய பிக்ட்டுகளை ஒடுக்குவதற்காக ஜூட் இனத்தைச் சேர்ந்த 'ஹெங்கிஸ்ட் (Hengist), 'ஹோர்சா' (Horsa) என்ற இரு தலைவர்களைத் தம் ஆள்களுடன் வரும்படி அழைத்ததே, ஆங்கிலோ-சாக்சானியப் படையெடுப்பிற்கு முதற் கட்டமாக அமைகிறது. ஓர் எதிரியை மற்ருேர் எதிரியிடம் மோதவிட்டுத் தம் அரசைக் காத்துக்கொள்ள வோர்ட்டிஜர்ன் விடுத்த அழைப்பை ஏற்றுக்கொண்டு 'தேனட் தீவின்' (Isle of Thanet) கரையிலிறங்கினர். வந்த நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் பிரிட்டானிய மன்னருக்கு உதவி, பிக்ட்டுகளை விரட்டி, அதற்கான கூலிகளையும் பெற்றுக்கொண்டனர். நீதிக்கும் நேர்மைக்கும் முரண்பாடான வகையில் பேராசையும் போர் வெறியும் கொண்டிருந்த இத் தலைவர்கள், வேலை முடிந்த பின்னும் திரும்பவில்லை. பிரிட்டனில் அப்போது நிலவியிருந்த ஒற்றுமையின்மையையும் பிரிட்டானியரின் பலமின்மையையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள நினைத்த இத் தலைவர்களுக்கு நாடு திரும்பும் எண்ணமில்லை. தம்மினத்தைப் போன்று, போர் வெறி கொண்ட சாக்சானியரையும் ஆங்கிலர்களையும் வரவழைத்து இணைந்து பிரிட்டனைத் தாக்கத் திட்டமிட்டனர். இதனைத் தொடர்ந்துதான் வடகடலைக் கடந்து ஆங்கிலோ-சாக்சானியர் கூட்டம் கூட்டமாகப் பிரிட்டனின் கிழக்கு, தெற்குக்கரைகளை அடைந்தார்கள்.

**படையெடுப்புக் கட்டங்கள் (கி.பி. 449-613)**

தேனட் தீவில் முகாமிட்டுவிட்ட ஹெங்கிஸ்ட், ஹோர்சா என்பார்களின் ஜூட் இனத்தினர், கி.பி. 455ஆம் ஆண்டில் பிரிட்டானியத் தலைவரான வோர்ட்டிஜர்ன் என்பவரை 'அயில்ஸ்ஃபோர்டு' (Aylesford) சண்டையில் தோற்கடித்து விரட்டினர். இச் சண்டையில் 'ஹோர்சா' கொல்லப்பட்டிருந்தும், ஜூட்டுகள் ஹெங்கிஸ்ட் தலைமையில் 'கென்ட்' பகுதியை, அடுத்துப் பத்து ஆண்டுகளில் தங்கள் வசமாக்கிக் கொண்டனர். கி.பி. 530-ல் 'வைட் தீவையும்' (Isle of Wight) ஜூட்டுகள் கைப்பற்றிக் கொண்டனர். ஜூட்டுகள் பிரிட்டானியரை எதிர்த்துச் சுலபமாகப் பெற்ற இவ் வெற்றி, மற்ற ஆங்கிலோ-சாக்சானிய இனத்தினருக்கு ஒரு தெம்பாக அமைந்தது.

பிரிட்டனின் தெற்கு, தென்கிழக்குக் கரைகளை வந்தடைந்த சாக்சானியரும் நாடுபிடிக்கத் தொடங்கினர்.

'எல்லி' (Aelle), 'சிஸ்ஸா' (Cissa) என்ற இரு தலைவர்களின் கீழ், 'சஸ்ஸெக்ஸ்' (Sussex) பகுதியை வென்றனர். இவர்கள் 'தென்-சாக்சானியர்' (South-Saxons) என அழைக்கப்பட்டனர்.

கிபி. 500ஆம் ஆண்டில் லண்டன் உள்பட, 'மிடில் செக்ஸ்' (Middle sex) என்ற பகுதியினை வென்று 'எஸ்ஸெக்'ஸில் (Essex) அரசை நிறுவியவர்கள் 'கிழக்கு-சாக்சானியர்' (East saxons) என அழைக்கப்பட்டனர்.

கி.பி. 519ஆம் ஆண்டில் 'செர்டிக்' (Cerdic) என்பவரின் தலைமையில் இன்னொரு சாக்சானியக் கூட்டம் 'ஹாம்ஷயர்' (Hampshire) பகுதியை வென்றது. இப் பகுதியே பின்னர் 'வெஸ்ஸெக்ஸ்' (Wessex) என அழைக்கப்பட, இப் பிரிவினரும் 'மேற்கு-சாக்சானியர்' (West-Saxons) என அழைக்கப்பட்டனர்.

சாக்சானியரின் நாடு பிடிக்கும் கொள்கையால் கவரப்பட்ட ஆங்கில்களும், பிரிட்டனை வந்தடைந்து லிங்கன்ஷயர், யார்க்ஷயர், டூவிட் பகுதிகளை வென்று, 'கிழக்கு ஆங்கிலியா' (East-Anglia) என்ற அரசை அமைத்தனர். இப் பிரிவினரில் ஒரு பகுதியினர், 'இங்கிலியாக்கள்' (Engleas) என அழைக்கப்பட்டனர். இப் பெயரே நாளடைவில் இத் தீவிற்கு 'இங்கிலாந்து' எனப் பெயர்வரக் காரணமாகி, இக் காலத்திலேயே பிரிட்டனுக்கு இங்கிலாந்து என்ற பெயர் நிலைத்துவிட்டது.

இங்ஙனமாக, பிரிட்டன்மீது அலையலையாகப் படையெடுத்த ஆங்கிலோ-சாக்சானியர், தங்கட்கு எதிர்ப்பட்ட மதில்களையும் கோட்டைகளையும் அரண்மனைகளையும் கொண்ட நகரங்களை அழித்தும், 'வில்லாக்கள்' கொண்ட நாட்டுப்புறங்களைக் கைப் பற்றியும், அங்கு வாழ்ந்த பழங்குடியினரை விரட்டியும் வற்புறுத் தியும், பற்பல இடங்களிலே தங்களுக்கென்று அரசுகளை அமைத்துக் கொண்டனர். முன்னேறி வந்த ஆங்கிலோ-சாக் சானியரைக் கடுமையாக எதிர்ப்பதற்கான முயற்சி கி.பி. 517 ஆம் ஆண்டிலேயே செய்யப்பட்டது.

கற்பனை மனிதரோ, அல்லது வரலாற்றுப் பெருவீரரோ என்ற சர்ச்சைக்கு இடமளித்திருக்கும் 'ஆர்தர் மன்ன'னின் (King Arthur) தலைமையில், பிரிட்டானியத் தலைவர்கள் ஒன்று கூடி 'டோர்செட்ஷயரு'க்கருகில் பேடன்மலைச் (Mount Baden) சண்டையில் மேலைச் சாக்சானியரைத் தோற்கடித்துப் பெரும் வெற்றி பெற்றனர். இச் சண்டையின் விளைவாக ஆங்கிலோ-சாக்சானியரின் முன்னேற்றத்தில் சில காலம் தடை ஏற்பட்டிருந்த தெனினும், கி.பி. 552 ஆம் ஆண்டிலிருந்து மீண்டும் அவர்களின் கைகளே ஓங்கியது. படையெடுப்பாளர்களால் மேன்மேலும் ஒடுக்கப்பட்ட பல 'கெல்ட்' குடியினர், 'வேல்ஸ்' மலைகளைக் கடந்து மேற்கே அகன்றனர். எனினும், இன்னும் சில பிரிட்டானியர்கள் நாட்டின் தென்மேற்குப் பகுதியில் ஆங்கிலோ-சாக்சானியர்களை எதிர்க்கும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தனர்.

இந் நிலையில்தான் ஆங்கிலோ—சாக்சானியரின் போர்களுக்கு இறுதிக் கட்டமாக அமைந்த இரு பெரும் சண்டைகள் நடந்தன. அதையொட்டியே, பிரிட்டானியரின் எதிர்ப்புப் பெருமளவு ஓய்ந்தது.

கி. பி. 577ஆம் ஆண்டில் மேலைச் சாக்சானிய அரசரான 'சீவ்லின்' (Ceawlin) என்பவரின் தலைமையில் 'டியோரம்' (Deorham) என்னுமிடத்தில் தென்மேற்குப் பகுதியில் தொடர்ந்து எதிர்ப்புக் காட்டி வந்த பிரிட்டானியர்கள் கடுமையாக நசுக்கப் பட்டனர். இவ் வெற்றியினைத் தொடர்ந்து, 'கிளௌசெஸ்டர்' (Glowcester), 'பாத்', சிரன்செஸ்டர்' (Cirencester) போன்ற இடங்களைச் சாக்சானியர் கைப்பற்றினர். எல்லாவற்றுக்கும் மேலாக, 'வேல்ஸ்' பகுதிக்கு ஓடி விட்டிருந்த பிரிட்டானியருக்கும் தென்-மேற்கிலிருந்த பிரிட்டானியருக்கும் உறவு இருக்க முடியாத அளவுக்கு இவ் வெற்றி சாக்சானியருக்கு நன்மை பயந்தது.

இங்கிலாந்துக்கும் வேல்சுக்கும் இணைப்பாக இருக்கும் 'செவர்ன்' ஆற்றுப் பகுதியில் சாக்சானியர் ஆதிக்கம் பெற்றுவிட்டனர்.

'பெர்னிஷியா'வில் 'பாம்பரோவை'த் தலைவராகக் கொண்டிருந்த 'ஐடா' (Ida) வம்சத்தினரும், 'டேய்ரா'வில் (Deira) 'யார்க்கை'த் தலைவராகக் கொண்ட 'எயில்' (Aelle) வம்சத்தினரும் கி.பி. 588-ல் 'எதல்ஃபிரித்' (Ethelfrith) என்பவரின் கீழ் ஐக்கியமடைந்து, நார்தம்பிரியா அரசை உருவாக்கியிருந்தனர். நார்தம்பிரியாவின் அரசரான எதல்ஃபிரித், 'வேல்ஸ்' பகுதியைத் தாக்கி எதிர்த்த பிரிட்டானியர்களைச் 'செஸ்டர்' (Chester) சண்டையில் கி.பி. 613 - ல் வென்றார். பிரிட்டானியர்களுக்கு வெற்றி கிடைக்க வேண்டுமெனக் கோரிப் பிரார்த்தனைசெய்ய வந்த இரண்டாயிரம் கிறித்துவப் பாதிரிமார்களும் இக் களத்தில் கொல்லப்பட்டனரென்றால், இச் சண்டையின் கொடுமை ஒருவாறு புலப்படும். இவ் வெற்றியைத் தொடர்ந்து 'டீ' (Dee) ஆற்றங்கரை ஆங்கிலர்களால் கைப்பற்றப்பட்டு வெல்ஷ் பகுதியில் வாழ்ந்த பிரிட்டானியர் மேலும் பிரிக்கப்பட்டனர். லங்காஷயர், கம்பர்லாந்து (Cumberland) பகுதிகளில் வாழ்ந்த பிரிட்டானியரோடு இனி வேல்ஸ் பகுதியில் வாழ்ந்த பிரிட்டானியர் உறவு கொள்ள முடியாதபடி இவ் வெற்றியும் அமைந்தது.

சுருக்கமாகக் கூறினால், எதிர்ப்புக்கு இடமாயிருந்த பிரிட்டானிய வேல்ஸ் இவ்விரு வெற்றிகளால் துண்டாடப்பட்டது.

நாட்டிலே ஆங்கிலோ-சாக்சானியரின் ஆதிக்கம் நிலைத்து நின்ற இக் காலத்தில், சில பிரிட்டானியர் மேற்கிலிருந்த மலைகளில் தஞ்சமடைந்தனர். இன்னும் சிலர், கடலைக் கடந்து கான் நாட்டையடைந்து, 'அம்மோரிகோ' (Ammorigo) என்ற மாவட்டத்தில் 'பிரிட்டனி' (Brittony) என்ற குடியேற்றத்தை அமைத்துக் கொள்ள, தங்களுக்கு எதிர்ப்பு இல்லாத நிலையில் ஆங்கிலோ-சாக்சானியர் தங்களின் இராச்சியங்களைப் புனரமைப்புச் செய்யும் பணியிலீடுபட்டனர். இதனையடுத்தே, 'ஏழு ஆங்கிலோ-சாக்சானியர் இராச்சியங்கள்' (Kingdoms) தோன்றின. இவற்றிடையே நடந்த ஆதிக்கப் போர்களே அடுத்த சில நூற்றாண்டுகளுக்குப் பிரிட்டிஷ் வரலாற்றின் முக்கிய நிகழ்ச்சிகளாக அமைகின்றன.

## பிரிட்டனில் கிறித்துவ மதம் பரவுதல். கி. பி. 597-664

பிரிட்டனில் ஆங்கிலோ-சாக்சானியர் தங்களின் அரசியல் ஆதிக்கத்தை நிலைபெறச் செய்வதற்கான முயற்சியில் ஈடுபட்

டிருக்க, பிரிட்டிஷ் நாகரிகத்தை உருவாக்கிய புதிய ஒரு நிகழ்ச்சியாகப் புகழப்படும் கிறித்துவ மதம் (Christianity) இந் நாட்டில் மீண்டும் பரவத் தொடங்கியது.

ரோமானியர் ஆட்சிக் காலத்தின் இறுதிக் கட்டத்தில்தான் இம் மதம் பிரிட்டனில் பரவ ஆரம்பித்தது. 'செயின்ட் ஆல்பன்' என்ற பெரியார், கிறித்துவ சமயத்திற்காகத் தியாக மரணமடைந் ததையொட்டி, இம் மதத்தின் பேரில் மக்கள் சிறிது ஈடுபாடு கொள்ளத் தொடங்கினர். கி.பி. 315ஆம் ஆண்டில்பிரிட்டனிலிருந்து மூன்று பிஷப்புகள், 'ஆஸ்லீஸ்' திருச்சபைக் கூட்டத்திற்கு (Council-of Asles)சென்று கலந்து கொண்டமையும் இக் கூற்றை உறுதிப் படுத்தும். மேலும், பிரிட்டனின் பல்வேறு பகுதிகளில் சில கிறித் துவப் பெரியார்கள், தங்களின் பிரசாரப் பணிகளை மேற்கொண் டிருந்தனர். தெற்கு வேல்ஸ் பகுதியில் தொண்டாற்றிய 'செயின்ட் டேவிட்' (St. David), அயர்லாந்தில் போதனை செய்த 'செயின்ட் பேட்ரிக் (St. Patrick), கேலோவே (Gallowy) பகுதியில் சமயப் பணியாற்றிய செயின்ட் நைனியன் (St. Nainian) போன்றோர் அவர்களில் சிலராவர்.

**பிரிட்டனின் தனித்த சமயநிலை**

கிறித்துவரல்லாத ஆங்கிலோ-சாக்சானியரின் தாக்குதல் களைத் தொடர்ந்து பிரிட்டனின் தெற்கு, கிழக்குப் பகுதிகளில் கிறித்துவ சமயம் நலிய ஆரம்பித்தது. வேல்ஸ், கார்ன்வால், ஸ்ட்ராத்கிளைடு (Strathclyde) போன்ற பகுதிகளிலேயே இம் மதம் ஓரளவு போற்றப்பட்டு வந்தது.

ஆங்கிலோ-சாக்சானியரின் தாக்குதல்களிலிருந்து கிழக்கு, தெற்குப் பகுதிகளிலிருந்த கிறித்துவர்கள், பிரிட்டனின் வேறு இடங்களுக்கு ஓடிக் கொண்டிருக்கும் வேளையில் ரோமப் பேரரசு சிதைந்து கொண்டுவந்தது. 'லம்பார்டுகள்' (Lombards) உள்பட பல முரட்டு இன மிலேச்சர்கள் (Barbarians) பழைய ரோமானிய நாகரிகத்தையும் கிறித்துவ மதக் கோட்பாடுகளையும் தாக்க லாயினர்.

சாக்சானியப் படையெடுப்பாலும் மேற் சொல்லப்பட்ட நிகழ்ச்சியாலும் பிரிட்டானிய கிறித்துவர்களுக்கும், ஐரோப்பியக் கிறித்துவத்திற்கு மூல இடமான ரோமாபுரிக்கும் தொடர்பு அற்று விட்டது. கெல்ட்டு நாகரிகப் பின்னணியில் சில புதிய மரபுகளைக் கொண்டிருந்த பிரிட்டானிய கிறித்துவ மதம், இதனால் சமய கோட்பாடுகளில் தனித்து நின்றது.

இச் சூழ்நிலையில், பிரிட்டனின் சில பகுதிகளில் மட்டுமே இயங்கி வந்த கிறித்துவ மதத்தில், போர் ஓர் அவசியமுள்ள விளையாட்டாகக் கருதப்பட்டது. திருமணச் சடங்குகள் போற்றப் படவில்லை. ஈஸ்டர் பண்டிகைத் தேதியில் மாற்றமிருந்தது. பேய், பிசாசுகள் நம்பப்பட்டன. பாதிரியார்கள் கிட்டாத மேலுலகத் திற்காகத் தம் உடல்களைக் கடுமையாக ஒறுத்துக்கொண்டு வாழ் பவர்களாக இருந்தனர். பிஷப்புகள், பாதிரியார்கள், மடாலயத் தலைவர்கள் போன்றோர் இருப்பினும், கிறித்துவ சமயத்தின் இயக்க அமைப்புமுறை பிரிட்டனில் இன்னும் ஒழுங்காக உரு வாக்கப்படவில்லை.

**கொலம்பாவின் சமயத் தொண்டு**

இச் சமயத்திலே 'மனிதருள் மாணிக்கமானவரும்', சிறந்த கவிஞரும், நிர்வாகியும், தொண்டருமான செயின்ட் கொலம்பா (St. Columba) ஸ்காட்லாந்திற்கு மேற்கே இருக்கும் அயோனா (Iona) தீவில் மரத்தாலான திருக்கோயிலை அமைத்துத் தம் சீடர்களுடன் சமயப்பணியில் இறங்கினார். ஸ்காட் லாந்து, வட இங்கிலாந்து போன்ற பகுதிகளில் கிறித் துவ மதம் மீண்டும் ஓரளவு பரவுவதற்குச் செயின்ட் கொலம்பா, தம் சீரிய பணியினைத் தொடர்ந்து வந்த காலத்தில், மகா கிரிகோரி (Gregory the Great) என்பவர், கிறித்துவ சமயத்தில் தலைமை யிடமான ரோம் நகரில் போப்பாண்டவராகக் கி. பி. 590-ல் நிய மிக்கப் பெற்றார்.

ஒரு ரோமானிய மேன் மக்கள் வகுப்பைச் சேர்ந்த கிரி கோரி, தாம் பதவி ஏற்றதும் ரோமப் பேரரசு சிதைந்ததால் ஏற் பட்ட வெற்றிடத்தில் கிறித்துவ சமயத்தைப் பரப்பி, போப் பாண்டவரான தம் புகழை அதிகரித்துக்கொள்ள விரும்பினார். பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமான அம் முரட்டு இனத்தினர் களையும் கிறித்துவர்களாக்க வேண்டுமென்ற சிந்தனையைக் கொண்டிருந்த கிரிகோரி, அதற்கான செயலில் தீவிரமாக இறங் கினார்.

**அகஸ்டின் என்பாரின் பிரசாரக் குழு**

இங்கிலாந்தில் கென்ட் பகுதியின் மன்னரான எதல்பர்ட் என்பவர், ஃபிராங்கிஷ் (Frankish) இளவரசியும் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவருமான பெர்தா (Bertha) என்ற பெண்ணை மணம் செய்து கொண்டதே இங்கிலாத்தில் கிறித்துவ மதம் மீண்டும் பரப்பப்படுவதற்கான தொடக்க கட்டமாக அமைந்தது.

இத் திருமணத்தைத் தம் சமயப் பணிக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய கிரிகோரி, கி.பி. 596ஆம் ஆண்டில் அகஸ்டின் (Augustine) என்ற பாதிரியாருடன் நாற்பது பேர் கொண்ட சமயப் பிரசாரக் குழு ஒன்றைக் கென்ட்டுக்கு அனுப்பி வைத்தார்.

அகஸ்டினும் அவர்தம் சீடர்களும் கி.பி. 5 ஆம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட செயின்ட் பெனிடிக்ட் (St. Benedict) என்பவரது பிரிவைச் சேர்ந்தவர்களாவர். செயின்ட் பெனிடிக்ட் போதித்த படி தியானமும் பிரார்த்தனையுமே மக்களை நல்வழிப்படுத்து மென்ற கொள்கையில் அகஸ்டினும் அவரது சீடர்களும் அசையா நம்பிக்கை கொண்டிருந்தனர்.

அகஸ்டினும் அவரது சீடர்களும் கி.பி. 597ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தேனட் தீவில் எப்ஸ்ஃபிளீட் (Eppssflet) என்னு மிடத்தில் கரையிறங்கினர்.

சண்டையிடுவதிலும் விருந்துண்ணுவதிலும் குடிபோன்ற கேளிக்கைகளிலுமே தங்களுடைய வாழ்நாள்களைக் கழித்து வந்த மக்களை நல்வழிப்படுத்தி, கிறித்துவர்களாக்கக் கென்ட்டுக்கு வந்திருந்த அகஸ்டினை, எதல்பர்ட் எச்சரிக்கையோடு வர வேற்றார். ஆயினும், இம் மன்னர், தம் மனைவிக்கும் அவரது குரு மார்களுக்கும் கிறித்துவ முறையில் வழிபாடு செய்யும் உரிமையைத் தொடக்கத்திலேயே அளித்துவிட்டார். கான்டர் பரிக்கு (Canterbury) அருகேயிருந்த செயின்ட் மார்ட்டின் (St. Martin) என்ற ஒரு பாழடைந்த திருச் சபையை இம் மன்னர், இப் பாதிரியார்களுக்கு அன்பளிப்பாக அளித்ததோடன்றிப் புதுப் பிக்கவும் செய்தார். அகஸ்டின் இவ் விடத்திற்குக் 'கிறித்து மாதாக் கோவில்' (Christ Church) எனப் பெயர் கொடுக்க, இதுவே இங்கிலாந்தில் முதல் திருக்கோயிலாக அமைகின்றது. (இவ் விடத்திலேயே இன்றைக்கு இங்கிலாந்தின் தலைமைத் திருச்சபை யான 'கான்டரபரி'யின் பிரதான கோயில் (Cathedral of Canterbury) அமைந்திருக்கின்றது.

எதல்பர்டினால் தங்களுடைய பிரச்சாரப் பணிகளைச் செய்ய அனுமதிக்கப்பட்டிருந்த அகஸ்டினும் அவர்தம் சீடர்களும் உண்மை யான முயற்சியாலும், பண்பட்ட போதனைகளாலும் பெருமளவு மக்களைக் கிறித்துவர்களாக்கி வந்தனர். இப் பாதிரிமார்களின் போதனைகளை முதலில் பாராட்டத் தொடங்கிய எதல்பர்ட் நாட்டில் இம் மதம் பரவியதால், தம் ஆட்சிக்கடங்கி குடிமக்கள்

ஒழுக்கமாக நடந்து கொள்வதையும் நாட்டில் அறிவாளிகளும் திறமைமிக்க நிர்வாகிகளும் பெருகுவதையும் அனுபவத்தில் கண்டறிந்தபோது, தாமும் இம் மதத்தில் சேர முன்வந்தார். கி.பி. 597ஆம் ஆண்டில் எதல்பர்ட்டும் அவரது பிரபுக்களும் ஞானஸ்நானத்தைப் (Baptism) பெற்றுக் கிறித்துவர்களாக மாறியதும், கென்ட் பகுதியில் இம் மதம் இன்னும் விரைவாகப் பரவத்தொடங்கியது. மேலும் கென்டின் ஆட்சிக்குட்பட்டிருந்த எஸ்ஸெக்ஸின்கீழ் 'ஆங்கிலியா' போன்ற சிறு இராஜ்ஜியங்களும் இச் சமயத்தை ஏற்றுக்கொண்டன.

**அகஸ்டினும் திருச்சபையும்**

போப்பாண்டவர் கிரிகோரி தமக்களித்த அறிவுரைப்படி, மிலேச்சர்களுடைய பழக்கவழக்கங்களை மதித்து, அமைதியான முறையில் கிறித்துவ மதத்தைக் கென்ட் பகுதியில் பரப்பி வந்த அகஸ்டின், கான்டர்பரியைத் தம் சமயத் தலைமையிடமாக அமைத்துக் கொண்டார். செயின்ட் சேவியர் (St. Saviour) என்ற பழைய திருச்சபையைப் புதுப்பித்து, அதைப் பிரதான கோயிலாக்கினர். ஏசு பிரானின் சீடர்களான பீட்டர் (Peter), பால் என்போரின் பெயர்களைச் சூட்டி, அருகிலேயே இரு மடாலயங்களைக் கட்டுவித்தார். பிரிட்டனில் இங்ஙனமாகச் சீரிய சமயத் தொண்டனை ஆற்றிவந்த அகஸ்டினின் சேவையை மெச்சிடும் வகையில் இவருக்குத் திருச்சபைச் சின்னங்களை (Pallium) அனுப்பிக்கிரிகோரி கௌரவித்தார். மேற்கொண்டு ஆங்கிலோ-சாக்சானியரின் திருச்சபைக்குக் கோட்பாடுகளை அளித்துச் சிறப்பிக்க நினைத்த கிரிகோரி, பிரிட்டனிலிருந்த லண்டன், யார்க் என்ற நகரங்களிலும் சம அந்தஸ்துடைய இரு திருச்சபைகளை நிறுவச் செய்தார். ஒவ்வொரு திருச்சபையிலும் (Church) பன்னிரு பிஷப்புகள் (Beshops) இருந்தனர். அகஸ்டினுக்குத் தேவைப்படும் வகையில், புதுப்புது துறவியர்களையும், சமயத்தின் இலத்தீன் கையெழுத்தும் பிரதிகளையும், வெள்ளிச் சிலுவைகளையும் (Cross) கிரிகோரி அப்போதைக்கப்போது அனுப்பி வைத்தார். ரோம் திருச்சபையினுடன் உறவில்லாதிருந்த பிரிட்டனின் மேற்குப் பகுதியையும் இச் சமயமே இன்னும் பரவாமலிருந்த வடக்குப் பகுதியையும் அகஸ்டினைத் தம் சமய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரும்படியும் கிரிகோரி பணித்தார். போப்பாண்டவரின் ஆணையை மேற்கொண்ட அகஸ்டின், சமயத்தில் தனித்த நிலையைப் பெற்று ஒதுங்கியிருந்த வேல்ஸ் கிறித்துவர்களைத் தங்களின் மூடப்பழக்கவழக்கங்களைக் கைவிட்டுத் தம்முடன் இங்கிலாந்தின் மற்ற பகுதிகளில் கிறித்துவச் சமயத்தைப் பரப்பும் பணியில் ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொண்டார்.

ஆயினும், வேல்ஸ் கிறித்துவ சபையின் பிடிவாதத்தினுல் அகஸ்டினின் இம் முயற்சி வெற்றிபெற வில்லை.

ஆங்கிலத் திருச்சபைக்கு அடிக்கல் நாட்டிய அகஸ்டின், கி.பி. 604 ஆம் ஆண்டில் காலமடைந்து விட்டார். இவரது சிறப்பான சமய பணி காரணமாக, இவர் இறந்துவிட்ட பின்னரும், இச் சமயம் மெல்ல மெல்ல இங்கிலாந்தின் ஏனைய இடங்களுக்கும் பரவத் தொடங்கியது. ஆயினும், சில ஆண்டுகளுக்குப் பின்னர், இச் சமயத்திற்கு மீண்டும் சோதனை வந்தது.

**அகஸ்டினுக்குப் பிற்பட்ட காலம்**

பிரிட்டிஷ் மக்களுக்குக் கிறித்துவ சமயத்தின்மீது ஆழ்ந்த பற்றில்லாத காரணத்தினுல், அகஸ்டின் காலமான சில காலத்திற்குள்ளாகவே இச் சமயம் மறைந்து போகும் நிலைக்கு வந்தது.

கென்ட்டின் அரசரான எதல்பர்ட்டும் அவரது சகோதரரின் மகனுன எஸ்ஸெக்ஸ் அரசரும் கிறித்துவ சமயத்தை ஏற்றிருந்தவர்களாவர். இம் மன்னர்கள், கி.பி. 616-ல் காலமானதை யொட்டிக் கென்ட்டிலும் எஸ்ஸெக்ஸிலும் கிறித்துவ சமயமும் நலிய ஆரம்பித்தது. லண்டனில் பிஷப்பாக இருந்த 'மெல்லிடஸ்' (**Mellitus**) என்பவரும், ரோசெஸ்டரில் பிஷப்பாக இருந்த ஜஸ்டஸ் (**Justus**) என்பவரும் விரட்டப்பட்டனர். கீழ் ஆங்கிலியாவில் ஆட்சி புரிந்த குறுநில மன்னரான (**Sub king**) 'ரெட்வால்டு' (**Redwald**) என்பவரும், எதல்பர்டின் வாரிசான கென்ட் மன்னர் 'எட்பால்டு' (**Edbald**) என்பவரும் கிறித்துவ மதத்தை ஒடுக்கிவந்தமையால், இச் சமயமே பிரிட்டனில் அழிக்கப் பட்டு விடுமோ என்ற நிலை ஏற்பட்டது.

**நார்த்தம்பிரியாவில் இம் மதம் பரவுதல்**

கிறித்துவ சமயம் மக்களின் வீரத்தன்மையினைப் பறித்து, சாந்தமுள்ளவராக்கி விட்டதென்ற பொதுவான குற்றச்சாட்டு வேகமாகப் பரவிவந்த இவ் வேளையில், எட்வின் (**Edwin**) என்பவர், வேல்ஸ் கிறித்துவத் துறவிகளைக் கொலை செய்திருந்த எதல்ஃபிரித் (**Ethelfrith**) என்ற மன்னரைக் கொன்று நார்த்தம்பிரியா முழுவதற்கும் அரசரானர். இவ் வரசர், இடையே மனம் மாறிக் கிறித்துவ சமயத்தைச் சார்ந்திருந்த கென்ட் அரசரான எட்பால்டு என்ற மன்னரின் மகளான எதெல்பர்கா (**Ethelburga**) என்பவளை கி.பி. 625-ல் திருமணம் செய்துகொண்டார். இவ் விளவரசியோடு பாலினஸ் (**Paulinus**) என்ற மதகுருவும் நார்த்தம்பிரியாவுக்குச் சென்ருர். முன்பு கிரிகோரி, இங்கி

லாந்தில் கிறித்துவ சமயத்தைப் பரப்ப அனுப்பப்பட்ட நாற்பதின்மரில் அப்போது எஞ்சியிருந்தவர் இவர் ஒருவரே. பாலினஸ் முயற்சியாலும் போப்பாண்டவரின் பரிசுகளாலும் எதல்பர்க்காவின் வேண்டுதலாலும் நார்த்தம்பிரியாவின் அரசரான எட்வினும் அவரது ஏனைய குடும்பத்தினரும் கிறித்துவர்களாக மதம் மாறினர். பாலினஸ், தம் சமயப் பணியில் அயராது உழைத்து ட்விடிலிருந்து லிங்கன்ஷயர் வரை (Lincolnshire) இருந்த எட்வினின் நாட்டு மக்கள் அனைவரையும் மதம் மாற்றம் செய்தார். எஸ்ஸெக்ஸ், கிழக்கு ஆங்கிலியா போன்ற பகுதிகளிலும் இம் மதம் பரவியது. இத்துடனன்றிக் கல்லாலான திருக்கோயிலையும் டிரென்டில் (Trent) பாலினஸ் கட்டுவித்தார்.

ஆயினும், கி.பி. 632-ல் மீண்டும் இம் மதத்திற்குச் சோதனை வந்தது. எட்வினின் வெற்றியாலும் புகழாலும் பொறாமை உணர்ச்சி கொண்ட கிறித்துவரல்லாத மெர்சியா (Mercia) அரசின் தலைவரான பெண்டா (Penda) என்பவர், வேல்ஸ் அரசரான காட்வாலனோடு (Cadwallon) சேர்ந்து, டோன் காஸ்ட் என்னுமிடத்தருகேயுள்ள ஹேட்ஃபீல்ட் (Hatfield) என்னுமிடத்தில் எட்வினைத் தோற்கடித்துக் கொன்றனர். யார்க் நகரம் தீக்கிரையாக்கப்பட்டது. அரசி எதல்பர்காவும், துறவி பாலினசும் பிரிட்டனின் தென் பாகத்திற்குத் தப்பி விட்டனர். கிறித்துவ மதமல்லாத வேறொரு புறம்பான சமயத்தைத் தழுவியிருந்த பெண்டா, நார்த்தம்பிரியாவைத் தம் வசத்திற்குக் கொண்டு வர, இந் நாட்டைச் சேர்ந்த மக்கள் உடனேயே கிறித்துவ மதத்தின் மேலிருந்த நம்பிக்கையை உதறிவிட்டனர். இதே போன்று, எஸ்ஸெக்ஸின்கீழ் இருந்த ஆங்கிலியாவிலும் இம் மதம் நலிவுற்றது.

### மெர்சியாவுடன் போர்

எட்வின் முன்பு நார்த்தம்பிரியாவைக் கைப்பற்றியபோது, அங்கு அதுவரை ஆண்டு வந்த பெர்னிஷியா அரச மரபினைச் சேர்ந்த ஆஸ்வால்டு (Oswald), ஆஸ்வி (Oswy) என்ற இரு சகோதரர்களை நாடு கடத்தியிருந்தார். ஸ்காட்லாந்தில் புகலிடம் கொண்ட இவ் விரு அரச குமாரர்கள், அங்கு செயின்ட் கொலம்பாவின் கொள்கைகளை ஏற்றுக் கிறித்துவர்களாக வளர்ந்து வந்தனர்.

ஹேட்ஃபீல்டு சண்டையையொட்டி நார்த்தம்பிரியாவில் ஏற்பட்டிருந்த குழப்பமான நிலையைப் பயன்படுத்திக்கொண்டு தங்களின் முன்னோரின் இராஜ்யத்திற்கு ஆஸ்வால்டும் ஆஸ்வியும

திரும்பி அரசுரிமையைப் பெற்றனர். இவர்களுடன் செயின்ட் அயடான் **(St. Aidan)** என்ற புனிதத் துறவி ஒருவரும் வந்திருந் தார்.

ஆஸ்வால்டு, நார்த்தம்பிரியாவின் அரசராக முடிசூட்டிக் கொண்டு, வேல்ஸ் நாட்டுப் படையெடுப்பாளர்களைக் கி.பி. 634ஆம் ஆண்டில் நடைபெற்ற ஹேவன்ஃபீல்டு **(Havenfield)** போர்க் களத்தில் தோற்கடித்த அதே நேரத்தில், செயின்ட் அயடான், லின்டிஸ்ஃபார்னில் **(Lindisfarne)** தம் சமய கேந்திரத்தை அமைத்துக்கொண்டு சீரிய மதப்பணியில் இறங்கினர்.

அயிடான், சமயத்திற்காகத் தூய வாழ்வு வாழ்ந்த பெரியார் அறிவும் ஆன்மீகமும் பெற்றிருந்த இவர், பலருக்கு வழிகாட்டியாக இருந்தார். தமக்குக் கெடுதல் செய்தோரையும் மன்னித்துக் காக்கும்படி ஆண்டவனை இறைஞ்சிய பெருமகனர். இவர் நார்த்தம்பிரியாவின் உயர்விலும் தாழ்விலும் பங்குகொண்டு, அங்குக் கிறித்துவ சமயத்தைப் பரப்ப நினைத்தவர். அரசரும் அவரைச் சார்ந்தோரும் பிரபுக்களும் கிறித்துவரானதால் மட்டும் அயிடான் நிம்மதி பெறவில்லை. நிலைமைக்கேற்ப அப் போதைக்கப்போது ஒரு சமயத்தை விட்டு இன்னொரு சமயத்தைத் தழுவும் பேதைமை உள்ளம் கொண்ட சாதாரண குடிமக்களையும், நிரந்தரமாகக் கிறித்துவ சமயத்தைத் தழுவச் செய்ய வேண்டு மென்பதே இப் பெரியாரின் குறிக்கோளாக இருந்தது, அயடா னின் அரும் முயற்சிகளால் மீண்டும் இம் மதம் நார்த்தம்பிரியாவில் பரவிய போதிலும், மெர்சியா மன்னரான பெண்டா அங்குக் கோலோச்சிய வரை எதிர்பார்த்த பலனைக் கிறித்துவ பாதிரியார் கள் பெறமுடியாமலிருந்தது. இதற்கிடையே கி.பி. 642 ஆம் ஆண் டில், பெண்டா மீண்டும் நார்த்தம்பிரியாவின்மீது படையெடுத்து வந்து, ஆஸ்வால்டை மேஸர்ஃபீல்ட் **(Maserfield)** போர்க்களத்தில் கொல்ல, நார்த்தம்பிரியாவில் மீண்டும் குழப்பம் ஏற்பட்டது. இருப்பினும், நார்த்தம்பிரியாவில் தற்போது அரசுரிமையைப் பெற்ற ஆஸ்வி, தம் தமையனர் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து செய்து வரப் பாதிரியார்களின் சமய திருப்பணியும் தொடர்ந்து நீடித்து நடந்தது. அயடான் என்ற மத பெரியாரும் சற்றும் அயராது நாடெங்கிலும் சுற்றித் திரிந்து கிறித்துவ சமயத்தின் சிறப்புகளைப் பறைசாற்றி வந்தார். கி.பி. 651 ஆம் ஆண்டில் இப் பெரியார் காலமானபோது இச் சமயம் நார்த்தம் பிரியா முழுவதுமாக வியாபித்திருந்தது.

(லாமர் மூர் குன்றுகளில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த குடியானவரான கத்பர்ட் என்பவர், அயிடானின் ஆவியைத் தேவ தூதர்கள் விண்ணுலகத்திற்குக் கொண்டு சென்றதைக் கண்டதாகவும் அதனால் மனம்மாறி மெல்ரோஸ் மடாலயத்தில் துறவு பூண்டதாகவும் சொல்லப்படுகிறது. இவரே பிற்காலத்தில் செயின்ட் கத்பர்ட் என்று புகழ் பெற்று விளங்கினார்.)

பிரிட்டனின் இப் பகுதியில் கிறித்துவ சமயம் மேன்மேலும் பரவுவதற்குப் பெருந்தடையாக இருந்த மெர்சியா மன்னரான பெண்டா, கி.பி. 655-ல் ஆஸ்வாலினால் வின்வீட்ஃபீல்ட் (Winweed field) சண்டையில் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டதும் இம் மதம் இந் நாட்டில் விரைவாகப் பரவுவதற்கான திருப்புமுனையாக அமைந்தது.

நார்த்தம்பிரியாவில் கிறித்துவ சமயத்தைப் பரப்பிய பெரியார்களுள் செயின்ட் ஹில்டா (St. Hilda) என்ற அம்மையாரும் ஒருவர். இவர் பாலினஸ் என்பவரால் ஞான நீராட்டுச் செய்விக்கப்பட்டு அயிடானால் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவராவர். பிஷப்புகளின் உறைவிடமாகவும், இலக்கியப் பள்ளியாகவும் திகழ்ந்த மடாலயம் ஒன்றை இவ் வம்மையார் விட்பியில் (Whitby) நிறுவினார். இவரது சீடரான காட்மன் (Cadmon) கடவுளின் ஆதிப்படைப்பைப்பற்றிப் பல கவிதைகள் இயற்றி மக்களைப் பக்தியில் பரவசமடையச் செய்தார். இவ்வாறு நார்த்தம்பிரியாவில் வளர்ந்த கிறித்துவ சமயம், பிரிட்டனின் மற்றப் பாகங்களுக்கும் பரவலாயிற்று.

**இங்கிலாந்து முழுதும் கிறித்துவ மதம் பரவுதல்**

அயர்லாந்துத் துறவிகள் வில்ட்ஷயர், சிசெஸ்டர் முதலான இடங்களில் கிறித்துவ மதத்தைப் பரப்பினர். ஃபெலிக்ஸ் (Felix) என்பவர், கிழக்கு ஆங்கிலியாவில் இச் சமயத்தை ஊன்றச் செய்தார். பெண்டா கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, மெர்சியாவில் வாரிசுரிமையைப் பெற்றிருந்த உல்ஃபிரி (Wolfere) என்ற மன்னரும் மதம் மாறியதைத் தொடர்ந்து, கிறித்துவம் இங்கும் பரவத் தொடங்கியது. செட் (Cedd), வில்ஃபிரட் (Wilfred) என்ற பாதிரியார்கள், இச் சமயத்தை எஸ்ஸெக்ஸிலும், சஸ்ஸெக்ஸிலும் பரப்பினர். சுருக்கமாகக் கூறின், இங்கிலாந்து முழுவதும் கிறித்துவ மதம் பரவத் தொடங்கியது. இம் மதமாற்றங்கள் இரு வகைப் பாதிரியார்களால் நடத்தப்பட்டன.

இங்கிலாந்தின் வடபாகம், மத்தியப்பகுதி, எஸ்ஸெக்ஸ் ஆகிய பகுதிகளில் ஐரிஷ்-வேல்ஸ் கிறித்துவ திருச்சபைக்குக் கட்டுப்பட்ட

கெல்ட்டிய பாதிரியார்களும் வெஸ்ஸெக்ஸ் உள்பட ஏனைய பகுதிகளில் இருந்த போப்பாண்டவருக்குக் கட்டுப்பட்ட ரோமானியப் பாதிரியார்களும் இம் மதமாற்றப் பணியில் உற்சாகத்துடனும் உறுதியுடனும் ஈடுபட்டிருந்தனர். இப் பணியில் கெல்ட்டிய திருச்சபையின் சேவையே சாலச் சிறந்ததாக அமைந்தது. இதன் விளைவாக, இவ்விரு சமயப் பிரிவினருக்குமிடையே கருத்து வேறுபாடுகள் போட்டி மனப்பான்மை ஏற்பட இம் மோதல்களைத் தீர்க்கவேண்டிய அவசியம் கி.பி. 664ஆம் ஆண்டில் எழுந்தது.

**விட்பி திருச்சபைக் கூட்டம் கி.பி. 664 (Synod of Whitby):** ஒரே சமயத்தைச் சார்ந்தவர்களாயிருந்தும், சமய போதனைகளில் சச்சரவுகளை வளர்த்துவந்த கெல்ட்டிய-ரோமானியத் திருச்சபையினருக்கிடையே சமரசம் செய்வித்து நிரந்தரச் சமய ஏற்பாட்டைச் செய்வதற்கு நார்த்தம்பிரியாவின் அரசரான ஆஸ்வி முன் வந்தார். அரசரது இம் முயற்சிக்கு ஊக்கம் அளித்து, அக் கூட்டம் விட்பி என்னுமிடத்தில் கூடச் செய்தவர், வில்ஃபிரடு என்ற சமயப் பெரியாரே ஆவார்.

கி.பி. 653ஆம் ஆண்டில் போப்பாண்டவரின் இருப்பிடமான ரோம் நகருக்குச் சென்று, கிறித்துவ சமய கையெழுத்துப் பிரதிகளையும் சமய சின்னங்களையும் பெனிடிக்டைனின் சீரிய சமய விதி முறைகளையும் இங்கிலாந்துக்குக் கொண்டு வந்திருந்த பெனிடிக்ட் பிஷ்காப் (Benedict Biscop) என்பவரோடு சேர்ந்து கிறித்துவ சமயத்திற்கு அரும்பணிகள் புரிந்திருந்தவரே வில்ஃபிரடு ஆவார். சமய ஆதிக்கத்திற்குத் தம் உடல், பொருள், ஆவி அத்தனையும் அர்ப்பணிக்கச் சித்தமாக இருந்த வில்ஃபிரடு, ரோமானியப் பாதிரியார்களின் கட்சிக்குத் தலைவராகவுமிருந்தார்.

திருச்சபையில் இரு பிரிவுப் பாதிரியார்களிடையே இருந்து வந்த சமய கருத்து வேறுபாடுகளைக் கூடிப் பேசித் தீர்த்துக் கொள்ள இங்கிலாந்திலுள்ள எல்லா மத குருமார்களையும் விட்பி என்ற இடத்தில் கூட்டப்பட்ட திருச்சபைக் கூட்டத்திற்கு வரும்படி ஆஸ்வி அழைப்பு அனுப்பினர். கூட்டத்திற்கு வந்திருந்த குருமார்களிடையே நீண்ட விவாதம் தொடர்ந்தது. கெல்ட் பாதிரியார்களின் சார்பில் கோல்மன் (Colman) என்பவரும், ரோமானியப் பாதிரியர்களின் சார்பில் வில்ஃபிரடும் மன்னர் ஆஸ்வியின் முன் தத்தம் முறைகளைப்பற்றி வாதம் செய்தனர். இவ்விரு முறைகளுக்கும் அதிக வேறுபாடுகள் இல்லையெனினும், ஈஸ்டர் (Easter) விழா கொண்டாடுதல், தலைமயிர் மழித்தல் போன்ற சில பழக்கங்களிலேயே சற்று மாறுதல்கள் இருந்தன. தம்

முன்னோர் பின்பற்றிய முறைகளை மாற்றலாகாதெனக் கோல்மன் வாதித்தார். அம் முறைகளைப் பின்பற்றுவதன்மூலம் 'பிரிட்டானியர்கள் ரோமைப் பின்பற்றும் மற்ற ஐரோப்பிய நாடுகளின் திருச்சபைகளிலிருந்து தனித்து ஒதுங்கி நிற்கின்றனர் என்று வில்ஃபிரடு எதிர்வாதம் செய்தார். வாதப் பிரதிவாதங்களைக் கேட்டு வந்த ஆஸ்வி, இறுதியில் தம் முடிவை எடுத்துக் கூறி, எல்லோரையும் ரோமாபுரித் திருச்சபையின் முறையை ஒப்புக்கொள்ளும்படி செய்தார். இத் தீர்மானத்தினால் சாக்சானியப் படையெடுப்பிற்குப் பின்னர், தான் அடைந்திருந்த தனித்த நிலையிலிருந்து இங்கிலாந்துவிலகி, ஐரோப்பியக் கிறித்துவ அரசுகளில் ஒன்றாக மாறியது. இந்த விட்பி திருச்சபைக் கூட்டத்தின் முயற்சியால், கிறித்துவ சமயத்தாரிடையே நிலவிய கருத்து வேறுபாடுகள் மறைந்து, இங்கிலாந்தில் இச் சமயம் தடையின்றி வளர்ச்சியுற நல்வாய்ப்பு ஏற்பட்டது.

**தியோடரின் வருகை (கி. பி. 669):** விட்பி திருச்சபைக் கூட்டம் முடிவுற்றிருந்தாலும் சில பழைய மரபுகள் தொடர்ந்து இருந்து வந்தன. இந் நிலையை மாற்றி அமைக்கவும், பிரிட்டனுக்கென்று ஒரு தலைமை பிஷப்பை அமர்த்தவேண்டுமென நார்த்தம்பிரியா, கென்ட் அரசுகள் கேட்டுக்கொண்டதற்கு இணங்கவும், அப்போது போப்பாண்டவராக இருந்த விடாலியன் (Vitalian) என்பவர், ஓர் ஆங்கிலக் குடிமகனைக் கான்டர்பரியின் தலைமைப் பிஷப்பாக (Arch Bishop) ஆக்கத் தீர்மானித்தார். சமய நிர்வாகத்தில் பயிற்சி பெறுவதற்காக ரோம் நகருக்கு வந்திருந்த அந்த ஆங்கிலேயர் நோய் கண்டு இறந்துவிட்டார். அதனால், போப்பாண்டவர் விடாலியன், கிரேக்க நாட்டின் டார்ஸஸ் (Tarsus) பகுதியைச் சேர்ந்த தியோடர் (Theodore) என்பவரைக் குருமார்களுக்குரிய சகல முறைகளிலும் பயிற்றுவித்துத் தேர்ச்சி பெறச் செய்து, இங்கிலாந்துக்குச் சமய தலைமைக் குருவாக அனுப்பி வைத்தார்.

இங்கிலாந்தில் திருச்சபை அதிகாரங்கள் அனைத்தையும் மையப்படுத்தி, திருச்சபைச் செயல்களில் ஒற்றுமை முறையையும், ஒருமித்த நோக்கையும் உருவாக்கவே தியோடர் கி.பி. 669 ஆம் ஆண்டில் அனுப்பப்பட்டிருந்தார். கான்ட்டர்பரியின் தலைமைக் குருவாக இங்கிலாந்தைவந்தடைந்த தியோடர், அப்போது எழுபது வயதைக் கடந்தவராயிருந்தபோதிலும், சுறுசுறுப்பும் உற்சாகமும் தன்னம்பிக்கையும், கொண்டவராயிருந்தார். கி. பி. 669 முதல் 690 வரையில் அதாவது, இருபத்தோராண்டுக் காலம் தியோடர், தம் சமயத் திருப்பணிகளை அமைதியாகவும் உறுதியாகவும் சீரிய முறையிலும் செய்து வந்தார். அறிவும், ஆற்றலும் கொண்ட

ஹாட்ரியன் (Hadrian) என்ற ஆப்பிரிக்க மடத் தலைவரும் இங்கிலாந்திலிருந்த பெனடிக்ட் பிஸ்காப் என்பவரும் ஆர்ச் பிஷப்பான தியோடருக்குப் பெரும் உதவி செய்தனர்.

நெறிமுறை தவறாது சமயத் தொண்டினை ஆற்ற நினைத்த தியோடர், நாடெல்லாம் சுற்றி முடிமன்னர்களையும் பிரபுக்களையும் சாதாரணக் குடிமக்களையும் கிறித்துவ மதத்தில் சேரச் செய்தார்.

கான்ட்டர்பரி கோயில், கென்ட்டிற்குமட்டும் உரிய கோயிலாக இருந்த நிலைமையை மாற்றி, பிரிட்டனுக்கே தலைமைத் திருக்கோயிலாக இருக்குமாறு அமைத்தார். நாட்டைப்பதினைந்து சமயப் பிரிவுகளாகப் பிரித்து ராச்செஸ்டர், லண்டன், எல்ஹாம், டன்விச், யார்க், விண்டிஸ்ஃபார்னே, ஹெக்ஸ்ஹாம், விண்ட்ஸே, லீஸ்டர், டார்செஸ்டர், ஹெரிஃபோர்ட், வொர்செஸ்டர் ஆகிய பகுதிகளுக்குத்தனித்தனிப் பிஷப்புகளை நியமித்தார். ஒருவரது அதிகார வரம்பில் இன்னொரு பிஷப் தலையிடாமலிருக்கச் செய்து கிறித்துவ சமய ஆட்சியை ஒருமைப்படுத்தினார். அனைத்துப் பிஷப்புகளும் கான்ட்டர்பரியின் தலைமைப் பிஷப்புக்குப் பணிந்து நடக்கவேண்டுமென வற்புறுத்திச் சமய ஆட்சியை ஒழுங்குபடுத்தினார்.

குருமார்களுக்காகச் சமய பள்ளியும், சேவைக்கு இருப்பிடமான மடாலயங்களும் உருவாக்கப்பட்டன. இம் மடாலயங்கள் ஆபட் (Abbot) எனப்பட்ட மடத் தலைவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டன. சிறு திருச்சபைகளில் நியமனம் பெற்றிருந்த பாதியார்கள், பிஷப்புகளின் பொறுப்பிலும் பிஷப்புகள், ஆர்ச் பிஷப்பின் பொறுப்பிலும் இருந்து வர, அனைவரும் போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டார்கள். இதனால் பிரிட்டனில் இருந்த குருமார்களிடையே தாங்கள் கென்ட்டைச் சேர்ந்தவர்களென்றோ, நார்த்தம்பிரியாவைச் சேர்ந்தவர்களென்றோ, வெஸ்ஸெக்சைச் சேர்ந்தவர்களென்றோ கருதாமல், தாம் அத்தனைபேரும் ஓர் ஐயக்கியப்பட்ட திருச்சபைக்குக் கீழ்ப்பட்டவர்களென்ற எண்ணமே அவர்களிடை நிலவியது.

மேலும், இங்கிலாந்திலுள்ள அத்தனைக் குருமார்களும் அவ்வப்போது கூடிப் பேசுவதற்கேற்பத் தேசியக் குழு முறையையும் ஏற்படுத்திய தியோடர் பெருமகனார், இங்கிலாந்தைச் சமயத் துறையில் ஒற்றுமையடையச் செய்திருந்தார்.

**பிரிட்டனில் கிறுத்துவம் பலமடைதல்:** தியோடர் காலமடைந்த போதிலும், அவரால் தொடங்கப்பட்ட சமயப் பணி தொடர்ந்து நடந்து வந்தது.

சமயச் சேவைகளுக்கும், கல்வித் தொண்டுக்கும், எளியோர்க்கு உதவுவதற்கும் நாட்டின் பல பாகங்களில் மடாலயங்கள் (Monasteries) கட்டப்பட்டன. மெல்ரோஸ் (Melrose), ஜெரோ (Jarrow), ஹெக்சாம் (Hexxam), ரிப்பன் (Rippon), விட்பி (Whitby), லிண்டிஸ்பார்னே (Lindisfarne) போன்ற மடாலயங்கள் அவற்றுள் சில.

நன்கொடையாக அளிக்கப்பட்ட நிலங்களில் திருக்கோயில்கள் பலவும் கட்டப்பட்டன. பாதுகாப்பரணும் குறுகிய சாளரங்களும் சிறு கோபுரங்களும் கொண்டிருந்த இந்தத் திருக்கோயில்களின் உட்புறச் சுவர்களில் ஏசு பிரானும், அவரது சீடர்களும் செய்த நற்பணிகளெல்லாம் மக்களைக் கவர்வதற்காக ஓவியங்களாகத் தீட்டப்பட்டிருந்தன.

பிரிட்டனின் தேசிய வாழ்வில் இச் சமயம் நன்குவேரூன்ற ஆரம்பித்தது. பிஷப்புகள், மடத்துத் தலைவர்களின் இருப்பிடங்கள் புனித இடங்களாக மக்களால் கருதப்பட்டன. திருச்சபைக்குத் தீர்வையும் குருமார்களுக்குத் தானியமும் கொடுக்க வேண்டுமெனச் சில அரசுகள் சட்டங்களைக்கொண்டு வந்திருந்தன. கடமையை ஒழுங்காகச் செய்து தூய வாழ்க்கையினைச் செவ்வனே நடத்தி வந்த குருமார்களின் வாழ்க்கை எல்லோரையும் கவர்ந்தமையால், இங்கிலாந்தில் கிறித்துவம் சிறப்பான இடத்தைப்பெற்றுவிட்டது.

**திருச்சபையினுல் பிரிட்டனில் ஏற்பட்ட விளைவுகள்:** சமயத் துறையில் பிரிட்டனை ஒருமையடையச் செய்திருந்த கிறித்துவத் திருச்சபை பின்னர், அரசியல் ஐக்கியத்திற்கும் வழிகோலியது. ஒரு தலைமைக் குருவின்கீழ் அடிபணிந்து சமயத்தில் ஒற்றுமையாகப் பணியாற்றும்போது, ஏன் ஒரே அரசின்கீழ், ஒரே சட்டத்திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு வாழக் கூடாதென நாட்டில் நல்லவர்கள் நினைக்க, அதுவே காலப் போக்கில் சிறுசிறு அரசுகளை மறையச்செய்து, வெஸ்ஸெக்ஸின்கீழ் இங்கிலாந்தை ஐக்கியப்படுத்தியது.

முரட்டுக் குணங்களைக் கொண்டு போர் புரிதலிலே மிகுந்த ஆர்வம் காட்டி வந்த ஆங்கிலோ - சாக்சானியர்கள், அதுவரை பெரும் விருந்துகளிலும் காமக்களியாட்டங்களிலும் மதுவருந்துதலிலும் தங்கள் வாழ்நாள்களைக் கழித்து வந்த நிலை மாறி, நன்னடத்தையை மேற்கொண்டு பரம்பொருளை நினைக்கக்கூடிய அமைதியான நாகரிக மக்களாயினர்.

முக்கியமாக, கல்விப்பணியில் இத் திருச்சபை சீரிய பணி யாற்றியது. ஆல்டுஹெல்ம் (Aldhelm) என்பவரது நன்முயற்சி யால், ஷெர்போர்ன்(Sherborne) என்ற விடத்தில் இருந்த மடாலயம், பாமரர்களுக்குக் கிரேக்க, இலத்தீன் மொழியையும், மருத்துவம், வானநூல் முதலியவற்றையும் போதித்தது. இறை வனின் பெருமையில் திளைத்துப் பாடிக், கவிதைக்கு இலக்கணம் வகுத்த கேய்ட்மன் (Caedmen), தம் பக்திப் பாடல்களால் கேட் போரைப் பரவசப்படுத்தி, ஆங்கிலக் கவிதைக்கு ஆக்கம் கொடுத்தார். மதிக்கத்தக்க பெருமை கொண்ட பீட் (Venerable Bede) என்ற பாதிரியார், ஜாரோ (Jarrow) என்னுமிடத்தில் ஒரு சமயப் பள்ளியை அமைத்து, அறுநூறு துறவிகளுக்கு (Monks) கல்வியறிவைப் போதித்தார். இலத்தீன், கிரேக்க மொழிகளில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்த பீட், சிறந்த எழுத்தாள ராதலால், எழுத்துக் கலையைப்பற்றியும் (Penmanship), 'ஆங்கில நாட்டுத் திருச்சபை வரலாறு' என்ற பெரும் நூலையும் இயற்றி யிருந்தார். கிறித்துவ வேத நூலின் பழைய, புதிய ஏற்பாடுகள் இரண்டிற்கும்(Old and New Testaments) உரையும்(Commentary) எழுதி, பீட் ஆங்கில மொழிக்குச் சிறப்பைத் தேடிக் கொடுத்தார். சையின் உல்ப் (Cyne Wulf) என்ற மற்றொரு பாதிரியார் உலகத்தின் தோற்றத்தைப்பற்றியும் இயேசுவின் வாழ்க்கை வரலாற்றைப்பற்றியும் ஆங்கில மொழியில் சமயப் பாடல்களாக இயற்றியிருந்தார்.

கிறித்துவ சமயம் இந் நாட்டில் நிலைத்து நின்றதால், பிரிட்ட னுக்கும் கிறித்துவ ஐரோப்பாவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற் பட்டது. ஆங்கிலோ-சாக்சானியர் படையெடுப்பைத் தொடர்ந்து, பிரிட்டனுக்கு ஏற்பட்டிருந்த தனிநிலை மறைந்தது. ஐரோப்பா விலிருந்தே இம் மதம் இந் நாட்டுக்கு வந்திருந்தபோதிலும், பிரிட்டிஷ் சமயப் பெரியார்கள் காலப் போக்கில் ஐரோப்பியர் களுக்குப் பல அரும்பெரும் சமயத் தத்துவங்களைக் கற்றுக் கொடுத் தனர். பல ஆங்கிலேய சமய தொண்டர்கள் கடல் கடந்து சென்று ஐரோப்பாவில் சமய பிரசாரத்தில் ஈடுபடலாயினர். வில்லி பிரார்டு என்ற ஆங்கிலத் துறவி, ஹாலந்திலுள்ள உட்ரக்ட் (Utrecht) பகுதியில் திருச்சபை நிறுவியதையும், பானிக்பேஸ் என்னும் மற்றொரு பெரியார், ஜெர்மனிக்குச் சென்று பல மடாலயங்களை ஏற்படுத்தியதையும் இரு மேற்கோள்களாகக் காட்டலாம்.

திருச்சபை, இங்கிலாந்தின் நீதி நிர்வாக முறைக்கும் சமய ரீதியிலேயே வடிவம் கொடுத்தது. சாக்சானிய நீதி மன்றங்களில்

பொருமை, வஞ்சகத்தின் காரணமாகத் தண்டிக்கப்பட்டவர்களுக்கு மன்னிப்பு அளித்த திருச்சபை, விரும்பத்தகாத தீய பழக்க வழக்




படம் 4. ஆங்கிலோ—சாக்சானியக் குடியேற்றங்கள்.

கங்களைக் கொண்டவர்களையும் கொடிய குற்றம் புரிந்தோர்களையும் 'பாவிகள்' என்று கண்டனமும் செய்தது. பட்டினியிருத்தல், தியானம், புனிதயாத்திரை போன்ற 'தண்டனைகளும்' அவர்கள் மீது திணிக்கப்பட்டன. திருச்சபையின் செல்வாக்கினால் கவரப் பட்டுக் 'கடுமையான சோதனைகள்' (ordeal) என்ற முறை பின்னர்க் கைவிடப்பட்டது.

விடான் (Witan) என்ற ஆலோசனை சபையில், அரசரோடு அமரும் தகுதியையும் அரசரின் முடிசூட்டு விழாவில் (Coronation) கலந்து கொண்டு விழாவை நடத்தி வைக்கவேண்டிய பெருமை யையும் திருச்சபையினர் பெற்று அரசியலில் சமயத்தைக் கலக் கச் செய்தனர். கி. பி. 960ஆம் ஆண்டில் கான்ட்டர்பரியின் தலைமைக் குருவாக இருந்த டன்ஸ்டன் (Dunstan) பெருங் கல்வி மானாக மட்டுமன்றி, ஆட்சித் துறையில் நிபுணராகவும் இருந்தார். இரண்டு அரசர்களுக்கு ஆலோசனையாளராகவும் இன்னொரு அரசருக்குக் காப்பாளராகவும் (Regent) மற்றோர் அரசருக்கு நிதி பாதுகாவலராகவும் இருந்த டன்ஸ்டன், மேற்சொன்ன கூற் றுக்கு எடுத்துக்காட்டாக விளங்கினார். கி. பி. 1215-ல் மன்ன ரின் எதேச்சாதிகாரத்திற்கு விளக்கம் தந்த 'மகா சாசனம்' (Magna Carta) என்ற உரிமைப் பட்டயத்திற்குத் தூண்டுகோலாக இருந்தவரும் ஸ்டீபன் லாங்டன் (Stephon Langton) என்ற தலை மைக் குருவே ஆவார்.

பெரும் போர் வீரர்கள் இந் நாட்டிற்கு ஆற்றியிருந்த தொண் டினைவிடப் பேராசை, அசூயை, குடும்பப் பாசம் ஆகிய இவற்றுள் எதுவுமில்லாத இப் பாதிரியார்கள் செய்திருந்த பணி சிறப்பாக இருந்தது.

## ஏழு முடியரசுகளின் போராட்டம்
### (The Heptarchy கி.பி. 596-802)

ஆங்கிலோ - சாக்சானியர்களின் படையெடுப்பையொட்டித் தொடக்கத்தில், இங்கிலாந்தில் பத்து அரசுகள் தோன்றிய போதிலும், நாளாவட்டத்தில் நார்த்தம்பிரியா, மெர்ச்சியா, வெஸ்ஸெக்ஸ், கென்ட், ஸஸ்ஸெக்ஸ், கீழ் ஆங்கிலியா, எஸ்ஸெக்ஸ் என்ற ஏழு அரசுகளே நிலைத்து நின்றன. இப் பகுதிகளின் ஒவ் வோர் அரசரும், தம்மையே இங்கிலாந்தின் தலைவரெனக் கூறி வந்தனரேயன்றி, நாடு முழுவதையும் வென்று ஆளும் திறனைப் பெற்றிருக்கவில்லை. 7ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்குமேல் நார்த்தம்பிரியா, மெர்ச்சியா, வெஸ்ஸெக்ஸ் என்ற மூன்று

அரசுகளே இறுதியில் நிலைத்து நின்றன. இப் பெரிய அரசுகளும் தொடக்கத்தில் மற்ற சிற்றரசுகளை அடக்கப் போதுமான பலம் பெற்றிருக்கவில்லை. இவ் வரசுகள், தம்முள் இடையுறாது செய்த போர்களே இத் தலைப்பின் முக்கிய நிகழ்ச்சிகளாக அமைகின்றன.

**கென்ட் (கி.பி. 596-616)**

எதல்பர்ட் என்ற அரசர், தம் ஆட்சியின் வடக்கு எல்லையை ஹம்பர் நதிவரை பரவச் செய்து, மற்ற அரசுகளுக்கு அதிபர் என்று எடுத்துக்காட்டும் வகையில் தம்மை 'பிரெட்வால்டா' (Bretwalda) என அழைத்துக்கொண்டார். பீடு, தமது 'திருச் சபை வரலாறு' என்ற நூலில் ஆங்கிலோ-சாக்சானிய அரசப் பெருந்தலைவர்களை 'பிரெட்வால்டா' என்றே குறிப்பிடுகின்றார். இவ் வரசர் காலத்தில்தான் இங்கிலாந்தில் கிறித்துவ மதத்தை மீண்டும் பரப்ப அகஸ்டினும் அவரது நாற்பது சீடர்களும் வந்திருந்தனர். எஸ்ஸெக்ஸ், கிழக்கு ஆங்கிலியா போன்ற அரசுகள், எதல்பர்டுக்கு அடங்கிய சிற்றரசுகளாக இருந்தன. இம் மன்னர், கி.பி. 616ஆம் ஆண்டில் காலமடையவே, இத்துடன் கென்ட் அரசின் ஆதிக்கம் மறைந்தது. கிறித்துவ சமயத்திற்கு முதன் முதல் ஊக்கம் அளித்தவர் என்ற பெருமையோடு இங்கிலாந்தில் பேராதிக்கம் பெற்ற முதல் அரசர் என்ற மற்றொரு சிறப்பையும் எதல்பர்ட் பெறுகிறார்.

தொடக்க காலத்திலிருந்தே இங்கிலாந்தின் தென்கிழக்குப் பகுதிகளில் அமைக்கப்பட்டிருந்த கிழக்கு ஆங்கிலியா, எஸ்ஸெக்ஸ், சஸ்ஸெக்ஸ் போன்ற அரசுகள் பலமற்று விளங்கின, வளமான பகுதியில் எந்தவொரு போர்ப் பயமுமின்றி, வசதியான அமைதியான வாழ்க்கையினைக் கொண்டிருந்த இவ் வரசுகள், நாளாவட்டத்தில் போர்த்திறனை இழந்து நிற்க, வெகு சுலபமாக மற்ற மூன்று பெரும் அரசுகளால் தாக்கப்பட்டுக் கைப்பற்றப்பட்டு விட்டன.

**நார்த்தம்பிரியா (கி. பி. 616 - 685)**

கி. பி. 588ஆம் ஆண்டில் எதல்ரிக் (Ethelric) என்ற மன்னர், பெர்னிசியா, (Bernicia), டியரா (Deira) போன்ற பகுதிகளை இணைத்து நார்த்தம்பிரியா அரசை உருவாக்கியிருந்தார். இவரது மகனான எதல்ஃபிரித் (Ethelfrith) என்பவரே கி.பி. 613ஆம் ஆண்டில் கெல்ட்டுகளைச் செஸ்டர் (Chester) சண்டையில் தோற்கடித்து மேற்கு வேல்சுக்கு விரட்டியிருந்தார். ஆயினும் ,சில ஆண்டு

களுக்குப் பிறகு, எதல்ஃபிரித்தினுல் முன்பு டியராவிலிருந்து விரட்டப்பட்ட தலைவனின் மகனை எட்வின் (Edwin) என்பவரால் எதல்ஃபிரித் கொல்லப்பட்டார்.

நார்த்தம்பிரியாவின் அரசராகப் பட்டம் பெற்ற எட்வின் (கி. பி 617 - 633), தம் ஆட்சியின் முதல் பத்தாண்டுகளில் பிக்ட்டுகள் என்ற முரட்டு வட இனத்தினரை வென்று போர்த்துக்கு (The Forth) வடக்கே விரட்டினர். தம் வெற்றியைக் குறிக்கும் வகையில் ஸ்காட்லாந்தில் ஒரு கோட்டையைக் கட்ட, அதைச் சுற்றியே வருங்காலத்தில் எடின்பர்க் (Edwin'sburg) என்ற நகரம் உருவாயிற்று. இன்றைய ஸ்காட்லாந்தின் முக்கிய நகரமாக அது விளங்குகிறது. இம் மன்னர், வட இங்கிலாந்தில் தமக்கு எதிர்ப்புக் காட்டிய கெல்ட்டுகளையும் வென்று, யார்க்ஷயர் குன்றுகளுக்கு வடக்கே விரட்டினர். ஐரிஷ் கடலில் இருந்த சில தீவுகளையும் எட்வின் தம் கப்பல் படையினுல் வென்ருர். வடக்கேயும் மேற்கேயும் தம் ஆதிக்கத்தை நிலைநிறுத்திய எட்வின், தம் கவனத்தைத் தென்புறம் திருப்பினர். பலம் பெற்ற எட்வினுக்கு இதனைத் தொடர்ந்து கிழக்கு ஆங்கிலியாவும், மெர்சியாவும் பணிந்தன.

கென்ட் அரசரான எதல்பர்டின் மகள் எதல்பர்க்காவை (Ethelburga) மணந்து கொண்டதால், கென்டும் அவரது ஆதிக்கத்திற்கு அடங்கியதாகவே இருந்தது (கி.பி. 625). இதுவரையிலும் தம் ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுத்த வெஸ்ஸெக்ஸ் அரசையும் எட்வின் பணிய வைத்தார்.

தாம் கிறித்துவ இளவரசியான எதல்பர்காவை மணந்து கொண்டிருக்க, அப் பெண்ணுடன் நார்த்தம்பிரியாவுக்கு வந்திருந்த பாலினஸ் என்ற சமயப் பெரியவரின் பிரசாரத்தால் எட்வின், கி.பி.632-ல் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தார். எட்வினின் மதமாற்றத்தால் கசப்புணர்ச்சியை அடைந்தோர் இவரது வீழ்ச்சிக்குக் காத்திருந்த வேளையில், கிறித்துவரல்லாத பெண்டா (Penda) என்ற மெர்சியா நாட்டு அரசரும், முன்பு எட்வினுல் தோற்கடிக்கப்பட்ட வேல்ஸ் (கென்ட்) அரசரான காட்வாலனும் (Catvallon) ஹேட்ஃபீல்ட் (Hatfield) சண்டையில் வென்று எட்வினைக் கொன்றனர் (கி. பி. 633).

**நார்த்தம்பிரியா மெர்சியா போர்**

எட்வின் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து மெர்சியாவின் அரசரான பெண்டா, ஏற்கனவே மத்தியப் பகுதி வரை (Midlands)

பரப்பியிருந்த தம் அரசில் கிழக்கு ஆங்கிலியாவையும் இணைத்துக் கொண்டார்.

ஹேட்ஃபீல்ட் சண்டையையொட்டி நார்த்தம்பிரியாவில் குழப்பம் மேலிட்டு நிற்க, முன்பு எட்வினால் கொல்லப்பட்டிருந்த எதல்ஃபிரித்தின் பிள்ளைகளான ஆஸ்வால்டும் **(Oswald)** ஆஸ்வியும் **(Osvy)** இதுவரை அடைக்கல வாழ்க்கை நடத்தி வந்த ஸ்காட்லாந்திலிருந்து திரும்பி நார்த்தம்பிரியாவை அடைந்தனர். தொடர்ந்து ஆஸ்வால்டு, நார்த்தம்பிரியாவுக்கு அரசரானார் (கி.பி. 635).

பெண்டாவின் பலத்தை ஒடுக்க நினைத்த ஆஸ்வால்டு, கி.பி. 642-ல் வெஸ்ஸெக்ஸ் அரசோடு கூட்டுச் சேர்ந்தபோது. பெண்டா மீண்டும் நார்த்தம்பிரியாமீது படையெடுத்தார். தொடர்ந்து நடந்த மேஸர்ஃபீல்ட் (Maserfield) சண்டையில் ஆஸ்வால்டு கொல்லப்பட, மீண்டும் பெண்டாவின் (மெர்சியாவின்) ஆதிக்கமே ஓங்கியது. நார்த்தம்பிரியா இரண்டாக மீண்டும் பெர்னிஷியா—டியரா எனப் பிளவுபடும் நிலைமையிலிருந்த வேளையில் ஆஸ்வி மன்னரானார். தம் தமையனின் கொலைக்குப் பழி தீர்க்கும் வகையிலும் மீண்டும் நார்த்தம்பிரியாவின் ஆதிக்கத்தை வளர்க்கும் நோக்கத்திலும் ஆஸ்வி, கி.பி. 655ஆம் ஆண்டில் பெண்டாவை வின்விட்ஃபீல்டு (Winweedfield) சண்டையில் கொன்றார். கென்ட்டும் சஸ்ஸெக்சும் இவரது ஆட்சிக்கு வந்தது.

ஆஸ்வி, கிறித்துவ சமயத்தில் பற்றுக் கொண்டு, அதன் சமயச் சிக்கல்களைத் தீர்க்க, கி.பி. 664-ல் விட்பி திருச்சபைக் கூட்டத்தை அழைத்திருந்தாரென முன்பே கண்டோம். வருங்காலத்தில் நார்த்தம்பிரியா கிறித்துவ மதத்தின் முக்கிய கேந்திரமாக விளங்கும் அளவுக்கு ஆஸ்வி தன்னாலான தொண்டினைச் செய்திருந்தார். ஏழாவது பிரிட்வால்டா எனத் தம்மை அழைத்துக்கொண்ட ஆஸ்வி, கி.பி. 670-ல் காலமானார்.

**நார்த்தம்பிரியாவின் வீழ்ச்சி:** ஆஸ்வி காலமானதையொட்டி, அடுத்த வாரிசாக எக்ஃபிரித் (Eegfrith) என்பவர், நார்த்தம்பிரியாவிற்கு அரசரானார். ஸ்டிரேத்கிளைடு (Strathclyde), வெல்ஷ் பிரிவினரை வென்று, கம்பிரியாப் (Cumbria) பகுதியை இம் மன்னர் கைப்பற்றி வெற்றி வாகை சூடியிருந்தும், பிக்ட்டுகளுக்கு எதிராக நடத்தப்பட்ட தாக்குதலில் தோல்வியுற்றுக் கி.பி. 685-ல் நெக்டன் மீயர் (Necton Mere) என்னுமிடத்தில் கொல்லப்பட்டார். இவரது மரணத்தைத் தொடர்ந்து, நார்த்தம்

பிரியாவின் வீழ்ச்சிப் படலம் தொடங்கியது. மீண்டும், இவ்வரசு ஆதிக்கம் பெருமலேயே மறைந்தது.

**மெர்சியாவின் ஆதிக்கம் (கி.பி. 685-796)**

வின்விட்ஃபீல்டு சண்டையில் நார்த்தம்பிரியா அரசரான ஆஸ்வியால், மெர்சியாவின் மன்னர் பெண்டா கொல்லப்பட்டார். இதனையடுத்து மெர்சியாவை ஆள ஆஸ்வியால் அனுப்பப் பட்டவர்கள் விரட்டியடிக்கப்பட்டனர். பெண்டாவின் பிள்ளையான உல்ஃப்ஹீர் (Wulfhere) என்பவர், கி.பி. 657-ல் மெர்சியாவை ஆஸ்வியின் அதிகாரத்திலிருந்து மீட்டு ஆட்சியைத் தொடங்கினர். இவரது சகோதரரான எதல்ரெட் என்பவர் (கி.பி. 674-704), ஆட்சியிலிருக்கும்போதுதான் நார்த்தம்பிரியாவின் வீழ்ச்சி தொடங்கியது. எதல்ரெட், வெல்ஷிடமிருந்து ஹெரிஃபோர்டு எனப்படும் பகுதியையும், நார்த்தம்பிரியாவிடமிருந்து லிண்ட்சே (Lindsey) என்ற பகுதியையும் கென்ட் பகுதியையும் வென்று தம் நாடான மெர்சியாவுடன் இணைத்துக் கொண்டார்.

மெர்சியாவின் ஆதிக்கம் கி.பி. 716ஆம் ஆண்டிலிருந்தே தொடங்குகிறது. எதல்பால்டு (Ethelbald) என்பவர், மெர்சியாவின் மன்னராகக் கோலோச்சியபோது (கி. பி. 716-765) இங்கிலாந்தின் மற்ற நாடுகளைவிட, இவ்வரசே சிறந்து விளங்கியது. வெஸ்ஸெக்ஸின் அரசரான ஐனி, (Ine-கி. பி. 688-726) என்பவர், ரோமாபுரிக்குப் புனிதயாத்திரை சென்றிருந்தபோது எதல்பால்ட் அவ் வரசைக் கைப்பற்றிக்கொண்டு விட்டார். சுமார் 20 ஆண்டுக் காலம் வெஸ்ஸெக்ஸ் எதல்பால்டின் ஆட்சியின் கீழிருந்தது. கிழக்கு ஆங்கிலியா, கென்ட், எஸ்ஸெக்ஸ் பகுதிகளும் இம் மன்னருக்கு அடங்கியே இருந்தன. சிதைந்து வந்த நார்த்தம்பிரியாவின் சில பகுதிகளுக்கும் இவரே ஆட்சியாளராக இருந்தார். பெருகிய ஆதிக்கத்தின் காரணமாகப் 'பிரிட்டானிய மன்னர்' என்று எதல்பால்ட் தம்மையழைத்துக் கொண்டார். ஆயினும், சுதந்திர வீறுகொண்டெழுந்த வெஸ்ஸெக்ஸ் தலைவர், இவ் வரசரை கி.பி. 753-ல் பர்வோர்டு (Burford) சண்டையில் தோற்கடித்தார். எதல்பால்ட் ஈவிரக்கமற்ற கொடுங்கோலனாக இருக்க, அவரது அரண்மனை மக்களே அவரைக் கொன்றனர்.

எதல்பால்டுக்கு அடுத்து வந்த ஆஃபா (Offa, கி.பி. 757-796) காலத்திலேயே மெர்சியாவின் ஆதிக்கம் மேலும் ஓங்கியது. வெஸ்ஸெக்ஸ், கிழக்கு ஆங்கிலியா, கென்ட், எஸ்ஸெக்ஸ் பகுதிகளை வென்று, தம் அரசுடன் இணைத்துக் கொண்ட ஆஃபா, தம்

எல்லையைத் தேம்ஸ் நதி வரையில் பரப்பினர். வேல்ஸ் மன்னன் (கெல்ட்டுகள்), தங்கள் மலைநாட்டை விட்டு வெளியேறிக் கிழக்குச் சமவெளிகளைத் தாக்காமல் தடுக்கும்பொருட்டு நீண்ட பெருஞ் சுவர் ஒன்றை ஆஃபா கட்டுவித்தார், 'டீ' (Dee) ஆற்றின் முகத் துவாரத்திலிருந்து 'வை' (Wye) ஆற்றின் முகத்துவாரம் வரை கட்டப்பட்ட அம் மதிலுக்கு, 'ஆஃபாவின் அணை' (Offa's dyke) எனப் பெயரேற்பட்டது. கடல் மட்டத்திற்கு ஆயிரம் அடி மேலிருந்த இம் மதில் நூற்றிருபது மைல் நீளத்திற்கிருந்தது. இம் மதிலில் மேற்குத் திசையை நோக்கிக் கட்டப்பட்ட பல கோட்டைகளும் இருந்தன.

ஹம்பர் ஆற்றுக்குத் தெற்கேயுள்ள இங்கிலாந்துப் பகுதி முழுவதற்கும், ஆஃபா அரசராக இருந்தாரென்று பீடு, தம் வரலாற்று நூலில் குறிப்பிடுகிறார். தாம் வென்று அடிமைப்படுத்திய அரசுகளை மெர்சியாவுடன் நெருக்கமாக இணைக்க அவ் வரசுகளைத் தம் நெருங்கிய உறவினர்களின் ஆளுகையின்கீழ் இவர் கொணர்ந்தார். இவர் காலத்திய போப்பாண்டவரான ஹாட்ரியன் என்பவர், ஆஃபாவை 'ஆங்கில மன்னர்'ரென்றே (Rex Anglorum) கடிதங்களில் குறிப்பிட்டிருக்கின்றார். மகாசார்லஸ் எனப்பட்ட சார்லிமேன் (Emperor Charlemagne) என்ற (ஃபிரான்ஸ்) ஃபிராங்கிய (Frank) அரசருடன் ஆஃபா கடிதப் போக்குவரத்து வைத்திருந்தது, இம் மன்னரின் பெருமையை இன்னும் அதிகரித்தது. சட்டத்தொகுப்பு ஒன்றை வெளியிட்டும், பொற்காசு அச்சடித்தும் இவர் தம் சிறப்பை அதிகரித்துக் கொண்டார்.

கிறித்துவ சமயத்தின் நன்மதிப்புத்தம் ஆட்சியை வலுப்படுத்த உதவும் என உணர்ந்திருந்த ஆஃபா, செயின்ட்ஆல்பன் (St.Alban) கோயிலுக்கு நிலங்களை மானியமாக அளித்தார். போப்பாண்டவரான ஹாட்ரியனைக் கட்டாயப்படுத்தி, லிச்ஃபீல்டுக்கு(Lichfield) ஓர் ஆர்ச் பிஷப்பையும் இம் மன்னர் தருவித்ததிலிருந்து, ஆஃபாவின் செல்வாக்கை உணரலாம்.

மெர்சியாவின் ஆதிக்க உயர்வுக்குக் காரணமான ஆஃபாவும் ஒரு கொடுங்கோலராக ஆட்சி செய்து கி.பி. 796-ல் காலமானார். 'ஆஃபாவின் கொடுஞ் செயல்கள் அவரது வமிசத்தினரையும் தொடரும்' என்ற சாபக்கேட்டின்படி, அடுத்து வாரிசுரிமை பெற்றிருந்த ஆஃபாவின் மகனை சென்உல்ப் (Cenwulf), சில மாதங்களிலேயே இறக்க, மெர்சியா அழிவுறத்தொடங்கியது.

**வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம்**

**மேலைச் சாக்சானிய வெஸ்ஸெக்ஸ் மன்னர்கள்**
(கி.பி. 802 — 899)

எக்பெர்ட்
(802—839)
↓
எதல் உல்ஃப்
839—858
↓

| எதல்பால்டு | எதல்பெர்ட் | முதலாம் எதல்ரெட் | மகா ஆல்பிரட் |
|---|---|---|---|
| (858 — 860) | (860 — 866) | (866 — 871) | (871 — 899) |

கி. பி. 577ஆம் ஆண்டில் வெல்ஷ் கெல்ட்டுகளை டியோரம் (**Deorham**) சண்டையில் வென்று கிளௌசெஸ்டர் (**Glowcester**). சிரன்செஸ்டர் (**Cirencester**) போன்ற பகுதிகளையும் கைப்பற்றி, சீவ்லின் (**Ceawlin**) என்ற மேலைச் சாக்சானிய (**Wessex**) மன்னர், தம் அரசின் ஆதிக்கத்தை ஓரளவு பரப்பியிருந்தார். ஆயினும் அச் சமயத்தில் நார்த்தம்பிரியா மிகவும் பலம் பெற்றிருந்ததால், வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம் எடுபடவில்லை.

கி. பி. 688-720 கால அளவில் ஐனி (**Ine**) என்ற அரசரின் காலத்தில் வெஸ்ஸெக்ஸ் அரசு, தன் ஆதிக்கத்தைச் சாமர்செட், சஸ்ஸெக்ஸ், கென்ட் முதலிய சிற்றரசுகள்மீது திணித்திருந்தது. ஆயினும், எதில்பால்டு (**Ethelbald**) என்ற மெர்சியா மன்னர், கிறித்துவரான ஐனி ரோமாபுரிக்குப் புனிதயாத்திரை சென்றிருந்தபோது வெஸ்ஸெக்ஸைத் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டார்.

கி. பி. 753-ல் ஒரு வெஸ்ஸெக்ஸ் தலைவன் எதல்பால்டை பர்ஃபோர்டு சண்டையில் தோற்கடித்து, அதன் சுதந்திரத்தை மீட்டிருந்தபோதும், கி. பி. 802ஆம் ஆண்டு வரையில் வெஸ்ஸெக்ஸ் ஆதிக்கம் பெறமுடியாமலிருந்தது. எக்பர்ட் (**Egbert**) என்ற அரசன் காலத்திலேயே வெஸ்ஸெக்ஸ் இங்கிலாந்து வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றது.)

**எக்பெர்ட்**

ஆஃபா என்ற மெர்சியா மன்னரின் காலத்தில் இங்கிலாந்திலிருந்து விரட்டப்பட்ட எக்பர்ட், ஐரோப்பாவில் பேராதிக்கம் பெற்றிருந்த சார்லிமேன் என்ற பெருமன்னரின் அரசவையில்

அடைக்கலம் புகுந்தார். எக்பர்ட் இங்கிருந்த காலத்திலேயே வீரத்திறனும் கட்டுப்பாடுள்ள அரசின் மூலமாகவும் நாட்டில் ஒருமை நிலையைப் பெறமுடியுமென்பதை உணர்ந்தார். ஆஃபா காலமானதையொட்டி, மெர்சியாவில் குழப்பம் மேலிட, அச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு எக்பர்ட் தம் சொந்த நாடான வெஸ்ஸெக்சை அடைந்தார்.

எக்பெர்ட் (கி. பி. 802-839), வெஸ்ஸெக்ஸின் மன்னராகப் பதவியேற்ற காலத்திலிருந்தே தம் நாட்டுக்கு உயர்நிலை கொடுக்க முனைந்தார். கார்ன்வால் பகுதியிலிருந்த கெல்ட்டுகளை ஒடுக்கிச் சில வெற்றிகளைப் பெற்றார். கி. பி. 825-ல் எலண்டன் (**Ellandun**) என்ற இடத்தில் மெர்சியா மன்னரைப் போரிட்டுச் சிறைப்படுத்தி அந் நாட்டையும் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொணர்ந்தார். இதைத் தொடர்ந்து சஸ்ஸெக்ஸ், கென்ட், எஸ்ஸெக்ஸ், கிழக்கு ஆங்கிலியா போன்ற நாடுகளும் எக்பர்டின் மேலாதிக்கத்திற்கு உடன்பட்டன. தெற்கு வேல்ஸ் பகுதியையும் வென்றிருந்த எக்பர்ட் நார்த்தம்பிரியாவுடனும் போரிட்டு அந் நாட்டை அடக்கி வைத்திருந்தார். லண்டன் நகரைத் தம் தலைநகராக்கிக் கொண்டு எக்பர்ட் பொற்காசு களையும் வெளியிட்டார்.

எக்பர்ட்டின் காலத்தில் இங்கிலாந்து முழுவதுமே வெஸ் ஸெக்ஸ் ஆதிக்கத்கத்தின்கீழிருந்தது. தம்மைப் பிரிட்டானிய அரசர் என்றே எக்பர்ட் அழைத்துக் கொண்டார். சாதகமான சூழ்நிலையில் வெஸ்ஸெக்ஸ் அரசுக்குப் புத்துணர்வு கொடுத் திருந்த இவரது கடைசிக் காலத்தில் 'வைக்கிங்குகள்' (**Vikings**) என அழைக்கப்பட்ட கடற்கொள்ளைக் கூட்டத்தார் நாட்டின் கரையோரங்களைத் தாக்கத் தொடங்கினர். பிளிமவுத்தருகே (**Plymouth**) அக் கொள்ளையர்களை எக்பர்ட் ஹிங்ஸ்டன்டவுன் (**Hingstondown**) என்னுமிடத்தில் தோற்கடித்து நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்றி இருந்தார்.

கி. பி. 839ஆம் ஆண்டில் இம் மன்னர் இறந்தபோது, வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம் ஓங்கி வளர்ந்திருந்தது. ஓங்கி வளர ஆரம்பித்த இவ்வாதிக்கத்தை மையமாக வைத்துச் சில ஆண்டு களுக்குள்ளாக வெஸ்ஸெக்ஸ், மேலும் பலம் பெற்று வைக்கிங்கு களின் தாக்குதல்களுக்கு ஈடு கொடுக்கக்கூடத் தகுதியைப் பெற்றது.

**வெஸ்ஸெக்ஸ் – வைக்கிங்குகள் (டேனியர்கள்) போராட்டம்:** வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கத்தின்கீழ் இங்கிலாந்து ஐக்கிய மடைந்துவந்த கட்டத்தில் ஸ்காண்டிநேவியா, டென்மார்க் போன்ற வடமேற்கு ஐரோப்பியப் பகுதிகளிலிருந்த வைக்கிங் குகள் (Vikings) என்று அழைக்கப்பட்ட கொடூரக் குணங் கொண்ட கடலோடிகள், பெருவாரியாக இங்கிலாந்தின்மீது படையெடுத்தனர்.

எக்பர்ட் அரசரின் இறுதிக் காலத்தில் தொடங்கிய போராட்டம் புகழ் பெற்ற மகா ஆல்ஃபிரட் (Alfred) காலம் வரை தொடர்ந்தது.

**வைக்கிங்குகள்:** 'வைக்கிங்கு' என்னும் சொல்லிற்கு 'வீரர்' (Warrier) என்று பொருள் தரப்படுகிறது. ஸ்காண்டிநேவியா வின் கடற்கழிமுகத்தைச் (Cneek) சார்ந்த இந்த அநாகரிக மக்க ளினம், டென்மார்க் (Denmark) நாட்டில் நிலையாகச் சில காலம் வாழ்ந்தமையால் டேனியர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

ஸ்காண்டிநேவியாவின் (நார்வே) கடற்கழிகளின் (Fionds) ஓரமாகக் குடியிருப்புகளை அமைத்திருந்த 'வைக்கிங்குகள்', மீன் பிடிப்போர்களாகவும் கடற்கொள்ளைக்காரர்களாகவும் மலைச் சரிவுகளில் விவசாயம் செய்பவர்களாகவும் இருந்து வந்தனர். அந் நாட்டின் வானிலையால் தேவையான உணவுப் பொருள்கள் கிடைக்காமற்போயிருந்த வேளையில், பஞ்சமும் பட்டினியும் தோன்றியபோது நிலவுடைமை இல்லாத இளைஞர்கள், பிற ருக்கு அடிமைப்பட்டு வாழ விரும்பாமலும் பட்டினியால் செத்து மடியத் தயாராக இல்லாமலும் இருந்த காரணத்தால், அவர்கள் புதிய இடங்களுக்குப் போகலாயினர். எட்டாம் நூற்றூண்டின் தொடக்கத்திலேயே வைக்கிங்குகள் பால்டிக் பகுதியான (Baltic) டென்மார்க்கைக் கடல் வழியாக அடைந்து, அங்குக் குடி யிருந்த ஆங்கிலிகளை விரட்டி நிலையான வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். எட்டாம் நூற்றூண்டின் இறுதியில் புனிதரோமப் பேரரசரான (Holy Roman Emperor) சார்லிமேன், கிறிற்துவ மதத்தைப் பரப்புவதற்காக டென்மார்க்கின் தெற்கு எல்லைப் பகுதிவரை படையெடுத்து வந்து, டென்மார்க்கில் வாழ்ந்த வைக்கிங்குகளைப் பணிய வைக்க முயன்றூர். இதனல் பெருங் கலக்கமுற்ற டேனியர் (வைக்கிங்குகள்), பழிவாங்கும் உணர்ச் சியில் கிறித்துவ மதம் பரவியிருந்த பிரிட்டன்மீது படையெடுக்க

முனைந்தனர். செல்வம் நிரம்பியிருந்த பிரிட்டனின் மடாலயங் களும் அரசுகளுக்கிடையே அங்கு நடந்து வந்த ஆதிக்கப் போர் களும் டேனியர்களின் படையெடுப்புக்குத் தூண்டுதலாக அமைந்தன.

கிறித்துவ சமயத்தைத் தழுவி இராதவர்களாகவும், வொடென் (Voden), தார் (Thar) போன்ற பழங்கடவுள்களை வழிபட்டோர் களாகவும் கொடுமை உள்ளம் கொண்டோர்களாகவும் கொள்ளை யடிப்பதிலும், போர் செய்வதிலும் பெரும் விருப்பம் உடையவர் களாகவும் இருந்த வைக்கிங்குகள், எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் முதன்முதலாகப் பிரிட்டனின் கடற்கரையோரத்தை அடைந்தனர்.

வெஸ்ஸெக்ஸின் அரசர் எக்பர்ட் காலத்திற்கு முன்பே, கி.பி. 800ஆம் ஆண்டில் இந் நாட்டின் கடற்கரையோரத்தில் மூன்று நீண்ட படகுகள் வந்து சேர்ந்தன. ஒவ்வொரு படகும் அதுவரை யாரும் கண்டிராத அளவு முப்பத்திரண்டு பட கோட்டும் துடுப்புகளையும் பெரிய பாய் மரத்தையும் கொண் டிருந்தது. இப் படகுகளில் வந்திறங்கிய முந்நூறு வீரர்கள் மஞ்சள் நிறத் தலைமுடியைக் கொண்டிருந்தனர். கைகளிலே ஒளிரும் வாளையும் உடலினைக் காக்க இரும்புக் கவசத்தையும் தலையில் கொம்புகளைக் கொண்ட அழகிய தொப்பியையும் இடையில் பலவகை அடையாளங்கள் பொறிக்கப்பட்ட வண்ணக் கேடயங்களையும் கொண்டிருந்தனர். வைக்கிங்குகளை முதன் முதலாகக் கண்ட கரையோரம் வாழ்ந்த மக்கள், அந்நிய நாட்டு வியாபாரிகள் என நினைத்தனர். வேற்று நாட்டு வணிகர்கள் வந்திருப்பதாகக் கேள்வியுற்று அந் நகரின் அதிகாரி (ரீவூ என அழைக்கப்பட்டவர்) சுங்கம் வசூல் செய்யத் துறைமுகத்திற்குச் சென்றார். ஆனால், இக் கொடிய வீரர்கள், அந்த அரசரின் பிரதிநிதியைக் கொன்று கடலிலே வீசிவிட்டுச் சென்றனர். இன்னொரு சமயம் சில வைக்கிங்குகள், லிண்டிஸ்பார்னேயைக் கைப்பற்றிச் சில கிறித்துவ குருமார்களைக் கொன்று, மடால யங்களை இடித்து அவற்றின் சொத்துகளைச் சூறையாடி, மேலும் அங்கிருந்த சில துறவிகளையும் அடிமைகளாகச் சிறைப்பிடித்துச் சென்றனர். இவ்விரு நிகழ்ச்சிகளே டேனியர் படையெடுப்பு இயக்கத்தின் தொடக்கமாகும்.

எவ்வித எதிர்ப்புகளும் இல்லாமல் பெரும் செல்வத்தைக் கொள்ளையடித்துப் பத்திரமாகத் தங்களால் நாடு திரும்பமுடியும் என்ற எண்ணத்தை உருவாக்கிக்கொண்ட வைக்கிங்கு வீரர்களின்

சாதனை, அவர்கள் இனத்தோருக்குப் புதிய தெம்பினைக் கொடுத்தது. நாடு திரும்பிய வைக்கிங்குகள் தாங்கள் பிரிட்டனில் கண்ட வளமுள்ள விளைநிலங்களைப்பற்றியும், தம் இனத்தாருக்குத் தெரிவித்தனர். மேலும், அந்நியர் படையெடுப்பிலிருந்து காப்பாற்றிக்கொள்ளக்கூடிய கப்பற்படை எதுவும் இக் காலத்தில் எந்த ஓர் ஆங்கிலோ-சாக்சானிய அரசிடமும் இல்லை என்ற உண்மையும் இவ் வினத்தாருக்குத் தெரிந்திருந்தது.

வடவேல்ஸ் பகுதியையும் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு, வரவேண்டி, அங்கு எக்பர்ட் போரிட்டுவந்த வேளையில், டேனியர்கள் டார்ட் (**Dart**) பகுதிக்கருகே முப்பது டன் எடையுள்ள ஓக் மரத்தினால் கட்டப்பட்ட வசதியான பெரும் படகுகளில் கூட்டங் கூட்டமாக வந்துசேர்ந்தனர். எக்பர்ட் அவசரமாகத் தம் நாடு திரும்பி, டேனியர்களோடு மோதினார். வில், போர்க்கோடரி (**War Axe**) போன்ற ஆயுதங்களோடு மூர்க்கத் தனமாகப் போரிட்ட டேனியர்கள், மிக எளிதாக எக்பர்ட்டின் படைகளைக் கலைத்தனர். சுற்றுப்புறப் பகுதிகளைக் கொள்ளையடித்துவிட்டு டேனியர்கள் அப்போதைக்கு நாடு சென்றிருந்தபோதிலும், சில மாதங்கள் கழித்து மீண்டும் வெஸ்ஸெக்ஸ் பகுதியைத் திருப்பித் தாக்கத் தொடங்கினர். இம்முறை, தாக்குதலுக்குத் தயாராக இருந்த எக்பர்ட், உரிய போர் முறைகளைக் கையாண்டு டேனியர்களை ஹிங்ஸ்டன்டவுன் என்னுமிடத்தில் வென்று விரட்டினார்.

**எக்பர்டின் வழித் தோன்றல்கள் :** கி.பி. 839-ல் எக்பர்ட் காலமானதையொட்டி, அவரது மகனான எதல்உல்ஃப் (**Ethelwelf**) வெஸ்ஸெக்ஸின் அரசரானார். இவரது காலத்திலிருந்தே ஆண்டுக்கொருமுறை டேனியர்கள் பிரிட்டிஷ் கரைகளைத் தாக்க ஆரம்பித்தனர்.சில சமயங்களில் ஆற்றுக் கழிமுகங்கள்மூலமாக நாட்டின் உள்பகுதிகளிலும் டேனியர்கள் நுழைந்து கொலை, கொள்ளை போன்ற செயல்களிலே ஈடுபட்டனர். நார்த்தம்பிரியா, மெர்சியா நாடுகளின் பல பகுதிகள் டேனியர்களின் தாக்குதலுக்கு உள்ளாகியிருந்தன.

கி.பி.851-ல், முந்நூற்றெண்பது பெரும் படகுகளிலே ஏராளமான டேனியர்கள் தேம்ஸ் நதியின் வழியாக நாட்டினுள் நுழைந்து இலண்டன், கான்டர்பரி ஆகிய நகரங்களைத் தாக்கிக் கொள்ளையடித்து நாசமாக்கினர். ஆயினும், எதல்உல்ஃப்பின்கடும் முயற்சியால் ஓக்லி (**Ockley**) என்னுமிடத்தில் வெஸ்ஸெக்ஸ்

வீரர்கள் டேனியர்களை முறியடித்து விரட்டினர். இத் தோல்விக்குப் பிறகு சில ஆண்டுகள் டேனியர்களின் தாக்குதல் சற்று ஓய்ந்திருந்தது.

எதல்உல்ஃப் காலமானதைத் தொடர்ந்து (கி.பி. 858) வெஸ் ஸெக்சின் ஆதிக்கத்தில் சிறு சிதைவு ஏற்பட்டது. இவரது வழித்தோன்றல்களான எதல்பால்டு (Ethelbald), கி.பி. 858–860); எதல்பர்ட் (Ethelbert, கி.பி. 860–866) அரசர்களின் காலங்களில் டேனியர்கள் பிரிட்டனில் மற்ற அரசர்களைப் பயங்கரமாகத் தாக்கிவந்தனர். இவர்களால் நார்த்தம்பிரியா மன்னர் கொலை செய்யப்பட்டார். மெர்சியா அழிக்கப்பட்டது. கிழக்கு ஆங்கிலியா அரசர் சித்திரவதை செய்யப்பட்டுக் கொலை செய்யப் பட்டார். எஸ்ஸெக்ஸ் கைப்பற்றப்பட்டது. வெஸ்ஸெக்ஸ் அரசின் சில பகுதிகளும் டேனியர்களின் வசமாயின.

கி.பி. 870-ல் எதல் உல்ஃப்பின் மூன்றாவது மகனை எதல்ரெட் (Ethelred), வெஸ்ஸெக்சுக்கு அரசராகி இருந்தார். வெஸ்ஸெக் சுக்குள் நுழைய கடுமையான முயற்சிகளைச் செய்துவந்த டேனியர் களைத் தடுத்து நிறுத்தவேண்டுமென்பதே இவ் வரசரின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. தேம்ஸ் நதியின் வழியாக ரீடிங் (Reading) என்ற இடம் வரை ஊடுருவி விட்ட டேனியர்களை எதல் ரெட் எதிர்க்க முயன்று தோல்வியுற்றார். தொடர்ந்து வந்த படையெடுப்பாளர்களைப் பெர்க்ஷயருக்கு (Berkshire) அருகே எதல்ரெட் வென்றிருந்தபோதிலும், பேசிங் (Basing), மெர்ட்டன் (Merton) முதலிய இடங்களில் நடந்த சண்டைகளில் டேனியர்களே வெற்றிபெற்றனர்.

பிரிட்டனில் இருந்த மற்ற அரசுகள் டேனியர்களின் (வைக் கிங்குகள்) தாக்குதலுக்கு அடிபணிந்திருக்க, வெஸ்ஸெக்ஸ் அரசு மட்டும் இடைவிடாது எதிர்த்து வந்தது. வெஸ்ஸெக்ஸின் எதிர்ப்பு மட்டும் இல்லாதிருக்குமாயின், கி.பி. 9 ஆம் நூற் றாண்டின் இடையிலேயே டேனியர்கள் பிரிட்டன் முழுவதையும் வென்றிருப்பர்.

எதல்ரெட் கி.பி. 871-ல் மெர்ட்டன் சண்டையில் கொல்லப் பட்டிருப்பினும், அவரது இளைய சகோதரரான ஆல்ஃபிரடு, தம் தமையனாரின் பணியைத் தொடர்ந்து செய்தார். ஆல்ஃபிரடு காலத்திலேயே வெஸ்ஸெக்ஸ் மீண்டும் புத்துயிர் பெற்று டேனியர் களோடு வெற்றிப் போர் நடத்தியது.

## மகா ஆல்ஃபிரடு
## (Alfred the Great)

இங்கிலாந்தின் அரியணையில் அமர்ந்த மன்னர் பெருமக்களுள், 'மகா' என்ற அடைமொழி கொடுத்து அழைக்கப்பெற்ற ஒரே மன்னரான ஆல்ஃபிரடு (கி.பி. 871-899) இந் நாட்டின் வரலாற்றில் அழியாப் புகழ் பெறுகின்றார்.

**இளமைப் பருவம்:** மேலைச் சாக்சானிய அரசரான எதல் உல்ஃபின் கடைசி மகனைக் கி.பி. 849-ல் வான்டேஜ் (Wantage) என்னுமிடத்தில் ஆல்ஃபிரடு பிறந்தார். இவரது தந்தையார் ஆல்ஃபிரடை கி.பி. 854-ல் ரோம் நகருக்கு அழைத்துச் சென்று, அப்போதைய போப்பாண்டவரான நான்காம் லியோவிடம் (Leo IV) ஆசி பெறச் செய்தார். எதிர்காலத்தில் இவர் சிறந்த கிறித்தவராக இருந்ததற்கு இச் சந்திப்புக் காரணமாயிற்று. தம் பத்தொன்பதாம் வயதில் மெர்சியா அரச வம்சத்தைச் சேர்ந்த எல்ஸ்விதா (Elswitha) என்ற பெண்ணை ஆல்ஃபிரடு மணந்து கொண்டிருந்தும், இல்லற இன்பத்தை இனிது அநுபவிக்க இயலாமல் அடிக்கடி ஆல்ஃபிரடு, தம் சகோதரரான எதல்ரெட் டுக்கு உதவியாக டேனியர் எதிர்ப்புப் போர்களிலே கலந்து கொண்டார்.

இங்கிலாந்தின் பல பாகங்கள் முரட்டு இனமான டேனியர் களால் தாக்கப்பட்டு வந்த வேளையில், அப்போதுவெஸ்ஸெக்சுக்கு அரசராக எதல்ரெட் என்பவர் இருந்தார். டேனியர் படை யெடுப்பை எதிர்க்கும் பணியில் மும்முரமாக ஈடுபட்டிருந்த எதல்ரெட், தம் சகோதரன் ஆல்ஃபிரட்டுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டிருந்தார். அதன்படி, டேனியரின் கொடுமைக்கு ஆளாகிய இவர்கள் இருவரில், ஒருவர் கொல்லப்பட்டால் எஞ்சி யவர், இறந்தவரின் மக்களையும் அவர்களின் நலன்களையும் பாது காக்க வேண்டும்.

கி.பி. 870-71ஆம் ஆண்டுகளில் வெஸ்ஸெக்ஸ் மீண்டும் டேனியர் களின் படையெடுப்புக்கு இலக்காயிற்று. கென்னட் (Kennet) என்ற உபநதிக்கும், தேம்ஸ் நதிக்கும் இடையே உள்ள ரீடிங் (Reading) என்ற இடத்தில் எதல்ரெட்டும் ஆல்ஃபிரடும் டேனியர் களை எதிர்த்தனர். அவ்வெதிர்ப்புப் பெருந்தோல்வியாகமுடிந்தது. இதனைத் தொடர்ந்து, மேலும் சில சண்டைகள் நடந்தன. இளைஞ ராயினும், தீரமிக்கவராக இருந்த ஆல்ஃபிரடு, டேனியர்களை ஆஷ்டவுன் (Ashdown) என்னுமிடத்தில் முறியடித்துத் தம் குலப்

பெருமையையும் நாட்டின் சுதந்திரத்தையும் காப்பாற்றினர். ஆயினும், அடுத்து நடந்த இரு சண்டைகளில் ஆங்கிலேயர்கள்




படம் 5. ஆல்ஃபிரட் காலத்து இங்கிலாந்து

(கவஸ்ஸெக்ஸியர்) தோற்றது மட்டுமன்றி, அரசர் ஏதல்ரெட்டும் மெர்ட்டன் (Merton) சண்டையில் (கி.பி. 871)கொல்லப்பட்டார்.

எதல்ரெட்டுக்குச் சிறுவனான மகன் ஒருவனிருந்தும் நாடு அப்போதிருந்த அபாய நிலையில் அச் சிறுவனுக்குப் பட்டம் அளிக்காது வெஸ்ஸெக்ஸின் மூதறிஞர்கள் ஏகமனமாக முடிவு செய்து ஆல்ஃபிரட்டை அரசராக்கினர்.

**குணநலன்கள் :** மிகவும் சோதனையான கட்டத்தில் அரசுக் கட்டில் ஏறியிருந்த ஆல்ஃபிரட், தீரமுள்ளவரென்பதோடு மதி நுட்பமும் உடையவராக இருந்தார். உணர்ச்சிமிக்கவ ரெனினும், அதனைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் மிக்கவராகவும் இருந்தார். அந்நியர் தாக்குதல்களிலிருந்து நாட்டைக் காத்து, உள்பூசல்களைக் களைந்து, ஒற்றுமையை நிலைநிறுத்தி, நாகரிக வாழ்வில் இங்கிலாந்தை ஈடுபடுத்த வேண்டுமென்பதையே ஆல்ஃபிரட் தம் முக்கிய குறிக்கோளாகக் கொண்டிருந்தார். எத்தனை இடர் வரினும் மன உறுதி குலையாத கடமை வீரரான ஆல்ஃபிரட், தொடக்கத்தில் தோல்விகளைக் கண்டு மனம் சோர்வடையாமல், கிடைக்கவேண்டிய வெற்றிகளில் நாட்டங்கொண்டவராக விளங்கினார். இள வயதிலிருந்தே இனம் தெரியாத நோயினால் பீடிக்கப்பட்டிருந்த ஆல்ஃபிரடு, தம் நாட்டு மக்களுக்குத் தலைவராகவும், வீரராகவும், அரசராகவும் விளங்கினார். ஆடுமாடுகளை மேய்க்கும் இடையர்களையும் விவசாயம் செய்யும் உழவர்களையும் அமைதி விரும்பும் மற்ற எளிய மக்களையும் கொண்டிருந்த வெஸ்ஸெக்ஸ் நாட்டை ஆல்ஃபிரடு தம் அயரா உழைப்பால் போர் முகாமாக மாற்றி, எவ்வாறு பகைவர்களை இறுதியில் சாடினார் என்பதே புகழ்கொண்ட வரலாறாக அமைகிறது.

**தேசியப்போர் (National War):** டேனியர்களால் தாக்கப்பட்டு ஆங்கிலேயர்கள் அலைக்கழிக்கப்பட்டு வந்த வேளையில், பட்டம் சூடியிருந்த ஆல்ஃபிரடு பகைவர்களைக் களத்தில் சந்திப்பதையே தலையாய காரியமாகக் கருதினார். ஆயினும், கடலாதிக்கம் பெற்றிருந்த டேனியர்கள், தேம்ஸ் நதியின் வழியாக எண்ணிக்கையிடலங்கா வீரர்களைக் கொண்டு வந்து மூர்க்கத்தனமான தாக்குதல்களை நடத்தினர். ஆல்ஃபிரடு செய்த முதல் முயற்சி வில்டன் (Wilton) என்னுமிடத்தில் தோல்வியாக முடிந்தது. இருப்பினும், ஆல்ஃபிரட்டின் தலைமையில் வெஸ்ஸெக்ஸ் தொடர்ந்து எதிர்ப்புக் காட்டி வந்ததால், டேனியர்கள், இப் பகுதியை விட்டுவிட்டு இங்கிலாந்தின் மற்றப் பகுதிகளைக் கைபற்றுவதில் கவனம் செலுத்தினர்.

கி.பி. 877 ஆம் ஆண்டில் டேனியர்கள், மீண்டும் வெஸ்ஸெக்ஸின் மீது படையெடுத்து வேர்ஹாம் என்ற இடத்தைக் கைப்பற்றிக்

கொண்டனர். ஆல்ஃபிரடு, உடனே இந் நகரை முற்றுகையிட்டு இரவோடிரவாக டேனியர்களை எக்ஸ்டரை நோக்கி விரட்டினார்.




படம் 6. வைக்கிங்குகள் படையெடுப்பு

விரட்டப்பட்ட டேனியர்களுக்கு உதவியாக வந்த வைக்கிங்குக் கப்பல் தலைவர்களையும் ஆல்ஃபிரடு அழித்தார். இந்த இரு

வெற்றிகளைக் கண்டிருந்த ஆல்பிஃரடுக்கு டேனியர்களின் பலம் நன்கு தெரிந்திருந்தது. அதனால், எந்த நேரத்திலும் டேனியர்களின் தாக்குதல் நடத்தப்படுமென்று உணர்ந்த ஆல்ஃபிரடு, கி.பி. 876-ல் நிறைய பொருள்களையும் செல்வத்தையும் கொடுத்து டேனியர்களோடு உடன்படிக்கை செய்துகொண்டார்.

இந்த உடன்படிக்கையால் கிடைக்கக்கூடிய அமைதிக் காலத்தில் தம் பலத்தைப் பெருக்கிக் கொள்ளலாமென்றே ஆல்ஃபிரடு நினைத்தார். சூறையாடித் தீயிட்டு அழிப்பதையே முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்த டேனியர்கள், எத்தனைக் காலம் விலை கொடுத்துப் பெற்ற சமாதானத்தை மதிப்பார்கள்? பொருளாசை, மண்ணாசை கொண்ட டேனியர்கள், எந்தவிதமான ஒப்பந்தத்திற்கும் கட்டுப்பட மறுத்து, ஹூப்பா (Hubba), கத்ரம் (Guthram) என்ற கொடிய தலைவர்களின்கீழ் மீண்டும் கி.பி.878 ஆம் ஆண்டில் வெஸ்ஸெக்ஸைத் தாக்கினர். எதிர்த்து நிற்கத் துணிவிருந்தும் போதிய ஆள் பலம் இல்லாத ஆல்ஃபிரடு, எஞ்சிய தம் வீரர்கள் சிலருடன் சாமர்ஸெட் (Somerset) சதுப்பு நிலங்களை நோக்கிப் பின்வாங்கினர். கழுகுக் கூட்டத்தைப் போல் டேனிஷ் படையெடுப்பாளர்கள் எல்லாத் திக்குகளிலிருந்தும் வெஸ்ஸெக்ஸைத் தாக்கியதால், வெஸ்ஸெக்ஸ் முழுவதும் அழிந்துவிடுமோ என்ற அச்சநிலை ஏற்பட்டபோது, ஸாமர்செட் பகுதிக்கு அடுத்திருந்த அதெல்னி (Athelney) என்னுமிடத்தில், பதுங்கி வாழ்ந்து வந்த ஆல்ஃபிரடு, தம் நாட்டைப் பகைவர்களிடமிருந்து மீட்கும் திட்டங்களில் ஈடுபட்டிருந்தார்.

மூன்று மாதக் காலம் ஆல்ஃபிரடு இங்குத் தங்கி மறைந்து வாழ்ந்ததை மையமாக வைத்து, இவரைப்பற்றிப் பல கதைகள் சொல்லப்படுகின்றன; நம்பப்படுகின்றன. ஆல்ஃபிரடைத் தேடிப் பிடித்துத் தண்டிக்க வேண்டுமென டேனியர்கள் செய்த முயற்சிகள் அனைத்திலிருந்தும் தமது சமயோசிதப் புத்தியாலும் வீரத்தாலும் ஆல்ஃபிரடு தப்பிய விதமே அக்கதைகளின் சுருக்கமாகும்.

அதெல்னியைத் தம் இரகசிய தலைமையிடமாக ஆல்ஃபிரடு கொண்டிருந்த இக் குறுகிய காலத்தில், தேசப் பற்றும் அரச விசுவாசமும் கொண்ட ஆங்கிலேய வீரர்கள் இவரை அணுகியிருக்க, வில்ட்ஷயரிலிருந்து ஆல்ஃபிரடு பெரும்படையொன்றைத் தயார் செய்து சரியான காலத்தை எதிர்நோக்கி இருந்தார்.

வெஸ்ஸெக்ஸ் நாட்டை அலங்கோலப்படுத்திவிட்ட டேனியர், வெற்றிக் களிப்பு மிகுதியாகக் கொண்டு, ஹூப்பா என்ற தலைவரின்கீழ் டெவான் (Devon) பகுதியைத் தாக்கச் சென்றனர்.

ஆயினும், அங்கு ஒட்டா (Odda) என்ற ஆல்ஃபிரடின் படைத்தலைவரால் டேனியர்கள் பலமாகத் தாக்கப்பட்டுக்




படம் 7. வெட்மூர் உடன்படிக்கைக்குப்பின் இங்கிலாந்து.
1. ஸ்டார்த்கிளேடு; 2. நார்த்தம்பர்லாந்து; 3. டெயரா; 4. டேனிய மெர்சியா; 5. ஆங்கில மெர்சியா; 6. வேல்ஸ்; 7. கிழக்கு ஆங்கிலியா இராச்சியம்; 8. இலண்டன்; 9. வெஸெக்ஸ்; 10. ஐரிஷ் கடல்; 11. வட கடல்; 12. ஆங்கிலக் கால்வாய்.

கொல்லப்பட்டனர். அச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு சிப்பன்ஹாம் (Chippenham) நகரில் இருந்துவந்த

இன்னொரு டேனியத் தலைவரான கத்ரம் என்பவரை, ஆல்ஃபிரடு முற்றுகையிட்டு வெளியே வரச்செய்தார். திடீர்த் தாக்குதல்களாலும் வஞ்சனையாலும் இதுவரை வெற்றிபெற்று வந்த டேனியர்களை ஆல்ஃபிரடு எதன்டியுன் (Ethandune) என்னுமிடத்தில் மிக எளிதாகத் தோற்கடித்தார். தோல்வியடைந்த கத்ரம் ஒரு சமாதான ஒப்பந்தத்திற்கு உடன்பட்டார்.

**வெட்மூர் உடன்படிக்கை (கி.பி. 878) (Treaty of Wedmore):** வெட்மூர் என்ற கிராமத்தில் ஆல்ஃபிரட்டிற்கும் கத்ரமுக்கும் இடையே எழுந்த இவ் வுடன்படிக்கையின்படி, இங்கிலாந்து இரண்டாகத் துண்டாடப்பட்டது. அதன்படி தென்கிழக்கு, வடமேற்குத் திக்குகளில் வாட்லிங் (Watling) சாலைக்கும் 'லீ' (Lea) ஆற்றின் போக்கோடும் செல்லுமாறு வரையறுக்கப்பட்ட கோடு, டேனியர் பகுதிக்கும் (டேன்லா-Denelaw), ஆல்ஃபிரடு பகுதிக்கும் எல்லையாக அமைந்தது (வரைபடம் பார்க்கவும்).

இவ்வேற்பாட்டின்படி வெஸ்ஸெக்ஸ்; ஆங்கிலியா, மெர்சியா, நார்த்தம்பிரியாவின் சில பகுதிகள் ஆகியன ஆல்ஃபிரடுக்குக் கிடைத்தன. இங்கிலாந்தின் பாதிக்கு மேற்பட்ட பகுதி அந்நியர் வசமிருந்த போதும் டேனியர்கள் அங்கு அமைதியாகத் தங்கி வாழ ஆல்ஃபிரடு அனுமதியளித்தார். இதற்குப் பிரதியாக வெஸ்ஸெக்ஸ் அரசியலில் இனித் தலையிடுவதில்லையெனக் கத்ரமும் வாக்களித்தார். எல்லாவற்றிற்கும் மேலாகக் கத்ரமும், அவரோடு டேனியர்களும் கிறித்துவர்களாக மதம்மாறி அமைதி வாழ்க்கையை மேற் கொள்ளவும் ஒப்புக்கொண்டார். இதற்கேற்ப, கத்ரம், தம் வாக்குப்படி மதம் மாறி, 'அதல்ஸ்டன்' என்ற கிறித்துவப் பெயரால் தம்மை அழைத்துக் கொண்டார்.

ஆல்ஃபிரடு நினைத்திருந்தால், எதன்டியுன் வெற்றியைத் தொடர்ந்து போரை இன்னும் நீடிக்கச் செய்து, டேனியர்களை மேலும் ஒடுக்கியிருக்கக் கூடும். எனினும், இங்கிலாந்தின் பல பகுதிகளில் தங்களை நிலைப்படுத்திக் கொண்ட டேனியர்களை நாட்டை விட்டே விரட்டுவதென்பது முடியாத காரியம் என எண்ணினர். அங்ஙனம் முடியக்கூடிய காரியமானாலும், அதற்குப் போதிய காலம் இருக்காதென்பதை ஆல்ஃபிரடு திட்டவட்டமாகத் தெரிந்து வைத்திருந்தார். மேலும், ஆங்கிலோ-சர்க்சானியரிடத்திருந்த சில பொதுவான பழக்கவழக்கங்களை டேனியர்களும் கொண்டிருந்தமையால், அவர்களை அந்நியரென்றும் ஒதுக்க முடியாததை ஆல்ஃபிரடு எண்ணிப் பார்த்தார். தங்களின் கொலை, கொள்ளை போன்ற கொடிய பண்புகளை விட்டொழித்து,

அமைதியான கிறித்துவர்களாக டேனியர்கள் இருப்பார்களே யானால், அஃது ஆலஃப்பிரடுக்குப் போதுமானதாக இருந்தது. போரிலேயே தம் காலத்தைக் கழிப்பதை விட்டு, நாட்டுக்கு நல்ல பணிகளைச் செய்ய வேண்டுமென்றும், இதற்கு அமைதி எத்தனை அவசிய மென்பதையும் ஆலஃப்பிரடு உணர்ந்ததன் விளை வாகவே இவ் வுடன்படிக்கை ஏற்பாடாகியிருந்தது.

எனினும், வெட்மூர் உடன்படிக்கை ஒரு நிரந்தரமான அமைதியைக் கொடுத்தது எனச் சொல்ல முடியாது. கத்ரம், கிறித்துவராக மாறியிருந்தும் தம் இனத்திற்குரிய போர்த் தொழிலை மறக்காதவராக இருந்தார். டேனியர்களின் போர் வெறியை நன்கு உணர்ந்த ஆல்ஃபிரடு, மீண்டும் தாக்குதல் ஏற் பட்டால், அதைச் சமாளிக்கும்பொருட்டு முன்னெச்சரிக்கை யாகச் சில காரியங்களை மேற்கொண்டு முடித்திருந்தார்.

டேனியர்களின் கப்பல்களைக் காட்டிலும் நீளமும் வேகமு முள்ள கப்பல்களைக் கட்டச்செய்து ஃபிரிசியர்களைக் (Frisiors) கொண்டு அவற்றை இயக்குவித்தார். ஃபிரிசியர்களைக் கொண்டு நாளடைவில் தம் மக்களுக்கும் கப்பல்களை இயக்குவதிலும் கப்பல் சண்டை இடுதலிலும் ஆல்ஃபிரடு நல்ல பயிற்சி கொடுத்தார். டேனியர்களால் கடல் மார்க்கமாகவும் ஆறுகளின் வழியாகவும் ஏற்படக் கூடிய திடீர்த் தாக்குதல்களைச் சமாளிக்கவே ஆல்ஃபிரடு இங்ஙனமாகக் கப்பற்படைக்கு முக்கியத்துவம் கொடுத்திருந் தார். குறுகிய காலத்தில் கப்பல்படைகளைப் பெறவேண்டிய அவசியத்தைப் பெற்றிருந்த ஆல்ஃபிரடு, அதற்கான 'டேன் கெல்டு' (**Danegeld**) அல்லது டேனிய எதிர்ப்பு வரி என்ற பிரத்தியோக வரியையும் மக்களிடமிருந்து வசூலித்தார். கப்பல் படையின் சேவை இங்கிலாந்திற்குத் தேவையென்பதையுணர்ந்து அதைச் செயலாக்க ஆல்ஃபிரடு முற்பட்டதால், இவரைப் 'பிரிட்டிஷ் கடற்படைக்குத் தந்தை' (Father of the British Navy) என்று பிகாலத்தினர் அழைத்தனர்.

'போர் வீரர்களும், ஆக்கச் செயல் வீரர்களும் ஓர் அரசனுக்கு வேண்டும்' என்று திடமாக நம்பிய ஆல்ஃபிரடு, அதற்கான திட்டங்களிலும் ஈடுபட்டார். தாக்குதல் எதிர்பார்க்கப்பட்ட இடங்களிலே மண்கோட்டைகளைக் கட்டிப் படை வீரர்களை நிறுத்தி வைத்தார். அவ் வீரர்களுக்கு அருகிலிருந்த பகுதிகளில் நிலங்களை வழங்கிப் பிரதிபலனைகப் போர்ச் சேவை செய்ய ஊக்கு வித்தார். தம் சொந்த நிலங்களிலிருந்து பெற்ற திறையினை வீரர் களுக்குச் சம்பளமாகக் கொடுத்தார். 'ஃபிர்டு' (**Fyrd**) என்ற

பழக்கத்தைக் கொண்டுவந்து, தம் இராணுவத்திற்கு வீரர்களைச் சேர்த்தார். இம் முறையின்படி ஆபத்துக் காலங்களில் ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய தகுதிக் கேற்ப குதிரைகளையும் ஆயுதங்களையும் கொணர்ந்து போர்ச் சேவை செய்ய வேண்டுமென ஏற்பாடாயிற்று.

நகரங்களைச் சுற்றிலும் பாதுகாப்புச் சுவர்கள் கட்டப்பட்டன; நாட்டுப் பகுதிகள் காவலுக்கேற்ற வகையில் திருத்தியமைக்கப்பட்டன. அரசாட்சிப் பகுதியின் அனைத்து நிர்வாகத் துறைகளும் செம்மையாகத் திருத்தியமைக்கப்பட்டன.

போர்க் காலத்தில் உதவிசெய்ய மறுத்தவர்கள், படையிலிருந்து ஓடிவிட்டவர்கள் (Deserters), தமக்கு எதிராகச் சதி செய்தவர்கள், நாட்டின் சட்டங்களை மதியாதவர்கள் ஆகியோர்கடுமையாகத் தண்டிக்கப்பட்டு, ஆல்ஃபிரடால் கட்டுப்பாடுகொண்ட ஒரு சமுதாயம் இப்போது அமைக்கப்பட்டது.

ஆல்ஃபிரடு எதர்பார்த்ததுபோல் கி.பி. 886-ல் மீண்டும் கத்ரம், தம் வீரர்களுடன் வெஸ்ஸெக்ஸ் அரசின்மீது படையெடுத்தார். வெட்மூர் உடன்படிக்கையை மீறி எல்லையைக் கடந்துவந்த டேனியர்கள் பலமாகத் தாக்கப்பட்டனர். ஆல்ஃபிரட்டின் தனித் திறமையால் உருவாக்கப்பட்டிருந்த ஆங்கிலப் படையினர், படையெடுப்பாளர்களை மீண்டும் 'டேன்லா' பகுதிக்கு விரட்டினர். இவ் வெற்றி ஆல்ஃபிரடின் முன் எச்சரிக்கைக்குக் கிடைத்த பெரும் பரிசாகும்.

இப் போரின் இறுதியில் ஆல்ஃபிரடும், கத்ரமும் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். இவ்வுடன்படிக்கைக்கு 'ஆல்ஃபிரடு-கத்ரம் அமைதி ஏற்பாடு' (The Alfred Guthram Peace-Settlement) என்னும் பெயர் ஏற்பட்டது. இவ் வுடன்படிக்கையின்படி, ஆல்ஃபிரடு லண்டன் உள்படச் சில பகுதிகளை டேனியர் வசமிருந்து பெற்றுக்கொண்டார்.

டேனியர்களோடு செய்து கொள்ளும் எந்த ஓர் உடன்பாடும் நிரந்தர அமைதி கொடுக்கக்கூடியதன்று என்பதை ஆல்ஃபிரடு நினைத்துத் தம் படைகளை மற்றொரு படையெடுப்பு அபாயத்திற்கும் தயாராகவே வைத்திருந்தார்.

கி. பி. 892-ல் இறுதியாகப் போர் மூண்டது. இவ்வாண்டில், ஜெர்மனியிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட வைக்கிங்குகள் எண்ணூறு கப்பல்களில் ஏறித் தேம்ஸ் கழிமுகத்தை வந்தடைந்தனர்.

படையெடுத்து வெற்றிகொண்டு இந் நாட்டில் நிரந்தரமாகத் தங்கிவிடுவதற்காகவே வைக்கிங்குள், தங்களுடைய மனைவியர் பிள்ளைகளுடன் குதிரைகள் மற்றப் பொருள்கள் ஆகியவற்றையும் தம்முடன் கொண்டு வந்தனர். இவர்களின் தலைவரான ஹேஸ்ட்டன் (Haesten) கொடூரத்தின் சின்னமாக விளங்கினர். மேற்கு ஐரோப்பாவில் லோயர் (Loire), ஸோம் (Somme) ஆற்றங் கரைகளில் ஹேஸ்ட்டன் செய்த படுநாசங்கள் கேட்போரைக் கதி கலங்க வைப்பதாக இருந்தன. இந்தப் புதுப்படையெடுப்பாளர் கள் தென்-கிழக்கு இங்கிலாந்தில் வந்து புகுந்ததும், லண்டன், கான்டர்பரி ஆகிய நகரங்களைத் தாக்கத் தொடங்கினர். இச் சந்தர்ப்பத்தை எதிர் நோக்கியிருந்ததுபோல், 'டேன்லா' பகுதியி லிருந்த மற்ற டேனியர்களும் 'ஆல்ஃபிரடு-கத்ரம்' எல்லைக் கோட்டைத் தாண்டித் தாங்கள் முன்பு கொடுத்திருந்த வாக் குறுதிகளை மீறி எக்ஸ்டர்மீது படையெடுத்தனர். இங்ஙனமாக வடக்கிலிருந்தும், தெற்கிலிருந்தும் நாட்டிற்குள் நுழைந்திருந்த டேனியர்களைச் சமாளிக்கவேண்டிய நிலையிலிருந்த ஆல்ஃபிரடுக்கு இஃது ஒரு பெரிய சோதனைக் காலமாக அமைந்தது.

ஆல்ஃபிரடு, தாம் கட்டியிருந்த கோட்டைகளும் மதிற்சுவர் களும் டேனியர்களின் தாக்குதலை ஒருவாறு சமாளித்து வந்த நிலையில் எதிர்த் தாக்குதல்களுக்குத் தயாரானர். கென்ட் பகுதியிலிருந்த அப்பெல்டோரி (Appeldore) என்னுமிடத்தில் சூறையாடிக்கொண்டிருந்த ஹேஸ்ட்டனையும் அவரது வீரர் களையும் ஆல்ஃபிரடு வென்று, செவர்ன் ஆற்றுப் பகுதிக்கு விரட்டினர். ஆனாலும் நான்கு ஆண்டுகள் போர் தொடர்ந்து நடந்தது. இக் காலத்தில் டேனியர்கள் சொல்லொணத் துன்பங்களை விளைவித்தனர். டேனியர்களின் கொடுமைகளைப் பொறுக்கமுடியாத பிற பகுதிகளில் வாழ்ந்த ஆங்கிலேயர்கள் (சாக்சானியர்கள்), வேல்ஸ் மக்கள் (கெல்ட்டுகள்) தாங்களாகவே விருப்பத்துடன் ஆல்ஃபிரடுக்கு உதவ முன்வந்தனர், தம்மை அந்தத் தேசியப் போராட்டத்திற்குத் தலைவராக்கிக் கொண்ட ஆல்ஃபிரடு, டேனியர் கப்பல்களைக் கி. பி. 896-ல் 'லீ' ஆற்றங் கரையில் நாசமாக்கினர். அடுத்த ஆண்டு (கி. பி. 897) பட்டிங்டன் (Buttington) என்னுமிடத்தில் ஹேஸ்ட்டனின் படைகளையும் ஆல்ஃபிரடு கலைத்து விரட்டினர். தோற்கடிக்கப்பட்ட டேனியர் களில் பலர், கப்பல்களிலேறி மீண்டும் ஐரோப்பாவுக்குத் திரும்பிச் சென்றனர். சிலர், 'டேன்லா'ப் பகுதியில் அடைக்கலம் புகுந்தனர். இத்துணைக் கடுமையாக டேனியர்களை எதிர்த்துப் போராடி, ஆல்ஃபிரடு இங்கிலாந்தின் ஒரு பகுதியைக் காப் பாற்றினர்.

**ஆல்பிரடின் தொண்டும் அமைதிக் காலப் பணியும் :** டேனி யர்கள் இங்கிலாந்து முழுவதையும் கைப்பற்றிவிடாமல் தடுத்து ஆங்கிலோ - சாக்சானியர்களின் நாகரிகத்தைக் காப்பாற்றிய ஆல்ஃபிரடு, 'இங்கிலாந்தின் போற்றுதலுக்குரிய பெரு வீரர்' என்று வருங்காலத்தினரால் போற்றப்பட்டார். தம்முடைய ஆட்சிக் காலத்தில் பெரும் பகுதியை டேனியர்களை எதிர்த்துப் போர் செய்வதிலேயே கழித்திருந்தும் அமைதிகிடைத்த காலத்தில் பல ஆக்கப் பணிகளைச் செய்யவும் ஆல்ஃபிரடு தவறவில்லை.

போரின் கொடுமையால் நிராதரவாக இருந்த விதவை களுக்கும் அனாதைகளுக்கும் தாமே காப்பாளராக (**Guardian**) இருந்தார். தாமே வழக்குகளை விசாரித்து நல்ல நீதி வழங்கினார். சட்டங்களை மீற முற்பட்டோருக்குக் கடுமையான தண்டனைகளைக் கொடுத்தார்.

சீரான நிர்வாகத்தைப் புகுத்த எண்ணி நாட்டின் பல பகுதிகள் பரோக்களாகப் (**Boroughs**) பிரிக்கப்பட்டன. இப் பரோக்களின் பாதுகாப்பு மேன்மைகொண்ட மக்களிடையே கொடுக்கப்பட்டது. சஸ்ஸெக்சிலிருந்து எக்ஸ்டார்வரை பரவி யிருந்த பகுதியை மட்டும் ஆல்ஃபிரடு இருபத்தைந்து பரோக் களாகப் பிரித்திருந்தார். பரோக்களில் வாழ்ந்த தேனர்கள், ஆல்டர்மென்கள் உள்படப் பலதரப்பட்ட மக்கள் பிரிவினருக்கும் தனித்தனிக் கடமைகள் ஒதுக்கப்பட்டதோடு பலதரப்பட்ட உரிமைகளும் கொடுக்கப்பட்டிருந்தன.

நாட்டில் அராஜகமின்றிச் சீரிய சட்ட அமைப்பு இருக்க வேண்டுமென ஆல்ஃபிரடு சிறந்த ஒரு சட்டத்தொகுப்பையும் வெளியிட்டார். எதல்பர்ட் காலத்திய கென்ட் சட்டங்கள், ஆஃபா காலத்திய மெர்ஸியாச் சட்டங்கள், வெஸ்ஸெக்சின் பழைய சட்டங்கள் முதலியவற்றை எல்லாம் சேர்த்துப் புதிய சட்டத் தொகுப்பை வெளியிட்டார்.

நாட்டிலே கிறித்துவ சமயத்தை மேம்பாடு அடையச் செய் வதற்கும் மக்களுக்கு நன்னெறியை உணர்த்துவதற்கும் பல திருக்கோயில்களைப் புதுப்பித்தார். பாதிரியார்களுக்கு உறை விடங்களான மடாலயங்களையும் கட்டினார். திருமறையின் (**The Bible**) சில பகுதிகளை மொழிபெயர்க்கச் செய்தார். திருச் சபை ஆக்கப் பணிகளுக்காகத் தம் சொந்த வருவாயிலிருந்தும் பணத்தை அள்ளிக்கொடுத்தார்.

கல்வித் துறையில் ஆல்ஃபிரடு செய்திருந்த பணி மிகவும் போற்றத் தக்கதாகும். தம் இளம் வயதிலேயே ரோம் நகருக்குத் தந்தையாருடன் சென்றுதிரும்பியிருந்த ஆல்ஃபிரடு, இங்கிலாந்தின் பின் தங்கிய வாழ்க்கை முறையை, குறிப்பாகப் புறக்கணிக்கப்பட்டிருந்த கல்வி முறையைக் கவனிக்கத் தவறவில்லை. 'இங்கிலாந்தில் வாழ்ந்த ஒவ்வொரு சுதந்திர இளைஞரும் கல்வி பயில வேண்டும்' என்ற தம் நினைவுக் கேற்ப, இவரது அரச அவையிலேயே சாக்சானியப்பிரபுக்களின் பிள்ளைகளுக்குக் கல்வி புகட்ட ஆல்ஃபிரடு ஏற்பாடு செய்தார். கான்டர்பரி உள்பட, நாட்டின் பல பகுதிகளிலேயும் புதிய கல்விக் கூடங்கள் திறக்கப்பட்டன. ஏசர் (Asser), ஜான் கார்வி (John of Corvey), கிரிம்பால்டு (Grimbald) போன்ற ஃபிரெஞ்சு-ஜெர்மானிய அறிஞர்களை வரவழைத்துத் தம் நாட்டினருக்கு ஆல்ஃபிரடு கல்வியறிவைப் போதிக்க வழிவகை செய்தார்.

பொதுமக்கள் ஆங்கில மொழியையும், திருச் சபையோர் இலத்தீன் மொழியையும் கற்க வேண்டியதன் தேவையை நன்கு உணர்ந்திருந்த ஆஃல்பிரடு, அதற்கான ஏற்பாட்டினையும் செய்தார். இலத்தின் மொழியிலிருந்த சில நூல்கள், ஆல்ஃபிரடின் தூண்டுதலால், தாய்மொழியான ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. ஒரோசியஸ் (Orasisus) எழுதிய 'உலக வரலாறு', பொதீயஸ் (Bothius) என்பவரால் எழுதப்பட்ட 'தத்துவச் சரித்திரத்தின் ஆறுதல்கள்' (Consolations of Philosophy), போப்பாண்டவர் கிரிகோரி (Gregory), என்பவரால் எழுதப்பட்ட 'மக்கள் காப்பு' (Pastoral Care), பீடு பெருமகனரால் எழுதப்பட்ட 'ஆங்கில சமயத்தின் வரலாறு' போன்ற சில நூல்கள் இவரது காலத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. எல்லாவற்றிற்கும் மேலாக, தம் காலத்து வரையிலான நிகழ்ச்சிகளைத் தொகுத்து ஆங்கிலோ-சாக்சானிய கால அட்டவணையை (Anglo-Saxon Chonricle) ஆல்ஃபிரடு வெளியிட்டார். இத் தொகுப்பு இங்கிலாந்து வரலாற்றிற்கு மூலமாக அமைந்திருப்பது மட்டுமல்லாமல் ஆங்கில உரைநடையின் அடிப்படையாகவும் அமைந்துவிட்டது

போராகட்டும், மனிதருக்குச் செய்யும் தொண்டுகளாகட்டும் அல்லது அவருடைய கோட்பாடுகளாகட்டும், இவ்வனைத்திலும் ஆல்ஃபிரடு தம்மையே அர்ப்பணம் செய்துகொண்டிருந்தார். தம்முடைய இருபத்தெட்டு ஆண்டு ஆட்சிக் காலத்தில், எதிரிகளோடு நடத்திய போர்ப்பணிகளிலாகட்டும், தம் மக்களுக்கு ஆற்றிய அமைதித் தொண்டுகளிலாகட்டும் ஆல்ஃபிரடு ஒரு செயல்

வீரராக விளங்கினர். ஆல்ஃபிரடு ஆங்கிலேயரின் சுதந்திரத்திற்கும், தாம் வாழ்ந்த நாட்டின் வலிமைக்கும், சுருக்கமாகக் கூறின் இங்கிலாந்தின் ஐக்கியத்திற்கும் தம் இருபத்தெட்டு ஆண்டு ஆட்சிக் காலத்தில் பல வகைகளில் பணிபுரிந்தார்.

ஆங்கிலோ-சாக்சானியரிடையே தாங்கள் ஓர் இனம், தங்களுக்குஒரு மொழி, தங்களுக்கு ஒரு நாகரிகம் என்னும் உணர்ச்சிகளைத்தூண்டிவிட்டார். இவர் பட்டத்திற்கு வந்தபோது தாம் பெற்றிருந்த அரசைக் காட்டிலும் நன்கு பலப்படுத்தப்பட்ட ஒரு பேரரசை ஆல்ஃபிரடு ஏற்படுத்தினர். தம் புதல்வி எதல்ஃபிளெடு **(Ethelfled)** என்பவளை மெர்சியாவின் கடைசி மன்னரான எதல்ரெட் என்பவருக்கு மணம் முடித்துக்கொடுத்துத் தம் ஆதிக்கத்தை அந் நாட்டிலும் பரவ விட்டார்; வேல்ஸ் பகுதியையும் தம் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளும்படி செய்தார். இவர் கொடுத்த ஆக்கமே வருங்காலத்தில் இங்கிலாந்தை ஐக்கியமடையச் செய்தது. ஆகவேதான், இவரை இங்கிலாந்தின் ஐக்கியத் தந்தை என அழைக்கின்றனர். செங்கோல் மன்னர்களும் அறிவுடை அமைச்சர்களும் கல்வி கேள்வியில் சிறந்த திருச்சபையோரும் நிறைந்த நாட்டினை உருவாக்க வேண்டுமென்ற சிறந்த குறிக்கோளைக் கொண்டிருந்த ஆல்ஃபிரடு இதில், பெருமளவு வெற்றி கண்டாரென்றே கூறலாம்.

**ஆல்ஃபிரட்டின் வழித்தோன்றல்கள்**
(கி.பி. *1016* வரையில்)

ஆல்ஃபிரடு
(கி.பி. *871 — 899*)
|
மூத்த எட்வர்டு
(*899 — 925*)
|
எதெல்ஸ்டன் (*925 — 940*) | முதலாம் எட்மண்டு (*940 — 946*) | எட்ரெட் (*946 — 955*)

முதலாம் எட்மண்டு
|
எட்வி (*955 — 959*) | எட்கர் (*959 — 975*)

எட்கர்
|
எட்வர்டு (தியாகி) (*975 — 979*) | இரண்டாம் எதல்ரெட் (*979 — 1016*)

சிறிய உருவத்தில் வலுவான இதயத்தைப் பெற்றிருந்த ஆல்ஃபிரடு, தம் நாற்பதாவது வயதில் கி.பி. 899ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ஆம் நாள் தம் புதிய தலைநகரான லண்டனில் காலமானார். அவரது சடலம் வின்செஸ்டரில் புதைக்கப்பட்டது. 'மேலைச் சாக்சானியரின் அசைக்கமுடியாத கற்றூண் என்ற புகழ்ப் பெயர் பெற்ற ஆல்ஃபிரடு, இங்கிலாந்தின் வரலாற்றிலே அழியா இடம் பெற்றார்.

## சாக்சானிய மன்னர்களது பொற்காலம் (கி.பி. 899—கி.பி. 975)

ஆல்ஃபிரடு காலமானதையொட்டி அவர் செய்து சென்ற அரும்பணிகள் அத்தனையும் பயனில்லாமல் போய்விடுமோ என்று அஞ்சும் அளவுக்குச் சில சோதனைகள் வெஸ்ஸெக்ஸ் அரசுக்குத் தொடர்ந்து வந்தன. ஆல்ஃபிரட்டின் தமையனாரான எதல்ரெடின் மக்கள், அரசுரிமை தங்களுக்குக் கிட்டாமல் ஆல்ஃபிரட்டின் பிள்ளையான எட்வர்டுக்குக் கொடுக்கப்பட்டதால் மனம் புழுங்கி, டேனியர்களோடு சேர்ந்துகொண்டு சதி செய்தனர். நார்வே (Norway), டென்மார்க் (Denmark) நாடுகளில் இக் கால நிலையிலே வன்மையான ஆட்சி ஏற்பட்டிருக்க, அங்கிருந்து துரத்தப்பட்ட வைக்கிங்குகள், மீண்டும் பிரிட்டிஷ் தீவுகளை நோக்கிப் படையெடுக்கத் தொடங்கினர். ஏரிமாவட்டங்கள்,லங்காஷயர் பகுதிகள் வைக்கிங்குகளின் கொடுமைக்கு ஆளாயின. மக்கள் தங்கள் சொத்துக்களனைத்தையும் திரட்டிப் பெருந்தாழிகளில் இட்டுப் புதைத்து வைக்கவேண்டிய அளவுக்குப் பயந்திருந்தார்கள். லங்காஷயரில் தோண்டியெடுக்கப்பட்ட புதையல் ஒன்றிலிருந்து நாணயங்களும் வெள்ளிக் கட்டிகளும் பல ஆபரணங்களும் கண்டெடுக்கப்பட்டமை இதற்குச் சான்றாகும். ஆயினும், ஆல்ஃபிரடு அரசரின் வழித்தோன்றல்கள் எதிர்ப்புகளை முறியடித்து, 'டேன்லா'ப் பகுதியை விடுவித்து இங்கிலாந்து முழுவதையும் ஆள முற்பட்டனர்.

ஆல்ஃபிரட்டின் முன்னோர்கள் வெஸ்ஸெக்சுக்கு மட்டும் அரசர்களாக இருந்தனர்; அவரது சந்ததியாரோ, இங்கிலாந்து முழுவதற்குமே அதிபதிகளாக இருந்தனர். இக் காலமே ஆங்கிலோ-சாக்சானிய - வெஸ்ஸெக்ஸ் அரசுகளின் பொற்காலமாக அமைகிறது.

**மூத்த எட்வர்டு (கி.பி. 899—கி.பி. 925)(Edward the Elder):** ஆல்ஃபிரடைத் தொடர்ந்து அவரது மகனான மூத்த எட்வர்டு அரசாட்சி செய்த காலத்தில்தான் வெஸ்ஸெக்சின் தலைமையில் இங்கிலாந்தை ஒருமைப்படுத்தும் முயற்சி தொடங்கப்

பட்டது. இப் பணியில் எட்வர்டுக்கு உற்றதுணையாக அவரது சகோதரியும் மெர்சியா நாட்டு அரசரின் விதவையுமான எதல்ஃபிளெடு என்பவர் இருந்தார். இவரையே 'மெர்சியாச் சீமாட்டி' (Lady of Mercia) என அழைப்பர். கட்டாயப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் தம் தந்தை ஆல்ஃபிரடால் டேனியர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த டேன்லப் பகுதியை எட்வர்டு தாக்க ஆரம்பித்தார் பெட்ஃபோர்டு (Bedford), ஹன்டிங்டன் (Huntington), நார்த்ஆம்டன் (Northampton), கேம்பிரிட்ஜ் (Cambridge) போன்ற இடங்கள் டேனியர்களிடமிருந்து மீட்கப்பட்டன. இவ்விடங்களில் எட்வர்டு, பல கோட்டைகளைக் கட்டுவித்து அவ்விடங்களைத் தம் நிருவாகத்தின்கீழ்க் கொண்டுவந்தார். இவரது சகோதரியும் டேனியர் பகுதிகளைத் தாக்கி, டெர்பி(Derby)யையும் லிஸ்டரையும் (Lister) கைப்பற்றினர், இவ் வெற்றிகளால் உற்சாகம் கொண்ட எட்வர்டு, மேலும் கோல்செஸ்டர், ஹாட்டிங்காம், லிங்கன் என்ற இடங்களைக் கைப்பற்றினர். இங்ஙனமாக, டேனியர்ப் பகுதிகளை மீட்டு வெற்றிவாகை சூடி வந்த நேரத்தில், மெர்சியா நாட்டு அரசியான தம் விதவைச் சகோதரி காலமானர். இதனையொட்டி எட்வர்டு, மெர்சியா அரசையும் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்தார். நார்த்தம்பிரியாவிலிருந்த டேனீஷ் பகுதியும், ஸ்ட்ராத்கிளைடு, வேல்ஸ் பகுதியும், பெர்னிஷியா (Bernisia) என்ற பகுதியும், கான்ஸ்டன் என்ற அரசரால் ஆளப்பட்ட ஸ்காட்லாந்து பகுதியும், எட்வர்டு அரசரால் இன்னும் வெல்லப்படாமலிருப்பினும், இவ்வரசுகளும் இம்மன்னருக்கு இறைவணக்கம் (Homage) செலுத்த ஒப்புக்கொண்டன. இதனையொட்டியே எட்வர்டு, தம்மை இங்கிலாந்தின் அரசர் என்று அறிவித்துக்கொண்டார். எட்வர்டின் காலத்தில் ஆங்கில அரசு, ஹம்பர் கரையிலிருந்து ஆங்கிலக் கால்வாய் வரையில் பரவியிருந்தது.

**எதெல்ஸ்டன் (925—940) (Athelstan)**

எட்வர்டு காலமானதைத் தொடர்ந்து அவரது மூத்த மகனை எதெல்ஸ்டன் என்பவர் ஆட்சியைப் பெற்றார். தம் தந்தையாரால் விடப்பட்ட பணிகளை இவர் தொடர்ந்து செய்யலானர். நார்த்தம்பிரியாவில் ஆட்சி செய்த டேனியர் அரசரான சித்ரிக் (Sihtric) என்பவருக்குத் தம் சகோதரி எடித் (Edith) என்பவரை மணம் செய்து வைத்தார். சித்ரிக் காலமானதையொட்டி, நார்த்தம்பிரியாப் பகுதி முழுவதையும் எதெல்ஸ்டன் தம் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தார்.

இக் கட்டத்தில் மெர்சியாவுடன் ஏற்கனவே இணைக்கப்பட்டிருந்த நார்த்தம்பிரியாவும் வெஸ்ஸெக்ஸின் ஆணைகையின்கீழ்க் கொண்டுவரப்பட்டிருந்தது.

வளர்ந்து வந்த வெஸ்ஸெக்ஸின் எல்லையைக் கண்டு பொருமிய ஸ்காட்லாந்து அரசர் கான்ஸ்டன்டைன், வேறு சில சிற்றரசு களுடன் சேர்ந்து எதெல்ஸ்டன்மீது படையெடுத்தார். ஆயினும், அந்தக் கூட்டணிப் படைகளை எதெல்ஸ்டன் கி.மு. 937-ல் புருமன் பர்க் (Brumanburgh) என்னுமிடத்தில் தோற்கடித்துப் பெரும் வெற்றி பெற்ருர். இவ் வெற்றி பலகாலம் ஆங்கிலோ-சாக்சானிய கவிஞர்களால் பாடல்களில் புகழப்பட்டது. இவ் வரசரின் காலத்தில் இங்கிலாந்து முழுவதும் வெஸெக்சின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. இங்குமங்குமாக எழுந்த சில கலகங்களையும் வெற்றிகரமாக இவர் அடக்கினர். இங்கிலாந்தில் இவர் பெற் றிருந்த புகழ் பல ஐரோப்பிய நாடுகளில் நன்மதிப்பையும் தேடிக் கொடுத்திருந்தது. ஐரோப்பிய அரசர்களுடன் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள விரும்பிய எதெல்ஸ்டன், தம் முடைய ஒரு சகோதரியை ஜெர்மனி அரசரான மகா ஆட்டோ (Otto the Great) என்பவருக்கும், மற்ெருரு சகோதரியைப் ஃபிராங்க் (Frank) அரசரான சார்லசுக்கும் (Charles) மணமுடித்து வைத்தார். சுருக்கமாகக் கூறின், மகா ஆல்ஃபிரடு தொடங்கி வைத்த பணியையும், மூத்த எட்வர்டு தொடர்ந்து செய்த சேவை யையும் எதெல்ஸ்டன் நிறைவேற்றினர்.

### முதலாம் எட்மண்டு, கி.பி. 940—946 (Edmund I)

வெற்றிவீரர் எதெல்ஸ்டன் காலமான பிறகு, அவரது சகோ தரரான எட்மண்டு பட்டமேற்ருர். இவ் வரசர் காலத்தில் நார்த் தம்பிரியாவில் இருந்த டேனியர்கள் கலகம் செய்தனர். ஆயினும், அக் கலகம் ஒடுக்கப்பட்டு நார்த்தம்பிரியாவில் எட்மண்டு தம் ஆதிகத்தை நிலைநிறுத்தினர். ஸ்ட்ராத்கிளேடு, வேல்ஸ் பகுதி யையும் இவர் தம் ஆட்சியின்கீழ்க் கொணர்ந்தார். ஸ்காட் லாந்தை அப்போது ஆண்டுவந்த மால்கோம் (Malcolm) என்ற அரசரும் எட்மண்டுக்குக் கீழ்படிந்தவராகவே இருந்தார். இவ் வரசர் எதிர்பாராத விதமாகக் கொள்ளையனெருவனால் கொல்லப் பட்டதால், இவரது அடுத்த சகோதரர் ஆட்சிக்கு வந்தார்.

### எட்ரெட், கி.பி. 946—955 (Edred)

காலம் சென்ற தம் சகோதரர் எட்மண்டுக்கு இரு பிள்ளைகள் இருந்தும், அவர்கள் போதிய வயதினைப் பெற்றிராமையால், சாக் சானிய மூதறிஞர்கள் நாட்டின் நிலமையை உணர்ந்து எட்ரெட் என்பவரை அரசராக்கினர். இவரது காலத்தில்தான் நார்த்தம் பிரியாப் பகுதி வெஸெக்ஸின் நேரிடையான ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. நாட்டில் பல அரசியல் புனரமைப்புத்

திட்டங்களையும் எட்ரெட் புகுத்தியிருந்தார். வெஸெக்ஸ் அரசின் எல்லை எட்வர்ட் காலத்தில் பரந்து விரிந்த நிலையில் இருந்ததால் தம்மை 'இங்கிலாந்தின் பேரரசர்' எனப் பெருமையுடன் அழைத்துக்கொண்டார்.

### எட்வி, கி.பி. 955—கி.பி. 959 (Edvy)

எட்ரெட் காலமானதைத் தொடர்ந்து, அவரது சகோதரர் முதலாம் எட்மண்டின் மகன் எட்வி அரச பதவி பெற்றார், இவ்வரசர் அரசியலில் திறமையற்றவராக இருந்ததால், இவர் காலத்தில் சில குழப்பங்கள் விளைந்தன. அரசருக்கும் திருச்சபையைச் சார்ந்த டன்ஸ்டன் என்பவருக்கும் எட்வி செய்துகொண்ட ஒரு பொருந்தா திருமணத்தின் காரணமாகத் தகராறு மேலிட்டது. டன்ஸ்டன் நாட்டைவிட்டு அகற்றப்பட்டார். இதனைத் தொடர்ந்து ஏற்பட்ட குழப்பமான நிலையில் நார்த்தம்பிரியா, மெர்சியா போன்ற பகுதிகளில் அரசரது சகோதரரான எட்கரின் சார்பில் கலகங்கள் ஏற்பட்டன. கலகத்தை அடக்கத் திறன் இல்லாத எட்வி, தம் முன்னோர்கள் இரத்தம் சிந்திச் சேர்த்த பேரரசைத் துண்டாடும்படி நேர்ந்தது. தேம்ஸ் நதிக்கு வடக்கே இருந்த இவ் வரசின் பகுதிகளை எட்கருக்குக் கொடுக்க எட்வி ஒப்புக் கொண்டார். எனினும், சிறிது காலத்திற்குள்ளாக, இவ் வரசர் காலமானதை யொட்டி, இளைய சகோரர் எட்வி என்பவரே பட்டத்திற்கு வந்ததால் மீண்டும் வெஸெக்ஸ் அரசு ஒருமைப்பட்டது.

### எட்கர், கி.பி. 959—கி.பி. 965 (Edgar)

எட்ரெட்டுக்குப் பின்வந்த எட்கர் காலத்தில் போர் எதுவும் நடைபெறவில்லை. எட்கருக்குச் சாதகமாகவே அனைத்துச் சூழ்நிலைகளும் இருந்தன. கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பான டன்ஸ்டனின் துணைகொண்டு, நாட்டில் எட்கர் நல்லாட்சியை அமைத்தார். இக் கட்டத்தில் டன்ஸ்ட்டன் என்ற இம் மாமேதையைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

கி.பி. 925-ல் கிளாஸ்டன்பரி (Glastonbury) என்னுமிடத்தில் பிறந்த டன்ஸ்டன், சீரிய ஒழுக்கமுடையவராகவும் கல்வியில் தேர்ச்சி பெற்ற நல்லறிஞராகவும் விளங்கினர். எதெல்ஸ்டன் அரசர் காலத்தில் டன்ஸ்டன் அரசவையில் சேர்க்கப்பட்டிருந்தும் அதில் நாட்டமில்லாதவராகச் சமயப் பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு, கிளாஸ்டன்பரிக்குத் திரும்பிவிட்டார். கிறித்துவ மதக்கோட்பாடுகளுக்கு இணங்கி, மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக டன்ஸ்டன் தம் சமயச்

சேவையைச் செய்து வந்தமையால் இவரது புகழ் நாடெங்கும் பரவியது. இவரை மெச்சும் வகையில் எட்மண்டு அரசர் டன்ஸ்டனைக் கிளாஸ்ட்டன்பரிக்கு மடாதிபதியாக்கினர். எட்வி அரசர் எல்கிவா (Elgiva) என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டது திருச்சபையின் விதிகளுக்கு முரண்பட்டதென டன்ஸ்டன் சொன்னதைத் தொடர்ந்து, இவர் அரசரால் நாடு கடத்தப்பட்டாரெனினும், அடுத்துவந்த அரசரான எட்கர் காலத்தில் டன்ஸ்ட்டன் திரும்ப அழைக்கப்பட்டதோடன்றிக் கான்டர்பரியின் தலைமைப் பிஷப்பாகவும் அமர்த்தப்பட்டார்.

பெனிடிக்டின் சமய விதிமுறைகளைப் பின்பற்றிய டன்ஸ்டன் இளவரசர்களுக்குச் சிறந்த ஆலோசகராகவும், சீர்திருத்தச் செம்மலாகவும் விளங்கினர். துறவு வாழ்க்கையின் தூய்மையைப் போதித்த டன்ஸ்டன் துணைகொண்டே கிறித்துவ மதத்திற்குப் பெரிதும் ஊக்கம் அளிக்கும் வகையில் எட்கர் பல மடாலயங்களைக் கட்டுவித்தார். வடபகுதியில் இருந்த ஸ்காட்டிய, அயர்லாந்து அரசர்களும் எட்கருக்கு அடங்கியே இருந்தனர். செஸ்டர் என்னும் நகரில் 'டீ' ஆற்றில் பிரிட்டனின் மற்ற அரசர்கள் எட்கரைப் படகில் வைத்து, அவர்களே படகைச் செலுத்தியதாகச் சொல்லப்படுகிறது. இந் நிகழ்ச்சியிலிருந்து எட்கரின் பெருமையை நாம் அறிய முடிகிறது. இங்கிலாந்தை ஆண்ட ஆங்கிலோ சாக்சானிய அரசர்களில் (வெஸ்ஸெக்ஸ்) எட்கர் என்ற இந்த அரசரே தலைசிறந்த கடைசி மன்னராகப் போற்றப்படுகின்றார்.

இவர் காலத்தின் இறுதியில் இங்கிலாந்து முழுதுமே எட்கரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. வேல்ஸ், ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய பகுதிகளும் இவரது ஆட்சியில் அடங்கியனவாகவே இருந்தன.

வரலாற்றில் 'அமைதி காத்தவர்' என்று புகழ் பெற்ற எட்கர் காலமானதைத் தொடர்ந்து, ஆங்கிலோ-சாக்சானியர் வீழ்ச்சியும், இடையே டேனியர்களின் இரண்டாம் தாக்குதலும் தொடங்கின. இவர் ஆட்சியே சாக்சானியர் பொற்காலத்திற்குக் கடைசிக் கட்டமாகும்.

**எட்வர்டு (தியாகி), கி.பி. 975—கி.பி.979 (Edward the Martyr)**

எட்கரின் மூத்த புதல்வரான எட்வர்டு என்பவர், அடுத்த வாரிசானர். இவர் ஆண்ட குறுகிய காலத்தில் சொல்லத்தக்க நிகழ்ச்சி எதுவும் நடக்கவில்லை. இவ் வரசர் கி.பி. 978-ல்

வேட்டையாடித் திரும்புங்காலை இவரது சிற்றன்னையால் ஏவப்பட்ட கொலையாளி ஒருவன் எட்வர்டைக் கொலை செய்தான். 'இத் தகைய படுமோசமான செயலை ஆங்கிலேயர் யாரும் செய்திருக்க முடியாது' என்று அக் கால வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக் கின்றன. எட்வர்டு கொலை செய்யப்பட்டுத் தியாகியானதால், அவரை எட்வர்ட் மார்டியர் (Edward the Martyr) என்று அழைத் தனர்.

இவரது அடுத்த வாரிசான இரண்டாம் எதெல்ரெட் (Ethel-red II) என்பவரின் காலத்தில்தான் டேனியரின் இரண்டாம் படையெடுப்புத் தொடங்கியது.

## ஆங்கிலோ சாக்சானியரின் அரசியல்முறை

உலகிலேயே மிகப் பழமையான அரசியலமைப்பு இங்கிலாந் தில்தான் தோன்றியதெனச் சொல்லப்படும் கூற்று ஒப்புக் கொள்ளப்படுமானால், அந்த அரசியலமைப்பின் தொடக்கத்தை ஆங்கிலோ-சாக்சானியரின் நிறுவனங்களிலேயே காணவேண்டி யிருக்கிறது.

ஏறக்குறைய 600 ஆண்டுகள் இங்கிலாந்தில் ஆட்சி நடாத்திய ஆங்கிலோ-சாக்சானியர், டியூடானிய இனத்தைச் சேர்ந்தவர்க ளாதலால், பின்னவரின் பழமையான அரசியல் முறையைத் தெரிந்து கொள்ள வேண்டியதும் அவசியமாகிறது.

டியூடானியர்கள், தங்கள் ஆதி இருப்பிடமான ஜெர் மனியில் பல பிரிவுகளாகப் பிரிந்து, தனித்தனிக் குழுக்களாகக் குறிப்பிட்ட இடங்களிலே குடியிருப்புகளை அமைத்திருந்தனர். அவர்களுடைய அரசியல் வாழ்க்கையில் முடியாட்சி (Monarchy) முக்கிய இடம் பெற்றிருந்தது. அக் காலத்தில், சில குறிப்பிட்ட குடும்பங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே மன்னராகி யிருந்தனர். அம் மன்னர், தம் பிரிவினர் ஒருமித்துத் தேர்ந்தெடுக் கப்பட்ட பிரதிநிதியாகவே இருந்தார். அம் மன்னருக்கு உதவியாக 'டுஸெஸ்' என்றழைக்கப்பட்ட போர்த் தலைவர்களும், 'பிரின் செப்ஸ்' என்றழைக்கப்பட்ட நீதிபதிகளும், 'டுஸென்' என்றழைக் கப்பட்ட சிறு தலைவர்களும், 'கொமிடாஸ்' என்றழைக்கப்பட்ட பணியாளர்களும் இருந்தனர். சுருங்கக் கூறின், ஒவ்வொருவரின் அதிகாரமும் நன்கு வரையறுக்கப்பட்டிருந்தது.

இவ் வரசியலமைப்புக் கூறுகளைப் பெற்றிருந்த டியூடானியர் களின் வழித் தோன்றல்களான ஆங்கிலோ-சாக்சானியர்கள்

பிரிட்டனின்மீது படையெடுத்ததையொட்டிக் காலத்திற்கேற்ற மாற்றங்களை மேற்கொண்டனர். ஆங்கிலிகள், சாக்சன்கள், ஜுட்டுகள் என்று தனித்தனியாக அழைக்கப்பட்ட இம்மூன்று பிரிவினரும் மூலத்தொடர்புடைய மூன்று கூட்டத்தினராவர். இவர்களுக்குள் இன ஒற்றுமை இருந்தபோதிலும், பொதுவான அரசு (Common Government) அமையவில்லை. இப் பிரிவுகள் ஒவ்வொன்றும் தனித்தனி அரசுகளை நாட்டின் பல பாகங்களிலே முறையாக அமைத்திருந்தன. தொடக்க காலத்திலிருந்தே, இப் பிரிவுகளுக்குள் ஆதிக்கப் போராட்டம் தோன்றி வளர்ந்திருந்தது.

'ஏழு அரசுகள்' (Heptarchy) காலத்தில் நடந்த ஆதிக்கப் போர்களே இதற்குச் சிறந்த உதாரணமாகும். மகாஆல்ஃபிரடு காலத்திலும் அவருக்குபின் வந்தோர் காலத்திலும் இங்கிலாந்திலும் படிப்படியாக அரசியல் ஒருமைப்பாட்டினைப் பெற்றிருந்தது. தொடக்கத்தில் இனப் பிரிவின் அடைப்படையில் அமைக்கப்பட்டிருந்த மன்னராட்சி, காலப்போக்கில் நில அடிப்படையில் நிறுவப்பெற்றதாக அமைந்தது. நாடு முழுவதற்கும் ஒருவரே அரசர் என்ற முறை உலகத்திற்குக் கொண்டு வரப்பட்டது. இக்காலத்தில்தான், ஆங்கிலோ-சாக்சானியர் அரசியல் முறை திட்டவட்டமாக அமைந்தது.

**அரசர் (தோற்றுவாய்)**

முதன்முதலில் அரசுகளை நிறுவிய ஆங்கிலோ-சாக்சானியத் தலைவர்கள், தங்களை 'எல்டர்மென்' அல்லது 'ஹெரிடோகா' என்று அழைத்துக் கொண்டனர். முதல் சொல் அவர்களின் சிவில் ஆதிக்கத்தையும், அடுத்த சொல் இராணுவ அதிகாரத்தையும் குறிப்பிட்டது. தங்கள் இனத்தினரின் நலன்களைப் பாதுகாக்கக் கடமை பெற்றிருந்த இத் தலைவர்கள், மக்களிலே முதல்வராகவே மதிக்கப்பட்டனர். இனத்தின் பிரதிநிதியாகக் கருதப்பட்ட இத் தலைவர்களே நாளடைவில் அதிகாரம் பெற்ற அரசர்களாயினர். Kuing (மன்னர்) என்ற சொல் Kin (இனம்) என்ற சொல்லிருந்தே வந்ததாகக் கொள்ளப்படுகிறது.

**பிரெட்வால்டா (Bredwalda) :** ஏழு ஆங்கிலோ-சாக்சானிய அரசுகள் தங்களுக்குள் ஆதிக்கப் போர்கள் நடத்திய காலத்தில் ஒரு நாட்டரசன் மற்ற அரசர்களின்மீது பலவந்தமாகத் தன் அதிகாரத்தைச் செலுத்தி, மேலாதிக்கம் (Over lordship) பெற்ற போது தம்மைப் 'பிரெட்வால்டா' என்றே அழைத்துக் கொண்டான்.

**மன்னரின் நிலை:** அரசரே மக்களில் முதன்மையானவர்; பிரதிநிதி; தலைவர். நாட்டின் பரப்பு அதிகரிக்க, அதிகரிக்க மன்னரின் நிலையும் உயர்ந்தது. இவர் தம்மை 'வைஸிஸ்' என்றும், 'இம்பரேட்டர்' என்றும், 'பேஸிலியஸ்' என்றும், ரெக்ஸ்' (Rex) என்றும் அழைத்துக் கொண்டார். இப் பட்டப்பெயர்கள் வெறும் கௌரவ ஒலிகளாக (Prestigious sound) மட்டுமல்லாமல், மக்கள்மீது மன்னர் பெற்றிருந்த ஆதிக்கத்தையும் அறிவுறுத்தின.

ஆயினும், ஆரம்ப காலத்தில் ஆங்கிலோ-சாக்சானியர் சட்டங்களின்படி, அரசருக்கும், அவரது சுதந்திரக் குடிமக்களுக்கும் (Free-citizen) பாதுகாப்பு உரிமைகளைப் பொறுத்தவரையில் அதிக வேறுபாடுகளில்லை. மற்றவர்களைப் போலவே முதலில் அரசருக்கும் 'வெர்கில்ட்' (Wergild) இருந்தது. அதாவது, மற்ற சுதந்திர மனிதனின் உயிருக்கு நிர்ணயிக்கப்பட்ட விலையைப் போன்று அரசனின் உயிருக்கும் மதிப்பு இடப்பட்டிருந்தது. அரசரைக் கொன்றவர்கள், அரசருடைய உயிரின் விலையைக் கொடுத்துவிட்டு மரணதண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம். ஆயினும், நாளாவட்டத்தில் மன்னரின் உயிரைப் போக்கிய குற்றத்திற்குக் கொலைத் தண்டனை வழங்கப்பட்டது. இதன்மூலம் மன்னரின் மதிப்புப் பெருகி வளர்ந்த தன்மை தெரியவருகிறது.

ஆங்கிலோ - சாக்சானிய அரசர்கள் மரபுரிமையின்படி (Legitimacy) தங்களின் பதவிகளைப் பெறவில்லை. நாட்டின் மூதறிஞர்களடங்கிய விடான் (Witan) என்ற சபையே மன்னர்களைத் தேர்ந்தெடுத்தது. பொதுவாக, அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களே விடானல் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க, மரபுரிமை ஒரு குறிப்பிட்ட மனிதருக்குப் பதிலாகக் குறிப்பிட்ட குடும்பத்திற்குக் கொடுக்கப்பட்டிருந்தது. பதவிப் பிரமாணம் (Oath of Office) பெறும்போது, அரசர்கள் மூன்று வாக்குறுதிகளைக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டனர். மக்களை எல்லாவித அபாயங்களிலிருந்தும் காப்பாற்றுவதாகவும் நேர்மை குன்றுமல் நீதி வழங்குவதாகவும், சமய உரிமைகளைப் பேணிக் காப்பதாகவும் ஆங்கிலோ-சாக்சானிய மன்னர்கள் வாக்களித்தனர். இந்தப் பிரமாணங்களை மீறிய அரசர்கள், மீற முயன்றவர்கள் விடான் சபையினுல் பதவி நீக்கமும் செய்யப்பட்டனர்.

**மன்னரின் வருவாய்:** தமக்கும் தம்மைச் சார்ந்த உறவினர், அலுவலர்களுக்கும், வீரர்களின் பராமரிப்பிற்கும் பணத்தொகை பெறுவதற்குத் தனியுரிமையைத் (Prerogative power) அரசர் பெற்றிருந்தார். கடலிலிருந்து கிடைக்கும் பொருள்களிலிருந்தும்,

சந்தைகள், சுரங்கங்கள், உப்பளங்கள் முதலியவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்களிலும் மன்னருக்குப் பங்கிருந்தது. புதையல்கள் அரசருக்கு உரியனவாகும். நாடு கடத்தப்பட்டவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட சொத்துகளிலிருந்தும், தண்டனை அடைந்தோர் செலுத்திய 'வைட்', 'பாட்' என்ற தண்டத் (Fine) தொகைகளிலிருந்தும் அரசருக்குப் பங்கு கொடுக்கப்பட்டது. இத்துடன் தம் சொந்த நிலங்களிலிருந்து கிடைத்த பொருளும் மன்னரைச் சார்ந்ததே. பிற்காலத்தில் 'டேன்கெல்டு' வரியும் மன்னரால் வசூலிக்கப்பட்டது.

**மன்னரின் அதிகாரங்கள்:** நாட்டின் பாதுகாப்பு அரசரின் தலையாய கடமையானதால், இவரே மக்களின் படைக்கு (Citizen army) தலைமை தாங்கும் பொறுப்பைப் பெற்றிருந்தார். நாட்டிற்கு நேரும் அபாயத்தைத் தவிர்க்க, அவசியமான காலங்களில், ஒவ்வொரு குடிமகனையும் போர்க்களப் பணிக்கு வரும்படி வற்புறுத்தும் அதிகாரம் அரசருக்கிருந்தது. அம் மக்கள் படைக்கு 'சாக்சன் ஃபிர்டு (Saxonfyrd) என்ற பெயர் கொடுக்கப்பட்டிருந்தது. அப்படையில் சேர முன்வராதவர்களுக்கு ஃபிர்டுவைட்" (Fyrdwite) என்ற தனி அபராதம் விதிக்கப்பட்டது. இந்த அபராதம் அக் குற்றம் புரிந்தோருக்கு இருந்த சொத்துநிலை பிறப்புக்குடி போன்றவற்றைக் கொண்டே நிர்ணயிக்கப்பட்டது. அரசர் கப்பற்படைகளை அமைக்கவும் அதைத் தலைமை தாங்கி இயக்கவும் அதிகாரம் பெற்றவரானார். பிற நாடுகளோடு உறவு கொள்ளுதல் உடன்படிக்கை (treaty) செய்து கொள்ளுதல் போன்றனவும் அரசரின் மற்ற பிரத்தியேக அதிகாரங்களாக விளங்கின.

கொலை, கொள்ளை, தீ வைத்தல் கலகம் போன்ற கொடுஞ் செயல்களிலிருந்து நாட்டைக் காத்து, அமைதியை நிலைநிறுத்துவது அரசரின் முக்கிய பொறுப்பாக இருந்தது. இக் குற்றங்களுக்குப் பொறுப்பானவர்கள் அரசரால் மிக்க கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். தண்டிக்கப்பட்டோர் சமூகத்திலிருந்தும் சட்டப் பாதுகாப்பிலிருந்தும் (Out Law) விலக்கப்பட்டதோடன்றி, அக் கொடியவர்களின் சொத்துகளும் பறிமுதல் செய்யப்பட்டன. இவ் வதிகாரங்களை அரசர் விடான் சபையின் அனுமதியின் பேரில் செய்தார்.

அரசரும் தம் பரிவாரங்களும் நாட்டின் பல பகுதிகளுக்குச் செல்லும்போது அதற்கான செலவை மக்களே ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற மரபும், மக்களின் உடைமைகளை (Property)

அரசர் தேவையானபோது பயன்படுத்திக் கொள்ளலாமென்ற உரிமையும், தாம் கேட்ட விலையில் பொருட்களைப் பெற்றுக் கொள்ளக்கூடிய அதிகாரமும் ஆங்கிலோ-சாக்சானிய அரசர் களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த சில தனிச் சிறப்புரிமைகளாகும்.

நாட்டின் மற்ற உயர் பதவிகளுக்கும், திருச்சபையைச் சார்ந்த பிற பதவிகளுக்கும், பொருத்தமானவர்களையோ அல்லது பொருத்தமில்லாதவர்களையோ அமர்த்தக்கூடிய அதிகாரமும் அரசருக்கிருந்தது.

**விடான்(Witan):** நாட்டு மக்களின் பிரதிநிதிகள் கூடியிருந்த இப் பேரவை, 'விடான்' என்றும், விடனுஜீமூட் (**Witanagemoot**) எனவும் அழைக்கப்பட்டது. தொடக்கத்தில் செல்வந்தர்களைக் கொண்டிருந்த இம் மன்றம் நாளாவட்டத்தில் சாதாரண தேனர் களையும் (பணியாளர்களையும்) அங்கத்தினர்களாகக் கொண் டிருந்தது. பொதுவாக, இம் மன்றத்தில் அரச குடும்பத்தினர், எல்டர்மென்கள் (ஷயரின் ஆளுநர்கள்), மன்னருடைய முக்கிய பணியாளர்கள் (தேனர்கள்), சமயத் தலைவர்கள் (ஆர்ச் பிஷப், பிஷப், மடாலய அதிபதிகள்), நாட்டின் முக்கியத் தலைவர்கள் (பிரின்ஸிபஸ்), அறிஞர்கள் (ஸ்பியன்டிஸ்) போன்றோர் அங்கத்தினர்களாக இருந்தனர். சாதாரணக் குடிமகனுக்கு இம் மன்றத்தில் இடம் கொடுக்கப்படவில்லையெனினும், ஏதோ ஒரு விதத்தில் விடான் நாட்டு மக்களின் பிரதிநிதித்துவம் (**Representation**) பெற்றதாக இருந்தது.

விடான் என்ற சொல் ஸ்பியன்டிஸ் (அறிஞர்கள்) என்ற சொல்லின் மருவலாகக் கருதப்படுவதால், விடான் என்பதற்கு அறிவு சார்ந்தோர் கூட்டமென்பதே பொருளாகிறது.

நாட்டின் நலன்களுக்காகப் பணியாற்றிய இம் மன்றத்தைக் கூட்டும் அதிகாரம் அரசருக்கே இருந்தது. இம் மன்றத்தில் அமர வேண்டியவர்கள் எவரெவரென்பதை அரசரே முடிவு செய்தார். ஆண்டுக்கொரு முறை கூட்டப்பட்ட இம் மன்றத்தைக் கலைக்கக் கூடிய அதிகாரமும் அரசருக்கே இருந்தது.

**விடானும் அரசரும்:** அரச குடும்பத்தைச் சார்ந்தோர்களில் இராணுவ சேவைக்கு ஏற்றவர்களையும் திறமைசாலிகளையும் இம் மன்றம் மன்னராகத் தேர்ந்தெடுத்தது (ஹெரால்டு கி.பி. 1066). கடைசியாக ஆட்சி புரிந்த மன்னரின் மூத்த பிள்ளை தகுந்த வயது வராதவராக இருந்து, (வெளிப்படையாக) திறமையுள்ளவராகக்

காணப்பட்டால் (எட்வி, 955), அவருக்கு வாரிசு கொடுக்கப்பட்டது. இராணுவ சேவை நாட்டுக்கு அவசியமான காலங்களில் விடான்சபை இளவயதினர்களின் வாரிசுரிமையை உதாசீனம் செய்தது (ஆல்ஃபிரடு, கி.பி. 871). ஆக ஆங்கிலோ-சாக்சானிய மன்னர்களைத் தேர்ந்தெடுப்பதில் இம் மன்றம் பெரும் பொறுப்பினைப் பெற்றிருந்தது. நன்முறையில் ஆட்சி செலுத்தாதவர்களையும் திறமையற்றவர்களையும் சமய விதி முறைகளை மீறுபவர்களையும் இம் மன்றம் பதவி நீக்கம் செய்தது (வெஸ்ஸெக்ஸ் மன்னர் சிக்பெட்டின் நீக்கம்; கி.பி. 755). சில சமயம் பதவி நீக்கம் பெற்றோரை மீண்டும் இம் மன்றம் அரசராக்கியது (வெஸ்ஸெக்ஸ் மன்னர் இரண்டாம் எதல்பெர்ட் மீண்டும் பதவி ஏற்றம்; கி.பி. 1014).

அரச காரியங்களிலே விடான் நேரிடையாகப் பங்கெடுத்துக் கொண்டது. உயர்நீதி மன்றமாக இருந்து நாட்டின் சிவில் கிரிமினல் வழக்குகளை விசாரிக்கவும் மன்னருடன் சேர்ந்து நாட்டுக்குத் தேவையான சட்டங்களை இயற்றவும் வரிவிதிக்கவும் விடான் அதிகாரம் பெற்றிருந்தது.

அந்நிய அரசுகளுடன் ஆங்கிலோ-சாக்சானிய மன்னரால் செய்து கொள்ளப்பட்ட உடன்பாடுகளுக்கும் விடான் சம்மதம் அவசியமாயிருந்தது. அரசாங்க உயர் அதிகாரிகளையும் எல்டர்மென்களையும் ஆர்ச் பிஷப் போன்றவர்களையும் அமர்த்தக் கூடிய அதிகாரத்தை விடான் அரசரோடு பகிர்ந்துகொண்டது. மன்னரால் பட்டா நிலங்கள் வழங்கப்படுவதற்கும் இம் மன்றத்தின் இசைவு தேவைப்பட்டது. ஆபத்துக் காலங்களில் தரைப்படை, கப்பற்படைகள் சேர்க்கப்படுவதற்கான அனுமதியையும் விடான் அரசருக்கு அளித்தது. வாரிசு இல்லாமல் இருந்தவர்களின் நிலங்கள், உயில் செய்யப்படாத நிலங்கள், தண்டனை அடைந்தோரிடமிருந்து பறிக்கப்பட்ட நிலங்கள் முதலியன விடானின் விசாரணையின் பின்னரே மன்னருக்குச் சேர்ப்பிக்கப்பட்டன.

விடான் சபையின் அதிகாரங்கள் மிக அதிகமாக இருந்தும் மன்னரின் செல்வாக்கைப் பொறுத்தே அவை பெருமை பெற்றன. ஆல்ஃபிரடு (871—899), எதெல்ஸ்டன் (கி.பி.925—940), போன்ற வன்மை வாய்ந்த அரசர்களின் காலத்தில் விடான் செல்வாக்குக் குறைந்ததாகவே காணப்பட்டது. அரசர் திறமையற்றவராக இல்லாத நேரத்தில் அதன்பலம் பெருகியிருந்தது.

**அரசியார் :** மன்னரின் துணைவியான அரசிக்கும் அரசியலில் நல்ல செல்வாக்குக் காணப்பட்டது. இவர்களுக்கு 'இராணி'

(Queen), 'சீமாட்டி' (Lady) என்ற பட்டப்பெயர்களும் கொடுக்கப் பட்டன. மகாஆல்ஃபிரட்டின் மகளும், மூத்த எட்வர்டின் சகோ தரியுமான எதல்பிளெடு என்பவள், வீரம்மிக்க அரசியாகச் செயல் பட்டு 'மெர்சியா சீமாட்டி' (Lady of Mercia) என்ற புகழமைந்த பெயருக்குப் பாத்திரமானதை மேற்கோளாகக் கொள்ளலாம். கி.பி. 965-ல் எட்கார் மன்னர், எல்ஃப்திரைதா என்பவளை மணம் செய்து, பட்டத்து ராணியாக்கி ஆட்சியிலே அரசியாருக்கு மிகச் சிறந்த கௌரவத்தை உண்டாக்கிக் கொடுத்ததும் இன்னொரு மேற்கோளாகும்.

**அத்லிங்குகள்:** 'அதலிங்' என்ற சொல் மன்னரின் உடன் பிறந்தோர்களையும் பிள்ளைகளையும் நெருங்கிய உறவனர்களையும் குறித்தது. இவர்கள் விடான் சபையின்அங்கத்தினர்களாகவும் நாட்டில் உயர் அதிகாரிகளாகவும் எல்டெர்மன்களாகவும் விளங்கினர்.

**தல ஆட்சிமுறை (Local Government)**

ஆங்கிலோ-சாச்சானியர் ஆட்சி அமைப்பில் மிக முக்கிய அங்கமாக இவர்களின் தல ஆட்சி முறை மதிக்கப்படுகிறது.

நாடு பல ஷயர்களாகப் (Shire) பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு ஷயரிலும் ஒவ்வொரு நீதிமன்றம் இருக்க, அவை ஷயர்மூட் (Shire Moot) என வழங்கப்பட்டன. இது 'ஸீர்கிமாட்' என்றும் பின்னர் கொமிடாடஸ் எனவும் வழங்கப்பட்டது. இம் மன்றம் ஆண்டுக்கு இருமுறை கூடியது. இம் மன்றத்தில் நில உரிமையாளர்களான சுதந்திரக் குடிமக்கள் உறுப்பினராவர். இம் மன்றம் கூட்டப்பட்ட காலங்களில் வராத அங்கத்தினர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. ஹண்ட்ரட் (நூற்றுவர்) மன்றத்தில் நீதி கோரப்பட்டு மறுக்கப்பட்ட வழக்குகள், இம் மன்றத்திற்கு வந்தன. இம் மன்றத்தில் மறுக்கப்பட்ட வழக்குகள் அரசரின் விசாரணைக்கு அனுப்பப்பட்டன.

**அதிகாரிகள்:** இம் மன்றத்தின் முக்கிய அதிகாரிகளாக ஆல்டர்மென், ஷெரீப், பிஷப் போன்றோரிருந்தனர். ஷயர் நீதிமன்றத்தின் தலைவராகவும், ஷயர் படைகளுக்கு உயர்அதிகாரியாகவும் பொறுப்புப் பெற்றிருந்த ஆல்டர்மென், பல ஷயர்கள் ஒன்று சேர்க்கப்பட்டு மாநிலங்கள்ஆனபோது ஆளுநராகவும் நியமிக்கப் பட்டார். பொறுப்புகள் அதிகமாகிவிட்ட நிலையில் ஆல்டர்மென் ஷயர் நீதிமன்றத்திற்கு வரமுடியாது போகவே, ஷெரீப் என்பவருக்கு அம் மன்றத்தின் தலைமை ஏற்கும் பணி கொடுக்கப் பட்டது.

ஷெரீப் ஆரம்பத்தில் வரி வசூலிப்பதையே முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தார். ஷயர் ஆட்சிமுறை, நீதிமன்றம் படை ஆகியவற்றின் தலைமைப் பொறுப்புடன், உள்ளூர் முக்கிய மனிதராகவும் அரசரின் பிரதிநிதியாகவும்ஷெரீப் இருந்தமையால் இப் பணியாளர் தனிச் சிறப்புடைய முக்கிய பிரமுகராகக் கருதப் பட்டார். மத்திய அரசுக்கும் தல அரசாங்கத்திற்கும் இவர் பாலமாக விளங்கினர்.

சமய குருமார்களின் பிரச்சினைகளையும் அவர்கள் சம்பந்தப் பட்ட வழக்குகளையும் மற்ற சமய குற்றங்களையும் விசாரிக்க பிஷப்புகளும், ஷயர் நீதிமன்றத்தின் முக்கிய அதிகாரிகளாக விளங்கினர்.

**ஹண்ரட் (The Hundred):** ஒவ்வொரு ஷயரும் பல ஹண்ரடு களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஹண்ட்ரட் என்ற இப் பெயர் நூறு வீடுகளடங்கிய ஒரு கிராமத்தையோ அல்லது கிராமங்களடங்கிய ஒரு நாட்டுப்புறத்தையோ குறிப்பதாக உள்ளது. ஹண்ட்ரடு களின் பரப்பெல்லையும் எண்ணிக்கையும் ஷயருக்கு மாறுபட்ட தாகவே இருந்தது.

ஒவ்வொரு ஹண்ட்ரடிலும் தனித்தனி மன்றங்கள் இருந்தன அவை 'ஹண்ட்ரட்மூட்' (நூற்றுவர் மன்றம்) (Hundredmoot) அல்லது 'ஹால்மூட்' (Hallmoot) என வழங்கப்பட்டன. சுதந்திர மானியதார் (FreeHoreevs) உறுப்பினர்களாக இருந்த இம் மன்றத்தை, 'ஹண்ட்ரட்மேன்' (Hundred Man) என்ற அதிகாரி முதலில் கூட்டிவந்த போதிலும், பின்னர் ஷெரீப்பின் உதவி யாளரே இம் மன்றத்திற்குத் தலைவராக்கப்பட்டார். அந்தந்தப் பகுதிகளிலே அமைதியைக் காத்தல், திருடர்களைப் பின் தொடர்ந்து கைப்பற்றி நீதிக்குமுன் கொண்டு வருதல் போன்ற பொறுப்புகள் இம் மன்றத்திற்கு அளிக்கப்பட்டிருந்தன.

மாதத்திற்கொருமுறை கூடிய இம் மன்றம், சிவில் கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்தது. சில வழக்குகள் இம் மன்றத் திலல் விசாரிக்கப்பட்ட பின்னரே மேல் முறையீடாக (appeal) ஷயர் மன்றத்திற்கு அனுப்பப்பட்டன.

**வில் (Vill):** ஹண்ட்ரடுகளின் உட்பிரிவுகளாக இருந்த 'வில்' என்ற அச் சிறிய பகுதியிலும் (குக்கிராமம் - Hamlet) பயிர்த் தொழிலை மேற்பார்வையிடுவதற்கும் காவல் பணிக்கும் பொறுப் பேற்றிருந்த நீதிமன்றம் இருந்தது. அக் கிராமத்து மக்கள் அதில்

உறுப்பினர்களாகவும் முக்கிய குடிகள் அதன் தலைவர்களாகவும் இருந்தனர்.

**பரோக்கள்;** நகர்ப்புறங்களிலே (பரோக்கள்) பரோ நீதி மன்றம் என்ற சபையும் இருந்தது. ஆண்டுக்கு மும்முறை கூட்டப் பட்டிருந்த இம் மன்றத்திறகுப் 'பரோரீவ்' என்பவரே தலைமை வகித்தார்.

**நகரமைப்புகள்:** திறந்த வெளிவாழ்க்கையில் பெரிதும் நாட்டங்கொண்டிருந்த ஆங்கிலோ-சாக்சானியர், சமூக வாழ்க்கையின் அடிப்படையில் பல நகர அமைப்புகள் (நாட்டுப்புறக் கிராமங்கள்) ஏற்படுவதற்கும் காரணமாயினர்.

நிலங்களை 'ஃபீல்டு' (Field), பண்ணைகளை 'ஹாம் (Ham), இடத்தை 'ஸ்டெட்' (Stead), இருப்பிடத்தைக் காட் (Cot) எனப் பெயர்கொடுத்த ஆங்கிலோ-சாக்சானியரின் நாட்டுப்புற வாழ்க்கை ஒருவகையான கூட்டுறவு முயற்சிக்கு முன்னோடியாக இருந்தது.

'வேலியில்லா வேளாண்மை' (Open field) என்ற முறையிலே பயிரிடப்படும் நிலம் மூன்று பெரும் வயல்களாகப் (Three field system) பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பெருவயலிலும் பல்வேறு துண்டு நிலங்கள் இருந்தன. ஒவ்வொரு கிராமவாசிக்கும் அவரவர் தகுதிக்கேற்ப ஒவ்வொரு பெருவயலிலும் துண்டு நிலங்களி லிருந்தன. ஒரே சமயத்தில் இரு பெருவயல்களில் விவசாயம் செய்யப்பட, ஒரு பெருவயல் மட்டும் தரிசாக விடப்பட்டது. ஒவ்வொரு விவசாயக் காலத்திலும் ஒரு பெருவயல் தரிசாக விடப்பட்டதால், இழந்துவிட்ட சத்தை அந்நிலம் இதனால் பெறு மென நம்பப்பட்டது.

ஒவ்வொரு கிராமத்திலும் இருந்த புல்களடங்கிய பசுந்தரை, கால்நடைகளுக்கான பொது மேய்ச்சல் நிலங்களாயின. கிராமத் தைச் சுற்றிலுமிருந்த காடுகள், இம் மக்களுக்கு விறகாகப் பயன் பட்டன.

நாட்டுப்புறங்கள், கூட்டுறவு முறையில் செயல்பட வேண்டிய அவசியம் பெற்றிருந்தமையால், தங்களுக்கு நன்மை பயக்கும் வகையில், சில அதிகாரிகளைப் பெற்றிருந்தன. அவர்களை 'ரீவுகள்' (Reeves) என அழைப்பர். தங்களுக்குள் எழும் சச்சர வுகளைத் தீர்த்துக்கொள்ள, நகர அமைப்புகள் தனி மன்றங் களையும் (Townmoot) கொண்டிருந்தன.

**காவல் முறை:** அமைதியைப் பேணிக்காக்கும் வகையில் பல வழி முறைகள் ஆங்கில-சாக்சானியர்களால் பின்பற்றப் பட்டன.

ஒவ்வொரு குடிமகனும் தன்னைத்தானே காத்துக்கொண்ட முறைக்கு 'கிரித்' (Grilh) என்றும், சமுதாயம் தன்னைத்தானே காப்பாற்றிக் கொண்டமைக்கு ஃபிரித் (Frılh) என்றும் பெயர்கள் கொடுக்கப்பட்டிருந்தன. தொடக்கத்தில் ஒவ்வொரு தனி நபரும் சமுதாயத்தில் தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிலையிலிருந்து நாளாவட்டத்தில் மன்னரின் பாதுகாப்புப் பெற்ற நிலைக்குக் 'கிரித்தும்', ஃபிரித்தும் என மாற்றப்பட்டுவிட்டன.

குற்றவாளியை நீதிமன்றத்தின்முன் கொண்டுவருவதற்கான கூட்டுப் பொறுப்பு, முதலில் 'மாக்ந்' (குற்றவாளிகளின் உற வினர்கள்) என்போரிடமே இருந்தது.

நாட்டில் ஒழுக்க நெறியையும் அமைதியையும் உருவாக்க பல பொறுப்புறுதிக் குழுக்கள் (Frith Borth) அமைக்கப்பட் டிருந்தன. ஒவ்வொரு சுதந்திரக் குடிமகனும் அதில் சேர வற் புறுத்தப்பட்டதோடன்றி, அமைதியைக் காப்பதாகவும் ஒழுக்க நெறியில் வாழ்வதாகவும் உறுதிமொழி அளிக்க ஏற்பாடு செய்யப் பட்டது. அக் குழுவைச் சார்ந்தவர்களில் எவர் மீதாகிலும் குற்றம் சுமத்தப்பட்டால், அந் நபரை நீதிமன்றத்தின் முன் னிலையில் நிறுத்துவதாக, அக் குழுவினர் அரசருக்கு உறுதிப் பிரமாணம் செய்து தந்தனர். அக் கடமையில் தவறியோருக்கு அரச ருடைய பாதுகாப்பு மறுக்கப்பட்டது.

**தைத்திங்ஸ்:** நாட்டில் இன்னொருவகையான குழுவும் இருந் தது. பதின்மர் அடங்கிய அக் குழுக்களை 'தைத்திங்ஸ்' (Tithings) என்று அழைத்தனர். இக் குழு குற்றவாளிகள் தண்டனை எதுவும் அடையாது நீதிக்குத் தப்பி ஓட முயலும்போது, அவர்களைப் பின்தொடர்ந்து கைப்பற்றிக் கொணருவதே தம் முக்கியக் கடமை யாகக் கொண்டிருந்தது. இக் குழுவுக்கு 'தைத்திங்ஸ்மேன்' (Tithingsman) என்பவரே தலைவர். தங்களில் எவராது ஒருவர், நீதிமன்றத்திற்கு வந்து பதில் கூறவேண்டுமென்று உத்தரவிடப் பட்டிருந்தால் அவர் ஆஜராவதற்குக் கூட்டு ஜாமீனாக இச் சங்கம் இருந்தது.

**பிரபுக்களின் பொறுப்பு:** உயர்குடி மக்களான பிரபுக்களைச் சார்ந்தோர் குற்றம் செய்தால், அம் மக்களைத் தண்டிப்பதற்கான அதிகாரம் அப் பிரபுக்களுக்கே வழங்கப்பட்டது. அப் பிரபுக்கள்

ஹ்லாஃபோர்ட்' என அழைக்கப்பட்டனர். நிலமற்றவர் எல்லோரும் தங்களின் சார்பில் தங்களின் நன்னடத்தைக்குப் பொறுப்பேற்க ஒவ்வொருவரும் ஒரு பிரபுவை நியமித்துக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டனர். நிலமற்றவர்கள் விசாரணையின்போது ஷயர் மன்றங்களிலே அந்தப் பிரபுவின் பெயரை அறிவிக்க வேண்டுமென்றும், தவறினால் தண்டனைக்குரியவர்களாவரென்றும் (சட்டப் பாதுகாப்பு இழப்பு) தெரிவிக்கப்பட்டிருந்தது.

பிரபுக்களைக் கட்டுப்படுத்தும் வகையில் சில சட்டங்களும் நடைமுறையில் இருந்தன. உத்தரவாதமளிக்கும் பிரபு, நீதியின் முன்பு குற்றம் சாட்டப்பட்டவரைக் கொண்டுவந்து நிறுத்த வேண்டும். அக் குற்றவாளி நாட்டை விட்டுத் தப்பியோடிவிட்டால், உத்தரவாதம் கொடுத்திருந்த பிரபு அதற்கான அபராதத்தை ஏற்க வேண்டும். ஓடிப் போனவன் ஓராண்டிற்குள் அப் பிரபுவால் பிடிக்கப்பட்டு நீதியின் முன் நிறுத்தப்பட்டால், அப் பிரபு ஏற்கனவே செலுத்தியிருந்த அபாராதத் தொகை திருப்பிக் கொடுக்கப்படவேண்டும்.

**நீதி நடப்பு:** எல்லா நீதி விசாரணை முறையிலும் ஒரே மாதிரியான வழக்கம் இருந்தது. வழக்குகளின் உண்மையான செய்திகளைக் கண்டறிவதும் ஒவ்வொரு வழக்கிற்கும் பயன்படுத்தக்கூடிய சட்டத்தை அறிவிப்பதுமே அவ்வழக்கங்களாகும்.

**குற்றங்களின் பிரிவு:** ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் வழக்குகள் திட்டவட்டமாகச் சிவில் (Civil) என்றும், கிரிமினல் (Criminal) என்றும் பிரிக்கப்படவில்லையெனினும், பெயரளவுக்கு அந்தப் பாகுபாடு இருந்திருக்கிறது. எனினும், குற்றங்கள் வேறு வகையிலே இரண்டு பிரிவுகளாக விசாரிக்கப்பட்டன. பணம் கொடுத்து ஈடுசெய்யக்கூடிய குற்றங்கள் (Botworthy), பணம் கொடுத்து ஈடு செய்யக் கூடாத குற்றங்கள் (Botless) என்பவையே அவை. ஒருவரின் உடலுக்கு ஆபத்து நேரும் வகையில் இன்னொருவர் குற்றம் செய்திருப்பாரானால் தீங்கிழைக்கப்பட்டவருக்கு குற்றத்தைச் செய்தவர் பணம் கொடுத்துத் தனது குற்றத்தை ஈடு செய்யலாம் (வெர்கில்டு). அந்தநஷ்டஈடு தீங்கிழைக்கப்பட்டவர் சமுதாயத்தில் பெற்றிருந்த தகுதிக்கும் அதே போல் தீங்கிழைத்தவரும் சமுதாயத்தில் பெற்றிருந்த தகுதிக்கும், அதேபோல் தீங்கிழைத்தவரும் சமுதாயத்தில் பெற்றிருந்த நிலைக்கும் ஏற்ப அமைந்திருந்தது. கொள்ளையடித்தல், அரசரால் தண்டிக்கப்பட்டோருக்குப் பாது

காப்பளித்தல் போன்ற சில குற்றங்கள் கடுமையாகக் கருதப் பட்டன. இக் குற்றங்களைச் செய்தோர் பணம் கொடுத்து ஈடு செய்ய இயலாத வகையில் அரசரால் விசாரிக்கப்பட்டனர்.

குற்றம் சாட்டப்பட்டவர், தம்முடைய உறுதிமொழிமூல மாகவும் மற்றும் உண்மை கூறுவதாக ஊர்ஜிதப்படுத்தும் பன்னிருவர் (பொறுப்புறுதிக் குழுக்கள்) உறுதி மொழியாலும் தாம் குற்றமற்றவர் எனத் தெளிவுபடுத்தலாம். குற்றம் புரிந்தவர் கையுங் களவுமாகப் பிடிபட்டாலோ, அல்லது குற்றம் புரிந்ததற்குச் சான்றுகள் இருந்திருந்தாலோ அக் குற்றவாளி சோதனை முறைக்கு (tria! by ordeal) உட்படுத்தப்படார்.

**வழக்கு முறை:** நீதிமன்றம் கூடுவதற்கு (ஷயர் நீதி மன்றம் ஹண்ட்ரட் நீதி மன்றம், பரோ நீதி மன்றம்) ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு முன்னர் குற்றம் சாட்டப்பட்டவர் விசாரணைக்கு வரும்படி அழைக்கப்படுவார். அவர் வரத் தவறினல் குற்றம் சாட்டியவர் (வாதி) குற்றம் சாட்டப்பட்டவரின் (பிரதிவாதி) வீட்டிற்குச் சென்று நீதிமன்றத்திற்கு அழைக்கவேண்டும். பிரதி வாதி வர மறுத்தால் உள்ளூர் அதிகாரிகளின் உதவியைக் கொண்டு அவரை ஆஜர்படுத்தவேண்டும்.

சில சமயங்களிலே சோதனை முறை தவிர்க்க முடியாததாக இருந்தது. சோதனை முறை இறைவனின் தீர்ப்பென அப்பொழுது நம்பப்பட்டது. சோதனை முறை மூன்று வகைப்பட்டனவாகும். பழுக்கக் காய்ச்சிய இரும்பு, கொதிக்கும் அல்லது குளிர்ந்த தண்ணீர், விஷம் கலந்த உணவு (கார்ஸ்னீட்), மேற்கண்ட ஏதாவ தொரு சோதனைக்குக் குற்றம் சாட்டப்பட்டவர் உட்படுத்தப்படு வார். எவ்வகையான சோதனை முறையைப் பயன்படுத்தவேண்டும் என்பதையும் எந்தெந்தக் குற்றம் சாட்டப்பட்டோர் இம் முறைக்கு உட்படவேண்டும் என்பதையும் நீதிமன்றமே முடிவெடுத்தது. காய்ச்சின இரும்பு கடுந்தீர்வு முறைக்குட்பட்டவர்கள் பழுக்கக் காய்ச்சப்பட்ட ஓரிரும்புக் குண்டைக் குறிப்பிட்ட தூரம் எடுத்துச் செல்ல வேண்டும். மூன்று நாட்களுக்குள்அக் காயம் மறைந்து விட்டால், அவர் குற்றமற்றவராவார். அதே போல் கொதிக்கின்ற நீரில் குறிப்பிட்ட அளவு வரை குற்றம் சுமத்தப்பட்டோர் கையை உள்ளே விடவேண்டும். மூன்று நாட்களுக்குப் பிறகு அத் தீப்புண் ஆறிவிட்டால் அவர் குற்றமற்றவராகக் கருதப்பட்டார்: குளிர்ந்த நீர் சோதனைக்கு உட்படுத்தப்பட்டோரின் கைகளும் கால்களும் கட்டப்பட்டுத் தண்ணீரில் போடப்பட்டார்கள். ஒரு குறிப்பிட்ட ஆழம் வரை அவர் மிதக்காமல் சென்றால் குற்றமற்ற வராகக் கருதப்பட்டார்.

சில சமயங்களில் இச் சோதனைமுறை தவிர்க்கப்பட்டது. குற்றம் சாட்டப்பட்டோர் சான்றோர்களைக் கொண்டு வந்து நிறுத்தித் தம்மை நிரபராதி என ஒப்புக்கொள்ளச் செய்தாலோ தங்கள் உறுதிமொழியை மெய்ப்பிக்கும் வகையில் அதற்கான சாட்சியங்களை (Empurgators) கொண்டு வந்தாலோ கடுந்தேர்வு முறையிலிருந்து அக் குற்றம் சாட்டப்பட்டோர் விலக்கப் பட்டனர்.

குற்றங்கள் விசாரிக்கப்பட்டபோது உண்மைச் சான்று பகர் வதற்கெனச் சாட்சியங்களின் குழுவும் தேவைப்பட ஒவ்வொரு பரோவிற்கும் சாட்சியம் கூறுபவர்களாக 36 நபர்களும் ஒவ்வொரு ஹண்ட்ரடிற்கும் 12 நபர்களும் நியமனம் பெற்றிருந்தார்கள். இச் சாட்சிகளின் சூளுரையே வழக்குகளுக்கு உறுதுணையாக இருந்தது.

குற்றங்கள் நிருபணமான பின்னர், தண்டனைகள் கொடுக்கப் பட்டன. உடலுக்கு ஊறு விளைவித்ததற்காகப் 'பாட்' என்னும் ஈட்டுத்தொகை வசூலிக்கப்பட்டது. அமைதியைக் குலைத்திருந் தால் 'வைட்' என்ற அபராதம் வசூலிக்கப்பட்டது. கடுங்குற்றங் களுக்கு மரண தண்டனையும் நாடு கடத்தலும் விதிக்கப்பட்டன.

**மதிப்பீடு:** ஆங்கிலோ-சாக்சானியர் அரசியல் முறை பத்தாம் பசலித்தனமாகவே இருந்தது. ஒவ்வோர் அரசாங்கத்தின் சிறப்பும் அதனை ஆண்ட அரசரின் குணவியல்புகளைப் பொறுத்தே இருந்தது. அரசருக்கென்று ஒரு குறிப்பிட்ட மானியமோ அன்றி நிலப்படையோ இல்லை. பெருங்குடியானவர்களான தேனர் களும் ஆல்டர்மென்களும் ஷெரீப்புகளும் அரசருக்கு விசுவாசமாக நடந்ததாலேயே அரசு சிறப்புற்றிருந்தது.

வருங்கால ஜனநாயக ஆட்சிக்கு வித்திடுவதுபோல் விடான் சபை செயல்பட்டிருந்தபோதும் அதன் வெற்றியும் தோல்வியும் அரசரைப் பொறுத்தே இருந்தது.

இவர்களின் நீதிமுறையும் பழங்காலத்தை ஒட்டியே இருந்தது. நாடு முழுமைக்கும் சட்டம் பொதுவானதாக இல்லாமல், அந்தந்த மாவட்டத்தின் பழக்க வழக்கமாகவே இருந்தது. கடும் சோதனைமுறை 'இறைவன் உண்மையை வெளிப் படுத்துவார்' என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் இருந்ததே தவிர, சீரிய நீதி விசாரணையாக இல்லை.

குறைகள் பல இருந்திருப்பினும் ஆங்கிலோ-சாக்சானியரின் அரசியல் முறை 'இங்கிலாந்து அரசியலமைப்பின் ஆணிவேர்' என்பதையும் மறுப்பதற்கில்லை.

# 3. அந்நியர் படையெடுப்பு டேனியர் நார்மானியர் காலம்

## (டேனியர்களின் படையெடுப்பு)

டேனியர்களின் படையெடுப்பு, இங்கிலாந்தின் வரலாற்றில் ஒரு சிறு பகுதியாயினும், அஃது அந் நாட்டின் ஒற்றுமைக்கு மறை முகமாக அமைந்த காரணத்தால் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப் படுகின்றது.

கி.பி. 787-ல் முதலாவது டேனியர்த் தாக்குதல் இங்கிலாந் தின்மீது நடைபெற்றதென்பதையும் கி.பி. 851-ல் மெர்சியா, நார்த்தம்பிரியா போன்ற அரசுகளை அவர்கள் கைப்பற்றினார்கள் என்பதையும் மகா ஆல்ஃபிரட் காலத்தில் அவர்களின் கொட்டம் ஓரளவு அடக்கப்பட்டதையும் நாம் அறிவோம்.

மகா ஆல்ஃபிரட்டின் மகனை மூத்த எட்வர்டு (கி.பி. 900—924) காலத்தில் இங்கிலாந்திலிருந்த டேனியர்களின் பகுதிகள் கைப்பற்றப்பட்டன என்பதை நாம் நினைவுகூரவேண்டும். கொலை, கொள்ளை போன்ற தொழில்களை விட்டுவிட்டு விவசாயம், வியா பாரம் போன்றவற்றில் டேனியர்கள் ஈடுபடத் தொடங்கியது குறிப்பிடத்தக்கதாகும்.

### படையெடுப்பிற்கான சூழ்நிலை

கி.பி. 975-ல் எட்கார் மன்னர் ஆண்ட வரையில் நாட்டில் அமைதியான சூழ்நிலை நீடித்தாற்போல் காணப்பட்டது. அச் சூழ்நிலை தொடர்ந்து நீடிக்க வேண்டுமாயின், திறமையும் தகுதியும் கொண்ட முடிமன்னர் ஒருவர் அடுத்த வாரிசாக வரவேண்டும். ஆயினும், அடுத்து நடந்த நிகழ்ச்சிகள் அந்த நம்பிக்கையைப் பொய்ப்பித்ததோடு, இரண்டாம் முறையாக இங்கிலாந்துமீது படையெடுத்த டேனியர்த்தாக்குதல்களுக்கும் ஏதுவாக அமைந்தது.

**எட்வர்டு தியாகி:** காலஞ்சென்ற எட்கார் மன்னருக்கு இரு மனைவியர் இருந்தனர். இரு பெண்டிருக்குமே ஒவ்வோர் ஆண்

மகவு பிறந்தது. மூத்த மகனை எட்வர்டு (தியாகி) என்பவரே அடுத்த அரசராக மூடிசூட்டப் பெற, இவரது சிற்றன்னை அதனை ஏற்றுக் கொள்ள மறுத்து உள்ளூரக் குமுறி வந்தார். கி.பி. 978ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் ஒரு நாள் எட்வர்டு வேட்டையாடிவிட்டுத் திரும்பும் வழியில் தம் சிற்றன்னைக்குச் சொந்தமான கார்பி (Corbe) கோட்டையை அடைந்து தாகசாந்தி செய்துகொள்ள பானம் கேட்டார். தம் சிற்றன்னையால் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட மதுரசத்தை (wine) எட்வர்டு பருகிக் கொண்டிருந்தபோது, அவளால் ஏவப்பட்ட வேலையாள் ஒருவன், முன்னேற்பாட்டின்படி அரசரை முதுகுப்புறமாகத் தாக்கிக் கொன்றுவிட்டான். 'இத்தகைய படுமோசமான செயலை ஆங்கிலேயர்கள் யாரும் செய்திருக்க முடியாது' என்று அக் காலத்திய வரலாற்றுக் குறிப்புகளில் எழுதி வைக்கப்பட்டுள்ளது. இங்ஙனமாக, எட்வர்டு பரிதாபகரமாகப் படுகொலை செய்யப்பட்டமையால், இவருக்குத் 'தியாகி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

**எதல்ரெடு அன்ரெடி:** கொலைகாரி சிற்றன்னையின் பிள்ளையான எதல்ரெடு அன்ரெடி (Ethelred the Unready) என்பவரே, இங்கிலாந்தின் அடுத்த வாரிசாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். 'நல்ல விதமான ஆலோசனை கூறுவதற்கு ஆளற்ற எதல்ரெட்' என்ற பொருளையே அவரது பெயர் உணர்த்தியது.

இம் மன்னரின் ஆட்சிக் காலத்திலேயே இரண்டாம் டேனியர்ப் படையெடுப்பு நடந்ததால், இவரது காலம் இந் நாட்டின் வரலாற்றில் சபிக்கப்பட்ட காலமாகக் கருதப்படுகிறது.

எதல்ரெட் அன்ரெடிக்கு வயது ஏற ஏறக் குணச் சிறப்புகள் குறையத் தொடங்கின. இவர் ஆடம்பரத்தை விழைந்தவர்; எவரையும் நம்பாதவர்; உறுதியான கொள்கை அற்றவர் ஆதிக்க வெறியும் கொடிய குணங்களும் ஒருங்கே இம் மன்னரிடம் குடிகொண்டிருந்தமையால், இவரது ஆட்சி மாசுபட்டதாக அமைந்தது. நாட்டில் அமைதியின்மை, அரசவையிலேயே பூசல், மன்னரின் கொடுங்கோன்மை போன்ற சாபக்கேடுகள் இங்கிலாந்தில் இருந்துவர, இவற்றைத் தக்க தருணமாகக் கொண்டு டேனியர்கள் இரண்டாம் முறையாகப் படையெடுத்தனர்.

**படையெடுப்பின் கால நிலைகள்:** எதல்ரெடின் (கி.பி. 978–கி.பி. 1016) முப்பத்தெட்டு ஆண்டுகள் ஆட்சிக் காலத்தில் முப்பத்தாறு ஆண்டுகள் டேனியரின் படையெடுப்பால் இங்கிலாந்து அலைக்கழிக்கப்பட்டிருந்தது. இம்முறை இங்கிலாந்தைப்

பாதித்திருந்த டேனியப் படையெடுப்பு, மூன்று நிலைகளில் அமைந்திருந்தது. கி.பி. 980ஆம் ஆண்டிலிருந்து கி.பி. 991ஆம் ஆண்டு வரையில் கொள்ளையடிப்பதே அப் படையெடுப்பாளர்களின் முக்கிய நோக்கமாக இருந்தது. பின்னர், கி.பி. 1013 ஆம் ஆண்டு வரையில் இங்கிலாந்தில் ஆதிக்கம் பெறுவதற்காக டேனியர்கள் கடுமையான போர்களைச் செய்யவேண்டியிருந்தது. இறுதியாக, இங்கிலாந்து கி.பி. 1042 ஆம் ஆண்டு வரை டேனியர் ஆட்சிக்குட்பட்டது.

**காரணமும் நடப்பும்:** வைக்கிங்குக் குடியைச் சேர்ந்த ஹெரால்டு ப்ளூ டூத் (Harrold Blue Tooth) என்பவர், டென்மார்க்கின் அரசராக இருந்த காலத்தில் நார்வேயும் இவரால் கைப்பற்றப்பட்டிருந்தது. நார்வேயிலிருந்து விரட்டப்பட்டிருந்த மற்ற வைக்கிங்குகள், கொள்ளைத் தொழிலில் ஈடுபட்டு, கி.பி. 980ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே இங்கிலாந்தின் கரைகளைத் தாக்கத் தொடங்கியிருந்தனர். டோர்செட் பகுதியில் ஒரு முறை இந்த வைக்கிங்குகள் கரையிறங்கி, அதன் சுற்றுப்புறப் பகுதிகளில் கொலை, கொள்ளை முதலிய கொடுமைகள் புரிந்து சீரழித்தனர். நார்வேயின் நாடோடிகள் இங்ஙனம் கொள்ளையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தமையால், ஹெரால்டு ப்ளூ டூத், தம் மகனை ஸ்வெயின்ஃபோர்க் பியர்டு (Swein Fork Beard) என்பவரால் கொலைசெய்யப்பட்டார். கிறித்துவரல்லாதவரும் இரத்த வெறிபிடித்தவரும் பேராசை கொண்டவருமாக ஸ்வெயின், டென்மார்க்கிற்கு அரசரானதைத் தொடர்ந்து, நார்வே வைக்கிங்குகளின் நார்ஸ்மென் (Norsemen) வழியைப் பின்பற்ற விழைந்தார். கொள்ளையடிப்பதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு ஸ்வெயினால் ஏவிவிடப்பட்ட டேனியர்கள், இங்கிலாந்தில் கரையிறங்கி ஆறுகளின் வழியாக நாட்டினுள் நுழைந்து பேம்பர்க் (Bamburgh), இப்ஸ்விச் (Ipswich), பாத் (The Bath), ஆக்ஸ்போர்டு, எக்ஸ்டெர், கான்டர்பரி போன்ற இடங்களைக் கொள்ளையடித்து நாசமாக்கினர். செஸ்டரிலிருந்து சௌத்தாம்ப்டன் வரையிலுள்ள துறைமுகங்களை ஆண்டுதோறும் கொள்ளையடிப்பதே டேனியர்களின் பிரதானத் தொழிலாக இருந்தது.

அரசரான எதல்ரெடும் அவரது அரசவையும் விடான் மன்றமும் செய்வதறியாது செயலற்று இருந்தபோது, கி.பி. 991ஆம் ஆண்டில் டேனியர்கள் தொன்னூற்று மூன்று கபபல்களில் வந்து இங்கிலாந்தை மீண்டும் தாக்கினர். வெஸ்ஸெக்ஸைச் சேர்ந்த பிரிநாத் என்ற பிரபு, மால்டன் (Maldon) என்னு

மிடத்தில், டேனியர்களைத் தாக்க முற்பட்டபோதும், அரசர் எதல்ரெட் திறனற்று இருந்தார். போர்க்களம் புக மறுத்த இந்தக் கோழையின் படைவீரர்களும் டேனியர்களை எதிர்ப்பதில் ஆர்வம் காட்டவில்லை; அப் படையினரை நடத்தக்கூடிய பொறுப் பினைப் பெற்றிருந்த ஆங்கிலத் தலைவர்களும் செய்வதறியாது திகைத்திருந்தனர். அரசரைச் சுற்றியிருந்த ஆலோசகர்களும் பணம் கொடுத்து எதிரிகளைத் திருப்பியனுப்பிவிடாலாமென்று யோசனைகளைச் சொன்னார்கள். டேனியர்களின் தாக்குதல்களி லிருந்து தம் நாட்டைக் காத்தே தீரவேண்டும் என்ற அவசியம் நேர்ந்தபோது தம் மக்கள்மீது டேன் வரியை விதித்து, அதனால் வசூலான கணிசமான தொகையை அவர்களுக்குக் கொடுத்து நாடு திரும்பச் செய்துவந்தார்.

கி.பி. 1013ஆம் ஆண்டுவரையில் எதல்ரெட் ஆறு முறை 'டேன் கில்டு' வரிகளை வசூலித்து 18,000 பவுண்டு வெள்ளிக் காசு களை டேனியருக்குப் பரிசாகக் கொடுத்து, அவர்களைச் சமாதானப் படுத்த நினைத்தாரென்றால், அரசரின் கையாலாகாத் தன்மையை என்னென்பது? அஃது இம் மன்னரின் உதவாக்கறை ஆட்சியைக் காட்டியது.

இலஞ்சம் கொடுத்து வாங்கப்படும் சமாதானம் என்றைக்கும் நிலைக்குமா? பொருளாசை கொண்டிருந்த டேனியர்கள், மேலும் மேலும் தாக்கத் தொடங்கினர். உள் நாட்டில் புகுந்து மக்களைக் கைப்பற்றித் தங்கள் கப்பல்களிலேயே சிறைவைத்தனர்.

கி.பி 1011ஆம் ஆண்டு ஸ்வெயினின் படைத்தலைவரான தர்க்கில் (Thurkill) என்பவர், கான்டர்பரியை மீண்டும் தாக்கிய தோடு, தலைமை ஆர்ச் பிஷப்பான ஆல்பீக் (Albhege) என்ப வரைச் சித்ரவதை செய்து படுகொலை செய்தபோதும் திருச்சபை யினர் 'எதிரிகளை முறியடிக்க இறைவன் வழிகாட்டுவார்' என நம்பி மூன்று நாள் உண்ணா நோன்புடன் ஆண்டவனைப் பிரார்த்தனை செய்ய அரசரால் தூண்டப்பட்டார்கள் என்றால், அதனை என் னென்பது?

டேனியர்களின் படையெடுப்புத் தீவிரத்தை ஓரளவு சமா ளிக்க, எதல்ரெட் சில டேனியர்களைப் பாதுகாப்புப் படையினராக வைத்திருந்தார். இவர்களும் எதிரிகளுக்கு உளவு சொல்பவர் களாகவே இருந்தனர், அரசருக்கு நெருங்கிய நண்பராகவும் மைத்துனராகவும் பிரதம ஆலோசகராகவும் இருந்த எட்ரிக் (Edrick) என்பவரும், நாட்டைக் காட்டிக் கொடுக்கும் கும்பலில்

ஒருவராகத்தானிருந்தார். தம் சுயநலத்திற்காகவும், பேராசை கொண்டும், பகைவர்களிடம் இரகசியத் தொடர்பைக் கொண்டிருந்த எட்ரிக், தக்க தருணத்தை எதிர்நோக்கியிருந்த வேளையில் அரசர் எதல்ரெட் ஒரு படுபாதகச் செயலுக்குக் காரணமானார். தொடர்ந்து நடந்து வந்த டேனியர்களின் தாக்குதலால் ஆத்திரமுற்ற இவ் வரசர், கி.பி. 1012ஆம் ஆண்டில், வெஸ்ஸெக்ஸில் குடியிருந்த சில டேனியக் குடும்பங்களை 'செயின்ட் பிரைஸ் தினத்தன்று' (St. Price day) படுகொலை செய்யும்படி ஆணையிட்டார். கொலையுண்ட டேனியர்களில் டென்மார்க் அரசரான ஸ்வெயினின் சகோதரியும் ஒருவராக இருந்ததால், அதுவே, இம் முறை டேனியர் படையெடுப்பிற்கு இறுதிக் காரணமாகவும் அமைந்தது.

திறமை வாய்ந்த அரசரோ, தம்மை எதிர்க்கக் கூடிய படைகளோ இங்கிலாந்தில் இல்லாதிருக்க, இப் படுகொலையினால் ஆத்திரமடைந்த ஸ்வெயின், தம் மகன் கான்யூட்டுடன், கி.பி. 1013ஆம் ஆண்டு பெரும் படைகொண்டு, தாமாகவே இங்கிலாந்தின் மீது படையெடுத்தார். நார்தம்பிரியா, மத்திய நிலங்கள் வழியாக டேனியர் படைகள் இலண்டன் நகரை நெருங்கிவர, எதிர்க்கத் திறனில்லாத அரசர் எதல்ரெடு, தம் இளைய மனைவியான எம்மாவுடன் (Emma) நார்மண்டிக்கு (Normandy) ஓடிவிட்டார். வட இங்கிலாந்து முழுவதையும் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்துவிட்ட ஸ்வெயினைத் தடுத்து நிறுத்த எவரும் இல்லாத நிலையில், துரோகி எட்ரிக்கின் தூண்டுதலால் நாட்டின் மணிமகுடத்தை இவருக்கே கொடுக்க விடான் சபை இசைந்தது. ஆயினும், தம் வாளின் வலிமையால் இங்கிலாந்தின் அரச பீடத்தைப் பெற்றிருந்த ஸ்வெயின் அதிக நாட்கள் வாழவில்லை. குதிரை மேலிருந்து விழுந்த அதிர்ச்சியில் பலத்த காயமடைந்த ஸ்வெயின், கி.பி. 1014ஆம் ஆண்டு காலமானார்.

முன்பு நாட்டைக் காப்பதிலிருந்து தவறிவிட்ட எதல்ரெடு, இச் சந்தர்ப்பத்தில் நாடு திரும்பினார். ஸ்வெயின் காலமாகிவிட்டபடியால், டேனியர்களோடு பலப்பரீட்சை நடத்திப் பார்க்கலாமென்ற எண்ணத்தில் எதல்ரெடு இங்கிலாந்து திரும்பியபோது, இலண்டன் மீண்டும் இவரை ஏற்றுக்கொண்டது. ஆயினும், டேனியர்களை நாட்டிலிருந்து விரட்டும் முயற்சியில் வெற்றி பெறாதவராக எதெல்ரெடு கி.பி. 1019ஆம் ஆண்டில் காலமானார். ஸ்வெயினும் எதெல்ரெடும் அடுத்தடுத்துக் காலமாகிவிட்டபடியால் இக் கட்டத்தில் இரு பிரிவினரிடையிலும் புதிய தலைவர்கள் தோன்றலாயினர்.




**எட்மண்டு அயர்ன்சைடு:** இழந்த ஆதிக்கத்தை ஆங்கிலேயர்கள் பெறவிடாமல் தடுப்பது ஸ்வெயினின் மகனை கான்யூட்டுக்குக் கடமையாக இருந்தது. எதல்ரெடின் மகன் இளவரசரான எட்மண்டு அயர்ன்சைட்டுக்குத்(Edmund Ironside)தம்தந்தையால் செய்யப்படாத பணியைச் செய்து முடிக்க வேண்டிய கடமை இருந்தது. இவ்விரு கடமை வீரர்களும் மோதிக்கொண்டதை அடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சில மாதங்களுக்குப் பெரும் நிகழ்ச்சிகளாக அமைந்தன. ஸ்வெயின் காலமாகி விட்டிருந்தும், எப்படியும் இங்கிலாந்தில் டேனியர்களின் ஆதிக்கத்தை நிலை நிறுத்த வேண்டுமென நினைத்த கான்யூட், சிறந்த வீரர்களைக் கொண்ட படையினை அமைத்து இலண்டன் பகுதியைத் தாக்க ஆரம்பித்தார். எதல்ரெடுக்குப் பின்னர், ஆங்கிலேயர்களால் தலைவராக ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த எட்மண்டு அயர்ன்சைடும் தமக்கு ஆதரவாக இருந்த இலண்டன், கிழக்கு ஆங்கிலியாப் பகுதிகளில் படைகளைச் சேகரித்துக் கான்யூட்டை எதிர்த்தார். வீரமும் விவேகமும் கொண்டிருந்த எட்மண்டு, ஓராண்டுக் காலத்திற்குள்ளாக டேனியர்களோடு ஐந்து இடங்களில் மோதியும் எட்ரிக் என்ற அந்தத் துரோகியின் காட்டிக் கொடுக்கும் வஞ்சகத்தால் எட்மண்டு அயர்ன்சைட் கி. பி. 1016ஆம் ஆண்டில் ஆசாடன் (Assadune) என்னுமிடத்தில் கான்யூட்டால் தோற்கடிக்கப்பட்டார். போரில் இறுதியாகக் கான்யூட் வெற்றி பெற்றிருந்தும், எட்மண்டின் வீரத்தையும் திறமையையும் மதிக்கும் வகையில் ஆல்னி (Alney) என்ற இடத்தில் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ள முன்வந்தார். இவ் வுடன்படிக்கையின்படி இவ் விருவருக்குமிடையே நாடு பங்கிட்டுக் கொள்ளப்பட்டது.

வெஸ்ஸெக்ஸ், கென்ட், கிழக்கு ஆங்கிலியா, ஆகிய பகுதிகள் எட்மண்டு அயர்ன்சைடுக்குக் கொடுக்கப்பட்டன; நார்த்தம்பிரியா

மெர்சியா ஆகிய பகுதிகளைக் கான்யூட் தம்மிடமே வைத்துக் கொண்டார்.

இலண்டனைத் தலைநகராகக் கொண்டு எட்மண்டு அயர்ன் சைடு ஆண்டு வந்ததால், இங்கிலாந்தில் சாக்சானியர் ஆதிக்கம் பிழைத்துவிடும்போல் காணப்பட்டது. ஆயினும், கி. பி. 1017ஆம் ஆண்டில் கான்யூட்டால் ஏவிவிடப்பட்ட ஒரு கொலையாளியால் எட்மண்டு கொலை செய்யப்பட்டார். இத்துடன், சாக்சானியரின் கடைசி நம்பிக்கையும் மறைந்தது. ஆல்னி உடன்பாடு அர்த்தமில்லாமல் போய்விட்டது. ஆள்வதற்குத் தகுந்த ஆளில்லாத அந் நேரத்தில், விடான்சபை கான்யூட்டை இங்கிலாந்தின் அரசராக ஏற்றுக்கொண்டது. கொலை செய்யப்பட்ட எட்மண்டு அயர்ன்சைடின் இரு சிறு மக்கள் நாடு கடத்தப்பட்டனர். இதைத் தொடர்ந்தே கான்யூட்டின் தலைமையில் இங்கிலாந்து முழுவதிலும் டேனியர் ஆட்சி பரவியது.

## கான்யூட் கி.பி.1016—கி.பி. 1035
### (Canute)

இங்கிலாந்தின் மன்னராகக் கி.பி. 1016ஆம் ஆண்டில் எல்லோராலும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்த கான்யூட் என்ற டேனிய மன்னர், மகா ஆல்ஃபிரட்டுக்கு அடுத்தாற் போல் ஆங்கிலேயரின் வரலாற்றில் சிறப்புப் பெறுகிறார்.

கான்யூட், ஆட்சியைப் பெற்றிருந்த சமயத்தில் நாட்டில் உள் பிளவுகள் பல இருந்தன; சமய நிலையில் தேக்கம் காணப்பட்டது; நாட்டின் ஆட்சி நிர்வாகத்திலும் குழப்பம் நிலவி [வந்தது. இவருக்கு மிகுந்த படைப்பலமோ, தமது சொந்த நாட்டின் (டென்மார்க்) உதவியோ இல்லை. இருப்பினும், தகுதியும் திறமையும் கொண்டிருந்த கான்யூட், தனக்காக எதையும் செய்யத் துணிந்திருந்த சில போர்வீரர்களையும் ஆங்கில மக்களின் ஒத்துழைப்பையும் நம்பியே தம் ஆட்சியைத் தொடங்கினர்.

**ஆட்சியைப் பலப்படுத்துதல்**: எதெல்ரெட் (அன்ரெடி) தம் ஆட்சிக் காலத்தில் செய்திருந்த சில அவலச் செயல்களைக் கான்யூட் மாற்றத் தொடங்கியது. இவரது நல்லாட்சிக்கு முன்னோடியாக அமைந்தது. திறமையற்ற, நம்பிக்கையற்ற பிரபுக்களிடமிருந்து நாட்டுப்பகுதிகள் பறிக்கப்பட்டுத் தமக்கு விசுவாசமாக இருந்த பிரபுக்களுக்கு அவை கொடுக்கப்பட்டன. முன்பு, தம் சாக்சானிய அரசர்களையே காட்டிக்கொடுத்த துரோகி,

எட்ரிக், தம்மையும் காட்டிக்கொடுக்கக் கூடுமென எண்ணி அவனைக் கழுவிலேற்றிக் கொன்றார். தம் மைத்துனரும், உண்மை விசுவாசியுமான எரிக்ஹ்லேதிர் (Eric Hlathir) என்பவரை நார்த்தம்பிரியா பகுதிக்கு ஆளுநராக்கி, அப் பகுதியில் தம் செல்வாக்கைப் பலப்படுத்திக் கொண்டார். எட்மண்டு அயர்ன் சைடின் நாடு கடத்தப்பட்டிருந்த பிள்ளைகளால் தமக்குப் பிற்காலத்தில் ஆபத்து ஏதும் நேராமலிருக்க, அவர்களைப் போலந்து (Poland) நாட்டிலிருந்த தம் மாமனிடம் ஒப்படைத்துக் கண்காணிக்கச் செய்தார். இன்னும் உயிருடன் இருந்து பதுங்கி வாழ்ந்துவந்த மற்றொரு இளவரசனையும் (எட்மண்டு அயர்சைடின் சகோதரர்) கான்யூட், தமக்குப் போட்டியாக இருக்கக்கூடுமென நினைத்து, அவரை வேட்டையாடிக் கொன்றார். தொடர்ந்து, வரலாற்றில் கண்டறியாச் செயலாக, எதல்ரெட்டின் (அன்ரெடி) விதவையான எம்மா என்பவளை இரண்டாம் தார மாக மணந்து கொண்டார். எதல்ரெட்டின் மூலமாக, எம்மா பெற்றிருந்த பிள்ளைகள் தமக்குப்பின் ஆட்சியைப் பெறக்கூடா தென்பதற்காகவே கான்யூட் இத் திருமணத்தைச் செய்து கொண் டார். இவ்வாறாக இவர் தம் பிடியை இங்கிலாந்தில் பலப்படுத்திக் கொண்டார்.

**சீர்திருத்தங்கள் :** தொடக்கத்தில் கான்யூட்டின் ஆட்சியில் கொலைகளும் வலுக்கட்டாயமும் காணப்பட்டிருப்பினும், நாளடை வில் அமைதியும் செங்கோன்மையுமே மிகுந்திருந்தன. இதற்கு முன் ஏற்பட்டிருந்த போர்களாலும் குழப்பங்களாலும் நலிவடைந் திருந்த மக்கள், தமக்கு நல்லாட்சியை ஏற்படுத்துவதில் பக்க பலமாக இருப்பார்களென நம்பிய கான்யூட், அதற்கான செயல் முறையில் இறங்கினார்.

தாம் ஆளப்போகும் ஆங்கில மக்களிடையே தமக்கு மிகுந்த நம்பிக்கை இருப்பதைக் காட்டிக்கொள்ளும்வகையில், தமக்குப் பாதுகாப்பாக இருந்த நாலாயிரம் டேனிய வீரர்களைக் கான்யூட், சொந்த நாட்டிற்குத் திருப்பியனுப்பிவிட்டார். எஞ்சி யிருந்த சில டேனிஷ் வீரர்களையும், மற்றும் பல சாக்சானிய வீரர்களையும் இணைத்து அவுஸ்கார்ல்ஸ் (Housecarls) என வழங்கப்பட்ட மெய்க்காப்பாளர் படையைக் கான்யூட் ஏற்படுத் தினார். இஃது அவரது இராஜத் தந்திரத்திற்கு ஓர் எடுத்துக் காட்டாகவும், வருங்காலத்து நிலைப்படைக்கு (Standing army) இதுவே ஓர் முன்னேற்பாடாகவும் விளங்கியது.

கான்யூட் இங்கிலாந்திலிருந்து ஆட்சி செய்தாலும் இவரை 'இலண்டனின் தலைவர்' என டேனியர்கள் அழைத்தபோதிலும் தம்முடைய கவனத்தைத் தம் சொந்த நாடான டென்மார்க், நார்வேயின்மீதும் வைத்திருந்தார். தாம் அங்கு அடிக்கடி செல்லவேண்டிய அவசியத்தை எதிர்நோக்கியும், அங்ஙனம் செல்லுங்கால் தம் சார்பில் இங்கிலாந்தில் ஆட்சி நடப்பதற்கேற்பவும் கான்யூட், இந் நாட்டை நான்கு எர்ல் ஜமீன்களாகப் (Earldoms) பிரித்தார். நார்த்தம்பிரியா, மெர்சியா, கிழக்கு ஆங்கிலியா, வெஸ்ஸெக்ஸ் ஆக நான்கு எர்ல்டாமின்கள் ஏற்படுத்தப்பட்டன. இம் முறை வருங்காலத்து நிலமானியத் திட்டத்திற்கு (Feudal system) முன்னேடியாக விளங்கியது. அவற்றை நம்பிக்கை வாய்ந்த நான்கு அதிகாரிகளிடம் ஒப்படைத்தார். அவர்களில் இருவர் டேனியர்; இருவர் ஆங்கிலேயர்கள். அந்த ஆங்கிலேயப் பிரபுக்களிலே ஒருவராகக் காட்வின் (Godwin) என்பவர் வெஸ்ஸெக்ஸ் பகுதிக்கு எர்ல்லாக நியமிக்கப் பட்டிருந்தார். இது கான்யூட்டின் பெருந்தன்மையைக் காட்டியது. மேலும், காட்வினுக்குத் தம் உறவினரான கீதா (Gytha) என்பவளையும் மணம் முடித்துக் கொடுத்திருந்தார்.

கான்யூட், ஓர் எதேச்சாதிகாரம் பெற்ற மன்னராக ஆட்சி செய்தாரென்றால், அதில் வியப்படைய ஏதுமில்லை. தமக்கு அரச மகுடத்தை அளித்ததும், சாக்சானியரின் எச்சமாக இருந்துவந்த விடான் சபையைக் கான்யூட் கூட்டவேயில்லை. தாம் டேனியர்களின் குடியைச் சார்ந்தவராக இருந்தும் கான்யூட், சாக்சானியர்களின் சட்டங்களையும். அரசு முறைகளையும் பழக்கவழக்கங்களையும் தேவையான அளவு பின்பற்றத் தவறவுமில்லை.

எட்கர் காலத்தில் இயற்றப்பட்ட சட்டங்கள் மாற்றப்படவில்லை. அரசின் உரிமைகளை வலியுறுத்தியதோடு முன் காலத்திலிருந்த தேனர்கள், அரசருக்கு அவ்வப்போது செய்து வந்த பணிகளைச் சீர்படுத்தினர்.

நூற்றுவர் (ஹண்ட்ரடு) நீதிமன்றங்களை வலுப்படுத்தினர்; அதே சமயம் அந் நீதிமன்றங்களின் அதிகாரங்கள் தம்மைக் கட்டுப்படுத்தாத வகையில் பிரத்தியேக உரிமைகளையும் அனுபவித்தார். நாட்டின் பல பழைய சட்டங்களை (Codes) யெல்லாம் தொகுத்து வெளியிடவும் செய்தார். பாதுகாப்புக்கு எதிரான நடவடிக்கைகள், கொள்ளை, விடுகளை அத்து மீறித் தாக்குதல், படைகளிலிருந்து ஓடிவிடுதல் போன்ற குற்றங்களைத் தாமே விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் சிறப்பு அதிகாரங்களையும்

கான்யூட் அனுபவித்தார். ஒரு சர்வாதிகாரியாகக் கான்யூட் விளங்கியபோதிலும், மக்களுடைய நன்மைக்காகவே உழைப்பதைத் தாம் எப்போதும் மறப்பதில்லை எனச் சொல்லிக்கொண்டு அதற்கேற்பவும் நடந்து கொண்டார்.

வைக்கிங்குகளின் பூர்வகுணங்களைக் கான்யூட், மறக்காதவராக இருந்தும், தம் ஆட்சி இங்கிலாந்தில் நிலைத்து நிற்கவேண்டுமாயின் திருச்சபையின் ஆதரவு தமக்கு எப்போதும் தேவை என்பதை உணர்ந்து, கிறித்துவ மதத்தை மேற்கொண்டிருந்தார். பல புதிய மடாலயங்களையும் ஆஷிங்டன் (Ashington) என்னுமிடத்தில் ஒரு கோயிலையும் கட்டுவித்ததோடு, செயின்ட் எட்மண்டு (St. Edmund) கோயிலையும் புதுப்பித்தார். அருமையான ஆங்கிலக் கையெழுத்துப் பிரதிகள் இவருடைய ஊக்கத்தால் அயல்நாட்டுத் திருக்கோயில்களுக்கு அனுப்பப்பட்டன. ஆங்கில மக்களுக்கு ஆரம்பத்தில் இழைத்த கொடுமைகளுக்கு இவரது இச் சமயப் பணிகள் பிராயச்சித்தமாக அமைந்தன.

திருச்சபையின் குருமார்களும் பிஷப்புகளும் நீதிமன்றங்களில் பணியாற்ற அமர்த்தப்பட்டனர். கான்டர்பரியின் தலைமைப் பிஷப்புக்குச் சில பிரத்தியேக அதிகாரங்களை வழங்கினர். சாக்சானியரின் வழக்கப்படி கான்யூட்டும் ரோம் நகருக்குப் புனித யாத்திரையை மேற்கொண்டார்; போப்பாண்டவரைச் சந்தித்து அப் புனிதத் தலத்திற்கு வரக்கூடிய ஆங்கிலேயர்களுக்குச் சில சலுகைகளைப் பெற்றுக் கொடுத்தார். கி.பி. 1011-ல் குடிவெறி கொண்ட டேனிய வீரர்களால் கொல்லப்பட்டிருந்த ஆர்ச் பிஷப் ஆல்பிக் என்பவரின் சடலத்தைத் தோண்டி எடுத்துச் சகல சமய சடங்குகளுடன் தம் முன்னிலையிலே கான்டர்பரிக் கோயிலில் புதைக்கச் செய்தார். தாமும் தம் முன்னோர்களும் செய்த பழிபாவங்களுக்காக அக் கோயிலில் மண்டியிட்டுத் தொழுது ஆண்டவரின் மன்னிப்பைக் கோரிய கான்யூட், தம்மை உண்மையான கிறித்துவராக மற்றவர்கள் மதிக்கும்படி நடந்து கொண்டார்.

தம் ஆட்சிக்குட்பட்டிருந்த இங்கிலாந்துக்கும் பால்டிக் பகுதிகளுக்கும் (டென்மார்க் உள்பட) நெருங்கிய வாணிபத் தொடர்பை ஏற்படுத்துவதிலும் கான்யூட் அக்கறை காட்டினர். இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதியான பொருள்களுக்குக் குறைந்த காப்புவரி (Tariff) விதிக்கப் பிறநாடுகளில் கான்யூட் ஏற்பாடு செய்தார். இதனல் நாட்டின் பொருள் வளம் அதிகரித்தது.

ஆங்கிலக் குடிமக்களுக்கு எந்த ஊறும் நேரக்கூடாதென்ற நல்லெண்ணத்திற்கு நாட்டின் வடஎல்லையை அடிக்கடி தாக்கி வந்த ஸ்காட்டிய அரசரான இரண்டாம் மால்கோம் (Malcolm II) என்பவரையும் கான்யூட் அச்சுறுத்தி அடக்கியிருந்தார்.

இவரது காலத்தில் புதிய சில நகரங்களும் தோற்றுவிக்கப் பட்டன. தல ஆட்சி முறையும் (Local Govt) வளர்ந்தது.

**கான்யூட்டின் சிறப்பு:** உலக மகாகவி வில்லியம் ஷேக்ஸ்பியர் (William Shakespere) உள்பட பல எழுத்தாளர்களின் கதை களுக்கும் கற்பனைக்கும் கருவாக விளங்கிய கான்யூட், தாம் வாழ்ந்த காலத்தில் ஒரு விந்தை மனிதராகக் கருதப்பட்டார்.

டேனியர்களை எதிர்க்க மகாஆல்ஃபிரட் காலத்தில் வசூலிக் கப்பட்ட டேன்கெல்டு வரியை டேனியரான இவரும் வசூலித்தது விந்தையாகவே இருந்தது. அவர் ஆட்சியில் கான்யூட்டின் செய்கைகள் பலவும் தன்னலத்தின் அடிப்படையிலே அமைந் திருந்தும், மக்களின் பொதுநலத்தைக் கருத்தில் கொண்டே இம் மன்னர் பல சட்டங்களைக் கொண்டு வந்திருந்தார். ஆங்கில மக் களின் கருத்துகளைக் கண்டறிய கான்யூட் பேராவல் கொண் டவராக இருந்திருந்தும், விடான் சபையை கூட்டவேயில்லை என் பதையும் நாம் அறியவேண்டும். தம் ஆட்சி ஆங்கில மக்களால் வெறுக்கப்படவில்லை என்பது நிச்சயமாகத் தெரிந்திருந்தும் தம்மைச் சுற்றி எப்போதும் ஆயுதம் தாங்கிய வீரர்களைப் பாது காப்பிற்காக அமர்த்திக்கொள்ள கான்யூட் தயங்கவில்லை.

ஏறக்குறைய பத்தொன்பது ஆண்டுகள் ஆட்சி செலுத்திய கான்யூட், இறுதியில் கி. பி. 1035ஆம் ஆண்டு தமது நாற்பதாவது வயதில் நவம்பர் மாதத்தில் காலமானார். அவரது சடலம் மற்ற ஆங்கில அரசர்களின் (மகாஆல்ஃபிரட் உள்பட) சடலங்கள் புதைக்கப்பட்டிருந்த வின்செஸ்டரில் அடக்கம் செய்யப்பட்டது.

டேனியக் குடியில் பிறந்து இங்கிலாந்தை ஆண்ட சிறந்த மன்னர்களில் ஒருவராகத் திகழ்ந்த கான்யூட், ஆங்கில மண்ணில் அடக்கமானார்.

**ஹெரால்டு ஏர்ஃபூட்**

கான்யூட் காலமானதைத் தொடர்ந்து அவர் ஆண்ட மொத்தப் பகுதிகள் இரண்டாகப் பிரிக்கப்பட்டன. தம் மூத்த மனைவி எல்கிவாவுக்குப் பிறந்திருந்த ஹெரால்டு, ஆங்கிலப் பகுதி

களுக்கும், தம் இரண்டாம் மனைவி எம்மாவிற்குப் பிறந்திருந்த ஹார்டி கான்யூட், டென்மார்க்—நார்வே பகுதிகளுக்கும் முறையே அரசர்களாயினர்.

**கான்யூட்டின் வழித்தோன்றல்கள்**

எல்கிவா (Elgiva) = கான்யூட் (கி.பி. *1017–1035*) = எம்மா

| | |
|---|---|
| ஹெரால்டு ஏர்ஃபூட் | ஹார்டி கான்யூட் |
| **(Harold Harefoot)** | **(Hardi Canute)** |
| (*1035—1040*) | (*1040—1042*) |

சிறப்பான நிகழ்ச்சிகள் ஏதுமில்லாது ஹெரால்டு ஏர்ஃபூட்டின் ஆட்சிக் காலம் (கி.பி. 1035-1040) மெல்ல நகர்ந்தது. கான்யூட்டின் வன்மையான கரங்கள் இல்லாத அந் நேரத்தில், நாட்டில் பிரபுக்களின் செல்வாக்கு ஓங்க ஆரம்பித்தது. அங்ஙனம், தங்கள் சொந்த நலன்களையும் அதிகாரங்களையும் அக் காலத்தில் பெருக்கிக் கொண்டவர்களில் ஒருவராகக் காட்வின் பிரபு இருந்தார். தாம் சாக்சானியக் குடியைச் சார்ந்தவராக இருந்தும், தம் பழைய எசமானர் கான்யூட்டின் மகனை ஹெரால்டுக்கும் விசுவாசமாக நடந்து கொண்டார். அதை விளக்கும்படியாக கி.பி. 1036ஆம் ஆண்டில் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்தது.

எதல்ரெட்டின் (அன்ரெடி) மூலம் எம்மாவுக்கு ஏற்கனவே இரு பிள்ளைகள் இருந்தனர். எம்மா, கான்யூட்டை மணம் செய்து கொண்ட பின்னர், அவ்விருவரும் நார்மண்டியில் வசித்து வந்தனர். அம் மக்களில் மூத்தவரான ஆல்ஃபிரெட் என்பவர், தம் அரசுரிமையைப் பெறச் சிறு படை ஒன்றுடன் இங்கிலாந்தின்மீது படையெடுத்தார். ஆயினும், காட்வின், இவரை நயவஞ்சமாகச் சிறை பிடித்து ஹெரால்டின் கரத்தில் ஒப்படைத்தார். ஆல்ஃபிரெடின் கண்கள் பிடுங்கப்பட்டுப் பின்னர்க் கொல்லப்பட்டார்.

கான்யூட்டின் கொடிய குணங்களை மட்டுமே கொண்டிருந்த ஹெரால்டு, கி.பி. *1040*ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் காலமானர். அவரது மரணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்த ஹார்த்தா கான்யூட், உடனடியாக இங்கிலாந்தின் ஆட்சியை எவ்வித எதிர்ப்புமின்றிக் கைப்பற்றிக்கொண்டார்.

**ஹார்த்தா கான்யூட்**

ஹார்த்தா கான்யூட் (கி.பி. 1040—1042), இங்கிலாந்தை இரண்டாண்டுகள் ஆட்சி செய்தார். இவரது ஆட்சி விரைவில் முடியாதா என்று மக்கள் புலம்பும்வண்ணம் ஹார்த்தா கான்யூட்டின் ஆட்சிக் காலம் அவலம் நிரம்பியதாக இருந்தது. இவரது ஆட்சிக்காலத்தில் கடுமையான டேன்கில்டு வரிகளும், அரண்மனைப் பூசல்களும் உள்நாட்டுக் கலவரங்களும் மிகுந்து இருந்தன. திறமையில்லாதவராகவும் அதே சமயம் கொடூரக் குணம் மட்டும் கொண்டவராகவும் இருந்த ஹார்த்தா கான்யூட், காலம்சென்ற தம் சகோதரர் ஹெரால்டின் சடலத்தைத் தோண்டி எடுத்துத் தேம்ஸ் நதியில் வீசியெறிந்ததையே இவர் காலத்தின் முக்கிய நிகழ்ச்சியாகக் கொள்ளவேண்டும். கி.பி.1042ஆம் ஆண்டு ஜூன் மாதம் இவ்வரசர், தேம்ஸ் நதிக்கரையிலுள்ள லேம்பத் (Lambath) என்னுமிடத்தில் டேனிய அதிகாரிகளின் திருமண விருந்தொன்றில் குடித்துக் கும்மாளமிட்டுக் கொண்டிருந்தபோது, துடிதுடிக்க இறந்தார். எந்த ஓர் ஆற்றிலே தம் சகோதரரின் சடலத்தை ஈவிரக்கமின்றி அநாகரிகமாகத் தூக்கி எறிந்தாரோ, அதே ஆற்றின் கரையில் ஹார்த்தா கான்யூட் காலமடைய, கான்யூட்டின் அரச மரபு முடிந்தது. அத்துடன் டேனியர்களின் ஆதிக்கமும் இங்கிலாந்தில் அஸ்தமித்தது.

**டேனியர் படையெடுப்பினால் ஏற்பட்ட விளைவுகள்**

கி.மு. 8ஆம் நூற்றாண்டிலிருந்தே இங்கிலாந்தைப் பாதித்திருந்த டேனியர்களின் படையெடுப்பால், மொத்தத்தில் சில விளைவுகள் இருக்கத்தான் செய்தன. இங்கிலாந்தில் டேனியர்கள் செய்திருந்த கொலையும் கொள்ளையும் கணக்கிலடங்காதன. இவர்களால் நிர்மூலமாக்கப்பட்ட கிறித்துவ மடாலயங்களும் திருக்கோயில்களும் ஏராளம்; ஒரு சமயம் நாட்டிலே அமைதியின்மை நீடித்ததற்கு இப் படையெடுப்பாளர்களே காரணமாயினர்.

டேனியர்களின் படையெடுப்பு, ஒருவிதத்தில் இங்கிலாந்து ஒருமைப்பாடு அடைவதற்கும் உதவியாகவே இருந்தது. நார்த்தம்பிரியா, மெர்சியா போன்ற பகுதிகள் டேனியர்களால் 9ஆம் நூற்றாற்டின் முற்பகுதியில் கைப்பற்றப்பட்டிருந்தன.

மகா ஆல்ஃபிரெட் காலத்திலிருந்தே வெஸ்ஸெக்ஸ் மட்டும் ஆங்கிலேயர் (சாக்சானியர்) வசம் இருந்து வந்தது. பத்தாம் நூற்றாண்டின் இடையில் மகா ஆல்ஃபிரெட்டின் வழித்தோன்றல்கள் காலத்தில் ஆங்கிலேயர்கள் நார்த்தம்பிரியா மெர்சியா முதலிய பகுதிகளை வெஸ்ஸெக்ஸ் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வந்திருந்

தனர். இதுவே இங்கிலாந்து முழுவதும் ஒரு மன்னரின் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரப்பட்டதற்கு ஏதுவாக அமைந்தது.

கார்த்தம்பிரியா, மெர்சியா ஆகிய பகுதிகள் முன்பு டேனியர்களால்கைப்பற்றப்படாமல்இருந்திருக்குமாயின்,வெஸ்ஸெக்ஸோடு தொடர்ந்து ஆதிக்கப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்திருக்கும். அந் நிலையில், இங்கிலாந்து பிளவுப்பட்ட நாடாக இருந்திருக்கும். ஆக, எவ்வித எதிர்ப்புமின்றி அவ்விரு பகுதிகளையும் வெஸ்ஸெக்ஸ் தன் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வந்து, இங்கிலாந்து முழுவதற்கும் ஓர் ஆட்சியை அமைத்ததற்கு டேனியர் படையெடுப்பே காரணமாகிறது.

டேனியர் படையெடுப்பினால் ஏற்பட்டிருந்த அபாயக் காலத்தில் இங்கிலாந்தில் ஆண்ட சில ஆரசர்கள், ஐரோப்பிய நாடுகளில் ஆண்ட மற்ற ஆண்ட சில அரசர்களுடன் தற்காப்பைக் கருதி, உதவி பெறும் பொருட்டு நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தனர். கி.பி. 856ஆம் ஆண்டில் எதல்உல்ஃப் என்ற ஆங்கில மன்னர், ஃபிரான்சு நாட்டுச் சார்லஸ் (ஃபிராங்) அரசருடன் நெருங்கிய தொடர்பையும் ஏத்தல்ஸ்டன் என்ற இன்னொரு ஆங்கில மன்னர், கி.பி. 930-ல் புனித ரோமப் பேரரசரான ஆட்டோ (Otto) என்பவருடன் கொண்டிருந்த உடன்பாட்டையும் இரு மேற்கோள்களாகக்கொள்ளலாம்.

கடல் மார்க்கமாகவும் நதிகளின் கழிமுகங்களின் வாயிலாகவும் கப்பல்களிலே டேனியர்கள் அடிக்கடி இங்கிலாந்தைத் தாக்கி வந்தமையால், இங்கிலாந்தில் ஆண்ட அரசர்கள் மகா ஆல்ஃபிரடு காலத்திலிருந்தே தங்கள் கப்பற்படைகளைப் பெருக்கிக் கொள்வதில் ஆர்வம் காட்டினர். இச் சிறிய முயற்சியே, வருங் காலத்தில் இங்கிலாந்தை மிகச் சிறந்த கப்பல் கட்டும் நாடாக மாற்றியது. அத்துடன் பலம் பொருந்திய கப்பற்படையைப் பெற்ற நாடாகவும் இங்கிலாந்து பிற்காலத்தில் விளங்கியது.

படையெடுப்பாளர்களாக வந்து, பின்னர் இங்கிலாந்தின் குடிகளாக மாறியிருந்த டேனியக் குடியேற்றக்காரர்கள், தங்கள் பூர்வீக நாட்டிலிருந்து (டென்மார்க்) தத்தம் வாணிக நுணுக்கங்களையும் தொடர்புகளையும் கொண்டுவந்தனர். அவற்றின் விளைவாக, இங்கிலாந்திற்கும் நார்வே, டென்மார்க் போன்ற பால்டிக் நாடுகளுக்குமிடையே வாணிபத் தொடர்பு பெருகியது. குறிப்பாக, கான்யூட் காலத்தை இதற்கோர் உதாரணமாகக் காட்டலாம். வாணிப வளர்ச்சி பெருகியதால், நாட்டில் பொருளாதார

நிலை மேம்பட்டதோடல்லாமல், செஸ்டர், யார்க், இலண்டன் ஆகிய சில நகரங்களும் சீரும் சிறப்புமாக விளங்கின. ஐரோப்பாவின் பல பாகங்களிலிருந்து மது, துணி போன்ற பொருள்கள் இங்கிலாந்தில் இறக்குமதியாயின.

இங்கிலாந்தில் குடியேறிய டேனியர்கள், தங்களிடமிருந்த சில கலைகளையும் ஆங்கில மக்கள் அறியும்படி செய்தனர். சித்திரத் தையல் வேலைகள் (Embroidery) சிற்பக்கலை, நாணய முறை, உலோக வேலைப்பாடு போன்ற கலைகளும் தொழில்களும் டேனியர்மூலமாக இங்கிலாந்தில் பரவ ஆரம்பித்தன.

டேனியர்களின் ஆதிக்கம் இங்கிலாந்தில் அஸ்தமித்தது என்றாலும், அதன் சாயல் ஆங்கிலேயரின் வரலாற்றிலும் மொழியிலும் இனத்திலும் கலந்துவிட்ட தென்றால், அது மிகையாகாது. இன்னும் இங்கிலாந்தின் கிழக்குப் பகுதிகளிலே டேனிஷ் பெயர்கள் நிலைத்து நிற்கின்றன. லேக் மாவட்டத்தில் (Lake-District) மலையும், ஏரியும் டேனிஷ் பெயர்களிலே வழங்கப்படுகின்றன.

இறுதியாக, டேனியர்களின் 'வேபென்டேக்ஸ்' என்ற நில நிர்வாக முறை இங்கிலாந்தில் வழக்கத்திற்கு வந்தது.

இங்ஙனம், ஒருசில விளைவுகள் டேனியர்களின் படையெடுப்பினால் ஏற்பட்டிருந்தும் சாக்சானியரின் நாகரிகம் முற்றிலும் மறைக்கப்படவில்லை. ஆறு நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்டிருந்த ஆங்கிலோ-சாக்சானிய படையெடுப்பு, ரோமானியரின் நாகரிகத்தை அறவே மறைத்ததுபோல் டேனியர்களின் படையெடுப்பால் சாக்சானியர்களின் நாகரிகத்தை முழுதும் அழிக்க முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அடுத்து வரப்போகும் நார்மானியப் படையெடுப்பாலேயே அது முடிந்தது.

## எட்வர்டு அதிபக்தர் கி.பி. 1042—கி.பி. 1066
### (Edward the Confessor)

கடைசி டேனிய அரசரான ஹார்த்தா கான்யூட் காலமானதைத் தொடர்ந்து, இங்கிலாந்தில் டேனியர்களின் ஆட்சி முடிவுற்றது. இதனையடுத்து, எதல்ரெடு அன்ரெடியின் இளைய மகனை எட்வர்டு அதிபக்தரை விடான் சபை இங்கிலாந்தின் அரசராகத் தேர்ந்தெடுத்தது.

பல ஆண்டுகள் நார்மண்டியில் எட்வர்டு (அதிபக்தர்) தங்கி வாழ்ந்திருந்தமையால், இவரிடம் ஃபிரெஞ்சுப் பழக்கவழக்கங்களே மிகுந்திருந்தன.




நார்மண்டியின் தலைநகரான ருவன் (Roven) அரசவையில் எட்வர்டு அதிபக்தர் கண்டிருந்த காட்சிகளுக்குத் தாம் அரசரானதும் இங்கிலாந்தில் பெற்ற முதல் அனுபவங்கள் புதுமையாகவே இருந்தன. இங்கிலாந்திலிருந்த அரசியல், சமயநிலைகள் அவருக்குப் பிடித்தமானவாக இல்லை. ஆக, நார்மானியப் பண்பாட்டை எப்படியும் தாம் ஆளவந்த நாட்டில் புகுத்தவேண்டுமென்றே எட்வர்டு அதிபக்தர் விரும்பினர்.

முப்பத்தேழு வயது நிரம்பியிருந்த எட்வர்டுக்குச் சமயத்திலிருந்த ஆர்வம் அரசியலிலே இல்லை.

**சமய பணி:** தாம் அரசராக்கப்பட்டதும், முதற்கண் ஆங்கிலேயரின் சமயத்தில் தேவையான சில சீர்திருத்தங்களைப் புகுத்த எட்வர்டு அதிபக்தர் விரும்பினர். அதற்கேற்ப, அப்போதைய பாதிரிமார்கள் சமயவிதிகளை மீறியவர்களாகவும் இல்லற இன்பத்தை நாடுபவர்களாகவும் இருந்து வந்தனர். இக் கேடுகளைக் களைந்தெறியவும் நாடு முழுவதிலும் நல்ல கட்டுப்பாடுள்ள திருச்சபை நிர்வாகத்தை ஏற்படுத்தவும் விருப்பம் கொண்ட எட்வர்டு அதிபக்தர், அதற்கேற்ப திறமையற்ற சாக்சானிய குருமார்களையும் பாதிரிமார்களையும் நீக்கினர். சமயபற்றுக் கொண்ட நார்மானியர்கள் அந்தந்த இடங்களில் அமர்த்தப்பட்டனர். இறுதியாக, கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பும் சாக்சானியருமான, ஏட்சிக் (Eadsige) என்பவர் காலமானதையொட்டித் தம் நண்பரும்,

கடமையுணர்வு கொண்டிருந்தவருமான ராபர்ட் ஜூமியீக்ஸ் (Robert of Jumieges) என்ற நார்மானியரை இவ்வரசர், அப் பதவிக்கு நியமித்திருந்தார்.

சமயத்தில் மிகுந்த அக்கறை காட்டிய எட்வர்டு அதிபக்தர் கிறித்துவர்களின் புனிதத் தலமாகக் கருதப்பட்ட ரோமாபுரிக்கும் செல்ல விரும்பினார். நாட்டிலிருந்த சில குழப்பங்களால், அப் பிரயாணம் மேற்கொள்ளப்பட முடியாமல் போக, அப்போதைய போப்பாண்டவராக இருந்த ஒன்பதாம் லியோ (Leo IX) என்பவர், அதற்கு ஈடாக ஏதாகிலும் திருப்பணியில் எட்வர்டு அதிபக்தர் ஈடுபடும்படி பணித்தார்.

இதற்கேற்ப, தம் சமய பணியை மேற்கொண்டு தொடரும் வகையிலும் இவர் புகழ் என்றும் நிலைத்து நிற்கும்படியாகத் தம் அரண்மனைக்கருகில் வெஸ்ட்மினிஸ்டர் திருக்கோயிலைக் (Westminster Abbey) கட்டுவதற்கான திருப்பணியைத் தொடங்கி, கி.பி. 1065ஆம் ஆண்டு டிசம்பர் 24ஆம் நாள் முடித்து வைத்தார்.

இவ்வரசர், சமயத்திற்கு ஆற்றியிருந்த நற்பணிகளுக்காகவே, 'அதிபக்தர்' என்று மக்களால் விசுவாசமாக அழைக்கப்பட்டார்.

### எட்வர்டு அதிபக்தரும் காட்வினும்

சமயத்தில் எட்வர்டு அதிபக்தருக்கு இருந்த ஆர்வம், நாட்டு அரசியியிலே இல்லை; ஆட்சி நடத்துவதற்கான உடலுரமும் இவரிடம் இல்லாதிருந்தது. இந்தப் பெருங்குறையால், எர்ல் ஜமீன்தார்களை நம்பியே எட்வர்டு அதிபக்தரின் ஆட்சி நடைபெற்றது. ஜமீன்தார்களில் ஒருவராக காட்வின் என்பவர் இருந்தார்.

கான்யூட் காலத்திலிருந்தே நாட்டின் ஒரு பகுதிக்கு எர்லாக' இருந்துவந்த காட்வினின் அரசியல் செல்வாக்கு, இக் காலத்திலேயே உயர்ந்து இருந்தது. ஹார்த்தா கான்யூட் என்ற அந்தக் கடைசி டேனிய மன்னர் காலமானதைத் தொடர்ந்து, விடான் சபை சாக்சானிய அரச மரபிற்கு முன்னிலை மீட்சி கொடுக்கும் வகையில் எட்வர்டு அதிபக்தருக்கு அரச மகுடத்தை வழங்குவதற்கு ஒரு முக்கிய தூண்டுகோலாகக் காட்வின் இருந்திருந்தார், காட்வினுக்குத் தம் விசுவாசத்தைக் காட்டிக் கொள்ளும் வகையில், அவரது மகளான எடித் (Edith) என்பவளை மணம் செய்துகொண்டார்.

காட்வின் வெஸ்ஸெக்ஸ் பகுதிக்கு 'எர்ல்லாகத்' தொடர்ந்து நியமிக்கப்பட்டதன்றி, அவரது பிள்ளைக்கும் மற்றச் சில பகுதிகளில் எர்ல் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. நார்த்தம்பிரியா, மெர்சியா தவிர, இங்கிலாந்தின் ஏனைய பகுதிகள் காட்வின் உறவினர் வசமே இருந்தன. காட்வினின் இளைய மகனும், கிழக்கு ஆங்கிலியாவின் எர்ல்லாக நியமிக்கப்பட்டிருந்த ஹெரால்டு (Harold) என்பவரும் அவர்களில் குறிப்பிடத்தக்கவர்.

அரசர் எட்வர்டு அதிபக்தரின் நார்மானியச் சார்பான கொள்கைகளைத் தொடக்கத்திலிருந்தே காட்வின் தீவிரமாக எதிர்த்து வந்தார். அரசரின் அரசவையில் சாக்சானியர் கட்சி எனவும் நார்மானியர் கட்சி எனவும் இரு பிரிவுகள் இருந்து வந்தன. ராபர்ட் ஸ்கோராஃப் (Robert Scrob) என்பவர், நார்மானியரின் செல்வாக்கிற்குத் தூணை விளங்கினர் என்றால், காட்வின் சாக்சானியப் பிரிவிற்குப் பெரும் தலைவராக விளங்கினர். எட்வர்டு அதிபக்தர் ஆட்சி பெற்றதைத் தொடர்ந்து அரசியலிலும் சமயத்திலும் நார்மானியர் பெற்றிருந்த சலுகைகளைக் காட்வின் வெளிப்படையாக வெறுத்தார்.

நார்மானியருக்கெதிராகத் தம் வெறுப்பைக் காட்டிக்கொள்ள காலம் நோக்கியிருந்த காட்வினுக்கு, கி.பி. 1051ஆம் ஆண்டில் அதற்கான சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அரசர் எட்வர்டு அதிபக்தரின் மைத்துனரும் நார்மானியப் பிரபுவான பூலோன் ஈயுஸ்டாக் (Eustace of Boulogne) என்பவர், தம் சொந்த நாட்டுக்குத் திரும்பும் வகையில் அரசரைச் சந்தித்துவிட்டு டோவர் (Dover) துறைமுகத்தை அடைந்து தங்கியிருந்தபோது, அங்கு அவரது வேலையாள்களுக்கும் அந் நகர மக்களுக்குமிடையே தோன்றிய தகராறின் காரணமாக ஒரு கைகலப்பு ஏற்பட்டுவிட்டது. அதில் ஏழு நார்மானிய வீரர்கள் கொல்லப்பட்டனர். அதனால் ஆத்திரமடைந்த ஈயுஸ்டாக், அரசரிடம் திரும்பி வந்து முறையிட்டார். இக் கொலை நிகழ்ச்சியால் தம் மைத்துனருக்கு ஏற்பட்டிருந்த அவமானம் ஒருபுறமிருக்க, தம் நார்மானிய சார்புக் கொள்கைக்கு எதிர்ப்பாகவே அரசர் இந் நிகழ்ச்சியை மனத்தில் கொண்டார். டோவர் பகுதியில் அமைதியைக் காக்க வேண்டிய பொறுப்பைப் பெற்றிருந்த வெஸ்ஸெக்ஸின் எர்ல்லான காட்வினை அரசர் அழைத்து அக் கொலைக்குக் காரணமான ஆங்கிலேயர்களைத் தண்டிக்குமாறு ஆணையிட்டார். நாட்டில் நார்மானியரின் ஆதிக்கம் வளர்ந்து வருவதைத் தொடக்கத்திலிருந்தே வெறுத்து வந்த காட்வின், அக் கொலை நிகழ்ச்சியை உள்ளூர

ஆதரித்தது மட்டுமன்றி அரசரின் ஆணையை நிறைவேற்றுவதற்கு வெளிப்படையாகவே மறுத்துவிட்டார்.

**காட்வின் நாட்டைவிட்டு விலகுதல்:** அரசரை ஆதரித்தவர்களுக்கும் காட்வினை ஆதரித்தவர்களுக்குமிடையே ஓர் உள்நாட்டுப் போர் ஏற்படக்கூடிய அபாயநிலை உருவாயிற்று. ஆயினும், அச் சமயத்தில் அரசரின் பலமே ஓங்கியிருந்தது. ஏனெனில், காட்வினின் வளர்ந்துவரும் செல்வாக்கினால் பொறாமை கொண்டிருந்த லியோஃபிரிக் (Leofric) என்ற மெர்சியாவின் எர்லும், சிவார்ட் (Siward) என்ற நார்த்தம்பிரியாவின் எர்லும் இக் கட்டத்தில் அரசரை ஆதரிக்க முன்வந்தனர். நாட்டிலே தமக்கு ஆதரவு சிறிது இருந்தாலும், அரசர் கட்சியை எதிர்க்கக்கூடிய பலம் காட்வினுக்கு இல்லை. தொடர்ந்து இங்கிலாந்தில் தங்கியிருந்தால் தமக்கு ஆபத்து ஏற்படலாமெனக் கருதிய காட்வின், தம் பிள்ளை ஹெரால்டு உள்பட மற்றக் குடும்பத்தினரையும் அழைத்துக்கொண்டு ஃபிளாண்டரஸ் (Flanders) நாட்டிற்கு ஓடிவிட்டார். சில ஆண்டுகளுக்கு முன்னர் (கி.பி. 1036), தம் மூத்த சகோதரன் ஆல்ஃபிரட் என்பவர், காட்வின் சூழ்ச்சியால் கைப்பற்றப்பட்டு டேனியர்களினால் கொல்லப்பட்டிருந்ததை எட்வர்டு அதிபக்தர் இச் சமயம் நினைவுகூர்ந்திருக்கவேண்டும். அதனால், காட்வினை அரச துரோகி என்று அறிவித்ததோடு தாம் மணந்துகொண்டிருந்த அவரது மகளான ஈடித் என்பவளையும் கட்டாயப்படுத்திக் கன்னிமாடத்திற்கு (Nunnery) அனுப்பி வைத்துவிட்டார்.

காட்வின் இங்கிலாந்தை விட்டகன்ற இந் நேரத்தில், அரசரின் நார்மானியச் சார்புக் கொள்கையைத் தட்டிக் கேட்க எவருமில்லை. பல நார்மானியப் பிரபுக்கள் இங்கிலாந்திற்கு வரவழைக்கப்பட்டு, அரசாங்கத்திலும் திருச்சபையிலும் உயர் பதவிகள் கொடுக்கப்பட்டனர். இக்கால நிலையில்தான், அரசரின் தூரத்து உறவினரும் நார்மண்டியின் ஆட்சியாளருமான டியூக் வில்லியம் (William Duke of Normandy) என்பவர், இங்கிலாந்திற்கு வருகை தந்தார். அரசருக்குரிய சகல மரியாதைகளுடன் வில்லியம் வரவேற்கப்பட்டுப் பின்னர், நாடு திரும்பியிருந்தார். இச் சமயத்திலேயே தமக்குப்பின் இங்கிலாந்தின் வாரிசாகத் தம்மை அரசர் நியமித்திருப்பதாக வில்லியம் சொல்லிக் கொண்டார்.

**காட்வின் திரும்புதல்:** எட்வர்டு அதிபக்தர் உண்மையிலேயே வில்லியத்தைத் தம் வாரிசாக நியமித்திருந்தாரா என்பது சர்ச்சைக்குரியது. அப்படியே அவர் சொல்லிருப்பினும், அது

விடான் சபையைக் கலந்தாலோசிக்காமல் செய்யப்பட்ட முடிவு என்பதை நினைவில் கொள்ளவேண்டும். எது எப்படியிருப்பினும், காட்வின் இங்கிலாந்தில் இல்லாத இந் நேரத்தில் எட்வர்டு அதிபக்தரின் ஆட்சி சுதந்திரச் சூழ்நிலையிலேயே உழன்று வந்தது. ஆயினும், இந் நிலை மேலும் நீடிக்க முடியாதபடி காட்வின் சிறிய கப்பற் படையுடன் மீண்டும் இங்கிலாந்தை வந்தடைந்தார் (கி.பி. 1052).

அரசருக்கும் எதிர்க்கத் திறனில்லை. நார்த்தம்பிரியா, மெர்சியா எர்ல்களுக்கும் காட்வினை எதிர்க்கப் பலமில்லை. ஆகவே, எவ்வித எதிர்ப்புமில்லாத சூழ்நிலையில் காட்வின் மீண்டும் தம் எர்ல் பதவியையும் அரசியல் செல்வாக்கையும் திரும்பப் பெற்றவரானார். அவரது மகன் ஹெரால்டுக்கும் பழைய உயர்நிலை கொடுக்கப்பட்டது.

நாடு திரும்பியிருந்த காட்வின், தம் நார்மானிய எதிர்ப்புக் கொள்கையில் முன்பிருந்ததைவிடத் தீவிரமாக ஈடுபட்டார். அரசரைக் கட்டாயப்படுத்திப் பல நார்மானியர்களை அவர்கள் வகித்த பதவிகளிலிருந்து விலக்கி நாட்டைவிட்டு ஓடச் செய்தார்.

இங்ஙனமாக, நார்மானியருக்கெதிரான இயக்கத்தை வெற்றிகரமாக நடத்திவந்த காட்வின், கி. பி. 1053ஆம் ஆண்டில் காலமானார்.

**எட்வர்டு அதிபக்தரும் ஹெரால்டும் :** காட்வின் காலமானதைத் தொடர்ந்து அவரது இளைய மகனை ஹெரால்டு காட்வின் (Harold Godwin) என்பவர், வெஸ்ஸெக்ஸ் பகுதிக்கு எர்லாக நியமிக்கப்பட்டார். அடுத்த பதின்மூன்று ஆண்டுகளுக்கு எட்வர்டு அதிபக்தர் இவரது கைப்பாவையாகவே இருந்தார்.

வீரமும், சுயநலமும், அறிவும், அடங்காத் தன்மையும் ஒருங்கே பெற்றிருந்த ஹெரால்டு, தம் தந்தையைப் போல் ஆட்சியை ஆட்டுவித்ததன்றி. மனம்போன போக்கில் அதிகாரத்தையும் செலுத்தினார். எடுத்துக்காட்டாக, ராபர்ட் என்ற நார்மானியரைப் போப்பாண்டவரின் அனுமதியின்றி ஆர்ச் பிஷப் பதவியினின்று நீக்கி, அரசரைப் பலவந்தப்படுத்தி அப் பதவிக்கு ஸ்டிகாந்து (Stigand) என்ற சாக்சானியரை நியமித்திருந்தார். நார்த்தம்பிரியாவின் எர்லான சிவார்ட் காலமடைந்தபோது, மற்றவர்களின் உரிமைகளைப் புறக்கணித்துவிட்டுத் தம் தமையனை டாஸ்டிக் (Tosetig) என்பவரை அதன் பெரும் பிரபுவாக

கி.பி. 1055-ல் நியமித்தார். கி.பி. 1057-ல் லியோஃபிரிக் என்ற மெர்சியாவின் எர்ல் காலமடைந்தமையால் மற்ருெரு தமையனை கிர்த் (Gyrith) என்பவருக்கு அப் பதவி ஹெரால்டினல் கொடுக்கப்பட்டது.

வயதில் முப்படையத் தொடங்கியிருந்த எட்வர்டு அதி பக்தரின் அதிகாரங்கள் நாளாவட்டத்தில் ஹெரால்டின் கைகளுக்குத் தாவின. தம் அந்தியக் காலம் நெருங்குவதை அறிந்திருந்த எட்வர்டு அதிபக்தர், தமக்கு ஆண் மகவு இல்லாததை உணர்ந்து, தம்முடைய ஒன்றுவிட்ட சகோதரரான எட்வர்டு அயர்ன்சைடின் மகனை எட்வர்டைத் தம் வாரிசாக்க ஹங்கேரியிலிருந்து இங்கிலாந்துக்கு வரவழைத்தார். ஆயினும், எட்வர்டு இங்கிலாந்தை வந்தடைந்த சில வாரங்களிலேயே காலமானர். எட்வர்டின் மகனை எட்கார் எதலின், அப்போது பத்து வயது நிரம்பிய பாலகனைக இருந்தமையால், தம் வாரிசாக யாரை நியமிப்பது என்ற பிரச்சினையே எட்வர்டு அதிபக்தரைக் கடைசி நாள்களில் அதிகமாக வாட்டியது. தம் வினவிற்குப் பதில் கிடைக்காதவராக எட்வர்டு அதிபக்தர் கி.பி. 1066ஆம் ஆண்டு ஜனவரி மாதம் காலமாகவே இவருடன் மகாஆல்ஃபிரடின் சந்ததி முடிவடைந்தது.

**ஹெரால்டு அரசராதல் (கி.பி. 1066):** நாட்டில் அப்போதிருந்த அரசியல் சூழ்நிலை வீரமும், விவேகமும் கொண்ட ஒருவரையே அரசராக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தியிருந்தது.

மகாஆல்ஃபிரடின் நேரிடைச் சந்ததியார்களில் பொருத்தமான, திறமையுள்ள வாரிசுதாரர் எவருமில்லாத நிலையில், விடான் சபை கி.பி. 1066ஆம் ஆண்டு ஜனவரி 6ஆம் நாள் ஹெரால்டு காட்வினையே இங்கிலாந்தின் அரசராக முடிசூட்டியது. மன்னர் மரபைச் சாராத ஒருவர், இங்கிலாந்தின் அரசுரிமையைப் பெற்றது இதுவே முதல் முறையாகும். இவரது ஆட்சிக் காலத்திலேயே மாவீரர் வில்லியத்தின் தலைமையில் இங்கிலாந்தின் மீது நார்மானியப் படையெடுப்புத் தொடங்கியது.

## நார்மானியர் (பெருவீரர் வில்லியம்) படையெடுப்பு (கி.பி. - 1066)

கெல்ட்டுகள், ரோமானியர், ஆங்கிலோ-சாக்சானியர், டேனியர் வழியில் ஓர் அந்நிய இனத்தினர் இங்கிலாந்தின்மீது படை

யெடுத்து வந்து தங்களுடைய ஆதிக்கங்களை நிலைபெறச் செய்த வற்றில் நார்மானியர் படையெடுப்பே அவற்றுக்குக் கடைசிக் கட்டமாக அமைகின்றது.

இப் படையெடுப்பு, இங்கிலாந்திற்கு வலுவான அரசியல் அமைப்பினையும் நாட்டின் ஒருமைப்பாட்டினையும் புதிய சமூக (நிலமானிய) முறையினையும் கட்டுப்பாடான சமய ஏற்பாட்டையும் சீரிய கலப்புக் கலாச்சாரத்தையும் ஐரோப்பிய நாடுகளுடன் நெருங்கிய உறவினையும் ஏற்படுத்திக் கொடுத்தமையால், இந்த நிகழ்ச்சியை இந் நாட்டின் வரலாற்றிலே மிக முக்கிய சம்பவமாகக் கொள்ளலாம்.

நார்மானியர்கள் யார்? பெருவீரன் வில்லியம் தலைமையில் ஏன் எங்ஙனம், இவர்கள் கி. பி. 1066ஆம் ஆண்டில் படையெடுத்தார்கள் என்ற விவரங்களை அடுத்துக் காண்போம்.

ஸ்காண்டிநேவியாவைச் சார்ந்த வைக்கிங்குகள், இங்கிலாந்தைத் தாக்கி வந்த அக் காலத்தில் (கி.பி. 9ஆம் நூற்றாண்டு), அவ்வினத்தாரின் மற்றொரு பிரிவினர், ஃபிரான்ஸ் (France) நாட்டின் தென் மேற்குக் கரையோரப் பகுதிகளைத் தாக்கிக் கைப்பற்றி, அங்கேயே தங்கள் நிலையான குடியை அமைத்துக் கொண்டார்கள். இவர்கள் குடியேறி வாழ்ந்த அப் பகுதியே நார்மண்டி (Narmandy) என வழங்கப்பட்டது. நாளாவட்டத்தில் தங்களின் பூர்வ குணங்களை மறந்துவிட்ட இவ் வினத்தினர், பண்பாலும் தோற்றத்தாலும் பழக்கவழக்கத்தாலும் சிறந்த நாகரிகமடைந்த மக்களாக மாறினர். கோட்டைகளை எழுப்பும் முறையிலும், குதிரை மீது அமர்ந்து ஈட்டியும் (Lance), வாளும் கொண்டு போரிடும் முறையிலும் நிலமானியத் திட்டத்தை அமலாக்கியதிலும் புதுமை புகுத்தியவர்களாகக் இருந்த நார்மானியர்கள், பாரிஸை (Paris) ஆண்ட ஃபிரெஞ்சு மன்னர்களுக்குப் பெயரளவில் கட்டுப்பட்டவர்களாகக் கோமான்களைக் (Dukes) கொண்ட வலிமைமிக்க முடியாட்சியை நார்மண்டியில் அமைத்திருந்தனர்.

நார்மண்டியைப் பரிபாலித்த அதன் மூன்றாவது 'கோமகனான பயமறியா ரிச்சர்டு' (Richard the fearless) என்பவரின் காலத்தில் இவர்களின் கீர்த்தி வெகுவாகப் பரவியிருந்தது. இங்கிலாந்தை அப்போது ஆண்டு வந்த சாக்சானிய அரசரான எதல்ரெடு அன்ரெடி (கி.பி. 978-1016), நார்மானியரின் படையெடுப்பு அபாயத்திலிருந்து தப்புவதற்காகவும் அவர்களின் நல்

லுறவைப் பெறுவதற்காகவும் ரிச்சர்டின் மகளான எம்மா என்பவரை மணந்து கொண்டிருந்தார் என்பதை நாம் இங்கு நினைவில் வைக்கவேண்டும். இத் திருமணத்தை ஆதாரமாக வைத்தே, கி.பி. 1066ஆம் ஆண்டில் வில்லியம் இங்கிலாந்தின் வாரிசுரிமை கேட்டுப் படையெடுத்தார்.

இங்கிலாந்தை எட்வர்டு அதிபக்தர் ஆண்டுவந்த சமயத்தில் (கி.பி. 1066), ரிச்சர்டின் கொள்ளுப் பேரரான டியூக் வில்லியம் என்பவர் நார்மண்டியின் தலைவராக இருந்தார்.

**பெரு வீரர் வில்லியம்** (William the Conqueror)

கி.பி. 1027ஆம் ஆண்டில் இராபர்ட் (Robert) என்பவருக்கும் அவரது காமக் கிழத்தியான ஆர்லெட் (Arlette) என்பவருக்கும் பிறந்திருந்த வில்லியம், தம் தந்தை ஜெருசலத்திலிருந்து (Jerusalem) திரும்பும் வழியில் காலமானதைத் தொடர்ந்து நார்மண்டியின் கோமகனாக நியமிக்கப்பட்டார். அப்போது வில்லியம் ஏழு வயதினர். அவ்விளமைப் பருவத்தில் இவருக்கு ஏற்பட்டிருந்த சோதனைகள் ஏராளம். இவரது பாதுகாப்பாளரில் ஒருவர் நஞ்சூட்டப்பட்டுக் கொல்லப்பட்டார். மற்றொருவர், அவரது படுக்கையிலேயே குத்திக் கொல்லப்பட்டார். தமக்குப் போதிய பாதுகாப்பு இல்லாத அந் நிலையில், வில்லியம் எளியோர் குடிசைகளில் சிற்சில சமயம் ஒளிந்து வாழவேண்டியவரானார். இவரது மாமன்மார்களும் பிற உறவினர்களும் வில்லியத்தை 'வைப்பாட்டி மகன்' என்று ஏளனம் செய்து, இவருக்கு எதிராகப் பல கலகங்களைச் செய்தனர். வில்லியம், தமது மேலதிகாரத் தலைவரான ஃபிரெஞ்சு மன்னரது உதவியைக் கொண்டு, தம் எதிர்பாளர்களை அடக்கினார். இவ்வாறாக, இளம்வயதில் இவருக்கு ஏற்பட்டிருந்த பல தொல்லைகள், வில்லியத்தின் உடலுக்கும் உள்ளத்திற்கும் உரமேற்றிவிட்டிருந்தன.

நெடிய உருவத்தையும். அதற்கேற்ப கடுமை நிறைந்த குரலையும் பிறர் அஞ்சும்படியான தோற்றத்தையும் கொண்டிருந்த வில்லியம், சண்டையை ஒரு விளையாட்டாகக் கருதினார்; குதிரை ஏற்றத்திலே திறமைகொண்டவராகவும் மற்றவர்களால் வளைக்க முடியாத வில்களை எளிதில் வளைக்கும் ஆற்றல் பெற்றவராகவும் இருந்த வில்லியம், எவ்வித ஆபத்துகளையும் பொருட்படுத்தாத பெரும் வீரராக விளங்கினார்.

எடுத்த காரியத்தை முடிக்கும் ஆற்றல் பெற்றவராக வளர்ந்திருந்த வில்லியம், கி.பி. 1060ஆம் ஆண்டில், நார்மண்டியில் வலிமைமிக்க முடியாட்சியை அமைத்திருந்தார். வில்லியம் ஃபிட்ஸ் ஆக்ஸ் பர்க் என்ற உண்மை ஊழியரிடம் தம் ஆட்சியின் பெரும் பொறுப்புகளைக் கொடுத்ததன்றி, தம் நெருங்கிய உறவினர்களுக்கும் சில முக்கிய பொறுப்புகளை வழங்கியிருந்தார். தம்முடைய ஒன்றுவிட்ட சகோதரரான ஓடோ (Odo) என்பவரைப் பேயாவின் (Bayeux) பிஷப்பாகவும் இராபர்ட் என்பவரை மார்டேயினின் பெருமகனாகவும் (Count of Martain) வில்லியம் நியமித்துத் தம் ஆட்சியில் பெரும் சக்தி படைத்தவராகத் திகழ்ந்தார்.

தம் ஆதிக்கத்திற்கு எதிராக நார்மண்டியின் மேற்குப் பகுதியில் கலகம் மூண்டபோது, வில்லியம் அதைக் கடுமையாக அடக்கித் தம் பலத்தை வெளிப்படுத்தினார். போப்பாண்டவரின் எதிர்ப்பையும் புறக்கணித்துத் தம் அரசியல் செல்வாக்கைப் பலப் படுத்திக் கொள்ளும் வகையில், பிளாண்டர்ஸின் பெருமகன் (Count of Flanders), பால்டுவின் (Baldwin) என்பாரின் மகளான மாடில்டா (Matilda) என்பவளை வில்லியம் மணம் செய்துகொண்டார். போந்தியு (Ponthieu) நாட்டின் பிரபுவை வென்று, சோம் (Somme) ஆற்றுப் பிரதேசத்தை வில்லியம் பெற்றுக்கொண்டார். ஆஞ்சுவின் (Anjou) அரசரான ஜியாஃப்ரே காலமானதும் மெயின் (Maine) பகுதியையும் வில்லியம் கைப்பற்றியிருந்தார். ஒரு சமயம் ஆற்றலில்லாத தம் மேலரசரான ஃபிரெஞ்சு மன்னரையும் கட்டாயப்படுத்தித் தமக்குச் சாதகமாக வில்லியம் உடன்பாடு செய்துகொண்டிருந்தார்.

**படையெடுப்பிற்கான காரணங்கள்:** இவ்வாறு அரசியல் ஆதிக்கம் பெற்றுத் திறமைகொண்டவராகத் திகழ்ந்த வில்லியம், இங்கிலாந்தை ஆண்ட கடைசிச் சாக்சானிய அரசரான எட்வர்டு அதிபக்தருக்கு உறவினர் என்பதைக் கீழ்க்காணும் வம்சவாரிப் பட்டியிலிருந்து தெரிந்துகொள்ளலாம்,

(வில்லியத்தின் பாட்டனரான இரண்டாம் ரிச்சர்டு என்பவரின் சகோதரி எம்மா என்பவள் எட்வர்டு அதிபக்தருக்கு அன்னையாவார்.




### பெருவீரர் வில்லியம்

எட்வர்டு அதிபக்தருக்குப் பிள்ளைப் பேறில்லாதமையால், அவரது உறவினர் என்ற முறையில், இங்கிலாந்தின் அரியணையை அடைய வில்லியம் பேரவாக்கொண்டிருந்தார். சாக்ஸானிய பெரும் பிரபு காட்வினும் அவரது மகனை ஹெரால்டு என்பவரும் இங்கிலாந்திலிருந்து வெளியேறிய தருணத்தில் (கி.பி. 1051) வில்லியம் அந் நாட்டிற்கு வருகை புரிந்திருக்க, சகல அரச மரியாதைகளுடன் எட்வர்டு அதிபக்தரால் வரவேற்கப்பட்டிருந்தாரென்பதை நாம் முன்னரே கண்டறிந்தோம். வில்லியத்தின் அந்த வருகை, இங்கிலாந்தின் நிலையைப்பற்றித் தெரிந்துகொள்ள ஏதுவான வேவு பார்க்கும் செய்கையாகவுமிருந்திருக்கலாம். இச் சமயத்தில் தான் ஆங்கில அரசரான எட்வர்டு அதிபக்தர் உறவினரான வில்லியத்தைத் தம் அடுத்த வாரிசாக ஏற்றுக்கொள்ள இசைந்திருந்தார்.

ஆளும் அரசர் தமக்குப்பின் யார் அரசராக வேண்டும் என்று தம்முடைய விருப்பத்தை வெளியிட்டால், அவ்விருப்பத்தை நாட்டுத் தலைமைப் பிரபுக்கள் ஏற்றுக்கொள்வது ஆங்கில மரபு. ஆகவே, வாரிசில்லா எட்வர்டு அதிபக்தர் காலமானால், தமக்கு இங்கிலாந்தின் அரச பதவி கிடைக்குமென வில்லியம் திடமாகவே நம்பி வந்ததார். ஆயினும், இங்கிலாந்தில் அடுத்தடுத்து நேர்ந்த சம்பவங்கள் வில்லியத்திற்கு ஏமாற்றத்தையும் எரிச்சலையும் கொடுப்பதாக அமைந்திருந்தன.

நாடு திரும்பியிருந்த ஹெரால்டின் கைப்பாவையாக கி.பி. 1053ஆம் ஆண்டிலிருந்து அரசர் எட்வர்டு அதிபக்தர் செயலற்றுத் தம் காலத்தைக் கழித்து வந்தார். ஆட்சிப் பொறுப்புகள் அனைத்தையும் தம்மிடம் கொண்டிருந்த ஹெரால்டுக்குத் தாமே எட்வர்டு அதிபக்தரின் வாரிசாக வேண்டுமென்ற பேராசை எழுந்தது. ஆயினும் தமக்கு நார்மண்டி கோமகனை வில்லியம் போட்டியாக இருப்பதையும் ஹெரால்டு உணர்ந்திருந்தார். சுமுகமான முறையில் இப் போட்டியைத் தவிர்த்துத் தம் வருங்காலக் கனவை நனவாக்க நினைத்த ஹெரால்டு, கி.பி. 1058ஆம் ஆண்டில் நார்மண்டி தலைநகரான ரூவனுக்குச்(Roven)சென்று, வில்லியத்தைப் பேட்டி கண்டார். ஆயினும், இச் சந்திப்பினல் ஹெரால்டுக்கு எந்தப் பலனும் கிட்டவில்லை; அதே நேரத்தில், ஹெரால்டின் பட்டத்திற்கான பேராசை வில்லியத்திற்குத் தெரியவந்தது. நினைத்ததை முடிக்கும் எண்ணம் கொண்டவரான வில்லியம், அப்போதிருந்த இங்கிலாந்தில் ஏற்பட்டு வந்த நிகழ்ச்சிகளை அக்கறையோடு கவனிக்கலானர்.

கி.பி. 1064ஆம் ஆண்டில், ஆங்கிலக் கால்வாயிலே வீசிய சுழற்காற்றினல் அலைக்கழிக்கப்பட்டு, ஹெரால்டு பயணம் செய்த கப்பல் திசை தவறிப் போந்தியுக்கருகே கரை ஒதுங்கியது. தம் அதிகாரத்திற்குட்பட்டிருந்த அப் பகுதியில் அழைக்காத விருந்தாளியாக ஹெரால்டு கரையேறியிருந்ததை வில்லியம் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார். அக் காலத்திய வழக்கத்தின்படி, மீட்புப்பணம் (Ransom) பெறுவதற்காக ஹெரால்டைக் கைது செய்து வில்லியம் காவலில் வைத்தார். அது மட்டுமன்றி, கட்டாயப்படுத்தியோ, கட்டாயப்படுத்தாமலோ ஹெரால்டிடம் சில வாக்குறுதிகளைப் பெற்றார். அதன்படி, வில்லியத்தின் மகளை மணம் புரிந்துகொண்டு அவரது கீழாளாக ஹெரால்டு இருக்க வேண்டுமென்றும், ஆங்கிலேயர் பட்டத்திற்கான உரிமையை வில்லியத்திற்குச் சாதகமாக விட்டுக் கொடுக்க வேண்டுமென்றும் ஹெரால்டு பணிக்கப்பட்டிருந்தார். விடுதலைபெற்று நாடு திரும்பியிருந்த ஹெரால்டு, தாம் வில்லியத்துக்கு விரும்பியோ விரும்பாமலோ கொடுத்திருந்த வாக்குறுதிகளை மறந்தவராகவே இருந்தார்.

வில்லியத்தைத் தம் வாரிசாக ஏற்றுக்கொள்ள முன்பு விருப்பங் கொண்டிருந்த எட்வர்டு அதிபக்தரும், தம் கடைசிக் காலத்தில் அக் கருத்தை மாற்றிக்கொண்டவராகத் தோன்றினர்.

கி.பி. 1066ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் மரணப் படுக்கையிலிருந்த எட்வர்டு அதிபக்தர், தம் அடுத்த வாரிசாக ஹெரால்டை அறிவித்துவிட்டுக் காலமானார். அரசர் இறந்த மறுநாளே ஹெரால்டு, இங்கிலாந்து மன்னராகஅவசரஅவசரமாக முடிசூட்டிக் கொண்டார். விடான் சபையும் அதற்கு இசைந் திருந்தது. தமக்குக் கிடைத்திருக்கவேண்டிய அரச பதவியை வாக் குறுதியைமீறி அடைந்துவிட்ட ஹெரால்டின்மீது வில்லியம் மிகுந்த ஆத்திரம் கொண்டு, இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற் கான முயற்சியில் ஈடுபட்டார்.

**படையெடுப்பு**

கி.பி. 1066ஆம் ஆண்டு ஜனவரி 6ஆம் நாள், இங்கிலாந்தின் மன்னராக முடிசூட்டிக்கொண்டிருந்த ஹெரால்டு, தம்மாட்சியைப் பலப்படுத்திக் கொள்ளும் வகையில் சில ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியவரானார். தமக்கு எதிராகச் சதியில் ஈடுபட்டிருந்த நார்த்தம்பிரியாவின் எர்ல்லான எட்வினையும் (Edwein), மெர்ஸி யாவின் எர்ல்லான மோர்காஸ் (Morcos) என்பவரையும் அடக் கினார். தம் பெயரில் நாணயங்களையும் அச்சிட்டு வெளியிட்டார். திருச்சபையினரையும் தம் வசப்படுத்த முயன்றார். படை யெடுப்பு அபாயத்திலிருந்து நாட்டைக் காக்க லண்டனில் கப்பற்படை ஒன்றையும் ஹெரால்டு திரட்டி வைத்தார். எனினும், இவரால் நாட்டுப்பற்றுக் கொண்ட தேசிய இனத்தை உண்டாக்க முடியவில்லை. துரதிருஷ்ட வசமாக ஹெரால்டுக்கு நாட்டு மக்களின் ஒருமித்த ஆதரவு கிடைக்கவில்லை. இவர் பட்டத்தை அபகரித்த ஒரு துராக்கிரமியாகவே பலரால் கருதப் பட்டார். காலஞ் சென்ற எட்வர்டு அதிபக்தரின் விதவையும், இவரது சகோதரியுமான எடித் என்பவளும் தம் வெறுப்பை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டதன்றி, வில்லியத்தை வரவேற்கவும் காத்திருந்தாள். நாடு கடத்தப்பட்டிருந்த ஹெரால்டின் சகோதரரான டாஸ்டிக் (Tostig) என்பவரும் முன்பு தமக்கு இழைக்கப்பட்ட கெடுதலுக்கு இவர்மீது வஞ்சினம் கொண்டவராக இருந்தார். அப்போது நார்வேயில் ஆண்டுவந்த வைக்கிங்குகளின் அரசரான ஹெரால்டு ஹார்ட்ராடா (Harold Hardrada) என்பவரை, அவர் இங்கிலாந்தின்மீது படை யெடுக்கும்படி தூண்டி வந்தார்.

இந்த இக்கட்டான நிலையில் ஹெரால்டு தவித்திருந்த வேளையில் வில்லியம் நார்மண்டியில் படையெடுப்பதற்கான முயற்சியில் தீவிரமானார்.

ஆங்கில அரியாசனத்தில் அமருவதற்குத் தனக்கிருந்த உரிமையை வில்லியம் விளக்கமாகப் போப்பாண்டவரை அணுகி எடுத்துரைத்தார். திருச்சபையின் நல்லாதரவு தமக்குக் கிடைத்தால், தம் படையெடுப்பில் பங்குகொள்ள பல வீரர்கள் முன் வருவார்களென்று வில்லியம் நம்பினர். அது பொய்யாகவில்லை. சீர்குலைந்திருந்த ஆங்கில திருச்சபையை மீண்டும் தம் சமய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரவும் தம் விருப்பத்திற்கு மாறாக ஸ்டிகாந்து என்ற சாக்சானியரைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக நியமித்திருந்த ஹெரால்டைத் தண்டிக்க விரும்பியும் போப்பாண்டவர், தம் ஆசியுடன் புனிதமான கொடி ஒன்றையும் வில்லியத்திற்கு அளித்தார்.

அடுத்து வரப்போகும் படையெடுப்பு ஏறத்தாழ ஒரு சிலுவைப் போரைப் (Grusades) போன்றிருக்குமென நினைத்துச் சமய பற்றுக் கொண்ட பல வீரர்கள் வில்லியத்திற்கு உதவ முன் வந்தனர். தமக்கு ஆதரவளித்துப் படையெடுப்பை வெற்றிகரமாக முடித்துக் கொடுக்கும் ஒவ்வொருவருக்கும் தாம் இங்கிலாந்தில் நிலங்களைப் பரிசாக அளிக்கப் போவதாக வில்லியம் வாக்களித்ததைத் தொடர்ந்து இன்னும் ஏராளமான வீரர்கள் இவருக்குப் போர்ச் சேவை செய்யத் தயாராக வந்திருந்தனர். கடல் கடந்து சென்று வில்லியத்திற்கு உதவி செய்யக் கடமைப்பட்டிராத இவரது நிலமானிய பிரபுக்களும் தத்தம் ஆட்களுடன் தனி நட்பு முறையில் இப் படையெடுப்பில் கலந்துகொள்ள உற்சாகம் கொண்டிருந்தனர்,

பிரிட்டானி, பூலோன் (Boulogne), அகுடைன் (Acquitaine), ஆன்ஜீ, பிளான்டர்ஸ், பாய்ட்டோ (Poitou) போன்ற பகுதிகளின் டியூக்குகளும் (கோமான்களும்) வில்லியத்திற்குப் படையுதவி தர முன் வந்திருந்தனர். ஸ்பெயின் (Spain), நேப்பிள்ஸ் (Naples), சிசிலி (Sicily) ஆகிய நாடுகளிலிருந்தும் புகழுக்காகவும் பணத்திற்காகவும் வீரதீரச் செயல்களைச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்திற்காகவும் பலர் இப் படையெடுப்பில் கலந்துகொள்ள நார்மண்டியை வந்தடைந்தனர், ஏறக்குறைய டன்ஸ் (Dunes) நகரில் முப்பதாயிரம் வீரர்களை வில்லியம் கூட்டியதன்றி, ஆங்கிலக் கடலைக் கடப்பதற்காகச் சுமார் 800 கப்பல்களையும் துரிதமாகத் தயார் செய்து வந்தார். தம் வீரர்களுக்கு உறுதியான கட்டுப்பாட்டை ஏற்படுத்தியிருந்த வில்லியம், தம் படையுடன் கப்பல்களில், கடல் கடந்து செல்வதற்கேற்ப சாதகமான காற்றை எதிர் பார்த்து வந்தார்.

வில்லியத்தின் படையெடுப்பிற்கான ஏற்பாட்டை அறிந்திருந்த ஆங்கில மன்னர் ஹெரால்டு, வரப்போகும் சவாலைச் சமாளிக்கும் மன உறுதி கொண்டவராகவே இருந்தார். நடுக்கடலிலேயே, போரிட்டு நார்மானியரைத் துரத்துவதற்காகத் தம் கடற்படையையும் ஆயத்தமாகவே வைத்திருந்தார். இச் சமயத்தில் ஆங்கில வானில் ஹாலி என்ற தூமகேது (Comet) தென்பட, மக்கள் என்ன நேருமோ என்று துணுக்குற்றனர். ஆயினும், ஹெரால்டு சற்றும் மனம் கலங்காது பெரும் நிலப்படை ஒன்றைக் கூட்டி, லண்டன் மாநகரில் வரப்போகும் படையெடுப்பிற்காகக் காத்திருந்தார். நாள்கள் உருண்டோடின. ஆயினும், மன்னரும் மக்களும் எதிர் நோக்கிய நார்மானியப் படையெடுப்பு இன்னும் நேரவில்லை.

அதற்கு மாறாக, கி.பி. 1066ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஆங்கில அரசரின் சகோதரரான டாஸ்டிக் என்ற வஞ்சகனால் தூண்டப்பட்டு, நார்வேயின் அரசரான ஹெரால்டு ஹொர்டிராடா தம் பெரும்படையுடன் முந்நூறு கப்பல்களில் டைன் ஆற்றங் கரையை வந்தடைந்தார். இப் படையுடன் டாஸ்டிக்கும் தமது சில ஸ்காட்டிய வீரர்களோடு வந்து கலந்து கொண்டிருந்தார். இங்கிலாந்தைக் கைப்பற்றித் தங்களுக்குள் பிரித்துக் கொள்ளப் போவதாக ஹெரால்டு - ஹார்டிராடாவும், டாஸ்டிக்கும் பறை சாற்றிக் கொண்டார்கள். வைட் தீவைச் சூறையாடிச் சாண்டுவிச்சிலிருந்த சில ஆங்கிலக் கப்பல்களைக் கைப்பற்றியிருந்த நார்வே மன்னர், எவ்வித எதிர்ப்புமின்றி டாஸ்டிக்கின் துணைகொண்டு ஹம்பர், ஒளஸ் (Ouse) ஆறுகளைக் கடந்து யார்க் நகரை அடைந்தார். இப் படையெடுப்பாளர்களை எதிர்த்த ஆங்கில வீரர்கள் ஃபுல்ஃபோர்டு (Fulford) என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டனர்.

எதிர்பாராத இப் படையெடுப்பினால் ஏற்பட்டு வந்த அபாயத்தைப் போக்க நார்மானியருக்கு எதிரான தம் காவலை விட்டொழித்து, ஹெரால்டு பெரும்படையுடன் வடக்கே சென்றார். 200 மைல் தூரத்தை மிக விரைவாகக் கடந்து வந்த ஹெரால்டின் ஆங்கிலப்படை செப்டம்பர் 25ஆம் நாள் டெர்வன்ட் ஆற்றங் கரையிலிருந்த ஸ்டாம்ஃபோர்டு பிரிட்ஜ் (Stampford Bridge) என்னுமிடத்தை அடைந்தது. இவ்விடத்தில்தான் ஹார்டிராடாவும் டாஸ்டிக்கும் இதுவரை வென்று கைப்பற்றியிருந்த பகுதிகளைப் பங்கு போட்டுக் கொள்ள கூடியிருந்தனர். எதிர் பார்த்திராத ஆங்கிலேயரின் திடீர்த் தாக்குதலால் இப் படையெடுப்பாளர்கள் சிதறி விட்டனர். நார்வே மன்னரும் டாஸ்டிக்கும் படையெடுப்பாளர்களின் இராணுவத்தில் பெரும்பாலானோரும் கொல்லப்

பட்டுவிட்டார்கள். ஹெரால்டு இச் சண்டையில் பெரும் வெற்றி கண்டிருந்தும் இவரது முடிவு காலம் நெருங்கிக் கொண்டிருந்தது.

பல மாதங்களாக நார்மானிய அதிபர் வில்லியம் எதிர்பார்த்து வந்த கடற்காற்று வீசத் தொடங்கியது. கி.பி. 1066ஆம் ஆண்டு செப்டம்பர் 27ஆம் தேதியன்று நார்மானியப் பெரும்படை ஸோம ஆற்றின் கழிமுகத்திலிருந்த செயின்ட்வேலாரி (St. Velary) என்னுமிடத்திலிருந்து கப்பல்களில் புறப்பட்டது. சில நாட்கள் முன் வரையில் இப் படையெடுப்பை எதிர்பார்த்து லண்டனில் தம் படையுடன் காத்திருந்த ஹெரால்டு மன்னர், இச் சமயம் ஸ்டாம்ஃபோர்டு பிரிட்ஜ் சண்டையில் தமக்கும் தம் வீரர்களுக்கும் ஏற்பட்டிருந்த களைப்பைப் போக்கும்வண்ணம் வடக்கே யார்க் நகரிலேயே தங்கியிருந்தார். சில வாரங்கள் முன்வரையில் கடலில் காவலுக்கு நின்றிருந்த ஆங்கிலக் கப்பற்படையும் உணவுப் பொருள்களைப் போதுமான அளவுக்குப் பெறவேண்டித் தேம்ஸ் நதியில் லண்டனுக்கருகே முடங்கிக் கிடந்தது.

படையெடுத்து வந்த வில்லியத்திற்கு இச் சம்பவங்கள் சிறந்த அனுகூலங்களாக அமைந்து விட்டன. எவ்வித இடையூறுமின்றி வில்லியத்தின் தலைமையில் நார்மானியப் பெரும்படை செப்டம்பர் 28ஆம் நாளில் காலை 9 மணிக்கு சஸ்ஸெக்ஸ் கரையோரமாகப் பேவன்ஸி (Pavensey) என்னுமிடத்தை அடைந்தது.

நார்மானியப் படையெடுப்புச் செய்தி கிடைத்தவுடன் ஹெரால்டு மன்னர் எஞ்சியிருந்த தம் வீரர்களுடன் யார்க் நகரை விட்டுப் புறப்பட்டார். மீண்டும் 200 மைல்கள் ஆங்கிலப்படைகள் துரிதமாகக் கடக்கவேண்டி இருந்தது. இறுதியாக ஹெரால்டு, அக்டோபர் 7ஆம் தேதியன்று லண்டன் மாநகரை அடைந்தார்.

பேவன்சியில் கரையிறங்கியிருந்த நார்மானியர்கள், சுற்றுப் புறப் பகுதிகளைக் கொள்ளையடித்தவர்களாக லண்டனை நோக்கிச் செல்லும் பாதையில் அமைந்திருந்த ஹேஸ்டிங்ஸ் (Hastings) பகுதிக்கு முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

### ஹேஸ்டிங்ஸ் சண்டை (கி.பி. 1066)

ஹேஸ்டிங்சை வந்தடைந்திருந்த பெருவீரர் வில்லியம், ஸ்டாம்ஃபோர்டு பிரிட்ஜில் ஹெரால்டு பெற்ற வெற்றியைக் கண்டு அஞ்சாதவராக இருந்தார். இவரது படைவீரர்கள் தோளில் திணவு எடுத்தவர்களாகச் சண்டைக்குத் துடித்துக் கொண்டிருந்தனர்.

இப் படையில் நன்கு பயிற்சி பெற்ற வில்வீரர்களும் (**Archers**) கவச மணிந்த குதிரை வீரர்களும், போர் ஆயுதங்களைக் கொண்ட காலாள்படையினரும் ஏராளமான எண்ணிக்கையில் இருந்தனர்.

ஸ்டாம் ஃபோர்டு பிரிட்ஜ் சண்டைக்குப் பத்து தினங்களுக்குள்ளேயே மற்றொரு சண்டைக்கு ஆயத்தமாக வேண்டியிருந்த ஹெரால்டுக்கு மனத்துணிவு இருந்தபோதிலும், போதிய படைப் பலம் இல்லாமலிருந்தது. இவரது பாதுகாப்பாளர்களும் (அவுஸ்கார்ல்ஸ்), இவரது சகோதரர்களான கிர்த் (**Gurth**), லியோவ்வைன் (**Leofwine**) முதலிய பிரபுக்களும் அவர்களுடைய துணை வீரர்களும் ஆயுதந் தாங்கிப் போர் செய்ய வந்த வெஸெக்ஸ் திருச்சபையினருமே ஹெரால்டுக்கு உதவியாயிருந்து வந்தனர்.




படம் 8. ஹேஸ்டிங்ஸ் சண்டை (1066)

மெர்சியாவின் எர்ல் எட்வினும் நார்த்தம்பிரியாவின் எர்ல் மார்க்கரும் ஹெரால்டுக்கு உதவிப்படைகளைக் கொண்டுவருவதாகச் சொல்லியிருந்தும் வேண்டுமென்றே காலத்தாமதம் செய்துவந்தார்கள். நாட்டின் பிற பகுதிகளிலிருந்து தமக்கு உதவி கிடைக்கும் முன்பாகவே பொறுத்திருக்கும் வாய்ப்பும் வசதியும் இல்லாதவராகவும் போருக்கு ஆயத்தமானவராகவும் ஹொரல்டு அக்டோபர் 10 ஆம் நாள் ஹேஸ்டிங்சை அடைந்தார்.

ஹேஸ்டிங்சில் அரண் அமைத்து நின்ற ஹெரால்டின் படை எண்ணிக்கையில் குறைவானதாயிருந்தது மட்டுமன்றிப் போர் முறையும் சரியானபடி தெரியாததாகவுமிருந்தது. ஆங்கிலப் படையிலிருந்த பலருக்கு வேண்டிய ஆயுதங்கள்கூட இல்லாம லிருந்தன. வில்வீரர்களும் குதிரைப்படையினரும் குறைவாகவே இருந்தனர். ஆங்கிலப் படையின் பலவீனத்தைப் புரிந்துகொண் டிருந்த வில்லியம், அன்று காலை ஒன்பது மணியளவில் தம் தாக்குதலைத் தொடங்கினர்.

வில்லியத்தின் மனைவியார் மாடில்டாவும், அவரது தாதிமார் களும் இச் சண்டையின் விவரத்தைத் தொங்கு சீலையில் சித்திரங் களாக (tapestry) பின்னியிருக்கிறார்கள். இவ்வரிய சித்திரத் தொங்கலாடையை இன்றும லண்டன் மியூசியத்தில் காணலாம். ஹேஸ்டிங்ஸ் சண்டையைப்பற்றிய நிகழ்ச்சிகளை இதுமூலமாக அறியமுடிகிறது.

நார்மானிய வில்லாளிகள் தொடுத்த கணைகளை ஆங்கிலப் படையினர் தாங்கிக்கொண்டிருந்தாலுங்கூட அவர்களது நிலையில் சிறிது தடுமாற்றம் காணப்பட்டது. அச்சமயம், வில்லியம் தம் காலாட்படையை ஏவினர். வீராவேசமாகச் சண்டையிட்ட ஆங்கிலேய வீரர்கள், பல நார்மானியர்களைக் கொன்று குவித் தனர். நார்மானியப் படை புறமுதுகு காட்டி ஓடுவதுபோல் பாவனைசெய்தது. இதை உண்மையென நம்பிய ஆங்கிலேயர்கள், தங்கள் பாதுகாப்பு அரணைக் கலைத்துக்கொண்டு ஓடிக்கொண் டிருந்த நார்மானியரை விரட்டினர். அச் சமயம், தயாராக வைக்கப்பட்டிருந்த நார்மானிய குதிரைப்படை, ஆங்கில வீரர் களைச்சுற்றி வளைத்துக் கொன்றது. ஆயினும், இன்னும் ஹெரால்டும் அவரது சகோதரர்களும் மெய்க்காப்பாளர்களும எஞ்சியிருக்க சண்டை கடுமையாகவே தொடர்ந்து நடந்தது. மும்முறை வில்லியம், தாம் அமர்ந்து சண்டையிட்ட குதிரைகளை இழந்தார் என்பதன்மூலம் சண்டையின் கடுமையைத் தெரிந்து கொள்ளலாம். வஞ்சகமாக ஏமாற்றப்பட்டு ஹெரால்டின் படை வீரர்களில் பலர் கொல்லப்பட்டிருக்க, எஞ்சியிருந்தவர்கள்மீது நார்மானிய வில்வீரர்கள் வானில் கணைமாறி பொழிய ஆரம் பித்தனர். இக் கடுமையான தாக்குதலில் கண்ணில் அம்பு தைத்தவராக ஹெரால்டு போர்க்களத்திலேயே காலமானர். இவரது சகோதரர்களும் வீரமரணம் எய்தினர்கள். இறுதி வரை ஹெரால்டுக்கு விசுவாசமாயிருந்து சண்டையிட்ட அவரது மூவாயிரம் மெய்க்காப்பாளர்களும் அக் களத்திலேயே சாய்ந் தனர்.

ஹெரால்டு இக் களத்தில் கொல்லப்படாமல் தப்பி இருப்பாராயின், நிச்சயமாக வில்லியத்தை மற்றொரு போர்க் களத்தில் சந்தித்திருப்பார்; வெற்றியும் பெற்றிருப்பார். போரில் ஹெரால்டு கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, தலைவரில்லாத ஆங்கிலப் படை சிதறிவிட்டது. சாக்சானிய இங்கிலாந்தின் கடைசி அரசப் பிரதிநிதியான ஹெரால்டின் சடலம் போர்க் களத்திலேயே புதைக்கப்பட்டது.

**வில்லியம் அரசராதல்**

ஹெரால்டு கொல்லப்பட்டதைத் தொடர்ந்து விடான் சபை அவசர அவசரமாக எட்வர்டு அதிபக்தரின் ஒன்றுவிட்ட சகோதரரான எட்மண்டு அயர்ன் சைடின் பேரர், எட்கார் ஏதலிங் என்பவரை இங்கிலாந்தின் அரசராக அறிவித்தது. ஆங்கில அரசை எப்படியும் அடைய வேண்டுமென இங்கிலாந்துக்குப் படை கொண்டு வந்திருந்த வில்லியம், தலைநகர் லண்டனை நோக்கி முன்னேறினார். செஸ்டரும் டோவரும் வில்லியத்துக்கு அடி பணிந்தன. ஆக்ஸ்ஃபோர்டு நகரை அடைந்திருந்த வில்லியம், தம் படைகளுடன் லண்டன் நகரை வடக்குப்புறமாக நெருக்கத் திட்டமிட்டு வந்தார். ஆங்கிலப்படை முழுவதும் ஹேஸ்டிங்ஸ் களத்தில் மறைந்தொளிந்திருக்க, வட மாநிலங்களின் தலைவர்களான எட்காரும், மார்க்கரும் ஒதுங்கியிருக்க, இக் கட்டத்தில் வில்லியத்தை எதிர்க்க இயலாததை லண்டன் நகரம் உணர்ந்தது. எட்கார் ஏதலிங், ஆர்ச் பிஷப் ஸ்டிகாந்த், மற்ற திருச்சபைத் தலைவர்கள், ஆங்கில பிரபுக்கள், அரச ஊழியர்கள் ஆகிய எல்லோருமாக ஆக்ஸ்ஃபோர்டு நகருக்குச் சேர்ந்துவந்து வில்லியத்தை மன்னராக இருக்கும்படி வேண்டிக்கொண்டனர்.

தம் நெடுநாளைய கனவு பலிக்கப் போகும் தருணத்தை எட்டிப்பிடித்துவிட்ட களிப்பில் வில்லியம் லண்டன் நகரை அடைந்தார். கிறிஸ்துமஸ் நன்னாளன்று, வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோயிலில் வில்லியம், இங்கிலாந்தின் மன்னராக முடி சூட்டப்பட்டார். சில வாரங்களுக்குள்ளாக, வடபுறத்து எர்ல்களான எட்காரும் மார்க்கரும் வில்லியத்தைத் தங்கள் பெருந் தலைவராக ஏற்றுக்கொண்டார்கள்.

இங்கிலாந்து புதிய அரசர் ஒருவரைப் பெற்றது; அதன் வரலாற்றிலும் புதிய சகாப்தம் ஒன்று தொடங்கியது.

**நார்மானியப் படையெடுப்பின் விளைவுகள்**

நார்மானிய அரசர்கள் ஃபிரெஞ்சு நாட்டிலிருந்த நார்மண்டி பகுதிக்கும் கோமான்களாக இருந்து வந்ததால், ஆங்கிலோ-

ஃபிரெஞ்சு உறவில் பல சிக்கல்கள் அவ்வப்போது ஏற்பட்ட போதும், நார்மானியர்கள் ஃபிரான்சு நாட்டிலிருந்து வந்தவர்களாதலால் இங்கிலாந்து இவர்களால் ஐரோப்பிய அரசியலில் இழுத்துவிடப்பட்டிருக்க, இந் நாட்டின் தனிநிலை மறைய ஆரம்பித்தது.

நார்மானியர்கள் காலத்தில் பிரிட்டன் ஓரளவு ஒருமைப்பாடு அடைந்தது. தனித்தனி அரசுகளாக இயங்கிவந்த வேல்ஸ், ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய பகுதிகள் லண்டனை ஆண்டு வந்த நார்மானியரைத் தங்கள் மேலரசர்களாக ஒப்புக்கொண்டிருந்தன. சாக்சானியர் காலத்தில் நாட்டிலிருந்த உள்பிரிவுகளைக் களைத்தும் கலகம் செய்த பிரபுக்களை அடக்கியும் சிறந்த வல்லமை பொருந்திய முடியாட்சியை நார்மானியர்கள் இங்கிலாந்தில் உருவாக்கியிருந்தனர். நாட்டின் சட்டதிட்டங்களும் அரசியலமைப்பும் புதிய முறையில் சீர்திருத்தி அமைக்கப்பட்டன.

**சமய விளைவுகள்:** *10ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஐரோப்பியத் திருச்சபைகளில் ஏற்பட்டிருந்த நல்ல மாற்றங்களால் இங்கிலாந்து பாதிக்கப்படாமல் இருந்திருக்க நார்மானியர் படையெடுப்பைத் தொடர்ந்து அந் நிலை மாறியது. ஆங்கிலத் திருச்சபை ஐரோப்பியத் திருச்சபைகளோடு ஒன்றியிருந்ததோடன்றிப் போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்தையும் ஏற்றுக்கொள்ளும்படி நேர்ந்தது.*

**சமூக பொருளாதார விளைவுகள்:** நிலமானியத் திட்டத்தையும் அதன் அடிப்படையான மேனர் (Manor) முறையினையும் இங்கிலாந்தில் புகுத்தி, சமூகத்தில் ஒரு நிலப்புரட்சி ஏற்படுத்தியிருந்ததற்கும் நார்மானிய அரசர்களே காரணமாவர். நார்மானியரின் பழக்கவழக்கங்கள், மொழி, கலாசாரம் ஆகியன நாளடைவில் ஆங்கில நாகரிகத்தோடு ஒன்றி, பின்னர் கலப்புக் கலாசாரம் நாட்டில் தோன்றுவதற்கும் இப் படையெடுப்பு முக்கிய காரணமாகிறது.

ஐரோப்பிய நாடுகளுடன் இங்கிலாந்து நெருங்கிய உறவைப் பெற்றிருந்ததால் இரு பகுதிகளுக்கிடையே வர்த்தகம் வளர்ந்தது. வர்த்தக வளர்ச்சியின் காரணமாக நாட்டின் பொருள் வளமும் சிறந்தது; நாட்டின் பல பாகங்களிலே வர்த்தகப் பட்டணங்களும் தோன்றின. பிளெமிங் நாட்டிலிருந்து வந்திருந்த நெசவுக் குடும்பங்களால் இங்கிலாந்தில் நெசவுத் தொழிலிலும் அபிவிருத்தி ஏற்பட்டது.

**மொழி:** நார்மானியர், தம்முடன் கொண்டுவந்திருந்த ஒரு வகைத் திரிபு ஃபிரெஞ்சு மொழி ஆங்கிலோ-சாக்சானிய மொழியில் கலந்து இணைய, இன்றைய ஆங்கில மொழியின் ஆதி இலக்கணம் தோற்றுவிக்கப்பட்டது.

**இனம்:** டியூடானிய இனத்தைச் சேர்ந்தவர்களான நார் மானியர், காலப்போக்கில் ஆங்கிலோ-சாக்சானியரோடு திரு மணத்தால் கலப்புறவே, இங்கிலாந்தில் ஒரு புதிய இனக் கலப்பும் ஏற்பட்டிருந்தது.

## நிலமானியத் திட்டம்
## (Feudalism)

இடைக்காலம் (**Middle Ages**) என வழங்கப்படும் கி.பி. 11, 12, 13ஆம் நூற்றாண்டுகளில் நிலத்தை அடிப்படையாகக்கொண்டு சமூகத்திலும் அரசாங்க முறையிலும் புகுத்தப்பட்டிருந்த ஒரு தனிப்பட்ட, புதிதான மாற்றமே நிலமானியத் திட்டம் என வழங் கப்பட்டது. இம் முறை செயலாக்கப்பட்டு வந்த காலத்தில், இதற்கு இப் பெயர் கொடுக்கப்படவில்லை; பிற்காலத்திய வர லாற்று ஆசிரியர்களும் சட்ட வல்லுநர்களுமே 'நிலமானியத் திட்டம்' (அல்லது) 'படைமானியத் திட்டம்' என்ற சிறப்புப் பெயர்களை இம் முறைக்கு வழங்கியிருக்கிறார்கள்.

### நிலமானியத் திட்டத்தின் விளக்கம்

இத் திட்டத்தின் அடிப்படை அம்சம் என்னவெனில், எவரும் நிலத்திற்குச் சொந்தக்காரர்களாக இருக்கமுடியாது; ஏனெனில், நிலம் ஆண்டவருக்கே சொந்தம்; அவரே ஏகபோக உரிமை யாளர். நிலம் பெற்றிருக்கும் ஒவ்வொருவரும், அதை அனுப விக்கும் உரிமையை ஆண்டவனிடமிருந்து பெற்றவர்களாகவே ஆகின்றனர். ஆகவே, நிலங்களை அனுபவிக்கும் உரிமைமட்டும் இருந்ததே தவிர, அதன்மீது சொந்தம் கொண்டாடக்கூடிய தகுதி எவருக்குமில்லையென்பது இத் திட்டத்தின் முக்கிய சாராம்சமாகும்.

ஆண்டவனிடமிருந்து தம் வம்ச உரிமையின் பேரில் நிலங் களைப் பெற்றிருந்த அரசர், ஆண்டவரின் பிரதிநிதியாக, அனைத்து நிலங்களுக்கும் உரிமையாளராகக் கருதப்பட்டார். அரசர், தம் முடைய சொந்த உபயோகத்திற்கென ஒரு பகுதியை வைத்துக் கொண்டு ஏனைய நிலங்களைப் பல துண்டுகளாகப் பிரித்துச் சிலருக்கு வழங்கினர். அந் நிலங்களைப் பெற்றுக்கொண்டவர்களே

பிரதம மானியதாரர்கள் (Feudal barons) என அழைக்கப் பட்டனர். பிரதம மானியதாரர்களும் தாங்கள் பெற்ற நிலத்தினைப் பல துண்டுகளாகப் பிரித்துப் பலருக்குக் கொடுத்தனர். இந் நிலங்களைப் பெற்றுக் கொண்டவர்களே சிறு மானியதாரர்கள் (Knights) என அழைக்கப்பட்டனர். இச் சிறு மானியதாரர்கள், தங்களுக்கு அளிக்கப்பட்ட நிலங்களை மேலும் பல சிறு துண்டு களாக்கி உள்குடியாளர்களுக்கு (Feudal serfs) வழங்கினர். ஆக, இத் திட்டத்தின்கீழ் நிலம் அளித்தவர் என்றும், நிலம் பெற்றவர் என்றும் இருவகை வகுப்பினர் இருந்தனர். நிலம் அளித்தவரை மேலாளர் என்றும், நிலத்தைப் பெற்றுக் கொண்டவர்களை கீழாள்கள் என்றும் அழைத்தனர். அரசர், உள்குடியாளர் ஆகி யோரைத் தவிர, பிரதம மானியதாரர்களும் ஏக காலத்தில் மேலாளராகவும் கீழாள்களாகவும் இருந்தனர். அரசர், எங்ஙனம் யாருடைய கீழாளராகவும் இல்லையோ அதுபோன்று கீழாள்கள் எவருக்கும் மேலாளர்களாகவும் இல்லை. நிலத்தை அளிக்கும் போதும் நிலத்தைப் பெற்றுக்கொள்ளும்போதும், மேலாளரும் கீழாள்களும் தங்களுக்குள் சில நிபந்தனைகளுடன்கூடிய ஓர் ஒப் பந்தத்தைச் செய்துகொண்டிருந்தனர். கீழாள்களுக்கு மேலாளர் பாதுகாப்புக் கொடுப்பதாகவும், கீழாள்கள் மேலாளருக்குப் போர்ச் சேவை செய்வதாகவும் (அல்லது) விவசாயப் பணி செய்வதாகவும் அந்த ஒப்பந்தம் அமைந்திருந்தது. இதுவே இத் திட்டத்தின் உயிர்நாடியாக விளங்கியது.

**நிலமானியத் திட்டத்தின் தொடக்கம்**

ரோமானியப் பேரரசு சீர்குலைந்து வந்த காலத்தில், முரட்டு இன மிலேச்சர்களால் அப் பேரரசின் பல பகுதிகள் ஐரோப் பாவில் தாக்கப்பட்டன. தங்களுக்கு உதவியைத் தேடிய தலைவர் களும், தங்களுக்குப் பாதுகாப்பைத் தேடிய பாமர மக்களும் தங்களுக்குள் ஓர் உடன்பாட்டைச் செய்துகொள்ள வேண்டியவர் களானார்கள். இச் சமயத்திலேயே பெருநிலங்கள் அத் தலைவர் களால் துண்டாக்கப்பட்டுச் சில உதவிகளைக்கோரியும், தங்களுக்கு ஆற்றியிருந்த கடமைக்குப் பரிசாகவும், மற்றவர்களுக்கு இனமாக வும் (benefice) கொடுக்கப்பட்டிருந்தது. ஆரம்பத்தில் தங்களின் வாழ்நாள் முழுவதும் அந் நிலங்களை அனுபவிக்க உரிமை கொண் டிருந்த அச் சிறு தலைவர்கள், நாளாவட்டத்தில் அவற்றைத் தங்கள் பரம்பரைக்கே உரிமையாக்கிவிட்டனர். இந்நிலங்களே 'மானியம்' (Fief) என வழங்கப்பட்டது.

ரோமானியப் பேரரசு அழிவுற்ற காலத்தில், அதுவரை அப் பேரரசின் பகுதிகளில் பேரரசின் ஆளுநர்களாக இருந்த

கோமான்களும் பிரபுக்களும் அந்தந்த நிலப் பகுதிகளை உரிமையின்றிக் கைப்பற்றிக் (usurpation) கொண்டனர். இப் பகுதிகளைத் தங்களுக்குக் கிடைத்த மானிய நிலங்களாகவே இத் தலைவர்கள் கருதியதோடு, அவற்றைத் தங்கள் பரம்பரைச் சொத்தாக்கிக் கொண்டனர். சர்வ அதிகாரங்களையும் கொண்டிருந்த இத் தலைவர்கள், தங்கள் நிலங்களைப் பல துண்டுகளாக்கி, சில நிபந்தனைகளின் பேரில் ஏனையோருக்குப் பிரித்துக் கொடுத்திருந்தனர்.

சார்லிமேன் பேரரசு (Empire of Charlemagne) சிதைந்திருந்த காலத்தில், ஐரோப்பாவில் பல இடங்களில் அராஜகம் தலைவிரித்தாடியது. வலியோர் எளியோரை வறுத்தினர். அந்நிலையில், எளியோர் தங்களை அபாயத்திலிருந்து காப்பாற்றிக் கொள்ளவேண்டிச் சுற்றுப்புறங்களிலிருந்த பலம் பொருந்திய பிரபுக்களிடம் சில நிபந்தனைகளுக்குத் தங்களை உள்படுத்திக் கொண்டுச் சில பாதுகாப்பு உரிமைகளை அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டனர்.

மேலிருந்து கீழாகவும், கீழிருந்து மேலாகவும் இரு தரப்பினருக்கிடையே சில நிபந்தனைகள், உரிமைகளோடு கூடிய இத் திட்டம் பரஸ்பர உதவிக்காக உருவாகியிருந்தது.

குழப்பமும், கொந்தளிப்பும், கலவரமும் மேலிட்டிருந்த அக் காலத்தில் நில அடிப்படையில் இத் திட்டம் உருவாகியிருந்ததால் இடத்திற்கேற்ப பல ஐரோப்பிய நாடுகளில் இதன் பொருளும் செயல்படும் முறையும் வேறுபட்டனவாகவே இருந்தன. இத் திட்டம் முதன்முதலில் ஃபிரான்சு நாட்டில் தோன்றியதாகக் கருதப்பட்டாலும், இடைக்காலத்தில் ஐரோப்பிய சமுதாய அமைப்பு முறையிலும் ஆட்சி முறையிலும் விரும்பத்தக்க மாற்றங்களையே இஃது ஏற்படுத்தியிருந்தது. திருச்சபையும், மடாலயங்களும், வளமிக்க பட்டணங்களும் காலப் போக்கில் இத் திட்டத்தின்கீழ்ப் பாதுகாப்புப் பெற்றிருந்தன.

**மேனர் பண்ணை முறை (Manorial System)**

நிலமானியத் திட்டம் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டிருந்ததால், அந் நிலத்தைச் சார்ந்த மேனர் (Manor) என்ற பண்ணைகளைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும்.

அரசரிடமிருந்து பெரு நிலங்களைப்பெற்றிருந்த பிரதம மானியதாரர்கள், அவற்றைத் துண்டித்துச் சிறு மானியதாரர்களுக்குக் கொடுத்தனர். அவ்வாறு கொடுக்கப்பட்ட துண்டு நிலங்களே மேனர்கள் என வழங்கப்பட்டன.

ஒவ்வொரு மேனரும், வேண்டிய வசதிகளோடுகூடிய ஒரு கிராமமாகவே இருந்தது. அக் கிராமத்திலிருந்த (மேனரின்) தலைவர் வசித்த இடமே, 'மேனர் மாளிகை' என அழைக்கப்பட்டது. அக் கிராமத்திலிருந்த நிலங்களே, 'மேனர் பண்ணைகள்' (Manor Farms) எனச் சொல்லப்பட்டன. ஒவ்வொரு மேனரிலும் பேரிஷ் கோயிலும் (Parish church), குருமார் தங்குமிடமும், உள்குடிகளின் சிறு குடில்களும் (Villeins of serfs) இருந்தன. இப் பண்ணைகளில் வேலை பார்த்த உள்குடிகள், அந் நிலத்தில் அடிமைகளாக வேலை பார்த்தனர். சிறுமானியதாரரின் (நைட்) அனுமதியின்றி, இந்த உள்குடிகள் மேனரைவிட்டு அகலக் கூடாது.

**நிலங்களின் பாகுபாடு**

மேனர் பண்ணை இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மேனர் பிரபுவுக்காக (நைட் அல்லது சிறு மானியதாரர்) உள்குடிகளால் உழப்பட்ட நிலம், 'டெமிசின்', (Demesne) எனவும், உட்குடிகளுக்கே கொடுக்கப்பட்டிருந்த நிலம் 'வில்லெயினேஜ்' (Villeinage) எனவும் அழைக்கப்பட்டன. 'டெமிசின்' (பிரபுவின்) நிலத்தை உழுது விவசாய சேவை செய்ய வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தின் பேரிலேயே உள்குடிகளுக்கு 'வில்லெயினேஜ்' கொடுக்கப்பட்டிருந்தது.

மேனரிலிருந்து மொத்த நிலங்கள் உழுது பயிரிடத் தகுதி பெற்ற நிலம் (Cultivable land), புல்தரை (Grass land), பயனற்ற நிலம் (Waste land) என மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன.

உழுது பயிரிடத் தகுதி பெற்ற நிலம் ஒவ்வொன்றும் மூன்று வயல் முறையால் (Three field system) முப்பகுதிகளாப் பிரிக்கப்பட்டன. இப் பகுதிகள் முப்பெரும் வயல்களாக இருந்தன. ஒவ்வோர் ஆண்டிலும் இரண்டு பெரு வயல்களே விவசாயத்திற்குக் கொண்டுவரப்பட்டன. அவற்றில் கோதுமை, பார்லி, ஓட்ஸ், பீன்ஸ் ஆகிய பயிரினங்கள் பயிரிடப்பட்டன. ஒவ்வோர் ஆண்டும் ஒரு பெருவயல், சுழல் முறையில் தரிசாகவே விடப்பட்டது; இரண்டாண்டு தொடர்ந்து சாகுபடி செய்யப்பட்ட

பின்னர், இங்ஙனம் ஒரு பெருவயல் தரிசாக விடப்பட்டால், அவ் வயல் கடந்த இரு ஆண்டுகளில் இழந்துபோன சத்தைப் பெற்றுவிடுமென நம்பப்பட்டது.

உழுநிலங்கள் பின்னர் பாத்திகளாகப் பிரிக்கப்பட்டன; ஒவ்வொரு பாத்தியும் புல்லைக்கொண்ட வரப்புகளால் பிரிக்கப் பட்டது. உள்குடிகளுக்கு இப் பாத்திகள் ஒரே பெருவயலில் கொடுக்கப்படாமல், வெவ்வேறு இடங்களில் சிதறி இருக்கும்படிக் கொடுக்கப்பட்டது. இப் பாத்தியைச் சுற்றி வேலி எதுவும் இல்லாததால் இவ் வயல்முறை, 'திறந்த வயல் முறை', (Open field system) என்றும் வழங்கப்படுகிறது.

**மேனர் ஆள்களின் கடமையும் உரிமையும்**

இவ் வயல்கள் நான்கு, ஆறு, எட்டு என்ற வரிசையில் பூட்டப் பட்ட எருதுகளால் உழப்பட்டன. எருதுகளும், விவசாயத் திற்குத் தேவையான கருவிகளும் 'மேனர் வாசி'களின் கூட்டுப் பொறுப்பிலிருந்தன. நிலத்தில் விளைந்த கோதுமை போன்ற தானியங்கள் மேனர் பிரபுவுக்குச் சொந்தமாக இருந்த ஆலையில் அரைக்கப்படவேண்டியிருந்தது; அரைப்பதற்கான கூலி பிரபுவுக் குக் கொடுக்கப்பட்டது உள்குடிகள் தங்களுடைய வழக்குகளையும் தங்களுக்கும் மேனர் பிரபுவுக்குமிடையே ஏற்பட்டிருந்த தகராறு களையும் மேனர்ப் பண்ணை நீதிமன்றங்கள் (Manorial courts) விசாரித்துத் தீர்ப்பு வழங்கின.

பிரபுவுக்குச் சொந்தமான 'டெமிசன்' நிலத்தில், உள்குடி களன்றி, 'ஃபிரீமென்' (Freemen) என்று அழைக்கப்பட்ட சில சுதந்திரக் குடிமக்களும் வேலை செய்தனர். இப் பிரிவினர், தங்கள் விருப்பம்போல் ஒரு நிலத்தைவிட்டு மற்றொரு நிலத்தில் வேலை செய்ய உரிமை கொண்டிருந்தனர். மேனர் பிரபுக்களுக்கு எதிராக, இந்த ஃபிரீமென்களுக்குச் சட்டப்படியான உரிமைகள் வழங்கப்பட்டன.

'டெமிசன்' நிலத்தில் வேலைபார்த்த உள்குடிகள், மேனர்ப் பிரபுவுக்கு ஒவ்வொரு வாரத்திலும் சில நாள்கள் தொண்டு புரியக் கடமைப்பட்டவர்கள். உழுதல், கதிர் அறுவடை செய்தல், புல் வெட்டுதல் போன்ற 'கைம்மாற்றுப் பணிகளை' (Bond work) உள் குடிகள், பிரபுவின் நிலத்தில் செய்ய வேண்டும். உள்குடிகள் தங்கள் பிரபுக்களுக்குக் கோழிகள், முட்டைகள், பன்றிகள் ஆகிய வற்றையும் கொடுத்துதவ வேண்டும்.

உள்குடிகளுக்கும் சிற்சில மேனர் பண்ணைகளில் போர்டார் அல்லது கோட்டார் (Bordars or Cottars) என்னும் தாழ்நிலை வேலையாட்கள் இருந்தனர். எருதுகளையோ, கலப்பைகளையோ சொந்தமாகக் கொண்டிராத இவ் வேலையாள்கள் பெரும்பாலும் ஒன்று அல்லது இரண்டு ஏக்கர் பரப்பளவு உள்ள நிலங்களைப் பெற்றிருந்தனர்.

**மேனர் அதிகாரிகள்**

மேனர் பண்ணையில் நடைபெறும் பணிகளைப் பார்வையிடப் பல அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். செனிச்சால் (Senechal) அல்லது ஸ்டீவர்ட் (Steward) என்றழைக்கப்பட்ட அதிகாரிகள், பண்ணைகளைச் சுற்றிப்பார்க்கும் பொறுப்பினைப் பெற்றிருந்தனர். நிலத்தில் வேலை பார்க்கும் ஆட்கள் சரியாகப் பணிபுரிகிறார்களா என்பதைக் கண்காணிக்க 'பெய்லீஃப்' (Bailiff) என்னும் அதிகாரியும் வேலையாட்கள் செய்யும் வேலையைக் கணக்கு வைத்து வந்த ரீவு (Reeve) என்னும் அதிகாரிகளும் இருந்தனர். இவர்களன்றிப் புல் உற்பத்தி அறுவடையைக் கவனிக்க ஹோவார்ட் (Howart) என்னும் அதிகாரியும் இருந்தார்.

மேற்கூறிய மேனர்ப் பண்ணை முறையே நார்மானியர் வெற்றிக்கு முன் இங்கிலாந்தின் சில இடங்களில் பரவியிருந்தது. நார்மானியர், தங்கள் காலத்தில் இம் முறையை நாடு முழுவதும் அமலாக்கியதல்லாமல், தேவையான மாற்றங்களையும் கொண்டு வந்திருந்தனர். இதுவே இவர்கள் காலத்திய நிலமானிய முறையாக விளங்கியது.

**சாக்சானியர் காலத்தில் நிலமானிய முறை**

அக் காலத்திய ஆங்கில மக்களில் பத்தில் ஒன்பது பேர் நிலத்தைச் சார்ந்தே பிழைத்தனர். நிலத்தைப் பெற்றிருந்த ஒவ்வொருவருக்கும் சில உரிமைகளும் சில கடமைகளும் உண்டு என்ற கருத்துச் சாக்சானியர் காலத்திலேயே நிலவியிருந்தது. 'நிலமற்றவன் ஓர் ஆண்டானின்கீழ்' இருக்க வேண்டுமென்ற கருத்தும், 'முறைப்படுத்திக்கொள்ளும்' (தன்னைவிட பலம் கொண்ட அண்டைவீட்டார் ஒருவரிடம் பாதுகாப்பிற்காக ஒரு மனிதன் தன்னை வைத்துக்கொள்வது) வழக்கமும் சாக்சானியர் காலத்தில் இருந்துவந்தது. ஆனால், ஒப்படைப்பு முறை முழுமையாக ஏற்படுத்தப்படவில்லை. சொந்த விருப்பத்தைப் பொறுத்தே எவனொருவனும் ஒரு பிரபுவிடம் தன்னை ஒப்படைத்துக் கொண்டிருந்தான். தான் ஒப்படைத்துக்கொண்ட ஒரு பிரபுவிடமிருந்து தேவைப்பட்டபோது தன்னை விடுவித்துக்கொண்டு

மற்றொரு பிரபுவிடம் ஒப்படைத்துக் கொள்ளக்கூடிய உரிமையையும் அக் கால வேலையாளுக்கு இருந்தது. ஒரு பிரபுவின் பொறுப்பிலிருந்த ஒருவன், மற்றொரு பிரபுவினிடமிருந்து நிலம் பெறவும் வாய்ப்பு இருந்தது.

ஆங்கிலோ – சாக்சானியர் காலத்தில் அரசர் அல்லது பிரபுவின் பாதுகாப்புக்குட்பட்டு கெசித் (Gesith), தேனர் (Thegn) என்பவர் இருந்தனர். இவர்கள் ஒரே வகையான உரிமைகளைப் பெற்றிராமலும் பல வகையான ஊழியங்களைச் செய்து வந்தவர்களாகவும் இருந்தனர். சிலர் விவசாயத் தொழிலிலும், சிலர் இராணுவப் பணியிலும் ஈடுபட்டவர்களாக இருந்தனர். முதலில் எல்லாக் குடிமக்களும் படையில் சேரவேண்டுமென வற்புறுத்தியபோதிலும், பின்னர் நிலம் உடையவர்களே படையில் சேரவேண்டுமென நிர்ப்பந்திக்கப்பட்டார்கள். ஆயினும், இவ் வேற்பாடு 'நிலத்திற்காகப் படை ஊழியம்' என்றில்லாமல் படைக் கருவிகளின் விலை உயர்ந்து விட்டதால், நிலம் உடையவர்களே அவற்றை வாங்கிப் போரில் சேவை செய்ய முடியுமென்ற கருத்தில் அமைந்தது.

ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் தாங்கள் பிரபுவிடமிருந்து பெற்ற நிலத்திற்காகக் குடியானவர்கள் குத்தகைப் பணத்தைச் செலுத்தினர். சில சமயங்களில் அக் குடியானவர்கள் பணத்திற்குப் பதில் ஊழியம் (labour) புரியுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். ஆகவே, நிலமானியக் கருத்துகளை ஒத்த ஏற்பாடு இக் காலத்தில் ஓரளவு காணப்பட்டிருப்பினும் இன்னும் அத் திட்டம் முறைப்படி ஏற்படுத்தப்படவில்லை.

**நார்மானியர் காலத்து நிலை**

நார்மானியர் காலத்திலேயே இத் திட்டம் புதிய பொலிவுடன் விளங்கலாயிற்று. பெருவீரர் வில்லியம், தமக்கெதிராகத் தோன்றியிருந்த கிளர்ச்சிகளை அடக்கி, அதில் பங்கெடுத்துக் கொண்டிருந்தவர்களின் நிலங்களைப் பறிமுதல் செய்திருந்தார். இங்ஙனமாகப் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்கள், அவருடன் வந்திருந்த நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் மானியங்களாக அளிக்கப்பட்டன. ஏனைய பகுதிகள், சில புதிய நிபந்தனைகளின் பேரில் பழைய உடைமைக்காரர்களுக்கே திருப்பிக் கொடுக்கப்பட்டன. இத் திட்டம் இங்கிலாந்தில் முழு நிறைவு பெறுவதற்கு ஏறத்குறைய 150 ஆண்டுகள் ஆயின. ஏற்கெனவே, ஒருவாறு இந் நாட்டில் நிலவியிருந்த இத் திட்டத்திற்கு இரு அம்சங்கள் இன்றியமையாதனவாகக் கொள்ளப்பட்டன.

நிலத்தின் அடிப்படையில் ஒவ்வொரு மனிதனின் தகுதி நிர்ணயிக்கப்பட்டது. ஒருவரிடம் பெரும் நிலப்பரப்பு இருந்தால், அவர் பெரும் பிரபுவாகவும், நிலமின்றி ஊதியத்திற்கோ ஊழியத்திற்கோ அந் நிலத்தை உழுதவன் நில அடிமையாகவும் கருதப்பட்டு வந்த நிலை நிலவியது. பிரபுக்களுக்காயினும் நில அடிமைகளுக்காயினும் உரிமைகளோடு கூடிய சில கடமைகளும் இருந்தன.

**நிலமானியக் கடமைகள்**

கொள்கையளவில் (ஆண்டானிடமிருந்து) பெற்றிருந்த நிலங்கள் அனைத்தும் அரசருக்கே சொந்தமாகக் கொள்ளப்பட்டது. அரசரிடமிருந்து நிலங்களைப் பெற்றிருந்த பிரதம மானியதாரர்களும் (பிரபுக்கள்), பிரதம மானியதாரர்களிடமிருந்து நிலங்களைப் பெற்றிருந்த சிறு மானியதாரர்களும் (நைட்டுகள்) இராணுவச் சேவை செய்ய வேண்டியிருந்தது. பிரபுக்கள் அரசருக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்ததுபோல், நைட்டுகள் பிரபுக்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்துகொடுத்தனர்.

ஒவ்வொரு பிரதம மானியதாரரும் தங்களின் தகுதிக்கேற்ப ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள நைட் வீரர்களைத் தேவைப்பட்ட காலத்தில் அரசருக்கு அனுப்ப வேண்டும். இவரது மானியத்தில் (பெருநிலத்தில்) இருந்த நைட்டுகள் அளித்துதவ வேண்டிய வீரர்களைக் காட்டிலும் குறைவாக இருந்தால், பிரதம மானியதாரர் தம்முடைய சொந்தப் பணத்தில் அன்னிய வீரர்களை அமர்த்தி அரசரின் போர்ப்பணிக்கு அனுப்ப வேண்டும். அங்ஙனம் பெரும் பிரபுக்களால் அனுப்பப்பட்ட படை 40 நாள்களுக்கு மட்டுமே போர்ச் சேவை செய்யும். படைக் கருவிகளை மானியதாரர்களே கொண்டுவர வேண்டியிருந்ததால், தேவைக்கேற்ப படைக்கருவிகளைப் பெறமுடியாமலிருந்தது. இந்த இரு குறைகளைப் போக்கும் முறையாகப் படை ஊழியத்திற்குப் பதில் 'ஸ்கூடேஜ்' (Scutage) என்ற வரி பின்பு அரசரால் வசூலிக்கப்பட்டது.

பெற்றிருந்த நிலத்திற்கும் செய்ய வேண்டிய போர்ச் சேவைக்கும் பிணைப்பு இருந்தமையாலேயே இத் திட்டத்தைப் 'படை மானிய முறை' என வழங்கினர்.

படை ஊழியமல்லாது சிலர் தனி முறையாகச் செய்யக் கடமைப்பட்டு மானியங்களைப் பெற்றிருந்தனர். அரசாங்க அதிகாரிகளுக்கு ஊதியம் கொடுக்கும்முறை தோன்றியிராத

அக் காலத்தில் சில உயர் அதிகாரிகளுக்கும் கீழ்ப்பணியாளர் களுக்கும் நிலங்கள் அரசரால் கொடுக்கப்பட்டிருந்தன.

சிலர், 'பண்ணை ஊழிய உரிமையின்கீழ் நிலங்களைப் பெற்றனர். இம் முறை அடிமட்டத்திலிருந்த உள்குடிகளுக்கே (நில அடிமைகளான குடியானவர்கள்) பொருந்தியது. இதில் இரு முறைகள் கையாளப்பட்டன.

முதல் வகையான உரிமை முறைப்படி (சாக்கேஜ்) நிலம் பெற்றிருந்த உள்குடிகள், தங்கள் மேலாளருக்குக் குத்தகைத் தொகையைத் தானியமாகவோ, பொருளாகவோ, பணமாகவோ செலுத்தவேண்டும். அறுவடை போன்ற காலங்களில் மேலாளருடைய நிலத்திலும் வேலை செய்யவேண்டும். குறிப்பிட்ட சில சந்தர்ப்பங்களில் உதவிப் பணத்தையும் (aids) கொடுக்க வேண்டும். இவ் வகையில் நிலம் பெற்றிருந்த மானியதாரர்கள், தங்கள் வழக்குகளைத் தீர்த்துக்கொள்ள, 'பாரன் நீதிமன்றத்தையே' (Baron Court) நாடவேண்டுமெனக் கட்டுப்படுத்தப் பட்டனர்.

இரண்டாவது வகையான உரிமை முறைப்படி (வில்லியனேஜ்) நிலங்களைப் பெற்றிருந்த உள்குடிகள், சில குறிப்பிட்ட கட்டுப்பாடு களுக்கும் ஊழியங்களுக்கும் பணிந்து நடக்கவேண்டியவர்களாய் இருந்தனர். தாங்கள் பெற்றிருந்த நிலங்களை விற்கவோ, பிறருக்கு மாற்றவோ இயலாது. மேலாளருடைய அரைவைக் கூடத்தில் தான் தங்களுடைய தானியங்களை அரைத்துக் கொள்ளவேண்டும். வாரத்தில் சில நாள்கள் மேலாளரின் பண்ணையில் வேலை செய்ய வேண்டும். அறுவடை போன்ற குறிப்பிட்ட காலங்களில் குறிப் பிட்ட நாள்களுக்கு மேலாளரின் பண்ணையில் வேலை செய்ய வேண்டும். குறிப்பிட்ட காலங்களில் மேலாளருக்குப் பணமும் பரிசும் செலுத்தவேண்டும். சுருக்கமாகக் கூறினால், இத் திட்டத்தைப் பிரமிடு கோபுரத்துடன் ஒப்பிடலாம்.

அடிமட்டத்தில் உள்குடிகளும், அவர்களுக்கு மேல் சிறு மானியதாரர்களும், அவர்களுக்கு மேல் பிரதம மானியதாரர் களும், அவர்களுக்கு மேல் அரசரும் இருந்தனர். உச்சியிலிருந்த அரசரையும் அடிமட்டத்திலிருந்த உள்குடியையும் நிலமே இணைத்து வந்தது. ஒருவருக்கொருவர் கடமைகளைச் செய்ய ஒப்புக் கொண்டிருந்தமையால், ஒருவரிடமிருந்து ஒருவர் உரிமை களையும் பெற்றிருந்தனர்.

நிலத்தை வைத்திருந்தவர்கள் மானியதாரர்கள் என்றழைக்கப்பட்டனர். மானியம் பெறுமுன் மானியதாரர்கள் தம்முடைய ஆண்டான் (மேலாளர்) முன் மண்டியிட்டு இறை வணக்கம் செலுத்தித் தம் கைகளை ஆண்டானின் கைகளின்மேல் வைத்து ஆண்டானுக்கு விசுவாசம் தெரிவிக்கவேண்டும். மானியதாரரும் பதவி பெறும் சின்னமாக மேலாளரின் நிலத்திலிருந்து ஒரு பிடி மண்ணை மானியம் பெற்றதன் அறிகுறியாகப் பெற்றார். விசுவாசப் பிரமாணம் மானியதாரரை ஆண்டானுக்குக் கீழ்ப்படிய வைத்ததோடு இருவருக்குமிடையே சில உரிமைகளையும் கடமைகளையும் கொடுத்தது.

**நிலமானிய உதவிப் பணம் (Aids)**

நிலமானியத் திட்டத்தில் உடன்பட்டிருந்தவர்கள் ஆண்டானென்றும் (Overlords), அடங்கியவர்களென்றும் பிரிக்கப்பட்டிருந்தனர். அடங்கியவர்கள், ஆண்டானுக்கு மானிய வரிகளைச் சில சந்தர்ப்பங்களில் கொடுக்கக் கடமைப்பட்டிருந்தார்கள். இப் பண உதவிகள் இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன.

ஒன்று, உதவிப் பணம் (aids) என்பது. இப் பணம் மூன்று சந்தர்ப்பங்களில் மட்டுமே கொடுக்கப்பட்டது. அதாவது, ஆண்டான் மாற்றாரிடம் சிறைப்பட்டபோது அவரை மீட்கவும், ஆண்டானின் மூத்த பிள்ளை 'நைட்' பட்டம் பெறும்போதும், ஆண்டானின் மூத்த மகளின் திருமணத்தின்போதும் உதவிப் பணங்கள் 'அடங்கியவர்களால்' ஆண்டானுக்குக் கொடுக்கப்பட்டது.

மற்றொன்று, உரிமைப் பொறுப்புகளை நிறைவேற்றும்போது கொடுக்கப்பட்டதாகும். அதாவது, மானியத்தை மேலாளரிடமிருந்து ஏற்கெனவே தம் வாழ்நாள் முழுவதும் பெற்றிருந்த அடங்கியோன் காலமடைந்துவிட, அவனது ஆண் வாரிசு 21 வயதைப் பெறாதவராகவும், பெண் வாரிசு 19 வயதை அடையாதவராகவும் இருக்கக்கூடிய நிலையில் மானிய நிலங்கள் மீண்டும் ஆண்டானுக்கே சேர்ந்துவிடும். அவ் வுரிமையைத் தக்க வயதை அடைந்த வாரிசுகள், மீண்டும் தங்களுக்கென்று பெறும்போது, ஆண்டானுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அளிக்கவேண்டும். அதாவது, வாரிசுதாரர் மானியத்தைப் பின்னுரிமையாகப் பெறும்போது மேலாளருக்கு (ஆண்டானுக்கு) ஒரு தொகையைச் செலுத்தவேண்டும்.

மானியதாரர்களின் வாரிசுகள் ஆண்களாகட்டும், பெண்களாகட்டும் மேலாளரின் விருப்பத்திற்கு மாறாக மணம் செய்து கொள்

வார்களேயானல், அதற்கும் ஒரு குறிப்பிட்ட தொகையை அவருக்குச் செலுத்திவிடவேண்டும்.

மானியத்தின் சொந்தக்காரர் காலமாகிவிட்டால், மானிய நிலங்களை அவரது மூத்த மகனே மகளோ வம்ச உரிமையாகப் பெற முடியாது. மேலாளருக்கு ஒரு தொகையைச் செலுத்திவிட்ட பிறகே அந் நிலங்களைத் தங்களின் ஆயுளுக்கு மானியமாகப் பெற முடியும். இவையேயன்றி, மேலாளர்கள் இரு உரிமைப் பொறுப்புகளையும் பெற்றிருந்தனர். ஒப்பந்தத்தினை வாரிசுதாரர் நிறைவேற்றத் தவறியபோதும்,மானியதாரர் வாரிசு எதுவுமின்றிக் காலமடைந்தபோதும் மேலாளர் மானியத்தை மீண்டும் பெறும் உரிமையைப் பெற்றார். இராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு மானியதாரர் நாடு கடத்தப்பட்டிருந்தபோது, அந் நிலத்தைப் பறிமுதல் செய்யக்கூடிய உரிமையையும் மேலாளர் பெற்றிருந்தார்.

இங்ஙனமாக, அரசர் நீங்கலாக முப்பிரிவினரிடையே கடமைக்கும் உரிமைக்கும் இணைப்பாகவும் நிலத்தை அடிப்படையாகவும் கொண்டிருந்த இத் திட்டம் நார்மானியர் காலத்தில் இங்கிலாந்தில் வெகுவாக வளர்ந்தது.

**தனிச் சிறப்பு**

இங்கிலாந்தில் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டிருந்த இத் திட்டம், ஐரோப்பாவில் வழக்கத்திலிருந்த முறைமைக்குச் சற்று மாறுபட்டதாகவே இருந்தது. நார்மானியர் காலத்தில், இத் திட்டத்தின் உச்சியிலிருந்த அரசர் பலம் பொருந்தியவராயிருந்தார். தம் நேரடி விசுவாசப் பிரமாணத்தின் கீழிருந்த பெரும் மானியதாரர்கள் பெரும்பாலும் அரசருக்கு அடங்கியவர்களாகவே இருந்தனர். அரசரின் அனுமதியின்றி அப் பிரபுக்கள் கோட்டைகளை எழுப்பிக் கொள்ளமுடியாது. தனி முறையான போர்களிலும் (Private wars) ஈடுபட முடியாது. அவர்களின் தனி நீதிமன்றங்களான பரோனியல் மன்றங்களுக்கும் சர்வ அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை. இவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த மானியங்களும் நாட்டின் பல பகுதிகளிலேயே கொடுக்கப்பட்டிருந்தமையால், மானியப் பிரபுக்கள் நினைத்த நேரத்தில் தங்களுக்கு மானியதாரர்களின் ஆதரவைப் பெற்று அரசருக்கு எதிராகச் செயல்பட முடியாது. சிறுமானியதாரர்களும் அரசரின் நேரடி விசுவாசப் பிரமாணத்திற்குக் கட்டுப்பட்டவர்களாகவே இருந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாக, நிலமானியத் திட்டத்தின் கீழிருந்த பிரதம மானியதாரர்கள்,கீழ்மானியதாரர்கள், சுதந்திரக்குடியானவர்கள், உள்குடிகள் ஆகியோரைப்பற்றிய விவரங்களடங்கிய நில

மானியப் பதிவேடும் (டூம்ஸ்டே புத்தகம்) அரசரால் தயாரிக்கப் பட்டிருந்தது.

ஐரோப்பாவில் நிலமானியத் திட்டத்தினுல் ஏற்பட்டிருந்த பல சீர்கேடுகள் இங்கிலாந்தில் மேற்கண்ட முறையினுல் தவிர்க் கப்பட்டிருந்தன.

**இத் திட்டத்தினுல் ஏற்பட்ட நன்மைகள்**

நாட்டுக்கு அபாய நிலை ஏற்பட்டபோது நிலையான படை (Standing Army) இல்லாத அக் காலத்தில் படை (நில) மானியப் பிரபுக்கள் அரசருக்குத் தேவையான போர்ச் சேவை செய்திருந் தனர். குழப்பமான காலங்களில் எளியோருக்கும் பெண்டிருக்கும் சிற்சில சந்தர்ப்பங்களில், பாதிரிமார்களுக்கும் நிலமானிய பிரபுக்கள் தங்கள் கோட்டை கொத்தளங்களில் பாதுகாப்புக் கொடுத்திருந்தனர். இந்த நல்வீரர் பண்பே (chivalry) பிரபுக் களிடையே வீர உணர்ச்சியையும் தியாக மனப்பான்மையையும் வளர்த்தது.

மேலும், இத் திட்டம் நிலமானியப் பிரபுக்களுக்குத் தன்னம் பிக்கையையும், சுதந்திர உணர்ச்சியையும் கொடுத்திருந்தது; சில சமயங்களில் அரசர் கொடுங்கோலாட்சி நடத்த முற்பட்டபோது இப் பண்புகளே மக்களின் சார்பில் பிரபுக்களை உரிமைக் குரல் எழுப்பச் செய்திருந்தது.

அரசியல் நெறிகள் அதிகம் வளர்ச்சியுற்றிராத அக் காலத் தில், இத் திட்டம் ஒரு முறையான அரசாங்க அமைப்பு நாட்டில் ஏற்பட வழி வகுத்தது.

கலை உள்ளமும், விருந்தோம்பும் (hospitality) பண்பு முடைய சில பிரபுக்கள், நாடு சுற்றித் திரிந்து வந்த பாணர் களுக்கு (Minstrels) தங்கள் கோட்டைகளில் ஆதரவு காட்டித் தங்கவைத்து, கல்வி சார்ந்த மொழி இலக்கியத்திற்கும் இசைக் கும் வழிகோலினர்.

**தீமைகள்**

கொள்கையளவில் அரசருக்கு அடங்கியவர்களாகவும் ஆபத்துக் காலங்களில் படைகொடுத்து உதவ வேண்டியவர்களாகவும் இருந்த நிலமானியப் பிரபுக்கள், அரசர் பலவீனராக இருந்ததால், தம் கடமைகளை மறந்ததோடு, சிற்சில சமயங்களில் அரசரையே எதிர்த்துப் போர் செய்தது மட்டுமன்றித், தங்களுக்குள்ளேயும்


அரசர்
ஏர்ல்-பாரன் பிரபுக்கள் தலையாய மானியத்தாரர்கள்
பேரவை
குருமார்களும், பிரபுக்களும் தலையாய மானியத்தாரர்களும்
கீழ் மானியத் தாரர்கள்
காடுகள்
மெஸ்ரே பண்ணை யாளர்கள்
ஒருசில நகர்கள்
மெஸ்ரே பண்ணை யாளர்
சில நகர்கள்
பெரும் நகர்கள்
அரசருக்கு சொந்தமான மேனர் பண்ணை
மேனர்கள்
மேனர்கள்
மேனர்கள்
மேனர்கள்

போரிட்டுக் கொண்டனர். இதனால், நாட்டில் அமைதி கெட்டு குழப்பமான நிலையே அக் காலத்தில் மேலிட்டது.

நிலமானியத் திட்டத்தினால், அரசருக்குக் கொடுக்கப்பட்டிருந்த படை 40 நாட்களுக்கு மேல் போர்ச் சேவை செய்யக் கடமைப்பட்டிராததால், இப் படைகளை அரசர் ஒரு நீண்ட போருக்கோ வெளிநாட்டுப் போர் நடவடிக்கைக்கோ பயன்படுத்த முடியாத நிலையிலிருந்தார். படை மானியப் பிரபுக்களே தாங்கள் போர்ச் சேவைக்கு அனுப்பியிருந்த ஆட்களுக்கு படைக்கலன்களையும் கொடுக்க வேண்டியிருந்திருக்க, அதில் அவர்கள் அதிக அக்கறை காட்டாததால் காலத்திற்கேற்ற நவீன போர் ஆயுதங்களையும் அரசர் பயன்படுத்த முடியாமற் போய்விட்டது.

நிலத்தின் அடிப்படையில் மக்கள், பெரும் பிரபுக்கள, நைட்டுகள், உட்குடிகள் எனப் பிரிக்கப்பட்டிருந்ததால் சமூகத்தில் தனியுரிமைக்குட்பட்ட பிரிவு உணர்ச்சி ஏற்பட்டிருந்தது.

அரசர், இத் திட்டத்தின் கீழ்த் தம் மொத்த நிலத்தைப் பல பங்குகளாகப் பிரித்திருக்க, நாடு பிளவு பட்டிருந்தது; இதனால் பலமுள்ள தேசிய அரசாங்கம் (National Govt.) நாட்டில் ஏற்படாமல் போனதோடு மக்களின் ஒருமைப்பாடு உணர்ச்சியும் வளரவில்லை.

ஆக, நிறைவுகளையும் குறைகளையும் இத்திட்டம் ஒருங்கே கொண்டிருந்தது.

## நார்மானிய அரசர்களும் நிலமானியப் பிரபுக்களும்

நிலமானியத் திட்டத்தினால் சில நன்மைகள் இருந்து வந்த போதிலும் ஒரு சில தீங்குகளும் இருந்து வந்தன என்பதை முன்பு கண்டோம். இத் திட்டத்தின் பிணைப்பு ஒப்பந்தம்மூலம் அரசருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டிய நிலமானியப் பிரபுக்கள், அரசர் பலமற்றவராக இருக்குங்கால் அதிக சலுகைகளுக்கும் அதிகாரங்களுக்கும் ஆசை கொண்டு கலகம் செய்து நாட்டை அலங்கோலப்படுத்தியது பெருங்குறையாக இருந்தது. இத் தீங்குகளைக் களையும் வண்ணம் நார்மானிய அரசர்கள் சில முறைகளைக் கையாண்டனர்.




**முதலாம் வில்லியம் (கி.பி. 1066—கி.பி. 1087)**

ஹேஸ்டிங்ஸ் சண்டையையொட்டி, இங்கிலாந்தின் அரசுரிமையைப் பெற்றிருந்த பெருவீரர் வில்லியம் நார்மண்டியில் ஒரு நிலமானியப் பிரபுவாகவே இருந்தார். அக் காலத்தில் தாம் வலிமை கொண்டு எங்ஙனம் தம் மேலான ஃபிரெஞ்சு அரசருக்குப் பல தோல்விகள் கொடுத்திருந்தாரோ அதுபோன்று இங்கிலாந்தில் தம் பிரபுக்களும் தமக்கு இன்னல்களை விளைவிக்கலாமென வில்லியம் நினைத்து அதற்கு எதிர் நடவடிக்கையாகச் சில ஏற்பாடுகளைச் செய்தார்.

**நிலங்கள் பிரித்தளிக்கப்படல்:** வில்லியம் பெருமளவில் நிலங்களைப் பிரபுக்களுக்குக் கொடுத்திருந்தும் இந் நிலங்களனைத்தும் தொடர்ந்து இல்லாமல் பிரித்து, இங்கொன்றும் அங்கொன்றுமாகக் கொடுக்கப்பட்டன. உதாரணமாக இராபர்ட் என்ற பிரபுவுக்குக் கொடுக்கப்பட்டிருந்த 790 பண்ணைகள் இங்கிலாந்தில் 20 கோட்டங்களில் (Shire) சிதறியிருந்தன. இப்படி நிலங்களைப் பலவிடங்களில் பிரித்துக் கொடுக்கக் காரணமாயிருந்தது அரசருக்கெதிராகக் கலகம்செய்ய நினைக்கும் எந்த ஒரு பிரபுவும் நிலங்கள் பிரிந்திருப்பதால், குறுகிய காலத்தில் ஒரேவிடத்தில் தம் ஆட்களைச் சேகரிக்க முடியாது. நிலங்கள் பாத்திகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததும் ஒவ்வொரு பாத்தியும் வெவ்வேறு மானியதாரர் வசமிருந்ததும் எந்த ஒரு பிரபுவும் குறுகிய காலத்தில் அதிக பலத்தைப் பெற முடியாதவாறு இந்த ஏற்பாடு அமைந்திருந்தது. வில்லியம் தன் பாதுகாப்பிற்காக இப்படி நிலங்களைப் பிரித்துக் கொடுக்கவில்லை என்றும் படிப்படியாக இந் நாட்டைத் தாம் வென்றிருந்ததால் அவ்வப்போது வெல்லப்பட்ட இடங்களில் இவ்வரசர்பிரபுக்களுக்கு நிலங்களை ஒதுக்கினர் என்றும் சொல்லப்படுகிறது.

ஆயினும், தம் நம்பிக்கைக்குகந்த நண்பர்களுக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் ஒரே கோட்டத்தில் பண்ணைகள் தரப்பட்டன. டர்ஹாம் பகுதி தம் நண்பரும் அதன் பிஷப்புமான ஒருவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. இப் பகுதியின் பிரபுவாக ஆக்கப்பட்டிருந்த அந்த பிஷப் திருமணம் செய்துகொள்ள முடியாத (திருச்சபை) குருமாரானதால் தம் வம்ச உரிமைக்காகச் சுயநலம் கொண்டவராக இருக்க முடியாது. கென்ட் பகுதி ஓடா (Oda) என்ற இன்னொரு திருச்சபைக் குருமாருக்குக் கொடுக்கப்பட்டது. இன்னும் வெல்லப்படாமலிருந்த வேல்ஸ் எல்லையையொட்டி இருந்த செஸ்டரைத் தம் உறவினர் ஒருவருக்கு பெரும் மானியமாக வில்லியம் கொடுத்திருந்தார். ஷுரூஸ்பரி என்ற மற்றொரு பகுதியும் மொத்தமாக இன்னொரு உறவினருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது.

ஆபத்தான ஸ்காட்டிய எல்லை, வேல்ஸ் எல்லை, கிழக்குக் கடற்கரை எல்லைப் பகுதிகளே மொத்த மானியமாக மூவருக்குக் கொடுக்கப்பட்டன. இப் பிரபுக்களிடத்தே வில்லியத்திற்குப் பெரும் நம்பிக்கையிருந்ததால் அவர்களுக்கு ஓரளவு சுதந்திரமும் அளிக்கப்பட்டிருந்தது. இப் பிரபுக்கள் தங்கள் பகுதிகளில் வரி விதிக்கும் உரிமையோடு படைகளைச் சேகரித்து அடக்கியாளும் பொறுப்பினையும் கொண்டிருந்தனர். இப் பிரபுக்களுக்கு அண்மையில் இருக்கும் எல்லைப்புறங்களிலிருந்து வரக்கூடிய ஆபத்தைத் தவிர்க்க வேண்டிய முக்கிய கடமையிருந்ததாலேயே இவர்களுக்குச் சுதந்திர அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. இப்பிரபுக்கள் தத்தம்பகுதிகளிலேயே கோட்டைகளைக் கட்டிக்கொண்டு படைகளை நிறுத்தி வைக்கவும் அனுமதிக்கப்பட்டனர். ஆயினும், மற்ற நிலமானிய பிரபுக்கள் அரசரின் அனுமதியின்றிக் கோட்டைகளைக் கட்டக் கூடாதென்று பணிக்கப்பட்டனர். நாட்டிலிருந்த பல கோட்டைகளைத் தம் அதிகாரத்திற்கு உட்படுத்தித் தம் ஆணைக்குட்பட்ட வீரர்களைக் கொண்டு காக்கச் செய்தார்.

'வலுவான அரசு அமைக்க வற்றாத வளம் தேவை' என்ற குறிக்கோளில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட வளமுள்ள பண்ணைகளைத் தமக்கென்று வில்லியம் வைத்துக்கொண்டார்; அப் பண்ணைகளை பெய்லிப்புகள் மூலமாக நிர்வகிக்கச் செய்து மானியத்தை அனுபவித்தார். 'டேன்கெல்டு' வரியையும் வசூலித்தார்; நாட்டின் காட்டுநிலங்களைத் தம் உபயோகத்திற்கென்று வைத்துக்கொண்டார்.

**டோம்ஸ் டே புத்தகம் (DomesDay Book):** மேற்கொண்டு வில்லியம் புதியதொரு செயலுக்கு ஆணையிட்டார். அதன்படி இங்கிலாந்து முழுவதையும் பெரும் ஆய்வு ஒன்றுக்குட்படுத்தினர். தமது ஊழியர்களான ரீவுகளை அழைத்து நாடெங்கும் சுற்றிச் சில விவரங்களைச் சேகரிக்க உத்தரவிட்டார். நாட்டில் யார் யாருக்கு எவ்வளவு நில புலன்கள், வீடுகள், வேலையாட்கள், ஆயுதங்கள் உள்ளன என்ற விவரங்கள் இதன்படி சேகரிக்கப் பட்டன. இவ்வாறு சேகரிக்கப்பட்ட விவரங்களுக்கு 'டோம்ஸ்டே புத்தகம்' (Domes Day) எனப் பெயர் கொடுக்கப்பட்டது. உடைமையாளர்களுடைய இருப்புகள் கணக்கெடுக்கப்பட்டிருந்த அப் புத்தகம் வின்செஸ்டர் திருக்கோயிலிலுள்ள 'டோம்ஸ் டே' (Domes Dei) என்னும் மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்ததாலும் இச்சேகரிப்பு அம் மருவிய பெயரில் அழைக்கப்பட்டது. இந்த ஏற்பாடு நாட்டின் வரி விதிப்பிற்கு உதவியதென்றாலும் நாட்டிலுள்ள செல்வர்கள் எவரெவர்; அவர்களில் தமது ஆதிக்கத்தை எதிர்க்கக் கூடிய வன்மையுடையர்கள் எவரெவர்; தம்மிடம் சச்சரவு இடவேண்டிய அவசியம் யார்யாருக்கிருந்தது போன்ற பல புள்ளி விவரங்களை வில்லியம் தெரிந்துகொண்டு தக்க முன்னேற்பாடுகளைச் செய்திருந்தார் (1085).

**சாலிஸ்பரி பிரமாணம் (Oath of Salisbury):** நிலமானியப் பிரபுக்களின் கொட்டத்தை ஒடுக்கும் பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்த வில்லியம், இன்னொரு காரியத்தையும் செய்தார். தம்மிடம் விசுவாசப்பிரமாணம் எடுத்துக்கொண்டு நிலங்களைப் பெற்றிருந்த பிரதம மானியதாரர்களிடம் நிலமானியத்திட்டத்தின் கீழ்க் கட்டுண்டிருந்த சிறு மானியதாரர்களை கி.பி. 1086ஆம் ஆண்டில் சாலிஸ்பரி என்னுமிடத்தில்' ஒரு சேரக் கூட்டினர். அங்ஙனம் கூட்டப்பட்டிருந்த அச் சிறு மானியதாரர்களை அரசர் தமக்கு நேரிடையான விசுவாசத்தைத் தெரிவித்துக் கொள்ளும்படி பணித்தார். 'மாற்றார் எவராக இருந்தாலும் அரசருக்கு நன்றி விசுவாசம் காட்ட' அவர்கள் ஒப்புக்கொண்டனர். இதன்படி, சிறு மானியதார்கள் ஒவ்வொருவரும் முதலில் அரசருக்கே கீழ்ப்படிய வேண்டுமென்றும் பின்னரே தங்கள் ஆண்டாரான பெரும்மானியதாரர்களுக்கு கட்டுப்படவேண்டுமென்றும் ஏற்பாடாகியது; பெரும் மானியதாரர் அரசனுக்கெதிராக கலகம் செய்ய நினைத்தாலும் அவருக்கு கட்டுப்பட்டிருக்கும் சிறு மானியதாரர், அரசருக்குக்கொடுத்திருந்த விசுவாசத்தின் படி அதில் கலந்துகொள்ள மாட்டார்கள் என்ற நிலை இந்தச் சாலிஸ்பரி விசுவாசப்பிரமாணத்தால் (Oath of Salisbury) ஏற்பட்டிருக்க, பெரும் பிரபுக்களின் அதிகாரம் வெகுவாகக் குறைக்கப்பட்டது.

**ஷெரிப்புக்கள் அமர்த்தப்படல்:** பிரபுக்களின் அதிகாரங்களை மேலும் கட்டுப்படுத்தும் வகையில் இதுவரை அவர்கள் அநுபவித்து வந்த அதிகாரங்களையும் வில்லியம் குறைத்தார். இதுவரை பிரபுக்களால் அநுபவிக்கப்பட்ட அதிகாரங்கள், அரசரின் 'கண்களாகவும் காதுகளாகவும்' இருந்த ஷெரிப்புகளுக்கு (Sheriffs) கொடுக்கப்பட்டன. வரி வசூலித்தல், இராணுவ சேவைக்கு ஆள் சேர்ப்பது, வழக்கு விசாரணை போன்ற முக்கிய பொறுப்புகள் ஷெரிப்புகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்க, பிரபுக்கள் கொட்டமடிக்க வாய்ப்பில்லாமல் போய்விட்டது.

மேற்கொண்டு ஹண்டிரடு, ஷயர் நீதிமன்றங்களைப் பலப்படுத்தி நல்ல முறையில் செயல்படுத்தி பிரபுக்களின் அராஜகத்தையும் வில்லியம் ஒழித்தார்.

**கலவரங்கள் அடக்கப்படல் :** இத்தகைய முன்னேற்பாடுகளை வில்லியம் செய்திருந்தும் பிரபுக்களின் கலகங்கள் சில சமயங்களில் தவிர்க்கப்படமுடியாதனவாகவே இருந்தது. நார்ஃபோக் (Norfolk) பிரபு ரால்ப்பும் (Ralph), ஹெர்போர்டு (Herfford) பிரபுவான ரோஜரும் (Roger), நார்த்தாம்டன் பிரபுவான வால்தியோப்ஃபும் (Waltheof) கி.பி. 1074ஆம் ஆண்டில் வில்லியத்தின் ஆட்சிக்கெதிராகக் கலகம் செய்தனர். இங்கிலாந்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொன்றையும் அவர்களில் வன்மையான ஒருவரை இங்கிலாந்தின் மன்னராக மற்ற இருவர் ஏற்றுக்கொள்வதென்றும் தங்களுக்குள் ஓர் ஏற்பாட்டைச் செய்து கொண்டனர். ஆனால், இக்கலகம் எளிதில் அடக்கப்பட்டுவிட்டது. ரால்ப் ஐரோப்பாவில் அடைக்கலமடைய ஓடிவிட்டார்; ரோஜர் ஆயுட்கால தண்டனை அடைந்தார். வால்தியோப் மரண தண்டனை பெற்றார்.

கி.பி. 1077ஆம் ஆண்டில் அரசர் வில்லியத்தின் மூத்த மகனான இராபர்ட் என்பவர் சில சுயநலப் பிரபுக்களின் தூண்டுதலால் தம் தந்தையை எதிர்த்து நார்மண்டிப் பகுதியிலே கலகம் செய்தார். அவருக்கு கெர்பிராய் (Gerberoi) என்னும் கோட்டையைக் கொடுத்து, ஃபிரெஞ்சு மன்னரான முதலாம் பிலிப் என்பவரும் இராபர்ட்டை ஊக்குவித்தார். இக் கலகமும் மிகவும் எளிதாக அடக்கப்பட்டுவிட்டது. தம் தந்தையையே சண்டையில் ஈட்டியால் குத்திக் காயப்படுத்திய இராபர்ட், கருணையின்மீது மன்னிக்கப்பட்டிருந்தாலும் இந் நிகழ்ச்சியால் வில்லியம் அவரை நார்மண்டிக்கு டியூக்காக நியமித்துவிட்டுத் தம்

இளைய மகனை வில்லியத்தையே தம் அடுத்த ஆங்கில வாரிசாக அறிவித்திருந்தார்.

**இரண்டாம் வில்லியம் (ரூபஸ்) கி.பி. (1087—கி.பி. 1100)**

கி.பி. 1087ஆம் ஆண்டு செப்டம்பர் 26-ல் லண்டனிலுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோவிலில் இங்கிலாந்தின் மன்னராக முடிசூட்டிக் கொண்ட இரண்டாம் வில்லியம், பருத்த உடலைப் பெற்றிருந்ததால் மக்கள் இவரை 'சேயோன்' என்று பொருள் படும்படியாக ரூபஸ் என்று அழைத்தனர். உறுதியான உள்ளமும் போரில் வல்லவராகவும் இருந்த ரூபஸ், பட்டத்திற்கு வந்ததைப் பல பிரபுக்கள் வெறுக்கலாயினர். இதற்குக் காரணமில்லாம லில்லை. பெருவீரர் முதலாம் வில்லியம் இறந்திருந்ததையொட்டி அடுத்துவரும் அரசரைத் தங்கள் விருப்பம்போல ஆட்டி வைக் கலாம் என அவர்கள் நினைத்து வந்தனர். ஆனால், பலவீனராக இல்லாமல் ரூபஸ் முரட்டுச் சுபாவமும் தம்முடைய நலனை நன்கு உணர்ந்து அதன்படி நடக்கும் இயல்பைக் கொண்டவராகவும் இருக்க, அஃது அப்பிரபுக்களுக்கு பெருத்தஏமாற்றமாக இருந்தது.

நிலமானியப் பிரபுக்களிடம் தம் தந்தையார் எவ்வழியைப் பின்பற்றி அவர்களை அடக்கி வைத்திருந்தாரோ அதே போன்று ரூபஸ் வில்லியமும் செய்ய முற்பட்டார். தம் தந்தையிடம் இருந்த நீதியுள்ளம் இவருக்கு இல்லாமலிருந்தாலும் அவர் காட்டியிருந்த வழியை இவ்வரசர் மறந்தவராக இல்லை. தமக் கிருந்த நிலமானிய உரிமையைச் சுட்டிக்காட்டிப் பிரபுக்களிடம் சிறி தும் கருணையில்லாமல் உதவிப்பணத்தையும் மற்ற மானிய உரிமைகளையும் இவ்வரசர் பெற்றார். இவருக்கு உதவியாக ரேனுல் ஃப்ஃபிளாம்பார்டு (Ranulf flambard) என்ற நார்மானிய பாதிரியார் இருந்து வந்தார்.

**தடுப்பு நடவடிக்கைகள் :** தமக்கு எங்கெந்த பிரபுக்கள் தொந்தரவு கொடுப்பார்களென இரண்டாம் வில்லியம் நினைத் தாரோ அவர்களை இதுவரை நார்மானியர்களால் வெல்லப்படா மலிருந்த வேல்ஸ் பகுதியின்மீது படையெடுத்துத் தங்களுக்கென்று நிலங்களைத் தேடிக் கொள்ளும்படி உற்சாகப்படுத்தினர். நல் வாய்ப்பாக இவரின் காலத்திலேயே புனித பூமியான ஜெரு சலத்தை அடைய, கிறித்துவர்களுக்கும் துருக்கியர்களுக்கு மிடையே சிலுவைப் போர் (Crusades) தொடங்கியிருந்தது. பல மானியப் பிரபுக்கள் மத உணர்ச்சியால் உந்தப்பட்டு அரசரின் ஆதரவுடன் அப் போரில் கலந்துகொள்ளச் சென்றுவிட்டனர்.

அங்ஙனம் புனித பூமிக்குச் சென்றிருந்த பிரபுக்கள் இக் காலத்தில் செல்லாமலிருப்பார்களாயின் இவர்கள் இம் மன்னருக்கு ஏதாகிலும் ஒருவகையில் தொல்லை கொடுத்திருப் பார்கள்.

**கலகங்கள் அடக்கப்படல் :** இவரின் காலத்தில் ரூபஸ் மன்னர் இரு கலகங்களைச் சந்திக்க வேண்டியிருந்தது. மான்ட் கோமரியின் எர்ல்லான ரோஜரும் பேயாக்ஸின் ஓடோ என்ப வரும் அரசரின் மூத்தசகோதரரான இராபர்ட்டின் பட்ட உரிமைக் காகத் தாங்கள் போராடுவதாகச் சொல்லிக் கலகத்திலிறங்கினர். அரச அதிகாரத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளவே உண்மையில் இவர்கள் கலகம் செய்தனர். இக் கலகத்தை அடக்கு வதில் மன்னர் ஆங்கிலேய மக்களின் (ஆங்கில சாக்சானியர்) முழு ஆதரவையும் பெற்றிருந்தார்; அரசர் விதித்திருந்த வரிப்பணத்தை மனமுவந்து கட்டினார்கள். மன்னரின் வலுவான ஆட்சியிலேயே தங்கள் பாதுகாப்பு இருப்பதை உணர்ந்த மக்களின் ஒத் துழைப்பைப் பெற்றிருந்த ரூபஸ், இக் கலகக்காரர்களைக் கடுமை யாகஅடக்கினர். நெடுநாளைய முற்றுகைக்குப் பின்னர் ஓடோ தஞ் சம் புகுந்திருந்த ரோச்செஸ்டர் கோட்டை கைப்பற்றப்பட்டது; தோற்கடிக்கப்பட்ட அப் பிரபு நாடு கடத்தப்பட்டார். அதே கதி மற்ற பிரபுக்களுக்கும் நேர்ந்தது. இங்கிலாந்திலும், நார்மண்டி யிலும் மானிய நிலங்களை இப் பிரபுக்கள் பெற்றிருக்க, அவர்களின் இங்கிலாந்து நிலங்கள் பிடுங்கப்பட்டு மற்ற நார்மானிய பிரபுக் களுக்குக் கொடுக்கப்பட்டன.

கி.பி. 1095ஆம் ஆண்டில் நார்த்தம்பர்லாந்து பிரபுவான ராபர்ட் மௌப்ரே (Mowbray) என்பவர் ரூபஸ் மன்னரை எதிர்க்கவும் வடக்குநோக்கி அரசர் தம்படைகளுடன் விரைந்தார். தம் எதிரி பாம்பரோக் (Bamborough) கோட்டையில் புகுந்து கொண்டிருக்க, அவரையும் அவரது படைகளையும் தந்திரமாக வெளியே வரச்செய்து ரூபஸ் மன்னர் இப் பிரபுவைத் தோற் கடித்து சிறைப்பிடித்தார். தம்மை எதிர்ப்பவர்களைச் சிறிதும் இரக்கமின்றிப் பணியவைக்கும் திறமைகொண்ட ரூபஸ் மன்னர், மௌப்ரேயின் பட்டத்தையும் உடைமைகளையும் பறித்ததோடன்றி ஆயுட்காலக் கைதியாகச் சிறையிலடைத்தார்.

இதன் பின்னர் இவ் வரசரின் இறுதி நாள் வரையில் கலகத்தில் ஈடுபட எந்தப் பிரபுவுக்கும் துணிவு ஏற்படவில்லை.

பாலஸ்தீனத்திலிருந்த கிறித்துவ புனிதத்'தலங்களைத் துருக்கியரிடமிருந்து மீட்க அன்றைய போப்பாண்டவரான இரண்டாம் அர்பன் (Urban II) பிறப்பித்த ஆணையைத் தொடர்ந்து முதலாம் சிலுவைப்போர் தொடங்கியிருந்தது. அதில் கலந்துகொள்ள சமய ஆர்வம்கொண்ட நார்மண்டி இராபர்ட் (அரசரின் மூத்த சகோதரர்) போர்ச் செலவுக்கு வேண்டித் தம்மானியமான நார்மண்டியை ரூபசுக்கு 10,000 மார்க் தொகைக்கு அடைமானம் வைத்திருந்ததால் இவ் வரசருக்கு இப் பகுதியும் கிடைத்திருந்தது

இருப்பினும், மேற் சொல்லப்பட்ட நிகழ்ச்சிகள் இவருக்குப் பெருமையைக் கொடுத்தனவாக இல்லை. அதற்குக் காரணம் இவரது கொடுங்கோன்மையே. கி.பி. 1100ஆம் ஆண்டு ஆகஸ்டு 2 ஆம் நாள் வேட்டையாடச் சென்றிருந்த இடத்தில் ரூபஸ் அம்பு பாய்ந்து இறந்துகிடக்க அவரது சடலம் பணியாளர்களால் கண்டெடுக்கப்பட்டது. இவரது கொடுங்கோன்மையால் அல்லற்பட்ட யாரோ ஒருவர் அரசரைக் கொன்றிருக்கலாம். 'மக்களால் வெறுக்கப்பட்டு, கடவுளால் ஒதுக்கப்பட்ட இரண்டாம் வில்லியம் (ரூபஸ்), தாம் செய்த குற்றங்களுக்குப் பரிகாரம் தேடும் தகுதிகூட இல்லாமல் கொல்லப்பட்டார்' என்பது ஆங்கில சாக்ஸானியக் குறிப்பின் கூற்று.

## முதலாம் ஹென்றி (கி.பி. 1100—1135)

ரூபஸ் மன்னருடன் அன்று வேட்டைக்குச் சென்றவர்களில் அவரின் தம்பியான ஹென்றியும் ஒருவர். தம் அண்ணன் அம்பினால் வீழ்த்தப்பட்டதைத் தொடர்ந்து விஞ்செஸ்டருக்கு விரைந்த ஹென்றி அங்கிருந்த கருவூலப் பணத்தைக் கைப்பற்றினார். பொருள் பலம் தமக்குக் கிடைத்திருக்க, அதைக் கொண்டு ஆள் பலத்தையும் ஹென்றி தேடிக்கொண்டு கி.பி. 1100ஆம் ஆண்டு ஆகஸ்டு 5ஆம் நாளன்று இவர் மன்னராக முடிசூட்டப்பெற்றார்.

நேர்மையையும் நீதி மனப்பான்மையையும் வீரத்தையும் ஆட்சிக் கலையையும் ஒருங்கே பெற்றிருந்த முதலாம் ஹென்றி இந் நாட்டின் வரலாற்றில் போற்றத்தக்க அரசர்களில் ஒருவராகவே மதிக்கப்படுகின்றார்.

**அறிவு சார்ந்த ஏற்பாடுகள் :** தம் தந்தையார் காலத்திலும் தமையனார் காலத்திலும் நிலமானிய பிரபுக்களின் பலம் பெருமளவு அடக்கப்பட்டிருந்திருப்பினும், தாமும் மூன்று ஏற்பாடுகளைச் செய்தார்.

குடி மக்களான ஆங்கிலேயர்களை (சாக்சானியர்களை) வயப் படுத்துதல்; கலகக்காரப் பிரபுக்களை அடக்குதல்; நாட்டு அர சாங்கத்தைப் பலப்படுத்துதல் போன்றவையே அவையாகும்.

மக்களின் ஆதரவைத் தம் பக்கம் தேடிக்கொள்ளும் நிலையில், முதலாம் வில்லியம் தாம் பட்டத்திற்கு வந்ததும் ஒரு சுதந்திர சாசனத்தை (Charter of liberties) வெளியிட்டார். வில்லியம் ரூபஸ் காலத்தில் நடத்தப்பட்ட கொடுங்கோலாட்சியைக் கைவிட்டுப் பழைய சாக்சானிய அரசரான எட்வர்டு அதிபக்த ரின் மரபுகளை மேற்கொண்டு ஆளப்போவதாகவும் அச் சாச னத்தில் அரசர் எடுத்துரைத்திருந்தார்; சமயத் தேர்தல்களில் திருச்சபையினருக்கு முழு சுதந்திரம் அளிக்கப்போவதாகவும், அவற்றின் சொத்துகளைத் தாம் அபகரிக்கப்போவதில்லை யென்றும் இம் மன்னர் வாக்களித்திருந்தார். தமது மானியப் பிரபுக்களுக்கு தாம் கொடுக்கக்கூடிய சலுகைகளெல்லாம் அவர்கள் தங்களின் கீழ் மானியதாரர்களுக்கு அளிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தி யிருந்தார்.

தம் பணப்பித்தாலும் நேர்மையற்ற செயல்களாலும் ஆங்கில மக்களின் பொது வெறுப்பிற்கு ஆளாகியிருந்த ஃபிளாம்பர்டு (ரூபஸ் மன்னரின் பிரதம ஆலோசகர்) என்பவரைச் சிறைப் படுத்தி, மக்களால் போற்றப்பட்டவரும் ரூபஸ் மன்னரால் நாடு கடத்தப்பட்டவருமான ஆர்ச்பிஷப் சலம் என்ற ஒழுக்க சீலரை மீண்டும் வரவழைத்தார்.

ஸ்காட்லாந்து மன்னராயிருந்த மால்கம் கான்மோருக்கும் (Malcolm Canmore) ஆங்கில-சாக்சானிய சீமாட்டியான மார்க ரெட் என்பவருக்கும் பிறந்த எடித் (Edith) என்ற குணவதியை ஹென்றி மணம் செய்து கொண்டதால் நாட்டு மக்களின் பெருமதிப்பிற்கு பாத்திரமாயிருந்தார். இத் திருமணம் ஆங்கி லேயர்களால் நார்மானிய-சாக்சானிய உறவின் கலப்பாக வரவேற் கப்பட்டது. நார்மானிய பிரபுக்களைத் திருப்தி செய்ய வேண் டிய நிலையில் இருந்த ஹென்றி, தம் மனைவியின் பெயரை நார் மானியர் பாணியில் மாடில்டா (Matilda) என மாற்றி வைத்தார்.

**கலகங்களை ஒடுக்குதல்:** முதலாம் ஹென்றி அரச பதவியைப் பெற்றிருந்த சில காலத்திற்குள்ளாகச் சிலுவைப் போரில் கலந்து கொண்டிருந்த இவரின் மூத்த சகோதரரான இராபர்ட் பெரும் புகழோடு நார்மண்டிக்குத் திரும்பித் தம் பூர்வ அதிகாரத்தைப்

பெற்றார். இந் நிலையில் ஹென்றிமன்னரால் சிறைப்படுத்தப்பட்டிருந்த ஃபிளாம்பர்டு காவலிலிருந்து தப்பி நார்மண்டிக்கு ஓடிவிட்டார். மன நிம்மதியின்றியும் பணமுடையாலும் பாதிக்கப்பட்ட இராபர்ட்டை மன்னர் ஹென்றிக்கெதிராக ஃபிளாம்போர்டு தூண்டிவிட்டார். பேதமை உள்ளம் கொண்டிருந்த இராபர்ட்டை கி.பி. 1101-ல் தம் படை கொண்டு போர்ட்ஸ்மத்தில் வந்து இறங்கினர். மக்களின்முழு ஆதரவையும் திருச்சபையின் அபிமானத்தையும் பெற்றிருந்த ஹென்றி, படையெடுப்பாளர்களை ரோச்செஸ்டர் என்னுமிடத்தில் தோற்கடித்தார். ஆங்கில அரசை ஹென்றியிடமிருந்து பிடுங்க வேண்டுமென்ற இராபர்ட்டின் பேராசை நப்பாசையாக முடிந்தது. ஆங்கில அரசுக்குத் தாம் வாரிசு இல்லை என்று ராபர்ட் அறிவித்ததைத் தொடர்ந்து, இரு சகோதரர்களுக்கும் இடையே உடன்பாடும் ஏற்பட்டது.

நார்மானியப் பிரபுக்களின் இழிவான நிலையைக் கண்டு பொருமிய பிரபுக்களில் ஒருவராக இராபர்ட் பெல்லீம் (Robert Belleme) என்பவர் இருந்தார். இப் பிரபு இங்கிலாந்து-வேல்ஸ் எல்லைப்புறத்தில் கோட்டைகளைக் கட்டிக்கொண்டு கொடிய வல்லாட்சி புரிந்து வந்தார். மக்களின் நல்லாதரவைப் பெற்றிருந்த ஹென்றி, இராபர்ட்டைத் தோற்கடித்து நாட்டை விட்டே விரட்டினர். அக் கொடியவரின் அதிகாரம் ஒழிந்ததில் அப் பகுதி மக்களுக்குப் பரம திருப்தி.

நார்மண்டியில் டியூக்காக இருந்த தம் சகோதரர் இராபர்ட் அப் பகுதியில் பலமற்ற முறையிலே ஆட்சியைச் செய்துவர பல பிரபுக்கள் அவருக்குக் கீழ்ப்படிய மறுத்து அப்போதைக்கப் போது குழப்பங்களை விளைவித்து வந்தனர். நார்மண்டி முற்றிலும் அக் குழம்பிய நிலை பரவவிடாமல் தடுக்கும்பொருட்டு ஹென்றிமன்னர், கி.பி. 1106 ஆம் ஆண்டில் அப் பகுதியின்மீது படை எடுத்தார். 40 ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்தின்மீது நார்மானியர்கள் படையெடுத்ததற்குப் பதிலடி கொடுப்பதுபோல் இப் படையெடுப்பு அமைந்தது. ஹென்றியின் படையில் ஏராளமான ஆங்கில வீரர்களே இருந்தனர். மன்னரை டிஞ்செப்பிராய் (Tinchebrai) என்னுமிடத்தில் நார்மானிய வீரர்கள் இராபர்ட்டின் தலைமையில் எதிர்த்துத் தோல்வியடைந்தனர். இராபர்ட் சிறைப்படுத்தப்பட்டார்; நார்மண்டி ஹென்றியின் அதிகாரத்தின் கீழ்க்கொண்டு வரப்பட்டது. ஹேஸ்டிங்ஸ் சண்டையில் முன்பு ஆங்கிலேயர் அடைந்திருந்த தோல்வி டிஞ்செப்பிராய்ச் சண்டையில் பழி வாங்கப்பட்டது.

சிறைப்படுத்தப்பட்டிருந்த இராபர்ட்டின் மகனை வில்லியம் கிளிடோ என்பவர், கி.பி. 1109ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு அரசரான ஆரும் லூயியின் துணைகொண்டு ஹென்றியின் ஆதிக்கத்திற் கெதிராக நார்மண்டியில் கலகம் செய்தார். இருப்பினும், இக் கலகத்தையும் ஹென்றி மன்னர் பிரென்வில் என்னுமிடத்தில் முறியடித்தார்.

**திருமண ஏற்பாடுகள்:** நார்மானியப் பிரபுக்களிடையே தமக்குச் செல்வாக்கைத் தேடிக்கொள்ளவும் ஃபிரெஞ்சுஅரசருக்கு எதிராக தம் பலத்தைப் பெருக்கிக்கொள்ளவும் ஹென்றி, சில திருமண ஒப்பந்தங்களையும் செய்துகொண்டார். பேரரசர் ஐந்தாம் ஹென்றிக்குத் தம் மகளான மாடில்டாவைத் திருமணம் செய்வித் தும் தம் மகனுக்கு ஆஞ்சு நிலக்கிழாரின் மகளை மணம் செய்வித் தும் ஹென்றி தமக்கு நல்லுறவைத் தேடிக்கொண்டார். மகள் மாடில்டா விதவையான போதும் (கி. பி. 1127) அவளை பிளண்டா ஜெனட் கோமகனை ஜியாப்ரே என்பவருக்கு மறுமணம் செய்வித் தார்.

**அரசியல் சீர்திருத்தங்கள் :** பிரபுக்கள் கொட்டத்தை அடக்க அரசர் ஹென்றி அரசியலமைப்பில் செய்த சில முககிய மாற்றங் கள் இவரின் மூன்ருவது முக்கிய ஏற்பாடாக அமைகிறது. சீரான அரசியலைப் புகுத்த எண்ணிய ஹென்றி தனக்கு உதவிய, நேர்மை யும் திறமையும் கொண்ட சில வல்லுநர்களை முக்கிய பதவியிலே அமர்த்தியிருந்தார். அவர்களிலே அயராத சக்தியும் அரசரிடம் ஆழ்ந்த மதிப்பும் கொண்டிருந்த சாலிஸ்பரி ரோஜர் என்பவரும் ஒருவர். நிர்வாகத் துறையில் நல்ல சீர்த்திருத்தங்களை ஹென்றி புகுத்துவதற்கு இவரின் வளமான சிந்தனையே காரணமாயிற்று. ரோஜர் அரசரின் ஜஸ்டிஷியராகப் (Justicar) பதவி நியமனம் பெற்றிருந்தார். அரசர் நாட்டிலில்லாத சமயத்தில் அவரின் பகர ஆட்சியாளராகவும் (Regent) ரோஜர் இருந்தார். இன் ஞெருவர் அரசரின் காரியதரிசியாக அல்லது சான்சலராகவும் (Chancellor) மற்ருெருவர் அரசரின் கருவூல அதிகாரியாகவும் நியமிக்கப்பட்டிருந்தனர். இங்ஙனமாக, ஆட்சித் திறமையும் நிர்வா கத் தேர்ச்சியும் கொண்டிருந்த பல அலுவலர்கள் ஹென்றிக்கு உதவியாக இருந்து அரசியலில் பிரபுக்களுக்கு இதுவரையில் இருந்துவந்த செல்வாக்கைக் குறைத்தனர்.

அரசாங்க நிர்வாகம் நன் முறையில் நடக்கவும் பிரபுக்களின் அதிகாரத்தை மேலும் குறைக்கவும் ஹென்றி மன்னர், இரு பெரிய மன்றங்களை அரச சபையில் உருவாக்கிஞர். அவற்றில் ஒன்று,

மன்னர் மன்றம் (Kings Court) என்பது. இம் மன்றம் கியுரியா ரெஜிஸ் (Curia Regis) எனவும் அழைக்கப்பட்டது. மன்னரோ அல்லது ஜஸ்டீஷியரோ இதற்குத் தலைமை தாங்கினர். பிரபுக் களிடையே தோன்றிய தகராறுகளும் பிரபுக்கள், ஷையர் நீதி மன்றங்களிலிருந்து மேல் முறையீடாக வந்திருந்த வழக்குகளும் (Appeals) இம் மன்றத்தால் விசாரிக்கப்பட்டன. இது தவிர இம் மன்றத்தின் நீதிபதிகள் நாட்டின் பல பகுதிகளுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்து ஆங்காங்குத் தங்கள்முன் கொண்டுவரப் பட்ட வழக்குகளை விசாரித்து அவ்விடங்களிலேயே தீர்ப்பு வழங்கும்படியான ஒரு புதிய ஏற்பாடும் செய்யப்பட்டது. இங்ஙனம் பணியாற்றிய நீதிபதிகளைச் 'சுற்றிவரும் நீதிபதிகள்' (Circuit Judges) என அழைத்தனர்.

அடுத்தது கருவூலம் அல்லது எக்ஸ்சக்கர் (Exchequer) மன்றம் என அழைக்கப்பட்டது. பல உயர் அதிகாரிகள் பணி யாற்றிய இம் மன்றம் மக்களிடமிருந்து வரிகளை வசூலித்ததோடு அதன் சார்பான வழக்குகளையும் விசாரித்தது. அரசர் தமக்கு விசுவாசமான சில பிரபுக்களை உயர் மேற்பார்வையாளராகவும் (Steward), காவல் அதிகாரியாகவும (Constable) படைத் துறைத் தலைவராகவும் (Marshal) நியமித்திருந்தார்.

ஆங்கிலோ-சாக்சானியர் காலத்து ஹண்டிரடு (நூற்றுவர்) ஷையர் நீதிமன்றங்கள் நாட்டின் நிர்வாகத்துடன் இணைக்கப்பட் டிருந்தன. பிரபுக்களின் தலமன்றங்களும் அரசின் மேற்பார்வை யில் கொண்டுவரப்பட்டிருந்தன.

சுருக்கமாக, இவ் வரசர் காலத்தில் நாட்டின் வருவாய் பெருகியதோடன்றி, நீதியின் செல்வாக்கும் உயர்த்தப்பட்டது. குறிப்பாக நிலமானியப் பிரபுத்துவத்திற்கும் மேலாக அமைச்சர் களடங்கிய பெருமக்கள் குடி (Ministerial Nobility) ஒன்று அமைக்கப்பட்டிருந்தது.

மேற்கூறப்பட்ட பல முறைகளில் முதலாம் ஹென்றி தன் காலத்துப் பிரபுக்களைக் கட்டுப்படுத்தி வைத்தார்.

நாட்டில் நல்லாட்சியை நிறுவியிருந்த முதலாம் ஹென்றிக்கு, தம்மையடுத்து யார் அரியணைக்கு வரவேண்டும் என்ற பிரச் சினையைத் தீர்க்கவேண்டிய பெரும் பொறுப்பும் இருந்தது. கி.பி. 1120ஆம் ஆண்டில் அரசரின் ஒரே மகனும், வாரிசுமான இள வரசர் வில்லியம் ஒரு கடல் விபத்தில் சிக்குண்டு மாண்டுவிட்டார். தம்மகனின் பரிதாப முடிவிற்குப்பின்னர் ஹென்றி சிரிக்கவே இல்லை

என்று சொல்லப்படுகிறது. அதாவது, அந்த அளவிற்கு ஹென்றி யின் மனம் அதிர்ச்சியடைந்திருந்தது. தம் மகன் இல்லாத அந் நேரத்தில் ஹென்றி அரசர், தம் ஒரே மகளான மாடில்டா என்பவளைத் தமக்குப்பின் வாரிசாக அறிவித்துவிட்டு, பிரபுக் களையும் அதற்கான விசுவாசப் பிரமாணம் எடுக்கச் செய்திருந் தார். ஆனால், ஹென்றி அரசர், கி.பி. 1135ஆம் ஆண்டில் இறந்து போக, பிரபுக்களும் பிஷப்புகளும் பெண் வாரிசை விரும்பாமல் ஹென்றியின் தங்கை மகனை ஸ்டீபனை அரசராக்கினர்.

## ஸ்டீபன் (Stephen) (கி. பி. 1135—கி. பி. 1154)

இப் புது அரசர் வீரமும் தைரியமும் கொண்டவராயினும், ஸ்திரமான உள்ளம் இல்லாதவராக இருக்க, நல்லாட்சிக்கானசூழ் நிலை இவராட்சியின் தொடக்கத்திலிருந்தே மறைய வாரம்பித்தது.

**அதிகாரிகளை நீக்குதல் :** அரசாங்க நிர்வாகத்தை சீரிய முறையில் பல ஆண்டுகள் நடத்திவந்த ஜஸ்டிஷியர் ரோஜர், சான்சலரான அவரின் மகன், கருவூலத் தலைவரான நிகல், மற்றும் பிஷப் அலெக்ஸான்டர் போன்றோர் ஸ்டீபனை முத லில் ஆதரித்தவர்களாகவே இருந்தனர். ஆயினும், அவர்களின் அபரிமித செல்வாக்கைக் கண்டு பொறாமை கொண்ட ஸ்டீபன் கி.பி.1138ஆம் ஆண்டில் அந்த அதிகாரிகளைப் பதவி நீக்கம் செய்து சிறையிலடைத்தார். குறிப்பாக ரோஜரின் வீழ்ச்சி இதுவரை அடக்கப்பட்டுவந்த பிரபுக்களுக்குப் புதிய தெம்பைக் கொடுத்தது. அரசின் பலம் முழுவதும் ரோஜரின் பலமே என்பதை நன்குணர்ந்த பிரபுக்கள் நாட்டில் குழப்பத்தை விளைவிக்கத் தயாராயினர். இதற்கேற்ப நாட்டின் சூழ்நிலை அக் குழப்பங்களுக்குச் சாதகமாகவே அமைந்திருந்தது.

**மாடில்டாவின் எதிர்ப்பு :** முதலாம் ஹென்றி காலமடை வதற்கு முன்னர் மகள் மாடில்டாவையே தம் அடுத்த வாரி சாக அறிவித்திருந்தார். ஆன்ஜு கோமகனை ஜியாப்ரே பிரபுவை மாடில்டா மணந்து கொண்டிருந்ததால் இவரின் ஆட்சியை ஏற்றுக்கொள்வது அந்நியர் ஆட்சியை ஏற்றுக்கொள்வதற்கு ஒப் பாக அமையுமென்று நினைத்துப் பிரபுக்கள் ஸ்டீபனை அரசராக்கி யிருந்தனர். திருச்சபையும், இலண்டன் மாநகரமும் அப்போது ஸ்டீபனுக்கு ஆதரவு கொடுத்தன. வாரிசுரிமையைத் தமக்குக் கொடுக்காததால் ஏமாற்றமடைந்திருந்த மாடில்டா ஆன்ஜு நாட்டில் கலகத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார்.

ஸ்காட் மன்னரான டேவிட் (David) என்பவர் மாடில்டா வின் சார்பில், ஏற்கனவே இங்கிலாந்தின்மீது படையெடுத்து

வந்து நார்த்தம்டன் என்னுமிடத்தில் 'கொடிச் சண்டையில்' (Battle of Standard) தோற்கடிக்கப்பட்டிருந்தார். தம் சார்பில் எடுக்கப்பட்ட முதல் முயற்சி பலனளிக்காவிடினும், அடுத்த முயற்சிகளில் தம் கனவு பலிக்குமென்று மாடில்டா நம்பித் தமக்கு ஆதரவாக இங்கிலாந்தின் உதவியைத் தேடினர்.

கிளர்ஸ்டரின் எர்ல்லான இராபர்ட் என்பவரின் தலைமையில் நாட்டில் மாடில்டாவுக்கு ஆதரவு தேடப்பட்டது. பிரபுக்கள் இரண்டுபட்டனர். மாடில்டாவின் சார்பில் ஒரு கட்சியும் அரசர் ஸ்டீபனை ஆதரித்து இன்னொரு கட்சியும் நாட்டில் தோன்ற, அதன் விளைவு உள்நாட்டுப் போராகவே இருந்தது.

ஸ்டீபனுக்காகவும் மாடில்டாவுக்காகவும உள்நாட்டுப் போரில் கலந்துகொண்டிருந்த அப் பிரபுக்கள், உண்மையில் தங்கள் சொந்த நலனுக்காகவே போரிட்டுக்கொண்டனர். போர்க் களத்தில் கிடைக்கும் கொள்ளைப்பணமே அதற்குத் தூண்டு கோலாக இருந்தது.

**குழப்ப நிலை :** நாட்டிலே குழப்பம் மேலிட்டது; அதைத் தடுக்கவோ ஒடுக்கவோ முடியாத நிலையில் அரசர் ஸ்டீபன் இருந்தார். அரசர் பலமற்றிருந்த நிலையில் ஒவ்வொரு பிரபுவும் தமக்கெனக் கோட்டை கட்டிக்கொண்டு படைவீரர்களையும் போர்த்தளவாடங்களையும் குவித்துக்கொள்ளத் தொடங்கினர். அரசரின் அநுமதியின்றிக் கட்டப்பட்ட இக் கோட்டைகளை 'ஒழுக் கக்கேடான கோட்டைகள்' (Adulterine Castles) என மக்கள் அழைத்தனர். நாடு முழுவதும் இத்தகைய கோட்டைகள் தோன்றலாயின. கொள்ளையடித்த பணத்தைக்கொண்டு சில பிரபுக்கள் அந்நிய நாடுகளிலிருந்து கூலிப்பட்டாளங்களை (Merce-naries) வரவழைத்தனர். இவ்வாறு வந்த அந்நியப் படை யினர், சிறிதும் கருணையின்றி நாட்டில் பல பகுதிகளில் கொள்ளை யடிக்கலாயினர்; கொள்ளையடிக்கப்பட முடியாத பகுதிகள் இரக்கமின்றிக் கொளுத்தப்பட்டன. நாடு முற்றிலும் நாசமாகி வந்தது. 'கிறிஸ்துவும் மற்ற அடியார்களும் இக் கலவரத்தை நிறுத்த முடியாதபடி தூங்கிவிட்டார்களா?' என்று மக்கள் ஆண்டவனிடத்தே குறைகாணும்படியாக நாட்டில் அமைதியின்மை நிலவியது.

பெருவீரர் வில்லியத்தின் காலத்திலிருந்து பிரபுக்களுக்கு எதிராகச்செய்யப்பட்டிருந்த அத்தனை ஏற்பாடுகளும் பலன் அளிக் காதவாறு ஸ்டீபன் ஆட்சியில் நாடு சீர்குலைந்திருந்தது. அக்

கால ஆங்கில வரலாற்று குறிப்பேடுகளில் தெரிவிக்கப்பட்டிருப் பதுபோல் நாட்டில் சட்டங்கள் அர்த்தமில்லாமல் போயிற்று. உழுநிலங்கள் போரினால் பாழாகியிருந்தன. வறுமையின் கோரத் தாண்டவத்தால் பலர் பிச்சையெடுக்கும் நிலையிலிருந்தனர்; சிலர் நாட்டை விட்டே ஓடினர். மக்கள் எப்போதும் பயம் கலந்த சூழ்நிலையிலேயே வாழ்ந்து வந்தனர். சுருக்கமாகக் கூறினால், நாடு முழுதும் நிலமானிய அராஜகம் தலைவிரித் தாடியது.

சிற்சில சமயங்களில் கலகம் செய்த பிரபுக்களை அடக்க ஸ்டீபன் முயற்சி செய்தார். உதாரணமாக, வடகிழக்கு இங்கி லாந்தில் கலகக் கொடியை உயர்த்தியிருந்தது மாண்டவில் ஜியாப்ரே (Geoffrey of Mandeville) என்பவரை ஒடுக்க மன்னர் படைகொண்டு சென்றிருந்தார். ஒரு பகுதியில் கலகம் அடக்கப்பட்டால் மீண்டும் இன்னொரு பகுதியில் கலகம் தோன்றக் கூடிய நிலைமை அப்போது இருத்தது.

**உள்நாட்டுப் போர் :** நிலைமை இங்ஙனம் கட்டுக்கடுங்கா மலிருந்த சூழ்நிலையில் மாடில்டா இங்கிலாந்தை வந்தடைந்தாள்; பிரிஸ்டல், கிளிஸ்டர் போன்ற பகுதிகள் மாடில்டாவை ஆதரித்தன. இவளுக்கு உதவியாக இரு பெரும் பிரபுக்களான இராபர்ட் கோமகனும் ரால்ப் என்பவரும் துணை நின்றனர். இவர்களைத் தாக்க முயன்ற ஸ்டீபன் அம்முயற்சியில் தோல்வி யுற்றார். வித்தாம் ஆற்றங்கரையில் நடந்த சண்டையில் அரசர் ஸ்டீபன் சரணடையவும் இவர் மாடில்டாவால் பிரிஸ்டல் கோட் டையில் சிறைப்படுத்தப்பட்டார். அதுவரை நடந்த போரில் வெற்றிமுகம் பெற்றிருந்த மாடில்டா, கி.பி.1141ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம். 8ஆம் நாள் இங்கிலாந்து அரசியாக அறிவிக்கப்பட்டார். ஆயினும், லண்டன் நகரம் மட்டும் இன்னும் ஸ்டீபனையே ஆத ரித்தது. அந் நகர மக்களை வெறுத்த மாடில்டா இலண்டனுக்குள் நுழைந்ததும் அவர்களை ஒடுக்க ஆரம்பித்தார். அரசியாரின் ஆணவமான நடத்தையினால் கொதிப்படைந்த அம் மக்கள் மாடில்டாவை இலண்டனை விட்டு விரட்டினர்.

இதற்கிடையே ஸ்டீபனின் மனைவியான மாடில்டா போலோன் (Boulogne), தம் கணவரின் சார்பில் ஒரு படையைத் திரட்டிக் கொண்டு சில பிரபுக்களின் உதவியுடன் போரில் இறங்கி அரசரை பிரிஸ்டல் கோட்டையிலிருந்து விடுதலை செய்தார். கி.பி. 1142ஆம் ஆண்டு செப்டம்பர் 26-ல் ஸ்டீபன் ஆக்ஸ்போர்டு நகரில் தஞ்சம் அடைந்திருந்த மாடில்டாவை முற்றுகையிட்டுப் பணிய

வைத்தார். தம் முயற்சியில் இறுதியாகத் தோல்வியடைந்த மாடில்டா பின்னர் இங்கிலாந்தை விட்டு அகன்றார்.

அடுத்துச் சில ஆண்டுகளுக்கு ஸ்டீபன் எவ்வித இடையூறுமின்றி ஆண்டு வந்தாரெனினும், கி.பி. 1152ஆம் ஆண்டில், மாடில்டாவின் மகனை கவுண்ட் ஹென்றி (வருங்கால இரண்டாம் ஹென்றி), தம் படைகளுடன் ஆங்கில அரசுரிமையைக் கோரி இங்கிலாந்தை வந்தடைந்ததால், போர் மீண்டும் மூண்டது. போர் நடந்து கொண்டிருக்கும் வேளையில் ஸ்டீபனின் மனைவியும், ஒரே மகனுமான யூஸ்ட்சியும் (Eustace) காலமடைந்ததால், உலகப் பற்றுகளில் ஈடுபாடு இழந்துவிட்ட மன்னர், தமது வாழ்நாளை நிம்மதியாக முடித்துக்கொள்ள நினைத்தார். இதன் விளைவாகவே ஸ்டீபனுக்கும் ஹென்றிக்குமிடையே வாலிங்ஃபோர்டு (Wallingford) என்னுமிடத்தில் ஓர் உடன்பாடு கி.பி. 1153ஆம் ஆண்டு ஏற்பட்டது. இவ்வுடன்படிக்கையின்படி எஞ்சியிருந்த காலம் வரை ஸ்டீபனும் அவரின் அடுத்த வாரிசாக ஹென்றியும் இங்கிலாந்தை ஆளவேண்டுமென்று ஏற்பாடாகியது.

இங்ஙனம் குழப்பமிருந்த ஓர் இடைக்காலத்திற்கு அரசராகவிருந்த ஸ்டீபன் கி.பி. 1154ஆம்ஆண்டில் அக்டோபர் 25-ம் நாளில் காலமாக, மாடில்டாவின் மகனும் ஆன்ஜு கோமகனுமான ஹென்றி பட்டம் ஏற்றார்.

இந்த ஹென்றி மன்னரால் தொடங்கப்பட்டதே பிளன்டாஜெனட் அரச மரபாகும்.

## நார்மானிய அரசர்கள்-திருச்சபை உறவு

அரசு விவகாரங்களிலும் சமய விவகாரங்களிலும் யாருடைய மேலாதிக்கம் இருக்க வேண்டுமென அரசர்களுக்கும், திருச்சபைக்கும் ஏற்பட்டிருந்த கருத்து வேறுபாடே இத்தலைப்பின் முக்கிய அம்சமாக விளங்குகிறது.

பெருவீரர் வில்லியம் கி.பி. 1066ஆம் ஆண்டில் படையெடுத்த போது அப்போதைய போப்பாண்டவர் இரண்டாம் அலெக்சாந்தரின் (Alexander II) ஆசி பெற்றே ஹேஸ்டிங்ஸ் போர்க்களத்தை அடைந்தார். அதில் அவர் பெற்ற வெற்றி எங்ஙனம் நார்மானியர்களின் ஆட்சியை இங்கிலாந்தில் வேரூன்றச் செய்தது என்பதை நாம் முன்னரே கண்டோம்.

**முதலாம் வில்லியம்** : வெற்றி வீரர் வில்லியம் மதப்பற்றுக் கொண்டவராதலால் திருச்சபையில் சில முக்கியச் சீர்திருத்தங்

களைச் செய்ய முனைந்தார். ஹெரால்டு மன்னரால் தலைமைப் பிஷப்பாக அமர்த்தப்பட்டிருந்த சாக்சானியரான ஸ்டீகாந்த் என்பவரை அப் பதவியிலிருந்து நீக்கினார். முதற்கண், கல்வியறிவும் திறம்பட செயல்படும் தகுதியும் பெற்றிருந்த அரசரின் ஒரே நண்பர் என்று கருதப்பட்ட, லான்பிராங்கு (Lanfrank) என்பவரைக் கான்டர்பரி திருச்சபையின் தலைமைக் குருவாக அமர்த்தினார்.

**சீர்திருத்தப்பணி :** மடமையில் மூழ்கியிருந்த சாக்சானிய குருமார்களை நீக்கி, மத உணர்ச்சியும் உற்சாகமும் கல்வியறிவும் கொண்ட நார்மானியர்களை நாட்டிலிருந்த திருக்கோயில்களுக்குப் பிஷப்புகளாக்கினார். தங்கள் அகமும், புறமும் பரிசுத்தமாக இருக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து, ஆண்டவனின் திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் பாதிரிமார்கள் திருமணம் செய்து கொள்வதை வில்லியம் தடை செய்தார். சமய பிரசாரத்தின் கேந்திரங்களாக இருந்த மடாலயங்களை (Monasteries) சீர் திருத்தி உண்மை, ஒழுக்கம், அறநெறி ஆகிய நற்பண்புகளின்உறை விடமாக அவற்றை வில்லியம் திகழச் செய்தார்.

**திருச்சபை நீதிமன்றம் :** வில்லியத்தின் மாபெரும் திருச் சபை சீர்திருத்தம், அவர் நீதி மன்றங்களைத் திருச்சபை முறை மன்றம் (Church Courts) எனவும், சமய சார்பற்ற முறை மன்றம் (Lay Courts) எனவும் பிரித்ததாகும். இதுவரை கோட்டமுறை (ஷயர்) மன்றங்களின் பாதிரியாரும் ஷெரீஃப்ஃபும் (Sheriffs) சேர்ந்தே தலைமை தாங்கி நடத்தி வந்தனர். அம் மன்றத்தில் உலகியல், ஆன்மீகத் தொடர்பான எல்லா வழக்குகளும் விசாரிக் கப்பட்டன. இங்ஙனம் கொண்டு வரப்பட்ட சீர்திருத்தத்தினல் கொடுங் குற்றங்கள் (felony), திருமண வழக்குகள் (celibacy), இறுதி விருப்பப்பத்திரம் (Testament), அவதூறு (slander) முதலிய வழக்குகளை விசாரிக்கும் உரிமை திருச்சபை முறை மன்றங்களுக்குக் கொடுக்கப்பட்டன. மேலும், செய்த பாவத் திற்குப் பிராயச்சித்தமாகத் தவம் செய்ய வற்புறுத்தும் அதிகார மும் சமயத்திற்கு எதிராகப் பேசுதல், சமய வேறுபாட்டுணர்வு ஆகியவற்றிற்காகத் தண்டிக்கும் சிறப்பு அதிகாரங்களும் அம் மன்றங்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. உலகியலைச் சார்ந்த பிற குற்றங்களை விசாரிக்கும் அதிகாரம் சமய சார்பற்ற முறை மன்றங்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவ்வாறு, சமய தொடர் பான நீதிமன்றங்களுக்கும், பொதுமன்றங்களுக்கும் உள்ள அதிகாரத்தையும் கடமைகளையும் பாகுபடுத்தித் திருச்சபைச் சட்ட திட்டங்களை வில்லியம் உறுதிப்படுத்தினார்.

**சையனாடு (Synod):** மேலும், வில்லியம் இன்னொரு சீர் திருத்தமாகப் புதிய ஏற்பாடொன்றையும் கொண்டுவந்தார். அதன் படி, பாதிரிமார்கள் திருக்கூட்டத்தில் ஒன்று சேர்ந்து கலந் தாலோசித்துச் சமயத் தொடர்பான விதிமுறைகளையும் (eccle siastical) கொண்டு வர அனுமதிக்கப்பட்டனர்.

**அரசு ஆதிக்கம்:** திருச்சபை விவகாரங்களில் வில்லியம் மிகுந்த ஆர்வத்தைக்காட்டி வந்தாரெனினும், அரசருக்குரிய சிறப் பதிகாரங்களைத் திருச்சபையின் தலைவரான போப்பாண்டவருக்கு விட்டுக்கொடுக்க அவர் இசையவில்லை. கி.பி. 1073-ல் பதவி யேற்றிருந்த போப்பாண்டவர் ஏழாம் கிரிகோரி (Gregory VII) தமது மேலாண்மையை ஏற்கும்படி வில்லியத்தை வற்புறுத்த, தனிப்பட்ட முறையில் போப்பாண்டவரின் ஆசியைப் பெறுவதில் வில்லியம் மகிழ்ச்சியுடையவராக இருந்தும், திருச்சபைத் தலை வருக்குக் கீழடங்கிப்போக வில்லியம் விரும்பவில்லை. தமக்குமுன் இங்கிலாந்தை ஆண்ட எந்த மன்னரும் போப்பாண்டவர்களின் மேலாண்மையை ஏற்கவில்லை என்பதைச் சுட்டிக்காட்டி வில்லியம் மறுப்பளித்தார். அரசு விவகாரங்களில் பிரபுக்களின் தலையீட்டை எங்ஙனம் எதிர்த்துச் செயல்பட்டாரோ, அதே போன்று தமக் குரித்தான சமய அதிகாரங்களில் போப்பாண்டவரின் தலையீட்டை யும் வில்லியம் எதிர்க்க முடிவு செய்தார். அம் முடிவுக்கு ஏற்ப அரசு மேல் ஆதிக்க திருச்சபைச் சட்டத்தை (The Canons of Royal Suprmacy) வில்லியம் கொண்டு வந்தார். அதன்படி போப் பாண்டவரின் அதிகாரத்தை இங்கிலாந்தில் வரம்புக்குட்பட்ட தாகச் செய்தார். அரசரின் ஒப்புதலின் பேரிலேயே இங்கிலாந் தின் திருச்சபைகள் போப்பாண்டவருக்குக் கட்டுப்பட்டனவாக இருக்கவேண்டுமென்றும், அரசரின் அனுமதியின்றித் திருக்கூட்டம் (Synod) நடத்தப்படக்கூடாதென்றும், போப்பின் ஆணைகள் (Pabal Bulls)ஏற்கப்படக்கூடா தென்றும், பிரதான மானிய தாரர்கள் (tenants–in-chief) மதப்பிரஷ்டம் செய்யப்படக் கூடா தெனவும் வில்லியம் திருச்சபை விவகாரத்தில் தம் செல்வாக்கைப் பயன்படுத்தினர்.

வெற்றி வீரர் வில்லியம் தம் இறுதிக்காலம் வரை தாராளமாக மானியங்கள் வழங்கித் திருச்சபையின் பணியை மேம்பாடு அடையச் செய்தார்.

**இரண்டாம் வில்லியம்**

வெற்றி வீரரின் மரணத்தையொட்டிப் பட்டமெய்திய வில்லியம் ரூபஸ், கடவுள் பக்தி அற்றவராகவும் பணப்பித்துடன் முரட்டு

சுபாவம் கொண்டவராகவும் இருந்தார். தம்முடைய அரசாங்க வருவாயைப் பெருக்கிக்கொள்ளும் முயற்சியில் கான்டர்பரியின் தலைமைக் குருவான (ஆர்ச்பிஷப்) லான் ஃபிராங்குடன் இவ் வரசர் தகராறு செய்து வந்தார்.

**அரசரின் சுயநலக் கொள்கை :** கி. பி. 1089-ஆம் ஆண்டு லான் ஃபிராங்கு காலமானார். மரபின்படி தகுந்த நபரைக் குருவாக அமர்த்தும் வரையில் அக் குறிப்பிட்ட திருக்கோயிலின் விவகாரங் களை அரசரே கண்காணிக்கலாமென்ற ஒரு வழக்கம் இருந்தது. முடிந்தவரை கான்டர்பரி திருச்சபையின் வருவாயைப் பெற்று இன்புற நினைத்த அரசர் இரண்டாம் வில்லியம், அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு (கி. பி. 1089-1093) புதிய ஓர் ஆர்ச் பிஷப்பை அமர்த்தவே இல்லை.

கி பி. 1093-ல் அவ்வரசர் கடுமையான நோயொன்றினல் தாக்கப்பட்டபோது அவருக்கு இறைப்பற்று ஏற்பட்டது. கான்டர்பரிக்குத் தலைமைக் குருவை நியமிக்கத் தவறியதன் தண்டனையாகவே தமக்குக் கடும் நோய் கண்டிருக்கிறது என நினைத்து, அதற்குப் பிராயச்சித்தமாக ஆன்சலம் (Anselm) என்பவரைத் தலைமைக் குருவாக அமர்த்தினர்.

**அரசர் ஆன்சலம் தகராறு :** கல்வியறிவும் ஒழுக்கசீலமும் பெற்றிருந்த ஆன்சலம், வேண்டா வெறுப்புடனேயே தமக்குக் கொடுக்கப்பட்ட அப் பதவியை ஏற்றிருந்தார். அதற்கிடையே, நோயிலிருந்து மீண்ட இரண்டாம் வில்லியம், தம்மால் பதவியி லமர்த்தப்பட்ட ஆன்சலத்தைத் தமது கைப்பொம்மையாக ஆட்டி வைக்க எண்ணம் கொண்டார். உறுதியான உள்ளம் கொண்ட ஆன்சலம், அரசரின் எடுபிடி ஆளாக இருக்க விரும்பவில்லை. மேலும் தமக்கிருந்த பிரத்தியேக அதிகாரத்தைக் கொண்டு, அரசர் காலியிடங்களுக்குப் (Vacant) பிஷப்புகளை அமர்த்தாமல் அத்திருக்கோயில்களின் நிதியைக் கையாண்டு வருவதை, ஆன் சலம் சுட்டிக்காட்ட முற்பட்டதால், அரசருக்கும் கான்டர்பரியின் தலைமைக் குருவுக்கும் தகராறு ஏற்பட்டது. பிற வகைகளிலும் அவர்களிடையே பிளவு முற்றியது. கான்டர்பரியின் நிலங்கள் அரசரிடமிருந்தன. ஆன்சலம் அந் நிலங்கள் திருச்சபைக்கு உரியவை எனக் கேட்டுக்கொண்டும் மன்னர் மதிக்கவில்லை. ஒழுக்கங் கெட்ட அரசரின் அவையினரால் கொண்டு வரப்பட் டிருந்த ஒழுக்கச் சீர்திருத்தங்களை ஆன்சலம் ஏற்க மறுத்தார்.

**பதவிச்சின்ன விவகாரம் :** அச்சமயத்தில் இரண்டாம் அர்பன் (Urban II) என்பவர், போப்பாண்டவராக இருந்தார். போப்

பாண்டவரின் இருப்பிடமான ரோம் நகருக்குச் சென்று தமது பதவிக்கான சமய சின்னங்களைப் (Pallium) பெற நினைத்த ஆன்சலம், அதற்கான அனுமதியை அரசரிடம் கேட்டார். அப்போது ரோமாபுரி திருச்சபை விவகாரத்தில் சிக்கல் நிரம்பி இருந்தது. இரண்டாம் அர்பனுக்குப் போட்டியாகக் கிளமென்ட் (Clement) என்பவரைப் புனித ரோமப் பேரரசர் போப்பாண்டவராக நியமித்திருந்ததால், அவர்களிருவரில் எவர் உண்மையான அதிகாரம் கொண்ட போப்பாண்டவர் என்ற பிரச்சினை எழுந்தது. இரண்டாம் வில்லியத்திற்கு அப் புதிர் வரப்பிரசாதமாக அமைந்திருந்தது. ரோமாபுரியின் அச் சிக்கல் தீரும்வரையில் தாம் அந்த இரு நபர்களில் எவரையும் போப்பாண்டவராக ஏற்றுக் கொள்ள முடியாதெனக் கூறி, ரோமுக்குச் செல்வதற்குரிய அனுமதியை ஆன்சலத்துக்குக் கொடுக்க இரண்டாம் வில்லியம் மறுத்தார். அதற்குப் பதிலடி கொடுப்பதுபோல் தம் பதவிக்கு வேண்டிய சமய சின்னங்களை அரசரிடமிருந்து பெற்றுக்கொள்ள முடியாதென ஆன்சலம் ஆணித்தரமாகக் கூறிக்கொண்டதோடு, இங்கிலாந்திலுள்ள மற்ற குருமார்களுக்குக் கொடுக்க வேண்டிய சமய சின்னங்களைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பான தாமே கொடுக்க வேண்டுமென விடாப்பிடியாக வற்புறுத்தினர்.

கத்தோலிக்க திருச்சபையின் அனுமதியால் பதவியேற்றிருந்த போப்பாண்டவரான இரண்டாம் அர்பனுக்கு விசுவாசம் காட்டுவதா, மன்னர் இரண்டாம் வில்லியத்திற்கு விசுவாசம் காட்டுவதா என்ற சிக்கல் ஆன்சலத்தைப் பொறுத்தவரையில் இல்லை. ஏனெனில், கான்டர்பரி மடாலயம் ரோமாபுரியிலுள்ள இரண்டாம் அர்பனுக்கே விசுவாசம் தெரிவிக்க ஏற்கனவே முடிவு செய்திருந்தது. இருப்பினும், அரசருக்கும் கான்டர்பரி தலைமைக் குருவுக்கும் ஏற்பட்டிருந்த தகராறுகளைத் தீர்க்க, கி.பி. 1095-ல் ராக்கிங்ஹாம் (Rockingham)என்னுமிடத்தில் ஒரு குழு (Council) கூட்டப்பட்டது. ஆயினும், எதிர்பார்த்த அளவுக்கு அக் குழு எதையும் சாதித்துவிடவில்லை.

அதற்கிடையே அதிகாரபூர்வமான போப்பாண்டவர் யாரென்ற நிலைமையில் தெளிவு ஏற்பட்டிருக்க, இரண்டாம் அர்பனை அரசர் இரண்டாம் வில்லியம் போப்பாண்டவராக ஒப்புக்கொண்டு, அவரால் இங்கிலாந்துக்குக் கொடுத்தனுப்பப்பட்ட பதவிச் சின்னங்களை ஆன்சலம் பெற்றுக்கொள்ள அனுமதியளித்தார்.

அங்ஙனமாகப் பதவிச் சின்ன வாதம் (investiture contest) அப்போதைக்குச் சுமுகமாக முடிந்திருந்த போதிலும், சில காலம்

கழித்து மீண்டும் அரசருக்கும் ஆன்சலத்துக்கும் தகராறு ஏற்பட்டது. இரண்டாம் வில்லியம், வேல்ஸ் பகுதியைத் தாக்கிப் போர் செய்தபோது திருச்சபை பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, ஆன்சலம் அவ் வேண்டுகோளை நிராகரித்தார். அதனால் கொதிப்படைந்த அரசர், வழக்குத் தொடர்ந்து ஆன்சலத்தை விசாரிக்க முன் வந்தபோது, அவ் விவகாரத்தில் தீர்ப்பளிக்கும் உரிமை போப்பாண்டவருக்கே உண்டு எனக் கான்டர்பரியின் தலைமைக் குரு எதிர்வாதம் செய்தார். கொந்தளிப்பான சூழ்நிலை இதனால் ஏற்படுகிறதென்பதை உணர்ந்த ஆன்சலம், அரசரின் கோபத்திற்கு மேலும் ஆளாக விரும்பாமல் 1097–ல் தாமாகவே நாட்டைவிட்டு வெளியேறினார்.

## முதலாம் ஹென்றி (1100—1135)

அடுத்து வாரிசுரிமையைப் பெற்றிருந்த முதலாம் ஹென்றி பிடிவாதக் குணம் கொண்டிருந்ததம்முடையசகோதரர் இரண்டாம் வில்லியத்தைக் காட்டிலும் மாறுபட்டவராக இருந்தார். இருப்பினும், இவரது ஆட்சிக் காலத்திலும் அரசருக்கும் திருச்சபைக்குமிடையே மோதல் உண்டாயிற்று.

நாடு கடந்து சென்றிருந்த ஆன்சலத்தை திரும்பவும் அரசர் இங்கிலாந்திற்கு அழைத்துக்கொண்டார். ஆனால், வந்ததும் வராததுமாக ஆன்சலம், திருச்சபையின் உரிமைகளுக்காகப் போராடத் தொடங்கினார்.

**பதவிச் சின்னம் தகராறு:** தலைமைக் குருமார்கள் அரசரால் அமர்த்தப்படுவதா? திருச்சபை பதவிச் சின்னங்களை அரசர் வழங்குவதா? அல்லது போப்பாண்டவர் வழங்குவதா? குருமார்கள் மன்னருக்கு விசுவாசப்பிரமாணம் செய்யவேண்டியது அவசியந்தானா? என்பன போன்ற பிரச்சினைகளை ஆன்சலம் கிளப்பிவிட்டார். ஆன்சலம் உதவாத ஒரு கொள்கைக்காக வாதாடவில்லை. பதவிச் சின்னங்களைக் குருமார்கள் அரசரிடத்தில் பெற்றால், அவர்கள் திருச்சபையை மதிக்கமாட்டார்களென்பது இவரது வாதம். திருச்சபையின் சமய சுதந்திரத்திற்காகவே அவர் உரிமைக் குரல் எழுப்பினார்.

அரசரிடமிருந்து பெற்றிருக்கும் மானியத்திற்காகக் (fief) குருமார்கள் தமக்கு இறை வணக்கம் செலுத்த வேண்டுமென்று முதலாம் ஹென்றி வாதாடினார். ஆன்சலத்தின் உரிமைப் போராட்டத்திற்கு உடன்படுவதானால், தம் அரச அதிகாரங்களுக்கு அதனால் பங்கம் ஏற்படக் கூடுமென முதலாம்

ஹென்றி நினைத்ததில் வியப்பில்லை. திருச்சபையின் சுதந்திரத்தை ஏற்றுக்கொள்வதானல், இங்கிலாந்தில் வாழும் லௌகீகர்கள் (laymen) தமக்கு விசுவாசம் செலுத்த, திருச்சபையினர் தங்கள் விசுவாசத்தைப் போப்பாண்டவருக்கும், தலைமைக் குருவுக்கும் (Arch-bishop) செலுத்தக் கடமைப்பட்டவர்களாவர். அந்த ஏற்பாட்டினல் இங்கிலாந்தின் ஒற்றுமை குலையக் கூடுமென முதலாம் ஹென்றி திடமாக நம்பியதால், ஆன்சலத்தின் குரலை உதாசீனப்படுத்தினர். அதனல் மனமுடைந்த ஆன்சலம் கி.பி. 1103-ல் மீண்டும் நாட்டைவிட்டு அகன்ருர்.

**தகராறின் முடிவு:** ஐரோப்பாவிலும் போப்பாண்டவருக்கும் புனித ரோமப் பேரரசருக்குமிடையே பதவிச் சின்ன வாதம் (investiture contest) அத் தருணத்தில் நடந்து வந்தது. அவர்களுக்கிடையே கி.பி. 1106-ல் ஓர் உடன்பாடு ஏற்பட்டதைத் தொடர்ந்து, அடுத்த ஆண்டில் ஆன்சலத்தை மீண்டும் இங்கிலாந்துக்கு வரவழைத்து முதலாம் ஹென்றி, திருச்சபை அரச விவகாரத்திற்குத் தீர்வு கண்டார்.

அவ்வுடன்பாட்டின்படி பதவிச் சின்னங்களாக மோதிரம், ஆன்மீகச் செங்கோல் ஆகியவற்றைச் சமய குருமார்கள் போப்பாண்டவரிடமிருந்து பெற்றுக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். ஆயினும், அக் குருமார்கள் நிலப்பிரபுக்கள் என்ற முறையில் அரசராகிய தம்மிடத்தே நிலமானிய முறைப்படி பற்றுறுதி உடையவர்களாக இருக்கவேண்டுமென்ற உரிமையை முதலாம் ஹென்றி பெற்றுக் கொண்டார். அதாவது, லௌகீக உடைமைகளைப் பொறுத்தமட்டில் திருச்சபையினரும் அரசருக்கு விசுவாச வாக்குறுதி அளிக்க வேண்டுமென்று ஏற்பாடாயிற்று. மேலும் பிஷப்புகளையும் (Bishops), மடாதிபதிகளையும் (abbots) தேர்ந்தெடுக்கும் உரிமையை அந்தந்தக் கோயில் குருமார்களுக்கும், மடத் துறவிகளுக்கும் (monks), முறையே கொடுக்கப்பட்டதெனினும் அவர்கள் தேர்ந்தெடுக்கவேண்டிய குருமார்களின் பெயர்களைக் குறிப்பிடும் அதிகாரத்தை அரசர் ஏற்ருர்.

மேற்கண்ட ஏற்பாட்டினல், நார்மானியர் காலத்தில் அரசுக்கும், திருச்சபைக்குமிடையே இருந்து வந்த தகராறு முடிவுற்றது.

**ஸ்டீபன்**

இவ்வரசரின் காலத்தில் அரசியல் சீர்கேடுகளும், நாட்டுக் குழப்பங்களும் மிகுந்து காணப்பட்டாலும், திருச்சபையைப்

பொறுத்தவரையில், அதன் அதிகாரங்கள் வளர்ச்சி பெற்ற நிலையிலேயே இருந்தன. இதற்கு இரு முக்கியக் காரணங்களிருந்தன. முதலாவதாக, மடாலயங்களின் (Monasteries) வளர்ச்சியாகும். நாட்டிலேயே சண்டையும் சச்சரவும் மிகுந்திருக்க, அச் செயல்களால் மனக் கசப்படைந்து சமய பணிக்குத் தங்களை அர்ப்பணித்துக்கொண்டு, துறவு வாழ்க்கையைத் தேடிப் பலர் மடாலயங்களில் சேர்ந்தனர். சமூக சேவை, கலைப்பணி, போன்ற நற்பணிகளுக்கு இருப்பிடமாகவும் அறநிலையங்களாகவும் அடைக்கல விடுதிகளாகவும் இருந்த மடாலயங்கள், இச் சமயத்தில் மறுமலர்ச்சி பெற்று திருச்சபையின் உயிர் நாடிகளாக விளங்கின.

இரண்டாவதாக, அரசு சீர்குலைந்திருந்த இக் காலத்தில் திருச்சபை தன்னைத்தானே நிர்வகித்துக் கொண்டு கட்டுக்கோப்புடன் விளங்கியது. ஸ்டீபனுக்கும், மாடில்டாவுக்கும் சமரசம் செய்யும் முயற்சியில் திருச்சபை இச் சமயம் ஈடுபட்டதன்மூலம் அதன் செல்வாக்கினை உணர முடிந்தது. வாலிங்போர்டு உடன்பாட்டைத் தலைமை பிஷப் தியோபால்டு (Theobald) செய்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இங்ஙனமாக நார்மானியர் காலத்தில் அரசு-திருச்சபை ஏற்பாடு நட்பையும், பூசலையும் ஒருங்கே கொண்டதாக அமைந்திருந்தது.

## நார்மானிய அரசியலமைப்பின் சிறப்பு

வலிமை பொருந்திய முடியாட்சியை நிறுவிச் செம்மையான நிர்வாகத்தைப் புகுத்தி, புதிய அரசியலமைப்புக் கருத்துகளை நடைமுறைக்குக் கொண்டு வந்திருந்த நார்மானியர்களின் அரசியல் முறை, இங்கிலாந்தின் வரலாற்றில் முக்கிய இடம் பெறுகிறது. ஆடம்ஸ் (Adams) போன்ற ஆசிரியர்கள், இங்கிலாந்து அரசியலமைப்பின் வரலாறு, நார்மானியர்கள் இங்கிலாந்திற்கு வருகை தந்த நாள் முதற்கொண்டுதான் தொடங்குகின்றதென்று கூகின்றனர்.

**வல்லாட்சி**

நார்மானியர் வலிமை வாய்ந்த முடியாட்சியினை நிறுவியதற்கும், அம் மன்னர்களின் அதிகாரப் பெருக்கிற்கும், இரு முக்கிய காரணங்களிருந்தன. இவ் வரசர்கள் (ஸ்டீபன் தவிர) அனைவரும் மிக்க திறமை கொண்டவர்களாகவும், உறுதியான உள்ளம் கொண்டவர்களாகவும் இருந்ததைத் தவிர, அரசர் என்ற முறையிலும் படை(நில) மானிய உயர் மேலாளராகவும், ஆளும்

பொறுப்பையும் பெற்றிருந்தனர். உதாரணமாக, அரசர் என்ற முறையில் குடிப்படையில் சேருமாறு மக்களை வற்புறுத்தக்கூடிய அதிகாரம் இம் மன்னர்களுக்கு இருந்தது; அதேபோன்று பெரும் மானியப்பிரபு என்ற வகையில் மானியதாரர்களிடமிருந்து படைகளைப் பெறவும் இவர்களால் முடிந்தது. தம் கீழிருக்க வேண்டிய மானியதாரர்கள் கலகம் செய்யும்போது, அவர்களைக் குடிப்படையினைக் கொண்டு நார்மானிய மன்னர் அடக்கினர்; குடிப்படையில் சேரவேண்டிய மக்கள் கலகம் செய்தபோது நிலமானியப் படையைக் கொண்டு சமாளித்தார். மற்றோர் உதாரணமாக, அரசர் என்ற முறையில் நாட்டின் வரிகளை (டேன்கெல்டு, சுங்கங்கள், புதையல்கள், சொத்துகள்) நார்மானிய மன்னர் வசூலித்தார். படைமானிய உயர் மேலாளர் என்ற முறையில் சில வருவாய்களை இவ்வரசர் பெற்றார், படைப் பலமும் பொருள் வளமும் கொண்டிருந்த நார்மானிய மன்னர்கள் வல்லாட்சியை அமைக்க முடிந்ததில் ஆச்சரியமெதுவுமில்லை.

**நீதிமுறை**

நார்மானியர் காலத்தில் நீதிமுறையும் சீர்படுத்தப்பட்டிருந்தது. நார்மானியர் காலத்தில் குற்றம் செய்தோர் அரசரின் தயவை நாடவேண்டிய நிர்ப்பந்தத்திலேயே இருந்தனர். குற்றவாளியைக் கொல்லவோ, அவர்களுடைய சொத்துகளைப் பறிமுதல் செய்யவோ, சுதந்திரத்தைப் பறிக்கவோ, அபராதம் விதிக்கவோ, அல்லது விடுதலை செய்யவோ அரசருக்கு முழு அதிகாரம் இருந்தது. அரசருடைய நீதிமன்றங்களில்தான் தக்க நியாயம் கிடைக்கப்படும் என்ற நம்பிக்கை பரவலாக இருந்ததால், பல வழக்குகள் அரசரின் நீதிக்கு உட்படுத்தப்பட்டன. சமூகத்தில் எந்நிலையிலிருந்தாலும் தவறு செய்தவர்கள் அரசரின் நீதிமன்றங்களில் தண்டிக்கப்படுவார்களென்ற எண்ணம் நாட்டில் பரவலாக இருந்தது.

சாக்சானிய காலத்து ஹண்டிரடு, ஷயர் ஆகிய நீதி மன்றங்கள் சீர்படுத்தப்பட்டதோடு, பிரபுக்களின் மன்றத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டிருந்தது. சுற்றிவரும் நீதிமன்றங்களும் உருவாக்கப்பட்டிருந்தன.

இக் காலத்தில் இருவர் போராட்ட விசாரணைமுறை (trial by battle) புகுத்தப்பட்டது. சிவில் வழக்குகளில் தொடர்புகொண்ட இருவர், தங்கள் சார்பில் இரு மல்லர்களை வைத்துப் போரிடச் செய்வர்; வெற்றிபெற்ற மல்லரின் சார்பில் நியாயம் இருப்பதாகக் கருதப்பட்டது. குற்ற வழக்குகளில் வாதியும் பிரதி

வாதியும் சண்டையிடவேண்டும். இதில் தோல்வியடைந்தவரே குற்றவாளியாகக் கருதப்பட்டார்.

சுருங்கக் கூறின், ஆங்கிலோ-சாக்சானியர் காலத்திய நீதி அமைப்பு அடித்தளமாக இருந்ததெனினும், காலத்திற்கேற்ப சில மாற்றங்களும் நீதிமுறையில் நார்மானியர்களால் அமலாக்கப்பட்டிருந்தன.

**நிதி:** ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் அம் மன்னர்களால் வசூலிக்கப்பட்ட டேன்கெல்டு போன்ற வரிகளோடு, சட்டக் காப்பிழந்தவர்களுடைய சொத்துகள், சுங்கங்களிலிருந்து கிடைக்கப் பெற்ற பணம், புதையல்களின் வளம் ஆகியனவும், நார்மானிய அரசர்களுக்கு நிறைய வருமானத்தைத் தேடிக் கொடுத்தன. இத்தகைய வரிகளையும், வருவாய் வாய்ப்பு வளங்களையும் தடையின்றி அடைவதற்காகவே மக்களின் சொத்துகளைப்பற்றிய முழு விவரங்களை நார்மானிய அரசர்கள் சேகரித்து வைத்திருந்தனரென்பது குறிப்பிடத்தக்கது. ஆங்கிலோ-சாக்சானிய அரசர்களின் பின் மரபினர் (Successor) என்ற முறையில் அவர்களின் காலத்திய நீதிமன்றங்களைத் தொடர்ந்து வைத்திருந்ததோடன்றி, அவற்றின் மூலமாக வசூலிக்கப்பட்ட அபராதத்தையும் பறிமுதல்களையும் அநுபவிக்கக்கூடிய வாய்ப்பினையும் நார்மானிய அரசர்கள் பெற்றிருந்தனர். மேற்கொண்டு, படைமானிய உயர்மேலாளர் என்ற உரிமையில் தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த நிலபுலன்களோடு, தங்களை எதிர்த்துச் செயல்பட்ட, செயல்பட முனைந்த ஆங்கிலோ-சாக்சானியப் பிரபுக்களின் நிலச் சொத்துகளைப் பறித்து, அநுபவிக்கக்கூடிய வசதியையும் நார்மானிய மன்னர்கள் கொண்டிருந்தனர். சில சமயங்களில் நிலமானிய திட்டத்தின்கீழ் (நில) உடைமைகளைப் பெறும் வாரிசுதாரர் அந் நிலத்தின் மதிப்புக்குச் சமமாகப் பின்னுரிமைப் பணம் (Relief) தரவேண்டுமெனக் கட்டாயப்படுத்தி, அதை வசூலித்தவர்களாகவும், நார்மானிய மன்னர்கள் இருந்தனர். மேலும், சில சமயங்களில் மதகுருமார் பதவி ஆளின்றி வெறுமையாக இருந்தபோது, அப் பதவிக்குப் புதிய நபர் எவரையும் அமர்த்தாமல், திருச்சபை விவகாரத்தின் காப்பாளர் என்ற முறையில், காப்புரிமையை (wardship) பயன்படுத்தி, மதகுருமாருக்கு உரிய நிலத்திலிருந்து கிடைக்கக்கூடிய வருமானத்தையும் இவ்வரசர்கள் அடைந்தனர்.

படைமானியத் திட்டத்தின்மூலம் வரிகளையும் உதவிப் பணங்களையும் பெற்றதோடன்றி, நகரங்களுக்கு உரிமைச் சாசனங்கள் (Charter of liberty) வழங்கியதன்மூலமாகவும், நெருக்கடிக்

காலங்களில் கொடுக்கல் வாங்கல் தொழிலில் ஈடுபட்டு வந்த யூதர்களிடமிருந்து பணம் பெற்றுக்கொண்டதன் மூலமாகவும், வழக்குகள் நீதிமன்றங்களில் விசாரிக்கப்படுவதற்கு முன்னர், அதற்கென வெளியிடப்பட்ட தனி ஆணைகளைப் (writ) பிறப்பித்து, அதற்கான ஒரு குறிப்பிட்ட தொகையை வசூலித்ததன்மூலமாக வும், அரசரின் நீதிமன்றங்களில் தண்டிக்கப்பட்ட குற்றவாளி களால் செலுத்தப்பட்ட அபராதத்தின்மூலமாகவும் நார்மானிய அரசர்கள் பெரும் பணத்தைச் சேர்த்தனர்.

சுருக்கமாகக் கூறினால், ஆங்கிலோ-சாக்சானிய அரசர்களைக் காட்டிலும், அதிகமான வருமான வாய்ப்புகளைப் பெற்றவர் களாகவே நார்மானிய மன்னர்கள் விளங்கினர்.

**சாசனம் :** எல்லாவகைக் குடிகளையும் அமைதிப்படுத்தவும் நாட்டில் நல்ல நிர்வாகமுறை அமையவும் சுதந்திர சாசனம் வெளியிடும் வழக்கமும் இவர்கள் காலத்தில் கொண்டு வரப் பட்டது. உதாரணமாக, முதலாம் ஹென்றியின் காலத்தில் வெளியிடப்பட்ட சுதந்திர சாசனத்தில் அரசர்கள் சில வாக்குறு திகளைக் கொடுத்தனர். சமய பதவிகள் காலியாகும்போது, உடனுக்குடன் அப் பகுதிகளை ஆள் கொண்டு நிரப்புவதாகவும், பின்னுரிமைப் பணம் வசூலிக்கப்படமாட்டாதெனவும்; கீழ் மானிய தாரர்களின் பெண் வழி உறவினர்களின் திருமண உரிமையைப் பற்றியும், குழந்தைகளைக் கொண்டும், கொண்டிராத விதவைகள் சொத்துரிமைபற்றியும், காலமான மானியதாரர்களின் உயிலைப் பற்றியும், 'மணியேஜ்' (Moneyage) என்ற வரியையும், 'மண்ட்ரம்' (Mundrum) என்ற அபராதத்தையும் வசூலிப்பதில்லை யென்றும், அச் சுதந்திர சாசனம் அறிவித்திருந்தது. நடைமுறை இயலைச் சார்ந்ததாக அமைந்த இச் சாசனம், நாட்டிலும் அரசிய லிலும் இருந்த சில முறைகேடுகளைக் களைந்திருந்தது. சில சமயங் களில், இச் சாசனங்களால் அறிவிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகள், உரிமைகள் நிறைவேற்றப்படாமலும் இருந்ததென்பதற்கு, இரு சுதந்திர சாசனங்களை வெளியிட்டு, அதனை நிறைவேற்ற முடியா மலிருந்த ஸ்டீபன் அரசரின் காலத்தை ஒரு மேற்கோளாகக் கொள்ளலாம்.

சுதந்திரச் சாசனங்களை வெளியிட்ட வழக்கம் நார்மானியர் காலத்திலேற்பட்டிருந்த புது முயற்சியாக இருந்தது.

**ஆலோசனை சபை :** நார்மானியர்கள் ஆலோசனை சபை சில பெயர்களால், அதாவது பேரவை, பொதுச் சபை, அரசர் சபை

என அழைக்கப்படுகிறது. அரசரின் நம்பிக்கைக்குகந்த சில மானியப் பிரபுக்களே இச் சபையில் அங்கத்தினர்களாக இருந்தனர். எங்கு, எப்போது இச் சபை கூட்டப்படவேண்டுமென்று நிர்ணயிக்கக்கூடிய அதிகாரம் அரசரைச் சார்ந்தேயிருந்தது.

ஆங்கிலோ-சாக்சானியர்களின் விடான் அமைப்பினை நார்மானிய ஆலோசனை சபை கொண்டிருப்பினும், இச் சபையின் அமைப்புமுறை அரச அதிகாரத்திற்குக் கட்டுப்பட்ட வகையில் அமைக்கப்பட்டிருந்தது. இதன் ஒப்புதல் பேரிலேயே அரச காரியங்கள் சில நிகழ்த்தப்பட்டன; ஆயினும் சட்டமியற்றும் அதிகாரம் இச் சபைக்கு அளிக்கப்படவில்லை. வரிவிதிக்கும் அதிகாரத்திலும், வரிவசூலிக்கும் உரிமையிலும் இச் சபை அரசரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. படைமானியக் கருத்து வேரூன்றி வந்த இக் காலத்தில், கீழ் மானியதாரர்களின் ஒத்துழைப்புடன் எல்லாக் காரியங்களையும் மேலாளர் நடத்த வேண்டுமென்ற அடிப்படையில், பிரதம மானியதாரர்களின் ஆலோசனையை ஒப்புக்காகவாவது பெறவேண்டியிருந்த நிர்ப்பந்தத்தில், நிர்வாகம்பற்றிய சில முக்கிய காரியங்களில் அரசர் ஒரு மரபுக்காக இச் சபையை நாடினர்.

ஆயினும், நீதி விவகாரங்களில் இச் சபை அபரிமித அதிகாரங்களைப் பெற்றிருந்தது. அரசரின் நிலங்களைப்பற்றிய வழக்குகளையும், பிரபுக்கள் தனிப்பட்டவர்களின் வழக்குகளையும் இச் சபை விசாரிக்க உரிமை பெற்றிருந்தது.

முதலாம் ஹென்றியின் காலத்தில் அரசரின் முக்கிய அதிகாரங்களடங்கிய சிறிய சபை அமைக்கப்பட்டிருந்தது. இதையே 'கியூரியா ரெஜிஸ்' என அழைக்கின்றனர். இச் சபையில் ஜஸ்டிஷியர், சான்சலர், பொருளாளர், சேம்பர்லேன் (Chamberlain) மார்ஷல், கான்ஸ்டேபிள் போன்ற முக்கிய அதிகாரிகள் இருந்தனர். அரண்மனைக் காரியங்களையும், நிர்வாகப் பணிகளையும் இச் சபை கவனித்தது. பிற்காலக் காபினட் (cabinet) முறைக்கு இச் சிறிய சபையே முன்னோடியாக அமைந்தது எனக் கருதுவோரும் உளர்.

**அதிகாரிகள்:** நார்மானிய அரசர்கள் அடிக்கடி இங்கிலாந்தை விட்டு, நார்மண்டிக்குச் செல்ல வேண்டியிருந்ததால், அரசருக்கு பதிலாக இங்கிலாந்தில் ஆட்சி செய்யும் மற்ற நேரங்களில், பிரதம அமைச்சராகவும், ஜஸ்டிஷியர் பணியாற்றினர்; அரசரது ஆணைகளைச் செல்லுபடியாக்கும் அரச முத்திரைகளைத் தன் பொறுப்பில்

கொண்டிருந்தவராகவும் சான்சலர் இருந்தார். அரசரின் பணம், பொருளாளர் (treasurer) என்பவரின் பொறுப்பில் இருந்தது. சேம்பர்லேன் என்பவர், அரண்மனை அதிகாரியாவார். மார்ஷல், கான்ஸ்டேபிள் போன்ரோர், இராணுவ காவல் துறைத் தலைவர்களாகவும் இருந்தனர்.

அவசியமான சமயங்களில், மேற்கூறிய அதிகாரிகள் அடங்கியிருந்த அச் சிறுசபை, பேரவையின் ஒரு பகுதியாகக், கூட்டத்தில் கலந்து கொண்ட பேரவையே, 'மாக்னம் கன்சீலியம்' (Magnum Concilium) என அழைக்கப்பட்டதாகச் சிலர் நம்புகின்றனர். இவ்வமைப்பே சாக்சானியர் காலத்து விடான் சபையின் எச்சமாகவும், வருங்காலத்து பாராளுமன்றத்தின் முன்அமைப்பாகவும் விளங்கியதாகக் கூறுவர்.

**அதிகாரப் பிரிவினை:** நார்மானியர் காலத்தில் ஒருவகையான அதிகாரப் பிரிவினை (Seperation of power) இருந்து வந்தது. ஆலோசனை சபையில் அங்கத்தினர்களாக இருந்த சில அதிகாரிகள் நிதி ((Finance) பற்றிய காரியங்களைக் கவனிக்கத், தனியாகக் கூட்டத்தை நடத்தினர். அங்ஙனம் பேரவையிலிருந்து பிரிந்து தனியாக நிதிபற்றிய விஷயங்களைக் கவனித்தவர்களுக்குக் கருவூலப்பிரபுக்களென்றும் (Barons of Exchequer) அவர்கள் கூடிய மன்றத்திற்குக் கருவூல மன்றம் (Exchequer) என்றும் பெயர் வழங்கியது. அதேபோல் அரசருடைய நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்ட வழக்குகளைத் தீர்க்க, வேறுசில பேரவை அங்கத்தினர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இவர்களே அரசரின் நீதிபதிகள் எனவும் (King's Judges), இம் மன்றம் அரசரின் நீதி மன்றம் (Kings Court) எனவும் அழைக்கப்பட்டது. இவர்களில் சிலர் ஊர் ஊராகச் சென்று அரசர் தீர்க்கவேண்டிய வழக்குகளை ஆங்காங்கே சென்று முடிவு செய்தனர்.

**தல ஆட்சி முறை:** மத்திய ஆட்சியின் அதிகாரம் குலைக்கப்படாத வகையிலும், அதே நேரத்தில் மக்களின் பொது உரிமைகள் பறிக்கப்படாத வகையிலும் நார்மானியர் காலத்துத் தல ஆட்சி முறை அமைக்கப்பட்டிருந்தது.

ஆங்கிலோ-சாக்சானியர் காலத்து ஷயர் (shire), இக்காலத்தில் கவுன்டி (county) என அழைக்கப்பட்டது. ஒவ்வொரு கவுன்டியிலும் (சாக்சானியர் காலத்திலிருந்து தொடர்ந்து வரும் ஷயர் நீதிமன்றங்களைத் தவிர) நிலமானிய நீதிமன்றங்கள் (Feudal Courts) அமைக்கப்பட்டிருந்தன. இந் நீதிமன்றத்தில் பிரதம, கீழ்மானியதாரர்களும் சுதந்திரக் குடியானவர்களும்

(Freemen), உள்குடிகள் சார்பில் அப்பிரிவைச் சேர்ந்த நால்வரும் ஸ்ட்டுவர்டு (Steward) எனப்பட்ட ஊர்த்தலைவரும் பங்கு கொண்டனர். அவ்வித வகுப்பு வேறுபாடின்றி எல்லா அங்கத்தினர்களும் சமநிலை கொண்டவர்களாகக் கருதப்பட்டதால், இவ்வமைப்புக் கவுன்டிகளில் ஒற்றுமையுணர்ச்சியை வளர்த்தது.

**கவுன்டிகள்:** கவுன்டிகள் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அரசரின் நேரிடையான அதிகாரத்திற்குட்பட்ட கவுன்டிகள்; அரசரால் நியமனம் செய்யப்பட்டவர்களின் அதிகாரத்திற்குட்பட்ட கவுன்டிகள் என்பனவே அவையாகும். இரண்டாம் வகையைச் சேர்ந்த கவுன்டிகள் பெரும்பாலும், ஆபத்தான எல்லைப்புறங்களை ஒட்டியே அமைந்திருந்தன. இவையே 'பாலடைன் கவுன்டிகள்' (Palatine Counties) என்று அழைக்கப்பட்டன. கவுன்டிகள் 'எர்ல்கோமான்களை; (Earls) தலைவராகக் கொண்டிருந்தன. முதல்வகை கவுன்டிகளைப் பரிபாலித்த எர்ல் கோமான்கள், எவ்விதச் சுதந்திரமுமின்றி வெறும் பட்டத்தைப் பெற்றவர்களாகவே இருந்தனர். ஆனால், பாலடைன் கவுன்டிகளின் தலைவர்கள் சில சிறப்பான சுதந்திர அதிகாரங்களைப் பெற்றிருந்தனர். மத்திய அரசுக்குட்பட்ட சிற்றசர்களாகவே இத் தலைவர்கள் இருந்தனரென்றால், அது மிகையாகாது. நாணயங்களை அச்சிட்டு வெளியிடுவது, வரிகளை விதிப்பது, படைக்கு ஆள் சேர்ப்பது, நீதி வழங்குவது போன்ற அதிகாரங்கள் பாலடைன் கவுன்டிகளின் சில முக்கிய அதிகாரங்களாகும்.

**ஷெரீப்புகள்:** இருதரப்பட்ட கவுன்டிகளிலும் ஷெரீப்பு (Sheriff) எனப்பட்ட அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தனர். இவ் வதிகாரிகளுக்குப் பலவகையான பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருந்தன. அரசருடைய நிலங்களைப் பார்வையிடுவது, அவற்றிலிருந்து குத்தகைப்பணத்தை வசூலிப்பது, நீதிமன்றத்தினல் விதிக்கப்படும் அபராதங்களைக் கணக்குப் பார்த்து வசூலிப்பது, அரசரின் கோட்டைகளைப் பராமரிப்பது போன்றவற்றுடன் மேலும் சில அதிகாரங்களும் ஷெரீப்புகளுக்கு இருந்து வந்தன.

ஷயர் நீதிமன்றத்திற்கு ஷெரீப் தலைமை தாங்கினர். குழுப் பொறுப்பு முறையினை (Frank pledge system) மேற்பார்வையிட்டார். டேன்கெல்டு போன்ற வரிகளையும் அரசருக்கு அளிக்க வேண்டிய கடன் தொகையையும், படைமானிய உதவிப்பணத்தையும் வசூலிப்பது, குடிப்படையில் சேருமாறு சுதந்திர மானியதாரர்

களை அழைப்பது போன்ற பொறுப்புகளையும், மற்றும் காவற்பணியையும் ஷெரீப்பு மேற்கொண்டிருந்தார். சுருக்கமாகக் கூறினால், ஷெரீப்பு அரசரின் முக்கியக் கருவியாகப் பயன்படுத்தப்பட்டார்.

**படை மானியத் திட்டம்:** இத் திட்டத்தை ஒழுங்குபடுத்தி, தங்களுக்கு நன்மை பயக்குமாறு எங்ஙனம் நார்மானிய அரசர்கள் அமைத்திருந்தனரென்பதையும், அதனால் ஏற்பட்ட தீமைகள் தங்கள் ஆட்சியைப் பாதிக்காதவண்ணம் முதலாம் வில்லியத்தின் காலத்திலிருந்து முதலாம் ஹென்றி அரசர் காலம் வரையில் எடுத்துக் கொள்ளப்பட்டிருந்த முயற்சிகளையும் முன்னர்க் கண்டோம். சுருங்கக்கூறின் நார்மானியர் காலத்தில் சீர்திருத்தப் பட்டிருந்த இத் திட்டம் அரசியலமைப்பிலும் சில இன்றியமையாத மாற்றங்களை ஏற்படுத்தியே இருந்தது. பிரமிடுமுறையில் நாடு பிரிக்கப்பட்டதோடன்றி அதிகாரங்களும் பங்கிடப்பட்டிருந்த தென்ற விவரத்தையும் நாம் முன்னர்க் கண்டோம்.

**நகர உரிமைகள்:** நிலமானியத் திட்டத்தினால், நகரங்களின் (towns) நிலையிலும் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டிருந்தது. பிரபுக்களின் மானியப் பகுதிகளிலிருந்த நகரங்கள், அவர்களின் அதிகாரத்திற்குட்பட்டும், மற்ற நகரங்கள் அரசரின் தனியுரிமைப் பகுதிகளாகவும் கொள்ளப்பட்டன. அதாவது, நகரங்கள் அனைத்தும் 'உட்குடிகள்' (villenage) நிலையில் வைக்கப்பட்டிருந்தன. ஆயினும், நாளாவட்டத்தில் இந் நகரங்கள் அரசருக்கும் பிரபுக்களுக்கும் பணம் கொடுத்து, உள்குடி நிலையிலிருந்து மீள்வதற்கேற்ப உரிமை சாசனங்களை (Charter of liberties) பெற்றன. சந்தை அமைத்தல், தனி முறையான நீதி மன்றங்களை அமைத்தல், சுங்க வரிகளிலிருந்து மீட்புப் பெறுதல் போன்ற உரிமைகளோடு கூடிய சாசனங்களை இந் நகரங்கள் பெற்றிருந்தன. இலண்டன் நகருக்கு முதலாம் ஹென்றி கொடுத்திருந்த சாசனம் இதற்கோர் எடுத்துக்காட்டு. இலண்டன் இதன்படி தனி கவுண்டியாகக் கருதப்பட்டது. சுங்கம், டேன்கெல்டு வரிகளிலிருந்து நீக்கம் பெற்றது. தனிமுறையான நீதி மன்றத்தையும் பெற்றது. இலண்டன் மற்ற நகரங்களுக்கு ஒரு மாதிரியாகவும் அமைந்தது. உரிமைச் சாசனங்களைப் பெற்ற நகரங்களே பிற்காலத்தில் அரசரின் எதேச்சதிகார ஆட்சிக்கு முட்டுக்கட்டைகளாக அமைந்தன.

**பிரபுத்துவம்:** நிலமானிய முறையினால் இங்கிலாந்தில் பிரபுக்கள் பரம்பரையும் வளர்ந்திருந்தது. இப் பிரபுக்களிலிருந்துதான் பிற்காலத்தில் பிரபுகள் ஆட்சியும் (Aristocracy), அதற்குப் பின்னர், பிரபுக்கள் சபையும் (House of Lords) ஏற்பட்டன.

இங்ஙனமாக நார்மானியர்களின் காலம் அரசியலமைப்பில் சில சிறப்புகளைப் பெற்று விளங்கியது.

# 4. பிளான்டாஜெனட்டுக ஆட்சி
## (PLANTAGENETS)

இரண்டாம் ஹென்றி (கி.பி. 1154-89)

முதலாம் ரிச்சர்டு (கி.பி. 1189—1199)

ஜான் (கி.பி. 1199-1216)

மூன்றும் ஹென்றி (கி. பி. 1216—1272)

முதலாம் எட்வர்டு (கி.பி. 1272—1307)

இரண்டாம் எட்வர்டு (கி.பி. 1307—1327)

மூன்றும் எட்வர்டு (கி. பி. 1327—1377)

இரண்டாம் ரிச்சர்டு (கி. பி. 1377—1399)

## இரண்டாம் ஹென்றி (கி.பி. 1154-1189)
### (Henry II)

இங்கிலாந்து வரலாற்றிலே சிறப்பு மிக்க இடத்தைப் பெற்றிருக்கும் அரசர்களிலே இரண்டாம் ஹென்றியும் ஒருவராாவர்.

கி.பி. 1133ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 5ஆம் நாள் முதலாம் ஹென்றியின் மகளான மாடில்டா என்பவளுக்கும் ஃபிரான்சின் வடமேற்கே இருந்த ஆன்ஜு (Anjou), மெயின் (Maine) பகுதி கோமகனை ஜியாப்ரே (Geofrey) என்பவருக்கும் ஹென்றி, லே மான்ஸ் (Lemans) என்னுமிடத்தில் பிறந்தார்.

எளிதில் உணர்ச்சி வசப்படக்கூடியவராகவும் கபட மனமுடையவராகவும் சிற்றின்பப் பிரியராகவும் வளர்ந்த ஹென்றி, அதே சமயம் மதிநுட்பமுடையவராகவும் அரசியல் தந்திரம் தெரிந்தவராகவும் கடுமையான உழைப்பாளியாகவும் இருந்தார்.

ஃபிரான்சு அரசர் லூயியினல் விவாகரத்துச் செய்யப்பட்டிருந்த எலினர் (Elenar) என்பவரைக் கி.பி. 1151ஆம் ஆண்டில் ஹென்றி திருமணம் செய்து கொண்டிருந்தார். எலினர் அக்விட்டன்




படம் 10 இரண்டாம் ஹென்றியின் பேரரசு.

1. ஸ்காட்லாந்து; 2. அயர்லாந்து; 3. இங்கிலாந்து; 4- இங்கிலீஸ் கால்வாய்; 5. பிரிட்டானி; 6. நார்மண்டி; 7. பர்கண்டி; 8. பாயிட்டோ லாமார்ஷ்.

நாட்டுத் தலைவரின் மகளானதால், இத் திருமணத்தால் ஹென்றிக்குப் பாயிட்டோ (Poitou), அக்விட்டன் (Aquitaine), காஸ்கனி (Gascony), போன்ற பகுதிகள் கிடைத்திருந்தன. இதே ஆண்டில் இவரது தந்தையும் காலமாகி விட்டதால் நார்மண்டி, ஆன்ஜு, மெயின்போன்ற பகுதிகளுக்கும் ஹென்றி தலைவரானார். கி.பி. 1154 ஆம் ஆண்டில் ஆங்கில மன்னரான ஸ்டீபன் காலமானதால், வாலிங் போர்டு உடன்படிக்கையின்படி இங்கிலாந்து வாரிசுரிமையும் இவருக்குக் கிடைத்தது. ஆக ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் விரிந்து கிடந்த ஒரு பேரரசுக்கு ஹென்றி தலைவராக இருந்தார்.

இவரது தந்தை ஜியாஃப்ரே, தம் முடியில் (தொப்பியில்) 'பிளான்டாஜெனட்' என்ற நீண்ட தளிரை (கோரையை) அடையாளமாக அணிந்திருந்தமையால், இவருக்கு அதுவே குலப் பெயராகவும் அமைந்துவிட்டது. இவரது தந்தை ஆன்ஜுவின் கோமகனானதால், ஹென்றியை ஆன்ஜு வம்சத்தினர் என்றும் அழைக்கலாம்.

இவரது வழித்தோன்றல்களும் பிளான்டாஜெனட்டுகள் (அல்லது) ஆன்ஜு வம்சத்தினரென்றே அழைக்கப்பட்டனர்.

**இவரது சீர்திருத்தங்கள்**

முடியரசை வலுப்படுத்துவதே இவ் வரசின் முக்கிய நோக்கமாக இருந்தது. அதனால் காலந் தாழ்த்தாது தாம் செய்யப் போகும் பணியில் ஹென்றி இறங்கினார்.

தம் முடிசூட்டு விழாவின்போது இரண்டாம் ஹென்றி, தம்மை முதலாம் ஹென்றியின் வாரிசு என்றே அறிமுகப்படுத்திக் கொண்டார். தம் பாட்டனார் (முதலாம் ஹென்றி) காலத்தில் மலர்ந்திருந்த நல்லாட்சியை மீண்டும் கொணரப்போவதாக இம் மன்னர் சூளுரைத்தார். அமைதியும், நீதியும் கொண்ட சீரிய ஆட்சி தோன்றப் போவதற்கான அறிகுறியாகவே இரண்டாம் ஹென்றியின் பட்டமளிப்பு விழாப் பேச்சு அமைந்திருந்ததால், நாட்டு மக்கள் நல்லதை எதிர் நோக்கி மன மகிழ்ந்தனர்.

**பிரபுக்களை ஒடுக்குதல் :** ஸ்டீபனின் காலத்தில் நாட்டில் நிலவியிருந்த அராஜக நிலைக்குப் பிரபுக்களே காரணமென்பதை இரண்டாம் ஹென்றி உணர்ந்திருந்தார். அவ்வரசர் காலத்தில் பிரபுக்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டதன்றி, அரசரையும் எதிர்த்து வந்திருந்தனர். ஆகவே அக் காலத்தில் பிரபுக்

களானும், ஸ்டீபனாலும் இங்கிலாந்திற்குக் கொண்டு வரப் பட்டிருந்த கூலிப்படைகள் நாட்டிலிருந்து விரட்டப்பட்டன. ஸ்டீபன் காலத்தில் அரசரின் அனுமதியில்லாமல் கட்டப்பட்ட கோட்டைகள் தகர்க்கப்பட்டுத் தரைமட்டமாக்கப்பட்டன. அக் காலத்தில் அரசருக்குச் சொந்தமான நிலங்களை வைத்திருந்தவர் களையும், அரசரின் உடைமையான நகரங்களைக் கைப்பற்றிக் கொண்டவர்களையும் இரண்டாம் ஹென்றி, கட்டாயப்படுத்தி அவற்றைப் பறித்துக்கொண்டார். தங்களின் சுய அதிகாரத்தில் பிரபுக்கள் நாணயங்கள் வெளியிடுவதையும் தடுத்தார்.

நாட்டில் செலாவணிக்குட்படுத்தப்பட்ட நாணயத்தின் உண் மையான அளவையும் நிலை நாட்டினார், க்யூரியா ரெஜிஸ் பேரவை போன்ற மன்றங்களைக் கூட்டியும் பிரபுக்களின் கொட்டத்தை யடக்கினார். தம் ஆணைகளுக்கு அடங்க மறுத்த பிரபுக்களை மிகக் கடுமையாகத் தண்டித்தார். இவ்வாறாகப் பிரபுக்களின் தலையீ டில்லாத நல்லாட்சி நாட்டிலே மலர இரண்டாம் ஹென்றி வழி கோலினார்.

ஹென்றிக்குப் பேருதவியாக ஜஸ்டீஷியரான ரிச்சர்டு-டி-லூசி (Richard-de-Lucy), பொருளாளரான நைஜல் (Nigel), சான்சல ரான தாமஸ் பெக்கட் (Thomas Becket) என்போர் இருந்தனர்.

**படைச் சீர்திருத்தங்கள்:** பிரபுக்களின் கொட்டத்தை ஒடுக்கி யிருந்த இரண்டாம் ஹென்றி, ஒரு சிறந்த தீர்க்கதரிசியாக விளங் கினார். வருங்காலத்தில் இப் பிரபுக்களால் தம் அரசுக்கு எந்த வோர் ஆபத்தும் வராமல் தடுப்பதற்குப் பலமான படை தமக்கு இருக்கவேண்டிய அவசியத்தை ஹென்றி உணர்ந்திருந்தார். அப்போது வழக்கத்திலிருந்து வந்த படைமானிய முறையின்கீழ், அரசர் போர்க் காலங்களில் பிரபுக்களின் உதவியையே நாட வேண்டியிருந்தது. அம் முறையின்கீழ்ப் பெறப்பட்ட படை, பல குறைபாடுகளைக் கொண்டிருந்தது. போர் வீரர்கள் போதிய பயிற்சி பெறாதவர்களாக இருந்தனர். படைக் கருவிகளை அவர் களே கொண்டுவர வேண்டியிருந்ததால், நவீன போர்க் கருவி களையும் அப் படையினரால் கொண்டுவர முடியவில்லை. பிரபுக் களிடமிருந்து பெற்ற அப் படை, நிலமானிய விதியின்படி, 45 நாள் களுக்குமேல் அரசருக்குச் சேவை செய்ய முடியாமையால், ஒரு நீண்ட போருக்கோ அல்லது வெளிநாட்டுப் போர்களுக்கோ அவ் வீரர்கள் உதவமாட்டார்கள். இக் குறைகளை நன்குணர்ந்திருந்த இரண்டாம் ஹென்றி, தமக்கென்று ஒரு நிரந்தரப் படையை அமைத்துக் கொள்ள நினைத்தார். ஆகவே, தம் பிரதம மானிய-

தாரர்களிடமிருந்து முற்காலப் பழக்கத்தின்படி கேடய வரி (Scutage) என்ற படைத்தொழில் பிரதிப் பணத்தை வசூலித்து, அதனால் பெற்ற வருவாயில் எப்போதும் போர்ச் சேவைக்குத் தயாராக இருக்கக்கூடிய ஒரு நிலையான படையைத் (Standing army) திரட்டி வைத்தார் இரண்டாம் ஹென்றி.

மேலும் பழைய குடிப்படையைப் புதுப்பிக்க எண்ணிய இரண்டாம் ஹென்றி, அதற்கான அசைஸ் (Assize), அல்லது கட்டளை ஒன்றையும் பிறப்பித்தார். இதுவே படைக்கலச் சட்டம் (Assize of arms) என அழைக்கப்பட்டது (கி.பி. 1181). குறிப்பிட்ட அளவு சொத்துடைய குடிமக்கள், அதற்கேற்ப படைக் கருவிகளை வைத்துக்கொள்ள வேண்டுமென்று அறிவிக்கப்பட்டது. சுதந்திர நிலக்கிழார்கள் மட்டுமே முன்பு குடிப்படையில் சேர்ந்தனர்; இப்போது வணிகர்களும் கைவினைஞர்களும் இப் படையில் சேர வேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். ஆயினும், உள்குடிகளும் யூதர்களும் சேர்க்கப்படவில்லை. இத்திறப்பட்ட மக்களின் சொத்துகள் மதிப்பிடப்பட்டு, அவர்கள் வைத்திருக்க வேண்டிய படைக் கருவிகள் குறித்த காலத்தில் சேகரித்து வைத்துக் கொள்ளவும் ஏற்பாடு செய்யப்பட்டது. தமது நாட்டின் பாது காப்பின் அவசியத்தை உணர்ந்திருந்த மேற்கண்ட முறையினால், பழைய சாக்சானியக் குடிப்படையான ஃபிர்டை (Fyrd) விரிவாக்கித் தேவைப்பட்ட காலத்தில் ஒரு பெரும் படையை திரட்டக் கூடிய அனுகூலத்தைப் பெற்றுக்கொண்டார்.

படை மானியதாரர்கள் தங்களுடைய பொறுப்பினை நிறைவேற்றப் போதிய நைட் வீரர்களுக்கு மானியமளிக்கவில்லையென்றால், அங்ஙனம் வைத்திருக்க வேண்டிய நைட் வீரர்களுக்கும் சேர்த்துப் படைக்கலங்களை வைத்திருக்க வேண்டுமென அறிவிக்கப்பட்டது. மானியங்கள் அளிக்காமலேயே பிரபுக்கள் பல நைட் வீரர்களைத் தங்களுக்குக்கீழ் வைத்திருக்கும் குறைபாடும் நீக்கப்பட்டது.

**புதிய அதிகாரிகள் நியமிக்கப்படல்:** பிரபுக்களின் கொட்டத்தை யடக்க இரண்டாம் ஹென்றி, இன்னொரு நடவடிக்கையையும் எடுத்திருந்தார். பணம் கொடுத்து ஷெரீப் பதவிகளையெல்லாம் வாங்கிக் கொண்டதன்றி, அதிகாரங்கள் நிரம்பிய அப் பதவிகளைத் தங்கள் வம்ச உரிமையாகவும் (Hereditary) பிரபுக்கள் மாற்றியிருந்தனர். ஷெரீப்புகள் என்ற முறையில் அதிகாரங்களை துஷ்பிரயோகம் செய்து வந்ததோடன்றிப் பிரபுக்கள், மக்களிட மிருந்து அளவுக்கு மீறிய வரிகளையும் வசூலித்து வந்தனர். இவர்

களுடைய கொடுங்கோன்மைக்கு முடிவுகட்டும் வகையில் ஷெரிப்பு களைப்பற்றிய உள் விசாரணை ஒன்று நடத்த இரண்டாம் ஹென்றி ஆணையிட்டார். இவ் விசாரணையின் முடிவில், நேர்மையற்ற பல ஷெரிப்புகள் பதவிகளை இழந்து தண்டனையடைந்தனர். மன்னர் மன்றத்தில் பயிற்சிபெற்ற திறமை மிக்க அதிகாரிகளையும் மன்னரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களையும் காலி இடங் களுக்கு ஷெரிப்புகளாக மன்னர் நியமித்தார்.

பிரபுக்களின் அதிகாரத்தை மேலும் குறைக்கும் வகையில் இரண்டாம் ஹென்றி, மற்றுமொரு நடவடிக்கையையும் மேற் கொண்டார். தங்கள் மானிய எல்லைக்குள் ஓடிவந்த குற்றவாளி களைத் தொடர்ந்து செல்ல ஷெரிப்புகளுக்கு வேண்டிய அனுமதி யைப் பிரபுக்கள் வழங்க வேண்டுமென்றும், கருவூலப் பிரபுக்கள் ஷயர் நீதிமன்றங்களுக்கு வருகை தரும்போது, பிரபுக்களும் அம் மன்றக் கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டுமென்றும், நீதி விசாரணை முடியும்வரை பிரபுக்கள் தங்கள் கீழ் ஆட்களுக்குப் பொறுப்பேற்க வேண்டுமென்றும் கட்டாயப்படுத்தப்பட்டனர்.

**ஹென்றியும் நீதிமுறையும்** : சட்டம் இயற்றி நீதிவழங்கும் முறையைச் சீர்திருத்த எண்ணிய இரண்டாம் ஹென்றி, கி.பி. 1166-ல் 'கிளாரண்டன் சட்டங்களை' (Constitutions of Clarendon) வெளியிட்டார். இதன்படி, நீதி நிர்வாகத்தில் சில புதுமைகள் புகுத்தப்பட்டன. மன்னருடைய நீதிபதிகள் (King's Judges) நாடு முழுவதும் சுற்றுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அந் நீதி பதிகளடங்கிய மன்றமே 'சுற்றி வரும் நீதி மன்றங்கள்' எனப் பெயர் பெற்றது. இந் நீதிபதிகள் ஒவ்வொரு கவுன்டிகளுக்கும் (ஷயர் களுக்கும்) சென்று, ஆங்காங்கு அவர்கள் முன்னிலையில் கொண்டு வரப்பட்ட வழக்குகளை விசாரிக்க கட்டளையிடப்பட்டனர். இந் நீதிபதிகள் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட கவுன்டிக்கு வரும்போது, அக் கவுன்டியைச் சேர்ந்த ('ஹண்டிரடு', 'வில்' உள்பட) பதினாறு தனக்காரர்கள் எல்லாக் குற்றவாளிகளையும், சுற்றிவரும் நீதி மன்றத்தின்முன் நிறுத்த வேண்டும். இந்தப் பதினாறு தனக் காரர்கள் 'ஆஜர் ஜூரி' அல்லது முன்னிலைப் படுத்தும் ஜூரி (Jury of Presentment) என அழைக்கப்பட்டனர். உண்மையே கூறுவதாக வாக்குறுதி கொடுத்த இந்த ஜூரர்களின் அபிப் பிராயத்தின் பேரிலேயே விசாரணை நடந்தது. இவ்வாறு விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டவர்கள், நீர்ச்சோதனை முறைக்கு உட்படுத்தப்பட்டனர். சோதனையில் வெற்றி கண்டிருந் தாலும் குற்றம் செய்திருப்பதாக நம்பப்பட்டோர் நாடு கடத்தப்

பட்டனர். குற்றத்தை ஒப்புக்கொண்டவர்களும் கையுங் களவு மாகப் பிடிபட்டவர்களும் எவ்விதச் சோதனையுமின்றித் தண்டிக்கப் பட்டனர்.

ஆரம்பத்தில் கிரிமினல் வழக்குகளில் மட்டும் ஆஜர் செய்யப் பட்ட ஜூரிகள் பின்னர் மாபெரும் ஆணைகளின் (Grand Assizes) படி சிவில் வழக்குகளிலும் கலந்து கொண்டனர். இதன்படி, நில உடைமைபற்றிய வழக்கு விசாரணைக்கு வரும்போது, நீதிபதிகள் முன்னிலையில் பன்னிரண்டு நைட்டுகள் அமர வேண்டுமென்றும், குறிப்பிட்ட நிலத்தின் உடைமை, உரிமையாளரைச் சார்ந்தது என்ற கேள்விக்குப் பதிலளிக்க வேண்டுமெனவும் ஏற்பாடாகியது. அந் நிலத்தைப்பற்றிய செய்திகளை நன்கு தெரிந்தவர்களாக இருக்க வேண்டும் என்பதால், இப் பன்னிரண்டு ஜூரிகளும் உள்ளூர் வாசிகளாக இருக்கவேண்டுமெனக் கட்டாயப்படுத்தப் பட்டனர்; தனியார்ச் சண்டையின் (Dual) மூலமாக அதுவரை இந் நில வழக்குகள் தீர்க்கப்பட்டு வந்திருக்க, இந்தப் புதிய ஏற் பாடு நாகரிகமுடையதாக இருந்தது.

ஒரு குறிப்பிட்ட நிலத்தை அதன் உடைமையாளரிடமிருந்து இன்னொருவர் முறையற்ற வழிகளால் பறித்துக்கொண்டா ரென்பதைத் தீர்மானிக்கவும், பன்னிரண்டு பேர்களடங்கிய ஜூரி முறை (புதிய உடைமை பறிப்பு ஜூரி) உதவியது.

கடும் சோதனை முறையினால் (Trial by Ordeal) தீர்ப்பு வழங்கிய பழைய முறை மாற்றப்பட்டு ஜூரி முறையால் தீர்ப்பு வழங்கப்படும் புதிய முறை இங்ஙனமாக, இரண்டாம் ஹென்றி மன்னரால் புகுத்தப்பட்டது, இவரது நியாய மனப்பான்மையை எடுத்துக் காட்டியது.

**ஹென்றியும் நிர்வாகமும்:** நாட்டிலிருந்த பழைய நிறுவனங் களை ஒழுங்குபடுத்தி, இவற்றைப் புதிய பணிகளுக்கு உட்படச் செய்ததே இம் மன்னரின் இன்னொரு சீர்திருத்தமாக அமைந்தது. உதாரணமாக, பேரவையும், கருவூல மன்றமும் தனித்தனியாக இயங்கும்படி ஹென்றி பணித்தார்.

நிதி விவாகாரங்களில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தவர்களே கருவூலத் துறையில் அமர்த்தப்பட்டனர். இவர்கள், இலண்டன் நகரிலேயே நிலையாக இருந்து தமது பணிகளை ஆற்றினர். நிதி அல்லாத விவகாரங்களில் அரசருக்கு ஆலோசனை சொல்வதையும் நிறுத்தினர். பணத்தை எடை போடுதல், எண்ணுதல், பாது காத்து வைத்தல் போன்ற பொறுப்புகளை இத் துறையின் ஒரு

பிரிவு கண்காணித்தது. இதற்குக் கீழ்க் கருவூலத் துறை எனப் பெயர். ஷெரிப்புகள் அனுப்பி வைத்த கணக்குகளைச் சரிபார்ப்பது, அரசாங்கத்தின் அன்றாட வரவுசெலவுகளைக் கவனிப்பது ஆகிய பொறுப்புகளை, மேல் கருவூலத்துறை என்ற இன்னொரு பிரிவு கவனித்தது.

ஆலோசனை சபையான பேரவையிலும் சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இச் சபையின் உறுப்பினர்களில் ஐவரைத் தேர்ந்தெடுத்து நீதி (Justice) பற்றிய விவரங்களைக் கவனித்துப் பேரவையின்முன் வைக்கப்படும் திட்டமும் ஹென்றியால் கொண்டு வரப்பட்டிருந்தது.

இங்ஙனமாக, மன்னர் மன்றத்தையும் (பேரவை) கருவூல மன்றத்தையும் மீண்டும் கூட்டியதோடன்றி, அதன் நிர்வாகத்தில் சில போற்றத்தக்க மாற்றங்களையும் இவ் வரசர் செய்திருந்தார்.

**ஹென்றியும் உள்ளாட்சியும்:** ஆங்கில-சாக்சானியர் காலத்து எச்சங்களாக இருந்து வரும் ஷயர், ஹண்டிரடு பகுதிகளில் ஹென்றி, தம் சீர்த்திருத்தங்களைப் புகுத்தி, ஸ்டீபன் காலத்தில் கவனிப்பாரற்றுக் கிடந்த ஷயர், ஹண்டிரடு (நூற்றுவர்) நீதி மன்றங்களுக்கும் புத்துயிர் கொடுத்தார்.

ஷயர்களில் முக்கிய அதிகாரிகளாகப் பணியாற்றிய ஷெரிப்புகளின் அதிகாரங்களைக் குறைக்கும் வகையில், தமது அதிகாரத்திற்குட்பட்ட ஓர் உள்ளூர்ச் சார்ந்த அதிகாரியை இரண்டாம் ஹென்றி நியமித்தார். இவர் கரோனர் (Coroner) என அழைக்கப்பட்டார்; ஷயர் நீதி மன்றத்தால் தேர்ந்தெடுக்கப் பட்ட இவ் வதிகாரி, நைட் வீர வகுப்பைச் சார்ந்தவராக இருந் தார்; கொலை, தற்கொலை போன்ற நிகழ்ச்சிகளை அராய்ந்து அறியும் பொறுப்பும், அது சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிக்கும் அதிகாரமும், தற்கொலை செய்து கொண்டவர்களின் சொத்துகளை அரசரிடம் சேர்ப்பிக்கும் கடமையும் இவர்களுக்குக் கொடுக்கப் பட்டிருந்தது. ஹண்டிரடில் அமைதியைக் காக்கும் பொருட்டு, ஆண்டுக்கு ஒரு முறை, ஷெரிப்புகள் இங்குத் தங்கள் கூட்டத்தை நடத்தும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. இவர்கள் இங்கு அமைத்த மன்றமே 'ஹண்டிரடின் பெரிய நீதிமன்றம்' என அழைக்கப்பட்டது. இங்கு வாழ்ந்த மன்னர், ஷெரிப்பின் முன் ஆஜராகி, பதின்மர் தொகுதியில் சேர வேண்டியவர்கள் தங்கள் பெயர்களைப் பதிவுச் செய்து கொண்டனரா என்று கவனிக்க வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. ஹண்டிரடின் அமைதிக்கும், பாதுகாப்பிற்கும், இஃது அவசியமாக இருந்தது. அரசரின்

'சுற்றி வரும் நீதிமன்றங்கள்' (Visits of enquiry) விசாரணை பயணத்திற்கு வரும்போது இந்தப் பதின்மரே முன்னிலைப் படுத்தும் ஜூரிகளாகத் திகழ்ந்தனர்.

இங்கிலாந்து ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவிலும் சுற்றுப் பிரயாணம் செய்யும் பொறுப்பு மூன்று நீதிபதிகளடங்கிய குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. குற்றங்களை விசாரிக்கவும், காடுகள்பற்றிய நிர்வாகத்தை மேற்பார்வையிடவும், ஷெரிப்புகள்மீது சுமத்தப்பட்ட குற்றங்களைப் பரிசீலனை செய்யவும் இக் குழுவினர் அரசரால் அனுப்பப்பட்டனர்.

மேற்கண்ட முறைகளால், மத்திய அரசாங்கத்தின் கண்காணிப்பில் உள்ளாட்சி கொண்டுவரப்பட்டிருந்தது.

**நிதி:** 'வளமில்லாத அரசு வலுவில்லாத அரசு' என்பதற்கேற்ப, இரண்டாம் ஹென்றி, நிதித் துறையில் கண்டிப்புக் காட்டித் தம் வளத்தைப் பெருக்கிக் கொண்டார். தமக்கு உரிமைப்படி கிடைக்கவேண்டிய வருமானத்தைத் தவறாது பெற்றுக் கொண்டதன்றி, நீதிமன்றங்களிலிருந்து வசூலான அபராதத்தையும், காட்டு நிலங்களில் அக்கிரமம் செய்ததால், அந்தப் பிரபுக்கள் கட்டிய அபராதத்தையும் இவ் வரசர்பெற்று அநுபவித்தார்.

யூதர்களிடமிருந்து காப்பு வரிகளையும், உரிமைச் சாசனங்களையும் பெற்ற அரசர்கள் செலுத்திய திறைப் பணத்தையும் ஹென்றி வசூலித்துக் கொண்டு, தமக்கு நிலையான வருவாயைத் தேடிக்கொண்டார். இவ்வருவாய், ஹென்றியின் நிர்வாகத்திற்கும் அவரது போர்களுக்கும் பெரிதும் பயன்பட்டது.

தம் ஆட்சிக் காலத்தில் கொண்டு வந்திருந்த சட்டங்களை மீறியவர்களுக்குக் கடுமையான தண்டனை கொடுக்க ஏதுவாக ஹென்றி மன்னர், நார்த்தாம்டன் ஆணையொன்றையும் (The Assize of Northampton) பிறப்பித்திருந்தார்.

நாட்டில் பல துறைகளில் நல்ல சீர்த்திருத்தங்களைக்கொண்டு வந்திருந்த 'இரண்டாம் ஹென்றி' இங்கிலாந்தின் ஜஸ்டீன் (Justin) எனவும் போற்றப்படுகிறார்.

**ஹென்றியும் திருச்சபையும்**

மிகுந்த சுறுசுறுப்புடன் ஆட்சி முறையில் பற்பல புதுமைகளைப் புகுத்தியிருந்த இரண்டாம் ஹென்றி, திருச்சபையிலும் சில முக்கிய சீர்திருத்தங்களைச் செய்ய எண்ணினார்.

ஸ்டீபன் காலத்தில் தோன்றியிருந்த குழப்ப நிலையைப் பயன் படுத்திக் கொண்டு, திருச்சபை தம் அதிகாரங்களை வெகுவாகப் பெருக்கிக் கொண்டிருந்தது. அதன் அதிகாரத்தைக் கட்டுப் படுத்துவதற்கான சமயத்தை எதிர்நோக்கியிருந்த வேளையில் காண்டர்பரியின் ஆர்ச் பிஷப்பான தியோபால்டு (Theobald) என்பவர் காலமானார். திருச்சபையின் அதிகாரத்தைக் குறைத் துத் தம் அதிகாரத்தை அதிகப்படுத்திக் கொள்ளவும், திருச் சபையில் தாம் விரும்பிய சீர்திருத்தங்களைச் செய்யவும் விரும்பிய மன்னர் ஹென்றி, தம் நெருங்கிய நண்பரான தாமஸ் பெக்கட் (Thomas Becket) என்பவரைக் காண்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக நியமித்தார் (கி.பி. 1162).

**தாமஸ் பெக்கட்:** ஓர் இலண்டன் வியாபாரியின் மகனான தாமஸ் பெக்கட், இரண்டாம் ஹென்றியின் நாட்டினராக இருந்த தால், மன்னரின் சான்சலராகப் பதவி ஏற்றார். இப் பதவியில் சில காலம் நீடித்திருந்த தாமஸ் பெக்கட், அதிகத் திறமை கொண்டவ ராகவும், அதே நேரத்தில் ஆடம்பர வாழ்வினை விரும்பியவராகவும் இருந்தார்; இவர் அக் காலத்தில் வாழ்ந்த இல்லத்தில் பொன் னும் வெள்ளியும் குவிந்ததோடன்றித் தினமும் விருந்தும் கேளிக் கையும் நடந்து கொண்டிருக்கும். தம்முடன் இயங்கிப் பணிபுரிய தாமஸ் பெக்கட்டைவிட, வேறு எவரும் இருக்க முடியாது என்ற அளவிற்கு அரசரும் இவரும் இணைந்திருந்தனர்.

காண்டர்பரியின் தலைமைக் குருவாக நியமனம் பெற்ற தாமஸ் பெக்கட், இப் புதுப் பதவியைப் பெற்றதும் தம் பழங்காலக் குணங்களை மாற்றிக் கொண்டதோடன்றி, திருச்சபையின் சிறப் புக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவராகச் செயல்பட்டார். ஏக காலத்தில் அரசரின் சான்சலராகவும், திருச் சபையின் தலைவ ராகவும் இருக்க முடியாததை உணர்ந்த தாமஸ் பெக்கட், தம் சான்சலர்ப் பதவியைத் துறந்துவிட்டுத் தம் நேரம் முழுமையையும் தம் சமயப் பணியிலே செலவிட ஆரம்பித்தார். தாமஸ் பெக்கட்டின் இச் செய்கை ஹென்றிக்குப் பெருத்த ஏமாற்றத்தைக் கொடுத்தது.

நட்பையும் நன்றியையும் தாமஸ் பெக்கட் மறந்தவராக இருந்தபோதும் திருச் சபையைப் புனிதப்படுத்தும் பணியில் சிறப்புற்று விளங்கினார். ஏழைகளுக்கும், உடல் நலமிழந்தோருக் கும் உதவி செய்தார். 'டிரினிடி-சண்டே' (Trinity Sunday) என்ற ஒரு விழாவினையும் தொடங்கி வைத்தார்.

**ஹென்றி பெக்கட் சச்சரவு :** மன்னர் ஹென்றியும் கேன்டர் பரி தலைமைப் பிஷப்பான தாமஸ் பெக்கட்டும் கி பி. 1163ஆம் ஆண்டு ஜூலை 1ஆம் நாள் உட்ஸ்டாக் (Woodstock) கூட்டத்தில் மோதிக் கொண்டனர். இந்த மோதலுக்கு 'டேன்கெல்டு' வரியே காரணமாக இருந்தது. டேனியருக்கு இலஞ்சம் கொடுப்பதற்காக மகா ஆல்ஃபிரடு காலத்தில் வசூலிக்கப்பட்ட இவ் வரி, தொடர்ந்து இங்கிலாந்து அரசர்களால் வசூலிக்கப்பட்டுவர, இந்த வரியை மன்னர் ஹென்றியும் வசூலித்து வந்தார். பெக்கட், இவ் வரியை 'அநியாய வரி' என்றழைத்து, அரசர் இதை வசூலிக்க உரிமையில்லை எனவும் எதிர்த்தார். அரசர் இந்த எதிர்பாராத எதிர்ப்புக்குப் பணியவேண்டியிருந்தது. ஏற்கெனவே, பெக்கட்டின் பதவித் துறப்பால் ஏமாற்றம் கொண்டிருந்த ஹென்றி, உட்ஸ்டாக் கூட்டத்திற்குப் பிறகு, பெக்கட்டின்மேல் கோபம் கொண்டதில் வியப்பேதும் இல்லை.

அரசவை விவகாரங்களில் பெக்கட் தலையிட்டதற்குப் பதிலடி கொடுப்பதுபோல் ஹென்றி, திருச்சபையின் விவகாரங்களில் தலையிட முனைந்தார். திருச்சபையின் அதிகாரங்களில் தலையிட அரசருக்கு உரிமையில்லை என பெக்கட் கூறுரைத்தபோது, ஹென்றி மேலும் அதிர்ச்சி யடைந்தார். இந் நிலையில், இரு பழைய நண்பர்களுக்குமிடையே ஏற்பட்டிருந்த மனத்தாங்கல் மேலும் சூடு பிடிக்கும்படியாக, மன்னரால் வெளியிடப்பட்டிருந்த 'கிளாரண்டன் சட்டங்கள்' காரணமாயின.

**கிளாரண்டன் சமயச் சட்டங்கள் :** கி பி 1164ஆம் ஆண்டில் ஹென்றி மன்னரால் வெளியிடப்பட்டிருந்த கிளாரண்டன் சட்டங்களில் சில சமயப் பிரிவுகள், திருச்சபையின் செல்வாக்கைப் பாதிக்கும் வகையில் அமைந்திருந்தன. 'குற்றக் குருமார்களுக்கு அளிக்கப்பட்ட திருச்சபை சலுகை' அல்லது குருமார் உரிமை (Benefit of clergy) என்பது அப் பிரிவுகளில் முக்கியமனதாகும்.

திருச்சபையினர் தனிப்பட்ட சமய நீதிமன்றங்களை (Clerical Court) நிறுவிக்கொண்டு, தங்களுள் குற்றம் செய்தவர்களை விசாரிக்கும் உரிமையைப் பெற்றிருந்தனர். சமய நீதிமன்றங்கள் அவர்களுக்குச் சொற்பமான தண்டனைகளையே கொடுத்தது. உதாரணமாக, ஒரு குடிமகன் கொலைக் குற்றத்திற்குக் காரணமாக இருந்திருப்பின் அவனுக்கு நாட்டின் நீதிமன்றங்கள் மரண தண்டனை கொடுத்தது. அதே குற்றத்தை ஒரு சமயகுரு செய்திருப்பின், சமய நீதிமன்றம் அவரைத் திருச்சபையிலிருந்து விலக்கி வைத்தது. 'நீதியின் முன்னிலையில் எல்லோரும் சமம்' என்று

நினைத்த அரசருக்குக் குருமார்கள் பெற்றுவந்த சலுகை பொருத்தமானதாகத் தெரியவில்லை. ஆகவே, ஒரு புதிய ஏற்பாட்டினை ஹென்றி மன்னர், கிளாரண்டன் சட்டத்தின்படி செயலாக்க நினைத்தார்.

அதன்படி, குற்றம் புரிந்த (அல்லது) குற்றம் சாட்டப்பட்ட குருமார் முதலில் நாட்டு (பொது) நீதிமன்றங்களின் முன்னிலையில் கொண்டுவரப்படவேண்டும்; அந் நீதிமன்றங்களில் குற்றம் சாட்டப்பட்டவர் குருமார் என நிரூபிக்கப்பட்டால், அவ் வழக்குத் திருச்சபை (சமய) நீதிமன்றத்திற்கு மாற்றப்படவேண்டும்; திருச்சபை நீதிமன்றத்தில் நடத்தப்பெறும் விசாரணையில் குற்றம் சாட்டப்பட்ட குருமார் குற்றவாளி என உறுதிப்படுத்தப்பட்டால், அவரது சமய பதவி பறிக்கப்படவேண்டும்; அதன்பின், அவ் வழக்குப் பொது நீதிமன்றத்திற்கு மாற்றப்படவேண்டும். அக் குற்றத்திற்குரிய தண்டனையை இம் மன்றமே அளிக்கவேண்டுமென்று ஹென்றி ஆணையிட்டிருந்தார்.

சமயம்பற்றிய வழக்குகளின் முடிவு போப்பாண்டவருக்கு மேல் முறையீடாக அனுப்பாமல் அரசரான தமக்கே அனுப்ப வேண்டுமென்றும், மானியம் பெற்றுள்ள குருமார்கள் அரசரின் அனுமதியின்றி நாட்டைவிட்டுச் செல்லக்கூடாதென்றும் அரசருடைய அதிகாரிகளையும் மானியதாரர்களையும் தம் ஒப்புதலின்றி மத விலக்குச் செய்யக்கூடாதென்றும், மதகுருமார்ப் பதவி காலியாகும்போது அதற்கான மறு தேர்தல்கள் நடக்கும்வரை அதனைக் கவனிக்கும் பொறுப்பு அரசரான தம்மிடம் ஒப்படைக்கப்பட வேண்டுமென்றும், அத் தேர்தல்கள் தம் மேற்பார்வையில் நடக்க வேண்டுமென்றும், அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அரசரின் அங்கீகாரத்தைப் பெற வேண்டுமென்றும் குருமார்கள் அரசியல் விவகாரங்களில் தலையிடக்கூடாதென்றும் கிளாரண்டன் சட்டத் தொகுப்பில் இரண்டாம் ஹென்றி வலியுறுத்தி இருந்தார். இச் சட்டத் தொகுப்பைத் தாமஸ் பெக்கட் முதலில் ஒப்புக்கொள்ள இசைவு கொடுத்திருந்தும், பின்னர் இவற்றை மதித்து நடக்க மறுத்தார்; குறிப்பாக, 'குருமார் உரிமையை' விட்டுக் கொடுக்க மறுத்தார். ஒரே குற்றத்திற்காக ஒரு குரு இருமுறை தண்டனை பெறுவது சட்டத்திற்குப் புறம்பானதென்பது பெக்கட்டின் வாதம்; மேலும், கிளாரண்டன் சட்டத்தின் மற்ற உள் பிரிவுகள் தம் பிரத்தியேக அதிகாரத்தையும், திருச்சபையின் தனிச் செல்வாக்கையும் பாதிக்கும் வகையில் இருந்ததால், இச் சட்டத் தொகுப்பைத் தாமஸ் பெக்கட் ஏற்றுக்கொள்ள முன்வர

வில்லை. சில வாரங்கள் அரசருக்கும் பெக்கட்டுக்கும் இதுபற்றிக் காரசாரமான வாதங்கள் நடந்தன.

ஒரு முறை அரசர், தன்னைச் சந்திக்கும்படி பெக்கட்டுக்குக் கட்டளை பிறப்பித்து இவ் விவகாரங்களைத் தீர்த்துக் கொள்ள நார்த்தாம்டன் (Northampton) மாநாட்டைக் கூட்டினர். பெக்கட், தம் பிடிவாதக் கொள்கையை விடாதவராக இருந்ததைக் கண்ட அரசர், இவரைச் சந்திக்க மறுத்துத் தம் சார்பில் இராபர்ட் என்ற லீஸெஸ்டர் பிரபுவை அனுப்பிவைத்தார். இதை, அரசர் தமக்கு இழைத்த அவமானமாகப் பெக்கட் கருதினர். இச் சமயத்தில் பெக்கட், சற்று முரட்டுத்தனமாக நடந்து கொண்டதால், அரசரின் ஆதரவாளரான இலண்டன் பிஷப், அப்போது பெக்கட்டை 'முட்டாள்' என்றுகூட அழைக்கும்படி நேர்ந்தது. சுடு சொற்கள் பறிமாறிக் கொள்ளப்பட்டன. இறுதியில், அரசரின் தூதுவரான இராபர்டிடம் எதையும் கலந்து பேசாமலேயே பெக்கட், இக் கூட்டத்தைவிட்டு வெளியேறினர். ஹென்றிக்கும் பெக்கட்டுக்கும் இனி சமரசத்திற்கே வழியில்லை என்ற நிலைமையில் அரசருக்கும் திருச்சபைக்கும் நடந்த இந்த உரிமைப்போர் எங்குக் கொண்டு போய்விடுமோ என்று மக்கள் கவலைப்பட்டனர். தம் ஆணைகளை ஏற்றுக்கொள்ள மறுத்ததோடு, தம்மையும் அவமதித்துவிட்ட பெக்கட்டை எப்படியும் பழிவாங்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டவராகிவிட்ட அரசர், சில நாட்கள் கழித்துப் பெக்கட்டின் மீது இராஜத் துரோகக் குற்றம் சாட்டினர். அதாவது, பெக்கட் சான்சலராக இருந்தபோது, வசூலித்திருந்த பணத்திற்குச் சரியான கணக்குக் கொடுக்காமலும் அரச கருவூலத்தில் அப் பணத்தைக் கட்டாமலும் தம் சொந்த சுகபோகங்களுக்கு அதைப் பயன்படுத்திக் கொண்டாரென்று குற்றம் சாட்டினர். அரசரின் சபையும் இக் குற்றச்சாட்டை விசாரித்துப் பெக்கட்டுக்குப் பாதகமாகவே தீர்ப்பளித்தது. தொடர்ந்து இருந்தால், இனி தகராறு அதிகம் வளருமென நினைத்த பெக்கட், இங்கிலாந்தை விட்டு இக்கட்டத்தில் வெளியேறினர்.

ஃபிரெஞ்சு அரசர் லூயியின் ஆதரவில் பாண்டிக்னி, சென்ஸ் என்ற ஃபிரெஞ்சு நாட்டுப் பகுதிகளில் பெக்கட் ஆறு வருடங்கள் அடைக்கல வாழ்வு நடத்திவந்தார். அப்போதைய போப்பாண்டவரான ஆரும் அலெக்ஸாண்டரும் அதே சமயத்தில் பேரரசராக இருந்த பிரடரிக் பார்பரோசா (Frederic Barbarossa) என்பவரும் சச்சரவிட்டு வந்ததால். இவ் விவகாரத்தில் பெக்கட்டுக்கு எவ்வித உதவியையும் கொடுக்க முடியாதவராக இருந்தார். இந்த ஆறு ஆண்டுகளும் பெக்கட்டை அச்சுறுத்தி அவமானப்படுத்தும் பல

செயல்களில் அரசர் ஈடுபடலானர். திருச்சபைக்குச் சொந்தமான செல்வங்களையும், அரசர் தம் விருப்பம்போல் வேண்டியோருக்குக் கொடுத்தார்; தம் அபிமானத்தைப் பெற்றிருந்த இன்னும் சிலருக்குத் திருச்சபையில் பதவிகளையும் கொடுத்தார். எல்லாவற்றிலும் மேலாக, பெக்கட்டை அவமானப்படுத்தும் வகையில் இன்னொரு செய்கைக்கும் இரண்டாம் ஹென்றி காரணமானர். தமது காலத்திலேயே தம் மூத்த மகனுக்குப் பட்டம் சூட்ட விரும்பிய இரண்டாம் ஹென்றி, யார்க் பிஷப்பான ரோஜரின் (Roger, Bishop of York) முன்னிலையில் அந்த முடிசூட்டு விழாவினை (Coronation) நடத்தினர்.

அரசருக்கு முடிசூட்டும் உரிமை காண்டர்பரியின் தலைமைப் பிஷப்புவுக்கே உரித்தானது. ஃபிரான்சு நாட்டில் அடைக்கல வாழ்வை நடத்தி வந்த தாமஸ் பெக்கட், அந்த முடிசூட்டு விழாவை எதிர்த்துப் போப்பாண்டவருக்கு மனுச் செய்து கொண்டார் போப்பாண்டவரும் பெக்கட்டின் வாதத்தை ஒப்புக் கொண்டிருந்ததால், திருச்சபையிலிருந்து ஹென்றி மதவிலக்குச் செய்யப்பட்டு விடுவாரோ என்ற அவலநிலை ஏற்பட்டது. தமக்கு எதிராகத் திருப்பம் ஏற்படுதை உணர்ந்த அரசர், இச் சமயம், பெக்கட்டுடன் சமரசம் செய்துகொள்ளும் வகையில் அவரைச் சந்திக்க விரும்பினர்; கி.பி. 1170ஆம் ஆண்டு ஜூலை மாதம் 20ஆம் நாள் பிரெட்வால் என்னுமிடத்தில் அரசரும், தாமஸ் பெக்கட்டும் சந்தித்துக்கொண்டனர். கிளாரண்டன் சமய சட்டப் பிரிவுகளை மறுபரிசீலனை செய்வதாக, ஹென்றி வாக்களித்திருக்க, பெக்கட்டும் தம் திருச்சபைப் பணிகளை ஒப்புக்கொள்ள காண்டர்பரிக்குத் திரும்பினர்.

எதிர்பாராத விதத்தில், இருவருக்கும் ஓரளவு சமரசம் ஏற்பட்டதால், ஏற்கனவே மனக்கசப்பும் ஏமாற்றமும் கொண்ட சிலர், இருவரின் உள்ளங்களையும் கலைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். அதன் விளைவாக, நீறு பூத்திருந்த நெருப்பு மீண்டும் எரிய ஆரம்பித்தது.

**பெக்கட் கொலை:** தாம் நாட்டிலில்லாதபோது, முடிசூட்டு விழாவை நடத்திவைத்த லண்டன் பிஷப் ரோஜரையும் அவ் விழாவில் கலந்துகொண்டிருந்த மற்ற பாதிரிமார்களையும் பெக்கட் மதத்திலிருந்து விலக்கி ஆணை பிறப்பித்தார். தாம் நாட்டிலில்லாதபோது திருச்சபைப் பதவிகளில் அரசரால் அமர்த்தப் பட்டவர்களையும் பெக்கெட் நீக்கினர். இச் சமயத்தில் ஹென்றி அரசர், நார்மண்டியிலிருந்து வந்தார். தாமஸ் பெக்கட்டின்

சமய அதிகாரத்தினால், பதவிகளையும் தகுதிகளையும் இழந்த சிலர், ரோஜரின் தலைமையில் நார்மண்டிக்குச் சென்று, அரசரிடம் பெக்கட் குறித்துச் சற்று மிகைப்படுத்தியே முறையிட்டனர். 'நான் வீணர்களை எல்லாம் பேணி வளர்த்தேன். அதன் விளைவாக இந்த தாழ்ந்த சாதிப் பூசாரியினால் சொல்ல முடியாத துன்பத்திற்காளானேன்' என்று வருத்தப்பட்டுக்கொண்ட அரசர், பின்னர்க் கட்டுக்கடங்காத கோபம் கொண்டவராக, 'என் உணவை உண்டு வளரும் உங்களில் இந்த அடங்காப் பூசாரியை ஒழித்துக்கட்ட ஒருவன்கூட இல்லையா' என்று இரைந்தார். அரசரின் அச் சொற்கள், அப்போது அவரது அவைக்கு வந்திருந்த ரெஜினால்ட், ட்ரேஸி வில்லியம், ஹியு, ரிச்சர்டு பிரிட்டன் என்ற நான்கு நைட் வீரர்களின் செவிகளில் விழுந்தன. அரசரின் உண்மை வீரர்களும், பெக்கெட்டை வெறுத்தவர்களுமான இந் நால்வர், ஹென்றியின் சுடு சொற்களை மேல்வாரியாகப் புரிந்து கொண்டு இங்கிலாந்தை வந்தடைந்தனர்.

கி.பி. 1170 ஆம் ஆண்டு டிசம்பர் 29ஆம் நாள், இவ் வீரர்கள் பெக்கட்டைக் கான்டர்பரி கோயிலில் சந்தித்தனர். நாடு கடத்தப்பட்டிருந்த பிஷப்புகளை மீண்டும் ஏற்றுக்கொள்ளும்படியும் இவர் உடனடியாக நாட்டை விட்டு வெளியேற வேண்டுமென்றும் இவ் வீரர்கள் பெக்கட்டை வற்புறுத்தினர். இந்த நைட்டுகளின் முதல் கோரிக்கை திருச்சபை சட்டத்திற்கெதிராக இருப்பதால், அதைத் தம்மால் நிறைவேற்ற முடியாதென்றும், இரண்டாவது கோரிக்கையை ஏற்றுக்கொள்ளத் தாம் கோழையல்லவென்றும் பெக்கெட் பதிலளித்ததைத் தொடர்ந்து கடும் விவாதங்கள் ஏற்பட்டன. ஏதோ பயங்கரம் ஒன்று நடக்கப் போவது நிச்சயம் என்ற நிலைமை ஏற்பட்டது. நைட் வீரர்கள், மேலும் மேலும் மிரட்ட, 'இறைவனுக்காக நான் சாகவும் துணிந்திருக்கிறேன்; என் இரத்தம் சிந்தப்படுவதன் மூலமாவது திருச்சபையின் சுதந்திரம் காக்கப்படட்டும்' என்று கூறிய பெக்கட் மேலும் சில கடுஞ் சொற்களைக் கூறி, நைட் வீரர்களின் கோபத்தைக் கிளறினர். ஏற்கனவே, மூன்று துறவிகளைத் தவிர, ஏனையோர் பயந்துகொண்டு காண்டர்பரி கோயிலை விட்டு வெளியேறியிருந்தனர். பிரார்த்தனை மண்டபத்தில் தனியாக இருந்த தாமஸ் பெக்கட்டை இவ் வீரர்கள், பொறுமை மீறியவர்களாக வெட்டிக் கொன்றனர். திருச்சபையின் உரிமைகளைப் பாதுகாக்கும் முயற்சியில் துணிவுடன் சாவை ஏற்றுக் கொண்ட தாமஸ் பெக்கட்டை 'மகா தியாகி' என மக்கள் போற்ற ஆரம்பித்தனர். இவரது உடல் அடக்கம் செய்யப்பட்ட காண்டர்பரி ஒரு புண்ணிய இடமாகக் கருதப்பட்டது. போப்பாண்டவரும்

கொல்லப்பட்ட பெக்கட்டைப் புகழும் வகையில் அவருக்குச் 'செயின்ட் தாமஸ்' (St. Thomas) என்ற பட்டப் பெயரை வழங்கினர்.

கிறித்துவ உலகத்தையே கலங்க வைத்த இந்தக் கொலை நிகழ்ச்சி, ஹென்றியையும் கலங்க வைத்திருந்தது. மூன்று நாட்கள் உண்ணா நோன்பைப் பிராயச்சித்தமாக கடைபிடித்த ஹென்றி, தமக்கு இக் கொலையிலே எவ்விதப் பங்குமில்லையென போப்பாண்டவரிடம் முறையிட்டுத் தம்மை மன்னிக்கும்படி வேண்டினர். இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய போப்பாண்டவர், கிளாரண்டன் சமய சட்டங்களை ரத்துச் செய்துவிடும்படி ஹென்றியைக் கேட்டுக் கொண்டார். இத்தகைய இக்கட்டான சூழ்நிலையில், ஓரளவு திருச்சபைக்கு விட்டுக் கொடுக்கவே ஹென்றி நினைத்தார். அதற்கேற்ப, குற்றம் புரிந்த குருமார்களைத் திருச்சபை நீதி மன்றங்களே விசாரித்துத் தண்டனையளிக்கலாமென்றும், திருச்சபை வழக்குகள் மேல் முறையீடாகப் போப்பாண்டவருக்கு அனுப்பப்படலாமென்றும் இரு அம்சங்களை அரசர் விட்டுக் கொடுத்தார். (இவ்வுரிமைகளைத் திருச்சபையினர் சமய புரட்சிக் காலம் வரையில் அநுபவித்தன ரென்பது குறிப்பிடத்தக்கது.

பெக்கட்டின் கொலையினால் தமக்கு எந்த அவப் பெயரும் வரக் கூடாதென நினைத்த அரசர், அவரது கொலைக்குப் பொறுப் பேற்று அவரது சமாதியின்முன், தம்மைத் தடிகொண்டு அடிக்கச் செய்து தம்மைப் புனிதப்படுத்திக் கொண்டார்.

திருச்சபைக்கும், ஹென்றிக்கும், இடையே நடந்த இவ் வுரிமைத் தகராறில், தாம் நினைத்ததைச் சாதிக்க முடியாதவ ராகவே மன்னர் இருக்க வேண்டியிருந்தது.

**இரண்டாம் ஹென்றியின் போர்கள்**

இங்கிலாந்தில் தாம் பெற்றிருந்த அரசின் எல்லைகளை விரி வாக்கவும் தமக்குத் தென்மேற்கு ஐரோப்பாவிலிருந்த பகுதி களைக் காக்கவும் கடமைப்பட்டிருந்த இரண்டாம் ஹென்றி, தம் காலத்தில் சில போர்களில் ஈடுபடவேண்டியிருந்தது.

**வேல்ஸ் :** வேல்ஸ் பகுதியில் ரிஸ் குருஃபிட் (Rhys of-guruf(t) என்ற தென்பகுதியிலும் ஓவன்குவென்னிடு (Owen-Guyenedd) என்ற இன்னொரு தலைவர் வடபகுதியிலும் தங்கள் ஆதிக்கத்தைக் கொண்டிருந்தனர். வேல்ஸைத் தம் மேலாதிக்

கத்தின்கீழ்க் கொண்டுவர வேண்டி இரண்டாம் ஹென்றி கி.பி. 1157, கி.பி. 1162, கி.பி. 1165ஆம் ஆண்டுகளில், இப் பகுதியின் மேல் படையெடுத்திருந்தார். இப் படையெடுப்புகள் முற்றிலும் பலன் தரவில்லை யென்றாலும், ஓரளவு இவரது மேலாதிக்கத்தை வேல்ஸ் தலைவர்கள் ஏற்றுக்கொண்டே யிருந்தனர்

**அயர்லாந்து :** (கெல்டுகளும். நார்ஸ்மேன்களும் (வைக்கிங் இனத்தினர்) வாழ்ந்துவந்த அயர்லாந்து பல காலமாகவே இங்கிலாந்துடன் எவ்விதத் தொடர்பும் இன்றித் தனித்து இருந்தது.) அல்ஸ்டர் (Ulster), மன்ஸ்டர் (Munster), மீத் (Meath), கன்னாட் (Conaaught), லீன்ஸ்டர் (Leinster) ஆகிய ஐந்து ஐரிஷ் பகுதிகளில் ஐந்து தலைவர்கள் ஆட்சி புரிந்து வந்தனர்; இந்த ஐவரில் எவர் பலமுள்ளவராக இருந்தாரோ அவரே மொத்தப் பகுதிகளுக்கும் அரசராகப் பெயரளவிற்கு ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தார்.

(அயர்லாந்தைத் தம் பேராதிக்கத்தின்கீழ்க் கொண்டுவர விரும்பிய இரண்டாம் ஹென்றி, அதற்கான முயற்சியில் ஈடுபடலானார். முதற்கண், நான்காம் ஏட்ரியன் (Adrain IV) என்பவரை வற்புறுத்தி, இங்கிலாந்தைச் சுற்றியுள்ள அனைத்துத் தீவுகளிலும் தமக்கு அதிகாரம் செலுத்தும் உரிமை உண்டென்று, ஓர் அறிக்கையை விடச்செய்தார். ஆயினும், இவ் வறிக்கையை அரசர் உடனுக்குடன் செயல்படுததாமல் தகுந்த காலத்தை எதிர் நோக்கி வந்தார். அதற்கான சந்தர்ப்பம் கி.பி. 1166ஆம் ஆண்டில் வந்தது. லின்ஸ்டரின் தலைவரான டெர்மாட் மேக்முரோ (Dermot Mac Murrough) என்பவரை மற்ற நான்கு ஐர்ஷ் தலைவர்கள் ஒன்றுசேர்ந்து நாட்டைவிட்டு விரட்டியபோது, இத் தலைவர் ஹென்றியின் உதவியை நாடினார். டெர்மாட்டுக்கு உதவுவதன் மூலம், ஐரிஷ் விவகாரங்களில் தலையிடத் தமக்கு வாய்ப்புக் கிடைத்திருந்ததை ஹென்றி பயன்படுத்திக்கொள்ள விரும்பி, பெம்ப்ரோன் பிரபுவான ரிச்சர்டு கிளேர் (Richard Clear) என்பவருக்குப் படைகொடுத்து அயர்லாந்துக்கு அனுப்பி வைத்தார். ரிச்சர்டு கிளேரும், அங்குச் சில வெற்றிகளைப்பெற்று எதிர்ப்புகளை முறியடித்துக் கொண்டிருந்த வேளையில் ஹென்றி மன்னர், கி.பி. 1171ஆம் ஆண்டில் அயர்லாந்தை அடைந்தார். எல்லா ஐரீஷ் தலைவர்களும் ஒருவர்பின் ஒருவராக ஹென்றியின் மேலாதிக்கத்திற்குக் கட்டுப்பட ஒப்புக்கொண்டனர்.

ஹென்றி, சில மாதங்கள் அயர்லாந்தில் தங்கியிருந்து அதன் திருச்சபைச் சீர்திருத்தங்களுக்குத் தூண்டுகோலாக அமைந்திருந்தார். காஷெல் (Cashel) என்ற இடத்தில் நடைபெற்ற திருச்சபைக் கூட்டமொன்றில் கலந்துகொண்டு ஐரிஷ் திருச்சபையை ஆங்கில திருச்சபையைப் போன்று அமைக்க வேண்டுமென்ற யோசனையையும் ஹென்றி தெரிவித்தார். கி.பி. 1172ஆம் ஆண்டில் ஹென்றி, இங்கிலாந்திற்குத் திரும்பியதும், இவரது காலத்திலேயே பல ஆங்கிலக் குடும்பங்கள் அல்ஸ்ட்டாப் பகுதியிலே குடியேறலாயின.

அயர்லாந்தின்மீது ஆதிக்கம் செலுத்தியது முதல் இங்கிலாந்து அரசராக இரண்டாம் ஹென்றி மதிக்கப்படுகிறார்.

**ஸ்காடலாந்து :** ஸ்டீபன் காலத்தில் நிலவியிருந்த குழப்பமான நிலையைப் பயன்படுத்திக் கொண்டு அப்போதைய ஸ்காட்டிய அரசரான (David) என்பவர் நார்த்தம்பிரியா, கம்பர்லாந்துப் பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டிருந்தார். ஹென்றி மன்னர், கி.பி. 1157ஆம் ஆண்டில் டேவிடின் வழித்தோன்றலான நான்காம் மால்கம் (Malcolm IV) என்ற ஸ்காட்டிய அரசரை வற்புறுத்தி அப் பகுதிகளை மீட்டதோடல்லாமல், தம் மேலாதிக்கத்தையும் ஸ்காட்லந்தின்மீது திணித்திருந்தார். கி.பி. 1174ஆம் ஆண்டில் ஸ்காட்டிய புது அரசரான வில்லியம் சிங்கன் (William the Lion) என்பவர் பெரும் படையுடன் இங்கிலாந்தின்மீது படையெடுத்தார். ஹென்றி, நாட்டிலில்லாத சமயம் அது; இருப்பினும், அரசரின் சார்பில் ரானல்ஃப் என்ற ஜஸ்டீஷியர் அத் தாக்குதலை ஆங்கிலப் படைகொண்டு ஆல்ன்விக் (Alnwick) என்னுமிடத்தில் சந்தித்து முறியடித்தார்; ஸ்காட்டிய அரசரும் சிறைபிடிக்கப்பட்டார். தொடர்ந்து பலேஸ் (Falaise) என்னுமிடத்தில் உடன்பாடு ஏற்பட்டிருக்க இரண்டாம் ஹென்றியின் மேலாதிக்கத்தை ஸ்காட்லாந்தில் ஏற்றுக் கொள்வதாக வில்லியம் (சிங்கன்) ஒப்புக் கொண்டார். ஸ்காட்லாந்தில் சில முக்கியக் கோட்டைகளும் ஆங்கிலேயர் வசம் ஒப்படைக்கப்பட்டன.

**ஃபிரெஞ்சுப் போர்களும் கலகங்களும் :** இரண்டாம் ஹென்றியின் கெடுபிடிக் கொள்கையினால் மனம் குமுறிவந்த பிரபுக்கள் அரசரின் செல்வாக்கை ஒடுக்க எண்ணி, இவருக்கெதிராக மனைவி (அக்குவிடேன் இளவரிசியான) எலியனூர் அம்மையாரைத் தூண்டி விட்டனர். பிடிவாதக் குணமும், அடங்கி நடக்கும் பண்பும் இல்லாத இவ்வரிசி, தம் பிள்ளைகளை அரசருக்கெதிராகக் கலகம் செய்யத் தூண்டினர்.

அரசர் ஹென்றி, நான்கு குமாரர்களுக்கும் நான்கு குமாரத்திகளுக்கும் தந்தையாக இருந்தார். ஹென்றி, ரிச்சர்டு, ஜாப்ரே, ஜான் என்ற நால்வரும் பிள்ளைகள். இரண்டாம் ஹென்றி, தமது பெண்களில் மூத்தவளான எலியனுரை ஸ்பெயினிலுள்ள காஸ்டீல் (Castille) மன்னருக்கும், இரண்டாமவளான ஜோன்னுவைச் சிசிலி (Sicily) மன்னருக்கும், மூன்ருமவளை டூலொஸ் (Toulouse) தலைவருக்கும், நான்காமவளான மாடில்டாவைப் பேரரசரான ஹென்றி (சிங்கன்) என்பவருக்கும் மணம் முடித்துக் கொடுத்திருந்தார். தம் பெண்களின் திருமண உறவினல் ஹென்றிக்கு ஐரோப்பிய அரசியல் அரங்கிலே பெயரும் பெருமையும் சமயத்தில் உதவியும் கிடைத்திருந்தாலும், இவரது பிள்ளைகளால் தம் கடைசிக் காலத்தில் ஹென்றி மிகுந்த சோதனைக்கு ஆளாக வேண்டியிருந்தது.

தம் மூத்த மகனுன ஹென்றிக்கு ஏற்கனவே பெயரளவுக்குத் தம் வாரிசாகப் பட்டம் சூட்டியிருந்தார் அரசர். தம் இரண்டாம் மகனுன ரிச்சர்டு, அக்விட்டன் பகுதிக்கு டியுக்காக நியமனம் செய்யப்பட்டிருந்தார்; ஜாப்ரே பிரிட்டானிப் (Brittany) பகுதிக்கு வாரிசாக இருந்தார்; அரசரின் அன்பிற்குகந்த இளைய மகனுன ஜான், கிளஸ்டர் பகுதிக்குத் தலைவராக இருந்தார்.

கி.பி. 1173ஆம் ஆண்டு அரசரின் முதல் மூன்று பிள்ளைகளும் ஃபிரெஞ்சு அரசரான ஏழாம் லூயி என்பவரிடம் அடைக்கலம் அடைந்து, தம் தந்தையாருக்கெதிராகக் கலகக் கொடியை உயர்த்தினர். இளைய மகன் ஜானிடத்தில் இரண்டாம் ஹென்றி கொண்டிருந்த அளவிலா அன்பே இந்த மூவருக்கும் பொருமையை ஏற்படுத்தியிருந்தது. இரண்டாம் ஹென்றியின் ஆட்சியை வெறுத்த சில பிரபுக்களும், இக் கலகத்தில் கலந்து கொண்டனர். ஃபிரெஞ்சு அரசர் தலைமையில் வேறுபல சிற்றரசர்களும் இதில் கலந்து கொண்டனர். ஆயினும், ஹென்றி இக் கலகத்தை அடக்கியதோடு ஃபிரெஞ்சு அரசர் லூயியையும் ஓர் உடன்பாட்டிற்குப் பணிய வைத்தார். கலகக்காரர்களின் முக்கியக் கோட்டைகளை ஹென்றி கைப்பற்றி எதிர்ப்பை ஒருவாறு சமாளித்தார்.

கி.பி. 1183ஆம் ஆண்டில், மீண்டும் அரசர்களின் பிள்ளைகள் கலகம் செய்தனர். புதுப்புது காரணங்களைச் சொல்லிக் கொண்டு அரசருக்கெதிராகவும் தங்களுக்குள்ளாகவும் இவர்கள் போரிட்டுக் கொண்டார்கள். பிள்ளைகளிடம் பொதுவாகப் பாசம் கொண்டிருந்த இரண்டாம் ஹென்றி, எந்த ஒரு கடும் நடவடிக்கைகளையும் எடுக்காது சமரசம் செய்துகொள்ளவே விரும்பினுர்.

அவர்களிடையும் சமரசம் செய்து வைக்கவே முயன்ருர். இதற்கிடையே, மூத்த மகன் ஹென்றி காலமாக இக் கலகம் ஒருவாருக ஓய்ந்தது. சில காலமே அமைதி நீடித்தது.

இத் தருணத்தில் ஃபிரான்சு நாட்டுக்கு அரசராகப் பட்டம் சூட்டிக் கொண்டிருந்த பிலிப் அகஸ்டஸ் (Philip Augustus) என்பவர், இரண்டாம் ஹென்றியின் பேரரசைக் கண்டு பொருமை கொண்டவராக ரிச்சர்டு, ஜாப்ரே ஆகிய இரு பிள்ளைகளைக் கலகத்திற்குத் தூண்டிவிட்டார். இச் சமயத்தில் ஃபிரான்சுப் பகுதியில் இரண்டாம் ஹென்றியின் மேற்பார்வையிலிருந்த பகுதிகளையும் பிலிப் அகஸ்டஸ் தாக்கினர். ஃபிரெஞ்சுப் பகுதியிலிருந்த பிரபுக்களும் ஹென்றியைக் கைவிடலாயினர். இதற்கிடையே ஜாப்ரேயும் காலமாகிவிடவே, ரிச்சர்டு கி.பி1189ஆம் ஆண்டில் பிலிப் அகஸ்டஸ் துணைகொண்டு நார்மண்டிப் பகுதியைத் தாக்கினர். தம் உடல் நலம் கெட்டுவந்த அவ் வேளையிலும் இரண்டாம் ஹென்றி போருக்குத் தயாராகவே இருந்தார். கொலம்பியர்ஸ் (Columbiers) என்னுமிடத்தில், ஹென்றி சண்டையில் கலந்து கொண்டிருக்குங் காலத்தில், தம் பிரிய மகனை ஜானும் தமக்கெதிராகக் கலகத்தில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிருரென்பதை அரசர் உணர்ந்தார். இதுவே இவரது மரணத்திற்குக் காரணமாயிற்று. இறுதிவரை, தோல்வியை ஒப்புக்கொள்ள மறுத்த இரண்டாம் ஹென்றி, பிள்ளைகள் செய்த துரோகத்திஞல் மனம் குமுறியவராய்க் கி.பி. 1183ஆம் ஆண்டு ஜூலை 6ஆம் நாள் காலமானர்.

ஹென்றியின் முடிவு பரிதாபகரமாக முடிந்திருந்தாலும், அவர் வாழ்ந்த காலத்தில், செய்த சாதனைகள் போற்றத்தக்கனவாகும்.

'உலக அரசர்களில் இரண்டாம் ஹென்றி மலர் போன்றவர் என்று வரலாறு இவருக்குப் புகழ் மாலை சூட்டுகிறது.

## முதலாம் ரிச்சர்டு

### (Richard - I. கி.பி 1189-1199.)

தம் தந்தையாரின் கடைசிக் காலத்தில் கலகக் கொடியை உயர்த்தியிருந்த ரிச்சர்டு, கி.பி. 1189ஆம் ஆண்டில் இரண்டாம் ஹென்றி, சினன் (Sinon) என்னுமிடத்தில் காலமானதையொட்டி இங்கிலாந்தின் அரசராக அறிவிக்கப்பட்டார். இவரே வரலாற்றில் ரிச்சர்டு 'சிங்க நெஞ்சன்' (Richard the Lion hearted or "Richard Coeur de lion") எனப் புகழ்ப் பெயர்பெற்றவராவர்.

**குணவியல்புகள்:** நெடிய உருவமும் அழகிய தோற்றமும் கொண்டிருந்த ரிச்சர்டு, நற்கல்வி பெற்றவராகவும் இலத்தீன் மொழியில் கவிஞராகவும் விளங்கினர்; போர் முறைகளை நன்கு பயின்றவராகவும் அஞ்சா நெஞ்சம் மிக்க சிறந்த வீரராகவும் இவ்வரசர் இருந்தார்; பெருந்தன்மையும் மன்னிக்கும் குணமும் கொண்டிருந்த ரிச்சர்டு, நிலையற்ற மனத்தையும் போதிய அரசியல் அறிவும் இல்லாதவராகவும் இருந்தார். தம் தந்தையாரைப் போல் திட்டமிட்டுச் செயல்படக் கூடிய திறமை இவருக்கில்லையெனினும், இரண்டாம் ஹென்றியால் அமைக்கப்பட்டிருந்த அரசை இவரால் கட்டிக் காக்க முடிந்தது. குடிமக்களுக்கு நல்லாட்சியை அமைத்துத் தர ரிச்சர்டு விரும்பினராயினும், இவரது எண்ணமெல்லாம் வீரதீரச் செயல்களிலே பதிந்திருந்தன.

**ரிச்சர்டின் ஆட்சி:** இவர் குறுகிய காலமே இங்கிலாந்தை ஆண்டாராயினும், இந் நாட்டின் வரலாற்றிலே ரிச்சர்டின் பெயர் நிலைத்து நிற்கின்றது. இவ் வரசர், இந் நாட்டுக்கு ஆற்றியிருந்த பணிகளல்ல அதற்குக் காரணம். இந் நாட்டுக்குப் பெருமை தேடித்தரும் வகையில் முதலாம் ரிச்சர்டு, அப்போது மூண்டிருந்த சிலுவைப்போரில் கலந்து கொண்டிருந்ததே அதற்குக் காரணமாகும்.

தாம் சிலுவைப் போரிலே கலந்து கொள்ளவேண்டி, இங்கிலாந்தை விட்டுக் கிளம்புவதற்கு முன்னர், ஆட்சிப் பொறுப்பினை வில்லியம் லாங்சாம்ப் (William Longchamp) என்பவரிடம் ஒப்படைத்திருந்தார். இவர் அரசரின் உண்மை ஊழியராக இருந்த போதிலும், அப் பதவிக்கு ஏற்ற திறமை இல்லாதவராக இருந்தார். புனிதப் பூமியிலே போரிட்டுக் கொண்டிருக்கும் அரசருக்கு, அவ்வப்போது பண உதவி செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தில் லாங்சாம்ப் இருந்ததால், இச் சமயம் மக்கள்மீது அதிக வரிகள் போடப்பட்டன. இருப்பினும், நாட்டின் நிர்வாகம் செம்மையாக நடந்து வந்தது. மக்கள் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டே வாழ்ந்தனர். கி.பி. 1191ஆம் ஆண்டில் பிரபுக்களால் வற்புறுத்தப்பட்டு லாங்சாம்ப் பதவியை இழக்கவும், இவருக்குப் பதிலாக அப் பதவியில் நியமனம் செய்யப்பட்டிருந்த ஹியூபர்ட் வால்ட்டர் (Hubert Walter) என்பவரின் காலத்திலும் நாட்டு நிர்வாகம் சீராகவே இருந்தது. அரசரின் இளைய சகோதரரான ஜான், அவ்வப்போது கலகச் செயல்களிலே ஈடுபட்டு வந்த போதிலும், நாட்டைக் கதிகலங்கச் செய்யும் அளவுக்கு எவ்விதத் தீங்கும் ஏற்பட்டுவிடவில்லை. இக் காலத்தில், சமய இலக்

கியத்திலோ, மடாலய முறையிலோ குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதுவுமில்லை யென்றாலும் அரசின் அதிகாரமும் செல்வமும் சட்ட திட்டங்களும் சீரிய முறையில் நிலை நாட்டப்பட்டிருந்தன.

அரசருக்குச் சேர வேண்டிய வரிகள் யாவும் முறையாகச் செலுத்தப்படுகின்றனவா என்று ஆய்ந்து பார்க்கும் முறையில், நீதிபதிகளைக் கொண்ட விசாரணை ஒன்றும் நாட்டிலே நடத்தப் பட்டது. தத்தம் சொந்த கவுன்டிகளில் ஷெரிப்புகள் நீதிபதி களாக இருக்கக் கூடாதெனவும் தடுக்கப்பட்டனர், குரோனர்கள் என்ற அரச அதிகாரிகள், நீதிபற்றிய விவகாரங்களைக் கவனிக்க வேண்டுமென்று ஆணையிடப்பட்டனர். பதினைந்து வயதைக் கடந்த ஒவ்வோர் ஆணும் திருடனுகவோ கொள்ளையனுகவோ இருப்ப தில்லையென்று உறுதிப்பிரமாணம் எடுத்துக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்பட்டான்.

கி.பி. 1196 ஆம் ஆண்டில் லண்டன் மாநகரில் வில்லியம் பிட்ஸ் ஆஸ்பாட் என்பவரின் தலைமையில் மக்களின் வரிச் சுமையை எதிர்த்துக் கலகம் நடந்தபோது, ஹியூபர்ட் வால்டர் அதைக் கடுமையாக அடக்கி, மக்கள்மீது விரும்பியபடி அரசு வரி விதிக்கலாமென்ற கொள்கையை நிலைநாட்டியிருந்தார்

கி.பி. 1198 ஆம் ஆண்டில், நூறு ஏக்கர் நிலப்பரபிற்குப் ஐந்து ஷில்லிங்குகள் வரியென்று புதிதாக விதிக்கப்பட்டிருந்தது. இவ் வரியைச் சரியான முறையில் வசூலிப்பதற்கேற்ற, பழைய 'டூமஸ்டே புஸ்தகம்' போன்று நிலத்தைப்பற்றிய புதிய விசாரணை யொன்றும் நடத்தப்பட்டிருந்தது.

ஹியூபர்ட் வால்டர், தம் பதவியை வலிய துறந்திருந்த போது, இவருக்குப் பதிலாக ஜியாப்ரே பிட்ல்-பீட்டர் என்பவர் ஜஸ்டிஷியர் பதவியைப் பெற்றிருந்தார். அரசர், தம் தேவைக்கு வேண்டிய பொருளைக் கேட்டால், நாட்டினர் கொடுத்தே ஆக வேண்டும் என வற்புறுத்தி, இவர் அதற்கான சட்டத்தைக் கொண்டு வந்தார்.

முதலாம் ரிச்சர்டு, தம் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்துக்கு இரு முறைதான் வந்திருந்தாலுங்கூட, இவரது பெயரால் ஆட்சி நடத்தப்பட்டுவந்தது. அரசரின் பணத் தேவையும் பூர்த்தி செய்யப் பட்டிருந்தது. ரிச்சர்டு சிலுவைப் போரில் கலந்து கொள் வதற்கும், அதனுல் ஏற்பட்ட சில விளைவுகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வதற்குமே இவருக்கு இங்கிலாந்தின் மகுடம்

தேவையாக இருந்தது. மக்களின் நலன்களைப் பற்றி அதிக அக்கறை காட்டப்படவில்லை. இருப்பினும், இது கொடுங் கோலாட்சியாகவும் இல்லை.

**முதலாம் ரிச்சர்டும் சிலுவைப் போரும்**

முதலாம் ரிச்சர்டு பட்டம் எய்தியிருந்த காலத்தில் இன்னொரு சிலுவைப் போர் (**The Crusades**) தொடங்கப்படுவதற்கான அறி குறிகள் தோன்றலாயின. இவரது தந்தை இரண்டாம் ஹென்றி மேலும் சில காலம் உயிர் வாழ்ந்திருப்பாராயின், அவரே இப் போரில் கலந்து கொண்டிருப்பார். தந்தை விட்டுச் சென்ற பணியையே, இப்போது முதலாம் ரிச்சர்டு தொடங்க வேண்டி யிருந்தது. தலைநகரில் அமர்ந்து கோலோச்சி ஆட்சி செய்வதைக் காட்டிலும், வாளேந்திக் போர்க்களம் புகுவதிலேயே இவ் வரசருக்கு மிகவும் நாட்டம் இருந்தது. ஆகவே, கி.பி. 1189 ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் மன்னராக ரிச்சர்டு அறிவிக்கப்பட்ட தோடு, அங்குச் சென்று முறைப்படி முடிசூட்டிக் கொண்டு சிலுவைப் போரில் தாம் கலந்துகொள்வதற்கான வழிமுறை களைத் தேடலானார்.

**சிலுவைப் போர்:** நபி நாயகத்தின் சமயத் தொண்டினால் (கி.பி. 570–632) புதிய மதமான இஸ்லாமியம் தோன்றியிருந்த தன்றி, மத்திய கிழக்குப் பகுதியில் ஒரு வலுவான அரசும் தோற்றுவிக்கப்பட்டிருந்தது. டமாஸ்கஸில் (**Damascus**) அதி காரம் பெற்றிருந்த உமையாத் (**Ommayad**) கலீப்பாக்களும் (இஸ்லாமிய அரசர்களும், நபி நாயகத்தின் வழித்தோன்றல் களும்) பாக்தாத்தில் (**Bagdad**) ஆட்சி செலுத்திய அப்பாசீடு களும் கெய்ரோவில் (**Cairo**) அதிகாரம் பெற்றிருந்த ஃபாதிமைட் களும் (**Fatimites**) பலம் பெற்றிருந்த காலத்தில், அதாவது கி.பி. 7ஆம் நூற்றுண்டிலிருந்து கி.பி 11ஆம் நூற்றுண்டு வரையில் இஸ்லாமியர் ஆதிக்கம் ஐரோப்பாவைக் கதிகலங்கச் செய் திருந்தது.

**காரணங்கள்:** இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையில் மிகவும் ஒன்றியிருந்த ஜெருசலேம் (**Jerusalem**) இன்றுபோல் அன்றும் கிறித்தவர்களால் ஒரு புண்ணியத் தலமாகக் கருதப்பட்டது. கிழக்கு ரோமானியப் பேரரசின் (**Eastern Roman Empire**) ஆட்சிக்குட்பட்டிருந்த பாலஸ்தீனம் (ஜெருசலேமும், அதனைச் சுற்றிய பகுதிகளும்.) கி.பி. 635 ஆம் ஆண்டில் இஸ்லாமிய இனத் தினரான அராபியர்களால் (**Arabs**) கைப்பற்றப்பட்டிருந்தது. எனினும், ஆண்டுதோறும் இப் புண்ணியத் தலத்திற்கு வந்து

கொண்டிருந்த கிறித்தவ யாத்ரீகர்களை யாத்திரைவரி (**Pilgrim Tax**) கட்டும்படி சொன்னதோடு அராபியர்கள் வேறு எவ்விதத்திலும் அவர்களைத் துன்புறுத்தவில்லை.

கி.பி. 1076 ஆம் ஆண்டில் மதவெறியும் போர்க் குணமும் கொண்ட செல்ஜுக் துருக்கியர்கள் (**Seljuk Turks**) ஜெருசலேத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். இஸ்லாமியர்களான செல்ஜுக்குகள் எந்த அளவிற்குக் கிறித்தவ யாத்ரீகர்களைத் துன்புறுத்த முடியுமோ, அந்த அளவிற்கு அவர்களை இன்னலுக்காளாக்கினர். கொலை, கொள்ளை போன்ற தீங்குகளுக்கு ஐரோப்பாவின் பல பாகங்களிலிருந்து வந்த கிறித்தவர்கள் ஆளாக்கப்பட்டார்கள். துன்புறுத்தப்பட்டவர்களில் ஃபிரான்சு நாட்டைச் சார்ந்த துறவியான பீட்டர் (**Peter the Hermit**) என்பவரும் ஒருவராவர்.

தாமும் மற்ற கிறித்தவ யாத்திரீகர்களும் புண்ணிய பூமியிலே (**Holy land**) அடைந்த சொல்லொணாத் துயரத்தை பீட்டர் துறவி மறக்காமல் அப்போதைய போப்பாண்டவரான இரண்டாம் அர்பன் (**Urban II**) என்பவரிடம் முறையிட்டுப், புண்ணிய பூமியை செல்ஜுக் துருக்கியர்களிடமிருந்து மீட்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். இதற்கிடையே, கிழக்கு ரோமானியப் பேரரசின் தலைநகரான கான்ஸ்டான்டிநோபிலை (**Constantinople**) துருக்கியர்கள் தாக்கத் தொடங்கிய போது அதன் பேரரசரான அலெக்ஸிஸ் கோம்னினஸ் (**Alexis Comnenus**) என்பவரும், தமக்கு உதவி வேண்டி போப்பாண்டவரிடம் முறையிட்டார். துருக்கியர்களின் கான்ஸ்டான்டிநோபில் படையெடுப்பைத் திசை திருப்பவும் புண்ணிய பூமியை மீட்கவும் போர் தேவைப்பட்டது.

கி.பி. 1095 ஆம் ஆண்டில் போப்பாண்டவர் ஃபிரான்ஸ் நாட்டிலிருந்த கிளர்மான்ட் (**Clermont**) என்னுமிடத்தில் ஒரு மாபெரும் சபையைக் கூட்டி, இப்போருக்கான அவசியத்தைத் தம் நாவன்மையினுல் வற்புறுத்தினர். இம் மாநாட்டின் முடிவில், ஐரோப்பிய கிறித்தவ அரசர்கள், தங்கள் துணையாட்களுடனும் படைகளுடனும் புண்ணிய பூமிக்குப் புறப்பட்டுச் சென்று, பாலஸ்தீனத்தைத் துருக்கியர் வசமிருந்து மீட்கவேண்டுமென முடிவு செய்தனர். இம் முடிவுக்கு இணங்கியிருந்தோர் தங்கள் ஆடைகளிலும் கவசங்களிலும் சிலுவைச் சின்னத்தை அணிந்து கொண்டதால், இவ் வீரர்கள் பங்கெடுத்துக்கொண்ட போர் ‘சிலுவைப் போர்’ என வழங்கப்பட்டது.

**சிலுவைப் போரின் தொடக்கம்:** முதலாம் சிலுவைப் போரின் (கி.பி. 1096-1099) இறுதியிலே ஜெருசலேம் மீட்கப்பட்டுப் பவுலின் தலைவரான காட்பிரி (Godfray of Bouillon) என்பவரின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது. அவரும் அவரது வழித் தோன்றல்களும் ஜெருசலேம் பகுதிக்குத் தலைவர்களாக இருந்த வரையில் கிறித்தவ யாத்திரீகர்களுக்கு எல்லா வசதிகளும் செய்து தரப்பட்டிருந்தன. ஜெருசலேத்தின் சுற்றியிருந்த ஏனைய பகுதிகளையும் வெல்ல வேண்டி, ஐரோப்பிய அரசுகளால் மேற் கொள்ளப்பட்டிருந்த இரண்டாம் சிலுவைப்போர் (கி.பி. 1147-1149) எவ்விதப் பலனும் கொடுக்காது முடிவுற்றது. இதற்கிடையே வீரமும் நற்பண்புகளும் கொண்ட சாலடின் (Saladin) என்பவர், எகிப்துக்குச் சுல்தானாகப் பதவியேற்றிருந்தார். இவ் வீரப்பெரு மகன், கி.பி. 1187ஆம் ஆண்டில் கைடி லூசிக்னென் (Guy de Lusignan) என்ற ஜெருசலேத் தலைவரை டைபிரியஸ் (Tiberias) சண்டையில் தோற்கடித்து அந் நகரைக் கைப்பற்றிக் கொண்டார். சுமார் 188 ஆண்டுகள் கிறித்தவர் வசமிருந்த ஜெருசலேம் மீண்டும் இஸ்லாமியர்களால் கைப்பற்றிக்கொள்ளப்பட, இதுவே மூன்றாம் சிலுவைப் போருக்குக் (1189–1192) காரணமாயிற்று. இப் போரிலேயே இங்கிலாந்தின் அரசர் முதலாம் ரிச்சர்டு பங் கெடுத்துக் கொண்டார்.

**மூன்றாம் சிலுவைப் போர்:** போருக்கு ஆகக்கூடிய செலவு களைச் சரிக்கட்ட ரிச்சர்டு, சில கடுமையான வரிகளை மக்கள்மீது விதித்துப் பணம் திரட்டலானார்; பதினாயிரம் பவுன்களைப் பெற்றுக் கொண்டு ஸ்காட்டிய அரசரான வில்லியத்திற்குத் தம் தந்தையார் காலத்தில் இங்கிலாந்து பெற்றிருந்த கோட்டைகளைத் திருப்பிக் கொடுத்தார். நிலமானியப் பிரபுக்களை வற்புறுத்தித் தமக்குச் சேர வேண்டிய மானியப் பணத்தையும் பெற்றுக் கொண்டார். போர்ச் செலவுகளுக்கான போதிய பணத்தைத் திரட்டிக்கொண்ட இவ் வரசர், தம் நாட்டு ஆட்சிப் பொறுப்பினை ஜஸ்டிஷியரான வில்லியம் லாங்சாம்ப் என்பவரிடம் ஒப்படைத்துவிட்டுத் தமது நெருங்கிய வீரர்களைப் படையாகத் திரட்டிக்கொண்டு இங்கிலாந்தை விட்டுத் கிளம்பினார்.

மூன்றாம் சிலுவைப் போரில் கலந்து கொள்ள பிரெஞ்சு அரசரான பிலிப் அகஸ்டசும், ஆஸ்திரிய அரசர் லியோபோல்டும் புனித ரோமானியப் பேரரசரான (Holy Roman Empire) பார்பரோசா (Barborossa) என்பவர்களும் தயாராக நின்றனர். இவர்களுடன் தம் வீரர்களோடு முதலாம் ரிச்சர்டும் கலந்து கொண்டார்.

கி.பி. 1190ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 7ஆம் நாள் புனித பூமியை நோக்கி இச் சிலுவைப்படை புறப்பட்டது. பிலிப் அகஸ்டசுடன் சேர்ந்து கிளம்பிய ரிச்சர்டு நேராகப் புண்ணிய பூமிக்குச் செல்லாமல் சிசிலித் தீவை அடைந்தார்.

**ரிச்சர்டின் வெற்றிகள் :** ரிச்சர்டு அரசரின் சகோதரியான ஜோனுவின் கணவர் காலமானதால் இவருக்குச் சேர வேண்டிய சொத்துகளைச் சிசிலியின் புது அரசரான டேன்கிரடு (Tancred) பறிமுதல் செய்துகொள்ளவும், அதை மீட்டுக் கொடுக்கவே ஆங்கில அரசர் சிசிலியை வந்தடைந்தார். டேன்கிரடை மிரட்டி பணியவைத்துத் தம் சகோதரிக்குச் சொத்தை மீட்டுக் கொடுத்துவிட்டு, ரிச்சர்டு, அடுத்துச் சைப்ரஸ் (Cyprus) தீவுக்குத் தம் வீரர்களுடன் கப்பலேறினர். அப்போது சைப்ரஸ் தீவை ஐசக் கொம்னேனுஸ் என்ற கொடுங்கோலர் ஆண்டு வந்தார். அக் கொடுங்கோலர் ஆட்சியிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதையும் தம் புனிதப் பணியாகக் கருதிய ரிச்சர்டு, ஐசக்கை நீக்கி அங்குத் தம் நண்பரொருவரை ஆட்சியில் அமர்த்தினர். இங்கு தான் முதலாம் ரிச்சர்டுக்கும் பிலிப் அகஸ்டசுக்கும் மன வேற்றுமை எழுந்தது. முன்பு ஃபிரெஞ்சு அரசரின் சகோதரி மணம் செய்து கொள்வதாக வாக்களித்திருந்த முதலாம் ரிச்சர்டு அதை மீறியவராக ஸ்பானிய இளவரசியான பெரின்கேரியா (Beren Garia) என்பவளைத் திருமணம் செய்து கொண்டார்.

சைப்ரசை விட்டுக் கிளம்பிய ரிச்சர்டு கி.பி. 1190ஆம் ஆண்டு, ஜூன் 8ஆம் நாள் சிரியாவிலுள்ள ஏக்கர் (Acre) நகரை அடைந்தார். முதலாம் ரிச்சர்டு அங்குப் போய்ச் சேர்வதற்குமுன்பாகவே, அந் நகரம் சிலுவைப்படை வீரர்களால் முற்றுகையிடப்பட்டு வந்தது. ஆங்கில அரசரின் வீரதீரப் பெருமைகளைப்பற்றி ஏற்கனவே கேட்டறிந்த அந்தக் கிறித்தவ வீரர்கள், ரிச்சர்டின் வருகையைப் பெருத்த ஆரவாரத்துடனும் மகிழ்ச்சியுடனும் வரவேற்றனர். ஏக்கர் நகரம் வீழ்ச்சியுற்றது. இதனைத் தொடர்ந்து ஜெருசலேத்தை மீட்கும் திட்டம் விவாதிக்கப்பட்டது.

புனிதப் பூமியை வந்தடைந்திருந்த அரசர்களில் முதலாம் ரிச்சர்டும் பிலிப் அகஸ்டசுமே குறிப்பிடத் தக்கவர்களாக இருந்தனர். பேரரசர் பார்பரோசா வரும் வழியிலேயே நீர் விபத்தில் மூழ்கிக் காலமாகிவிட்டார். மீட்கப்படவேண்டிய ஜெருசலேத்திற்கு எவரைத் தலைவராக்குவது என்ற பிரச்சினையில் முதலாம் ரிச்சர்டுக்கும் பிலிப் அகஸ்டசிற்கும் தகராறு எழுந்தது.

இன்னும், ஜெருசலேம் மீட்கப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஏற்கனவே, முதலாம் ரிச்சர்டின் ஸ்பானிய திருமணத்தால் மனம் வெதும்பியிருந்த பிலிப் அகஸ்டஸ், இவ் வேற்றுமையை ஒரு சாக்காகக் கொண்டு, சொந்த நாடு திரும்பி விட்டார். தனித்து விடப்பட்ட முதலாம் ரிச்சர்டுக்குப் பெயரளவில் ஆஸ்திரியாத் தலைவர் லியோபோல்டு என்பவரே தம் ஒரு சில வீரர்களுடன் துணைக்கு இருந்தார் சீரான மனநிலையற்ற முரட்டுச் சுபாவம் கொண்ட முதலாம் ரிச்சர்டு, இவரையும் இக் கட்டத்தில் விரோதித்துக் கொண்டார்.

**ஜெருசலேம் படையெடுப்பு :** புனிதப் பூமியை எப்படியும் மீட்டுத் தீரவேண்டுமென்ற மன உறுதியைக் கொண்டிருந்த முதலாம் ரிச்சர்டு, தொடர்ந்து போரிடலானார். ஆகஸ்டு மாதம் 30ஆம் நாள் முதலாம் ரிச்சர்டின் படைகள் சுல்தான் சாலாடீனை அரசாஃப் (Arasouf) என்னுமிடத்தில் சந்தித்துப் போரிட்டு வென்றன. வெற்றி வீரர் சாலடீனை வென்ற பெரும் வீரராக முதலாம் ரிச்சர்டு மதிக்கப்பட்டார். அரசாஃப் சண்டையில் வெற்றி பெற்ற முதலாம் ரிச்சர்டு, மேலும் போரை நடத்தி ஜெருசலேம் நகரை மீட்க கடும் முயற்சி செய்தார். முதலாம் ரிச்சர்டு பல கோட்டைகளைக் கைப்பற்றித் தீரமிகு செயல்களைக் காட்டியிருந்தும் ஜெருசலத்திற்குப் பதின்மூன்று மைல் வரைதான் முன்னேற முடிந்தது. முதலாம் ரிச்சர்டு, தாம் கொண்டு வந்திருந்த பொருளையெல்லாம் செலவழித்துத் தம் படையினரை உற்சாகப்படுத்தினர். மேலுதவியும் கூட்டுப்படைகளும் இல்லாத இந் நேரத்தில், ரிச்சர்டு துருக்கியிடமிருந்து ஜோப்பா என்ற நகரை விடுவித்திருந்ததே புனித பூமியில் இவரது கடைசிச் சாதனையாக இருந்தது. போர்த் திறமையில் அவருக்கும் சளைத்தவரல்லாத சுல்தான் சாலடீனும் எதிரிப்படைகள் ஜெருசலத்தை அடையாதவாறு தடுத்தார். கோடையின் வெயில், அத்துடன் கூடிய பயங்கர இரவுக் காலக் குளிர், உணவு பற்றாக்குறை, போரிலே தம் படைகளுக்கு ஏற்பட்டிருந்த களைப்பு, ஆகிய காரணங்களால் தாம் பார்க்க முடிந்த ஜெருசலேம் நகரை மீட்க முடியாதவராக முதலாம் ரிச்சர்டு இருந்தார். இனி, போரை நீடிக்க முடியாதென்று உணர்ந்த முதலாம் ரிச்சர்டு, கி.பி. 1192ஆம் ஆண்டில் சுல்தான் சாலடீனுேடு ராம்லீ (Ramleh) என்னுமிடத்தில் ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டார். இதன்படி கிறித்தவர்கள் புனித பூமிக்கு யாத்திரை வருவதைத் தாம் தடுப்பதில்லை என்று சுல்தான் வாக்களித்தார்.

தாம் மேற்கொண்ட பணி பூரண வெற்றியாக முடியாத குறை, முதலாம் ரிச்சர்டுக்கு இருந்தது. தாம் புனித பூமியை விட்டுத்

திரும்புங்கால் 'ஆண்டவரே, மீண்டும் நான் திரும்பி வந்து; புண்ணிய பூமியை மீட்கும் வரை எனக்கு ஆயுளைக்கொடு' என்று இவ் வரசர் பிரார்த்தித்துக் கொண்டது, மாற்றுரை மதிக்கும் பண்பு கொண்டிருந்த சுல்தான் சாலடீனை வெகுவாகக் கவர்ந்தது. அஞ்சாமை, துணிச்சல், திறமை முதலிய பண்புகளைக் கொண்டிருந்த முதலாம் ரிச்சர்டை இச் சமயத்தில்தான் சுல்தான் 'சிங்க நெஞ்சினன்' என்று புகழ்பட அழைத்தார்.

**ரிச்சர்டு சிறைப்படுதல்:** முதலாம் ரிச்சர்டு தம் படைகளை முன்கூட்டியே அனுப்பி விட்டுக் கடல் மார்க்கமாக நாடு திரும்பினார். திரும்பும் வழியில் இவ் வரசர் பல இன்னல்களுக்கு ஆளானார். இவரது கப்பல் ஏட்ரியாடிக் (Adriatic) கடலில் ஒரு விபத்துக்குள்ளாகி ஆஸ்திரியக் கரையை அடைந்தார். தம்மிடம் மிகுந்த பகை உணர்ச்சியோடு பிலிப் அகஸ்டஸ் இருப்பதை உணர்ந்த ரிச்சர்டு ஃபிரான்சு வழியே செல்லாமல் ஜெர்மனியைக் கடந்து, தம்நாடு செல்லத் தீர்மானித்தார். தம்மை எவரும் அடையாளம் கண்டு கொள்ளக் கூடாதென்று மாறு வேடம் பூண்டு, ரிச்சர்டு ஆஸ்திரியப் பிரதேசத்தைக் கடந்து கொண்டிருக்கையில் அதன் டியூக்கான லியோபால்ட் என்பவரால் சிறை பிடிக்கப்பட்டார்.

புனித பூமியிலே இவர்களிடையே தகராறு எழுந்திருந்ததை நாம் முன்னரே கண்டோம். ஜெருசலேத்திற்கு அருகே கிறித்தவ வீரர்கள் போரிட்டு வந்த காலத்தில் ரிச்சர்டின் கொடிக்கு அருகே லியோபோல்டும் தம் கொடியை நட்டு வைத்தார்; இச்செய்கை ரிச்சர்டுக்கு அவமானமாகப் படவே தாமே லியோபால்டின் கொடியைப் பிடுங்கி வீசி எறிந்திருந்தார். இதனால் மனம் குமுறிய லியோபோல்டு, அக் கோபத்தை வெளிக் காட்டும் வகையிலே இப்போது ரிச்சர்டைக் கைது செய்தார்.

கி. பி. 1193ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் பேரரசர் ஆறும் ஹென்றிக்கு (புனித ரோமப் பேரரசர்) லியோபால்டு ரிச்சர்டை ஒப்படைத்தார். ரிச்சர்டிடம் ஏற்கனவே பகைமை உணர்ச்சி கொண்டிருந்த ஆறும் ஹென்றி, இவ் வரசரைக் காவலில் வைத்ததோடு மீட்புப் பணமாக (Ransom) 1,00,000 பவுண்டுகளைக் கொடுத்தால் விடுதலை செய்வதாக அறிவித்தார். மீட்புப் பணம் தவிர, இங்கிலாந்து நாட்டையே தம்மிடம் மானிய நிலமாகக் கொடுத்து ரிச்சர்டு தம் விடுதலையைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் அறிவித்திருந்தார். ஹென்றி கேட்டிருந்த மீட்புத் தொகை அக் கால இங்கிலாந்தின் ஈராண்டு வருமானம் ஆகும்.

மானியத் திட்டப்படி மன்னர் பகைவர்களால் சிறைப்படுத்தப் பட்டால், அவரை மீட்க மீட்புப் பணம் தரவேண்டிய கடமை மானியதாரர்களுக்கும் மற்ற குத்தகைக்காரர்களுக்கும் இருந்தது. ஜஸ்டீஷியர் ஹீயூபர்ட் வால்ட்டர் அரும்பாடு பட்டு மீட்புப் பணத்தைத் திரட்டி ஹென்றிக்கு இரு தூதர்கள் மூலமாக அனுப்பி வைத்தார். இதனைத் தொடர்ந்து கி. பி. 1194ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நான்காம் நாள் ரிச்சர்டு சிறையிலிருந்து விடுதலை யானார்; இத்துடன் ஓர் உடன்பாடும் செய்து கொள்ளப்பட்டது. அதன்படி புனித ரோமப் பேரரசின் ஆதிக்கத்தை இங்கிலாந்து ஏற்றுக் கொள்வதாகவும் பேரரசர் ஹென்றியிடம் ரிச்சர்டு விசுவாசம் கொள்வதாகவும் அவ் வுடன்பாடு கூறியது.

**இங்கிலாந்தை அடைதல் :** தேசிய வீரராகக் கருதப்பட்ட ரிச்சர்டு, மார்ச்சு மாதம் 13ஆம் நாள் பலத்த வரவேற்புகளுக் கிடையே இங்கிலாந்து வந்தடைந்தார். இவ் வரசர் சிறைப் பட்டிருந்த காலத்தில் இவரது இளைய சகோதரரான ஜான் என்பவர், பிரெஞ்சு அரசன் பிலிப் அகஸ்டசுடன் சேர்ந்து கலகச் செயல்களிலே ஈடுபட்டிருந்ததோடு, இங்கிலாந்திலும் சில பிரபுக் களைத் தூண்டி விட்டிருந்தார். இந் நிலைமையைக் களைந்தெறிய கடமைப்பட்டிருந்த ரிச்சர்டு, உடனடியாகப் பேரவை ஒன்றைக் கூட்டி, ஜானுக்குச் சொந்தமான நிலங்களைப் பறிமுதல் செய்த தோடு அவரது ஆதரவாளர்களான சில பிரபுக்களையும் தண்டித் தார். ரிச்சர்டு இரண்டு மாதங்களே இங்கிலாந்தில் தங்கியிருந் தார். நார்மண்டியில் தமக்குச் சொந்தமான பகுதிகளைப் ஃபிரெஞ்சு அரசர் தாக்குவதற்கான முயற்சிகளைச் செய்து வர, அதைத் தடுக்கும் நோக்கத்தோடு கி. பி. 1194ஆம் ஆண்டு மே மாதம் 12ஆம் நாள் ஃபிரான்சு நாட்டை நோக்கிப் பயணமானார்; இவர் மீண்டும் இங்கிலாந்து திரும்பவேயில்லை.

**கடைசிக்காலம் :** நார்மண்டிப் பகுதியில் கலகத்தில் ஈடு பட்டிருந்த இளைய சகோதரன் ஜானை இவர் அடக்கிப் பணிய வைத்தார். ஆயினும், சில ஆண்டுகள் ரிச்சர்டு தொடர்ந்து போர் செய்ய வேண்டியிருந்தது. நார்மண்டியில் தம் தலை நகரான ரூவன் நகரை ஃபிரான்சு நாட்டுத் தாக்குதலிலிருந்து காப்பாற்றுவதற்கேற்ப சாட்டு கெய்லார்ட் (Chateau Gaillard) என்னும் கோட்டையைத் திட்டமிட்டுக் கட்டிமுடித்திருந்தார். பிரிட்டானியிலும் பாய்ட்டோவிலும் ஏற்பட்டிருந்த கலகங்களை யும் ரிச்சர்டு ஒடுக்கியிருந்தார். கி. பி. 1197ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு அரசரான பிலிப் அகஸ்டசும் இவ் வரசருடன் உடன் பாடு செய்துகொண்டார். உடனடியாகத் தாம் இங்கிலாந்து

திரும்பினால் மீண்டும் இப் பகுதியில் தமக்கெதிராகப் போர் மூளலாம் என எதிர்பார்த்த ரிச்சர்டு, தொடர்ந்து இங்கேயே தங்கியிருந்தார்.

இதற்கிடையே இவரது நிலமானிய ஆதிகத்திற்கு உள்பட்டிருந்த லிமோஜிஸ் (Limoges) பிரபு, தமது கோட்டைக்கருகே பொற்காசுகள் கொண்ட புதையல் ஒன்றைக் கண்டெடுத்தார்; இதைக் கேள்வியுற்ற ரிச்சர்டு, அப் புதையல் தம் ஆட்சிக்குட்பட்ட நிலத்தில் கண்டெடுக்கப்பட்டிருப்பதால் தமக்கே சொந்தமென வாதாடினர்; லிமோஜிஸ் பிரபு அதை மறுக்க இருவருக்கிடையே சண்டை மூண்டது. இதனையடுத்து ரிச்சர்டு அப் பிரபுவின் சாலூஸ் (Chales) கோட்டையை முற்றுகையிட்டார்; கோட்டை கைப்பற்றப்பட்டது; ஆயினும், அதே சமயத்தில் கோட்டைக்குள்ளிருந்து ஒரு வீரன் தொடுத்த அம்பு அரசரின் மார்பில் தைத்துப் படுகாயப்படுத்தியது.

ரிச்சர்டு மரணப் படுக்கையில் தள்ளப்பட்டார். தம் மார்பின் மீது அம்பெய்த அவ் வீரனை வீரர்கள் கைப்பற்றி அரசரின் முன்னிலையில் நிறுத்தினர். ரிச்சர்டு அவனை நோக்கி, 'நீ என்னைக் கொல்லும்படியாக நான் உனக்கு என்ன கொடுமை செய்தேன்' என்று கேட்டார். அதற்கு அந்த வில்லாளி, 'என் தந்தையாரையும், என் இரு சகோதரர்களையும் நீங்கள் உங்கள் கையினலேயே கொன்றீர்கள்; அதற்காகவே இந்த வஞ்சத்தை தீர்த்துக் கொண்டேன்' எனப் பதிலளித்தான். அவன் கூறிய பதிலில் திருப்தியடைந்த ரிச்சர்டு, 'என் சாவினல் உன்னை மன்னித்து விடுகிறேன்' 'என்று கூறி அவனை விடுதலை செய்யக் கட்டளையிட்டார். ஆனல், ரிச்சர்டின் வீரர்கள் அங்ஙனம் செய்யாமல் அவ் வில்லாளியை வதைத்துத்-தீயிலிட்டுக் கொன்றார்கள். இதற்கு முன்பாகவே ரிச்சர்டு, கி.பி 1199ஆம் ஆண்டு ஏப்ரல் 7ஆம் நாள் காலமானர்.

இங்கிலாந்தை ஆண்ட அரசர்களில் வாளேந்தி வீரச் செயல்கள் புரிந்து போர்க்களத்திலேயே காலமான ரிச்சர்டு, ஒரு வரலாற்று வீரராகவே மதிக்கப்படுகின்றார்.

'சிங்க நெஞ்சன்' என்ற புகழ்ப் பெயர் முதலாம் ரிச்சர்டுக்குச் சாலப் பொருந்தும்.

## அரசர் ஜான்

## (John கி.பி 1199-1216)

மரணப்படுக்கையிலிருந்த மன்னர் முதலாம் ரிச்சர்டு, தாம் இறப்பதற்கு முன்பாகப் பல துரோகச் செயல்களைச் செய்திருந்த

தம் இளைய சகோதரரான ஜானை மன்னித்து, இவரையே தம் அடுத்த வாரிசாகவும் அறிவித்திருந்தார். கி.பி. 1199 ஆம் ஆண்டு மே 27-ல் இங்கிலாந்தின் அரசராகப் பட்டம் சூட்டிக்கொண்ட ஜான், ஆன்ஜூ வம்சத்தின் வழித்தோன்றலாதலால், நார்மண்டி, மெயின், ஆன்ஜூ, பாயிட்டோ, கயினி, போன்ற தென்மேற்கு ஃபிரெஞ்சு நிலங்களுக்கும் பெரும் பிரபுவாக விளங்கினர்.

**குணநலன்கள்:** ஜான் திறமை கொண்டவராக இருந்தும் பல தீய பண்புகளுக்கு உறைவிடமானர். இவரது ஆட்சிக் காலத்தில் இவருக்கும் நாட்டுக்கும் இழிநிலையே ஏற்பட்டிருந்தது. தம் தந்தை இரண்டாம் ஹென்றி, சகோதரன் முதலாம் ரிச்சர்டு, ஆட்சிக் காலங்களில் பல கலகங்களுக்குக் காரணமாக இருந்தவர் ஜான் என்பதை நாம் மறக்கலாகாது. துரோகப் புத்தியும் கொடிய உள்ளமும் கொண்டிருந்த ஜான், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசியவர். தன்னலம் கொண்ட ஒரு நய வஞ்சகர்; பொய்யர்; எந்தவொரு நன்னெறிக்கும் தம்மைக் கட்டுப் படுத்தாது மனம் போன போக்கில் தாம் அடைய வேண்டியதை எவ்வழியிலும் பெற்றே தீரவேண்டுமென்ற முரட்டுப் பிடி வாதத்தையும் கொண்டிருந்தவர். தம் தந்தையாரின் அரசியல் ஞானமோ தம் சகோதரரின் வீரப்பண்புகளையோ கொண்டிராத ஜான், ஒரு கொடுங்கோலராக இருந்தார்.

மக்களுள் ஒரு தீயவராகவும் மன்னருள் கொடியவராகவும் விளங்கிய இவ் வரசரின் காலம், இங்கிலாந்தின் வரலாற்றில் சிறப்புத் தன்மை பெறுகிறதென்ருல், அஃது இவரது நல்லாட்சி யைக் குறிப்பதாக இல்லை; மாருக இங்கிலாந்து வரலாற்றில் தம் மக்கள் சுதந்திரத்திற்கு அடிக்கல் இட்டதும் அரசரின் வரம்பற்ற அதிகாரங்களைக் குறைக்க முயன்றதுமான மகாசாசனம் (Magna Carta) என்ற உரிமைப் பத்திரத்தில் இவ்வரசர் முத்திரையிட்ட தாலேயே அச் சிறப்புக் கிடைத்தது.

**மகாசாசனம் (Magna Carta) கி.பி. 1215)**

இங்கிலாந்தின் அரசியலமைப்பில் எழுதப்பட்ட முதல் உரிமைப் பத்திரமாகக் கருதப்படும் இச் சாசனம் ஆக்கப்பட்ட தற்கு மூன்று முக்கிய காரணங்களிருந்தன.

வெற்றி வீரர் முதலாம் வில்லியத்தின் காலத்திலிருந்தே இங்கிலாந்து அரசரின் தனிவுடமையாக இருந்து வந்த நார்மண்டிப் பகுதியை ஜான் இழக்க நேரிட்டதே முதல் முக்கிய காரணமாக அமைந்தது.

**நார்மண்டி இழப்பு:** ஜான் அரசராக முடிசூட்டிக் கொண்ட போது தாம் நல்லாட்சி வழங்குவதாகக் கொடுத்திருந்த வாக்குறுதிகளை மீற முற்பட்டபோதே ஆங்கில மக்களின் அதிருப்திக்கும் பிரபுக்களின் ஆத்திரத்திற்கும் இவ் வரசர் ஆளாகியிருந்தார். நாட்டில் தமக்கு எதிர்ப்புத் தோன்றி வரும் இவ் வேளையில் ஜான் அதைத் தீர்க்கும் முயற்சியில் ஈடுபடாது, ஃபிரெஞ்சு அரசரான இரண்டாம் பிலிப் (அகஸ்டஸ்) என்பவருடன் தகராறை வளர்த்துக் கொண்டார்.

இரண்டாம் பிலிப் ஓர் ஆதிக்க வெறியர்; தம் நாட்டின் எல்லைகளைப் பரப்புவதில் தீவிரமாயிருந்த இவ்வரசர், ஃபிரெஞ்சுப் பகுதியிலிருக்கும் ஆங்கிலப் பகுதிகளை மீட்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்தார். இரண்டாம் ஹென்றியின் காலத்தில் அவரது பிள்ளைகளைத் தூண்டிவிட்டும் முதலாம் ரிச்சர்டு காலத்தில் அவரது சகோதரரான ஜானைத் தூண்டிவிட்டும் பல கலகங்களுக்கு இரண்டாம் பிலிப் காரணமாக இருந்தார். நார்மண்டி மற்ற பகுதிகளை விடுவித்துத் தமது அரசுடன் இணைத்துக் கொள்ள விரும்பிய இரண்டாம் பிலிப்புக்குச் சாதகமான சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது.

இரண்டாம் ஹென்றியின் மூன்ருவது மகனை ஜெஃப்ரிக்கு ஒரு மகனிருந்தார். பிரிட்டானியா பகுதிக்குப் பெரும் பிரபுவாக இருந்த ஆர்தர் என்பவரே அவர். முதலாம் ரிச்சர்டு இறந்து போகவும், ஜானிடம் அவநம்பிக்கை கொண்டிருந்தவர்கள் ஆர்தரையே அரசராக்க விரும்பினர். ஆயின், ஆர்தர் இளவயதினராக இருந்ததால், பெரும்பாலானோர் அந்த ஏற்பாட்டுக்கு உடன்படவில்லை. மேலும் ஜானின் தாயார் எலினோரும் இதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. அச் சமயத்தில் ஜானுக்கெதிராக இரண்டாம் பிலிப்பும் ஆங்கில வாரிசுக்கு ஆர்தரையே ஆதரித்திருந்தார். ஆயினும், இறுதியில் பட்டம் ஜானுக்கே கிடைத்திருந்தது.

ஆக, கி. பி. 1202ஆம் ஆண்டில் நார்மண்டி, ஆன்ஜு, மெயின் போன்ற (ஆங்கில அரசின்) பகுதிகளுக்கு ஆர்தர் உரிமை கோரினர். இவர், பிலிப் அகஸ்டசால் தூண்டி விடப்பட்டார். ஆர்தருக்கும் இவரது சித்தப்பாவான அரசர் ஜானுக்கும் போர் மூளுமானல், அதில் கலந்து கொண்டு தாம் நினைத்ததைச் சாதிக்க இரண்டாம் பிலிப் காத்திருந்தார்.

இதற்கிடையில், ஜான் மாபெறும் தவறு ஒன்றைச் செய்தார். தம் மனைவியான அவைஸ் என்ற கிளௌவ்செஸ்டர் (**Avice of**

**Gloucester**) சீமாட்டியை விவாகரத்துச் செய்துவிட்டுப் ஃபிரெஞ்சுப் பிரபுவான ஹியூம் என்பவர் (**Count of Lamarche**) மணக்கவிருந்த இசபெல்லா ஆங்சலம் (**Isabella of Angouleme**) என்ற பெண்ணைக் கடத்திச் சென்று கட்டாயத் திருமணம் செய்து கொண்டார். அரசரின் இந்த காதல் விளையாட்டு ஏககாலத்தில் இரு பகைகளைத் தோற்றுவித்து விட்டது. தம் முதல் மனைவியை ஜான் விலக்கியிருந்ததால், இங்கிலாந்தில் செல்வாக்குப் பெற்ற கிளெவ் செஸ்டர் பிரபுத்துவத்தின் ஆதரவை ஜான் இழந்தவரானர்; ஜானின் கடத்தல் திருமணத்தால் ஏமாற்றப்பட்டிருந்த ஹியூம், இவரைத் தண்டிக்கும்படி இரண்டாம் பிலிப் மன்னரிடம் முறையிடலானர். ஜானின் செய்கை கண்டிக்கத் தக்கதென்ருலும் இரண்டாம் பிலிப் உடனடியாகப் போர் தொடுக்கவில்லை; ஜானின் ஃபிரெஞ்சுப் பகுதிகளுக்குப் பெரும் மேலாளர் என்ற முறையில் இரண்டாம் பிலிப் இவரைத் தம் அவைக்கு வந்து விளக்கம் தரும்படி ஆணையிட்டார்; ஆயின், ஜான் வரமறுத்து விட்டார். இதனுல் நிலமானிய விதி முறைகளை ஜான் மீறியவராதலால், இவரது ஃபிரெஞ்சு உடைமைகள் பறிபோனதாக இரண்டாம் பிலிப் அறிவித்துவிட்டு அப் பகுதிகளின்மேல் படையெடுத்தார். தக்க தருணம் பார்த்து வந்த ஆர்தரும் இந் நேரத்தில் ஜானுக்கெதிராகப் போரில் கலந்து கொண்டார்.

ஃபிரெஞ்சுப் பகுதிகளின் தம் உரிமை பறிபோகாமல் தடுக்க பெரும் படையோடு, ஜான் நார்மண்டிக்குள் நுழைந்தார். இதற்கிடையே ஆர்தர் தன் பாட்டியும் ஜானின் தாயுமான எலினர் தங்கியிருந்த மிரபோ (**Mirebeau**) என்ற கோட்டையை முற்றுகையிட்டார். தாம் பட்டத்திற்கு வருவதற்கே காரணமானவரும் தமக்குப் பேராதரவாக இருப்பவருமான தம் தாயாரை மீட்க எண்ணியவராக ஜான் தம் படையுடன் அங்கு விரைந்து சென்று எலினரை விடுவிடுத்ததோடு, ஆர்தரையும் சிறைப் பிடித்தார். இத் தருணத்தில், ஜான் இன்னொரு பெரும் தவறினைச் செய்தார். கை, கால்களில் காப்பிட்டு முதலில், ஃபலேசிச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த ஆர்தரை கி.பி.1203ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ரூவன் நகருக்கு அப்புறப்படுத்தித், தம் கைகளாலேயே படுகொலை செய்து விட்டார். ஆர்தரைக் கொல்லாமல் அவரை ஜான் பணயமாக (**Hostage**) வைத்திருப்பாராயின், பிற்காலத்தில் தமக்குச் சாதகமாகச் சில உடன்பாடுகளைப் பெற்றிருக்கலாம். ஆர்தரின் கொலையையொட்டி அவருக்கு ஆதரவாக ஆன்ஜு, பிரிட்டானி ஆகியப் பகுதிகளில் வாழ்ந்த பெரும் பிரபுக்களும் ஜானுக் கெதிராகப் போர்க் கோலம் பூண்டனர்.

இந் நிலையில், நார்மண்டியின் எல்லையிலிருந்த சாட்டு கெய்வார்டு கோட்டையை (முதலாம் ரிட்சர்டால் கடைசிக் காலத்தில் கட்டப்பட்டது) இரண்டாம் பிலிப் தம் பெரும் படையுடன் முற்றுகையிட்டார். உடனுக்குடன் விரைந்து அக் கோட்டையில் அடைபட்டுக் கிடந்த ஆங்கில வீரர்களுக்கு ஜான் தகுந்த உதவியளிக்காது, ரூவன் நகரில் கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்தார். ஓராண்டுக் காலம் இம் முற்றுகை நீடித்தது. ஜான், எவ்வித முயற்சியும் செய்யாது வாளாவிருந்தார். நெருக்கடி மிகவும் மோசமாகி வந்த வேளையில், தொந்தரவு பொறுக்க முடியாமல் ஒரு சிறிய உதவிப்படையை ஜான் அனுப்பினர்; ஆயினும், இப் படை வந்து சேர்வதற்கு முன்னரேயே, ஃபிரெஞ்சுக்காரர்கள், இக் கோட்டையின் மதில்களைக் கடந்து, சாட்டு கெய்வார்டைக் கைப்பற்றிக் கொண்டனர் (1204). இதனைத் தொடர்ந்து ஏனைய நார்மானிய நகரங்களான கேன், ஃபலேசி, ரூவன் போன்றவற்றை இரண்டாம் பிலிப் எளிதாகக் கைப்பற்றிக்கொண்டார். நார்மண்டி ஜானின் கைவிட்டு நழுவியது.

ஜான் அரசருக்கு இடிமேல் இடி விழுந்ததுபோல் இவரது பலத்திற்கும் செல்வாக்கிற்கும் காரணமான இவரது அன்னை அக்விட்டன் அரசி எலினர் மூதாட்டியும் காலமானதால், பாயிட்டோ, கயினு, அக்விட்டன் முதலிய பகுதிகளிலும் அரசரின் ஆட்சி ஆட்டம் காண ஆரம்பித்தது.

நார்மண்டி, ஆன்ஜூ, மெயின் பகுதிகள் பறிபோன நிலையில், தோல்வியைச் சுமந்தவராக ஜான் கி.பி. 1204-ல் இங்கிலாந்தை வந்தடைந்தார்.

ஃபிரெஞ்சு பகுதிகளின் இழப்பு, அரசர் ஜானின் பலவீனத்தை எடுத்துக் காட்டுவதாக இருக்க இவரது கொடுங்கோன்மையினல் அல்லல்பட்ட பிரபுக்கள் தங்கள் சார்பிலும் மக்கள் சார்பிலும் இவ் வரசரின் கொட்டத்தை ஒடுக்க ஊக்கம் பெற்றனர். மேலும் ஜான் அரசரின் இந்தத் தோல்விக்கு முன்னர், பல பிரபுக்கள் இங்கிலாந்திலும் நார்மண்டியிலும் பெரும் நிலங்கள் பெற்றவர்களாக இருந்தபடியால், அப் பிரபுக்கள் ஆங்கிலேயர்களாகவும் இருக்க முடியவில்லை; பிரெஞ்சுக்காரர்களாகவும் இருக்க முடியவில்லை. நார்மண்டி இழப்பிற்குப் பின்னர், பல பிரபுக்கள் இங்கிலாந்திலேயே தங்கிவிட இந் நாட்டு விவகாரங்களில் தீவிரமாக இவர்கள் தலையிடவேண்டியவர்களாயினர். இப் பிரப்புக்களே நாட்டின் நன்மை தீமைகளை மதித்தவர்களாக தேசிய பற்றுக் கொண்டு ஜானின் வரம்பற்ற ஆட்சியை எதிர்க்க முன் வந்தனர்.

ஆக, ஜான் அரசரின் நார்மானிய இழப்பு, வருங்காலத்தில் மகாசாசனத்திற்கு வழிகோலியது.

**போப்பாண்டவருடன் சச்சரவு:** நார்மண்டியின் இழப்பினுல் நாட்டு மக்களிடையே மதிப்பையும் அவர்களின் அபிமானத்தையும் இழந்திருந்த அரசர் ஜான், அடுத்துப் போப்பாண்டவர் மூன்ரும் இன்னசென்டுடன் (Innocent III) செய்துகொண்ட சச்சரவு, மகா சாசனத்திற்கு இரண்டாவது முக்கியக் காரணமாக அமைந்தது.

கி.பி. 1205 ஆம் ஆண்டில் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பான ஹியூபர்ட் வால்டர் (Hubert Walter) காலமாஞர். இவருக்குப் பிறகு, யாரை அடுத்த தலைமைக் குருவாக நியமிப்பது என்பது பற்றிப் பெரிய ஒரு சச்சரவு ஏற்பட்டது. அப்போதைய வழக்கத்தின்படி, எவரொருவர் அரசரால் நியமிக்கப்படுகிருரோ அவரையே குருமார்கள் கான்டர்பரியின் தலைமைக் குருவாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனுல், அரசரின் விருப்பத்திற் கிணங்கி நடக்க மறுத்த கான்டர்பரியின் குருமார்கள், இரகசிய மாகத் தங்களில் ஒருவரான ரெகிஞல்டு (Reginald) என்பவரைத் தேர்ந்தெடுத்துப் போப்பாண்டவரின் அநுமதியும் ஆசியும் பெற ரோமாபுரிக்கு அனுப்பி வைத்தனர். தம்மை அவமானப்படுத்திய செயலாக இதைக் கருதிய அரசர் ஜான், கொபங்கொண்டவராகத் தமக்குப் பிடித்தமான ஜான் டி கிரே (John de Grey) என்பவரைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக நியமனம் செய்து, கட்டாயத்தின், பேரில் குருமார்களின் ஒப்புதலையும் பெற்று, அவரைப் போப் பாண்டவரின் ஆசிபெற ரோமாபுரிக்கு அனுப்பி வைத்தார்.

அப்போது போப்பாண்டவராக மூன்ரும் இன்னசென்ட் என்பார் இருந்தார். இவர் அறிவாளி; திறமைசாலி; சிறந்த ஞானி; நல்லொழுக்க நாயகர்; மன்னர்களின் அதிகாரத்திற்குக் கட்டுப் பட மறுத்தவர். இடைக்கால ஐரோப்பாவில் இருந்த போப் பாண்டவர்களிலேயே தலைசிறந்தவர். தம்மிடம் வந்திருந்த இரு நபர்களின் தேர்வையும் நியமனத்தையும் ஏற்க மூன்ரும் இன்ன சென்ட் மறுத்து விட்டார். இவர்களுக்கு மாருக, சமய சாத் திரத்திலே தேர்ச்சி பெற்றவராகவும் ரோமாபுரியிலே அப்போது கார்டினலாகவும் (Cardinal) இருந்த ஸ்டீஃபன் லாங்டன் (Stephen Langton) என்னும் ஆங்கிலேயரை நியமனம் செய்து வேண்டிய பதவிச் சின்னங்களைக் (அடையாளப் போர்வை) கொடுத்து இவரையே தேர்ந்தெடுக்கும்படி கான்டர்பரியின் குருமார்களுக்கு உத்தரவிட்டார். கூர்த்த மதியினராக இருந்திருப்பின் ஜான், இவரை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும்; ஆனுல், ஸ்டீஃபன்

லாங்டனை ஏற்க மறுத்ததன்றி, இவரை நாட்டில் அடி எடுத்து வைக்கவும் அனுமதிக்கவில்லை.

சமய நம்பிக்கை அதிகமாகப் பரவியிருந்த அக் காலத்தில் ஜான், போப்பாண்டவரையே பகைத்துக் கொள்ள முற்பட்டது மாபெருந் தவருகும். ஏற்கனவே தம் மக்களிடத்தில் அபிமானம் இழந்தவராகவும் பிரபுக்களின் வெறுப்பிற்குப் பாத்திரமானவராகவுமிருந்த ஜான், உயரிய கொள்கையும் மனவலிமையும் கொண்ட போப்பாண்டவரை ஏதோ குருட்டுத் தைரியத்தில் எதிர்க்கலானுர்.

தம்மால் நியமனம் செய்யப்பட்ட ஸ்டீஃபனை ஏற்றுக்கொள்ள மறுத்த ஜானைத் தண்டிக்கும் வகையில் தடை ஆணை (Interdict) உத்திரவைப் போப்பாண்டவர் பிறப்பித்து, இங்கிலாந்தின் திருச்சபைகளை (கோவில்களை) மூடச் செய்தார். ஞானஸ்நானம், திருமணம், சாவுக் காலப் பிரார்த்தனை ஆகிய எதனையும் இச் சமயத்தில் செய்ய முடியாது. சமய நம்பிக்கை மிகுந்திருந்த அக் காலத்தில் 'இன்டர்டிக்ட்' கொடிய தண்டனையாகக் கருதப் பட்டது. மக்கள் அவதிப்பட்டனர்.

சமய பற்றில்லாத ஜானின் பிடிவாதம் சாண்கூட இறங்கவில்லை. தடை ஆணையை ஏற்றுக் கொண்டு, அதன்படி கீழ்ப் படிய முற்பட்ட சமய குருமார்களின் நிலங்களையும் பொருள்களையும் ஜான், பறிமுதல் செய்தார். இதனுல் வெகுண்ட போப்பாண்டவர், கி.பி.1209ஆம் ஆண்டில் ஜானை மதவிலக்குச் (Excommunication) செய்தார். 'இஃது ஒரு தண்டனையா?' என்று ஏளனமாகச் சிரித்த ஜான், போண்டவருக்குப் பதிலடி கொடுப்பதுபோல் பல பிஷப்புகளை நாட்டை விட்டே துரத்தினுர். திருச்சபைக்குச் சொந்தமான சொத்துகளையும் சூறையாடினுர். இப் பணத்தைக் கொண்டு நாட்டிற்குக் கூலிப்பட்டாளங்களை (Mercenaries) வரவழைத்தார். இவர்களைக் கொண்டு திருச்சபையினருக்கு ஜான் பல இன்னல்களை விளைவித்தார். கடவுளுக்கும் போப்பாண்டவருக்கும் அடங்க மறுத்த ஜானின் செய்கையால் நாட்டிலே அதிருப்தி மிகுந்தது. ஜானுக்கு இறுதி எச்சரிக்கை கொடுக்க எண்ணிய போப்பாண்டவர், தம் பிரதிநிதியான பாண்டுல்ஃப் (Pandulf) என்பவரை அனுப்பி வைத்து மிரட்டலானுர்.

பாண்டுல்ஃப், அரசர் ஜானைச் சந்தித்துப் போப்பாண்டவரை எதிர்ப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றி எச்சரித்தார். நாட்டிலுள்ள கிறித்தவர்கள் எர்ல் பிரபுவிலிருந்து சாதாரண

குடிமகன் வரையில் அரசருக்குச் செய்திருந்த விசுவாசப் பிரமாணத்திலிருந்து விலக்கப்படுவாரென பாண்டுல்ஃப் சொன்னது செவிடன் காதில் ஊதிய சங்காகவே இருந்தது. ஜானின் பிடிவாதத்தில் எவ்வித மாற்றமும் காணப்படவில்லை. இக் கட்டத்தில் பொறுமை இழந்தவரான போப்பாண்டவர், ஜானைத் தண்டித்துக் கிறுத்துவ சமயத்தைக் காக்க இங்கிலாந்தின்மேல் படையெடுக்கும்படி பிலிப் அகஸ்டசைத் தூண்டினார். தொடக்கத்தில் ஜான், படையெடுப்பாளர்களைப் போரிலே சந்திக்கவே விரும்பினார். அதற்கான ஏற்பாடுகளையும் செய்ய முனைந்தார். ஆயினும் இச் சமயத்திலே தம் ஆட்சிக்கெதிராக வேல்ஸ், ஸ்காட்லாந்துப் பகுதிகளில் கலகங்கள் தோன்றின.

பிலிப்பின் சூழ்ச்சித்திறனையும் வலிமையையும் உணர்ந்திருந்த ஜான், கதிகலங்கியிருந்த அந்த நேரத்தில் ஒரு சோதிடன், 'மன்னர் அடுத்த சில மாதங்களிலே முடி இழப்பார்' என்று சொல்லியிருந்தது ஜானுக்குப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. கொள்ளையடித்த திருச்சபையின் சொத்துகளும் கரைந்து விட்டன. இதனால், கூலிப்பட்டாளத்திற்கும் ஜான் அரசரால் பணம் பட்டுவாடா செய்ய முடியவில்லை. ஒரு சில பிரபுக்களைத் தவிர, ஏனையோர் நாட்டில் இவருக்கெதிராகவே இருந்தனர். மக்களும் இவர் பக்கம் இல்லை. இந் நிலையில் கி.பி. 1213ஆம் ஆண்டில் இரண்டாம் பிலிப்பை எதிர்க்க முடியாதென உணர்ந்த ஜான், இறுதியில் போப்பாண்டவருக்குப் பணிந்து சில கடுமையான நிபந்தனைகளையும் ஒப்புக்கொண்டார்.

ஸ்டீபன் லாங்டனைக் கான்டர்பரியின் ஆர்ச்பிஷப்பாக ஏற்றுக் கொள்வதாகவும், நாட்டைவிட்டுத் துரத்தப்பட்ட மற்ற பிஷப்புகளைத் திரும்பி வரவழைத்துக் கொள்தாகவும், ஆண்டொன்றுக்கு 10,000 மார்க்குகளை (Marks) போப்பாண்டவருக்குக் கப்பம் கட்டுவதாகவும், இங்கிலாந்தையே போப்பாண்டவரிடம் மானிய நிலமாகப் பணயம் வைத்து, அவரது பெயரால் ஆள்வதாகவும் ஜான் ஏற்றுக் கொண்டார். இந்த அவலநிலையில் போப்பாண்டவரிடம் சரணடைந்த வேறு ஆங்கில மன்னர்களை வரலாற்றில் காண முடியாது.

ஸ்டீஃபன் லாங்டனைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக 8 ஆண்டுகளுக்கு முன்னரே ஜான் ஏற்றுக் கொண்டிருப்பாராயின், இந்தச் சச்சரவுக்கும் சரணாகதிக்கும் அவசியமே ஏற்பட்டிராது. இங்கிலாந்தை ரோமாபுரிக்கு விற்றுத் தம் பட்டத்தைக் காப்பாற்றிக் கொண்ட ஜான், தமது நாட்டிற்குத் தமது செய்கை

யினால் இழைத்திருந்த துரோகத்தைப்பற்றிச் சற்றும் கவலைப்படவில்லை.

ஜானின் தான்தோன்றித் தனமான ஆட்சி, பிரபுக்களிடையே பெருத்த வெறுப்பை ஏற்படுத்தியிருந்தது. ஜானின் சரணாகதி ஒரு தேசிய அவமானமாகக் கருதப்பட்டது. ஜான் அரசரின் வரம்பற்ற அதிகாரங்களுக்குத் தடைவிதிக்கப்படவில்லையென்றால், நாட்டுக்கு மேன்மேலும் பல கேடுகள் விளையலாம் என எண்ணிய பிரபுக்கள், அரசரின் கொடுங்கோலாட்சியை ஒடுக்க காலம் பார்த்திருந்தனர். ஜான் மன்னரை யார் எதிர்த்தாலும் அவரை ஆதரிக்க நாட்டு மக்களும் தயாராயிருந்தனர்.

இங்ஙனமாக, தம் முரட்டுப் பிடிவாதத்தினால் தமக்கும் தம் நாட்டுக்கும் இழிவைத் தேடிக்கொண்டுவிட்ட ஜான் மன்னரின் சரணாகதி, இரண்டாண்டுக்குப் பின்னர் எழுதப்படப்போகும் மகா சாசனத்திற்கு இரண்டாவது முக்கிய காரணமாயிற்று.

**பொவைன்ஸ் (Bouvines) போர் கி.பி. 1214:** தம்முடைய கொடுங்கோலாட்சியும் நார்மண்டி இழப்பும் போப்பாண்டவரிடம் தாம் அடைந்திருந்த சரணாகதியும் இங்கிலாந்திலிருந்த மானியப் பிரபுக்களின் ஆத்திரத்தையும் பகைமையையும் வளர்த்து விட்டிருக்கிறதென்று ஜான் தெரிந்து வைத்திருந்தார். பொதுமக்களின் ஆதரவும் தமக்கில்லை என்பதையும் ஜான் அறிந்திருந்தார். நாட்டில் தம் செல்வாக்கை உருவாக்க வேண்டுமென்றால், தமக்குப் பெருமையைத் தரக்கூடிய ஒரு வெற்றிகரமான போரை உடனே தொடங்க வேண்டுமென அரசர் நினைத்தார். அதுவே பொவைன்ஸ் சண்டையில் முடிந்தது.

கி.பி. 1204ஆம் ஆண்டில் தாம் இழந்துவிட்டிருந்த ஃபிரெஞ்சுப் பகுதிகளை மீட்க ஜான் அரசர் எண்ணினார். ஃபிரெஞ்சு மன்னரான இரண்டாம் பிலிப்புக்கும் ஜானுக்கும் பகை இருந்து வந்தது. போருக்கான முயற்சிகளை ஜான் செய்துவந்தபோது நாட்டிலே எதிர்ப்புச் சூழ்நிலையே பரவியிருந்தது. தம்முடன் வந்து ஃபிரஞ்சுப் பகுதிகளில் போர்ப் பணிபுரியுமாறு ஜான் அழைத்தபோது, பிற நாடுகளில் சென்று அப்பணியைச் செய்ய முடியாதென்று பல மானியப் பிரபுக்கள் மறுத்தனர். மேலும், தாங்கள் கட்ட வேண்டிய 'ஸ்கூட்டேஜ்' பணத்தையும் கட்ட மறுத்தனர். பிரபுக்களின் ஆதரவில்லாத இந்நிலையில் ஜான், கி.பி. 1214ஆம் ஆண்டில் ஜெர்மானிய அரசரான ஆட்டோவுடனும் (Otto), பிளான்

டர்ஸ் நாட்டுப் பெருமகனுடனும் (Count of Flanders) இரண்டாம் பிலிப்பிற்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்தார்.

டாம்மி (Damme) என்ற இடத்திற்கருகே ஃபிரெஞ்சுக் கப்பற் படையைத் தாக்கிச் சில வெற்றி பெற்றிருந்த ஜான், பாயிட்டோ பகுதிக்குச் சென்று ஆட்டோவின் உதவியை எதிர்நோக்கியிருந் தார். இதற்கிடையே இவரால் அனுப்பப்பட்ட சாலிங்பரி பிரபு, தம் படைகளுடன் பிளான்டர்ஸ் கவுன்ட்டுடன் சேர்ந்து பொவைன்ஸ் என்னுமிடத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கிப் பெரும் தோல்வி அடைந்தார். இஃது அரசர் ஜானுக்கு ஏற்பட்ட படுதோல்வி; சாலிங்பரியும் கவுன்ட்டும் ஃபிரெஞ்சுக்காரர் வசம் சிறைப்பட்டிருக்க, ஜான் பெரும் பிரயத்தனங்களைச் செய்து தப்பித்தோம் பிழைத்தோம் என்று நாடு திரும்பினர்.

தம் முயற்சியில் தோற்றவராக ஜான் நாடு திரும்பியது ஆங்கில பிரபுக்களுக்கு புதுத் தெம்பை ஊட்டியது. ஜான் வெற்றி ஏதுமின்றி வீணுகை ஃபிரான்சு நாட்டில் போர் செய்து கொண் டிருக்கும்போதே எங்ஙனம் மன்னருடைய வரம்பற்ற அதிகாரங் களைக் குறைப்பதென்றும் தங்களுக்கு ஆட்சியில் அதிகப் பங்கு பெறுவதென்றும் இப் பிரபுக்கள் ஸ்டீஃபன் லாங்டனை அணுகி ஆலோசனை கேட்டனர். இவர் உரிமைச் சாசனமொன்றை அரச ரிடம் இருந்து பெறும்படி யோசனை வழங்கினர். இப் போரிலே ஜான் வெற்றி பெற்றிருப்பாரானல், அந்தக் களிப்பில் மமதை கொண்டு தம் நாட்டு மக்களின் எதிர்ப்பை அலட்சியப்படுத்தி யிருப்பார். ஆனல், கவலையுடன் ஏமாற்றத்தைச் சுமந்து தோல்வி கண்ட மனிதராக ஜான் திரும்பியிருந்ததால், இந்தப் பலவீன நிலை யையே பிரபுக்கள் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டனர்.

**பிரபுக்களின் எதிர்ப்பு**: ஜான், தாம் ஆண்ட நாட்டிலேயே நண்பர்களின்றித் தனித்து விடப்பட்டார். அரசரின் உண்மை ஊழியராக ஜாப்ரே பீட்டர் என்ற ஜஸ்டீஷியரும் காலமாகி விட்டார். இந் நிலையையும் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய பிரபுக்கள், செயின்ட எட்மண்ட்ஸ் என்னுமிடத்தில் கூடிச் சில கோரிக்கைகளைத் தயாரித்தனர். பின்னர் ஜானுக்குத் தம் கோரிக் கைகள் அடங்கிய சட்ட வாசகத்தை (Articles) இப் பிரபுக்கள் சமர்ப்பித்தனர். இதில் அரசர் அப் பிரபுக்களுக்குச் செய்திருந்த தீமைகளும் அரசர் எங்ஙனம் அவற்றை நிவர்த்தி செய்ய வேண்டு மென்பதும் சுட்டிக் காட்டப்பட்டன. ஆத்திரமடைந்த அரசர் ஜான் இச் சட்ட வாசகத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தார்; இவ்

வுண்மையை அறிந்த பிரபுக்கள், அரசரை எதிர்க்க முடிவுகொண்டு அவசர அவசரமாக ராபர்ட் பீட்ஸ் பீட்டர் என்பவரின் தலைமையில் படையைத் திரட்டினர். நாட்டு மக்களின் ஆதரவும் பரவலாகப் பிரபுக்களுக்கே இருந்தது. குறிப்பாக, இலண்டன் மாநகர மக்களும் பிரபுக்கள் கட்சியையே ஆதரித்தனர். ஸ்டீஃபன் லாங்டன் தலைமையில் திருச்சபையினரும் இப் பிரபுக்களின் பக்கமே இருந்தனர். நாடே எதிர்த்து நின்றதென்றால் அது மிகையாகாது. ஜான் மன்னருக்கு இவர்களை எதிர்க்கக்கூடிய திறன் இல்லாமற் போய்விட்டதால் பிரபுக்களுக்குப் பணிய வேண்டியவரானார்.

**மகாசாசனம் எழுதப்படல்:** போப்பாண்டவருக்கும், ஃபிரெஞ்சு மன்னருக்கும் முன்பு பணிந்திருந்த ஜான், இப்போது தம் நாட்டிலேயே தம் பிரபுக்கள் முன் பணிய வேண்டியிருந்தது. அரசரின் இந்த இழிநிலையைப் பயன்படுத்திக்கொண்டு பிரபுக்கள் தாங்கள் ஏற்கனவே தயாரித்து வைத்திருந்த சாசனத்தைத் தேம்ஸ் நதிக்கரையிலிருந்த ரன்னிமெடு (Runnymede) என்னுமிடத்தில் கி.பி. 1215ஆம் ஆண்டு ஜூன் 15ஆம் நாள் ஸ்டீஃபன் லாங்டன் தலைமையில் அரசர் ஜானிடம் சமர்ப்பித்தனர். கையெழுத்திடத் தெரியாத ஜான், தம் முத்திரையை அச் சாசனத்தில் இட்டுத் தம் ஒப்புதலைத் தெரிவித்தார்.

இதுவே வரலாற்றுப் புகழ் பெற்ற மகாசாசனம் என வழங்கப்படுகிறது.

**சாசனத்தின் உள்பிரிவுகள்**

எல்லா வகுப்புகளின் உரிமைகளுக்கும் உரை கல்லாக இருந்த இச் சாசனம் முகவுரை நீங்கலாக 63 உள்பிரிவுகளைத் தன்னுள் கொண்டிருந்தது.

இதன் உள்பிரிவுகளில் கேட்கப்பட்டிருந்த உரிமைகளில் பெரும்பாலானவை பிரபுக்களைப்பற்றியனவாகவும், படை.மானியத் திட்டத்தைச் செயல்படுத்தவேண்டிய முறையினைப்பற்றியவாகவும், சமீபகாலத்தில் பறிக்கப்பட்டுவிட்ட அவர்களின் உரிமைகளை மீட்டுக் கொடுப்பனவாகவும் அமைந்திருந்தன.

**நிலமானிய அம்சங்கள்:** மானியதாரர் இறந்த பிறகு. அவரது வாரிசுதாரர் மேலாளருக்குச் செலுத்த வேண்டிய உதவிப் பணம் (Relief) நியாயமான தொகையாக இருக்கவேண்டுமென்றும், மேலாளரின் பாதுகாப்பிலிருக்கும் மானியதாரர் தக்க வயதை அடைந்து தம் சொத்தை ஆளும் உரிமையைக் கோரும்போது

அவருக்கு முழுச்சொத்தும் சேர்க்கப்பட வேண்டுமென்றும், பின்னுரிமையாளரின் திருமணம் இரகசியமாக நடத்தப்படக் கூடாது என்றும், கீழ்மானியதாரர்களின் விதவைகள் மறுமணம் புரிந்து கொள்ளும்படி வற்புறுத்தப்படக் கூடாதென்றும், மேலாளர்கள் மானியதாரர்களிடமிருந்து மூன்று உதவிப் பணத்தை (Three Aids) தவிர, வேறெதையும் வசூலிக்கக் கூடாதென்றும், நியாயமான ஊழியங்களைத் தவிர, வேறு ஊழியங்களைச் செய்ய மானியதாரர்கள் கேட்டுக்கொள்ளப்படக்கூடாதென்றும், போர்ச் சேவைக்கு முன்வரும் நைட் வீரர்களிடம் அச் சேவைக்குப் பதில் பணம் கேட்கப்படக்கூடாதென்றும், போர்ச் சேவையில் அவர்கள் ஈடுபட்டிருக்கும்போது பாதுகாப்புப் பணியைச் செய்ய வற்புறுத்தக் கூடாதென்றும், கொடுங் குற்றத்தைச் செய்தவர்களின் நிலத்தைப் பறிமுதல் செய்து கொண்ட அரசர், அவற்றை ஓர் ஆண்டு ஒரு நாள் மட்டுமே வைத்திருந்து, பின் அதனை அந் நிலத்தின் மேலாளரிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென்றும், பிரதம மானியதாரர்களின் நிலச் சொத்தை அரசர் மீட்புப் பெறவும் பறிமுதல் செய்ய நேரினும், அம் மானியதாரர்களின் கீழிருக்கும் சிறு மானியதாரர்களிடமிருந்து அதிகமாகப் பின்னுரிமைப் பணம் வசூலிக்கப்படல் கூடாதென்றும் இச் சாசனம் வற்புறுத்தியிருந்தது.

**திருச்சபை :** சாசனத்தின் சில உள்பிரிவுகள் திருச்சபையைப் பற்றியனவாகவும் இருந்தன. திருச்சபை சுதந்திரமாக இருக்க வேண்டுமென்றும், அதன் உரிமை பறிபோகாமல் அரசரால் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும், திருச்சபை தேர்தல் விவகாரத்தில் அரசர் முழுவதும் குறுக்கிடக் கூடாதென்றும், மதகுருமார்கள்மீது மிகக் கடுமையான தண்டனைகள் விதிக்கக் கூடாதென்றும் மகாசாசனம் வலியுறுத்தியிருந்தது.

**வாணிகம்:** சாசனத்தின் ஏனைய சில பிரிவுகள் நகரங்களைப் பற்றியனவாகவும் வாணிகத்தைப்பற்றியனவாகவும் இருந்தன. இலண்டன், ஏனைய நகர்கள், துறைமுகப் பட்டினங்கள் ஆகியன ஏற்கனவே பெற்றிருந்த உரிமைகளைத் தொடர்ந்து அனுபவிக்கலாமென்றும், அயல்நாட்டு வணிகர்கள் தடையின்றி இங்கிலாந்தில் வாணிபம் செய்ய அனுமதிக்கப்படவேண்டுமென்றும், பகை நாட்டில் ஆங்கில வணிகர்கள் எங்ஙனம் நடத்தப்படுகின்றனரோ, அதுபோன்று அந் நாட்டு வணிகர்கள் இங்கிலாந்தில் நடத்தப்பட வேண்டுமென்றும் வணிகர்கள் அரசரின் அனுமதியின்றி அயல் நாடுகளுக்குச் செல்ல அனுமதிக்கப்பட வேண்டுமென்றும் இச் சாசனம் கூறியது.

**உடைமை :** சாசனத்தின் வேறு சில உள்பிரிவுகள் பாமர மக்களுக்குச் சில சலுகைகளைக் கொடுப்பனவாகவும் இருந்தன. யூதர்களிடமிருந்து (Jews) கடன் வாங்கியிருந்தோர் இறந்து விட்டால், அவரது வாரிசுதாரர் தக்க வயதை அடையும்வரை வட்டி கட்டுவதிலிருந்து விலக்கப்பட வேண்டுமென்றும், கடன் காரரின் விதவையை எவ்விதப் பொறுப்புக்கும் ஆளாக்கக் கூடாதென்றும், விதவைக்கும் வயது வராத பிள்ளைகளுக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி விட்டு, மீதியுள்ள சொத்தையே கடன் அடைக்கப் பயன்படுத்தவேண்டுமென்றும், இச் சாசனம் அறிவித்திருந்தது.

**நல்லாட்சி :** வேறு சில உள்பிரிவுகள், நாடு முழுவதும் ஒரே மாதிரியான எடைகளும் அளவுகளும் (Weights and Measures) பின்பற்றப்பட வேண்டுமென்றும், மரத்தாலான பாலங்களின், (Bridges) பராமரிப்புக்கு அனுமதிக்கப்பட்ட வரிகளைத் தவிர, வேறெந்தப் பணத்தையும் வசூலிக்கக்கூடாதென்றும், அதற்காகத் தனி மனிதரின் உடைமைகளைப் பறிமுதல் செய்யக் கூடாதென்றும், வரி வசூல் செய்யும் உரிமைக்கான குத்தகைப் பணத்தை அடிக்கடி உயர்த்தக்கூடாதென்றும், புதிதாகக் கொண்டுவரப்பட்டிருந்த கெடுபிடிக்கான சட்டங்களைத் (Forest laws) திருத்த வேண்டுமென்றும் மகாசாசனம் எடுத்துரைத்தது.

**நீதி :** இச் சாசனத்தின் வேறு சில உள்பிரிவுகள், நீதித் துறையில் காணப்பட்ட முறைகேடுகளை எல்லாம் அகற்றும் வகையிலே அமைக்கப்பட்டிருந்தன.

பொது வழக்குகளை அரசருடைய நீதிமன்றம், தான் செல்லுமிடங்களுக்கெல்லாம் கொண்டு போகாமல் வெஸ்ட்மின்ஸ்டரில் (Westminster) தங்கித் தீர்த்துத் தீர்ப்பளிக்கவேண்டுமென்றும் நிலத்தைப்பற்றிய, தகராறுகள் அந் நிலங்கள் எங்கிருக்கின்றனவோ அங்குக் கவுன்டி நீதிமன்றங்களால் தீர்க்கப்படவேண்டுமென்றும் விதிக்கும் அபராதத் தொகை, குற்றத்திற்கு ஏற்பவும் அதனைச் செலுத்த வேண்டியவர்களின் தகுதிக்கேற்பவும் இருக்கவேண்டுமென்றும், குறிப்பாகச் சுதந்திரக் குடியானவர்களின் இன்றியமையாத தேவைக்கான சொத்தை விட்டுவைத்து, மீதிச் சொத்தையே அபராதமாக வசூலிக்க வேண்டுமென்றும், வியாபாரிகளின் வாணிகப் பொருள்களை விட்டு, மற்றவற்றையே அபராதமாக வசூலிக்கவேண்டுமென்றும், மேலும் உள்குடிகள் செலுத்தவேண்டிய அபராதத் தொகையை அருகில் வசிக்கும் நம்பிக்கைக்கு உகந்தவர்களே தீர்மானிக்க வேண்டுமென்றும், பிரபுக்கள் செலுத்தவேண்டிய அபராதத்தை நிர்ணயிக்கும்

உரிமை அக் குடியைச் சேர்ந்தவர்களிடமே ஒப்படைக்க வேண்டுமென்றும், பிரபுக்கள் நீதிமன்றங்களிலிருந்து வழக்குகளை அரச நீதி மன்றத்திற்கு மாற்றக்கூடிய அரச ஆணைகளைத் தடுக்க வேண்டுமென்றும், நிலமானிய நீதிமுறையை எல்லா நிலச் சொந்தக்காரர்களும் பெறவேண்டுமென்றும் இச் சாசனம் வலியுறுத்தியது.

இவையல்லாமல், அரசருடைய வழக்குகளை ஷெரிப்பு, கரோனர், பெய்லிப் போன்றோர் விசாரிக்காது சட்ட வல்லுநர்களே சட்ட ரீதியாக விசாரிக்க வேண்டுமென்றும், தக்க ஆதாரங்களின்றித் தனிமனிதன் ஒருவனை விசாரணைக்கு உள்படுத்தக்கூடாதென்றும், தனிப்பட்ட மனிதரால் கொலைக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் ஜூரிகள் மூலமாகவே விசாரிக்கப்பட வேண்டுமென்றும், சிறுசிறு குற்றங்களுக்கான வழக்கு விசாரணைகள் அந்தந்த இடங்களிலேயே நடைபெற வேண்டுமென்றும், குறிப்பிட்ட கால வரையில் அவ் வழக்குகள் தீர்க்கப்பட வேண்டும் என்றும், நிலச் சொந்தக் காரர்கள் கட்டவேண்டிய அபராதங்களும், கால்நடை வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள வியாபாரிகள் கட்டவேண்டிய அபராதங்களைப்பற்றிய விவகாரங்களும் ஜூரிகள் மூலமாகவே தீர்க்கப் படவேண்டும் என்றும் இச் சாசனம் எடுத்துக் காட்டியது.

**மகாசாசனத்தின் சிறப்பு அம்சங்கள்**

இச் சாசனத்தின் பல உள்பிரிவுகளை மேலாகப் பார்ப்போமானால், அவை அத்தனையும் பிரபுக்களுக்குச் சலுகைகள் கொடுப்பதாகவே அமைந்திருந்தன. அதனால்தான் இதனை ஒரு படைமானியப் பத்திரமாக (Feudal Charter) கருதுகின்றனர். இருப்பினும், இச் சாசனத்தில் இருந்த நான்கு முக்கிய அம்சங்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

இச் சாசனத்தின் பன்னிரண்டாவது உள்பிரிவின்படி மூன்று முக்கிய உதவிப் பணங்களே பெரும் மானியதாரரால் வசூலிக்கப் படவேண்டும். மேலாளரை விடுவிக்கும் போதும் மூத்தபிள்ளையை நைட்வீரர் ஆக்கும் போதும், மூத்தமகள் திருமணத்தின் போதும் மேற்கூறிய உதவிப் பணம் வசூலிக்கப்படலாம். வேறு காரணங்களுக்காக உதவிப் பணம் வசூலிக்கப்பட வேண்டியிருந்தால், அத் தொகை நியாயமானதாக இருக்கவேண்டும்; அங்ஙனம் வசூலிக்கப்படும் தொகை, நாட்டு மக்களின் பொதுக் கருத்திற்கு ஏற்றதாகவும் இருக்கவேண்டும். மக்களின் பொதுவான கருத்தை அறிய அரசர் ஒரு குறிப்பிட்ட நாளில் தலைமை பிஷப், பிஷப்புகள், பெரிய பிரபுக்கள், சிறிய பிரபுக்கள் ஆகியோரை ஒரு குறிப்பிட்ட

இடத்தில் கூட்டி, அவர்களுடைய ஒப்புதலைப் பெறவேண்டும். தலைமைப் பிஷப், பிஷப், பெரிய பிரபுக்கள் ஆகியோருக்கு அரசர் தனித்தனி அழைப்பு ஆணைகளை (Writ) அனுப்ப வேண்டும்; சிறிய பிரபுக்கள், ஷெரிப் மூலமாகப் பொதுவாக அழைக்கப்பட்டனர். இம்முறை பொது ஆணை (Comman writ) என அழைக்கப்பட்டது. அரசர் அனுப்பும் ஒவ்வோர் அழைப்பு ஆணையிலும் எந்தெந்தக் காரணங்களுக்காக அழைக்கப்பட்டவர்கள் அழைக்கப்பட்டார்கள் என்பது தெளிவாக்கப்படவேண்டும். சுருக்கமாகக் கூறின், இவர்களின் ஒப்புதலைப் பெருமல் அரசர் எவ்விதப் புதிய வரிகளையும் வசூலிக்கக்கூடாது.

இந்த அம்சம் அரசரின் வரி விதிக்கும் அதிகாரத்திற்கு முட்டுக்கட்டையாக அமைந்தது. அரசர், இனி தம் விருப்பம் போல் ஏதேச்சதிகாரமாக எவ்வித வரியையும் வசூலிக்க முடியாத நிலை இதனால் ஏற்படுத்தப்பட்டது.

பதினான்காவது உள்பிரிவு எவரெவர் அரசரால் அங்ஙனம் ஒப்புதல் தருவதற்கு அழைக்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தியிருந்தது. உதாரணமாக, அரசரால் கூட்டப்பட்ட அக் கூட்டத்திற்குச் சில மக்களின் பிரதிநிதிகளே வரவழைக்கப் பட்டிருந்தனர். தலைமைப் பிஷப், பிஷப்புகள், மடாதிபதிகள் கோமான்கள், பெரிய பிரபுக்கள் மட்டுமே அழைக்கப்பட்டிராமல் சிறிய பிரபுக்களும் அழைக்கப் பட்டிருந்தனர் என்பது குறிப்பிடத் தக்கது. இங்ஙனம் கூட்டப்பட்ட கூட்டமே வருங்காலத்தில் பாராளுமன்றமாக உருவெடுத்தது.

பன்னிரண்டாவது, பதினான்காவது உள்பிரிவுகள், அரசியல் அமைப்பின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. இதன் அடிப்படையிலேயே இங்கிலாந்தின் வருங்கால அரசியல் அமைப்பு தோன்றியிருந்ததென்றால் அது மிகையாகாது.

முப்பத்தொன்பதாவது உள்பிரிவின்படி எல்லாச் சுதந்திரக் குடிமக்களும் நாட்டின் சட்டத்திற்கேற்ற முறையிலேயே விசாரிக்கப்பட வேண்டுமென்றும், அவருக்குச் சமமான அந்தஸ்தைப் பெற்ற பிற குடிமக்களின் வாக்குமூலத்தைக் கேளாமல் அவர்கள் கைது செய்யப்படவும் சிறையிலடைக்கப்படவும் கூடாதெனவும், விசாரணை முடிவதற்கு முன்பாக அவரைச் சிறையிலடைக்கவோ அவரது சொத்துகளைப் பறிமுதல் செய்யவோ கூடாதென்றும் வற்புறுத்தப்பட்டிருந்தது.

நாற்பதாவது உள்பிரிவு 'எல்லா மக்களுக்கும் காலதாமதம் ஏற்படாமல் தக்க நியாயம் வழங்கவேண்டும்' என்று கூறியது.

'நீதியை விற்கவோ மறுக்கவோ தாமதிக்கவோ' கூடாதென்றும் 'சட்டத்தின் முன் எல்லோரும் சமம்' என்றும் இச் சாசனம் வற்புறுத்தியிருந்தது.

இவ்விரு உள்பிரிவுகள் அரசரின் சிறை பிடிக்கும் எதேச்சதிகார உரிமைக்கு முட்டுக்கட்டையாக இருந்ததுடன், நாட்டின் சட்டம் எல்லோருக்கும் பொது என்றும், நாட்டின் சட்டம் எல்லோருக்கும் மேம்பட்டதென்னும் வழக்காறையும் உருவாக்கியது. வருங்காலத்தில் அரசர்கள் நீதி சார்ந்த ஆட்சியை அமைப்பதற்கும் இவ்விரு பிரிவுகள் காரணமாக இருந்தன.

மகாசாசனத்தில் இந்த நான்கு முக்கியப் பிரிவுகளை ஹாலம் **(Hallam)** என்ற வரலாற்றாசிரியர், 'இன்றியமையாத அம்சங்கள்' **(Essential Clauses)** எனக் கூறுகின்றார்.

இந் நான்கு அம்சங்களோடு கடைசி அறுபத்து மூன்றாவது அம்சமும் குறிப்பிடத்தக்கதே. இதன்படி இச் சாசனத்தை நடைமுறைப் படுத்துவதற்காக ஓர் ஏற்பாடு செய்யப்பட்டது; இருபத்தைந்து பிரபுக்களடங்கிய ஒரு கவுன்சில் நிறுவப்பட வேண்டும் என்றும், ஜான் அரசர், தாம் கையொப்பமிட்டு ஒப்புக் கொண்ட சாசனத்தின் அம்சங்களை மீறுவாரானால், இக் கவுன்சிலோ (குழுவோ) அல்லது இதைச் சேர்ந்த நால்வரோ உடனே மீறப்பட்ட உள்பிரிவை அரசரின் கவனத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்றும், நாற்பது நாள்களுக்குள் அரசர் அக் குறைகளை நீக்கத் தவறினால், அவரை எதிர்த்து மக்கள் சார்பிலே கலகம் செய்யக் கூடிய உரிமை பிரபுக்களுக்கு உண்டென்றும் இச் சாசனம் சந்தேகத்திற்கு இடமின்றி எடுத்துரைத்தது.

அரசர் நல்லாட்சி செய்யத் தவறினால், முதலில் அவருக்கெதிராகச் சாத்விக முறையையே கையாளவேண்டுமென்றும், அந் நிலை தவறும்போதுதான் பலாத்காரத்தில் ஈடுபடவேண்டுமென்றும் இக் கடைசி உள்பிரிவு உணர்த்துகிறது. அதனால்தான் இந்த அம்சத்தை 'வரம்பிற்குள்பட்ட முடியாட்சியை ஏற்படுத்தும் முதல் முயற்சி' எனக் கூறுகின்றனர்.

**மகாசாசனத்தின் திறனாய்வு**

மகாசாசனத்தின் தன்மையைப்பற்றி இரு கருத்துகள் தெரிவிக்கப்படுகின்றன. இதனை, 'பிரபுக்களின் மகாசாசனம்' என்று சிலரும் 'மக்களின் உரிமைச்சாசனம்' என்று சிலரும் அழைக்கின்றனர். ஆயினும், இச் சாசனத்தின்' உண்மையான மதிப்பு இவ்விரு கூற்றுகளுக்கு இடையே அடங்கியிருக்கிறது.

இச் சாசனத்தின் ஒவ்வொரு உள்பிரிவிலும் நிலமானியத் திட்டத்தின் அடிப்படை அம்சங்களே அதிகமாகக் காண முடிகிறது. நாட்டு மக்களில் பெரும்பாலானோர் உள்குடிகளாக இருந்தும், அவர்களின் உரிமைகளைப்பற்றி இச் சாசனம் ஓரிரு உள் பிரிவுகளில் மட்டும் வற்புறுத்தியிருக்கிறது. பிரபுக்கள் தங்கள் உரிமைகளைக் காத்துக் கொள்வதற்கே அந்தச் சலுகைகளையும் சேர்த்துக் கொண்டனரென்று சுட்டிக் காட்டப்படுகிறது. ஆகவே, தனிப்பட்ட ஒரு வகுப்பின் உரிமைகளைக் காப்பதற்கே இச் சாசனம் ஏற்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. மேலும், இச் சாசனம் எல்லாக் காலத்திற்கும் ஏற்றப்படி காப்புறுதிகளை அளிக்கவில்லை யென்றும், இச் சாசனம் எழுதப்பட்ட காலத்தில் இருந்த சில குறைகளை நீக்குவதற்காகவே உருவாக்கப்பட்டதென்றும் எடுத்துக் காட்டப்படுகிறது சுருக்கமாகச் சொன்னால், மன்னருக்கும் நிலமானியப் பிரபுக்களுக்கும் அக் காலத்துப் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள ஏதுவாக அமைந்த ஓர் ஒப்பந்தமாகவே (Contract) மகாசாசனம் கருதப்பட வேண்டியிருக்கிறது. பாமர மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க இப் பத்திரம் ஆக்கப்பட்டதாகத் தெரியவில்லை; இஃது ஒரு கருத்து.

மகாசாசனத்தின் பெருமையை அதன் தனிப்பட்ட உள்பிரிவுகளில் காணமல் அதன் அடித்தளத்திலே (Base) காண விழைய வேண்டுமென்றும் சொல்லப்படுகிறது. அங்ஙனம் காணுங்கால், நாட்டு மக்களின் உரிமைகளை அரசர் போற்றி மதித்து நடக்க வேண்டும்; அங்ஙனம் அரசர் மதித்து நடக்காவிட்டால், மக்கள் அவரை வற்புறுத்தித் தங்கள் உரிமைகளைப் பெற வேண்டுமென்ற இரு சிறப்புகள் தெரிய வருகின்றன.

இச் சாசனம், பிரபுக்களின் வற்புறுத்தலின் பேரில் மன்னரால் அளிக்கப்பட்டதாயிருந்தாலும், தம்மிடம் தொடர்ந்து பற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்பதற்காகவே இச் சாசனத்தை மன்னர் அளித்திருந்தாராதலால், அரசரும் அவர்தம் மக்களும் சேர்ந்து வெளிப்படுத்திய ஓர் ஒப்பந்தமாக மகாசாசனம் கொள்ளப்படவேண்டும். பிரபுக்களின் உரிமைகளின்றி உள் குடிகள், வியாபாரிகள், சுதந்திரக் குடியானவர்களின் உரிமைகளும் இச் சாசனத்தால் பாதுகாக்கப்பட்டிருக்கின்றதென்பதும் சுட்டிக் காட்டப்படுகிறது. ஆகவே, இதனை ஒரு தேசிய உரிமைப் பத்திரமாகக் கொள்ளவேண்டுமென்பது இன்னொரு கருத்து.

ஆகவே, உள்பிரிவுகளின் கண்ணோட்டத்தில் பார்த்தால், 'நிலமானிய சாசனமாகவும்' அடித் தளத்தின் வாயிலாகப்

பார்த்தால், 'உரிமைச் சாசனமாகவும்' காணப்படும் மகாசாசனம், அரசரின் ஏதேச்சாதிகாரங்களைக் குறைத்தது என்பதை மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

மகாசாசனம், இல்லாத எதையும் புதிதாக எடுத்துக் காட்டவில்லை என்றும், பழைய ஆங்கிலச் சட்டங்களையும் முதலாம் ஹென்றியின் சாசனத்தையுமே மீண்டும் உறுதிப்படுத்தியிருந்த தென்றும் கருதப்படுகின்றது. அதாவது, இடையிலே மன்னர்களால் மக்களுக்கு மறுக்கப்பட்ட பழங்கால மரபுகள் மீண்டும் நிலை நிறுத்தப்பட்டன என்பதாகும். இதன்படி வருங்காலத்தில் அரசர்கள் நாட்டின் சட்ட திட்டங்களுக்குள்பட்டுத்தான் ஆள வேண்டுமே தவிர, தங்கள் சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இணங்க ஆட்சி செய்ய முடியாதென்பதையே இச் சாசனம் ஆணித்தரமாக எடுத்துரைத்திருந்ததெனவும் கொள்ளலாம்.

இச் சாசனத்தின் சிறப்பு, இதில் என்ன எழுதப்பட்டிருந்தது ; எங்ஙனம் அக் காலத்தில் செயல்படுத்தப்பட்டிருந்தது என்பதில்லை. இதில் என்ன சொல்லப்பட்டிருப்பதாக வருங்காலத்தில் வாழ்ந்தோர் நினைத்தார்கள் என்பதிலும், இதன் அம்சங்களைச் செயல்படுத்த முனைந்தார்களென்பதிலுமே இருந்தது. பதினேழாம் நூற்றாண்டில் ஸ்டூவர்டு (Stuarts) அரசர்களுக்கும் பாராளுமன்றத் திற்கும் ஏற்பட்ட உரிமைப் போராட்டத்தில் இச் சாசனத்தின் முக்கிய அம்சங்கள் அவ்வப்போது மன்றத் தலைவர்களால் எடுத்துச் சொல்லப்பட்டதிலிருந்து இதன் முக்கியத்துவம் தெரிய வரும்.

பிரபுக்களும் குருமார்களும் பாமர மக்களின் பரவலான ஆதரவைப் பெற்று, வகுப்பு வேறுபாடுகளை மறந்தவர்களாய்ச் சேர்ந்து செயல்பட்டு, இச் சாசனத்திற்கு ஆக்கம் கொடுத்திருந்ததால், இதைத் தேசிய உரிமைப் பத்திரமாகவும் கொள்ளலாம். ஆங்கில மக்கள் எல்லோருக்கும் இச் சாசனம் உரிமைகளை வழங்கவில்லை என்றாலும், நாட்டின் பழக்கவழக்கங்கள் சமதர்ம நீதி போன்றவற்றில் அரசரைக் கட்டுப்படுத்தும் முதல் முயற்சியாக இது அமைந்ததால், 'மக்களாட்சியில் மன்னராட்சி' என்ற பிற்காலத்திய அரசியல் மாறுதலுக்கு ஒரு வழிகாட்டியாகவே மகாசாசனம் கருதப்படுகிறது.

இச் சாசனத்தின் சிறப்பு அம்சங்கள், வருங்கால அரசியலமைப்புபற்றியும் மக்களின் அடிப்படை உரிமைகளைப்பற்றியும் வற்புறுத்தியிருந்ததென்பது நினைவில் கொள்ளத்தக்கது. முன் சிறப்பைக் காணுங்கால், சாத்தம் பிரபு (Earl of Chatham) குறிப்

பிட்டது போல் இங்கிலாந்து அரசியல் அமைப்பின் வேதமாக (Bible) கொள்ளலாம்; பின் சிறப்பைக் காணுங்கால், சர் எட்வர்டு கோக் (Sir Edward Coke) என்ற சட்ட நிபுணர் குறிப்பிட்டது போல் மக்களின் உரிமைப் பத்திரமாகவும் கொள்ளலாம். ஸ்ஃபப்ஸ் (Sfubbs) என்ற ஆசிரியர், இங்கிலாந்து அரசியலமைப்பின் வரலாறு இச் சாசனத்தின் விளக்கவுரை எனப் பெருமையுடன் கூறுகிறார்.

ஆங்கிலேயர்களின் உரிமைக்கே அடிக்கல்லாகக் கருதப்படும் இப் பத்திரம் அடிப்படை உரிமைகளைப் பரம்பரைப் பரம்பரையாக எல்லாச் சுதந்திர மக்களுக்கும் சாசனப்படுத்தியதாலேயே இது 'மகாசாசனம்' என அழைக்கப்பட்டது.

**அரசர் ஜானும் மகாசாசனமும்**

கட்டாயப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் அரசர் ஜான், மகாசாசனத்திற்கு ஒப்புதல் கொடுத்திருந்தாலும் அதை மீறுவதற்குத் தகுந்த நேரத்தை எதிர் நோக்கியிருந்தார். தாம் கொடுத்திருந்த வாக்குறுதி ஜான் மன்னருக்கு ஒரு பொருட்டாகத் தெரியவில்லை; அதை மீறி உடைத்தெறிய வேண்டுமென்பதே இவரது உள் எண்ணம். தம் எண்ணத்தைச் செயலாக்கும் வகையில் ஜான், தம் மேலாளரான போப்பாண்டவரின் உதவியை நாடினர். போப்பும் இச் சாசனம் செல்லுபடியாகாது என அறிவித்துத் தலைமைப் பிஷப்பு ஸ்டீஃபன் லாங்டனைப் பதவி நீக்கம் செய்து இலண்டன் நகர்மீது சமயத் தடை ஆணைகளைப் பிறப்பித்தார். இவற்றுலெல்லாம் திருப்தி அடையாத ஜான், பிரபுக்களைப் பணியவைத்துச் சாசனத்தை அர்த்தமில்லாமல் செய்ய ஒரு கூலிப் படையைத் தருவித்தார். பிரபுக்களும் இச் சாசனத்தின் 63ஆம் உள்பிரிவின்படி அரசரை எதிர்த்துப் போர்க்கோலம் பூண்டனர்.

**உள்நாட்டுப் போர் :** நாட்டிலே உள்நாட்டுப் போர் மூண்டது. எஸ்ஸெக்ஸ் பிரபுவின் தலைமையில் மன்னரின் கூலிப் பட்டாளத்தைப் பிரபுக்களின் படைகள் எதிர்த்தன. மன்னரின் எதிர்ப்புக் கடுமையாகி வருவதைக் கண்ட பிரபுக்கள், ஃபிரெஞ்சு இளவரசரான லூயி என்பவரைத் தங்களுக்குதவியாகப் படைகொண்டு வரும்படி கேட்டுக்கொண்டனர். கி.பி. 1216ஆம் ஆண்டு மே மாதம் லூயியின் படைகளும் பிரபுக்களுக்கு ஆதரவாக இங்கிலாந்தை வந்தடைய போர் மும்முரமாயிற்று.

துரோகப் புத்தியும் கொடிய ஆட்சித் தன்மையும் கொண்டிருந்த அரசர் ஜானுக்கு நாட்டிலே சிறிதும் ஆதரவில்லை. லூயியின்

தலைமையிலே பிரபுக்கள் ஜானின் படைகளைப் பலவிடங்களில் வென்றார்கள். ஆனாலும போர் நீடித்தே வந்தது. இதறகிடையே கி.பி. 1216 ஆம் ஆண்டு அக்டோபர் 16ஆம் நாள் கடுமையான காய்ச்சலால் பீடிக்கப்பட்ட ஜான், நீவார்க் நகரிலே காலமானார்.

சுயநலம், வரட்டுப் பிடிவாதம் மனப்பேதலிப்புப் போன்ற வற்றையே தனிக்குணங்களாகக் கொண்டிருந்த அரசர் ஜானின் மரணம், மகாசாசனத்திற்கு நிரந்தரத் தகுதியை அளித்தது. நாட்டில் இதுவரை இருந்து வந்த அவல நிலை நீங்கியது போன்ற உணர்ச்சி எழலாயிற்று.

## மூன்றாம் ஹென்றி

(கி.பி. 1216—1272)

ஜான் மன்னர் காலமானபோது அவரது மகனான ஹென்றி, ஒன்பது வயதுச் சிறுவனாக இருந்தும் பிரபுக்கள் அச் சிறுவனையே அரசராக்க விரும்பினர். ஹென்றி, தக்க வயதை அடைந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் வரையில் நிர்வாகம் தங்களிடத்தே இருக்குமெனப் பிரபுக்கள் நினைத்தனர். அத்துடன் பகர (Regency) ஆட்சிக் காலத்தில் பாலகனாகிய அரசருக்கு மகாசாசனத்தை மதித்து நடக்கும் அளவிற்குப் போதிய பயிற்சியையும் கொடுக்கலா மென அப்பிரபுக்கள் கருதினர்; சுருக்கமாகச் சொன்னால், இப்பாலக அரசரைத் தங்கள் கைப்பாவையாக ஆக்கிக்கொள்ளக் கூடிய நல்வாய்ப்புப் பிரபுக்களுக்கு இருந்தது. மேலும் அப்போதைய போப்பாண்டவரான மூன்றாம் ஹொனோரிபசும் காலம் சென்ற ஜானின் விருப்பத்திற்கிணங்க ஹென்றியையே இங்கிலாந்தின் அரசராக்கும்படி கேட்டுக்கொண்டார். ஆகவே, கி.பி. 1216ஆம் ஆண்டு அக்டோபர் 28ஆம் நாளில் இளம் ஹென்றி கிளௌ செஸ்டரில் இங்கிலாந்தின் அரசராக மூன்றாம் ஹென்றியெனப் பட்டம் சூட்டப் பெற்றார்.

**பகர ஆட்சி:** இவர் ஆட்சிக் காலத்தின் முதல் பதினாறு ஆண்டுகள் (கி.பி. 1216-1232) அரசரின் பெயரால் காப்பாளர்கள் ஆட்சி புரிந்தனர். அவர்களில் பெம்புரோக் (Pembroke), எர்லான வில்லியம் மார்ஷல் (கி.பி. 1216-1219) என்பவர் முதல்வராவர். மூன்று ஆண்டுகள் நாட்டின் ஜஸ்டிஷியராகவும் அரசரின் பகர ஆட்சியாளராகவும் பணிபுரிந்த வில்லியம் மார்ஷல், மதி நுட்பமும் வீரப்பண்புகளும் கொண்ட கனவானாயிருந்தார். மகாசாசனம் வற்புறுத்தியிருந்த கொள்கைக்கேற்ப, இவரது ஆட்சி அமைந்திருந்தது. இவர் தம் காலத்தில் செய்திருந்த முக்கிய பணி என்னவென்றால், லூயியின் ஃபிரெஞ்சுப் படைகளை இங்கிலாந்திலிருந்து விரட்டியதேயாகும்.

அரசர் ஜானின் கடைசிக் காலத்தில் ஃபிரெஞ்சு இளவரசர் லூயி, பிரபுக்களின் வேண்டுகோளுக்கிணங்கித் தம் படைகளுடன் இங்கிலாந்தை வந்தடைந்திருந்தார். லூயியை ஆங்கிலப் பிரபுக்கள், அந்த அவசரக் காலத்தில் தங்கள் தலைவராகவே கருதியிருந்தனர். ஆனால் லூயி, தமக்கு இங்கிலாந்தின் மகுடம் கிடைக்குமென நினைத்து வந்தார். ஆனால், அந்த எண்ணம் கொண்டிராத ஆங்கில பிரபுக்கள், பாலகரான மூன்றாம் ஹென்றியை மன்னராக்கி இருந்தனர். இதனால், மனக்கசப்புற்ற லூயி, உடனடியாக ஃபிரான்சு நாடு திரும்பினார். ஆத்திரமும் ஏமாற்றமும் அடைந்திருந்த லூயி, தமக்கு வேண்டிய படைகளைச் சேர்த்துக் கொண்டு இங்கிலாந்தின்மேல் படையெடுத்தார். வில்லியம் மார்ஷல், தலைமையில் நாடே திரண்டு நின்றது. இங்கிலாந்தில் தேசிய உணர்ச்சி ஏற்பட்டு விட்டதற்கான அறிகுறியாக இஃது இருந்தது. லூயி, கி.பி. 1217ஆம் ஆண்டில் லிங்கன் (Lincoln) என்னுமிடத்தில் படுதோல்வியடைந்தார். இவரது கப்பற் படையும் டோவர் ஜலசந்தியில் மூழ்கடிக்கப்பட்டுவிட்டது. இதே ஆண்டு செப்டம்பர் 11ஆம் நாள், லூயி ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு நாட்டை விட்டுச் சென்றார். இதன் விளைவாக இளம் ஹென்றிக்கு வாரிசுப் போட்டியில்லாமல் தவிர்க்கப்பட்டது.

அடுத்து ஜஸ்டிஷியராகவும் காப்பாளராகவும் பொறுப்பேற்றிருந்த ஹியுபர்ட்-டி-பர்க் (Hubert de Burgh) திறமையும் தகுதியும் கொண்ட செயல் வீரராகத் திகழ்ந்தார். இவரது பதவிக் காலத்தில் (கி.பி. 1219–1232) ஹியுபர்ட் பல அரும் பணிகளுக்குக் காரணமாகயிருந்தார்.

அரசர் ஜான் காலத்தில் நாட்டுக்கு அழைக்கப்பட்டிருந்த கூலிப் பட்டாளத்தை விரட்டச் செய்தார். பெட்ஃபோர்டுக் (Bedford) கருகே ஒரு கோட்டையைக் கட்டிக்கொண்டிருந்த அக் கூலிப் பட்டாளத்தின் தலைவனை பாக்ஸ் டி பிரியட்டை (Falkes de Breaute) தோற்கடித்து மற்றவர்களுக்குப் பயமூட்டும் வகையிலே அவனைத் தூக்கிலிட்டார். கூலிப் படைகளின் அட்டகாசம் ஒழிந்திருக்க நாட்டில் அமைதி நிலவியது.

போப்பாண்டவரின் பிரிதிநிதியாக இங்கிலாந்தில் தங்கியிருந்த பாண்டுல்ஃப் (Pandulf) என்பவர், அடிக்கடி அரசியலில் தலையிட்டு வருவதைப் பொறுக்காது இவரை நாட்டை விட்டு வெளியேறச் செய்தார்.

கடந்த பல ஆண்டுகளாக இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் இடையே இருந்து வந்த பூசலை நீக்கி, இரு நாடுகளுக்கிடையே நட்புறவை வளர்த்தார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, அரசரின் பெயரால் மகா சாசனத்தை மீண்டும் வெளியிட்டு மற்றவர்கள் அதை மறக்கவோ மறுக்கவோ முடியாதபடியும் செய்திருந்தார். இத்தகைய நற்பணிகளைச் செய்திருந்த ஹியுபர்ட்டைக் கி.பி. 1232ஆம் ஆண்டில் பிறரால் தூண்டப்பட்டு அரசர் ஹென்றி துரோகக் குற்றம் சாட்டிப் பதவியிலிருந்து விலக்கினர். இக் கட்டத்திலிருந்துதான் மூன்றும் ஹென்றியின் சுய ஆட்சி ஆரம்பித்தது; இத்துடன் இடர்களும் சிக்கல்களும் கலகங்களும் தொடங்கின.

**மூன்றும் ஹென்றியின் குணவியல்புகள்:** மற்றவர்களால் மதிப்பிடமுடியாத அளவிற்குக் குணவியல்பைப் பொறுத்தவரையில் மூன்றும் ஹென்றி புரியாத புதிராகவே இருந்தார். இவரிடம் தம் பாட்டனரான இரண்டாம் ஹென்றியின் அரசியல் நேர்மையும் இல்லை; அதே சமயம் தந்தை ஜானின் கொடிய குணமும் இல்லை. எல்லோரும் தம்மை 'நல்ல அரசர்' என்று புகழ வேண்டுமென்று நினைத்திருந்த இவ் வரசர், அதற்கான தகுதிகளைக் கொண்டவராகவும் இல்லை. இவரிடம் மென்மையும் அடக்கமும் அன்பும் இருக்கத்தான் செய்தன. வீரராக விளங்கினர். ஆனல், சுய சிந்தனை இல்லாதவராகவும் இருந்தார். சமயத் தொண்டுகளுக்கு முன்னிலையில் நின்றார். எட்வர்டு அதிபக்தரால் கட்டுவிக்கப்பட்டிருந்த வெஸ்ட்மின்ஸ்டர் கோயிலை இடித்துப் புதுப்பித்தவராகவும் இருந்தார். மக்களுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்காத வகையில் ஹியுபர்ட் என்ற உண்மை ஊழியரை உதாசீனம் செய்தவராகவும் இருந்தார். பெருமனிதராகவும் காட்சியளித்தார்; போலித்தன்மைகளையும் கொண்டிருந்தார். பரந்த நோக்குள்ளவராகவும் கலைகளின் காவலராகவும் விளங்கிய இம் மன்னர், மதி நுட்பம் கொண்டிராதவராகவும் விளங்கினர். இவர் காலத்தில் ஏற்பட்ட அரசியல் குழப்பங்களுக்கு இம் மன்னரின் குணவியல்புகளே காரணமாக அமைந்தன.

**மூன்றும் ஹென்றியின் தன்னாட்சி (கி.பி. 1232—72)**

நேரிடையாக ஆட்சி நடத்தமுற்பட்ட இவ் வரசர், தொடக்கத்திலிருந்தே பலதரப்பட்ட அயல் நாட்டவர்களுக்குச் சலுகைகள் பல காட்ட ஆரம்பித்தார். இவர்களிலே பாயிட்டோ (Poitou) நாட்டைச் சேர்ந்த பீட்டர்—டி—ரோச்சஸ் (Peter de Roches) என்பவர் அரசரின் புதிய ஜஸ்டீஷியராகப் பதவி பெற்றிருந்தார். வின்செஸ்டர் பிஷப்பாக ஏற்கனவே பணியாற்றி வந்த இந்த அந்நியரின் தூண்டுதலாலேயே அரசர் விசுவாசம் மிகுந்த ஹியுபர்ட்டைப் பதவியிலிருந்து நீக்கியிருந்தார்.

**அந்நியருக்குச் சலுகை :** பீட்டர் தமக்கு வேண்டியவர்களை எல்லாம் நாட்டின் முக்கியப் பொறுப்புகளில் அமர்த்தியிருந்தார்; சிலர் பிஷப்புகளாக, இன்னும் சிலர் எர்ல்களாக, வேறு சிலர் ஷெரிப்புகளாக நாட்டின் பல பகுதிகளிலே ஆக்கப்பட்டிருந்தனர். தூயவரும் அறிஞருமான எட்மண்டு ரீச் (Edmand Rich) என்பவர், ஆர்ச்பிஷப் பதவியிலிருந்து விலகியதால் அவ்விடத்திற்குப் பீட்டருக்கு வேண்டிய சாவாய் (Savoy) நாட்டைச் சேர்ந்த போனிப்ஃபேஸ் (Boniface) என்பவர் அமர்த்தப்பட்டார்; வாலன்ஸ் வில்லியம் (William of Wallance) என்ற இன்னொரு அந்நியருக்கும் நாட்டில் நிலங்களும், செல்வாக்கும் கொடுக்கப்பட்டிருந்தன. தங்கள் சொந்த நாட்டிலேயே, தாம் புறக்கணிக்கப்படுவதாக ஆங்கிலப் பிரபுக்கள் நினைத்ததில் அர்த்தமிருந்தது. தங்களுக்கு வழங்கப்பட வேண்டிய பதவிகள், இங்ஙனம் அந்நியர்களுக்குக் கொடுக்கப்பட்டதில் பிரபுக்கள் பொரும ஆரம்பித்தனர்.

நாட்டில் இவ்வாறு பிரபுக்களிடையே அதிருப்தி வளர்ந்து வந்த நேரத்தில், அரசர் மூன்றாம் ஹென்றி, இத்தாலியிலுள்ள புரோவின்சின் (Provence) இளவரசியான இசபெல்லா (Isabella) என்பவரைத் திருமணம் செய்து கொண்டார் (கி.பி. 1236). இத் திருமணத்தைத் தொடர்ந்து பல அந்நியர்களான இத்தாலியர்கள் அரசியுடன் இங்கிலாந்து வந்தனர். இங்ஙனம் வந்திருந்த அந்நியர்களுக்கும் அரசர் நாட்டிலும் அரசவையிலும் சில உயர் பதவிகளைக் கொடுத்திருந்தார். நிலங்களும், பட்டங்களும் வெகுமதிகளும் இவர்களுக்கு அளிக்கப்பட்டன. 'இங்கிலாந்தை அயல் நாட்டினரே கட்டியாண்டு வந்தனர்' என்று சொல்வதே பொருத்தமாகும். பிரபுக்கள், எந்தெந்த வளங்கள், வாய்ப்புகள் தங்களுக்கு இந் நாட்டில் சொந்தமென்று நினைத்து வந்தார்களோ, அவை எல்லாம் அந்நியர்களிடம் இருந்துவர இப் பிரபுக்களிடையே கோபம் கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்துவிட்டது.

**வரிப்பளு :** அந்நியர்களின் ஆலோசனையின் பேரில் நடத்தப்பட்ட மூன்றாம் ஹென்றியின் ஆட்சியில் அரசாங்கம் சீர்கெட ஆரம்பித்திருந்ததோடு, வரிப்பளுவும் அதிகமாகவே இருந்தது. பொருளாதாரநிலை சீர்குலைந்து வந்த இந் நேரத்தில் பொருள்களின் விலையும் அதிகமாகவே, அதனால் மக்கள் அவதிப்பட்டனர். இதே நேரத்தில் அரசர், தம் ஆடம்பரச் செலவுகளுக்கும் அந்நிய நண்பர்களுக்கும் கொடுத்த வெகுமதிகளுக்கும் பணத்தை வாரி இறைத்து வந்தார். நாட்டிலிருந்த வரிச்சுமையும், அரசரின் ஊதாரித்தனமும், பிரபுக்களின் ஆத்திரத்தை மேலும் கிளப்பி விட்டன.

**பயனில்லாத போர்:** முறையற்ற ஆட்சியும் வரிப்பளுவும் நாட்டைப் பீடித்திருந்த இக் காலத்தில் அரசர் மூன்ரும் ஹென்றி, கி.பி. 1242ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுப் போர்களிலே இறங்கிஞர். தம் தந்தை ஜான் அரசரின் காலத்தில் இழந்த ஃபிரெஞ்சுப் பகுதிகளே, குறிப்பாகப் பாயிட்டோ பகுதியை மீட்க வேண்டு மென்ற எண்ணத்திலேயே அரசர் போரில் கலந்து கொண்டார். ஆனல், இப் போரிஞல் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. மாருக, ஃபிரெஞ்சுஅரசரான லூயியிஞல் வற்புறுத்தப்பட்ட நிலையில் அரசர் ஹென்றி உடன்படிக்கை ஒன்றுக்கு உள்பட்டுத் தமக்கு ஃபிரெஞ்சுப் பகுதிகளிலிருந்த உரிமைகளேக் கைவிட்டார். காஸ்கனி என்ற பகுதி மட்டுமே இன்னும் ஆங்கில அரசரின் வசமிருந்தது. அரசரின் இந்தத் தோல்வியிஞலும் தேசப் பற்றுக் கொண்ட ஆங்கிலப் பிரபுக்கள் அதிருப்தி அடைந்திருந்தார்கள்.

**போப்பாண்டவரின் குறுக்கீடு:** மூன்ரும் ஹென்றியின் பல மற்ற ஆட்சியைப் பயன்படுத்திக் கொண்டு அப்போதைய போப் பாண்டவரான நான்காம் இன்னசென்ட் என்பவர், அடிக்கடி இங்கிலாந்திலிருந்து பணத்தைச் சுரண்ட ஆரம்பித்தார். ஜான் அரசர் காலத்திலேயே போப்பாண்டவர் இங்கிலாந்தின் மேலாள ராக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்ததால், அவ் வுரிமையைப் பயன் படுத்தியே இப்போது இவரால் பணம் கேட்கப்பட்டது. குறிப் பாக, சமயபதவிகள் காலியாகும்போது அவற்றை அடைவதற் குரிய உரிமைகளேப் போப்பாண்டவர், 'புரொவைசர்' என்ற கட்டணத்தை வசூலித்துக் கொண்டே வழங்கிஞர். பிறிதொரு சமயம் தாம் பேரரசர் இரண்டாம் பிரடரிக் என்பவருடன் செய்து வந்த போருக்குப் பணம் தேவைப்பட்டிருந்த சமயத்தில் போப் பாண்டவர், ஒரு குறுக்கு வழியைக் கையாண்டார். அதன்படி பேரரசருக்குச் சொந்தமாயிருந்த சிசிலித் தீவை அரசரின் இளைய மகஞன எட்மாண்டு என்பவருக்குச் சொந்தமாக்கப் போவ தாகவும், அதற்கு ஈடாக முன் கூட்டியே மூன்ரும் ஹென்றி தமக்கு 50,000 பவுன்களேக் கட்டணமாகத் தரவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டதால், இதுவும் கொடுக்கப்பட்டிருந்தது. மற் ருெரு சமயம தமக்குப் பெரிதும் வேண்டிய முந்நூறு ரோமானியப் பாதிரிமார்களுக்கு இங்கிலாந்தில் வேலைவாய்ப்புகள் தரப் படவேண்டுமென்றும் போப்பாண்டவர் கேட்டுக் கொண்டதற் கிணங்கி அரசரும் அவ்வாறே செய்திருந்தார். மேலும், போப் பாண்டவரால் இங்கிலாந்தின் சமய பதவிகளுக்கு அமர்த்தப் பட்டிருந்தவர்கள் ரோமில் இருந்து கொண்டே தங்கள் பதி லாட்கள் மூலமாக வேலைகளேச் செய்து, அதற்கான ஊதியத்தை மட்டும் தவருமல் பெற்று வந்தனர். இத்தகைய முறைகேடுகளே

அனுமதித்து வந்த அரசர் மூன்றும் ஹென்றியின்மீது பிரபுக்களுக்கு ஆத்திரம் ஏற்பட்டிருந்தது.

**ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகள்** *கி.பி. 1258* **(Provisions of Oxford):** நாட்டிலே நிலவியிருந்தஅதிருப்தியைப் போக்குவதற்கும் தங்களுக்குச் சில உரிமைகளைத் தேடிக் கொள்வதற்கும் அந்நியர்களின் அறிவுரையால் ஆட்சி நடத்திவரும் அரசரைக் கட்டுப்படுத்துவதற்கும் கி.பி. 1258ஆம் ஆண்டு மே மாதம் 3ஆம் நாள் சைமன் பிரபுவின் தலைமையில் பிரபுக்கள் ஒன்றுகூடி ஆலோசனை நடத்தினர்; முடிவில் சில அவசரமான சீர்திருத்தங்களைக் கொண்டுவரும்படி அரசர் வற்புறுத்தப்பட வேண்டுமென ஏற்பாடாயிற்று, சைமன்பிரபு, கிளௌசெஸ்டர் பிரபு, வால்டர் பிரபு என்ற மூவரின் தலைமையில் இருபத்துநால்வர் கொண்ட பிரபுக்கள் குழுவொன்றும் அமைக்கப்பட்டது. இப் பிரபுக்களே தாங்கள் தயாரித்திருந்த சீர்திருத்தப் பட்டியலை இதே ஆண்டு ஜூன் மாதம் 11ஆம் நாள் ஆக்ஸ்ஃபோர்டு (**Oxford**) நகரில் அரசரைச் சந்தித்துச் சமர்ப்பித்துக் கொண்டனர். மறுப்புரைத்து எதிர்ப்பதால் எவ்விதப் பயனும் தமக்குக் கிடைக்காது என உணர்ந்துகொண்ட அரசர், உடனுக்குடன் பிரபுக்களடங்கிய சபையொன்றைக் கூட்ட இசைந்தார். இதுவே ஆக்ஸ்ஃபோர்டு மன்றம் என அழைக்கப்பட்டது.

இம் மன்றத்திற்கு வந்திருந்த பிரபுக்கள் கவசமணிந்து ஆயுதங்களைத் தாங்கி வந்திருந்ததால் இவர்களை 'பைத்தியக்காரர்கள்' என்றும் இம் மன்றத்தை 'பைத்தியக்கார மன்றம்' (**Mad Parliament**) என்றும் கிண்டலாக அரசரின் ஆதரவாளர்கள் அழைத்தனர்.

இம் மன்றத்திற்கு அழைக்கப்பட்டிருந்த பிரபுக்கள் அதுவரையில் அரசரால் செய்யப்பட்டிருந்த தவறுகளைச் சுட்டிக்காட்டினர். அந்நியர்களுக்கு அரசர் ஆதரவளித்தது, வரிச்சுமை, போப்பாண்டவரின் தலையீடு, திறமையற்ற ஆட்சி போன்ற குறைகள் கண்டிக்கப்பட்டன. இக் குறைகளை எல்லாம் போக்கி நாட்டுக்கு ஒரு நல்ல ஏற்பாடு செய்யும் வகையில் அதற்கான ஒரு திட்டத்தைத் தயாரிக்க வேண்டி இப் பிரபுக்கள் தங்களால் ஏற்கனவே ஏற்படுத்தப்பட்டிருந்த 24 பேர்களடங்கிய குழுவுக்குப் பணித்தனர்.

இந்த 24 பேர்களடங்கிய குழுவே ஓர் அரசியலமைப்புத் திட்டத்தை உருவாக்கியது. இதனையே 'ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகள்' என அழைத்தனர்.

நாட்டின் நிர்வாகம் அரசரின் பெயரால் நடத்தப்படவேண்டு மென்றும் நிர்வாகப் பொறுப்புகள் பிரபுக்களடங்கிய சில குழுக் களிடையே பிரித்துவிடப்பட வேண்டுமெனவும் இவ் வேறுபாடு வலியுறுத்தியது. இதன்படி, 15 பேர்கள் கொண்ட ஒரு நிலையான குழு அமைக்கப்பட்டது. அரச காரியங்கள், நிர்வாகப் பணிகளை மேற்பார்வையிடுதல், அரசருக்கு ஆலோசனை கூறுதல், முக்கிய அதிகாரிகளைக் கட்டுப்படுத்துதல் போன்ற முக்கிய வேலைகள் இக் குழுவுக்கு அளிக்கப்பட்டன.

இக் குழுவில் அரசர் கட்சியைச் சார்ந்த 6 அங்கத்தினர்களும், பிரபுக்கள் கட்சியைச் சேர்ந்த 9 அங்கத்தினர்களும் இருந்தனர். இக் குழுவைச் சார்ந்த உறுப்பினர்கள் அடிக்கடி சபைக் கூட்டங் களில் கலந்துகொள்ள வேண்டியிருந்ததால், அந்த நிர்பந்தத்தி லிருந்து தங்களைக் காத்துக்கொள்ள வேண்டி இன்னொரு மாற்றுக் குழுவும் இவர்களால் நியமிக்கப்பட்டது.

இந்த இரண்டாவது குழுவின் அங்கத்தினர்களாகப் பன் னிருவர் (12) இருந்தனர். ஆக 15 பேர்களடங்கிய முதல் குழுவும் 12 பேர்களடங்கிய இரண்டாவது குழுவும் ஆண்டுக்கு மும்முறை கூடி அரச நிர்வாகப் பணிகளை மேற்பார்வையிட வேண்டும். இவ்விரு குழுக்களுக்கு அடங்கியே நாட்டின் முக்கிய அதிகாரி களான ஜஸ்டிஷியர், சான்சலர், ஸ்டிவர்டு, மார்ஷல் போன்றோர் செயல்படவேண்டும்.

திருச்சபைபற்றிய பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண 24 பேர் கொண்ட மற்றொரு குழுவும் நியமிக்கப்பட்டது. அரசரின் கட்சியைச் சேர்ந்த 12 பேர்கள் பிரபுக்கள் கட்சியைச் சேர்ந்த 12 பேர்கள் இதில் அங்கத்தினர்களாக இருந்தனர்.

அரசர் கேட்கும் உதவிப்பணம்பற்றிய விவகாரத்தைத் தீர்க்க 24 பேர்கள் கொண்ட நான்காவது குழுவொன்றும் அமைக்கப்பட்டிருந்தது.

மேலே குறிப்பிடப்பட்ட 4 குழுக்களில் முதல் இரண்டு நிரந்தர ஏற்பாடாகவும், கடைசி இரண்டு (அவசியமான காலத்திற்கு) தற்காலிக ஏற்பாடாகவும் அமைந்திருந்தன.

இந்த 4 குழுக்களும் பிரபுக்களின் பிரதி நிதிகளடங்கிய உயர் ஆலோசனைச் சபைக்குப் பொறுப்பு உள்ளவையாக ஆக்கப்பட்டன.

சுருங்கக் கூறின், ஆட்சி அரசரின் பெயரால் நடத்தப்பட்ட போதிலும், அதிகாரங்கள் பிரபுக்களின் பிரதிநிதிகளிடத்தே ஒப்படைக்கப்பட்டிருந்தன. ஆகவே, ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாட்டினுல் நடைமுறைக்குக் கொண்டுவரப்படுவதாயிருந்த அரசியல் முறை பிரபுக்களைக் கொண்ட சிறு குழு ஆட்சியாகவே (Baronial Oligarchy) இருந்தது.

**வெஸ்ட்மின்ஸ்டர் ஏற்பாடு :** பிரபுக்களின் உரிமைகளை மட்டும் வற்புறுத்தும் முறையாக அமைந்திருந்த இவ்வேற்பாட்டை இவர்களுக்கு அடுத்த நிலையிலிருந்த நைட்டுகள் ஏற்றுக்கொள்ளத் தயங்கினர், ஆகவே, நைட்டுகளைத் திருப்திப்படுத்த வேண்டி பிரபுக்கள் இன்னொரு ஏற்பாட்டைச் செய்தனர். இதுவே வெஸ்ட்மின்ஸ்டர் ஏற்பாடுகள் (Westminster Provisions) என அழைக்கப்பட்டது. இதன்படி, கீழ்மானியதாரர்களான நைட்டுகளுக்குச் சில உரிமைகள் வழங்கப்பட்டன.

**ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாட்டின் சிறப்பு :** ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகளை அரசர் ஒப்புக் கொண்டிருந்ததால் நாட்டில் வரம்பிற்குட்பட்ட முடியாட்சி (Limited Monarchy) ஏற்பட வழி உண்டாகியிருந்தது. ஆயினும், சபலபுத்தி கொண்ட அரசர் எத்தனைக் காலம் இவ்வேற்பாட்டை மதித்து நடப்பாரென்பதும் கேள்விக்குறியாக இருந்தது.

இவ் வேற்பாடு நாட்டிலுள்ள குறைகளை எல்லாம் நீக்கிவிடவில்லையெனினும், முக்கியமாக இந் நாட்டில் பதவிகளையும் பட்டங்களையும் கொண்டிருந்த அயல் நாட்டினரை விரட்டியடித்தது.

எவ்விதச் சச்சரவுமின்றி அரசருடைய அதிகாரத்தை அவரது கைகளிலிருந்து பறித்துவிட்ட சாதனையாக இவ் வேற்பாடு அமைந்தது.

மேலும், அவல ஆட்சியை நடத்தி வந்த ஓர் அரசரிடமிருந்து அதிகாரத்தைப் பறித்து, மக்களின் ஒரு வகுப்பின் (பிரபுக்கள்) பிரதிநிதிகளடங்கிய சபைக்கு அரசாங்கத்தை ஒப்படைத்திருந்த அதிமுக்கிய அரசியல் சாதனையாக ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகள் அமைந்திருந்தன.

மகாசாசனத்தினுல் ஓரளவு வற்புறுத்தப்பட்டிருந்த 'வரம்பிற்குட்பட்ட மன்னர் ஆட்சி' என்னும் கோட்பாடு இவ்வேற்பாட்டினுல் விளக்கி உரைக்கப்பட்டிருந்தாலும் இறுதியில் ஏற்பட்டிருந்தது என்னவோ பிரபுக்களின் தனி ஆட்சியே. இப்

பிரபுக்களின் ஆட்சியை எதிர்த்து நாளடைவில் பிரபுக்களிடையே தகராறுகள் தோன்றலாயின.

**மூன்றும் ஹென்றி பிரபுக்கள் சண்டை:** பதினைந்து பேர் கொண்ட பிரபுக்களின் குழுவினால் நடத்தப்பட்ட ஆட்சி நாளாக ஆக, முன்பு மன்னர் நடத்திய ஆட்சியைவிட எதேச்சாதிகார ஆட்சியாக மாறவும் மக்கள் நம்பிக்கை இழக்கலானார்கள். பிரபுக்களின் மொத்த பிரதிநிதிகளடங்கிய உயர் ஆலோசனைச் சபைக்கு இக் குழு கட்டுப்படாமல் தன்னிச்சையாக அதிகாரங்களைப் பிரயோகிக்க முற்பட்டதால், பிரபுக்களே இவ்வாட்சியை ஒழிக்கத் தீர்மானித்தனர். பிரபுக்களிடம் கி.பி. 1258ஆம் ஆண்டில் காணப்பட்டிருந்த ஒற்றுமை இப்போது மறைய ஆரம்பித்தது.

இத் தருணத்தில் பிரபுக்களுக்கு லீஸ்ட்டர் பிரபுவான சைமன் (மான்ட்போர்ட்), கிளௌசெஸ்ட்டர் பிரபுவான இராபர்ட் என்ற இரு தலைவர்களிருந்தனர். இவர்களுக்கிடையேயும் கொள்கை வேறுபாடுகள் உண்டாகி இருந்தன. இனி, சைமனும் ரிச்சர்டும் ஒற்றுமையாகச் சேர்ந்து எவ்விதச் செயலையும் மேற்கொண்டு கலந்துகொள்ள முடியாத நிலை ஏற்பட்டதும் இதைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ள அரசர் நினைத்தார்.

ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகளைத் தம்மிடமிருந்து பிரபுக்கள் வலுக்கட்டாயமாகப் பெற்றதை நேர்மையற்றதாகக் கருதிய அரசர், அதை மீறும் செயல்களிலே ஈடுபடலானார். முதல் கட்டமாகத் தமக்கு ஆதரவாக இருந்த சில பிரபுக்களையும் அரண்மனை அதிகாரிகளையும் கொண்டு தமக்கொரு கட்சியைத் தேடிக் கொண்டார். அரசரின் மூத்த குமாரரான இளவரசர் எட்வர்டும் தம் தந்தைக்கு இப் பணியில் மிகவும் உதவலானார். இங்ஙனமாக, தமக்கென்று ஓர் ஆதரவைத் தேடிக்கொண்ட அரசர், கி.பி. 1261ஆம் ஆண்டில் தம்மால் முன்பு ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகளை நிராகரித்தார். மன்னரின் நயவஞ்சகத்தால் கொதிப்படைந்த பிரபுக்கள், ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகளுக்குத் தங்களைக் காவலர்களாகக் கருதிக் கொண்டு சைமன் பிரபுவின் தலைமையில் எதிர்க்கட்சியொன்றை அமைத்துக் கொண்டனர்.

அரசரின் கட்சி ஒரு பக்கம்; பிரபுக்களின் 'தேசியக் கட்சி' (National Party) மற்றொரு பக்கம்; நாட்டிலே ஓர் உள்நாட்டுப் போர் மூள்வதற்கான பயங்கர அறிகுறிகள் தோன்றலாயின. இந் நிலையிலும் போர் தவிர்க்கப்படுவதற்கான சமரச முயற்சியும் எடுத்துக் கொள்ளப்பட்டேயிருந்தது. இதன்படி இரு கட்சியினரும் தங்கள் அபிப்ராயங்களை ஒரு நடுவருக்கு எடுத்துரைக்க

வேண்டுமென்றும் அந்த நடுவரின் தீர்ப்பு இரு கட்சிகளையும் கட்டுப்படுத்துமெனவும் ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த நடுவராக ஃபிரெஞ்சு அரசர் ஒன்பதாம் லூயி ஒப்புக் கொள்ளப் பட்டார். இரு கட்சியினரின் வழக்குகளைக் கேட்டறிந்த ஒன்பதாம் லூயி, கி.பி. 1264ஆம் ஆண்டில் தம் தீர்ப்பை ஆமியன்ஸ் நகரில் அறிவித்தார். ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகள் மூன்ரும் ஹென்றியைக் கட்டுப்படுத்தாதென்றும், ஆயினும் மகாசாசனத்தின் சில அம்சங்களை மதித்து இனி, அரசர் ஆள வேண்டுமென்பதுமான தீர்ப்பாகவே அஃது அமைந்திருந்ததால், சைமனின் தலைமையிலிருந்த தேசிய பிரபுக்கள் கட்சி இத் தீர்ப்பை ஒப்புக்கொள்ள மறுத்தது. அரசரின் எதிர்ப்புக் கேந்திரமாக இருந்த இலண்டன் மாநகரமும் சைமன் கட்சியையே ஆதரித்தது. இனி, போர் தவிர்க்க முடியாதென்ற நிலையில் இரு கட்சியினரும் பிளவுண்டவர்களாக நாட்டில் தங்களுக்கு ஆதரவு தேடலாயினர்.

கி.பி. 1264ஆம் ஆண்டு வசந்த காலத்தில் போர் மூண்டபோது அரசரின் பலமே ஓங்கியிருந்தது. நார்த்தாம்டன், நாட்டிங்காம், டட்பரி போன்ற இடங்களைக் கைப்பற்றிக்கொண்டு அரசரின் படைகள் லீவிஸ் (Lewes) என்னுமிடத்தில் சைமனின் படைகளைச் சந்தித்தன. இச் சண்டையில் அரசரின் படைகள் தோற்கடிக்கப் பட்டதோடு மூன்ரும் ஹென்றியும் இளவரசர் எட்வர்டும் சைமன் பிரபுவால் சிறைப்படுத்தப்பட்டனர். சைமன் பிரபு இதை அடுத்து நாட்டின் அதிபரானர்.

**சைமன் ஆதிக்கம் பெறுதல் (கி.பி. 1264-1265)**

லீவிஸ் போர்க்களத்தில் வெற்றி வாகை சூடியிருந்த சைமன் டி-மான்ட்ஃபோர்டு, இங்கிலாந்தின் ஆட்சியாளர்களிலே முக்கிய மான ஒரு நபராகக் கருதப்படுகின்ருர்.

ஃபிரான்சு நாட்டில் பிரபுக்கள் குடியில் பிறந்திருந்த சைமன், இங்கிலாந்திற்கு அரசர் மூன்ரும் ஹென்றியினல் வரவழைக்கப் பட்டிருந்த அந்நியர்களிலே ஒருவராவர். அறிவும் ஆற்றலும் பெற்றிருந்த சைமன், அரசரின் சகோதரியை மணந்து (கி.பி.1238) ஹென்றியின் அவையிலே நல்ல ஒரு செல்வாக்கைப் பெற்றுத் திகழ்ந்தார். சைமனின் திறமையை நன்கு மதிப்பிட்டிருந்த அரசரும் இவரை லீசெஸ்டருக்கு எர்லாக அமர்த்தியிருந்தார். கி.பி. 1248ஆம் ஆண்டில் சைமன் ஆளுநராகக் காஸ்கனி (Gascony) நாட்டுப் பகுதிக்கு அனுப்பப்பட்டார். சுமார் ஐந்து ஆண்டுகள் அங்கு அதிகாரம் செலுத்திய சைமன், தம் பதவிக் காலத்தில்

சற்றுக் கடுமையாக நடந்துகொண்டு ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டினர். ஆயினும், இவரால் அடக்கப்பட்டிருந்த சில காஸ்கனி பிரபுக்கள், சைமனுக்கெதிராக அடிக்கடி அரசரிடம் முறையிட்டு வந்தனர். இறுதியில் பொறுமை இழந்த மூன்றும் ஹென்றி, கி.பி. 1253 ஆம் ஆண்டில் சைமனைப் பதவியிலிருந்து நீக்கி விட அரசரிடம் வெறுப்புக் கொண்டவராக இவர் இங்கிலாந்தை வந்தடைந்தார்.

அரசர் மூன்றும் ஹென்றியின் முறையற்ற ஆட்சியால் பிரபுக்கள் குமுறி வந்தபோது, சைமன் இவர்களுடன் சேர்ந்த தன்றி; பிரபுக்களின் முக்கிய தலைவருமானார். அரசரின் அதிகாரங் களைக் குறைக்கும் வகையில் எழுதப்பட்ட ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடு களை உருவாக்கியிருந்த அந்த 24 பிரபுக்களிலே சைமனும் ஒருவ ராவார். ஆரம்பத்தில் பிரபுக்களின் குழுவுக்குக் கட்டுப்பட்டு ஆட்சி நடத்துவதாக ஒப்புக்கொண்டிருந்து பின்னர், அரசர் அதை மீறி நடக்க முயற்சித்தபோது நாட்டிலே உள்நாட்டுப் போர் ஏற்பட்டது, போர்க்கோலம் பூண்டு மூன்றும் ஹென்றியை எதிர்த்த அப் பிரபுகளுக்குச் சைமனே தலைவராயிருந்தார்.

அரசருக்கும் பிரபுக்களுக்குமிடையே தொடங்கியிருந்த அந்த உள்நாட்டுப் போரில் சைமனின் பங்கு மகத்தானதாயிருந்தது.

உள்நாட்டுப் போர்க் காலத்தில் தமக்கும் தம் கட்சிக்கும் பணம் தேடக் கடமை கொண்டவராயிருந்த சைமன், ஒரு சமயம் நானூறு யூதர்களைக் கொன்று அவர்களின் சொத்துகளை அப கரித்துக்கொண்ட அடாத செயலைச் செய்தவராக இருந்தாலும், தம் அரச தந்திரத்தால் நாட்டின் முக்கிய பகுதிகளிலே ஆதரவைப் பெற்றவராகவும் இருந்தார். லண்டன் மாநகர மக்கள், சைமனை அரசரின் கொடுங்கோலாட்சியிலிருந்து தங்களை விடுவிக்க வந்தவரென்றே போற்றினர். உள்நாட்டுப் போரின் இறுதிக் கட்டமாக அமைந்த லீவிஸ் சண்டையில் சைமன் காட்டிய விவேகமும் வீரமுமே பிரபுக்கள் கட்சிக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்தது.

**லீவிஸ் சண்டை:** சஸ்ஸெக்ஸ் பகுதியிலிருந்த லீவிஸ் என்ற இடத்தில் அரசருடைய படைகள் சண்டைக்காகக் காத்திருந்தனர். துணைக்கு இளவரசர் எட்வர்டும் அங்கு இருந்தார். எட்வர்டின் படைகளை அரசரின் படைகளிலிருந்து பிரிக்கவேண்டுமென்ற தந்திரத்தில் சைமன் தம் விருதுக் கொடியை (Banners) அருகிலிருந்த ஒரு குன்றின் மீது நட்டு வைக்கச் சொல்லி

யிருந்தார். சைமன் தம் படைகளுடன் அங்குக் காத்திருக்கிறு ரென்று நினைத்த இளவரசர் எட்வர்டு, தம் படையுடன் தந்தையை விட்டுச் சென்றுர். அரசரின் படையில் பாதி வீவிசை விட்டு விலகிச் சென்றதால், எதிர்பாராத வேறு திசையிலிருந்து சைமன் திடீரென்று அரசரைத் தாக்கினர். தொடர்ந்து நடந்த இச் சண்டையில் (கி.பி. 1264 மே 14) மூன்றும் ஹென்றி தோற்கடிக்கப்பட்டுச் சிறைபிடிக்கப்பட்டார். அமமியே காற்றில் பறந்தபோது இலவம் பஞ்சு எம்மாத்திரம் என்ற முதுமொழிபடி இளவரசர் எட்வர்டும் பிடிபட்டுவிட்டார்.

**சைமன் அதிகாரம் பெறுதல்:** அரசர் மூன்றும் ஹென்றியின் பெயரால் ஆட்சியை நிர்வகிக்க 9 பிரபுக்கள் அடங்கிய ஆய்வுக் குழு (Committee) ஒன்று நிறுவப்பட்டிருந்தபோதிலும் சர்வ அதிகாரங்களுக்கும் பொறுப்பாக சைமனே இருந்தார்.

நாட்டின் சர்வ அதிகாரங்களையும் பெற்றிருந்த சைமன்-டி-மான்ட்ஃபோர்டு, தாம் ஆதிக்கம் பெற்றிருந்த அந்த ஓர் ஆண்டுக் காலத்தில் (கி.பி. 1264–1265) அதிகார வெறிபிடித்த போர் வீரராக, அல்லது மக்கள் உரிமையிலே நாட்டங் கொண்ட நல்லாட்சியாளராக நடந்து கொண்டாரா; அல்லது பிரபுக்களின் கட்சிக்கு மட்டும் தலைவராக இருந்தாரா; அல்லது பாமர மக்களுக்கும் தலைவராக விளங்கினுரா என்பன சர்ச்சைக்குரிய விவாதங்களாயினும் இவரது காலம் ஒரு வகையிலே வரலாற்றுச் சிறப்புப் பெற்றதாகவே அமைந்துள்ளது.

**சைமனின் மன்றம் கி.பி. 1265 :** ஃபிரான்சு நாட்டில் பிறந்து வளர்ந்த அந்நியரான தம்மை எத்தனைக் காலம் ஆங்கில மக்கள் ஆட்சியாளராக ஏற்றுக்கொண்டிருப்பார்களென்ற ஐயம் சைமனுக்கு இருக்கத்தான் செய்தது. அவரோ ஒரு சாதாரண பிரபுக் குடியைச் சார்ந்தவர்; நாட்டை ஆண்டுவந்த அரசரும் (ஹென்றி III), அடுத்து ஆளவேண்டிய அரசரும் (எட்வர்டு) சிறையிலிருக்க, தம் ஆட்சியை மக்கள் ஏற்றுக் கொள்வார்களா என்ற திகிலும் சைமனுக்கு உள்ளூர இருக்கத்தான் செய்தது. தம் ஆட்சி நீடிக்க வேண்டுமென்றுல், தம் அதிகாரம் நிலைத்து இருக்கவேண்டுமானல், அதற்கு மற்ற முக்கிய பிரபுக்களின் உதவி தேவையென்பதையும், தமது ஆட்சி மதிக்கப்படவேண்டுமானுல் மக்களின் பிரதிநிதிகளடங்கிய சபையொன்றினைக் கூட்டி, அதன் ஆலோசனையின் பேரில் ஆட்சி நடத்தவேண்டிய அவசியத்தையும் சைமன் தெரிந்து வைத்திருந்தார். இதன் விளைவாக, இங்கிலாந்து

அரசியல் அமைப்பிலே ஒரு சோதனை (Constitutional experiment) செய்யப்பட்டது.

கி.பி. 1265 ஆம் ஆண்டு சைமனால் கூட்டப்பட்ட இம் மன்றக் கூட்டத்திற்கு வழக்கப்படி பிரபுக்களும் சமய குருமார்களும் வரவழைக்கப்பட்டிருந்ததோடு, முதல் முறையாக மக்களுக்கும் பிரதிநிதித்துவம் (Representation) கொடுக்கப்பட்டிருந்தது. இக் கூட்டத்திற்கு 5 எர்ல்கள், 18 பெரும் பிரபுக்கள், 118 திருச்சபை அங்கத்தினர்கள், எல்லாவற்றிற்கும் மேலாகத் தமக்கு ஆதரவளித்த ஷயர்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் பரோக்களிலிருந்தும் (Boroughs) முறையே இரண்டு பிரதிநிதிகளும் வரவழைக்கப்பட்டிருந்தனர்.

இங்கிலாந்தின் வரலாற்றிலேயே முதன் முறையாகப் பாமர மக்களின் பிரதிநிதிகள் மற்ற பிரபுக்களுடனும் பிஷப்புகளுடனும் சேர்ந்து அமர்ந்து ஒருங்கே அரசியல் அலுவல்களை அணுகுமாறு சைமனல் கூட்ட ப்பட்ட இம் மன்றம் வழிவகுத்துக் கொடுத்தது.

இங்கிலாந்தின் எல்லா ஷயர்களிலிருந்தும்; நகரங்களிலிருந்தும் பரோக்களிலிருந்தும் பிரதிநிதிகள் வரவழைக்கப்படவில்லை யெனினும் பிரபுக்களுடனும் குருமார்களுடனும் மக்களின் பிரதிநிதிகளும் ஒருங்கே வரவழைக்கப்பட்டு ஒருங்கே செயல்படச் சைமனல் வாய்ப்பளிக்கப்பட்டதால், இவர் வரலாற்றுப் புகழ் பெறுகிறார். சைமனின் இம் முயற்சியில் சுயநலம் அதிகமிருந்தாலும், இவர் செய்த இந்த அரிய சேவைக்குச் சைமனைப் 'பாராளு மன்றத்தின் (காமன்ஸ் சபை) தந்தை என அழைக்கின்றனர்.

சைமனின் மன்றம் ஆட்சிச் சபையாக இல்லாமல் ஓர் ஆலோசனை அமைப்பாகவே இருந்தது. இம் மன்றம் என்ன சாதித்தது என்பதைவிட, யார் யாரை அங்கத்தினர்களாகக் கொண்டிருந்ததென்பதே (Not what it did but what it was) நினைவில் கொள்ள வேண்டியதொன்று. இம் மன்றம் பாமரக் குடிமக்களுக்கும் ஆட்சிப்பொறுப்பில் பங்குண்டு என்னும் வழக்கை நடைமுறைக்குக் கொண்டு வந்திருந்தது; இதுமட்டுமன்றி, 'பாராளுமன்றத்தின் அமைப்பு' இப்படித்தானிருக்க வேண்டும் என்று வருங்காலத்திற்குச் சைமனல் கூட்டப்பட்டிருந்த இம் மன்றம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியதெனலாம்.

**சைமனின் வீழ்ச்சி:** சைமன்-டி-மான்ட்ஃபோர்டு ஆட்சி பெற்றிருந்தது ஓர் ஆண்டுக் காலமே தான். இவரது தன்மையும் முரட்டுப் பண்புமே சைமனுக்கு எதிராக அமைந்தன-

தமக்கு ஆதரவளிக்காத பிரபுக்களின் கோட்டைகளை இடித்தும் அவர்களின் சொத்துகளைக் கைப்பற்றியும் சைமன் அவர்களுடைய அதிருப்திக்கும் கோபத்திற்கும் ஆளாகிவிட்டார்; பொறுமையின் காரணமாகவும் சில பிரபுக்கள் இவரை எதிர்க்கலாயினர். மேலும், சைமன் ஓர் அந்நியராதலால், நாள் ஏற ஏற, தேசபற்றுக் கொண்ட ஏனைய பிரபுக்களுக்கும் இவர் மீது கசப்புணர்ச்சி ஏற்பட்டது.

அதிருப்தி அடைந்த பிரபுக்களிலே கிளௌசெஸ்டர் எர்ல் என்பவரும் ஒருவராவர். இவர் அப்போது இங்கிலாந்தில் மிகவும் பலமும் செல்வாக்கும் கொண்டவராக விளங்கினர்.

சைமன், தமக்கு எதிர்ப்பிருந்த மேற்குப் பகுதியான வேல்சுக்குப் படைகொண்டு சென்றிருந்தபோது, காவலில் வைக்கப்பட்டிருந்த இங்கிலாந்தின் இளவரசரான எட்வர்டு தந்திரமாகத் தப்பிவிட்டார். இத்துடன் மட்டுமன்றி, சைமனின்மீது வெறுப்புக் கொண்டிருந்த பிரபுக்களுடன் சேர்ந்து கொண்டார். கிளௌ




ஈவ்ஷாம் சண்டை (1265)

செஸ்டர் எர்லும் தம் வீரர்களுடன் எட்வர்டுக்கு உதவ முன் வந்தார். தமக்கு இங்ஙனம் எதிர்ப்புக் கூடிவிட்ட நிலையில், சைமன் போர்க்களத்திலே தம் விதியை நிர்ணயிக்க முடிவெடுத்தார்.

**ஈவ்ஷாம் சண்டை:** சைமனுக்கும் இவரது எதிர்ப்பாளர்களுக்கும் ஈவ்ஷாம் (Euesham) என்னுமிடத்தில் நடந்த சண்டை வரலாற்று முக்கியத்துவம் பெறுகின்றது.

இளவரசர் எட்வர்டு தலைமையில் குழுமியிருந்த பெரும்படை, ஏற்கனவே கெனில்ஒர்த் (Kenilworth) என்னுமிடத்தில் சைமனின் ஆதரவாளர்களைப் புறங்காட்டச் செய்துவிட்டது. எட்வர்டின் திறமைமிக்க படைத் தலைமையைக் கொண்டிருந்த இப் படை, அடுத்து வொர்ஸ்டர்ஷையரிலுள்ள ஈவ்ஷாம் என்னுமிடத்தில் சைமனின் படைகளை வளைத்துக் கொண்டது. கி.பி. 1265 ஆம் ஆண்டு ஆகஸ்டு 4ஆம் நாளில், இரு தரப்பார்க்கும் கடுமையாக நடந்த இச் சண்டையில் சைமன் வீர மரணம் எய்தினர்.

சைமன் கொல்லப்பட்டபோதிலும், நாட்டு மக்கள் இவரைத் தொடர்ந்து புகழ்ந்தார்கள். 'பொதுநலத்திற்குப் பாடுபட்டதியாகி' என இவருக்குப் புகழ் அஞ்சலி செலுத்தினர்கள். மூன்ரும் ஹென்றியின் வலுவற்ற, அடக்கமற்ற ஆட்சியை மாற்றிப் பாராளுமன்ற ஆட்சி முறைக்கு வழிகோலிய சைமனை, இந் நாட்டு மக்கள் தலைசிறந்த புனிதராகவும் (Saint) வழிபட முன்வந்தனரென்ருல், இவர் இறந்தும் எத்துணைப் புகழ்பெற்ருர் என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ ?

**மூன்ரும் ஹென்றி மீண்டும் பதவி பெறுதல்:** ஈவ்ஷாம் சண்டைக்குப் பிறகு, தம் மகன் இளவரசன் எட்வர்டால் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட மூன்ரும் ஹென்றி, மீண்டும் ஆட்சிப் பீடத்தில் அமர்த்தப்பட்டார். அடுத்த ஏழு ஆண்டுகள் ஆட்சி புரிந்த இம் மன்னரின் காலத்தில், முன்பிருந்த சீர்கேடுகள் தவிர்க்கப்பட்டிருந்தன; நல்லாட்சியும் அமைதியும் இக் காலத்தில் நிலவியிருந்தன.

ஹென்றி அரசர், இறுதியாகக் கி.பி. 1272ஆம் ஆண்டில் காலமானர். அவர் முன்பு கட்டிப் புதுப்பித்திருந்த வெஸ்ட்மின்ஸ்டர் கோயிலிலேயே அடக்கம் செய்யப்பட்டார்.

இவரது தந்தையாரான ஜான் காலத்தில் எழுதப்பட்ட மகாசாசனத்தின் அம்சங்களுக்கும் இவரது மைந்தரும் அடுத்த அரசருமான முதாம் எட்வர்டு காலத்திய மாதிரிப் பாராளுமன்றத்திற்கும் ஓர் இணைப்புக் காலமாகவே இவ் வரசரின் ஆட்சிக் காலம் அமைந்திருந்தது.

# 5. பிளாண்டாஜெனட்டுகள் ஆட்சியின் தொடர்ச்சி

## முதலாம் எட்வர்டு (கி.பி. 1272-1307)

ஈவ்ஷேம் போர்க்களத்தில் சைமனைக் கொன்று, சிறைப்பட்டிருந்த தம் தந்தை மூன்றும் ஹென்றியை விடுவித்துத் தம் குலப் பெருமையை நிலைநிறுத்திப் பெருமைகொண்ட முதலாம் எட்வர்டு, இங்கிலாந்தின் இடைக்கால அரசர்களிலே முக்கியமனவராகவும் தலைசிறந்தவராகவும் மதிக்கப்படுகிறார்.

மூன்றும் ஹென்றி மன்னரின் இரண்டாம் கட்ட ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1265-1272) நாடு நல்ல முறையில் நிர்வகிக்கப் பட்டு, அமைதி நிலவியதாக இருந்ததென்றால், இளவரசரின் மதிநுட்பமும் அரசியல் திறனுமே காரணம் என்பதை மறுக்க முடியாது. தம் தந்தையாரின் ஆட்சியை நிலைநிறுத்துவதில் மன நிறைவு கொண்டிருந்த எட்வர்டு, கி.பி. 127ஆம் ஆண்டில் தம் சில வீரர்களை அழைத்துக் கொண்டு அப்போது மீண்டும் தொடங்கி யிருந்த சிலுவைப் போரில் கலந்து கொள்ளச் சென்றார். சிலுவைப் போரில் பங்கெடுத்துக் கொண்ட கடைசி (அரசராக) ஆங்கிலப் பிரமுகராக எட்வர்டு விளங்கினர் என்பது குறிப்பிடத்தக்கது. ஏக்கர் (புனித பூமியில்) நகரில் தம் வீரச் செயல்களைக் காட்டி விட்டு நாடு திரும்பிக்கொண்டு இருக்கையில் தம் தந்தை ஹென்றி காலமானதை அறிந்தார். தம் வாரிசு உரிமைக்கு எவ் விதப் போட்டியும் இல்லாமையை உணர்ந்த எட்வர்டு, மிகவும் சாவகாசமாகவே இங்கிலாந்தை வந்தடைந்தபோது, வர்ல்டர் கிரே (Walter Grey) என்ற கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பால் இங்கிலாந்தின் அடுத்த மன்னராக முடிசூட்டப்பெற்றார்.

**முதலாம் எட்வர்ட்டின் குணவியல்புகள்:** அறிவு, துணிவு, நேர்மை ஆகிய நற்பண்புகளுக்கு உறைவிடமாக இருந்த எட்வர்டு, அப்போது முப்பத்துமூன்று ஆண்டுகள் நிரம்பப்பெற்றவராக

இருந்தார். தாம் பிறந்ததும் வளர்ந்ததும் இந்த நாட்டின் மண்ணில் தான் என்பதால், எட்வர்டின் எண்ணமும் விருப்பமும் இங்கிலாந்தைப்பற்றியனவாகவே இருந்தன. காண்போர் விரும்பும் வசீகர உருவத்தையும் கேட்பாரை மகிழ்விக்கும் பேச்சுச் சாமார்த்தியமும், எதிர்த்தோரை அடக்கும் வீரப்பண்பும் ஒருங்கே கொண்டிருந்த முதலாம் எட்வர்டு, உருவத்திலும் குணத்திலும் நடத்தையிலும் அரசராகவே காணப்பட்டார். தமக்குத்தாமே வழக்குரைஞராகவும் அரசியல் ஞானியாகவும் இருந்த முதலாம் எட்வர்டு, சிற்சில சமயங்களில் உணர்ச்சிவசப்பட்டவராகவும் பழி வாங்கும் இயல்புடையவராகவும் இருந்தார். அன்பிற்கு உறைவிடமாக இருந்த முதலாம் எட்வர்டு, அச்சத்திற்கும் இருப்பிடமாக இருந்தார். மக்களின் நன்மைகளில் நாட்டம் கொண்டவராகவும் குடும்ப உறவினர்களிடம் பாசம் கொண்டவராகவும் விளங்கிய முதலாம் எட்வர்டு, தாம் நேசித்தவர்களை என்றுமே மறந்ததில்லை. எண்ணத்தின் திண்மையும் பல அரசியல் தகுதிகளையும் கொண்டிருந்த இவ் வரசரின் காலம், இந் நாட்டின் வரலாற்றில் மிகவும் போற்றத்தக்கதாக அமைந்தது.

**முதலாம் எட்வர்டின் குறிக்கோள்:** தம் பாட்டன் ஜான், தந்தை மூன்றும் ஹென்றி ஆகியோரின் ஆட்சிகளில் நேர்ந்திருந்த அவலங்களுக்குத் தாம் ஆளாகமலிருக்கப் பெருமுயற்சிகளை எடுத்துக்கொண்ட முதலாம் எட்வர்டு, மக்களுடைய நலன்களைப் பேணிக் காத்தலைத் தம் தலையாய கடமையாகக் கருதி, அவர்களின் ஒத்துழைப்பையும் பெற்று நல்லாட்சி அமைக்க முனைந்தார்.

இங்கிலாந்து அரசர்களால் இன்னும் முழு ஆதிக்கம் பெற முடியாமல் இருந்த வேல்ஸ், ஸ்காட்லாந்துப் பகுதிகளை வென்று தம் மேலாதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரவேண்டும் என்றும் முதலாம் எட்வர்டு விரும்பினார்.

ஐரோப்பிய அரசியல் அரங்கிலே தமக்கும் தம் நாட்டுக்கும் பெருமை தேடிக்கொள்ளவும் முதலாம் எட்வர்டு நினைத்தார்.

**முதலாம் எட்வர்டின் சட்ட சீர்திருத்தங்கள்**

நாட்டில் நல்லாட்சி அமைத்துத் தம் ஆதிக்கமும் வளரவேண்டுமாயின், முறையான சட்டங்கள் தேவை என்பதை உணர்ந்த இவ் வரசர், அதற்கான காரியத்தில் ஈடுபட்டார்.

இவ் வரசர் அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்து குடிகளின் குறைகளை முதற்கண் தெரிந்து கொண்டார். நன்கு பயிற்சிபெற்ற

சட்ட வல்லுநர்களைக் கொண்டு அக் குறைகளைப் போக்கும் முயற்சியாகப் பல சட்டங்களை இயற்றினார். இவர் செய்திருந்த சீர்திருத்தங்களின் அளவைப் போன்று இங்கிலாந்து வரலாற்றிலேயே (டியூடர் மன்னர் எட்டாம் ஹென்றியைத் தவிர) வேறெந்த மன்னரும் செய்ததாகத் தெரியவில்லை.

படைமானிய முறை காலத்துச் சட்டங்களைத் தேவைக் கேற்ப மாற்றியதோடல்லாமல், அக் காலச் சமூக நலனுக்கேற்பவும் சில புதிய சட்டங்களையும் முதலாம் எட்வர்டு கொணர்ந்திருந்தார். ஆக, எட்வர்டின் சட்டங்கள் இரு வகைகளாகக் காணப்பட்டன; ஒன்று தொகுத்தமைத்தல்; மற்றொன்று ஆக்க முறையான முன்னேற்றத்தை ஏற்படுத்துதல். பழைய கருத்துகளை வகைப்படுத்தி உறுதிப்படுத்தும் வகையிலும் சில புரட்சிகரமான கருத்துகளை எடுத்துரைக்கும் வகையிலும் இவர் காலத்தில் கொண்டு வரப்பட்ட எண்ணற்ற சட்டங்கள் அமையலாயின.

பிரபுக்கள், திருச்சபை ஆகியவற்றின் அதிகாரங்களைக் குறைத்து, அரசரின் அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்ளும் வகையிலும், நாட்டில் அமைதியைக் காத்து நல்லாட்சியை உருவாக்கும் முறையிலும் அமைந்திருந்த இச் சட்டங்கள், எங்தெந்த இடர்களிலிருந்து முதலாம் எட்வர்டு மன்னரால் வெளியிடப்பட்டிருந்தனவோ அந்தந்த இடர்களின் பெயர்களையே கொண்டனவாக இருந்தன.

**நூறு சுருள்கள் (Hundred Rolls):** *கி.பி. 1674ஆம் ஆண்டில் கவுன்டிகளின் பொதுவான நிலவரத்தைக் கண்டறிய விசாரணைக் குழு ஒனறை முதலாம் எட்வர்டு நியமித்து, அரசருடைய உரிமைகள், நிலங்கள், அதிகாரிகளின் முறைகேடுகள், நீதிக்குறுக்கீடுகள் போன்ற பலவற்றைப்பற்றித் தமக்கு வேண்டிய செய்திக் குறிப்புகளைச் சேகரித்துக் கொண்டார். இவற்றை 'நூறு சுருள்கள்' (Hundred Rolls) என அழைத்தனர். வருங்காலப் பல சட்டங்களுக்கு இந்த நூறு சுருள்களே அடிப்படையாக அமைந்தன.*

**ரேஜ்மன் சட்டம்:** *கி.பி. 1276ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்ட ரேஜ்மன் சட்டம், குற்றங்களைப் பாகுபடுத்தி, அவற்றிற்குள்ள வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டியது.*

**கிளௌஸெஸ்டர் சட்டம்:** *கி.பி. 1278ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட 'கிளௌஸெஸ்ட்டர் சட்டம்' (Statute of Gloucester) மானியப் பிரபுக்களின் தலைமையில் நடத்தப்பட்ட நீதிமன்றங்களின்*

அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் வெகுவாகக் குறைத்தது. நிலமானியப் பிரபுக்களால் நாட்டிலே செயல்பட்டு வந்த தனியார் நீதிமன்றங்கள், 'எந்த உரிமையின்' அடிப்படையில் இயங்கி வந்தன என்று கண்டறிய அரசர் முதலாம் எட்வர்டு, 'குவா வாரன்டோ' (Qua Warranto) என்ற ஆணையைப் பிறப்பித்தார். குவா வாரன்டோ என்ற சொற்றொடருக்கு 'எந்த உரிமையின் பேரில்' என்பது பொருளாகும். இவ் வாணைகளால் பெரும் பிரபுக்களுடைய அதிகாரங்களின் மூலங்கள் (sources) வினவப்பட்டன. அரசாங்க சாசனத்தின் மூலமாக வழங்கப்படாத நில மானிய உரிமைகளை அப் பிரபுக்களிடமிருந்து பறித்துக்கொள்ளவே எட்வர்டு இவ்வாணைகளைப் பிறப்பித்தார். சில பிரபுக்கள் தங்களின் பட்டாக்களைக் காட்டி உரிமைகளைக் காத்துக் கொண்டனர். சிலர், தாங்கள் பரம்பரையாகவும் சந்தோஷமாகவும் அனுபவித்து வந்த மானிய உரிமைகளை நிரூபிக்க முடியாமல் போனபோது, இவர்களின் உரிமைகள் பறிக்கப்பட்டன. இம் முறை பிரபுக்களிடையே பெரும் எதிர்ப்பைக் கிளப்பியது. வாரன் (Earl Warenne) என்னும் பெரும் நிலப்பிரபுவிடம் 'நீர் எந்த உரிமையின் பேரில் (நிலமானிய) நீதி அதிகாரத்தைச் செலுத்துகிறீர்?' என அரசரின் பணியாட்கள் கேட்டபோது, அவர் தம் உடைவாளைக் காட்டி, 'என்னுடைய முன்னோர்கள் இதுபோன்ற வாளைக் கொண்டே இந்த நிலங்களையும் மற்ற மானிய உரிமைகளையும் பெற்றிருந்தனர். இந்த வாளைக் கொண்டே என் உரிமைகளையும் காத்துக் கொள்வேன்' என்று துடுக்காகவே பதில் சொன்னார். அப்போதைக்கு வாரன் போன்ற பிரபுக்களுடன் சச்சரவிட்டுக் கொள்ள விரும்பாத முதலாம் எட்வர்டு, சமரசத் திட்டமாக முதலாம் ரிச்சர்டு மன்னர் முடிசூட்டிக் கொண்ட நாளிலிருந்து மானிய உரிமைகளை அனுபவிக்கும் பிரபுக்களை இச் சட்டம் பாதிக்காது என்று அறிவித்து, உடன்பட்டவர்களை மட்டும் இச் சட்டத்திற்கு உள்ளாக்கினார்.

**மார்ட் மெயின் சட்டம்:** கி.பி. 1279ஆம் ஆண்டில் 'மார்ட் மெயின் சட்டம்' (Statute of Mortmain) அல்லது மரித்த மானியச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. நல்லெண்ணமுள்ள பெரியோர்களாலும், கொடையாளிகளாலும் திருச்சபைக்கு ஏராளமான மானியங்களும் இதரச் சொத்துகளும் சேர்ந்து வந்ததால், இதன் அதிகாரம் வரம்பில்லாமல் வளர்வதை முதலாம் எட்வர்டு உணர்ந்தார். அதுமட்டுமன்றி, திருச்சபைக்கு மானியங்களாகக் கொடுக்கப்பட்டிருந்த நிலங்களிலிருந்து அரசருக்கு அதுவரை கொடுக்கப்பட்டுவந்த பணமும் நிறுத்தப்பட்டிருந்தது. இதையெல்லாம் தவிர்க்கவே இச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இதன்

படி அரசருடைய அனுமதி இல்லாமல் புதிய மானியங்களின் திருச் சபைக்கு இனமாகக் கொடுக்கப்படுவதும் தடைசெய்யப்பட்டது.

**சர்கம் ஸ்பெக்டே அகாடிஸ்**

இச் சட்டத்தின்படி, திருச்சபையைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வந்திருந்த அரசர், மேலும், அதன் நீதி நிர்வாகத் தையும் சீர்படுத்த நினைத்தார். கடன் ஒப்பந்தம் போன்ற சில சிவில் வழக்குகளைத் திருச்சபை நீதிமன்றங்கள், தங்களின் விசாரணைக்குப் பின்னர், அரசரின் நீதிமன்றத்திற்கு அனுப்ப வேண்டும் என்ற நிபந்தனையை அரசர் விதித்தார். இதனால் திருச்சபையினர் ஆத்திரமடைந்தபோது, எட்வர்டு மன்னர் சர்கம் ஸ்பெக்டே அகாடிஸ் (Circum Specte Agatis) என்ற மற்றொரு மாற்றுச் சட்டத்தைக் கொணர்ந்தார். இதன்படி, திருச் சபை நீதிமன்றங்களில் விசாரிக்கப்படும் வழக்கு விசாரணை மிகுந்த விழிப்புடன் நடத்தப்படவேண்டுமென வலியுறுத்தப் பட்டது.

**வணிகர் சட்டம்** : கி.பி. 1283 ஆம் ஆண்டில் 'வணிகர் சட்டம்' (Statute of Merchants) அல்லது 'ஆக்டன் பர்னல்' (Acton Burnal) என்ற சட்டமும் கொண்டு வரப்பட்டது. வாணிபத்திற்கு வாங்கப் படும் கடன்களைச் சுலபமான தவணைகளில் தீர்க்க வழி செய்த இச் சட்டம் வாங்கிய கடனைத் திருப்பிக்கொடுக்க தவறியவர்களையும் தண்டிக்கச் செய்தது. கடனாளிகளின் சொத்துகளைப் பறிமுதல் செய்யலாமென்றும், அவர்களைச் சிறையிலடைக்கலாமென்றும் இச் சட்டம் வலியுறுத்தியதால் கடன் கொடுத்துவிட்டுத் திரும்பப் பெற முடியாமல் திண்டாடிக் கொண்டிருந்த வியாபாரிகளுக்கு மிகவும் அனுகூலமாக இருந்தது.

**ருட்லான் சட்டம்** : கி.பி. 1284 ஆம் ஆண்டில் நிறைவேற்றப் பட்ட ருட்லான் சட்டம், அரசருடைய நீதிபதிகள். நீதித்துறை வல்லுநர்களின் பணிகளை எளிதாக்கும் வகையில் அமைந்தது.

**வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம்** : கி.பி. 1285 ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்டிருந்த 'டி டானிஸ் கண்டிஷன் ஆலிபஸ்' (De Donis Condition Alibus) அல்லது இரண்டாம் வெஸ்ட் மின்ஸ்டர் சட்டம் (Statute of Westminster II) முதலாம் எட்வர்டு மன்னரால் கொண்டுவரப்பட்ட சட்டங்களில் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. 'டி டானிஸ் கண்டிஷன் ஆலிபஸ்' என்னும் சொற்றொடர், 'நிபந்தனைக்குட்பட்ட சொத்து மாற்றம்' என்ற

பொருளைக் குறிக்கின்றது. சொத்துகளைப் பிறருக்கு எழுதி வைக்க விரும்புகிறவர்களைச் சில நிபந்தனைகளுக்கு உட்படுத்திய இச் சட்டம் நிலக்கிழார் ஒருவர் இறந்துபோனால், அவரது மொத்த நிலங்களும் மூத்தபிள்ளைக்கோ, அல்லது இருக்கும் பிள்ளைகளில் மூத்தவருக்கோ உரிமையாக்கப்படவேண்டுமென வற்புறுத்தியது. 'பிரபுக்களின் குடும்பம்' என்ற போலிக் கௌரவத்தில் சோம்பித்திரியாமல், மற்ற பிள்ளைகள் இச் சட்டத்தினால் தங்களின் வாழ்க்கையை வளமாக்கிக்கொள்ள இராணுவம், வியாபாரம் போன்ற இதரத் துறைகளில் ஈடுபாடுகொள்ள உந்தப்பட்டனர். மேலும், பிள்ளைகள் அனைவருக்கும் நிலங்கள் பங்கிட்டுக் கொடுக்கப்பட வேண்டிய கட்டாயமில்லாததால், பெரும் பண்ணைகள் பிளவுபடாமல் இருக்க வாய்ப்பு ஏற்பட்டது.

**வின்செஸ்டர் சட்டம் :** இதே ஆண்டில் (கி. பி. 1285) 'வின்செஸ்டர் சட்டம்' (Statute of Winchester) என்பதும் நிறைவேற்றப்பட்டது. இதன்படி, விசாரணைக்குட்படுத்தப்படவேண்டிய குற்றவாளிகளை மறைத்து நேரிடையாகவோ மறைமுகமாகவோ அடைக்கலம் தரக்கூடாதென்றும், அப்படிச் செய்பவர்களுக்கு மிகக் கடுமையான தண்டனைகள் தரப்படுமெனவும் இச் சட்டம் கூறியது. மேலும், தமது அதிகார எல்லைக்குள் நடக்கும் குற்றங்களுக்கு 'நூற்றுவர் மன்றம்' (Hundred Moot) கூட்டுப் பொறுப்பை (Collective responsibility) ஏற்க வேண்டுமென்றும் இச் சட்டம் வற்புறுத்தியது. ஒவ்வொரு சுதந்திரக் குடிமகனும் தத்தம் நிலைக்கேற்ப படைகளைக்கொண்டு காவல் வேலையில் (Police duty) ஈடுபடவேண்டுமென்றும் இச் சட்டம் வற்புறுத்தியது. சுருக்கமாகக் கூறின், இச் சட்டம் நாட்டிலே குற்றங்களின் எண்ணிக்கையைக் குறைத்தது.

**குவா எம்ப்டோரஸ் :** கி.பி. 1290 ஆம் ஆண்டில், நிலமானியப் படை முறையில் காலத்திற்கேற்ப மாற்றங்களைச் செய்து, தம் அதிகாரத்தைப் பலப்படுத்திக்கொள்ள 'குவா எம்ப்டோரஸ்' (Qua Emptores) என்ற சட்டத்தையும் அரசர் எட்வர்டு நிறைவேற்றியிருந்தார். எத்தகைய கட்டுப்பாடுமின்றி இச் சட்டம் நிலத்தை விற்பதற்கு உரிமை அளித்ததெனினும், பெரும் மானியக்காரர்கள் தங்கள் நிலத்தைச் சம அந்தஸ்து கொண்டவர்களுக்கே விற்கலாமேயொழிய தம்மைவிடத் தாழ்ந்த நிலையிலிருக்கும் கீழ்மானியக்காரர்களுக்கு விற்கக் கூடாதென்ற தடையை விதித்தது. இச் சட்டத்தினால் நிலமானிய முறைக் கட்டணங்களை (Feudal dues) அரசரும் தலைமைக் குத்தகைக்காரர்களும் பெற

ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததோடன்றி புதிய சிறிய நிலப் பிரிவுகள் (மேனர்கள்) எதுவும் ஏற்படாமலும் தடுக்கப்பட்டது.

**டிரையல் பாஸ்டன் ஆணை:** கி. பி. 1305ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட 'டிரையல் பாஸ்டன் ஆணை' (Trial Baston Writ) திருடர்களையும், வழிக்கொள்ளையர்களையும் கடுமையாகத் தண்டித்து நாட்டிலே அமைதி ஏற்பட வழி கோலியது.

கி.பி. 1307 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட கார்லைல் சட்டம் (Statute of Carlisle) அவசியமில்லாது, அடிக்கடி போப்பாண்டவருக்கு நிதி திரட்டும் வழக்கத்தைத் தடை செய்திருந்தது.

**திறனாய்வு:** எட்வர்டு மன்னரின் சட்டங்கள் 'தங்களுடையது என்று சொல்லக்கூடிய சட்ட முறையை அப்போதுதான் பெற்றிருக்கத் தொடங்கிய ஒரு நாட்டு மக்களுக்காக' இயற்றப்பட்ட பெரும் படைப்பாக அமைகின்றன. 'அடுத்த முன்னூறு ஆண்டுகளில் கொண்டுவரப்பட்ட சட்டங்கள் எல்லாம் எட்வர்டின் சட்டங்களை விரிவுபடுத்தும் வகையிலேயே அமைந்துள்ளன'. என்றும் அம்மன்னருக்கு இச் சட்டங்களால் புகழ் அஞ்சலி செலுத்தப்படுகிறது. ஜஸ்டினியன் (Justinian) என்ற ரோமானியப் பேரரசர் பழைய சட்டங்களையெல்லாம் ஒருங்கு திரட்டி, முறைப்படுத்தி, ஒரு சட்டத் தொகுப்பாகக் கொணர்ந்ததைப்போல், அரசர் முதலாம் எட்வர்டு, பழைய ஆங்கிலச் சட்டத்தின் அடிப்படையில் புதிய இயல்புகளைச் சேர்த்துத், தம் சட்ட உணர்வை வெளிப்படுத்தியிருந்ததால், இவர் 'ஆங்கிலோ ஜஸ்டினியன் என்று புகழப்படுகின்றார்.

நீதிமன்றங்களைச் சீர்திருத்தும் பணியிலும் தீவிரம் காட்டிய முதலாம் எட்வர்டு, இதற்கான முயற்சிகளையும் எடுத்துக்கொண்டார். வழக்குகளைச் சீரிய முறையில் தீர்க்கவும், சட்டத்தை அப் பொருள் ரீதியிலேயே விளக்கமாகவும் நன்கு பயிற்சிபெற்ற வழக்குரைஞர் குழாமொன்றை எட்வர்டு நியமித்திருந்தார். தங்களின் நீதிமன்றங்களைச் சீராகக் கவனிக்கவேண்டியும் கண்காணிக்க வேண்டியுமான பொறுப்புகள் நீதிபதிகளுக்கு உணர்த்தப்பட்டது. நீதிபதிகள், பிற பணிகளில் ஈடுபடக்கூடாதெனவும் தடுக்கப்பட்டனர். இதன் விளைவாக நாட்டிலே சீரான நீதி நிர்வாகம் ஏற்படலாயிற்று.

**யூதர்களை விரட்டுதல்:** இவ்வாறு பலதரப்பட்ட சட்டங்களை இயற்றியும், தேவையான மாற்றங்களைச் செய்துமிருந்த முதலாம்

எட்வர்டு, தமது ஆட்சியைக் குறைபாடின்றிக் காத்துக் கொண்ட தன்றி, மக்களின் பொது விருப்பத்திற்கு மாருக எதையும் செய்ய விரும்பாதவராகவும் இருந்தார். யூதர்களை (Jews) நாட்டை விட்டு விரட்டியதை, இதற்கொரு மேற்கோளாகத் காட்டலாம்.

நார்மானியப் படையெடுப்பின் காலத்திலே யூதர்கள் இங்கிலாந்துக்கு வந்திருந்தனர். வட்டிக்குப் பணம் கொடுத்து லேவாதேவித் தொழிலில் (Money lending) ஈடுபட்டிருந்த யூதர்கள்மீது ஆங்கிலேயருக்கு அதிருப்தி இருந்து வந்தது. யூதர்களின் சமய வழக்கங்களும் இனத்திமிரும் ஒதுங்கி இருந்த நிலையும் கசப்புணர்ச்சியை மேலும் அதிகரிக்கச் செய்தது. யூதர்களை ஆங்கில மக்கள் அந்நியர்களென்றும் கிறித்தவரல்லாதவரென்றும் வெறுத்து வந்தனர். ஆக, அவ்வப்போது இவர்களுக்கு எதிராகக் கலகங்கள் தோன்றி வந்தன. யூதர்கள் நிறைய சொத்து வரியையும், காப்பு வரியையும் கட்டி வந்ததால் மன்னர்கள் பெரும்பாலும் இவர்களை ஆதரித்து வந்தனர்.

மக்களின் மனநிலையைப் புரிந்து கொண்டிருந்த முதலாம் எட்வர்டு, யூதர்களின் கொடுக்கல் வாங்கல் தொழிலுக்குத் தடை விதித்தார். யூதர்கள் நிலங்களைக் குத்தகைக்கு வைத்திருக்க முடியாதபடியும் தடை விதித்தார். இங்கிலாந்தில் யூதர்கள் மேற்கொண்டு வசதியாக வாழ முடியாதபடி அரசர், தடைச் சட்டங்கள் பல இயற்றியிருந்தும், இவர்கள் தொடர்ந்து நாட்டிலேயே இருந்து வந்தனர். மக்களின் எதிர்ப்பு அதிகமாகிக் கொண்டே வந்தது. இதற்கிடையே யூதர்களுக்கெதிராக மீண்டுமொரு கலகம் எற்பட்டது. நிலைமை சீர்கெட்டுப் போவதற்கு முன்னரே செயல்பட விரும்பி முதலாம் எட்வர்டு, யூதர்களை நாட்டைவிட்டு வெளியேறும்படி ஆணை பிறப்பித்தார் (கி.பி.1290). யூதர்கள் வெளியேறியதால் நாட்டிலே பொருளாதார மந்தம் ஏற்பட்டுவிடக்கூடாதென எண்ணிய அரசர், இவர்களின் கொடுக்கல் - வாங்கல் வியாபார இழப்பைச் சரிக்கட்ட இத்தாலிய தனவந்தர்களையும் வியாபாரிகளையும் இங்கிலாந்துக்கு வரவழைத்தார்.

### முதலாம் எட்வர்டின் பாராளுமன்றங்கள்

இவரது ஆட்சிக்காலத்திலேயே மக்களின் பிரதிநிதிகளை அரசாங்க விவகாரங்களில் ஈடுபடுத்தும் கொள்கை விரிவாக்கப் பட்டதென்றால் அது மிகையாகாது. இவர் ஆட்சியின் தொடக்க

காலத்திலிருந்து கி.பி. 1295ஆம் ஆண்டுவரை ஏழு மன்றங்கள் கூட்டப்பட்டிருந்தன. எல்லாவிதங்களிலும் மக்களுடைய உண்மைப் பிரதிநிதிகள் அடங்கியிருக்கும் ஒரு சிறப்பான பாராளுமன்றத்தைத் தேடி அமைக்கும் முயற்சியாகவே எட்வர்டு மன்னர் பல விதமான உள்கூறுகளைக் கொண்ட மன்றங்களைக் கூட்டியிருந்தார் என்றும் சுட்டிக்காட்டப்படுகிறது. ஒரு வகையில் இவரது இந்த முயற்சி பாராளுமன்ற வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டதாகவும் அமைந்தது.

கி. பி. 1273-ல் அவர் பெயரால் கூட்டப்பட்டிருந்த மன்றத்திற்குப் பிரபுக்களும், பிஷப்புக்களும், ஒவ்வொரு கவுன்டியிலிருந்து நான்கு நைட்டுகளும், ஒவ்வொரு நகரத்திலிருந்து நான்கு நகர வாசிகளும் அழைக்கப்பட்டிருந்தனர். ஏற்கனவே சைமன் காட்டியிருந்த வழியை விரிவுபடுத்தும் முயற்சியாகவே இம் மன்றம் அமைந்திருந்தது. முதலாம் எட்வர்டு தம்முடைய அதிகாரத்தை எந் நிலையிலும் விட்டுக்கொடுக்கத் தயாராக இல்லை; ஆகவே தம் அதிகாரத்திற்கு ஊறு ஏற்படும் வகையில் ஒரு வலிமை வாய்ந்த பாராளுமன்றத்தைக் கூட்ட இம் மன்னர் தயங்கினர். ஆனாலும் இவருடைய மன்றங்களுக்குப் பலதரப்பட்ட உறுப்பினர்கள் அழைக்கப்பட்டது ஒரு சிறப்பு அம்சமாகும்.

கி. பி. 1275 ஆம்ஆண்டில் எட்வர்டு அழைப்பு விடுத்து முதல் பாராளுமன்றத்தை வெஸ்ட்மின்ஸ்டரில் கூட்டினர். இக் கூட்டத்திற்குத் தலைமை பிஷப், பிஷப்புகள், மடாதிபதிகள், எர்ல் கோமான்கள், பிரபுக்கள் மேலும் கவுன்டியிலிருந்தும் நான்கு நான்கு நைட் வீரர்களும் ஒவ்வொரு பரோவிலிருந்தும் நான்கு நான்கு நகர வாசிகளும் அழைக்கப்பட்டிருந்தனர்.

கி. பி. 1282ஆம் ஆண்டில், தம் வேல்ஸ் படையெடுப்பிற்காகப் பணம் பெறவேண்டிய நிலையிலிருந்த மன்னர், யார்க் நகரிலும், பின்னர் நார்தாம்டன் நகரிலும் இரு மன்றங்களைக் கூட்டியிருந்தார். இம் மன்றங்களுக்கு ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும், பரோ நகரங்களிலிருந்தும் இரண்டு பிரதிநிதிகள் அழைக்கப்பட்டிருந்தனர். வரி விதிப்புப்பற்றிய தம் அதிகாரத்திற்கு இம் மக்கள் பிரதிநிதிகளின் ஒப்புதலை அரசர் பெற்றிருந்தது சிறப்பான அம்சமாக விளங்குகிறது.

கி. பி. 1283-ல் ஷுருஸ்பெரி என்னுமிடத்தில் அரசர் இன்னொரு மன்றத்தையும் கூட்டியிருந்தார். இம் மன்றத்திற்கும் ஒவ்வொரு ஷயரிலிருந்தும் இரண்டிரண்டு நைட்டுகளும் இருபத்தொரு நகரங்

களிலிருந்து அவற்றின் நாற்பத்திரண்டு சார்பாளர்களும் அழைக்கப்பட்டிருந்தனர். இம் மன்றம், கைது செய்யப்பட்ட வேல்ஸ் நாட்டுத் தலைவர் டேவிட்டை என்ன செய்வது என்பதைத் தீர்மானிக்கவே கூட்டப்பட்டிருந்தது.

கி. பி. 1290 ஆம் ஆண்டில் அழைக்கப்பட்டிருந்த மன்றத்தில் பிரபுக்களும் பிஷப்புக்களும் மட்டுமே கலந்து கொண்டிருந்தனர். அரசருடைய மகளின் திருமணத்திற்காக எவ்வளவு உதவிப் பணம் பெற வேண்டுமென்பதை நிர்ணயிக்கவே இம் மன்றம் கூட்டப்பட்டிருந்தது. இம் மன்றத்தில் கலந்து கொண்டிருந்த பிரபுக்களும், பிஷப்புக்களும் தங்கள் ஒப்புதலைத் தெரிவித்திருந்தபோது, அதை மக்கள் சார்பிலும் அளிப்பதாகவே கூறினர்கள்.

கி. பி. 1294 ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுப் போர்களுக்காக அரசருக்கு மேலும் பணம் தேவைப்பட்டபோது இன்னொரு மன்றம் கூட்டப்பட்டது. இம் மன்றத்திற்கும் பிரபுக்கள், குருமார்கள், நைட்டுகள் வரவழைக்கப்பட்டிருந்தனர்.

அரசர் சில சமயங்களில் மொத்த வகுப்பினர்களையும், வேறு சில சமயங்களில் குறிப்பிட்ட வகுப்பினரையும் அழைத்திருந்தது, அவர் அம் மன்றங்களைக் கூட்டியிருந்த காரணத்தைப் பொறுத்திருந்தது. இவரால் கொண்டுவரப்பட்டிருந்த சில சட்டங்களும் இம் மன்றங்களின் ஒப்புதலுக்காக அவற்றினிடத்தே சமர்ப்பிக்கப்பட்டிருந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது. தேசிய விவகாரமாக இருக்கும்பொழுது, நாட்டின் மொத்த வகுப்பினர்களின் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டிருந்தனர். ஒரு குறிப்பிட்ட வகுப்பினரைப் பற்றிய விவகாரங்கள் இருக்கும்போதெல்லாம் அவ் வகுப்பினர் பிரதிநிதிகளை மட்டுமே அழைத்திருந்தார். மேலே காட்டப்பட்டிருக்கும் மன்றங்களின் பட்டியல் இந்தக் கூற்றை உண்மையாக்கும்.

**மாதிரிப் பாராளுமன்றம்:** கி பி. 1295ஆம் ஆண்டு தேசிய ஆட்சி முறைக்கு அடிப்படையாக அமைந்த ஒரு பாராளுமன்றத்தை முதலாம் எட்வர்டு கூட்டியிருந்தார். இதுவே இங்கிலாந்து அரசியல் வரலாற்றில் 'மாதிரிப் பாராளுமன்றம்' (Model Parliament) என்ற சிறப்புப் பெயரைப் பெறுகின்றது. வருங்கால பாராளுமன்றங்களுக்கு இம் மன்றம் ஒரு முன் மாதிரியாக இருந்ததாலேயே இச் சிறப்புப் பெயர் தரப்பட்டது. நாட்டை எதிர்நோக்கியிருந்த பொது அபாயத்தைச் சமாளிக்க அரசருக்கு நிதி உதவி தேவைப்பட்டது. 'மக்கள் எல்லோரையும் பாதிக்கக்கூடிய விஷயங்களைப்பற்றிய முடிவுகள் மக்கள் எல்லோராலும ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்' (What touches

all must be approved by all) என்ற குறிப்புடன் பலதரப்பட்ட பிரதிநிதிகளை அரசர் இம் மன்றத்திற்கு அழைத்திருந்தார். எர்ல்கள், பிரபுக்கள், பிஷப்புக்கள் ஆகியோரன்றி, முன்பு அழைக்கப்பட்டிருந்ததுபோல் ஒவ்வொரு ஷயரிலிருந்து இரண்டிரண்டு நைட்டுகளும், ஒவ்வொரு பரோவிலிருந்து இரண்டிரண்டு பர்கியர்களும், ஒவ்வொரு நகரத்திலிருந்து இரண்டிரண்டு நகரத்தார்களும் வரவழைக்கப்பட்டிருந்தனர். முதன்முறையாகச் சமய குருமார்களின் கீழ்ப் பிரிவினரும் (Lower Clergy) வரவழைக்கப் பட்டிருந்தனர். சுருக்கமாகச் சொன்னல், இம் மன்றத்தில் பிரபுக்கள், திருச்சபையினர், சாமானியர்கள் என்னும் மூவகைச் சமூகப் பிரிவுகளும் நாட்டின் எல்லாப் பகுதிகளின் சார்பிலே பிரதிநிதித்துவம் பெற்றிருந்தனர். நாட்டின் பொது விவகாரங்களைப்பற்றிய முடிவுகளை அரசர் இனி நாட்டு மக்களின் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்துத்தான் செயல்படுத்த வேண்டும் என்ற அரசியல் மரபு இவர் காலத்தில் தோன்றியிருந்தது. இது மட்டுமன்றி, முதலாம் எட்வர்டால் கூட்டப்பட்டிருந்த இம் மன்றம் வருங்காலத்தில் கூட்டப்படவேண்டிய மன்றங்கள் இந்தக் குறிப்பிட்ட அமைப்பு முறையைத்தான் கொண்டிருக்க வேண்டுமென்றும் வலியுறுத்துவதாக இருந்தது.

சுருக்கமாகக் கூறின், முதலாம் எட்வர்டின் காலம் பாராளு மன்றத் தோற்றத்திற்கும், அதன் அமைப்பிற்கும் அதன் வளர்ச்சிக்கும் வழிகோலுவதாக அமைந்திருந்தது.

### முதலாம் எட்வர்டின் போர்கள்

போர்த்திறன் படைத்த எட்வர்டு, தம் ஆட்சிக் காலத்தில் பிரிட்டிஷ் தீவுகளின் ஏனைப் பகுதிகளிலும் தம் பேராதிக்கத்தை நிறுவ முயன்றதில் ஆச்சரியமெதுவுமில்லை. இலண்டனில் ஆளும் ஆங்கில அரசருக்கே நாட்டின் ஏனைய பகுதிகள் அடங்கியிருக்க வேண்டுமென்று நினைத்த முதலாம் எட்வர்டு, வேல்ஸ், ஸ்காட்லாந்துப் போர்களுக்குக் காரணமாகின்றார். இப் போர்களில் எட்வர்டின் ஆதிக்கவெறி அதிகமாக இருந்ததா அல்லது நாட்டை ஒருமைப்படுத்த வேண்டுமென்ற நன்னெறி அதிகமாக இருந்ததா என்பது சர்ச்சையாகவில்லையென்றாலும், இவர் எடுத்துக்கொண்ட இம் முயற்சிகள் நிரந்தரமான பலனளித்ததா என்பதை நோக்குமிடத்து, வேல்ஸைப் பொறுத்த வரையில் வேண்டிய பலனைக் கொடுத்திருந்த எட்வர்டின் போர், ஸ்காட்லாந்தைப் பொறுத்த வரையில் ஒரு நீண்ட போருக்கு வித்திடுவதாக அமைந்தது.

**வேல்ஸ் கைப்பற்றப்படல்**

கடந்த எட்டு நூற்றாண்டுகளாக வேல்ஸ் (Wales) என்ற பகுதியைக் கைப்பற்றி, இங்கிலாந்துடன் இணைக்கத் தொடர்ந்து நடந்து வந்த போராட்டத்தின் இறுதிக் கட்டமாக முதலாம் எட்வர்டின் காலம் அமைகிறது.

இனத்தாலும், மொழியாலும் வேறுபட்டிருந்த வேல்ஸ் பகுதியில் பல சிறிய தலைவர்கள் ஆதிக்கம் பெற்றிருப்பினும், ஸ்நோட்வுன் (Snowdown) பகுதியில் ஆட்சி செலுத்திய லெவில்லின் (Llewelyn கி. பி. 1254—1282) என்பவரே பேராதிக்கம் பெற்றவராக இருந்து வந்தார். மூன்றாம் ஹென்றியின் காலத்தில் சைமன் கிளர்ச்சி செய்து விவிஸ் சண்டையில் போரிட்டபோது லெவில்லினும் அரசருக்கெதிராகவே போரில் பங்கெடுத்துக் கொண்டிருந்தார். இருப்பினும் ஈவ்ஷாம் சண்டைக்குப் பிறகு, அமைதியை விரும்பிய (இளவரசர்) எட்வர்டு, கி.பி. 1257ஆம் ஆண்டில் லெவெல்லினுடன் 'ஷிருஸ்பரி உடன்படிக்கை' (Treaty of Shrewsbury) செய்து கொண்டிருந்தார். இவ்வுடன்படிக்கையின்படி லெவில்லின் வேல்ஸ் பிரபுக்கள் யாவருக்கும் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டதோடு, வேல்ஸ் இளவரசராகவும் அறிவிக்கப்பட்டார்; மேற்கொண்டு இங்கிலாந்து அரசரைத் தம் மேலாதிக்கப் பிரமுகராகவும் ஏற்றுக்கொள்ளும்படி லெவில்லின் பணிக்கப்பட்டார்.

**வேல்ஸ் படையெடுப்பு** : கி.பி. 1272ஆம் ஆண்டில் எட்வர்டு சிலுவைப் போரில் ஈடுபட்டுப் புனித பூமியிலிருந்தபோது சைமன், தாம் முன்பு சொல்லியிருந்த வாக்கை மீறியதாக, இங்கிலாந்து அரசருக்கு இறைவணக்கம் செலுத்த முடியாதென அறிவித்தார். மேலும், எட்வர்டின் கோபத்தைக் கிளறும் வகையில் அவரது பழைய எதிரியான சைமனின் மகளான எலியனுர் என்பவளையும் லெவில்லின் மணக்கத் திட்டமிட்டார். எல்லாவற்றிற்கும் மேலாக, வேல்சைத் தனிச் சுதந்திர நாடாக்கி, அதன் தலைவராகப் பதவி வகிக்க லெவில்லின் முயற்சி செய்தார். இதன் விளைவாகவே எட்வர்டின் முதலாம் வேல்ஸ் படையெடுப்பு (கி. பி. 1277) நடந்தது.

**முதல் படையெடுப்பு** : திருமணத்திற்காக வேல்சை நோக்கிச் சென்ற எலியனுரை எட்வர்டு சிறைப்பிடித்துத் தம் படைகளுடன் வேல்சைத் தாக்கினர். அதுவரை, லெவில்லினின் அதிகாரத்திற்கு உட்பட்டிருந்த மத்திய, தென் வேல்ஸ் தலைவர்கள் எட்வர்டுக்கு

அடிபணிந்தனர். செஸ்டர் (Chester), கேன்டர்டு (Canterd), டீகன்வி (Deganwy) போன்ற வடவேல்ஸ் பகுதிகளை வென்று, எட்வர்டு ஸ்னோடவுன் (Snowdown) கோட்டையில் லெவில்லினை அடைக்கச் செய்து முற்றுகையிட்டார். எவ்வித மேல் உதவியும் தனக்குக்கிடைக்க வழியில்லாத நிலையில், முற்றுகையைச்சமாளிக்க முடியாது, லெவில்லின் இறுதியில் சரணடைந்தார். எட்வர்டுடன் 'கான்வே உடன்படிக்கை' (Treaty of Conway) செய்து கொண்டார். இவ் வுடன்படிக்கையின்படி, எலியனுரை மணம் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்ட லெவில்லின், தாம் முன்பு ஷிருஸ்பரியில் கிடைத்த எல்லா வசதிகளையும் இழந்தவரானுர். ஒரு சிறிய மானிய கீழ்ப்பிரபுவின் நிலைமைக்கு லெவில்லின் வட வேல்ஸில் கொண்டுவரப்பட்டதோடன்றி, எட்வர்டுக்கு இறை வணக்கம் செலுத்தவும் கட்டாயப்படுத்தப்பட்டார்.

**இரண்டாம் படையெடுப்பு:** ஆயுதப் பலத்தினுல் வேல்ஸ் அடக்கப்பட்டிருந்ததால், அம் மக்களுக்கு ஆங்கிலேயர் ஆதிக்கத்தின்மீது வெறுப்பு ஏற்படலாயிற்று. எட்வர்டு அரசரால் வேல்ஸில் திணிக்கப்பட்டிருந்த ஆங்கிலச் சட்டங்களும், ஆங்கிலேய அதிகாரிகளின் கொடிய நடத்தையும் கி.பி. 1282ஆம் ஆண்டில், தென்வேல்ஸில் ஒரு கலகத்தை உண்டாக்கியது. இதற்கு முன்பு, எட்வர்டிடம் விசுவாசமாக நடந்து கொண்டிருந்தவரும், லெவில்லின் சகோதரருமான டேவிட் என்பவரே இக் கலகத்துக்குத் தலைமை தாங்கினுர். அதற்கடுத்தாற்போல் வட வேல்ஸிலும் லெவில்லினின் தூண்டுதலால் கலகம் ஏற்பட்டது. வேல்ஸ் பகுதியே தன்னை எதிர்த்தது. இவ் வேளையில் எட்வர்டு தம் இரண்டாம் படையெடுப்பை (கி. பி. 1283-ல்) நடத்தினுர். வேல்ஸின் எல்லைப்புறத்திலிருந்த ஷிருஸ்பரி என்ற இடத்தில் தம் அரச மன்றத்தை அமைத்து, போரில் முழுக் கவனத்தைச் செலுத்திய எட்வர்டு மன்னர், தம் பெரும் படைகளுடன் மீண்டும் ஸ்னோடவுன் பகுதியைத் தாக்கி, லெவில்லினை முற்றுகையிடச் செய்தார். முற்றுகையை முறித்துக்கொண்டு வெளிவந்த லெவில்லின், தொடர்ந்து நடந்த ஓரவின் பாலச் (Orewyn Bridge) சண்டையில் தோற்று வீர மரணம் எய்தினுர்.

வேல்ஸின் பண்டைய சுதந்திரத்திற்காக ஆங்கிலேயர்களை எதிர்த்து மடிந்த லெவில்லின் இன்றும். அப் பகுதியின் தேசிய வீரராக மதிக்கப்படுகின்றுர்.

லெவில்லின் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, தம்மை வேல்ஸ் இளவரசராக அறிவித்துக்கொண்ட டேவிட், மற்றுமோர் ஆண்டுக்

காலம் எட்வர்டை எதிர்த்துப் போரிட்டார். ஆயினும், அக்டோபர் கி.பி. 1273 ஆம் ஆண்டில் எட்வர்டின் படைகளால் சிறை பிடிக்கப்பட்ட டேவிட், பின்னர் துரோகி என்ற குற்றம் சாட்டப்பட்டு ஷிரூஸ்பரியில் தூக்கிலிடப்பட்டார். வேல்ஸ் அடக்கப்பட்டது.

**வேல்ஸ் இணைப்பு:** வெல்லப்பட்ட வேல்ஸ் பகுதியை இங்கிலாந்துடன் இணைக்க எட்வர்டு மன்னர் சில உறுதியான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டார். கி.பி. 1284ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருந்த வேல்ஸ் சட்டம் (Statute of Wales) இதன் விளைவாகவே இருந்தது. இச் சட்டப்படி, வேல்ஸ் இங்கிலாந்திற்கு படைமானிய முறையில் அடங்கியிருந்த நிலை நீங்கி, எட்வர்டின் நேரடியான ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. வேல்ஸிலிருந்த நிலப்பகுதிகள் ஆங்கில்சி (Anglesey), கார்னர்வான் (Carnarvan), மெரியோனத் (Merioneth), கார்டிகன் (Cardigan), கார்மார்தன் (Carmarthen) என ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன.

அந் நாட்டு பழைய சட்டங்களில் தாம் விரும்பிய சிலவற்றைத் தவிர, ஏனைய சட்டங்களை எட்வர்டு மாற்றியதோடன்றி, இங்கிலாந்தின் பழக்கவழக்கங்களும், தல ஆட்சிமுறையும், பிறசட்டங்களும் வேல்ஸில் புகுத்தப்பட்டன.

பழைய வேல்ஸ் கோட்டைகளைப் புதுப்பித்தும், ஸ்நோடவுன் கார்னர்வான், ஹார்லிச் (Harlech), சியர்ஃபில்லி (Cehrphilly), கிட்வெல்லி (Kidwelly) என்னுமிடங்களில் புதிய கோட்டைகள் கட்டியும் ஆங்காங்கு ஆங்கிலேயர்களைக் குடிபுகுத்தி வைத்தார்.

மேலும், தமக்குப் பிறக்கும் ஆண் மகவுக்கு 'வேல்ஸ் இளவரசர்' என்று பட்டம் கொடுக்கவும், எட்வர்டு மன்னர் ஒப்புக்கொண்டிருந்தார். கி. பி. 1301ஆம் ஆண்டில் வேல்ஸ் பகுதியான கார்னர்வனில் தமக்கு மகன் பிறந்திருக்க, அடுத்த வாரிசான (இரண்டாம் எட்வர்டு) அப் பிள்ளைக்கு வேல்ஸ் இளவரசர் (Prince of Wales) எனப் பட்டம் கொடுக்கப்பட்டது. (இதனைத் தொடர்ந்து, இன்றைக்கும் ஆங்கில மன்னரின் மூத்த மகனுக்கு இப் பட்டம் சூட்டப்படடு வருகிறது.)

வேல்ஸ் சட்டத்தையொட்டி வேல்ஸ் திருச்சபையும், ஆங்கிலத் திருச்சபையின் மாதிரியில் திருத்தி அமைக்கப்பட்டது.

**ஸ்காட்டியப் போர்கள் :** இங்கிலாந்தின் வட பகுதியான ஸ்காட்லாந்து, நார்மானியப் படையெடுப்புக் காலத்திலிருந்தே ஆங்கில அரசர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டு வந்திருந்தது, கி. பி. 1286-ல் கேன்மோர் (Canmore) அரச மரபைச் சார்ந்த மூன்றும் அலெக்சாந்தர் என்பவர் ஆண்டு வந்தார். நாற்பத்துநான்கு வயதே ஆன இந்த ஸ்காட்டிய அரசர், ஒரு செங்குத்தான குன்றின் உச்சியிலிருந்து விழுந்து விபத்துக் குள்ளாகிக் காலமாகி விட்டார். பிள்ளைப்பேறு ஏதுமில்லாத மூன்றும் அலெக்சாந்தர் இறந்ததை யொட்டி ஸ்காட்லாந்தில் நாளுக்குநாள் குழப்பங்கள் மிகலாயின. தமது ஆட்சியை ஸ்காட் லாந்தில் நிலைநிறுத்தி, இங்கிலாந்தையும், ஸ்காட்லாந்தையும் ஒரே அரசின்கீழ் இணைக்க சந்தர்ப்பம் நோக்கியிருந்த முதலாம் எட்வர்டுக்கு, ஸ்காட்டிய குழப்பம் ஒரு வரப்பிரசாதமாகவே அமைந்தது. இதற்கேற்ப தன்மகனை எட்வர்டு கார்னர்வனுக்கும், காலஞ்சென்ற அலெக்சாந்தரின் மகள்வழிப் பேத்தியான மார்கரெட் என்பவளுக்கும் திருமணம் செய்துவைத்து இரு நாடு களையும் ஐக்கியப்படுத்த எட்வர்டு நினைத்தார்.

இத் திட்டமே 'பிரிகாம் (Brigam) உடன்பாடு' என அழைக்கப் பட்டது. இத் திருமணத் திட்டத்திற்கு ஸ்காட்டிய பிரபுக்களிடை யேயும் ஆதரவு இருந்தது. ஆயினும், தம் தந்தையின் நாடான நார்வேயிலிருந்து மார்கரெட், கப்பலில் ஸ்காட்லாந்திற்கு வந்து கொண்டிருந்த வேளையில் கடுமையாக நோய் வாய்ப்பட்டு, வழி யிலேயே ஆர்க்னி (Orkney) தீவில் தங்கி சிகிச்சை பெறும் பொழுது காலமாகிவிட்டார் (கி. பி. 1290). மார்கரெட்டின் அகால மரணத்தைத் தொடர்ந்து முதலாம் எட்வர்டின் இணைப்புத் திட்டம் முறிந்தது.

**வாரிசுச் சிக்கல் :** ஸ்காட்லாந்தின் அரியணையைப் பெறும் உரிமையை அடைய அலெக்சாந்தரின் நேரிடை வாரிசு எவரும் இல்லாமலிருக்க, பலர் ஸ்காட்டியப் பட்டத்திற்குப் போட்டி யிட்டனர். இந்த வாரிசுச் சிக்கலைத் தீர்க்க, ஸ்காட்லாந்தின் மேலாதிக்க அதிகாரி என்ற முறையில் முதலாம் எட்வர்டின் உதவியைச் செயின்ட் ஆன்ட்ரு பிஷப்பின் (Bishop of St. Andrew) தலைமையில் ஸ்காட்டிய பிரபுக்கள் கோரினர். அதுமட்டுமன்றி எட்வர்டின் முடிவையும் ஏகமனதாக ஏற்றுக்கொள்வதாகவும் இவர்கள் தீர்மானித்தனர். வாரிசு உரிமைக்குப் போட்டியிட்ட நபர்களின் தகுதிகளை ஆராயவும், உரிமைகளை விசாரிக்கவும் எட்வர்டு மன்னர் கி. பி. 1291-ல் நோர்ஹாம் கோட்டைக்கு (Norham Castle) சென்று ஒரு விசாரணை மன்றத்தைக் கூட்டினர்.


ஹென்றி
வில்லியம் (சிங்கன்)
ஸ்காட்டிய அரசர்
இரண்டாம் அலெக்சாந்தர்
மூன்றாம் அலெக்சாந்தர்
(கி. பி. 1286)
(விபத்தில் காலமடைந்தவர்)
மார்கரெட்
மார்கரெட்
(முதலாம் எட்வர்டின்
மகனுக்கு மணமுடிக்க இருந்தவள்)
டேவிட்
மார்கரெட்
ஜான் பாலியல்
(கி. பி. 1291—96)
இசபெல்லா
இராபர்ட் புரூஸ்
(மூத்தவர்)
இராபர்ட்
இராபர்ட் புரூஸ்
(இளையவர்)

போட்டியிட்ட ஒன்பது நபர்களின் தகுதிகளை நடுவர் என்ற நிலையில் ஆராய்ந்து, எல்லாத் தரப்பு வாதங்களையும் கேட்டறிந்தார். இவ் விசாரணையின் முடிவில், ஜான் பாலியல்(John Balliel), மூத்த ராபர்ட் புரூஸ் (Robert Bruce the Elder), ஜான் ஹேஸ்டிங்ஸ் (John Hestings) என்ற மூவருக்கு மட்டுமே ஸ்காட்டிய பட்ட உரிமைக்கான தகுதி உண்டென்று முதலாம் எட்வர்டு நிர்ணயித்தார். முதலாம் எட்வர்டு தாம் நினைத்திருந்தால் இக் கட்டத்தில் ஸ்காட்லாந்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து இந்த மூவருக்கும் கொடுத்திருக்கலாம். ஆனால், அங்ஙனம் எட்வர்டு செய்யவில்லை. இந்த மூவரில் ஜான்பாலியலுக்கே ஸ்காட்லாந்தின் அரியணையைப் பெறுவதற்கு முதல் உரிமை உண்டு என்பதை நிர்ணயித்து இவரையே அரசராக்கினார்.

ஸ்காட்லாந்தின் அரச உரிமையைப் பெற்றிருந்த ஜான் பாலியல், முதலாம் எட்வர்டுக்கு விசுவாச வாக்குறுதி அளிக்கவும் ஒப்புக்கொண்டார்.

**முதலாம் ஸ்காட்டியப் படையெடுப்பு கி. பி. 1296 :** முதலாம் எட்வர்டு ஸ்காட்லாந்தின்மீது தம் ஆதிக்கத்தைச் சிறுகச்சிறுகத் திணிக்க முயன்றதாலேயே போர் மூண்டது.

ஸ்காட்லாந்திய நீதிமன்றங்களில் தீர்ப்பான வழக்குகளின் மேல் முறையீட்டை விசாரிக்கும் உரிமை தமக்கு உண்டென்று எட்வர்டு ஆணையிட்டதோடன்றி, அவ் வழக்குகளை வெஸ்ட்மின்ஸ்டருக்கு (இலண்டன்) அனுப்பும்படியும் ஸ்காட்டியர்களை வற்புறுத்தினார், ஸ்காட்டிய அரசரான ஜான்பாலியலையும் ஆங்கிலப் பாராளுமன்றக் கூட்டத்தில் கலந்துகொள்ளும்படியும் எட்வர்டு கட்டாயப்படுத்தினார். இதனால் அதிருப்தியடைந்திருந்த ஸ்காட்டியர்களுக்கு எட்வர்டின் அடுத்த ஆணை ஆத்திரமூட்டியது. கி. பி. 1295-ல் இங்கிலாந்திற்கும், ஃபிரான்சுக்கும் காஸ்கனியின் விவகாரத்தில் போர் மூளவும், ஸ்காட்டியப் படைகளைத் தம் உதவிக்கு அனுப்பும்படி எட்வர்டு பாலியலுக்குக் கட்டளை பிறப்பித்திருந்தார். இதன் விளைவாக, ஸ்காட்லாந்தை எட்வர்டு தம் அடிமை நாடாக நடத்துகிறார் என்று ஸ்காட்டியர்கள் பொரும ஆரம்பித்தனர். பணிந்து போகவும் மனமில்லாமல், பகைத்துக் கொள்ளவும் துணிவில்லாமல் ஜான் பாலியல் சிலகாலம் தயங்கி வந்தார். இதற்கிடையே பெர்விக் நகரில் (Berwick) தம்மை வந்து சந்தித்து விளக்கம் கூறும்படி அரசர் எட்வர்டு பாலியலுக்குக் கட்டளை பிறப்பித்தார். அங்ஙனம் செய்தால், தம் நாட்டு மக்களிடையே மதிப்பை இழந்து விடுவோமோ என நினைத்து ஜான்

பாலியல் எட்வர்டைச் சந்திக்க மறுத்துவிட்டார். அத்துடன் மட்டுமன்றித் தம் நாட்டு மக்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி, பாலியல் ஃபிரெஞ்சு அரசருடன் எட்வர்டுக்கு எதிராக ஒப்பந்தம் செய்துகொண்டார். தம்மால் அரசராக்கப்பட்டிருந்த ஜான் பாலியல் தம் எதிரி ஃபிரெஞ்சு மன்னருடன் செய்து கொண்ட உடன்படிக்கை, எட்வர்டுக்கு அளவுகடந்த எரிச்சலைக் கொடுத்தது. இதன் விளைவாகவே கி. பி. 1296ஆம் ஆண்டில் எட்வர்டு ஸ்காட்லாந்தின் மீது படையெடுத்தார்.

எட்வர்டின் படைகள் ஸ்காட்டிய எல்லையைக் கடந்து செல்வதற்கு முன்பாகவே, ஸ்காட்டியப் படை கம்பர்லாந்தின் (Cumberland) மீது படையெடுத்து அங்கிருந்த ஆங்கிலேயக் குடும்பங்களைப் படுகொலை செய்தது. இதனைத் தொடர்ந்துதான் எட்வர்டின் படை பதிலடி கொடுப்பதுபோல் பெர்விக் நகரத்தைத் தாக்கிப் பல ஸ்காட்டியர்களை ஈவிரக்கமின்றிக் கொலை செய்தது. அடுத்து, ஆங்கிலப்படையினர் டன்பார் (Dunbar) என்ற கோட்டையைப் பலமாகத் தாக்கினர். ஜான்-டி-வெர்னன் (John-de-Veranane) என்ற ஆங்கிலத் தளபதியின் கீழ்ப் போரிட்ட படைகள், டன்பாரில் ஸ்காட்டிய எதிர்ப்பை முறியடித்தன. மூன்று ஸ்காட்டிய எர்ல்கள், நான்கு பேரன் பிரபுக்கள், எழுபது நைட் வீரர்கள், மேலும் பல ஸ்காட்டியப் போர்வீரர்கள் இச் சண்டையில் சிறைபிடிக்கப்பட்டனர்.

ஸ்காட்லாந்தின் முக்கிய கேந்திரமான டன்பார் வீழ்ச்சியுற்றதைத் தொடர்ந்து எட்வர்டு, தம் படைகளுடன் வந்து ராக்ஸ்பரோ, டம்பார்ட்டன், ஜட்பரோ ஆகிய இடங்களையும் கைப்பற்றினார். ஸ்காட்டியத் தலைநகரான எடின்பரோவும் முற்றுகையிடப்பட்டு எட்வர்டால் கைப்பற்றப்பட்டது. அதனையடுத்து ஸ்டர்லிங் (Sterling), பெர்த் (Berth) ஆகிய வேறுசில முக்கிய இடங்களும் ஆங்கிலேயர் வசம் சிக்கின. போரை மேற்கொண்டு நடத்தத் திறன் இல்லாத ஜான் பாலியல், ஜூலை 10ஆம் நாள் பிரிசின் (Brechin) என்ற ஊரில் எட்வர்டைச் சந்தித்துச் சரணடைந்தார். வெற்றிவீரரான எட்வர்டு, நன்றி கெட்ட ஜான் பாலியலைச் சிறையிலடைத்துப் பின்னர் நாடு கடத்திவிட்டார்.

ஸ்காட்லாந்து, எட்வர்டின் நேரடி ஆட்சியின்கீழ்க் கொண்டு வரப்பட்டது. இங்கிலாந்தின் அரசாங்க அமைப்பு முறையையும் ஆங்கிலேயச் சட்டங்களையும் ஸ்காட்லாந்தில் புகுத்தி, அந் நாட்டை எட்வர்டு தம் தனிப்பட்ட உரிமையாகப் பாவிக்கலானார். ஸ்காட்லாந்திலே சிலகாலம் தங்கியிருந்த எட்வர்டு, பின்னர், மூன்று

ஆங்கில உயர் அதிகாரிகளிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு நாடு திரும்பினர். நாடு திரும்பிய எட்வர்டு, தம் வெற்றிக்குச் சின்னமாக, ஸ்காட்டிய அரசர்கள் முடிசூடும்போது அமர்ந்து கொள்ளப் பயன்படுத்திய ஒரு புனித கல்லாசனத்தையும் எடுத்துச் சென்றிருந்தார். (இக் கல்லாசனத்தை அடித்தளமாக வைத்தே ஆங்கில மன்னர்களின் சிம்மாசனம் வெஸ்ட்மின்ஸ்டரில் அமைக்கப்பட்டிருக்கிறது) சுருக்கமாகச் சொன்னால், ஸ்காட்லாந்து இங்கிலாந்துடன் பலாத்காரமாக இணைக்கப்பட்டு விட்டது.

**இரண்டாம் ஸ்காட்டிய படையெடுப்பு கி. பி. 1298:** நாடு அடிமையாக்கப்பட்டதே ஒழிய, நாட்டு மக்களின் சுதந்திர உணர்ச்சியை முதலாம் எட்வர்டால் அழிக்க முடிய வில்லை. ஆங்கிலேயரின் ஆட்சியை எதிர்த்து, ஸ்காட்டியர்கள் உள்ளூரப் பொருமிக் கொண்டே வந்தனர். எட்வர்டு அரசரின் பெயரால் அங்கு அதிகாரம் பெற்றிருந்த ஆளுநரான வாரன் பிரபு (Warrenne), வில்லியம் ஓர்ம்ஸ்பி (William Ormesby), பொருளாளரான கிரெசிங்ஹாம் (Cressingham) என்பவர்கள் தங்களுடைய கொடிய நடத்தையாலும் பயங்கர ஆட்சியாலும் ஸ்காட்டியர்களின் கோபத்திற்கு ஆளாகியிருந்தனர். ஆங்கிலேயர் ஆதிக்கம், தங்களை அடிமைப் படுத்துவதற்காகவே திணிக்கப்பட்டிருந்ததென, ஸ்காட்டியர் நினைத்து வந்த அவ் வேளையில், வில்லியம் வேல்ஸ் (Willam Weles) என்ற வீரர், எட்வர்டின் ஆட்சிக் கெதிராகத் தம் கலகக் கொடியை உயர்த்தினர்.

கிளைடெஸ்டேல் (Clydesdale) என்னுமிடத்தைச் சேர்ந்தவரும், எல்டர்சிலி (Elderslie) நைட்டுமான வில்லியம் வாலஸ், ஆங்கில ஆட்சிக்கெதிராகக் குமுறிவந்த ஸ்காட்டிய பிரபுக்களிலே ஒருவராவார். லானர்க் (Lanark) என்னுமிடத்தில் ஆங்கில உயர் அதிகாரியான ஷெரீப் ஒருவரைக் கொன்றுவிட்ட குற்றத்திற்கு, வாலஸ் தலைமறைவானர். ஆங்கில ஆட்சியாளர்களும் இவரைப் பிடிக்க வேட்டையாடினர். இதற்கிடையே ஆங்கிலேயரின் கெடுபிடி ஆட்சியை விரும்பாத ஸ்காட்டிய பாமர மக்களும், சில நைட் வீரர்களும் வாலசுடன் சேர்ந்துகொள்ளவே, ஸ்காட்லர்ந்து ஒரு கொந்தளிப்பான நிலையை அடைந்திருந்தது. ஸ்காட்லாந்திலிருந்த ஆங்கில உயர் அதிகாரிகள் நிலமையைக் கட்டுப்படுத்த எண்ணி, பெரும்படையொன்றைச் சேகரித்து, வாலஸ் தம் ஆதரவாளர்களுடன் போர்ப் பிரயத்தனத்தில் ஈடுபட்டிருந்த இடத்தை நோக்கி விரைந்தனர்.

கி. பி. 1297ஆம் ஆண்டு, ஸ்டர்லிங் பாலத்தருகே (Sterling Bridge) நடந்த கைகலப்பில் வாலஸ், தம் படைத் தலைமைத்

திறமையினைக் காட்டி, ஆங்கிலப் படைகளைச் சின்னாபின்னப் படுத்தினர். சிறைப்பிடிக்கப்பட்டிருந்த ஆங்கில உயர் அதிகாரியான கிரெசிங்ஹாம் உயிரோடு எரிக்கப்பட்டார். தோற்று ஓடியிருந்த ஆங்கிலப் படைகள் பதுங்கிக் கொண்டிருந்த டுனோடேனி சிறு கோயிலும் (Dunottane Chapel) வாலசின் வீரர்களால் தீக்கிரையாக்கப்பட்டது. ஆங்கிலேயர் வசமிருந்த எல்லைப் பகுதிகளான நார்த்தம்பர்லாந்து, கம்பர்லாந்து ஆகிய பகுதிகள் வாலசின் வீரர்களால் கொள்ளையடிக்கப்பட்டன. ஸ்காட்லாந்தில் ஆங்கிலேயரின் ஆட்சியே ஆட்டங்காண ஆரம்பித்துவிட்டது. வில்லியம் வாலஸ், தம்மை 'ஸ்காட்லாந்தின் காப்பாளர்' என்று அழைத்துக்கொண்டார்.

ஃபிரெஞ்சுப் போர்களிலே ஈடுபட்டு அப்போதுதான் நாடு திரும்பியிருந்த மன்னர் எட்வர்டு, உடனுக்குடன் பெரும்படையொன்றைத் திரட்டி, கி. பி. 1298ஆம் ஆண்டில், ஸ்காட்லாந்து மீது படையெடுத்தார். தம் ஆதிக்கம் அங்கு நிலைத்திருக்க வேண்டுமென்றால் வாலஸை ஒடுக்க வேண்டுமென்ற தீவிரத்தைக் கொண்ட எட்வர்டு மன்னர், ஃபால்கர்க் (Falkirk) என்னுமிடத்தில், கலகக்காரர்களைச் சந்தித்தார்.

கி. பி. 1298ஆம் ஆண்டு ஜூலை 22-ல் நடந்த கடும் சண்டையில் வாலசின் போர் திறமைக்குத் தான் சளைத்தவரல்லர் என்று முதலாம் எட்வர்டு நிருபணம் செய்தார். தமது வில்வீரர்களையும், குதிரை வீரர்களையும் கொண்டு எட்வர்டு எதிரிப் படைகளைக் கொன்று குவித்துப் பெரும் வெற்றிபெற்றார். இச் சண்டையில் 15,000 ஸ்காட்டிய வீரர்கள் கொல்லப்பட்டு, ஸ்டிர்லிங் பாலச் சண்டைக்கு ஆங்கிலேயர்கள் பழிதீர்த்துக் கொண்டனர். போர்க்களத்திலிருந்து தப்பிவிட்ட வாலஸ், சில ஆண்டுகள் கழித்து மெண்டியத் (Mendieth) என்ற துரோகியால் காட்டிக் கொடுக்கப்பட, லண்டனில் விசாரணை செய்யப்பட்டு எட்வர்டு மன்னரால் கொல்லப்பட்டார். மேற்கொண்டு கலகத்தில் ஸ்காட்டியர்கள் ஈடுபடாமல் தடுக்க வேண்டுமென்று வாலஸின் உடல் நான்கு துண்டுகளாக வெட்டப்பட்டு பெர்விக், ஸ்டிர்லிங், பெர்க், நியூகேசல் ஆகிய ஸ்காட்டிய நகர்களின் கோட்டைக் கதவுகளில் காட்சிப் பொருளாகச் சில நாட்கள் வைக்கப்பட்டன.

எட்வர்டு, தான் ஸ்காட்லாந்தில் பெற்றிருந்த இப் பெரும் வெற்றியைத் தொடர்ந்து, நாட்டை நான்கு பகுதிகளாகப்

பிரித்துத் தம் மருமான் பிரிட்டானி ஜான் (Brittany John) என்பவரின் மேலாதிக்கத்திற்கு உட்படுத்தினர். இந்த ஏற்பாடுகளால் ஓரளவு ஸ்காட்லாந்தை எட்வர்டு மன்னர் நிர்வகிக்க முடிந்ததே தவிர, அம் மக்களின் ஆதரவையும் அபிமானத்தையும் பெற முடியவில்லை.

வீரமும், நாட்டுப்பற்றும் கொண்டு, ஸ்காட்டிய மக்களை ஒற்றுமைப்படுத்தி, ஒரு தேசிய வீரராகச் செயல்பட்டு மரணமெய்திய வில்லியம் வாலசுக்கு ஏற்பட்டிருந்த பரிதாப முடிவை ஸ்காட்டியர்கள் மறந்தவர்களாக, மன்னித்தவர்களாக இல்லை. தேசியப் பற்றுக் கொண்டிருந்த ஸ்காட்டியர், தங்களை ஆங்கிலேயர் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க இனி ஒரு தலைவர் கிடைப்பாரா என ஏங்கிய நிலையில் காலத்தை எதிர் நோக்கியிருந்தனர்.

இதற்கிடையே போப்பாண்டவர் எட்டாம் பானிபேஸ் என்பவர், ஸ்காட்டிய விவகாரத்தில் குறுக்கிட்டு, ஃபிரான்சில் அடைக்கலம் புகுந்திருக்கும் ஜான்பாலியலே ஸ்காட்டிய அரசர் என அறிவித்தார். கி. பி. 1301ஆம் ஆண்டில் கூடிய ஆங்கில பாராளுமன்றம், போப்பாண்டவரின் அறிவிப்பை ஏற்க மறுத்ததோடன்றி, முதலாம் எட்வர்டு மன்னருக்கே ஸ்காட்லாந்தை ஆளும் உரிமை உண்டென்பதை உறுதிப்படுத்தியது.

கி. பி. 1304ஆம் ஆண்டில், எட்வர்டின் ஆதிக்கம் ஸ்காட்லாந்தில் ஓரளவு வேரூன்ற ஆரம்பித்தது. ஸ்காட்லாந்துக்கு இம் மன்னர் புதிய ஓர் அரசியல் சாசனத்தையும் அளித்திருக்க, அதன்படி ஆண்டுதோறும் ஸ்காட்டியப் பாராளுமன்றம் சில பிரதிநிதிகளை ஆங்கிலப் பாராளுமன்றத்திற்கு அனுப்ப ஏற்பாடொன்று செய்யப்பட்டது.

ஸ்காட்லாந்தில் காணப்பட்ட அமைதி நீறுபூத்த நெருப்பாகத் தானிருந்தது.

**மூன்றும் ஸ்காட்டியப் படையெடுப்பு (கி.பி. 1307):** வாலஸ் தம் கட்டளையினால் கொல்லப்பட்டதால், ஸ்காட்டிய மக்களின் எதிர்ப்பே கொல்லப்பட்டுவிட்டதாக நினைத்திருந்த முதலாம் எட்வர்டு, ஸ்காட்லாந்தில் இனி தொடர்ந்து அமைதி நிலவுமென நம்பியிருந்தார். ஆயினும், கி. பி. 1306ஆம் ஆண்டில், இளைய ராபர்ட் புரூஸ் என்பவரின் தலைமையில் மீண்டுமொரு சுதந்திரப்போரை ஸ்காட்டியர்கள் தொடங்கினர்.

கி. பி. 1291ஆம் ஆண்டு ஜான் பாலீயலுடன் ஸ்காட்டிய வாரிசுரிமைக்குப் போட்டியிட்டிருந்த (மூத்த) இராபர்ட் புரூஸ் என்பவரின் மகள்வழிப் பேரரே இப் புதிய தலைவரான இராபர்ட் புரூஸ் என்பவர்.

முதலாம் எட்வர்டின் நண்பரான ஜான் காமின் (John Comyn) என்பவரைத் தனிப்பட்ட பகைமையின் காரணமாகக் கொன்று விட்டிருந்த இராபர்ட் புரூஸ், அரச தண்டனைக்குப் பயந்து மறைவிடங்களில் ஒளிந்து வாழ்ந்து வந்தார். ஏற்கனவே, வில்லியம் வாலஸின் தலைமையை இழந்திருந்த பல ஸ்காட்டியர்கள், இவருடன் வந்து சேர ஆரம்பித்தனர். நாளுக்கு நாள் தம் பலம் அதிகரித்து வருவதை உணர்ந்த இராபர்ட் புரூஸ், தம்மை ஸ்காட்டிய விடுதலை இயக்கத்திற்குத் தலைவராக அறிவித்துக் கொண்டார்.

தொடக்கத்தில், ஸ்காட்லாந்திலிருந்த ஆங்கிலப் படைகளால் மெத்வின் (Methwen) என்னுமிடத்தில் இராபர்ட் புரூஸ் தோற்கடிக்கப்பட்டு, ராச்ரின் (Rachrine) என்ற தீவிற்கு விரட்டப்பட்டிருந்தும், மக்களின் பேராதரவு பெற்ற இவர், கி. பி. 1306ஆம் ஆண்டில் ஸ்கோன் (Scone) நகரில் ஸ்காட்லாந்தின் அரசராக முடி சூட்டிக்கொண்டார்.

ஸ்காட்லாந்து மீண்டும் தம்பிடியை விட்டு நழுவுவதைப் பொறுக்க முடியாத முதலாம் எட்வர்டு, பெரும்படையொன்றைத் திரட்டிக்கொண்டு மீண்டும் படையெடுத்தார். எய்மர்—டி—வாலன்ஸ் (Aymer-de-Valence) என்ற படைத் தலைவரும் அரசருடன் துணைக்குச் சென்றார். ஸ்காட்லாந்திற்குள் நுழைந்திருந்த எட்வர்டின் படைகளுக்குப், பலத்த எதிர்ப்பு எதுவும் இல்லை. இராபர்ட் புரூசும் மறைவிடம் நோக்கி ஓடி விட்டார். இக் கலகத்தவரை விரட்டிச் செல்லும் வழியில், ஏறத்தாழ எழுபது வயதைக் கடந்திருந்த மன்னர் முதலாம் எட்வர்டு, தம் எண்ணம் நிறைவேறாதவராக கி. பி. 1303ஆம் ஆண்டு ஜூலை 7ஆம் நாள் தம் உணவு மேஜையில் உட்கார்ந்த நிலையிலேயே பர்க்-ஆன்-சாண்ட்ஸ் என்னுமிடத்தில் மரணமடைந்தார்.

**ஃபிரான்சுடன் போர் :** ஸ்காட்லாந்தின் வெற்றியின் முடிவுக் கட்டத்தைக் காணாதவராக, முதலாம் எட்வர்டு இறந்துவிட்டாரெனினும், தம் காலத்தில் இங்கிலாந்தின் வன்மையை ஐரோப்பிய நாடுகளுக்கு இம் மன்னர் உணரச் செய்திருந்தார். குறிப்பாக, ஃபிரான்சின் ஆதிக்க வெறியை முதலாம் எட்வர்டு பொறுமையுடன் எதிர்த்து நின்றார்.

முதலாம் எட்வர்டு மன்னர் ஸ்காட்டிய படையெடுப்புகளுக் கிடையே ஃபிரெஞ்சு மன்னர் நான்காம் பிலிப்பை எதிர்த்துப் போரிட்டு வந்தாரென்பது குறிப்பிடத்தக்கது.

ஆமியன்ஸ் உடன்படிக்கையின்படி (கி. பி. 1297) சில காலம் இங்கிலாந்துக்கும், ஃபிரான்சுக்கு மிடையே அமைதி நீடித்த தெனினும், ஆங்கிலக் கால்வாயிலே அடிக்கடி ஆங்கில ஃபிரெஞ்சு மாலுமிகளுக்கிடையே ஏற்பட்டிருந்த கைகலப்பு மீண்டும் இரு நாடுகளின் உறவைப் பாதித்தது.

கைப்பற்றப்பட்ட ஃபிரெஞ்சுக் கப்பல்களுக்கு நான்காம் பிலிப் மன்னர் இழப்பீடு கேட்டபோது, அதை மறுத்த எட்வர்டு, தம் மேலாளர் என்ற முறையில் பாரிசுக்கு வரும்படி பிலிப் விடுத்திருந்த ஆணையையும் புறக்கணித்தார். இதனால், ஆத்திர மடைந்த நான்காம் பிலிப், ஃபிரான்சு நாட்டில் எட்வர்ட்டிற்குச் சொந்தமாயிருந்த காஸ்கனி பகுதியைத் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டார். மன உறுதியிழக்காத முதலாம் எட்வர்டு போரைத் தொடர்ந்து நடத்தி, இறுதியில் காஸ்கனியை மீட்டுவிட்டார்.

அரசியல் நிபுணராகவும், வெற்றி வீரராகவும் ஆண்ட முதலாம் எட்வர்டு, பர்க்-ஆன்-சாண்ட்ஸ் என்னுமிடத்தில் காலமாகிவிட்டதால், ஆங்கில ஆட்சியில் சிறப்பான ஒரு காலம் முடிந்துவிட்டது.

முதலாம் எட்வர்டு காலத்திற்குப் பிறகு அடுத்து வரப் போவது ஒரு வரட்சிக் காலமாகும்.

## இரண்டாம் எட்வர்டு (கி. பி 1307-1327)

தம் தந்தை முதலாம் எட்வர்டு வயது முதிர்ந்த கிழவராக பர்க்-ஆன்-சாண்டர்சில் காலமடைந்ததால் பெரும் மகிழ்ச்சி கொண்ட இரண்டாம் எட்வர்டு, அப்போது இருபத்து மூன்று வயது நிரம்பப் பெற்றவராக இருந்தார். தம் தந்தைக்கு விசுவாசமாக உழைத்த வால்டர்லாங்டன் (Walterlangton) போன்ற உண்மை ஊழியர்களை விரட்டியதோடல்லாமல், தம் தந்தையாரால் நாடு கடத்தப்பட்ட பீட்டர் கேவஸ்டனை (Peter Gaveston) வரவழைத்துத் தமது ஆட்சியினைத் தொடங்கிய இரண்டாம் எட்வர்டு, ஆங்கில வரலாற்றில் ஓர் அவலமான காலத்திற்குக் காரணமானார்.

**குண நலன்கள்**

தம் தந்தையைப் போல் கவர்ச்சி உருவத்தினராக இரண்டாம் எட்வர்டு இருந்தாரே ஒழிய, மூத்த எட்வர்டிடம் இருந்த அரும்பெரும் குணங்கள் எதுவும் இம் மன்னரிடம் இல்லை. ஆண்மை கொண்டவராக இருந்தாரெனினும், அதைச் செயல் படுத்தக்கூடிய உறுதி உள்ளம் இல்லாதவராகவும் இருந்தார். தந்தைக்கு இருந்த சமயப்பற்றும் கல்வி அறிவும் கொண்டிராத இரண்டாம் எட்வர்டு, கேளிக்கைப் பிரியராகவும், இலட்சிய மற்றவராகவும் விளங்கினர். அரசப் பணியை உற்சாகங் கொண்டு ஏற்று நடத்த வேண்டிய காலத்தில் அரசராகப் பட்டம் பெற்றிருந்த இரண்டாம் எட்வர்டு, அரசப் பணியையே ஒரு பெரும் பாரமாக நினைத்தார். செயல் வீரர்களோடு சிந்தித்துச் சாதனைகளைச் செய்ய வேண்டுவதற்கு மாருக, சோம்பித் திரிந்த வர்களுடன் சேர்ந்து, தம்மைத்தாமே சீரழித்துக் கொண்டவ ராகவே இளவரசர் விளங்கினர். எல்லாவற்றிற்கும் மேலாகத் தம் தந்தையாரின் இறுதிக் காலக் கட்டளைகளைப் புறக்கணித்த, கடமை மறந்த தனயனுகவும் இரண்டாம் எட்வர்டு இருந்தார்.




பானக்பர்ன் சண்டை (1314)

**பானக்பர்ன் (Bannockburn) போர் கி. பி. 1314:** முதலாம் எட்வர்டு காலமாவதற்குச் சற்று முன்பாக, ஸ்காட்லாந்தை மீண்டும் தம் பிடியில் கொண்டுவர வேண்டி மூன்றும் முறையாகப்

படையெடுத்திருந்தார்; ஆயினும், அவ் வெண்ணம் நிறைவேருத வராகவே அம் மன்னர், போரின் இடையிலேயே காலமடைந்தார். தம்மால் முடிக்கப்பட முடியாத ஸ்காட்டியப் படையெடுப்பை உடனுக்குடன் நிறைவேற்றும்படி, அடுத்த வாரிசான தம் மகனுக்குக் கட்டளையிட்டு, அதற்கான பெரும் படையொன்றையும் எய்மா-டி-வாலன்ஸ் என்ற தளபதியின் கீழ் விட்டு மடிந்துவிட்டார். ஆயினும், இரண்டாம் எட்வர்டு, ஸ்காட்டிய விவகாரத்தை மறந்து, இங்கிலாந்தில் தம் உதவாக்கறை ஆட்சியால் பல சிக்கல்களையும் இன்னல்களையும் உண்டாக்கி வந்தார்.

கி. பி. 1307—1314-க்கு இடைப்பட்ட காலத்தில் இராபர்ட் புரூஸ் ஸ்காட்லாந்து முழுவதையும் தம் வசப்படுத்தும் முயற்சியில் தீவிரமாகச் செயல்பட்டு வந்தார். ஸ்காட்லாந்தே புரூசுக்கு அடிபணிந்திருந்தது. ஆங்கில - ஸ்காட்டிய எல்லைப்புறத்தி லிருந்த கோட்டைகளெல்லாம் புரூசால் கைப்பற்றிக்கொள்ளப் பட்டது. அபர்டீன், காலவே, ராக்ஸ்பரோ, எடின்பர்க் ஆகிய இடங்களெல்லாம் ஆங்கிலேயர் பிடியிலிருந்து நழுவின. போப் பாண்டவரும் இராபர்ட் புருஸை ஸ்காட்லாந்தின் அரசராக அறிவித்திருந்தார்.

நாளுக்கு நாள் ஸ்காட்லாந்தில் தம் ஆதிக்கத்தைப் பலப் படுத்தி விரிவுபடுத்தி வந்த இராபர்ட் புரூஸ், ஆங்கிலேயர் வசம் இன்னும் இருந்து வந்த ஸ்டிர்லிங் கோட்டையைக் கி.பி. 1314ஆம் ஆண்டு தம் படையுடன் முற்றுகையிட்டார். இக் கோட்டை கைப் பற்றப்பட்டாலொழிய ஸ்காட்லாந்திலிருந்து ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை அறவே அகற்ற முடியாதென புரூஸ் உணர்ந் திருந்ததே இதற்குக் காரணமாகும். ஆகவே, ஸ்காட்டிய மலை நாட்டிற்கும், தாழ்ந்த சமவெளிக்குமிடைய இருந்த அம் முக்கியக் கோட்டையான ஸ்டிர்லிங்கை இராபர்ட் புரூஸ் தம் வீரர்களுடன் முற்றுகையிட்டார். இக் கோட்டைக்குள்ளிருந்த ஆங்கில வீரர்கள் தங்களுக்கு உடனுக்குடன் மேல் உதவி வராவிட்டால் சரண டைந்து விடப்போவதாக, இரண்டாம் எட்வர்டுக்குச் செய்தி அனுப்பியிருந்தனர். ஸ்டிர்லிங் கோட்டை கைநழுவி விட்டால், ஸ்காட்லாந்தில் ஆங்கில ஆட்சி அஸ்தமித்து விடுமென்பதை மட்டும் நன்குணர்ந்திருந்த இரண்டாம் எட்வர்டு, தம் 20,000 வீரர்களுடன் ஸ்காட்லாந்தை நோக்கி விரைந்தார்.

ஜூன் மாதம் 24ஆம் நாள் (கி.பி. 1314) எட்வர்டின் படைகள் பானக்பர்ன் என்ற இடத்தில் புரூசின் படைகளைச் சந்தித்தன.

எட்வர்டின் படைகள் எண்ணிக்கையில் அதிகமாயிருந்தும், தேசிய உணர்வால் உந்தப்பட்ட ஸ்காட்டியர்கள், இதனால் கலங்குவதாக இல்லை. ஆயினும் எட்வர்டோ பால்கர்க்கில் தமது தந்தையார் வெற்றி பெற்றதுபோலத் தாமும் தம் குதிரை வீரர்களைக்கொண்டு ஸ்காட்டியர்களை வென்று விடலாமென்றே நினைத்தார். ஆங்கில அரசரின் இப் போர்த் திட்டத்தை எதிர்பார்த்த ராபர்ட் புரூஸ், ஆங்கிலக் குதிரைப் படை பாய்ந்து வந்து தாக்கக்கூடிய இடங்களிலெல்லாம் பள்ளங்களைத் தோண்டி, அவற்றின்மீது புல் பத்தைகளை மேலாகத் தூவி வைத்தார். எதிர்பார்த்தபடியே முரட்டுத் தாக்குதலை நடத்த ஏவிவிடப்பட்ட ஆங்கிலக் குதிரைப் படை வீரர்கள், மறைத்து வைக்கப்பட்ட பள்ளங்களில் வீழ்ந்து நாசமாயினர். இக் குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஸ்காட்டிய ஈட்டி வீரர்கள், ஏனைய ஆங்கிலப் படையினரை நெருக்கித் தாக்கலாயினர். எதிர்த் தாக்குதலை நடத்த முடியாத ஆங்கிலப் படை, சிறிது பின்வாங்கி ஓட ஆரம்பித்துவிட்டது. ஸ்டிர்லிங் கோட்டைமீது நடத்தப்பட்ட முற்றுகையை முறியடிக்க வந்திருந்த ஆங்கிலப் படைகள் தோற்றுவிடவும் இக் கோட்டையை இராபர்ட் புரூஸ் கைப்பற்றிக்கொண்டார். ஸ்காட்லாந்து, ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றது.

**எட்வர்டு மன்னரின் அவல ஆட்சியும் வீழ்ச்சியும்:** தம் தந்தையாரின் காலத்தில் அமைக்கப்பட்டிருந்த வலுவான முடியாட்சி, சீரான நிர்வாகம், பிரபுக்களின் கட்டுப்பாடு, மக்களின் பேராதரவு, இரண்டாம் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் மறையத் தொடங்கியது. இதனால், மன்னருக்கு இன்னல்கள் தோன்றியிருந்ததோடு நாட்டுக்கும் கேடுகள் விளைந்திருந்தன.

**பீட்டர் கேவஸ்டனுடன் தகாத நட்பு:** காஸ்கனி நாட்டு நைட் வீரரின் மகனான பீட்டர் கேவஸ்டன் (Peter of Gaveston), இரண்டாம் எட்வர்டு மன்னரின் பால்ய நண்பராவார். கேவஸ்டன் ஒரு வீணராகவும், வீண் பேச்சாளராகவும் விவேகம் இல்லாதவராகவும் இருந்ததைக் கண்ட மூத்த எட்வர்டு, தம் மகனின் நடத்தையைச் சீராக்கக் கடமைப்பட்டவராக, தம் ஆட்சிக் காலத்திலேயே இவரை நாடு கடத்தியிருந்தார். தந்தையாரின் மரணத்தால் (கி.பி. 1307) அவரது கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலை பெற்றவராக இருந்த இரண்டாம் எட்வர்டு, தாம் ஆட்சிக்கு வந்ததும் கேவஸ்டனைத் திரும்பவும் அழைத்துக் கொண்டதோடன்றி, இவரைக் கார்ன்வாலுக்குப் பிரபுவாகவும் (Earl of Cornwall) நியமித்தார். அரசரின் அபிமானத்தைப் பெற்றிருந்த பீட்டர் கேவஸ்டன் இதனைத் தொடர்ந்து காஸ்கனியிலிருந்து

தமக்கு வேண்டியவர்களையெல்லாம் வரவழைத்துக் கார்ன்வாலில் வேலை வாய்ப்புகளைக் கொடுத்து, அவர்கள் பெரும் ஊதியம் பெற வழி காட்டினார். கேவஸ்டனின் இச் செய்கை நாட்டிலே முணு முணுப்புகளைக் கிளப்பியது. இதையெல்லாம் ஒரு பொருட்டாக மதிக்க மறுத்து இரண்டாம் எட்வர்டு, இவரிடம் தமக்கிருந்த விசுவாசத்தை மேனும் காட்டிக்கொள்ளும் வகையில், கிளாஸ்டர் பிரபுவின் சகோதரியைக் கேவஸ்டனுக்கு மணம் முடித்து வைத்தார். ஆங்கிலப் பிரபுக்களிடையே சம அந்தஸ்த்தை இங்ஙனம் பெற்றிருந்த அந்நியரான கேவஸ்டன், தம் அகம்பாவம் பிடித்த நடத்தையினாலும் சுடு சொற்களாலும், மற்றவரின் நிந்தனைக்குக் காரணமானார். இங்கிலாந்திலிருந்த சில முக்கிய பிரபுக்களைக் கேவஸ்டன் பல கேலிப் பெயர்களால் அழைத்து மேலும் வெறுப்பைத் தேடிக்கொண்டார். லங்காஸ்டர் பிரபுவை 'நாடகமாடி" என்றும், பெம்ப்ரோக் பிரபுவை, 'யூதஜோசப்' என்றும், வார்விக் பிரபுவை 'ஆர்டன் காட்டுக் கருப்பு நாய்' என்றும் இவர் நிந்தை மொழியால் கேலிசெய்து வந்ததால் கேவஸ்டன் இப் பிரபுக்களின் பெரும் கோபத்திற்கு ஆளாகியிருந்தார்.

இங்ஙனம் பலரின் வெறுப்பிற்குப் பாத்திரமாயிருந்த கேவஸ்டன், அரசரின் தொடர்ந்த தயவைப் பெற்றிருந்ததால் பிரபுக்கள் தங்கள் அதிருப்தியை அரசரிடம் தெரிவித்தனர். ஆயினும் இரண்டாம் எட்டர்டு, தம் நண்பரை இழக்க மனமில்லாதவராக இருந்தார்.

கி.பி. 1308ஆம் ஆண்டில் அரசரின் சிற்றப்பனாரான இராபர்ட் பிரபுவும் நாட்டு அபிமானத்தை இழந்து வரும் கேவஸ்டனை விரட்டும்படி, அரசருக்கு எடுத்துரைத்தார். ஆயினும், இரண்டாம் எட்வர்டு மன்னரின் முதல் பாராளுமன்றக் கூட்டத்தில் (கி.பி. 1310) பிரபுக்கள் அனைவரும் ஒன்றிணைந்து, கேவஸ்டனை நாடு கடத்தும்படி அரசரைக் கேட்டுக்கொண்டனர். அப்போது பிரபுக்களின் எதிர்ப்புக்குப் பணியவேண்டியிருந்த மன்னரும் இவரை அயர்லாந்துக்கு ஆளுநராக அனுப்பி வைத்தார்.

அரசரின் பலவீன ஆட்சிக்குக் காரணமானவராகக் கருதப்பட்டிருந்த கேவஸ்டன், நாடுவிட்டு அகன்றிருந்த நிலையிலும் இரண்டாம் எட்வர்டின் போக்கிலே நல்ல ஒரு மாற்றம் ஏதும் ஏற்பட்டதாக இல்லை; மாறாக, அவரது ஆட்சி நாளுக்கு நாள் முறைகெட்டு வந்தது. ஃபிரெங்கோ பால்டி எனப்படும் இத்தாலிய பெரும் செல்வந்தர்களிடமிருந்து மன்னர், ஏராளமான பணத்தைக் கடனாகப் பெற்றிருந்தார். இதற்கு ஈடாக, இந்த வங்கியாளர்

களுக்கு நாட்டின் சுங்க வரிகளை வசூலிக்கும் உரிமை இரண்டாம் எட்வர்டால் விட்டுக்கொடுக்கப்பட்டது. இச் செய்கை, அரசருக்கு நாட்டில் இழிவான பெயரையே தேடிக்கொடுத்தது. மேலும், இச் சமயத்தில் எட்வர்டு மீண்டும் கேவஸ்டனை நாட்டுக்கு வரவழைத்திருந்தார். இரண்டாம் எட்வர்டு, இங்ஙனம் மனம் போன போக்கில் நடந்து கொள்ள முற்பட்டபோது, அவரது அதிகாரங்களுக்கு முட்டுக்கட்டையிடும் வழிமுறைகளை நாட்டிலிருந்த முக்கிய பிரபுக்கள் ஆராயத் தொடங்கினர்.

**ஆர்டெயினர் பிரபுக்கள் (Lord Ordainers) உரிமை பெற்ற பிரபுக்கள் கி. பி. 1310—1312**: எட்வர்டு மன்னரின் திறமையில்லாத ஆட்சியினைக் கட்டுப்படுத்தும் வகையில் கி. பி. 1310ஆம் ஆண்டில் ஒரு பிரபுக்கள் குழு அமைக்கப்பட்டது. இக் குழுவில் இருபத்தொரு பிரபுக்கள் இருந்தனர். இக் குழுவிற்குக் 'கட்டளை பிறப்பிக்கும் உரிமை பெற்ற பிரபுக்கள்' (ஆர்டெயினர் பிரபுக்கள்) எனப் பெயர் தரப்பட்டது. இக் குழுவில் எட்டு எர்ல் கோமான்களும், ஆறு பிரபுக்களும், ஏழு பிஷப்புக்களும் இருந்தனர். இனி, இங்கிலாந்து இன்ன முறையில்தான் ஆளப்படவேண்டுமென்று நிர்ணயிக்க வேண்டியதே இக் குழுவின் தலையாய கடமையாக இருந்தது.

கி. பி. 1311ஆம் ஆண்டில் இக் குழு, 'ஆர்டினன்ஸ்' (Ordinances) என்னும் அவசரச் சட்டங்களை இயற்றியது. இச் சட்டங்கள் மகாசாசனம் (கி.பி.1215) ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகளை (கி.பி. 1258), ஒட்டியே அமைந்திருந்தன அரசரின் அதிகாரங்களை மீண்டும் பிரபுக்களிடம் ஒப்படைக்கும் வகையில் அமைந்த இச் சட்டங்களில் சில இரண்டாம் எட்வர்டு மன்னரின் காலத்தில் ஏற்பட்டிருந்த குழப்பங்களைத் தீர்க்கும் வகையிலும், மற்றும் சில வருங்காலத்திற்குப் பயன்தரும் வகையிலும் அமைந்திருந்தன. இக் குழு மொத்தத்தில் 41 தனி ஆணைகளை அறிவித்திருந்தது.

கேவஸ்டனும், மற்ற துர்போதகர்களும் உடனடியாக நாட்டை விட்டு விரட்டப்பட்டு, இவர்களின் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட வேண்டுமென்றும், நாட்டின் முக்கியமான அரசியல் பதவிகளை ஆர்டெயினர் பிரபுக்களின் சம்மதத்தின் பேரிலேயே மன்னர் மற்றவர்களுக்கு வழங்கவேண்டும் என்றும், இக் குழுவினரின் சம்மதமில்லாமல் அரசர் போரில் ஈடுபடுவதோ, அல்லது, நாட்டை விட்டு வெளியேறுவதோ கூடாதென்றும், ஆண்டிற்கு ஒரு முறை மன்னர் பாராளுமன்றத்தைக் கூட்டியே தீரவேண்டுமென்றும் இச் சட்டங்களில் சில அறிவித்திருந்தன.

மேலும், அரசர் தம்முடைய சொத்துகளிலிருந்து பெறக் கூடிய வருமானத்தைக் கொண்டே வாழ்க்கை நடத்த வேண்டும் என்றும், அரசர் தம் நிலங்களை எவருக்கும் விற்கக்கூடாதென்றும், அரசர் தமக்கு வேண்டியவர் எவருக்கும் வெகுமதிகளை அளிக்கக் கூடாதென்றும், நாட்டில் வசூலாகும் மொத்தப் பணத்தை அரசக் கருவூலத்தில் சேர்ப்பிக்க வேண்டுமென்றும் வேறு சில சட்டங்கள் வற்புறுத்தின.

பிரபுக்களின் ஒப்புதலின்றி அரசர் தம் நாட்டு நாணய முறையை மாற்றக் கூடாதெனவும், பிரபுக்களைக் கொண்டிருந்த சபையே அமைச்சர்களையும், ஷெரிப்புகளையும் நியமிக்க வேண்டுமென்றும், பிரபுக்களின் அனுமதியின்றி அரசர் படை திரட்டக் கூடாதென்றும் இன்னும் சில சட்டங்கள் அறிவித்திருந்தன.

அரசரைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையே இச் சட்டங்கள் பிரபுக்களுக்கு அளித்திருந்ததால், இவ் வகுப்பினரின் நலன்களே இதனால் பாதுகாக்கப்பட்டிருந்தன.

ஆர்டெயினர் பிரபுக்களின் கோரிக்கைகளை எதிர்க்க முடியாத நிலையில், இரண்டாம் எட்வர்டு, இச் சட்டங்களை கி. பி. 1311ஆம் ஆண்டு அக்டோபர் 5 ஆம் நாள் ஏற்றுக்கொண்டார்.

பிரபுக்களால் கட்டுப்பட்ட நிலையில் இரண்டாம் எட்வர்டின் ஆட்சி தொடர்ந்தது. கேவஸ்டனும் நாடு கடத்தப்பட்டிருந்தார். ஆயினும், நிலையான புத்தியைப் பெற்றிராத மன்னர், 'ஆர்டெயினர்' தம்மைத் தாமே கலைத்துக் கொண்டிருந்தபோது மீண்டும் கேவஸ்டனை நாட்டுக்கு வரவழைத்திருந்தார். சட்டத்தை மீறி, மன்னர் செய்திருந்த இச் செய்கை, பிரபுக்களுக்கு மிகுந்த மனக் கசப்பைக் கொடுத்தது. பலவீனமான இரண்டாம் எட்வர்டு, தங்களை ஒன்றும் செய்ய இயலாதென்பதை நன்குணர்ந்திருந்த பிரபுக்கள், கேவஸ்டனை ஒழித்துக் கட்டத் தீர்மானித்தனர். ஸ்கார்பரோ (**Scarborough**) கோட்டையில் அடைக்கலம் புகுந்திருந்த கேவஸ்டனைப் பெம்புரோக் எர்ல் கைது செய்து, பின்னர் வார்விக் எர்லான குயை–டி-பீயூசெம்ப் (**Guy-De Beauchamp**) என்பவரிடம் ஒப்படைத்து விட்டார். பெம்ரோக், வார்விக் பிரபுக்களை கேலிப் பெயரால் அழைத்து வந்த கேவஸ்டன், பிளாக்லோ (**Blacklow**) குன்றிற்கருகே சிரச்சேதம் செய்யப் பட்டார் (கி. பி. 1313).

தமது நண்பரான கேவஸ்டனைக் காப்பாற்ற மன்னர் எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை என்பதே, அந்த அளவிற்கு,

இரண்டாம் எட்வர்டு சக்தியற்றவராக இருந்தாரென்பதை எடுத்துக்காட்டியது. அரசரின் திறனற்ற இந் நிலையை நாட்டின் பெரும் பிரபுக்களில் ஒருவரான தாமஸ் லங்காஸ்டர் என்பவர், தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முனைந்தார்.

**தாமஸ் லங்காஸ்டரின் செல்வாக்கு (Tnomas Lancaster** *கி.பி. 1314—1322*) : ஆர்டெயினர் பிரபுக்களில் ஒருவரான தாமஸ் (லங்காஸ்டர்) பிரபு என்பவர், முதலாம் எட்வர்டின் சகோதரரான எட்மண்டின் மகனுவார். ஐந்து எர்ல்களுக்குத் தலைவராக இருந்த இவர், அரசக் கவுன்சிலுக்குத் தலைவராக நியமனம் செய்யப்பட்டு இருந்தார். அரசரைத் தம் கைப்பாவையாக நடத்தி, அதிகாரம் செலுத்த வேண்டுமென்று நினைத்த தாமஸ் பிரபுவிற்கு அதற்கேற்ற திறமை மட்டுமில்லை. ஆட்சியின் பொறுப்புகளைப் பெற்றிருந்த தாமஸ் பிரபுவின் நிர்வாகம், அரசர் எட்வர்டின் ஆட்சியைவிடக் கேவலமாக இருந்தது. இவர் அரசரைக் கைப்பொம்மையாக ஆட்டி வந்திருந்த அக் காலத்தில் தான் பானக்பர்ன் சண்டை (கி.பி. 1314) நடந்தது. ஸ்காட்லாந்தை இனி ஆங்கிலேயர்களால் கைப்பற்ற முடியாதென்ற நிலைமை அப்போது ஏற்பட்டிருந்தது. ஸ்காட்லாந்திய இழப்பினுல், நாட்டில் ஏற்பட்டிருந்த அதிருப்தியும், இதற்கிடையே தாமஸ் பிரபுவின் பதவி ஆசையால் மற்ற பிரபுக்களிடையே ஏற்பட்டிருந்த பொருமையும் ஆர்டெயினர் ஆட்சிக்கு நாட்டில் அவப் பெயரைத் தேடிக் கொடுத்திருந்தது. இதனைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ள இரண்டாம் எட்வர்டு நினைத்தார்.

**டெஸ்பென்சர்கள் (Despensers)** : ஆர்டெயினர் பிரபுக்களின் (தாமஸ் லங்காஸ்டர்) பிடியிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ள விரும்பிய இரண்டாம் எட்வர்டு, தமக்கு ஆதரவான சில நண்பர்களைத் தேட ஆரம்பித்தார். அச் சமயத்தில்தான் அரசருக்கு இருவரின் நட்பும் ஆதரவும் கிடைத்தன. ஹியூ லி டெஸ்பென்சர் **(Hagh Le Despenser)** என்ற பெயரிலே அழைக்கப்பட்ட தந்தையும் மகனும் அரசரைத் தங்கள் செல்வாக்கின்கீழ்க் கொண்டுவந்தனர். இந்த டெஸ்பென்சர்களின் உதவியால் ஆர்டெயினர் பிரபுக்களின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று விடலாமென்றே இரண்டாம் எட்வர்டு நினைத்தார். ஆதலால், இவர்களுக்கு அரசர், பட்டம், பதவி, சொத்து முதலியவற்றைக் கொடுத்து டெஸ்பன்சர்களின் தயவில் வாழ ஆரம்பித்தார்.

கேவஸ்டன் முன்பிருந்ததைவிட, டெஸ்பன்சர்கள் மிக உயர்ந்த நிலையை அடைந்து விடுவார்களோ என்ற பயத்திலும்,

தம் ஆதிக்கம் இதனால், சீர்குலைந்து விடுமோ என்ற ஆத்திரத்திலும் தாமஸ் பிரபு, கி.பி. 1321ஆம் ஆண்டில் கூட்டப்பட்டிருந்த பாராளுமன்றத்தில் டெஸ்பன்சர்களை நாடு கடத்தும் தீர்மானத்தைக் கொண்டுவந்தார். தமது நண்பர்களை இழக்க மனமில்லாத இரண்டாம் எட்வர்டு, இத் தருணத்தில் துணிந்து ஆர்டெயினர் பிரபுக்கள்மீது போர் தொடுத்தார். ஆர்டெயினர்களின் தலைவராகவும், இதுநாள்வரை தம்மை ஆட்டிப்படைத்து வந்தவருமான தாமஸ் லங்காஸ்டரை அரசர், பரோபிரிட்ஜ் (Bourough Bridge) என்னுமிடத்தில் தோற்கடித்துப் பின், போன்டிஃபிராக்ட் (Pontefract) என்னுமிடத்தில் தூக்கிலிட்டுக் கொன்றார். தாமஸ் பிரபு கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, இரண்டாம் எட்வர்டு, தம்மை ஆர்டெயினர்களின் கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்துக்கொண்டவரானார்.

**யார்க் பாராளுமன்றம் (கி.பி. 1322) :** ஆர்டெயினர் சட்டங்களிலிருந்து விடுவித்துக்கொள்ள வேண்டுமென்றால், ஒரு புதிய பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டிய அவசியத்தை இரண்டாம் எட்வர்டு, டெஸ்பன்சர்கள் சொல்லியிருந்ததன் பேரிலே யார்க் நகரில் கி. பி. 1322ஆம் ஆண்டில் ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டினார். டெஸ்பன்சர்களின் வற்புறுத்தலினால் இம் மன்றம் முன்பு கொண்டுவரப்பட்டிருந்த ஆர்டெயினர் சட்டங்களை ரத்துச் செய்தது. இதனால், இரண்டாம் எட்வர்டு பிரபுக்களிடமிருந்து, இழந்த அதிகாரங்களைச் சட்டப்படி பெற்றவரானார்.

இச் சமயத்தில், தன்னையுமறியாமல் இரண்டாம் எட்வர்டு மன்னர், பாராளுமன்றத்திற்குப் புதிய கோட்பாட்டைத் தந்துவிட்டார். வருங்காலத்தில், தாம் மீண்டும் பிரபுக்களால் கட்டுப்படாதிருக்க ஒரு புதிய வழியை அரசர் எடுத்துரைத்தார். அதன்படி, நாட்டு விவகாரங்களைப்பற்றிய எந்த ஒரு முடிவும் இனி, பாராளுமன்றத்தில் பிரபுக்களால் மட்டும் நிறைவேற்றப்பட்டால் செல்லுபடியாகாது என்றும், பாராளுமன்றத்தின் எல்லா முடிவுகளும் பிரபுக்கள், பிஷப்புகள், பொதுமக்கள், சார்பாளர்களின் ஒப்புதலைப் பெற்றாலேயே, அவை அரசரைக் கட்டுப்படுத்துமெனவும் அறிவிப்பாயிற்று.

பொதுமக்களின் நண்பர்களாகத் தங்களைப் பாவிக்க வேண்டுமென்றே டெஸ்பன்சர்கள் அரசரை வற்புறுத்தி, இப் புதிய ஏற்பாட்டைச் செய்திருந்தனர். அரசர் இரண்டாம் எட்வர்டு முழுக்க முழுக்க இந்த டெஸ்பன்சர்களின் ஆதிக்கத்திலேயே இக் காலத்தில் இருந்து வந்தார்,

**கி. பி. 1327 ஆம் ஆண்டுப் புரட்சி:** டெஸ்பன்சர்களின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு, அவர்களின் கைப்பாவையாக ஆட்சி செலுத்திய இரண்டாம் எட்வர்டுக்கு நாளாக ஆக ஆதரவு குறைந்து கொண்டே வந்தது. நாட்டில் வரிச்சுமை அதிகமாகியது. இங்குமங்குமாக அராஜக நிலையும் தோன்றியது. இதற்கிடையே மன்னர் ஸ்காட்லாந்தை இரண்டாம் முறையாகத் தாக்கும் முயற்சியில் தோல்வியுற்று, பெர்வின் நகரிலிருந்து புறங்காட்டித் தப்பி ஓடி வந்தார். நிலைமையை மேலும் மோசமாக்கும் வகையில் ஸ்காட்டியர் படை எல்லையைக் கடந்து, யார்க்ஷயர் வரை வந்து ஆங்கிலேயர்களை பைலாந்து ஆபி (Byland Abbey) என்னுமிடத்தில் வென்றது. ஆதலின், வற்புறுத்தப்பட்ட நிலையில் இரண்டாம் எட்வர்டு ஸ்காட்டியர்களுடன் போர் நிறுத்தத்தைச் செய்து கொண்டார் (கி.பி. 1323).

**எட்வர்டின் பட்ட நீக்கம்:** அரசின் பலவீனமும், டெஸ்பன்சர்களின் பதவி ஆசையும் நாட்டிலே கொந்தளிப்பான சூழ்நிலையை ஏற்படுத்தியிருந்தது. இந்த அதிருப்தியாளர்களுக்கு அரசி இசபெல்லாவே (Isbella) தலைவியாக இருந்தாரென்பது நாளாவட்டத்தில் தெரிய வந்தது.

ஃபிரெஞ்சு அரசரான நான்காம் சார்லஸ், கி. பி. 1324ஆம் ஆண்டில், ஃபிரெஞ்சு நாட்டில் காஸ்கனிப் பகுதியை மானிய நிலமாகக் கொண்டிருந்த இரண்டாம் எட்வர்டைத் தமக்கு இறைவணக்கம் செலுத்த பாரிசுக்கு அழைத்திருந்தார். நாடு அப்போதிருந்த சூழ்நிலையில் தாம் செல்ல முடியாததை உணர்ந்த இரண்டாம் எட்வர்டு, தம் சார்பில் அரசி இசபெல்லாவையும், இளவரசன் எட்வர்டையும் (வருங்கால மூன்றும் எட்வர்டு) ஃபிரான்சுக்கு அனுப்பி வைத்தார். ஃபிரான்ஸ் நாட்டை அடைந்த அரசி இசபெல்லா, அங்கிருந்து கொண்டே, தம் கணவரான இரண்டாம் எட்வர்டைப் பதவியிலிருந்து நீக்குவதற்கான சூழ்ச்சியில் ஈடுபடலானார். இவ்வரசிக்கு உதவியாக அவளது காதலரும், விக்மோர் பிரபுவான ரோஜர் மார்டிமர் (Rogier Mortimer of Wigemore) என்பவர் இருந்தார்.

டெஸ்பன்சர்களின் அதிகாரத்தில் அடங்கிக் கிடந்த இரண்டாம் எட்வர்டு மன்னருக்கு எதிராக, தம் ஆதரவாளர்களைக் கொண்ட சிறு கும்பலோடு இசபெல்லாவும், மார்டிமரும், இளவரசரும் கி. பி. 1326 ஆம் ஆண்டில், (செப்டம்பர்) சஸ்ஸெக்ஸ் பகுதியிலிருந்த ஆர்வெல் (Orewell) என்னுமிடத்தை

வந்தடைந்தனர். டெஸ்பன்சர்களைப் பதவிநீக்கம் செய்வதற்காகவும், இரண்டாம் எட்வர்டின் திறமையற்ற ஆட்சியை அகற்றுவதற்காகவும், தாங்கள் படைகொண்டு வந்திருப்பதாக அவர்கள் சொல்லிக் கொண்டனர். அரசரின் ஆட்சியால் அதிருப்தியடைந்திருந்த பிரபுக்கள், தத்தம் வீரர்களுடன் இசபெல்லாவுடன் சேர்ந்துகொண்டனர். லண்டன் மாநகர மக்களும் அரசருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தனர். நிலைமை கட்டுக்கு அடங்காமல் போவதை உணர்ந்த மன்னர், தம் நண்பர்களான டெஸ்பன்சர்களுடன் சேர்ந்து, வேல்ஸ் பகுதியை நோக்கி ஓடினார்.

விரட்டிப் பிடிக்கப்பட்ட டெஸ்பன்சர்கள் பின்னர், தூக்கிவிடப்பட்டுக் கொல்லப்பட்டபின், அரசர் இரண்டாம் எட்வர்டு சரணடைந்தார்.

அரசர் இரண்டாம் எட்வர்டு, கெனில்ஒர்த் (**Kenilworth**) கோட்டையில் சிறையிலடைக்கப்பட்டிருந்த, இச் சமயத்திலேயே, புரட்சியின் கடைசிக் கட்டமாக கி. பி. 1327 ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கூட்டப்பட்டது.

தீய ஆலோசகர்களின் சொற்களைக் கேட்டு, திறமையற்ற ஆட்சியை நடத்திய குற்றத்திற்காக இரண்டாம் எட்வர்டை பதவி நீக்கம் செய்வதாக இம் மன்றம் அறிவித்தது.

இரண்டாம் எட்வர்டு, இதற்கேற்ப பதவியிலிருந்து விலக்கப்பட்டார். அடுத்த வாரிசும், இளவரசருமான மூன்றும் எட்வர்டு இப்போது பதின்மூன்று வயதே நிரம்பிய பாலகனாக இருக்க, இவரது பெயரால் அரசி (தாயார்) இசபெல்லாவும் இவரது காதலர் (புதுக் கணவர்) மார்டிமர் பிரபுவும் நாட்டின் பகர ஆட்சியாளாராக அதிகாரம் பெற்றனர்.

தாம் பட்டமிழந்த எட்டு மாதங்களுக்குப் பிறகு இரண்டாம் எட்வர்டு பெர்க்லி (**Berkley**) கோட்டையில் இரகசியமாகக் கொலை செய்யப்பட்டு விட்டார்.

தகுதியற்ற அரசராக வாழ்ந்து, தகுதியற்ற முறையிலே இறந்த இரண்டாம் எட்வர்டின் காலம், ஆங்கில ஆட்சியிலே ஒரு வரட்சிப் பகுதியாகவே கருதப்படுகின்றது.

## மூன்றும் எட்வர்டு கி.பி. (1327-1377)

இங்கிலாந்தின் வரலாற்றில் மாண்பு மிக்கதோர் ஆட்சியை அமைத்திருந்த மூள்றும் எட்வர்டு, தம் பதினைன்காவது வயதில் முடிசூட்டப்பட்டார்.

### காப்பாளர் ஆட்சி

இவரது தந்தை இரண்டாம் எட்வர்டு பட்ட நீக்கம் செய்யப் பட்டுப் பின் சிறையில் கொல்லப்பட்டமையால், இளம் அரசருக்கு நிர்வாகத்தில் .உதவி புரிய பாராளுமன்றம், கி. பி. 1327 ஆம் ஆண்டில் பதினைன்கு பிரமுகர்கள் அடங்கிய ஒரு காப்பாளர் சபையை அமர்த்திக் கொடுத்தது. இருப்பினும், அரசரின் தாயா ரான இசபெல்லாவும் அவளது காதலரான ரோஜர் மார்டி மருமே ஆட்சியாளராக இருந்தனர்.

இசபெல்லாவும், மார்டிமரும் சேர்ந்து நடத்திய காப்பாளர் ஆட்சி, நாட்டின் நலனிலே நாட்டமில்லாததாகவே இருந்தது. இக் காப்பாளர்கள் அரசியல் விவகாரங்களையும், நாட்டின் நிலைமையையும் இளம் அரசருக்குத் தெரிவிக்காமலே தங்கள் மனம் போல நடக்கத் தொடங்கினர். இங்கிலாந்தில் தெளிவற்ற ஓர் அரசியல் நிலை இருந்து வர, இதைப் பயன்படுத்திக்கொண்டு மூன்றும் எட்வர்டு பட்டம் சூட்டிக்கொண்டிருந்த மூன்று மாதங் களுக்குள்ளாகவே ஸ்காட்டியப் படைகள் தொந்தரவு கொடுக்க முனைந்தன.

**இழிவான உடன்பாடுகள்** : கி.பி. 1323 ஆம் ஆண்டில் செய்து கொள்ளப்பட்ட போர் நிறுத்த ஒப்பந்தத்தை மீறி ஸ்காட்டியப் படைகள் இங்கிலாந்தின் வடஎல்லையில் அமைந்திருந்த நார்த்தம் பர்லாந்து, பர்ஹாம் பகுதிகளைத் தாக்கிக் கொள்ளையில் ஈடுபட் டிருந்தன. 20,000 விரர்களடங்கிய இந்த ஸ்காட்டியப் படையை இராபர்ட் புரூசின் சார்பில், அவரது நண்பர்களான சர் ஜேம்ஸ் டன்லஸ், மோரேயின் பிரபுவான ரண்டால்ஃப் என்பவர்களை இப் படையெடுப்பில் ஈடுபடுத்தியிருந்தனர்

நாட்டுக்கு ஏற்பட்டிருந்த இந்த தொல்லையை முறியடிக்க இளம் அரசரான மூன்றும் எட்வர்ட், தம் படையுடன் மார்ட்டி மரையும் அழைத்துக்கொண்டு வடக்கு எல்லையை நோக்கி விரைந்தார். ஆயினும். ஸ்காட்டியர்களை வெல்லவும் விரட்டவும் முடியவில்லை. பானக்பர்ன் தோல்வி இன்னும் பல ஆங்கில வீரர் களின் மனத்தில் பசுமையாயிருந்ததால் மீண்டும் வகை தெரியாமல்

சண்டையிட்டு இன்னொரு தோல்வியைச் சந்திக்க இப் படையினர் விரும்பவில்லை. சண்டைக்குத் தயங்கி வந்த ஆங்கிலப் படையினரை, ஸ்காட்டியர் திடீரென்று ஓர் உரவில் தாக்கி அவர்களின் படை முகாமை அல்லற் படுத்தினர். அந்த இருட்டு நேரத்தைப் பயன்படுத்தி மூன்றாம் எட்வர்டு, அத்திடீர்த் தாக்குதலிலிருந்து தப்பி விட்டார். எனினும், ஸ்காட்டியர் பலம் ஓங்கியிருந்த அச் சமயத்தில் காப்பாளரான மார்டிமர் அரசரை ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளும்படி வற்புறுத்தினர்.

**நார்த்தாம்ப்டன் உடன்படிக்கை :** இதுவே நார்த்தாம்ப்டன் உடன்படிக்கை (Treaty of Northampton) என அழைக்கப் பட்டது (கி. பி. 1327). இவ் வுடன்பாட்டின்படி இராபர்ட் புரூஸ் ஸ்காட்லாந்தின் சுதந்திர அரசராக ஒப்புக்கொள்ளப் பட்டார். ஸ்காட்லாந்தின்மீது இங்கிலாந்து அரசருக்கிருந்த மேலாதிக்க உரிமை விட்டுக்கொடுக்கப்பட்டது, இராபர்ட்புரூஸின் இளம் வயது மகனை டேவிட் என்பவனுக்குத் தம் இளைய சகோதரி ஜோன் என்பவளை மணம் முடித்துக் கொடுக்கவும் ஆங்கில மன்னர் ஒப்புக்கொண்டு இருந்தார். பதிலுக்கு ஸ்காட் லாந்தில் ஆங்கிலப் பிரபுக்களிடமிருந்து ஏற்கெனவே பிடுங்கப் பட்டிருந்த நிலங்களை மீண்டும் அவரவர்களுக்கே ஒப்படைக்கவும் தங்கள் படையெடுப்பினால் விளைந்த சேதத்திற்கு நஷ்ட ஈடாக 20,000 பவுன்களை மூன்று தவணைகளில் கொடுப்பதாகவும் ஸ்காட் டியர் தரப்பிலே ஒப்புக்கொள்ளப்பட்டது.

இங்கிலாந்துக்கு எவ்விதப் பலனையும் பெருமையையும் கொடுக்காத இந்த உடன்பாடு, காப்பாளரின் வற்புறுத்தலின் பேரிலேயே செய்து கொள்ளப்பட்டது. மக்கள் இதை 'மானங் கெட்ட உடன்படிக்கை' (Shameful treaty) என அழைத்தனர்.

**காஸ்கன் உடன்பாடு :** இதே ஆண்டில், ஃபிரான்சில் ஆங்கிலேயருக்குச் சொந்தமான காஸ்கனி விவகாரத்திலும் காப்பாளர்கள் ஃபிரெஞ்சு அரசரான நான்காம் சார்லசுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டு இங்கிலாந்தின் சில உரிமைகளை விட்டுக் கொடுத்திருந்தனர். இவ் வுடன்பாடும் ஆங்கிலேயரின் பெருமைக்கு உகந்ததாக அமையாததால், இதனாலும் பரவலாக மக்களிடையே காப்பாளர் ஆட்சியின்மீது அதிருப்தி ஏற்பட்டது.

இதற்கிடையே, அரசி இசபெல்லாவுக்கும் ரோஜர் மார்ட்டி மருக்குமிடையே இருந்த கள்ளக் காதல் நாட்டில் பலரைப் பல விதமாகப் பேச வைத்திருந்தது. இதையெல்லாம் கேள்வியுற்ற இளம் அரசர் மனத்திற்குள்ளாகவே புழுங்கியிருந்தார்.

**காப்பாளர்களின் வீழ்ச்சி:** அடுத்த மூன்ருண்டுகளில் தம் முரட்டுச் சுபாவத்தாலும் மதியாத தன்மையினுலும் அரசர் உள்பட பலரின் விரோதத்திற்குக் காரணமானுர். மார்ட்டிமருக்கு உடந்தையாக இருந்த தம் தாயான இசபெல்லாவும் அரசரால் வெறுக்கப்பட்டாள். மக்களிடையேயும், பிரபுக்களிடையேயும் பெரிதும் செல்வாக்குப் பெற்றிருந்த கென்ட் பிரபுவான எட்மண்ட் (எட்வர்டின் சகோதரர்) என்பவரை நயவஞ்சகமாக ஒரு சதியில் சம்பந்தப்படுத்தி, அவர் சிரச்சேதம் செய்யப்படுவதற்குக் காரணமான மார்ட்டிமர், அவரது நிலங்களையும் தாமே எடுத்துக் கொண்டு நாட்டிலேயே பெரும் பணக்காரர் என்ற நிலைக்குத் தம்மை உயர்த்திக்கொண்டார். இது மட்டுமன்றி, மார்க்ச் எர்ல் (Earl of Marcx) எனப் பட்டம் சூட்டிக்கொண்டு தம்மை எல்லைப் புறப் பிரபுவாகப் பறைசாற்றிக்கொண்ட மார்ட்டிமர் படைக்கலம் தரித்த தம் காவலர்களைக் கொண்டு ஒரு முறை, சாலிஸ்பரியில் நடந்த பாராளுமன்றக் கூட்டத்தையே கலைத்த அதிகார வெறி பிடித்தவராகவும் நடந்து கொண்டார்.

இசபெல்லா, மார்ட்டிமர் கள்ளக் காதலையும் மார்ட்டிமரின் அடாத செயல்களையும் கண்டும் காணுதவராக நடந்து கொண்டு வந்த மூன்ரும் எட்வர்டு, கி.பி 1330ஆம் ஆண்டில் செயல் வீரராக மாறினுர். கடந்த மூன்று ஆண்டுகளாகத் தம்மை ஆட்டிப் படைத்து வந்த இந்த இரு காப்பாளர்களையும் விலக்கித் தாமே நேரிடை ஆட்சிசெய்ய விரும்பிய மூன்ரும் எட்வர்டு, கி. பி. 1330ஆம் ஆண்டு, அக்டோபர் 19ஆம் நாள் இசபெல்லாவும் மார்ட்டிமரும் தங்கள் காமக் களியாட்டங்களை நடத்தி வந்த நாட்டிங்ஹாம் கோட்டையைத் தம் வீரர்களுடன் இரகசியமாக அடைந்தார். அரசரின் எதிர்பாராத திடீர்த் தாக்குதலால் நிலைகுலைந்து நின்ற மார்ட்டிமர் கைது செய்யப் பட்டுப் பாராளுமன்றத்தின் முன் விசாரணை செய்யப்பட்டார்.

இரண்டாம் எட்வர்டை இரகசியமாகக் கொன்றதும் சாலிஸ்பரி மன்றத்தைப் பயமுறுத்தியதும், அரசரின் அனுமதி யின்றிப் பலரின் நிலங்களை அபகரித்துக் கொண்டதும், ஸ்காட் டியர் இழப்பீடாகக் கொடுத்திருந்த பணத்தொகையைத் தம் சொந்த செலவுக்குப் பயன்படுத்திக் கொண்டதும் மார்ட்டிமருக் கெதிரான குற்றங்களாகச் சுட்டிக் காட்டப்பட்டன.

விசாரணையின் முடிவில் தீர்ப்பு ஒரு மனமாக இருக்க, ரோஜர் மார்ட்டிமர், இதே ஆண்டு நவம்பர் 29ஆம் நாளன்று டைபர்னில் தூக்கிலிடப்பட்டார்.

இரண்டாம் எட்வர்டின் அரசியும் தம் தாயாருமான மார்ட்டிமரின் கள்ளக் காதலி இசபெல்லாவை ரைசிங் கோட்டையில் அடைத்து வைத்து, இனி அரசியல் விவகாரங்களில் தலையிடாதவாறு மூன்றும் எட்வர்டு செய்தார்.

இங்ஙனமாக, காப்பாளர்களின் பிடியிலிருந்துவிடுபட்டுவிட்ட நிலையில் மூன்றும் எட்வர்டு, தம் பதினெட்டாம் வயதில் நேரிடை ஆட்சியைத் தொடங்கினர்.

இங்கிலாந்தின் வரலாற்றில் புதிய ஓர் அத்தியாயம் இதிலிருந்து தொடங்கியது.

**மூன்றும் எட்வர்டின் குணவியல்புகள்**

தம் தந்தையாரின் காலத்தில் நாட்டுக்கும் அரச பாரம்பரியத்திற்கும் ஏற்பட்டிருந்த இன்னல்களையும் இழுக்கினையும் நீக்க வேண்டியது தம் முதற் கடமையாகக் கொண்டிருந்த மூன்றும் எட்வர்டு, போர் செய்வதிலும், அரசு நிர்வாகத்திலும் பெரிதும் நாட்டமுடையவராக இருந்தார். ஆடம்பரம், விளம்பரம், பேராசை, ஊதாரித்தனம், போன்ற குணவியல்புகளை, இம் மன்னர் பெற்றவராயிருந்தும் நாட்டு மக்களிடையே இவருக்கு நல்ல மதிப்பும் செல்வாக்கும் இருந்தது. தேசிய உணர்ச்சி பெற்றிருந்த நாடே, இவர் செய்த போர்களிலாகட்டும், நிர்வாக முறையிலாகட்டும் எட்வர்டுக்குப் பக்கபலமாக இருந்தது. உதவாக்கரை ஆட்சி நடத்திய இரண்டாம் எட்வர்டுக்குப் பிறகு, திறமையும் தகுதியும் கொண்ட இவ் வரசரைப் பெற்றதால் இங்கிலாந்து தலை நிமிர்ந்து நின்றது.

**ஸ்காட்டியப் போர்கள்**

மூன்றும் எட்வர்டு பட்டத்திற்கு வந்த மூன்று மாதத்திற்குள்ளாகவே ஸ்காட்டியர்கள், போர் நிறுத்த உடன்பாட்டை மீறி இங்கிலாந்தின் வடஎல்லைகளைத் தாக்கினர். காப்பாளரின் கட்டாயத்திற்கு உள்பட்டு, இளைய அரசரான மூன்றும் எட்வர்டு, படையெடுப்பாளர்களுடன் நார்த்தாம்டன் உடன்படிக்கையை செய்து கொண்டார். ஸ்காட்லாந்து பூரண விடுதலையைப் பெற்றது.

வெற்றி வீரரும், ஸ்காட்டிய அரசருமான இராபர்ட் புரூஸ், குட்ட நோயினல் பீடிக்கப்பட்டவராக கி. பி. 1329 ஆம் ஆண்டில் காலமானர். இவரது அடுத்த வாரிசாக இராபர்ட்டின் மகனும்,

இளவயதினருமான டேவிட் புரூஸ் (David Bruce) என்பவர், ஸ்காட்லாந்தின் அரசராக அறிவிக்கப்பட, ஸ்காட்லாந்திய விவகாரத்தில் தலையிட்டுத் தம் ஆதிக்கத்தைத் திணிக்க மூன்றும் எட்வர்டு தம்மைத் தயார்படுத்திக் கொண்டார். அத்துடன் அதற்கான சந்தர்ப்பத்தையும் எதிர் நோக்கி வந்தார்; ஆனாலும் உடனடியாகச் செயல்பட விரும்பவில்லை.

இந் நிலையில் முன்பு, ராபர்ட் புரூஸால் ஸ்காட்லாந்திலிருந்து விரட்டப்பட்ட பிரபுக்கள், அந்நாட்டை படைகொண்டு தாக்குவதற்கான முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். இப் பிரபுக்கள், தங்களிடமிருந்து முன்பு பிடுங்கப்பட்ட நிலங்களை எப்படியும் ஸ்காட்லாந்தில் திரும்ப அடைய வேண்டுமென துடித்துக் கொண்டிருந்ததோடு, நார்த்தாம்டன் உடன்பாட்டின்கீழ் அந் நிலங்களை மீண்டும் பெற்றிராததால் ஏமாற்றமும் கொண்டிருந்தனர். இத்தகைய பிரபுக்களைப் பதவியிழந்தவர்கள் (Disinherited) என அழைத்தனர்.

இந் நிலமற்ற பிரபுக்கள் தங்களுக்கு எட்வர்டு பாலியல் (Edward Balliol) என்பவரைத் தலைவராகக் கொண்டிருந்தனர். எட்வர்டு பாலியலும், ஸ்காட்லாந்திலிருந்து விரட்டப்பட்டவர்களிலே ஒருவராக இருந்தது மட்டுமன்றி, முன்பு, அந் நாட்டை ஆண்ட ஜான் பாலியலின் மகனுமாவார். இவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு சதித்திட்டத்தில் ஈடுபட்டனர். அதன்படி, எட்வர்டு பாலியலை ஸ்காட்லாந்துக்கு அரசராக்குவதோடு, தத்தம் நிலங்களைத் திரும்பப் பெறவும். இவர்கள் முடிவு செய்தனர். அதற்கான ஏற்பாட்டில் இறங்கி, இரகசியப் படைகளையும் தயார் செய்து கொண்டனர்.

இக் கட்டத்தில் ஸ்காட்லாந்துடன் நேரிடைப் போரை விரும்பாத மூன்றும் எட்வர்டு, இப் பிரபுக்களையும் அவர்களின் வீரர்களையும் எல்லைக்கப்பால் ஊடுருவாமல் தடுக்க எண்ணினார். அதனால், ஆங்கில எல்லை வீரர்களுக்கு அவசரக் கட்டளை ஒன்றைப் பிறப்பித்துப் படையெடுப்பாளர்களைத் தடுத்து நிறுத்தும்படியும் ஆணையிட்டிருந்தார். ஆயினும், எட்வர்டு பாலியலும் அவரது வீரர்களும் கப்பல்களை வாடகைக்கு அமர்த்தி, ஹம்பர் ஆற்று வழியாக ஸ்காட்லாந்து போய்ச் சேர்ந்தனர்.

**டப்ளின் மூர் சண்டை:** படை கொண்டு வந்திருந்த எட்வர்டு பாலியலை ஸ்காட்டியப் படை கி. பி. 1332 ஆம் ஆண்டில் டப்ளின் மூர் (Dublin Moor) என்னுமிடத்தில் எதிர்த்தது. ஆயினும்,

தொடர்ந்து இச் சண்டையில் எட்வர்டு பாலியலே வெற்றி பெற்றார். ஸ்காட்டிய இளவயது அரசரான டேவிட் புரூஸ் நாட்டை விட்டு ஓடிவிட்டார்.

ஸ்கோன் (Scone) நகரில் தம்மை ஸ்காட்டிய அரசராக அறிவித்துக் கொண்ட எட்வர்டு பாலியல், இங்கிலாந்து அரசரின் நட்பையும், ஆதரவையும் பெறவேண்டி மூன்றும் எட்வர்டுக்கு எல்லைப்புறப் பகுதியான பெர்லிக் நகரைக் கொடுத்திருந்ததோடு, இவரது மேலாண்மையையும் ஏற்றுக் கொண்டார். மூன்றும் எட்வர்டும் பாலியலை ஸ்காட்லாந்தின் அரசராக ஒப்புக்கொண்டார்.

ஸ்காட்லாந்தில் எட்வர்டு பாலியலின் ஆட்சி, நான்கு மாதத்திற்குள்ளாகவே ஆட்டம் காண ஆரம்பித்தது. இவருடன் ஸ்காட்லாந்திற்கு வந்து சேர்ந்திருந்த பிரபுக்கள், தங்களுடைய நிலங்களைத் திரும்பப் பெற முயற்சி செய்ததால், அந் நிலங்களை அதுவரையில் அனுபவித்த உள்நாட்டுப் பிரபுக்கள் இதை எதிர்க்க, நாடே பெருங் குழப்பத்தில் ஆழ்ந்தது. இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு டேவிட் புரூஸின் ஆதரவாளர்களும் ஆயுதந் தாங்கிக் கலகத்தில் இறங்கினர்.

எட்வர்டு பாலியல், டம்ப்ரிஸ் என்னுமிடத்தருகே தங்கியிருந்த வேளையில், டேவிட்டின் ஆதரவாளர்கள் திடீரெனத் தாக்கி இவரை விரட்டினர். நாட்டையும் மகுடத்தையும் இழந்த எட்வர்டு, இங்கிலாந்தை வந்தடைந்து மூன்றும் எட்வர்டிடம் அடைக்கலம் புகுந்தார். டேவிட் புரூஸ் வரவழைக்கப்பட்டு மீண்டும் அரசராக்கப்பட்டார்.

காப்பாளர்களின் பிடியிலிருந்து விலகிச் சுதந்திரமாக ஆட்சி செய்து வந்த மூன்றும் எட்வர்டு, கி.பி. 1327ஆம் ஆண்டில் தமக்கேற்பட்டிருந்த அவமானத்தைப் போக்கிக் கொள்ளவும், தம் பாட்டனார் முதலாம் எட்வர்டு காலத்திய வீரதீரப் பெருமையை மீண்டும் ஸ்காட்டிய நாட்டில் நிலைநிறுத்தவும் இக் கட்டத்தில் படைப்பலத்தின் மூலம் பாலியலை அந் நாட்டுக்கு அரசராக்கவும் முடிவு செய்தார்.

**ஹாலிடன் ஹில் சண்டை :** கி.பி. 1333ஆம் ஆண்டு மார்ச் மாதம் பெரும் படையொன்றைக் கூட்டிக் கொண்டு மூன்றும் எட்வர்டு ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்தார். எட்வர்டு பாலியலும், அவரைப்போல் அந் நாட்டிலிருந்து விரட்டப்

பட்டிருந்த ஏனைய ஸ்காட்டிய பிரபுக்களும் இப் படையெடுப்பில் கலந்து கொண்டனர். மூன்றும் எட்வர்டின் படைகள் பெர்விக் (Berwick) என்ற எல்லைப்புற நகரத்தை முற்றுகையிட்டுக் கைப் பற்றின. இதனைத் தொடர்ந்து அங்கு வந்திருந்த ஸ்காட்டியப் படைகளை மூன்றும் எட்வர்டு, தம் பெரும் படையுடன் ஹாலிடன் ஹில் (Halidon Hill) என்னுமிடத்தில் சந்தித்துக் கடும் போரிட்டார். இதே ஆண்டில் ஜூலை 19ஆம் நாளன்று நடந்த இச் சண்டை மூன்றும் எட்வர்டுக்குப் பெரும் வெற்றியாக முடிந்தது. டேவிட் புரூஸ், மீண்டும் பட்டமிழந்து, ஃபிரான்சு நாட்டிற்கு ஓடி விட்டார்.

எட்வர்டு பாலியலைச் சில நிபந்தனைகளின் பேரில் மூன்றும் எட்வர்டு ஸ்காலட்ாந்தின் அரசராக்கினர். மீண்டும் அரச பதவியைப் பெற்ற பாலியல், மூன்றும் எட்வர்டுக்குக் கீழாளராக இருந்து ஆட்சி செய்ய ஒப்புக்கொண்டதோடன்றி, ஆங்கில மன்னருக்கு லோதியன் (Lothian), கிழக்கு கால்வே (Galloway) போன்ற பகுதிகளைப் பரிசாகத் தரவும் இசைந்தார்.

இங்ஙனமாகப் பானக்பர்னில் ஆங்கிலேயர் பெற்றிருந்த படுதோல்வி, மூன்றும் எட்வர்டால் ஹாலிடன் ஹில்லில் வஞ்சம் தீர்க்கப்பட்டதோடு, ஸ்காட்டிய அரசரான எட்வர்டு பாலியலும் ஆங்கில ஆதிக்கத்திற்குக் கட்டுப்படவேண்டியவராக்கப்பட்டார். இங்கிலாந்திற்குப் பெருமை கொண்டகாலமாக இஃது அமைந்தது.

ஆயினும், ஸ்காட்லாந்தைப் பொறுத்தவரையில் இது சோதனைக்குட்பட்ட காலமாகவே இருந்தது. ஏனெனில், ஆங்கிலேயரின் அதிகாரத்திற்கு உள்பட்டு ஆண்டு வந்த எட்வர்டு பாலியலை ஸ்காட்டிய மக்கள் வெறுக்கலாயினர். பெயரளவுக்கு மூன்றும் எட்வர்டும் இவரது கையாளான எட்வர்டு பாலியலும் ஸ்காட்லாந்தை ஆண்ட போதிலும், இவர்களுடைய ஆட்சி உறுதியற்றதாகவே இருந்தது. ஸ்காட்டிய மன்னர்களின் சுதந்திர வேட்கையும் தணிந்தபாடில்லை. ஆங்கில ஸ்காட்டியப் பகையும் தீர்ந்தபாடில்லை.

இந் நிலையில் ஃபிரான்சு நாட்டில் ஆங்கில அரசுக்குச் சொந்தமான காஸ்கனிப் பகுதியைப் ஃபிரெஞ்சு மன்னர் ஆறும் பிலிப் கைப்பற்ற முயற்சித்ததன் பேரில் இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்குமிடையே இருந்த உறவு கெட்டு, இறுதியில் போராக மாறியது. இதுவே நூறுண்டுப் போரின் தொடக்கமாகும் (கி.பி. 1304.).

ஹாலிடன் ஹில் சண்டையைத் தொடர்ந்து ஃபிரான்சு நாட்டிலே அடைக்கலம் புகுந்திருந்த டேவிட் புரூசுக்கு நூறுண்டுப் போர் கடுமையாக நடத்தப்பட்டு வரும் வேளையில் ஃபிரெஞ்சு அரசர் ஆறும் பிலிப், வேண்டிய உதவி கொடுத்து, ஸ்காட்லாந்துக்கு கி.பி. 1346 ஆம் ஆண்டில் அனுப்பி வைத்தார். நாடு திரும்பிய டேவிடை ஸ்காட்டிய மக்கள் மீண்டும் தங்கள் அரசராக ஏற்றுக் கொண்டு ஆங்கிலேயரின் கையாள் என்ற இழி பெயரைச் சுமந்து வந்த எட்வர்டு பாலியலை விரட்டி விட்டனர்.

**நெவில்ஸ் கிராஸ் சண்டை:** ஸ்காட்லாந்து மீண்டும் ஆங்கிலேயர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றது.

நூறுண்டுப் போர் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டிருக்க, மூன்றும் எட்வர்டு, ஃபிரான்ஸ் நாட்டிலே கலே என்ற துறைமுகத்தை முற்றுகையிட்டு வந்த காலத்தில் ஆங்கில மன்னர் இங்கிலாந்தில் இல்லாததை உணர்ந்த டேவிட் புரூஸ், தம் ஸ்காட்டியப் படைகளுடன் கி.பி. 1347–ல் இங்கிலாந்தின்மீது படையெடுத்தார். அரசர் இல்லையெனினும், ஆங்கிலேயப் படைகள் மூன்றும் எட்வர்டின் மனைவியும் அரசியுமான பிலிப்பியா (Philippia), யார்க் பிஷப், பெர்சி பிரபு (Lord Percy) ஆகியோரின் தலைமையில் ஸ்காட்டியப் படையெடுப்பாளர்களை நெவில்ஸ் கிராஸ் (Neville's Cross) என்னுமிடத்தில் சிதறியடித்தன. ஏராளமான ஸ்காட்டிய வீரர்கள் கொல்லப்பட்டதோடன்றி, காயமடைந்திருந்த டேவிட் புரூஸும் சிறைபிடிக்கப் பட்டார்

ஸ்காட்டிய விவகாரத்தில் மீண்டும் நேரடியாகக் கலந்து கொள்ள அவகாசமில்லாத இந் நேரத்தில் மூன்றும் எட்வர்டு, ஆங்கிலேயர்கள் வசம் சிக்கியிருந்த டேவிட் புரூஸைச் சிறையிலடைத்தார். ஸ்காட்டிய மன்னர் தம் சிறையிலிருக்கும் வரையில் அவர்களின் படையெடுப்புப் பயம் எதுவும் இருக்காதென்று எட்வர்டு நினைத்தது உண்மையாகவே இருந்தது. ஸ்காட்லாந்தில், டேவிட் புரூஸின் சார்பில் காப்பாளர் ஆட்சி நிறுவப்பட்டிருந்தது. அப்போதைக்கப்போது, இரு தரப்பினரும் எல்லைகளைக் கடந்து சில கைகலப்புகளில் ஈடுபட்டிருந்தனரேயன்றி, அடுத்த பதினோராண்டுகளுக்கு எந்தப் பெரும் போரும் இரு நாடுகளுக்குமிடையே இல்லாமலிருந்தது.

பதினோராண்டுகள் ஆங்கிலேயரின் சிறையிலிருந்த டேவிட் புரூஸ், தாம் விடுதலை செய்யப்பட்டால் நிறைய மீட்புப் பணம்

கொடுப்பதாக வாக்களித்ததன் பேரில், கி.பி. 1358ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்திற்குத் திரும்பிச்செல்ல அனுமதிக்கப்பட்டார்.




மூன்று எட்வர்டுகள் காலத்திய ஸ்காட்லாந்து

ஆயினும், தம் நாட்டை டேவிட் புரூஸ் அடைந்ததும், தாம் உறுதிமொழி கொடுத்ததுபோல், மீட்புப் பணத்தைத்

## நூருண்டுப் போரில் ஈடுபட்ட மன்னர்கள்

### இங்கிலாந்து

மூன்ரும் எட்வர்டு
(கி. பி. 1327—77)

- கருங்கவச இளவரசர் (Black Prince)
  - இரண்டாம் ரிச்சர்டு (கி. பி. 1377— 1399)
- ஜான் (காண்ட்) (லங்காஸ்டர் டியூக்)
  - நான்காம் ஹென்றி (1399—1413)
    - ஐந்தாம் ஹென்றி (1413—1422)
      - ஆரும் ஹென்றி (1422— 1461)

### ஃபிரான்ஸ்

ஆரும் பிலிப்
(கி. பி 1328—1350)
|
இரண்டாம் ஜான்
(1350—1364)
|
ஐந்தாம் சார்லஸ்
(1364—1380)
|
ஆரும் சார்லஸ்
(1380—1422)
|
ஏழாம் சார்லஸ்
(1422—1461)

திரட்ட முடியவில்லை. ஆகவே. இதற்கு இழப்பீடாக மூன்றும் எட்வர்டின் இரண்டாம் மகனை இளவரசர் லியோனலைத் (Prince Lionel) தம் வாரிசாக ஏற்றுக்கொள்ளும்படி டேவிட் புரூஸ், ஸ்காட்டியப் பாராளுமன்றத்தைக் கேட்டுக்கொண்டார். ஆயினும், அம் மன்றம் இதற்கு மறுக்க, மீண்டும் இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கும் போர் மூளக்கூடிய அபாயம் எழுந்தது. மூன்றும் எட்வர்டும் ஸ்காட்லாந்தின்மீது படையெடுக்கப் போவதாக மிரட்டினர். இச் சந்தர்ப்பத்தில், தங்களின் சுதந்திரத்தைக் காத்துக்கொள்ள வேண்டிய கட்டாயநிலையிலிருந்த ஸ்காட்டியர்கள், கி.பி. 1372ஆம் ஆண்டு, ஃபிரான்சுடன் ஓர் உறுதியான உடன்படிக்கையைச் செய்து கொண்டனர்.

நூருண்டுப் போரினல் அலைக்கழிக்கப் பட்டிருந்த மூன்றும் எட்வர்டு, மேற்கொண்டு ஸ்காட்டிய விவகாரத்தில் தலையிட விரும்பவில்லை.

ஆகவே, இறுதியில் மூன்றும் எட்வர்டின் ஸ்காட்டியக்கொள்கை தோல்வியினல் அவமானப்படவில்லையென்றாலும், நாட்டுக்குப் பெருமை தரக்கூடிய நிலையான வெற்றியாகவும் அமையவில்லை.

## நூருண்டுப் போர் (தொடக்கமும் முதல் நிலையும்)

ஐரோப்பாவின் முதல் தேசியப் போராகக் கருதப்படும் நூருண்டுப் போர், (Hundred Years' War, கி.பி. 1338-1453). ஏறத்தாழ நூருண்டுகளுக்கு இங்கிலாந்து, ஃபிரான்ஸ் ஆகிய இரு நாடுகளுக்கிடையே நடைபெற்ற பெரும் போராகும்.

மூன்றும் எட்வர்டு காலத்தில் தொடங்கிய இப் போர் நூருண்டுகளுக்குத் தொடர்ந்து நடைபெறவில்லை எனினும், அவ்வப்போது முக்கிய சண்டைகள் நிகழ்ந்து கொண்டே இருந்தன.

இப் போரில் ஈடுபட்ட ஆங்கில - ஃபிரெஞ்சு மன்னர்களின் வாரிசுப் பட்டியல் பக்கம் 296-ல் காட்டப்பட்டுள்ளது.

### போருக்கான காரணங்கள்

எந்த ஒரு சிறிய சிக்கலையும் வாள் முனையில் தீர்ப்பதையே முறையான செயல் என்று நினைக்கும் பதினான்காம் நூற்றாண்டில் தொடங்கியிருந்த நூருண்டுப் போருக்குச் சில முக்கிய காரணங்களிருந்தன.

**அரசியல் காரணங்கள்:** பிரிட்டன் முழுவதற்கும் இலண்டனில் இருந்து ஆண்ட, ஆங்கில அரசர் தாமே தலைவராக இருக்க வேண்டுமென நினைக்க, அதே நேரத்தில் பாரிசில் ஆண்ட மன்னரும் ஃபிரான்சு நாடு முழுவதற்கும் தாமே தலைவராக இருக்க வேண்டுமென நினைக்க, இந்த அடிப்படையிலே சில அரசியல் சிக்கல்கள் தோன்றலாயின.

ஆங்கிலேயப் படைகளின் உதவியுடன் ஸ்காட்டிய அரசுக் கட்டிலை எட்வர்டு பாலியல் அடையவும், அங்கிருந்து விரட்டப் பட்டிருந்த டேவிட் புரூஸுக்கு அப்போதைய ஃபிரெஞ்சு மன்னர் நாலாம் பிலிப் அடைக்கலம் கொடுத்திருந்தார். அது மட்டுமன்றி, ஆங்கிலேயரின் கைப்பாவையாக ஸ்காட்லாந்தில் ஆட்சி புரிந்து வந்த எட்வர்டு பாலியலுக்கு எதிராக, ஃபிரெஞ்சு மன்னர் ஸ்காட்டியக் கலகக்காரர்களுக்கும் உதவி செய்தார். அவசியமேற்பட்டால், டேவிட் புரூஸ் சார்பில் படையெடுத்து, அவரையே ஸ்காட்லாந்துக்கு அரசராக்கவும் தாம் தயாராக இருப்பதாக ஆறும் பிலிப் அறிவித்துக் கொண்டார். ஸ்காட் லாந்து உள்பட, பிரிட்டன் முழுவதையும் தம் பேராதிக்கத்தின் கீழ்க் கொண்டு வர விரும்பிய மூன்றும் எட்வர்டுக்கு ஃபிரெஞ்சு மன்னரின் செய்கையும் சொற்களும் எரிச்சலை உண்டாக்கின.

மேலும் ஆங்கில மன்னருக்குச் சொந்தமான ஃபிரான்சு நாட்டிலிருந்த கயனி (Guianee), காஸ்கனி (Gascony) ஆகிய பெருமானிய நிலங்களை எப்படியும் மீட்டுத் தம் நேரடி ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரவும் ஆறும் பிலிப் நினைத்தார். தம் முன்னோர்களால் பெறப்பட்டு இதுகாறும் காக்கப்பட்டு வந்த இப் பகுதிகளை இழக்க மூன்றும் எட்வர்டு தயாராக இல்லை. ஆக, மூன்றும் எட்வர்டின் கொள்கை, ஃபிரெஞ்சு மன்னரான ஆறும் பிலிப்பின் ஃபிரான்சு நாட்டை ஐக்கியப் படுத்தும் கொள்கைக்கு இடையூறாக இருந்தது.

தம் பகைவர்களான டேவிட் புரூசுக்கும், அவரது ஆதர வாளர்களுக்கும் ஆறும் பிலிப் உதவிசெய்ய முன் வந்திருந்ததற்குப் பதிலடி கொடுப்பது போல் மூன்றும் எட்வர்டு, ஃபிரெஞ்சு அரசரால் சில குற்றங்களுக்காக நாடு கடத்தப்பட்டிருந்த ராபர்ட் ஆர்டோயிஸ் (Robert of Artois) என்பவருக்கு அடைக்கலம் கொடுத்தார். மேலும், ஃபிரெஞ்சு அரசரின் எதிரியான (பவேரியா) பேரரசர் லூயி (Louis) என்பவருடனும் மூன்றும் எட்வர்டு தம் தூதுவர்களை அனுப்பி ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டிருந்தார்.

மூன்றும் எட்வர்டின் இச் செய்கையால் ஆத்திரமடைந்த நாலாம் பிலிப் கி. பி. 1333ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு நாட்டில் ஆங்கிலேயர்களுக்கு இன்னும் எஞ்சியிருந்த கைனி, காஸ்கனி பகுதிகளைத் தாக்கினர்.

தேசிய உணர்ச்சி எழுச்சி பெற்றுவந்த இக் காலத்தில் கைனி, காஸ்கனி பகுதிகளை இழந்து விட்டால், அது தங்கள் நாட்டின் பெருமைக்குப் பாதகம் விளைவிக்குமென மூன்றும் எட்வர்டின் குடிகளான ஆங்கிலேயர்களும் அவற்றை எப்படியும் மீட்டுப் ஃபிரெஞ்சு நாட்டை ஐக்கியப்படுத்த வேண்டுமென்று ஆறும் பிலிப்பின் குடிகளான ஃபிரெஞ்சுக்காரர்களும் விரும்ப, இது போரிலே முடிய வேண்டியதாக இருந்தது.

**பொருளாதாரக் காரணம்** : இங்கிலாந்தின் பொருளாதார வளர்ச்சிக்கு இந் நாடு காஸ்கனியோடு செய்து வந்த ஒயின் (Wine) வர்த்தகமும் ஒரு காரணமாக அமைந்தது காஸ்கனியின் மீது ஆறும் பிலிப் தாக்குதல் நடத்த, இதனல் இங்கிலாந்திலும் காஸ்கனியிலும் இருந்த ஒயின் வியாபாரிகள் பெரிதும் பாதிக்கப் பட்டனர். காஸ்கனி ஃபிரெஞ்சுக்காரர்களால் கைப்பற்றப்பட்டு விட்டால், தங்கள் இலாபகரமான வியாபாரம் அழிந்துவிடும் என்ற பயத்தால் ஆங்கில வியாபாரிகள் ஆறும் பிலிப்பின் தாக்குதலை முறியடிக்கும்படி, மூன்றும் எட்வர்டைத் தூண்டி விட்டனர்.

அடுத்ததாக, ஃபிரான்சின் வடமேற்குப் பகுதியிலிருந்த ஃபிளாண்டர்ஸ் (Flanders) என்னும் பகுதியோடும் ஆங்கிலேயர் கள் நெருங்கிய வர்த்தகத் தொடர்பை வைத்திருந்தனர்.

ஃபிளாண்டர்ஸ் மரபுப்படி ஃபிரெஞ்சு மன்னரின் மானிய உடைமையாயினும், பிளாண்டர்ஸ் மன்னர்கள் ஃபிரெஞ்சுக்காரர் களுக்கு விரோதமாக வியாபாரத் துறையில் நடந்து வந்தனர். அக் காலத்தில் ஃபிளாண்டர்ஸ், வடமேற்கு ஐரோப்பாவில் கைத் தொழிலில் முன்னேறியிருந்த நாடு. கம்பளி நெசவுத் தொழிலை முக்கியக் கைத்தொழிலாகக் கொண்டு முன்னேறியிருந்த ஃபிளாண் டர்ஸ் நெசவாளிகள், இங்கிலாந்திலிருந்து இறக்குமதியான கம்பளி நூலை அதிகமாகத் தங்கள் தொழிலின் மூலப்பொருளாக நம்பியிருந்தனர். இங்ஙனம் இங்கிலாந்துக்கும், ஃபிளாண்டர்சுக்கு மிடையே நிலவியிருந்த நெருங்கிய வியாபார உறவால், மூலப் பொருளான கம்பளி நூலை அனுப்பிய ஆங்கிலேய வியாபாரி

களுக்கும், கம்பளித் தொழிலில் ஈடுபட்டிருந்த ஃபிளாண்டர்ஸ் நெசவாளிகளுக்கும் அதிக இலாபம் கிடைத்து வந்தது.

இங்கிலாந்தின் பொருளாதார ஆதிக்கத்தை ஒடுக்குவதற்கும் தம்மை மதியாத ஃபிளாண்டர்ஸ் மக்களைத் தண்டிப்பதற்கும் ஏற்ற வகையில் ஆறும் பிலிப் மன்னர், தம் ஆளுநர் (பிளாண்டர்ஸ் கவுன்ட்) மூலமாக ஆணையிட்டு ஃபிளாண்டர்சில் (ஆங்கில) கம்பளி நூல் இறக்குமதியாவதைத் தடை செய்தார். சில ஆங்கில வியாபாரிகளும் ஃபிளாண்டர்ஸ் ஆளுநரின் கட்டளையால் கைது செய்யப்பட்டனர். இதனல், கென்ட் (Ghent), புருஜெஸ் (Bruges), யப்ரிஸ் (Ypres) போன்ற ஃபிளாண்டர்ஸ் பட்டணங்களில் கம்பளித் தயாரிப்புத் தொழில் மந்தமடைந்தது.

இவற்றல் அதிருப்தியடைந்த ஃபிளாண்டர்ஸ் பட்டணங்கள் கென்ட் நகரைச் சேர்ந்த ஜேம்ஸ் வான் ஆர்ட்டவெல்டு (James Van Artavelde of Ghent) என்பவரின் தலைமையில் கலகம் செய்து, ஃபிளாண்டர்ஸ் கவுன்ட்டை (ஆளுநர்) விரட்டின. இத்துடன் நிற்காமல் ஃபிளாண்டர்ஸ் மக்கள் மூன்றும் எட்வர்டின் உதவியையும், தங்களின் பாதுகாப்பிற்குக் கோரினர். ஆங்கில (கம்பளி) வியாபாரிகளும் அரசரை ஃபிளாண்டர்ஸ் பட்டணங் களுக்கு உதவும்படி வற்புறுத்தினர். தம் நாட்டு வியாபாரிகளின் குறைகளைப் போக்கக் கடமைப்பட்டிருந்த மூன்றும் எட்வர்டுக்கு ஃபிளாண்டர்ஸுக்கு உதவுவதும் ஒரு பொருளாதார அவசிய மாகப்பட்டது. மூன்றும் எட்வர்டு, தம் மானிய கீழாள்களான ஃபிளாண்டர்ஸ் மன்னர்களோடு கலந்து, தமக்கு விரோதமாகச் செயல்படுவதை ஆறும் பிலிப் எதிர்த்தார்.

**கடல் தகராறுகள்:** ஆயுதந்தரித்த ஃபிரெஞ்சுக் கப்பற் படை வீரர்களும், ஃபிரான்சு நாட்டில் படையுரிமை வைத்திருந்தோரும் வட கடலிலும் ஆங்கிலக் கால்வாயிலும் கொள்ளைத் தொழிலில் ஈடுபட்டு, அடிக்கடி பல ஆங்கிலக் கப்பல்களைக் கைப்பற்றி வந்தனர். இதனல், இங்கிலாந்தின் கடல் வாணிபமே பாதிக்கப் படுவதாக இருந்தது. சிற்சில சமயங்களில் இங்கிலாந்தின் கீழ்க் கரையிலிருக்கும் ஜெர்சி, குவர்ன்சி, வைட் தீவு ஆகிய இடங்களை யும் ஃபிரெஞ்சுக் கப்பற் படை வீரர்கள் கொள்ளையடிக்கத் தலைப் பட்டனர். இந்தக் கடற் கொள்ளைக் கூட்டத்தினரால் இங்கிலாந் துக்கும் காஸ்கனி, ஃபிளாண்டர்ஸ் பகுதிகளுக்குமிடையே நடந்து வந்த வியாபாரம் குலைய ஆரம்பித்தது. இக் கடற் கொள்ளைக்கு ஆறும் பிலிப்பின் ஆதரவு இருப்பதாக மூன்றும் எட்வர்டு நினைத்து அதற்கான எதிர் நடவடிக்கைகளில் இறங்கினர். ஆறும் பிலிப்

மன்னருக்கெதிராக, பிராபன்ட் (Brabant), கில்டெர்ஸ் (Guelders) ஆகிய டியூக்குகளுடனும், ஹாலண்டு, ஹைனல்ட் என்ற கவுன்டுகளுடனும் ஆங்கில மன்னர் கூட்டு அமைத்துக் கொண்டார்.

**வாரிசுப் பிரச்சினை:** ஃபிரான்சு நாட்டிலிருந்த கயினி, காஸ்கனிப் பகுதிகளை ஆங்கில மன்னர்கள் இதுவரையில் ஃபிரான்சு அரசரின் மானியப் பிரபுக்களாகவே பரிபாலித்து வந்தனர். மூன்றும் எட்வர்டும் அதற்கு விதிவிலக்கானவரல்லர்.

மேற்சொல்லப்பட்ட காரணங்களால் மூன்றும் எட்வர்டுக்கும், ஆறும் பிலிப்புக்கும் இடையே போர் மூள்வதற்கான சூழ்நிலை இருந்து வந்தது. அங்ஙனம் போர் மூண்டால், அது தம் (மானிய) மேலாளரை எதிர்த்து (மானிய) பிரபு செய்யும் கலகமாகவே கருதப்படுமென மூன்றும் எட்வர்டு நினைத்தார். அதே போன்று, நிலமானியத் திட்டத்தின் அடிப்படையில் ஆறும் பிலிப்பைத் தங்களின் மேலாளராக ஏற்று விசுவாச உறுதி மொழியைக் கொடுத்திருந்த ஃபிளாண்டர்ஸ் பிரபுக்களும் போரில் தம் உதவிக்கு வரமாட்டார்களென மூன்றும் எட்வர்டு நினைத்தார். இவர்களின் உதவியில்லாமல் ஃபிரான்சில் வெற்றிகரமாகப் போரைத் தாம் நடத்த முடியாதெனவும் மூன்றும் எட்வர்டுக்குத் தெரியும்.

ஃபிளாண்டர்ஸ் பிரபுக்கள், தம்மை ஃபிரெஞ்சு அரசரின் உண்மையான வாரிசு என ஏற்றுக் கொண்டால், அவர்களின் முழு ஒத்துழைப்பும் தமக்குக் கிடைக்கும்; தம்முடைய எதிர்ப்பும் மானியப் பிரபுவின் கலகமாக இல்லாமல், வாரிசுரிமைப் போராகக் கருதப்படுமென மூன்றும் எட்வர்டு நினைத்தார்.

மேலும், இங்கிலாந்திற்கு அரசராக இருக்கும் தாம், ஃபிரெஞ்சு அரசரின் நிலப் பிரபுவாக ஏனிருக்க வேண்டுமெனவும் மூன்றும் எட்வர்டு நினைத்தார். இதையெல்லாம், மனத்தில் வைத்தே மூன்றும் எட்வர்டு ஃபிரெஞ்சு அரசுக்கு உரிமை கொண்டாடினர்.

மூன்றும் எட்வர்டு, தமக்கு ஃபிரெஞ்சு வாரிசுரிமையைக் கேட்டிருந்ததில் ஓர் அடிப்படைக் காரணமும் இருக்கத்தான் செய்தது (பட்டியலைப் பார்க்கவும்).

ஃபிரான்சு அரசரான நான்காம் சார்லஸ் கி. பி 1328-ல் காலமானதும், அவரது சிறிய தந்தையின் மகனான ஆறும் பிலிப்

மூன்றும் பிலிப் (பிரெஞ்சு மன்னர்)

- நான்காம் பிலிப் (கி. பி 1285-1314)
  - நான்காம்லூயி (கி. பி 1314-1316)
    - ஜோன்
      - சார்லஸ் (கெட்டவர்) (Charlea the bad)
  - ஐந்தாம் பிலிப் (கி. பி 1316-1322)
  - நான்காம் சார்லஸ் (கி. பி. 1322-1328)
  - இசபெல்லா =
    - இரண்டாம் எட்வர்டு
      - மூன்றும் எட்வர்டு (இங்கிலாந்தின் அரசர்)
- சார்லஸ் (வலாய்)
  - நான்காம் பிலிப் (கி. பி. 1328 முதல்)

பட்டத்திற்கு வந்தார். நான்காம் சார்லஸின் தங்கையான இசபெல்லாவே நான்காம் எட்வர்டின் தாய் ஆவார். மூத்த பரம்பரையின் இறுதி அரசரான நான்காம் சார்லஸுக்குப் பிறகு, நேர் வாரிசான தாமே கி. பி. 1328-ல் ஃபிரெஞ்சு அரசுரிமையைப் பெற்றிருக்க வேண்டுமென மூன்றும் எட்வர்டு தம் வாரிசுரிமையைக் கேட்டார்.

ஆனால், ஃபிரெஞ்சு நாட்டின் வரலாற்றில் இதுவரை பெண் வழியில் வந்த எவரும் வாரிசுரிமையைப் பெற்றதில்லை. ஐரோப்பா முழுவதும் அப்போது வழக்கத்திலிருந்த சாலிக் சட்டத்தின்படி (Salic Law) ஆண் சந்ததியற்றவரின் சொத்து (அரசு), அக் குடும்பத்தைச் சார்ந்த வேறு ஆண்களைச் சாருமே தவிர, பெண் வழி வாரிசுக்குக் கிடைக்காது. மூன்றும் எட்வர்டு, தம் தாய் இசபெல்லாவின் வழியிலே உரிமை கொண்டாடினர். சாலிக் சட்டத்தின்படி ஃபிரெஞ்சுப் பிரபுக்கள் கி. பி. 1329ஆம் ஆண்டில் ஆறும் பிலிப்பையே ஃபிரெஞ்சு நாட்டின் அரசராகத் தேர்ந்தெடுத்திருந்தனர். இந்த ஏற்பாட்டை அன்று, மூன்றும் எட்வர்டு ஒப்புக் கொண்டிருந்ததன்றி, ஃபிரான்சிலிருந்த தம் மானிய நிலங்களுக்காக ஆறும் பிலிப்புக்கு இறை வணக்கம் செலுத்தியிருந்தார். ஆனால், அன்று அச் செய்கைககுக் காப்பாளர்களாக இசபெல்லா, மார்ட்டிமர் என்போரின் வற்புறுத்தலே காரணமென எட்வர்டு இப்போது வாதம் செய்தார்.

பெண் வழியில் வாரிசு கேட்க உரிமையுண்டு என்பது ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தாலும், ஃபிரெஞ்சு வாரிசு மூன்றும் எட்வர்டுக்குக் கொடுக்கப்படுவதைவிட, நான்காம் லூயியின் மகன் வழிப்பேரரான சார்லசுக்குக் கொடுக்கப்பட வேண்டியதாக இருந்திருக்கும்.

ஃபிரான்சின் வாரிசுரிமை தனக்குக் கிடைக்க வழியில்லை என்று மூன்றும் எட்வர்டுக்குத் தெரிந்திருந்தது போல், பதினான்காம் நூற்றுண்டில் வாள் பலமே மதிக்கப்பட்டதென்பதும், சட்ட நுணுக்கம் அல்ல என்பதும் இம் மன்னருக்குத் தெரியும். ஆகவே, தம்மைப் ஃபிரான்சு நாட்டின் அரசராக மூன்றும் எட்வர்டு அறிவித்துக் கொண்டது மட்டுமன்றி, ஆறும் பிலிப்புடன் போருக்கும் ஆயத்தமானர்.

**பிற காரணங்கள் :** இயல்பாகவே வீரக் குணங்களைப் பெற்றிருந்த மூன்றும் எட்வர்டு, விளம்பரத்தையும் விரும்பியவராக இருக்க, போர் ஒன்றை நடத்தித் தம் வெற்றிப் பட்டியலை

வளர்த்துக் கொள்ள நினைத்தார். இதற்கேற்ப, ஃபிரான்சுடன் நடத்தப்பட வேண்டிய இப் போருக்கு நாட்டிலும் பரவலான ஆதரவு இருந்தது.

போரிலே கலந்து கொண்டு வீர தீரச் செயல்களைக் காட்ட வேண்டுமென பொறுமையிழந்தவர்களாக இருந்த ஆங்கில இளைஞர்கள் ஒரு புறம், போர் ஒன்றை நடத்தி ஃபிரான்சை முறியடித்து, மேற்கு ஐரோப்பியப் பகுதிகளோடு நெருங்கிய வியாபார வாய்ப்பை அடைய வேண்டுமென்று காத்துக் கொண்டிருந்த வணிகர்கள் இன்னொருபுறம், ஃபிரான்சிலிருந்த அவிக்னன் (Avignon) நகரில் போப்பாண்டவரை இருக்கச் செய்து அவரைத் தங்களின் கைப்பாவையாக பிரெஞ்சு மன்னர்கள் ஆக்கியிருக்க, இதனால் வெகுண்டிருந்த திருச்சபையினர் மற்றொரு புறம், எல்லாவற்றிற்கும் மேலாகத் தாம் வெற்றிகரமான போரில் கலந்து கொண்டு பெருங் கொள்ளையடித்துப் பொருள்களைப் பெறவேண்டுமென்று கருதிய நாட்டின் பிரபுக்கள் ஒரு புறம், நாட்டின் பெருமை நமக்கும் பெருமை தரும் என நம்பிக் கிடந்த பாமர மக்கள் மற்றொரு புறம் ஆக, இங்கிலாந்து நாடே ஃபிரான்சு நாட்டுடன் போர்தொடுக்க மன்னருக்கு ஆதரவளித்தது.

இந் நிலையில் பல காரணங்களால் நூறாண்டுப் போர் தவிர்க்கப்படாததாகத் தொடங்கப்பட்டது.

**போரின் போக்கு**

**மூன்றும் எட்வர்டின் காலம்:** அதிகாரப் பூர்வமற்ற கடற் போரிலும் நாட்டுக் கொள்ளையிலும் படையெடுப்புகளிலும் இது வரை ஈடுபட்டிருந்த ஆங்கிலேயர்களும், ஃபிரெஞ்சுக்காரர்களும் கி. பி. 1337 ஆம் ஆண்டில் நேரிடையான போரில் இறங்கினர்.

ஃபிரான்சு நாட்டிற்கெதிராக ஒரு கூட்டணியை அமைக்க வேண்டியும், அதன் உதவி பெற்று ஃபிரெஞ்சுக்காரர்களைத் தாக்கவும் திட்டமிட்ட மூன்றும் எட்வர்டு, தம் படைகளுடன் நெதர்லாந்தை (Netherlands) அடைந்தார். ஆங்கில மன்னர் கூட்டணிக்கான முயற்சிகளில் ஈடுபட்டு ஆன்டவெர்ப் (Antwerp) என்னுமிடத்தில் தங்கியிருக்கும்போது, கூலிக்கு அமர்த்தப்பட்டிருந்த ஃபிரெஞ்சுக் கப்பற் படை, இங்கிலாந்தின் தென்கரைகளைத் தாக்கிச் சௌதாம்ப்டன் நகரைக் கொள்ளையடித்து வெற்றிகரமாக நாடு திரும்பியது. இதனால் ஆத்திரமடைந்த எட்வர்டு, கி.பி. 1338ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நெதர்லாந்து வழியாக வட

ஃபிரான்சைத் தாக்கிக் காம்ரே (Comray) நகரைத் தம் பெரும் படைகளுடன் முற்றுகையிட்டார். ஆயினும், ஃபிரெஞ்சுக்காரர்களின் தீவிர எதிர்ப்பால் மூன்றும் எட்வர்டால் ஒன்றையும் சாதிக்க முடியவில்லை. தம் படைக்கான செலவிற்காகவும் கூட்டணி நண்பர்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்திற்காகவும் பொருள் பெறவேண்டி எட்வர்டு நாடு திரும்பினர்.

**ஸ்லூயிஸ் கடற்சண்டை :** தேவையான பொருளும் பெரும் படையும் பெற்றுக் கொண்ட மூன்றும் எட்வர்டு, கி.பி. 1340ஆம் ஆண்டில் தம் கப்பற் படையுடன் ஃபிளாண்டர்ஸை நோக்கிப் புறப்பட்டார். இதே ஆண்டு ஜூன் மாதம் 14ஆம் நாள், ஸ்லூயிஸ் (Sluys) என்னும் இடத்திற்கு அருகே 190 ஃபிரெஞ்சுக் கப்பல்கள் எதிர்ப்பட்டன. ஆங்கிலேயக் கப்பல்களை மேற்கொண்டு செல்லவொட்டாமல் ஃபிரெஞ்சுக்காரர்கள் தங்கள் கப்பல்களை மூன்று வரிசைகளில் அருகருகே கடலில் நிறுத்தி, அவற்றின் குறுக்கே தடைகளையும் வைத்திருந்தனர். போர்த்தந்திரம் தெரிந்திருந்த மூன்றும் எட்வர்டு, தாம் தம் கப்பல்களோடு தப்பி ஓடுவதுபோல் பாவனைகாட்டி, ஃபிரெஞ்சுக் கப்பல்கள் தம்மைத் தொடுமாறு தூண்டினர். தடைகட்கு அப்பால் நிறுத்தப்பட்டிருந்த ஃபிரெஞ்சுக் கப்பல்கள், பாதுகாப்பான இடத்தை விட்டகன்று பின்தொடர்ந்து வந்த வேளையில் மூன்றும் எட்வர்டு, தம் கப்பல்களைத் திடீரென்று திருப்பி, எதிரியின் கப்பல்களோடு மோதினர். இந்த எதிர்பாராத தாக்குதலினல், ஃபிரெஞ்சுக் கப்பற்படை நிலை குலைய ஆரம்பித்தது. தொடர்ந்து நடந்த கடும் சண்டையில் பல ஃபிரெஞ்சுக் கப்பல்கள் மூழ்கடிக்கப் பட்டன; ஏராளமான ஃபிரெஞ்சு வீரர்களும் கொல்லப்பட்டனர். இக் கடற்படை வெற்றியின் விளைவாக, ஆங்கிலக் கால்வாயில் இங்கிலாந்து ஆதிக்கம் பெற்றது; மூன்றும் எட்வர்டு தம்மைக் 'கடல் மன்னன்' (Sea King) என அழைத்துக்கொண்டார். இது தவிர, போரைப் பொறுத்தவரையில் மூன்றும் எட்வர்டுக்கு ஃபிரான்சில் எவ்விதப் பயனும் கிடைக்கவில்லை. செயின்ட் ஓமர் (St. Omer), டோர்னய் (Tournai) ஆகிய ஃபிரெஞ்சுக் கரையோரப் பகுதிகளை மூன்றும் எட்வர்டு தாக்க முயன்றும் பயனில்லை. இக் கட்டத்தில், போரில் சலிப்படைந்த இரு கட்சியினரும் போர் நிறுத்த உடன்பாட்டைச் செய்து கொண்டனர். ஆயினும், கி.பி. 1342ஆம் ஆண்டு வரையே இத் தாற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம் நீடித்தது.

**பிரிட்டானியப் பிரச்சினை :** பிரிட்டானியப் (Brittany) பகுதியில் கோமகளுக இருக்கவேண்டுமென்பதில் மான்ட்ஃபோர்ட்

ஜான் (John of Mantford) என்பவருக்கும், சார்லஸ் பிளூவா (Charles of Blois) என்பவருக்கும் உரிமைத் தகராறு மூண்டது. ஆறும்பிலிப், பின்னவரை ஆதரித்ததால், மூன்றும் எட்வர்டு மான்ட்ஃபோர்ட் ஜானை ஆதரித்தார். ஆகவே, பிரிட்டானியாவில் நடந்த உள்நாட்டுப் போரில், தத்தம் கட்சியினருக்கு உதவி செய்ய ஆங்கிலேயர்களும் ஃபிரெஞ்சுக்காரர்களும் மீண்டும் போரிடத் தொடங்கினர். மூன்றும் எட்வர்டு, தாமே படைத்தலைமை கொண்டு வடபிரிட்டானியாவைச் சார்லஸ் மான்ட்ஃபோர்ட்டுக்கு மீட்டுக் கொடுத்தார்; ஆயினும், பிரிட்டானியா பின்பாதிப் பகுதி இன்னும் ஃபிரெஞ்சுக்காரர் வசமே இருந்தது.

பிரிட்டானியாப் போரில் எத் தரப்பினரும் இறுதியான வெற்றியைப் பெற முடியாமையால், மீண்டும் போர் நிறுத்த உடன்படிக்கைக்கு ஏற்பாடாகியது. இந்தத் தாற்காலிக அமைதியும் மூன்றாண்டுகளுக்கே நீடித்தது.

ஃபிரெஞ்சுக்காரரின் கைப்பாவையாக அவிக்னன் நகரிலிருந்த ஆறும் கிளமென்ட் என்ற போப்பாண்டவர், இத் தருணத்தில் புரோவிசர்ஸ் (Provisors) அல்லது பாதுகாப்பாளர் என்ற பிரதிநிதிகளை இங்கிலாந்தின் திருச்சபைக்கு நியமித்து அனுப்பினர்; அன்னியர்களான இவ் வதிகாரிகளை ஏற்றுக்கொள்ள ஆங்கிலப் பாராளுமன்றமும், மூன்றும் எட்வர்டும் மறுத்தமையால், போப்பாண்டவரின் செய்கைக்கு ஆறும் பிலிப் ஆதரவளித்தார். ஆகவே, போர் மீண்டும் தொடங்கியது.

**கிரெசி சண்டை:** கி. பி. 1345ஆம் ஆண்டில், போரை மீண்டும் தொடர்வதெனத் தீர்மானித்த மூன்றும் எட்வர்டு, தம் பெரும் படைகளுடன் நார்மாண்டிக் கரையிலிருந்த லா ஹேக் (La Hague) என்னுமிடத்தில் இறங்கினர். நார்மாண்டியிலிருந்து படையெடுப்பை நடத்தி, மத்திய ஃபிரான்சு நாட்டின் வழியாக, ஃபிரெஞ்சு தலைநகரான பாரீசைத் தாக்கிக் கைப்பற்றவேண்டுமென்பதே இவரது திட்டமாக இருந்தது. எதிர்பாராத இடத்திலே, சிறிது நேரத்தில் கரையை அடைந்த ஆங்கிலப் படைகளுக்கு எவ்வித எதிர்ப்புமில்லாத இச்சமயத்தில், வாலோஜனஸ், காரன்டன், செயின்ட்லோ, கெய்ன் (Caen) என்னுமிடங்களை மூன்றும் எட்வர்டு மிக எளிதாகக் கைப்பற்றிக்கொண்டு, பாரீசை நோக்கி முன்னேறினர்.

ஆயினும், எதிரி நாட்டிலே ஆங்கிலப் படைகளின் முன்னேற்றம் ஆமை வேகத்திலேயே இருந்தது. இதற்கிடையே, ஆறும்

பிலிப் தம் தலைநகரைக் காக்க கடும் முயற்சியிலே இறங்கியிருந்தார்; சுமார், 60,000 வீரர்களைக் கொண்ட ஃபிரெஞ்சுப் படை பாரீஸில் காத்திருந்தது. ஆரும் பிலிப்புக்கு உதவிப் படைகளும்,




கிரெசி சண்டை (1346)

வரத் தொடங்கின; பாரீஸை அடைவதற்கான ஆற்றுப்பாலங்களும், ஃபிரெஞ்சுக்காரர்களால் அமைக்கப்பட்டிருந்தன. மேற்கொண்டு முன்னேறினல், தம் படை சுற்றி வளைக்கப்படலாம் என மூன்றும் எட்வர்டு நினைத்தார். மேலும், ஆபத்து வந்தால் தம் படைகள் அடைக்கலம் புகுவதற்கேற்ற நட்புப் பிரதேசங்களும் அருகில் இல்லை என்பதை உணர்ந்த எட்வர்டு, பாரீஸைத் தாக்கும் திட்டத்தைக் கைவிட்டு நட்புப் பிரதேசமான ஃபிளாண்டர்ஸ் நோக்கித் திரும்பினர்; இதற்கிடையே ஆரும் பிலிப்பின் படைகள் ஆங்கிலப் படைகளை விரட்டிவர ஆரம்பித்தன. மிகவும் பிரயாசைப்பட்டு ஆங்கிலப் படைகள், சோம் ஆற்றங்கரையைக் கடந்து ஃபிளாண்டர்ஸை நெருங்கிக்கொண்டிருக்க, கிரெசி (Crecy) என்னுமிடத்தில் விரட்டி வந்த ஃபிரெஞ்சுப் படையினர் ஆங்கிலேயப் படையை எட்டிப் பிடித்தனர். அடுத்து நடந்ததே வரலாற்றுப் புகழ் பெற்ற கிரெசிச் சண்டையாகும்.

கி. பி. 1346ஆம் ஆண்டு ஆகஸ்டு 26ஆம் நாளில் நடந்த இச் சண்டையில் எண்ணிக்கையில் மிகுந்திருந்த ஃபிரெஞ்சுப் படைகளைப் போர்த் தந்திரங்களையும், புதிய போர்க்கருவிகளையும்

திறமையாகப் பயன்படுத்தி ஆங்கிலேயர் பெருவெற்றி பெற்றனர். ஆங்கிலேயர்கள் இச் சண்டையில் உபயோகித்த நீண்ட வில் (Long bow) தொலைதூரக் கணைகளாகப் பாய்ந்து, ஃபிரெஞ்சுக் குதிரைப் படையினரையும் காலாள் படையினரையும் நாசம் செய்தது. அரசர் எட்வர்டின் மூத்த மகனை கருங்கவச இளவரசர் (Black Prince), தம் படையினருடன் எஞ்சியிருந்த ஃபிரெஞ்சு வீரர்களைக் கொன்று சாய்த்தார். கடுமையாக நடந்த இச் சண்டையில் 1,500 ஃபிரெஞ்சு நைட்வீரர்களும், 15,000 காலாள் படையினரும் கொல்லப்பட்டனர். ஆங்கிலேயர் தரப்பில் மிகச் சிலரே கொல்லப்பட்டிருந்தனர். பண்டைய படைமானிய முறையினால் நடத்தப்பட்ட போர் முறையில், கவசமணிந்த குதிரை வீரர்கள் எதிரிப் படைகளிடையே பெரும் நாசம்செய்து வந்தனர். ஆயினும், கிரெசியில் ஆங்கிலேயர் பெற்ற இவ் வெற்றி, அக் கூற்றைப் பொய்ப்பித்து, வில்லாளிகளின் போர்த்திறமையை வெளிப்படுத்தியது.

கிரெசியில் பெருவெற்றி பெற்றிருந்த மூன்றும் எட்வர்டு, ஃபிரெஞ்சுப் படைகளின் தாக்குதல் அபாயத்திலிருந்து தப்பியவராக வடக்கு நோக்கிச் சென்று இங்கிலாந்துக்குத் திரும்பும் வழியில் ஃபிரான்சின் தலைசிறந்த துறைமுகமான கலே (Calais) நகரைக் (கி. பி. 1347) கைப்பற்றினர். தமக்கு அடிபணியாத ஃபிரெஞ்சு மககளையெல்லாம் விரட்டிவிட்டு, புதிய ஆங்கிலேயக் குடும்பங்களை மூன்றும் எட்வர்டு ஆங்குக குடியமர்த்தினர்.

போரைத் தொடர்ந்து நடத்த மூன்றும் எட்வர்டு விரும்பினலும், தாம் கேட்டிருந்த பொருள் பற்ருக்குறையினலும், தம கூட்டாளிகளான பிளமிங்குகள், நெதர்லாந்து பிரபுக்களின் ஒத்துழைப்பு இன்மையாலும் இக் கட்டத்தில் அமைதியை நாடி ஃபிரான்சுடன் போர்நிறுத்த உடன்பாட்டைச் செய்துகொண்டார்.

தோல்விகளினல் உற்சாகம் இழந்து உடல்நலம் குன்றி, ஃபிரெஞ்சுமன்னர் ஆரும் பிலிப் காலமாகிவிட்டமையால் (கி. பி. 1350), இரண்டாம் ஜான் ஃபிரான்சுக்கு மன்னரானர்.

**வின்சென்ஸி கடற் சண்டை :** ஐரோப்பாவில் அப்போது கடுங் கொள்ளைநோய் பரவியதால், நிலப்போரில் மந்தம் ஏற்பட்டிருந்தது. ஆனலும், கடலில் இருதரப்பாரும் மோதிக்கொண்டனர். தம் தந்தையாரின் கொள்கையைப் பின்பற்றிய புதிய ஃபிரெஞ்சு மன்னரான ஜான், தாம் பதவிக்கு வந்த சிறிது காலத்திற்குள்ளாகவே, காஸ்டைல் (ஸ்பெயின்) இளவரசரோடு சேர்ந்து ஒரு

கப்பற்படையை இங்கிலாந்தின்மீது ஏவிவிட்டார். ஆயினும், வின்சென்ஸி கடற்கரையை அடுத்து நடந்த இக் கடற்சண்டையில் ஆங்கிலேயர்களே வெற்றி பெற்றனர்.

போர் நிறுத்த உடன்படிக்கை ஃபிரெஞ்சுக்காரர்களால் மீறப் பட்டிருந்த நிலையில், மூன்றும் எட்வர்டு மீண்டுமொருமுறை ஃபிரான்சு நாட்டின்மீது படையெடுத்தார். கடுமையாக வீசிய புயலினால் இவரது கப்பல்கள் பல சேதமாகி விட்டதால், இம் முயற்சி எவ்விதப் பயனையும் கொடுக்கவில்லை. ஆயினும், தம் மூத்த மகனும் 'கிரெஸி' வெற்றி வீரருமான கருங்கவச இளவர சரைக் காஸ்கனிக்கு ஆளுநராக அமர்த்திவிட்டு, இவருக்கு உதவி யாகத் தம் இளைய மகனை ஜான் காண்ட் (லங்காஸ்டர்) என் பவரைப் பிரிட்டானியாவில் படைகளுடன் தங்கவிட்டு, மன்னர் நாடு திரும்பிவிட்டார் (கி. பி. 1355).

**பாய்ட்டியர்ஸ் சண்டை:** போர் வெறியரான கருங்கவச இளவரசர், கொள்ளையடிப்பதில் நாட்டங் கொண்டவராக இருந் தார். தம் வீரர்களுடன் காஸ்கனிப் படைகளின் உதவியையும் பெற்றிருந்த கருங்கவச இளவரசர், ஒருமுறை லாங்குடாக் (Langueduc), டூலூஸ் (Touloux) என்ற இடங்களைச் சூறையாடி, ஃபிரெஞ்சு நாட்டில் வெகுதூரம் ஊடுருவியிருந்தார்; ஏழு வாரங் களில் 500 கிராமங்களையும், பட்டணங்களையும் இவர் தம் படை களுடன் ஃபிரான்சில் சூறையாடினர். கருங்கவச இளவரசரின் இச் செய்கை, ஃபிரான்சு மன்னரான ஜானின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டது.

கி. பி. 1356ஆம் ஆண்டில் தாம் கொள்ளையடித்த பொருள் களோடு கருங்கவச இளவரசர், லூவார் நதிப் பகுதியிலிருக்கும் பார்டியக்ஸின் திரும்பிக் கொண்டிருக்கையில் ஃபிரெஞ்சு அரசர் தம் பெரும் படையுடன் பாய்ட்டியர்ஸ் (Poitiers) என்னுமிடத் தில் வழிமறித்தார்.

கருங்கவச இளவரசரின் படை, ஃபிரெஞ்சுப் படையில் ஐந்திலொரு பங்கே இருந்தது; இவரது படையினரிடம், கொள்ளையடித்த பொருள்களும் ஏராளமாக இருந்தன. சண்டை யைத் தவிர்க்க ஆங்கிலேயர்கள் விரும்பினாலும், ஃபிரெஞ்சுப் படைகள் வழிமறித்து நின்றதால், இச் சண்டை தவிர்க்க முடியாததாக இருந்தது.

கிரெசி சண்டையில் ஃபிரெஞ்சுக் குதிரைப் படை வீரர்கள் ஆங்கில வில்லாளிகளுக்கு இரையாகிவிட்டதை நினைவில் கொண்

டிருந்த ஜான் மன்னர், பாய்ட்டியர்ஸில் தம் காலாட் படைகளுடன் அணிவகுத்து நின்றூர். ஏறத்தாழ எட்டாயிரம் பேர்களைக் கொண்ட ஃபிரெஞ்சுப்படையினர், சண்டையைத் தொடங்கி




பாய்ட்டியர்ஸ் சண்டை (1356)

ஆங்கிலேயர்களை நெருங்கினர். ஆயினும், இப் போர்க்களத்திலும் ஆங்கில வில்லாளிகள் பெரும் பங்கேற்றனர். முன்னணியிலிருந்த பல ஃபிரெஞ்சு வீரர்கள் கொல்லப்பட்டனர். இருப்பினும், ஒரு கட்டத்தில் ஃபிரெஞ்சுப் படைகள் ஆங்கிலேயர்களை சுற்றி வளைப்பதில் வெற்றி கண்டது. ஆனல், தகுந்த நேரத்தில் உதவிப் படையை அனுப்பிக் கருங்கவச இளவரசர் ஃபிரெஞ்சுப் படையைக் குழப்பமடையச் செய்துவிட்டார். ஆங்கிலேயர்களுக்கு உதவியாக இச் சண்டையில் கலந்து கொண்ட காஸ்கானியப் படைத் தலைவரான காப்டல்-டி-புஷ் (Capttal De-Buch) என்பவர், ஃபிரெஞ்சுப் படைகளைப் பின்புறமிருந்து தாக்கிய அதே நேரத்தில் கருங்கவச இளவரசர் எதிர்ப் படைகளை முன்புறமிருந்து தாக்க, ஃபிரெஞ்சுக்காரர்கள் இடையில் சிக்கிப் பெருந் தோல்வியடைந்தனர்.

கி. பி. 1356-ல் செப்டம்பர் 19ஆம் நாள் நடந்த இச்சண்டையின் முடிவில் வீராவேசமாகப் போரிட்டும் ஃபிரெஞ்சு அரசர் இரண்டாம் ஜான், ஆங்கிலேயர்களால் சிறைப்பிடிக்கப்பட்டார். இவருடன், 26 பிரபுக்களும், 1900 நைட் வீரர்களும் கைதாயினர்.

பாய்ட்டியர்ஸ் வெற்றி, கருங்கவச இளவரசரின் பெருமையை மேலும் உயர்த்தியது.

**பிரெடக்னி உடன்பாடு:** ஃபிரெஞ்சு அரசர், இப் போரில் கைதானதால், ஃபிரான்சு நாட்டில் குழப்பமான நிலை ஏற்பட்டது. அரசாங்கமே சீர்குலைந்து நின்றது; போரை மேற்கொண்டு நடத்த பொது விருப்பம் இருந்தாலும், அதற்கான தெம்பு ஃபிரெஞ்சுக்காரர்களிடையே இல்லை. அதேபோன்று, தாங்கள் எத்தனைக் கடுமையான போர் செய்தாலும், ஃபிரான்சு நாடு முழுவதையும் கைப்பற்றிவிட முடியாதென ஆங்கிலேயர்களுக்கும் தெரியும். இந் நிலையில், இரு தரப்பினருக்கும் கி. பி. 1360-ல் பிரெடக்னி உடன்படிக்கை (Treaty of Britigini) ஏற்பாடாயிற்று.

இவ் வுடன்படிக்கையின்படி, மூன்றும் எட்வர்டுக்கு ஃபிரான்சிலிருந்த கலே, கினி, பான்தியு, பாயிட்டோ, மேலும் கயானு, செயின்ட் டோங் (Tonge), பெரிகோர்டு (Pericord), லிமோசின் (Lymousin), குவர்ஸி (Quercy), ருவார்க்கி (Rouerque), பிகோர் (Biqore), அக்னைய்ஸ் (Agnais) போன்ற இடங்கள் முழு இறைமை அதிகாரங்களுடன் கொடுக்கப்பட்டன. இனி, ஃபிரெஞ்சு அரசர்களுக்கு மூன்றும் எட்வர்டோ இவரது சந்ததியார்களோ இறை வணக்கம் செலுத்த வேண்டியதில்லை எனவும், மேற்கொண்டு ஃபிரான்சின் வாரிசுரிமையை மூன்றும் எட்வர்டு விட்டுக் கொடுக்க வேண்டுமெனவும், பிரிட்டானிய விவகாரத்திலும் இவ்வரசர் இனி தலையிடக் கூடாதெனவும் ஏற்பாடாகியது. சிறைப்படுத்தப்பட்டிருந்த இரண்டாம் ஜான் அரசரை விடுவிக்க மீட்புப் பணமாக 5,00,000 பவுன்களை ஃபிரான்சு கொடுக்க வேண்டுமெனவும், மேலும் ஸ்காட்லாந்துடன் செய்து கொண்டிருந்த உடன்படிக்கையை ஃபிரெஞ்சுக்காரர்கள் ரத்துச் செய்யவேண்டுமெனவும், இவ் வுடன்படிக்கை வற்புறுத்தியது.

இவ் வுடன்படிக்கையின்படி, ஃபிரான்சில் மூன்றும் எட்வர்டின் எல்லை, வடமேற்கிலே ஏறத்தாழ நான்டெஸ் (Nantes) வரையிலும், தெற்கில் டூலூஸ் வரையிலும் பரவியிருக்க, ஃபிரெஞ்சு நாட்டில் பாதிக்குமேல் தம் நேரடி ஆதிக்கத்தின்கீழ் மூன்றும் எட்வர்டு கொண்டுவந்துவிட்டமையால், இவரது புகழ் உச்சகட்டத்திலிருந்தது.

இவ்வுடன்பாடு கி. பி. 1336-லிருந்து நடந்துவந்த போரை நிறுத்தி வைத்ததெனினும், வருங்காலச் சச்சரவுகளுக்கும் பிரெடக்னி ஏற்பாடு காரணமாகவே இருந்தது.

மீட்புப்பணம் கொடுத்துத் தம் விடுதலையைத் தேடிக்கொண்ட ஜான் அரசர், தமக்குப் போரிலும் உடன்பாட்டிலும் ஏற்பட்




1360-ல் ஆங்கிலேயரின் ஆதிக்கம்

டிருந்த அவமானத்தைத் துடைக்க துப்பற்றவராக கி. பி. 1364ஆம் ஆண்டு காலமாகிவிடவே, இவரது மகனன் ஐந்தாம் சார்லஸ், ஃபிரெஞ்சு அரசராகப் பட்டம் ஏற்ருர். வற்புறுத்தப்

பட்ட சூழ்நிலையில் செய்துகொள்ளப்பட்டிருந்த பிரெடக்னி உடன்படிக்கையை இப் புது அரசர் ஏற்றுக்கொள்ளத் தயங்கினர். ஃபிரான்சிலிருந்து ஆங்கில ஆதிக்கத்தை அகற்றித் தம் தாய்நாட்டிற்கு ஏற்பட்ட களங்கத்தைத் துடைக்க ஐந்தாம் சார்லஸ் துடித்துக் கொண்டிருந்ததோடு, தம் திறமையுள்ள பெர்ட்ரண்-டு-குயிஸ்லின் (Bertrand-du-Guesclin) என்ற தளபதியின் தலைமையில் படை முறையைச் சீர்படுத்தி விடுதலைப் போருக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்.

**காஸ்டைல் விவகாரம்:** இதே சமயத்தில் காஸ்டைல் (Castile) என்னும் ஸ்பானியப் பகுதியில் வாரிசுப் போர் மூண்டது. அதன் அரசரான கொடூர பெட்ரோ (Pedro the cruel) என்பவர், அவருடைய சகோதரரான ஹென்றி டிராஸ்டமாரா (Henry Trastamara) என்பவரால் நாட்டை விட்டு விரட்டப்பட்டிருந்தார். பட்டத்தை அபகரித்துக் கொண்ட ஹென்றி, தம் புதிய நிலை நீடிக்க வேண்டுமென்றால், அன்னியர் உதவி தேவை என்பதை உணர்ந்தவராக ஃபிரெஞ்சுக்காரர்களின் தயவை நாடினர். கொடூர பெட்ரோ, தாம் இழந்த அரசைப் பெறுவதற்காக, அக்விட்டேனில் அரசப் பிரதிநிதியாக ஆட்சி செலுத்திவந்த கருங்கவச இளவரசரின் உதவியை வேண்டினர். தம்மை மீண்டும் காஸ்டைலில் அரசராக்கிவிட்டால் போருக்காகும் செலவு முழுவதையும் கொடுத்து விடுவதாகவும், மேலும், தம் பிள்ளைகளை அதுவரை இளவரசரிடம் பிணையப் பொருள்களாக ஒப்படைக்கவும் பெட்ரோ உறுதிமொழி கொடுத்தார்.

முதலில் சற்றுத் தயங்கினலும், சண்டையிடுவதில் பேரார்வம் கொண்டிருந்த ஆங்கில இளவரசர், காஸ்டைல் விவகாரத்தில் தலையிடத் தீர்மானித்தார். கி. பி. 1367-ல் பெட்ரோவுக்கு உதவ வேண்டித் தம் படைகளுடன் காஸ்டைலை அடைந்த கருங்கவச இளவரசரின் படைகளை, ஃபிரான்சின் உதவியைப் பெற்றிருந்த ஹென்றி டிராஸ்டமாரா, நவரெட் (Navarette) என்னுமிடத்தில் எதிர்த்துத் தோல்வியடைந்தார்.

ஹென்றி, ஃபிரான்சு நாட்டிற்கு ஓடிவிட்டதைத் தொடர்ந்து பெட்ரோ மீண்டும் காஸ்டைலின் அதிபரானர். ஆங்கில இளவரசரும் தம் படைகளுடன் சிலகாலம் காஸ்டைலின் தலைநகரமான பர்கோஸ் நகரில் தங்கியிருந்தார். இருப்பினும், தாம் முன்பு கொடுத்திருந்த வாக்குப்படி பெட்ரோ பெரும் பொருளை இளவரசருக்குக் கொடுக்க முடியாமல் திண்டாடினர். இதனல்,

அதிருப்தியடைந்த கருங்கவச இளவரசர், தம் படைகளுடன் அக்குவிடெயினுக்குக் கிளம்பிச் சென்றூர். இதற்குப்பின், ஃபிரெஞ்சுக்காரர்கள் உதவி பெற்றிருந்த ஹென்றி, காஸ்டைல்மீது படையெடுத்துத் தம் சகோதரரான பெட்ரோவைக் கொலை செய்து அரசைக் கைப்பற்றிக் கொண்டார். ஆக அக்குவிடெயின் விவகாரத்தில் ஆங்கில இளவரசரின் தலையீடு பயனற்றதாகவே முடிந்தது; ஆயினும், இப் படையெடுப்பினுல் ஆங்கிலேயருக்குச் சில தொல்லைகள் வந்து சேர்ந்தன.

பெட்ரோவுக்கு உதவி செய்யும் நோக்கத்தில் இளவரசர் பெரிய தொகை ஒன்றைக் கடனுக ஏற்கனவே வாங்கியிருந்தார். இக் கடனை அடைக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்த கருங்கவச இளவரசர் (இளவரசர் எட்வர்டு), இதற்காக அக்குவிடெயின் மக்கள்மீது புதுவரிகளை விதித்தார். பிரெடக்னி உடன்பாட்டின்கீழ் ஆங்கிலேயருக்குக் கிடைத்திருந்த அந்தப் பல பகுதிகளிலும் இவ் வரிகள் விதிக்கப்பட்டன ; இவ் வரிகளை எதிர்த்து மக்கள் கலகங்கள் செய்ய, இளவரசர் இவற்றை மிக முரட்டுத்தனமாக அடக்கினுர். இப் பகுதிகளில் வாழ்ந்த பிரபுக்களும் தங்களை ஆங்கில ஆட்சியிலிருந்து காப்பாற்றும்படி ஃபிரெஞ்சு அரசரான ஐந்தாம் சார்லசை வேண்டிக்கொண்டனர். இந் நிலையில் மீண்டும் கி. பி. 1370ஆம் ஆண்டு போர் மூண்டது.

**இறுதிக் கட்டம் :** ஐந்தாம் சார்லஸ் காலத்தில் நூற்றுண்டுப் போர் ஒரு தேசியப் போராக மாறியது. ஃபிரெஞ்சு மக்களின் எல்லாத் தரப்பினரும் இப் போர் தொடங்கப்படுவதில் அரசருக்கு ஆதரவாக இருந்தனர். போர் முறைகளை மாற்றியும் புதிய போர்த் தந்திரங்களைக் கையாண்டும் ஃபிரெஞ்சுப் படைகள் அக்குவிடெயின் பகுதியின் வெகு தூரம்வரை படையெடுத்துச் சென்று அய்குலான், லிமோஜிஸ் பட்டணங்களை மீட்டன.

இதற்கிடையே கடுமையான நோயினுல் கருங்கவச இளவரசர் பாதிக்கப்பட்டு விட்டதால், ஆங்கிலேயரின் படைத் தலைமை மூன்றும் எட்வர்டின் இளைய பிள்ளையான ஜான் காண்ட் (லங்காஸ்டர்) என்பவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. இவருக்கு முன்னவரிடம் இருந்த வீரப் பண்புகளோ, படைத் தலைமைக்கான திறமையோ இல்லாமலிருந்தது. ஆகவே, மீட்புப் போரை (War of Liberation) நடத்திவந்த ஃபிரெஞ்சுப் படையினரை ஆங்கிலேய வீரர்களால் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஆங்கிலே

யர்களுக்கு அடுத்தடுத்து ஏற்பட்ட சில இழப்புகளால் மனம் நொந்தவராக இருந்த கருங்கவச இளவரசர், மீண்டும் தாமே படைத் தலைமையை ஏற்று ஃபிரெஞ்சுப் படைகளால் மீட்கப் பட்டிருந்த லிமோஜிஸ் நகரை முற்றுகையிட்டார். இதுதான் இவரது கடைசிப் படையெடுப்பாகும்.

**லிமோஜிஸ் சூறையாடப்படல் :** உடல் நலிந்து பலவீனமான நிலையில் குதிரையின்மீதுகூட அமராது சிவிகையிலிருந்தவாறே கருங்கவச இளவரசர் முற்றுகையை மேற்பார்வையிட்டார். கடுமையான போருக்குப் பின்னர், லிமோஜிஸ் கைப்பற்றப்பட்டது. முன்பு, இந் நகர மக்கள் கோட்டைக் கதவுகளைத் திறந்து, ஃபிரெஞ்சுப் படையினருக்கு வரவேற்புக் கொடுத்திருந்ததை அரசத் துரோகமாகக்கருதிய இவ் வரசர், மற்ற நகர மக்களுக்குப் படிப்பினையாக இருக்கவேண்டி, அங்கு வாழ்ந்த சுமார் 3,000 மக்களைச் சற்றுக்கூட இரக்கமில்லாமல் கொன்று குவிக்கும்படி கட்டளையிட்டார். லிமோஜிஸ் நகரமே ஒரு பிணக் காடாகக் காட்சியளித்தது. இப் படுகொலை கருங்கவச இளவரசரின் பெயருக்குக் களங்கம் உண்டாக்கிவிட்டதோன்றி, ஆங்கிலேயர் களின்மீதிருந்த வெறுப்பை மேலும் அதிகரிக்கச் செய்தது.

உடல்நிலை மிகவும் கெட்டிருந்த கருங்கவச இளவரசர், கி. பி. 1371ஆம் ஆண்டில் இங்கிலாந்து திரும்பியிருந்தபோது ஃபிரெஞ்சுப் பகுதியிலிருந்த ஆங்கிலப் படைகளுக்கும் நிர்வாகத் திற்கும் ஜான் காண்ட் இளவரசரே பொறுப்பேற்ருர்.

**லா ராக்கேல் கடற் சண்டை :** ஃபிரெஞ்சுப் படைகளின் படை யெடுப்பு அபாயத்திலிருந்து அக்குவிடெயினைக் காப்பாற்ற இங்கிலாந்திலிருந்து பெம்புரோக் பிரபுவின்கீழ்க் கப்பற்படை நிலப்படை கொண்ட உதவிப் படையொன்று ஜான் காண்டுக்கு அனுப்பப்பட்டது ; ஆயினும், லா ராக்கேலில் நடந்த கடற் சண்டையில் ( கி. பி. 1372 ) ஸ்பானியக் கப்பல்களின் உதவியைப் பெற்றிருந்த ஃபிரெஞ்சுக்காரர்கள், ஆங்கிலக் கப்பல்களை நாசப் படுத்திஞர்கள்.

**ஃபிரெஞ்சு வெற்றிகள் :** உதவிக்குவந்த படைகள் நாச மடைந்த இந்த நேரத்தில், அக்குவிடெயினை இனி ஆங்கிலேயர் களால் காப்பாற்ற முடியாதென்ற நிலைமை ஏற்பட்டது. முன்னேறிய ஃபிரெஞ்சுப் படைகள் பாய்டிட்யர்ஸ், பாய்ட்டோ, செயின்டாங், அல்கோமாயிஸ், நியோர்ட், லா ராக்கேல் ஆகிய

பகுதிகளை மீட்டனர்; வடபிரிட்டானியப் பகுதியிலிருந்தும் ஆங்கிலப் படைகள் விரட்டப்பட்டன.

போரின் இக் கட்டத்தில், முன்பு ஆங்கிலேயர்கள் பிரெடக்னி உடன்பாட்டின்கீழ்ப் பெற்றிருந்த பல பகுதிகளை இழந்தவர்களாக இருந்தனர். போரின் இத் திடீர்த் திருப்பத்தைத் தவிர்க்க கி. பி. 1373ஆம் ஆண்டு ஃபிரான்சுக்கெதிராக ஆங்கிலேயர் மற்றொரு படையெடுப்பைத் தொடங்கினர். மூன்றும் எட்வர்டு வயோதிக வயதை எட்டிப் பிடித்தவராக இருந்தமையாலும், கருங்கவச இளவரசரும் மரணப் படுக்கையிலே இருந்தமையாலும், ஜான் கான்டுக்கே படைத் தலைமை கொடுக்கப்பட்டது. ஏறக்குறைய, 10,000 வீரர்களைக் கொண்ட படையுடன் ஜான் கான்ட், இழந்த பகுதிகளை மீட்பதற்கும் ஃபிரான்சைத் தாக்கவும் கலே நகரத்திலிருந்து புறப்பட்டார்.

ஐந்தாம் சார்லஸ் ஆங்கிலப் படைகளை நேருக்கு நேர் எதிர்த்துப் போரிடாமல் பட்டணங்களிலும், கோட்டைகளிலும் தம் படையினரைப் பதுங்கியிருக்கச் செய்து, எதிரிப் படையினரை முற்றுகையிட்டுக் களைப்புறச் செய்தார். ஃபிரெஞ்சுப் படைகளின் திறமை கொண்ட தளபதியான பெர்ட்ரண்டு குயிஸ்லின் என்பவரும் கொரில்லாப் (Guerilla) போர் முறையைப் பின்பற்றி ஆங்கிலேயப் படைகளைத் தவிக்கச் செய்தார். லூவார் ஆறு வரை ஆங்கிலப் படைகள் ஃபிரான்சு நாட்டிற்குள் ஊடுருவிச் சென்றிருந்தும், எதிர்பார்த்த வெற்றிகள் எதுவும் கிடைக்கவில்லை. இதற்குள், குளிர்காலம் தொடங்கியது; கடுங்குளிரால் அவதிப்பட்ட ஆங்கிலப் படைகளுக்குப் போதிய உணவும் படைக்கலன்களும் பற்றாக்குறையாக இருந்தன. படையினருக்கு ஊதியம் கொடுக்கக்கூட ஜான் கான்டிடம் பொருளில்லை. இந் நிலையில், மனம் தளர்ந்தவராக இளவரசர் ஜான், தம் படையைக் கலைத்து விட்டு நாடு திரும்பினர்.

இதன் பின்னர், ஃபிரெஞ்சுப் படைகள் எஞ்சியிருந்த ஆங்கிலேயப் படைகளை நெருங்கிக் கயினி, காஸ்கனியின் பெரும் பகுதிகளை மீட்டுவிட்டது. கி. பி. 1347ஆம் ஆண்டில் கலே, போர்டோ, ஷெர்போக், பயோன் (Bayonne) என்ற நகரங்களே ஃபிரெஞ்சு நாட்டில் ஆங்கிலேயருக்கு எஞ்சியிருந்தன. கிரெசி, பாய்ட்டியர்ஸ் வெற்றிகள் ஆங்கிலேயருக்குப் பயனில்லாமல் போய்விட்டது. தேசிய உணர்ச்சிக் கொந்தளிப்பின்முன், படைப் பலத்தினல் ஏற்படுத்தப்பட்ட ஆதிக்கம் நிற்காது என்ற படிப்பினையை ஆங்கிலேயர் உணர்ந்தனர்.

**போரின் ஆரம்ப வெற்றிக்கும் இறுதித்தோல்விக்கும் காரணங்கள்**

உள் நாட்டுக் கலவரங்களாலும் சீரழிந்த நிர்வாகத்தினாலும் பலவீனப்பட்டிருந்த ஃபிரான்ஸ் நாட்டைப் போரின் ஆரம்பத்திலே ஆங்கிலேயர்கள் வெற்றி கொண்டிருந்தனர். மூன்றாம் எட்வர்டு மன்னரின் போர்த்திறமையும், கருங்கவச இளவரசரின் வீரப் பண்புகளும் ஆங்கிலேயர் பின்பற்றிய புதிய போர் முறைகளும் (வில்லாளிகள்), புதிய போர்ச் சாதனங்களும் (வெடி மருந்து) நிலமானியப் படைகளை நம்பித் திறமையற்ற படைத் தலைவர்களால் நடத்தப்பட்ட ஃபிரெஞ்சுப் படைகளை எளிதாகத் தோற்கடிக்க ஆங்கிலேயருக்கு உதவின.

ஆயினும், முதற் கட்டத்தில் பெற்ற தோல்விகளிலிருந்து நல்ல படிப்பினைகளைக் கற்றுக்கொண்ட பிரெஞ்சுக்காரர்கள், போரின் இறுதிக் கட்டத்தில் புதிய போர்த் தந்திரங்களைக் (கொரில்லாப் போர்) கையாண்டனர்; ஃபிரெஞ்சுப் படைகளுக்கு ஐந்தாம் சார்லஸ், பெர்ட்ராண்டு-டு-குயிஸ்லின் போன்றோர்களின் திறமை வாய்ந்த தலைமை கிடைத்திருக்க, ஆங்கிலேயரின் படைகளுக்குப் போர்த் திறமையில்லாத ஜான் காண்ட் தலைவராக இருந்தார்; இவரது பலவீனமே ஃபிரான்சு நாட்டுக்கு வெற்றிக்கான வாய்ப்பைத் தேடிக் கொடுத்தது. இடைவிடாத போரினால் அதிக வரிச்சுமைக்கு ஆளாகியிருந்த ஆங்கில மக்கள் போரில் சலிப்படைந்தமையால், தேசிய உணர்வு கொண்ட ஃபிரெஞ்சுக்காரர்கள் தீவிரமாகப் போரிட்டு இறுதி வெற்றியை அடைந்தனர்.

## கருங்கொள்ளை நோய்
## (Black Death)

ஆங்கிலேயரின் கவனம் அப்போது ஃபிரெஞ்சுப் பகுதியில் நடந்துவந்த நூற்றாண்டுப் போரில் இருந்து வர, மூன்றாம் எட்வர்டு காலத்திய இங்கிலாந்தின் பொருளாதார, சமூக நிலைகளைப் பாதிக்கும் வகையில் ஒரு பயங்கரக் கொள்ளை நோய் இந் நாட்டில் பரவத் தொடங்கியது. இதுவே, கருங்கொள்ளை நோய் என வழங்கப்பட்டது.

கருங்கொள்ளை நோய் என்று சொல்லப்பட்ட பிளேக் (plague) பிணி, ஏறக்குறைய ஓராயிரம் ஆண்டுகள் ஆசியாக் கண்டத்தை வாட்டி வதைத்துவந்தது. மாஸ்கோவின் (ருஷ்யா) மக்கள் தொகையில் இந் நோயின் கடுமையால் 60,000 மக்கள் கொல்லப்பட்டிருந்ததும் ஃபிளாரன்ஸ் (இதாலி) நகரத்தில்

எட்டே மாத காலத்தில் ஓர் இலட்சம் மக்கள் கொல்லப்பட்டிருந்ததும், இந்தப் பயங்கர தொற்று நோயின் கொடுமைக்கு ஓர் உதாரணமாகக் கொள்ளலாம். இந்தியாவிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் கான்ஸ்டான்டிநோபிளை வந்தடைந்த இந் நோய், மேற்கு ஐரோப்பாவிலே கடுமையாகப் பரவிப் பல்லாயிரக் கணக்கான மக்களின் உயிர்களைக் குடித்தது.

கி. பி. 1348ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் இக் கொள்ளை நோயின் அறிகுறி, இங்கிலாந்தின் மேற்குப் பகுதியிலேயே முதன் முதலாகத் தென்பட்டது. இங்கிலாந்தின் இப் பகுதியிலிருந்த பிரிஸ்டல் (Bristol) என்ற நகரமே தொடக்கத்தில் இந் நோயின் கொடுமையால் பாதிக்கப்பட்டது. இந் நோய் எங்ஙனம் இங்கிலாந்திற்குள் நுழைந்தது அல்லது இங்கிலாந்தின் மற்றப்பகுதிகளுக்கும் பரவியது என்பதை சுட்டிக்காட்ட போதிய குறிப்புகள் இல்லை. ஆனாலும், குளிர்காலத்தில் மிக விரைவாகப் பரவிய இந் நோய், இதே ஆண்டு டிசம்பர் மாதத்தில் இலண்டன் மாநகரையும் தாக்கியது. கி. பி. 1349 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இந் நோய் கிழக்கு ஆங்கிலியாவையும் தாக்கி, அங்கிருந்து வடபாகம் வரை பரவிச் சென்றது. இந்த ஆண்டு முடிவதற்குள் இங்கிலாந்தின் எல்லாப் பாகங்களிலும் இப் பெருங் கொள்ளை நோய் பரவிவிட்டது. பதினாறே மாதங்களில் ஆங்கில மக்களில் மூன்றிலொரு பங்கினரைச் சாகடித்த இக் கொடிய கொள்ளை நோய் கால தேவனின் ஏவுகணையாக அமைந்தது. சுகாதார விதிகளுக்குப் புறம்பாக அமைக்கப்பட்டிருந்த பகுதிகளில் வாழ்ந்த மக்களே இந் நோயினால் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர்.

இந் நோயினால் தாக்கப்பட்டவர்களின் உடலில் கருங் கொப்புளங்கள், கட்டிகள் தோன்றின; தொடர்ந்து காய்ச்சலும் உடம்பெங்கும் வெடிப்பும் தோன்றின; நீளமான ஓட்டுப் பாளங்கள் போன்ற அவ் வெடிப்புகளிலிருந்து குருதி கொட்டியது. இங்ஙனமாக, தன் உக்கிரத்தைக் காட்டிய அந் நோய் மூன்றும் நாளில் மனிதனின் உயிரைப் போக்கிவிட்டது; சில சமயங்களிலே இந் நோய் கண்டவர்கள் இருபத்து நான்கு மணி நேரத்துக்குள்ளாகவே இறந்தனர்.

கருங்கொள்ளை நோயினால் ஏற்பட்ட அழிவைத் திட்டவட்டமாகச் சுட்டிக்காட்ட புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை. லீசெஸ்டர் (Leicester) நகரில் மட்டும் ஆயிரத்து நானூறு பேர்களை இந் நோய் கொன்று தீர்த்ததாக ஒரு பாதிரியார் குறிப்பெழுதி வைத்தார். நார்விச் (Norwich) திருச்சபை மாவட்டத்தில் எண்

ஞூறு குருமார்களும், வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயத்தில் வசித்து வந்த துறவிகளில் பாதிக்கு மேலானேரும் இந் நோயின் கொடுமையால் மாண்டுவிட்டதாக இக் காலத்திய திருச்சபைக் குறிப்பு ஒன்று தெரிவிக்கின்றது. நோயுற்றவர்களுக்குப் பணிவிடைகள் செய்த குருமார்களுக்கே இக் கதி எற்பட்டிருந்ததென்றல், இந் நோயினல் தாக்கப்பட்டிருந்தவர்களின் எண்ணிக்கையை ஓரளவு உணர முடிகிறது. இலண்டன் மாநகரில் இந் நோயினல் கொல்லப்பட்ட ஐம்பதாயிரம் பேர்களைப் புதைக்க புதிய கல்லறை ஒன்று பதின்மூன்று ஏக்கர் நிலப் பரப்பில் உருவாக்கப்பட்டது.

முதல் முறை தாக்கிப் பல்லாயிரக்கணக்கான உயிர்களைப் பறித்ததோடன்றி, கி. பி. 1362 ஆம் ஆண்டிலும், மீண்டும் கி. பி. 1369 ஆம் ஆண்டிலும் இப் பெருங் கொள்ளை நோய் இங்கிலாந்தைத் தாக்கியது. இந் நோய் இங்கிலாந்தில் புரிந்த கோரத் தாண்டவத்தினல் இங்கிலாந்தின் மக்கள் தொகை மிகமிகக் குறைந்து விட்டது; சுமார் 25 இலட்சம் மக்கள் இந் நோயினல் கொல்லப்பட்டதாகக் கருதப்படுகிறது. முடிமன்னரான மூன்றும் எட்வர்டின் மகள் ஜோன (Joana) முதல், உலகப் பற்றற்ற துறவியான ரிச்சர்டு ரோல் (Richard Rolle) என்பவர் வரை எவரையும் இந் நோய் விட்டுவைக்கவில்லை.

### கருங்கொள்ளை நோயினல் ஏற்பட்ட விளைவுகள்

இந் நோய் இங்கிலாந்தின் பல்லாயிரக்கணக்கான மக்களின் உயிர்களைப் போக்கியிருந்ததன்றிச் சில சமூக, பொருளாதார, அரசியல் விளைவுகளுக்கும் காரணமாகவே அமைந்தது.

நிலமானிய முறையின்கீழ்த் தங்கள் பிரபுக்களின் கட்டளைப் படி அவர்களின் நிலங்களை உழுதுவந்த உள்குடிகள் (Villiens) ஏராளமான எண்ணிக்கையில் இந் நோயினல் தாக்கப்பட்டு இறந்து விட்டமையால், பல நிலங்கள் உழுவாரற்று வெறுமையாக விடப்பட்டன. இந் நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு, அதிகக் கூலியைக் கேட்டு, முழு உரிமைகளைக் கோரியும் ஒரு புதிய விவசாய வகுப்பு (Free farmers) நாட்டிலே தோன்றியது. இதற்கு முன் உள்குடி ஒருவன் பெற்று வந்த கூலியைவிட, மூன்று மடங்கு அதிகக் கூலியையும் தாங்கள் விரும்பிய இடத்தில் தொழில் செய்யும் உரிமையையும் இப் புதிய விவசாய வகுப்பினர் கோரி அடைந்தனர். இச் சலுகைகளை மேற்கோளாகக் காட்டி, அதுவரை பல கட்டுப்பாடுகளுக்கு இசைந்து வேலை செய்துவந்த

இதர உள்குடியினரும் உயர்ந்த கூலியையும் உரிமையையும் பெறுதற்கு முயன்றனர்.

நிலமானிய முறையில் கட்டுப்பட்டு அதுவரை பிரபுக்களின் நிலங்களிலே இலவசமாகப் பணி செய்து வந்த உள்குடிகளும் தங்களுக்கு அதிகக் கூலியுடன், உரிமையுடன் கூடிய விடுதலை கேட்க, சில நிலப் பிரபுக்கள் தங்கள் நிலங்களைத் தரிசாகவிட்டு வைக்க மனமில்லாமல் இதை ஏற்றுக் கொள்ள வேண்டியவர்களானார்கள். வசதியில்லாத சில நிலப்பிரபுக்கள் இப் புதிய நிலைமையை ஏற்றுக்கொள்ள விரும்பாது தங்கள் விளைச்சல் நிலங்களை, ஆட்டுப் பண்ணைகளுக்குரிய மேய்ச்சல் நிலங்களாக மாற்றிப் பயன் படுத்தத் தொடங்கினர். இதன் விளைவாக, இங்கிலாந்தில் ஆட்டு வளர்ப்புப் பண்ணையும், இதைத் தொடர்ந்து கம்பளித் தொழிலும் (Wool Industry) விருத்தியடைந்தன. மேலும் சில நிலக்கிழார்கள் தங்களின் விவசாய நிலங்களை வருடாந்தரக் குத்தகைக்கு விட்டனர். இதன் விளைவாகக் குத்தகை விவசாய (Tenant farming) முறை இங்கிலாந்தில் ஏற்பட்டது.

பிளேக் நோயினால் எண்ணற்ற மக்கள் இறந்துபட்டதால் மாந்தர்களுக்குச் சன்மார்க்க நெறிகளின் மீதிருந்த பற்றும் குறைய ஆரம்பித்தது. இடுக்கண் வருங்கால் ஆண்டவனை நினைப்பது பக்திமான்களின் பழக்கமாக இருக்கலாம். ஆனால், பாமர மக்களுக்குத் தெய்வ நெறியில் அவநம்பிக்கை ஏற்பட்டது. சன்மார்க்க நெறிகளைப் போதித்து வந்த திருச்சபையினர்மீதும் மக்களுக்கு வெறுப்புணர்ச்சி மேலிட்டது.

இப்பெரும் துன்ப காலத்தில் நிலக்கிழார்களால் கட்டுப்படுத்தப் பட்டு வந்த ஆங்கிலப் பாராளுமன்றம் சட்டத்தின் மூலம் இந் நோயினால் ஏற்பட்டிருந்த சமூக, பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்க முயன்றது. இக் கொள்ளை நோய் ஏற்படுவதற்கு முன்பு, வேலையாள்கள் (உள்குடிகள்) பெற்றுவந்த கூலியை மீண்டும் குறைக்கும் வகையில் கி.பி. 1351 ஆம் ஆண்டில் ஆங்கிலப் பாராளு மன்றம் தொழிலாளர்களின் சட்டம் (Statute of Labourers) ஒன்றை நிறைவேற்றியது. இச் சட்டங்களின்படி வரையறுக்கப்பட்ட கூலிகளை விடக் கூடுதலாகக் கொடுக்கவோ பெறவோ நிலச்சுவான் தாரர்களும் வேலையாள்களும் தடுக்கப்பட்டனர். அதிகக்கூலியைக் கொடுத்தவர்மீது அபராதம் விதிக்கப்பட்டது; அதிகக் கூலியைப் பெற்றுக்கொண்டவர் சிறையிலடைக்கப்பட்டனர், ஆயினும் இச் சட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவதில் சிரமமிருந்தது. இச் சட்டத்தினால் வரையறுக்கப்பட்ட கூலிகளைப் பெற்று வேலை

செய்வதற்குத் தொழிலாளிகள் மறுக்க, தங்கள் நிலங்களை முற்றிலும் தரிசாக வைத்திருக்க மனமில்லாத சில நிலப்பிரபுக்கள் (இரகசியமாக) அதிகமான கூலிகளையே கொடுக்க வேண்டியிருந்தது. ஆனால், பல நிலப்பிரபுக்கள் இச் சட்டத்தைச் சுட்டிக் காட்டிக் கெடுபிடி செய்ய முற்பட்டபோது, பழைய கூலிகளை ஏற்கத் தொழிலாளர்கள் மறுத்துக் கிளர்ச்சி செய்ய, இதுவே வருங்காலத்தில் குடியானவர் கலகமாக (Peasants revolt) உருவெடுத்தது.

ஆங்கிலப் பாராளுமன்றம் தொழிலாளர்களுக்குக் கொடுக்க வேண்டிய கூலியை நிர்ணயித்ததோடு, அக் கூலியில் திருப்திகரமான வாழ்க்கை வசதிகளைப் பெற்றுக்கொள்ளும் வகையில் இன்னொரு சட்டத்தையும் கொண்டு வந்திருந்தது. இதன்படி முக்கியமான உணவுப் பண்டங்கள் நிர்ணயிக்கப்பட்ட விலையிலேயே (controlled price) விற்கப்பட ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், செயல் முறையில் இச் சட்டம் பாமர மக்களுக்கு நன்மையைப் பயப்பதாக இல்லை.

பெருங் கொள்ளை நோயினால் நாட்டிலே ஏற்பட்டிருந்த சிக்கல்களைத் தீர்ப்பதற்கு மூன்றும் எட்வர்டு காலத்தில் புதிய உள்நாட்டுத் தொழில்களும், வெளிநாட்டு வர்த்தகமும் வளர்க்கப்பட்டன. 14ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவிலேயே கம்பளித் தயாரிப்பில் இங்கிலாந்து முதன்மையாக விளங்கியது. யார்க்ஷையர், காட்ஸ் ஓல்டு என்ற பகுதிகளில் கம்பளித் தயாரிப்பு அக் காலத்தில் பிரபலமாக இருந்தது. ஃபிளாண்டர்ஸிலுள்ள கம்பளித் தறிகளுக்கு, இங்கிலாந்திலிருந்தே பதப்படுத்தப்படாத கம்பளி (Wool) ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தது. இக்கம்பளியைக் கொண்டே புருஜஸ், கென்ட், ஏயப்ரஸ் என்ற ஃபிளாண்டர்ஸ் பட்டினங்கள் கம்பளித் தொழிலில் சிறப்படைந்து வந்தன. ஏற்றுமதி செய்யப்பட்டு வந்த ஒவ்வொரு கம்பளி மூட்டைக்கும் (Wool sack) அரசுக்குப் பிரத்தியேக வரி, வருமானமாகக் கிடைத்து வந்தது.

கி. பி. 1340 ஆம் ஆண்டில் மூன்றும் எட்வர்டு, ஃபிளாண்டர்ஸ் வியாபாரிகளோடு செய்து கொண்டிருந்த ஓர் ஒப்பந்தத்தின்படி புருஜஸ் என்ற பட்டினத்தைக் கம்பளி நகரமாக (Staple) ஏற்றுக் கொண்டிருந்தார். இதன்படி இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதியாகும் கம்பளி புருஜஸ் பட்டினத்தில் இறக்கப்படும்; தேவைப்படுவோர் அங்கிருந்தே கம்பளியை வாங்கிக் கொள்ளவேண்டும். இங்கிலாந்திலுள்ள கம்பளி வியாபாரிகளின் வேண்டுகோளுக்கிணங்கி

மூன்ரும் எட்வர்டு, பின்னர் பத்து ஆங்கிலப் பட்டினங்களைக் கம்பளி நகரங்களாக அறிவித்திருந்தார்.

நியூகேஸல், யார்க், லிங்க்கன், நார்விச், வெஸ்ட்மின்ஸ்டர், கான்டர்பரி, லீச்செஸ்டர், வின்செஸ்டர், எக்ஸ்டர், பிரிஸ்டல் ஆகிய ஆங்கிலப் பட்டினங்கள் கம்பளி வியாபாரத் தலங்களாக மாற்றப்பட்டன.

நூருண்டுப் போரில் கலே நகரம் ஆங்கிலேயர்வசம் சிக்கியிருந்ததைத் தொடர்ந்து மூன்ரும் எட்வர்டு, ஒரு புதிய ஏற்பாட்டைச் செய்தார். ஏற்றுமதி செய்ய வேண்டிய கம்பளியை ஆங்கிலக் கப்பல்களிலேயே கலே நகரச் சந்தைக்கு அனுப்ப வேண்டுமென்றும், ஃபிளாண்டர்ஸ் பட்டினங்கள் உள்பட மற்ற ஐரோப்பிய நாடுகளின் கம்பளி நெசவாளிகள் கலே நகரத்திலிருந்தே தங்களுக்கு வேண்டிய கம்பளி நூல்களைப் பெறவேண்டுமென்றும் அரசர் ஆணை பிறப்பித்தார். மேற்கூறிய ஆணையினுல் இங்கிலாந்தில் கடல் வழிப்பிரயாணம் செய்வதில் ஊக்கமும், கப்பற் கட்டும் தொழிலில் சுறுசுறுப்பும் ஏற்பட, வேலை வாய்ப்பின்றி முணுமுணுத்து வந்த தொழிலாளர்களுக்குக் கடல் கடந்து போகவும், மாற்றுத்தொழிலில் ஈடுபடவும் இச் சட்டம் வாய்ப்பளித்தது.

விடுதலை பெற்ற உள்குடிகளுக்கும் பண்ணைகளை விட்டு ஓடியிருந்த ஊள்குடிகளுக்கும் இங்கிலாந்திலேயே மாற்றுவேலை (alternative work) கொடுக்கும் திட்டமாக மூன்ரும் எட்வர்டு, ஆடைத் தொழிலுக்கு (Cloth industry) ஊக்கமளித்தார். பிளமிங்ஸ் நாட்டு நெசவாளிகளை இங்கிலாந்துக்கு வரவழைத்து ஆங்கில மக்களுக்கு நூற்பு (Spinning), நெசவுத் தொழில்களின் நுணுக்கங்களைக் கற்றுத்தரச் செய்தார். ஜான் கீம்ப் (John Kembe) என்ற பிளமிங்க் நெசவாளரைத் தொடர்ந்து ஏராளமானவர்கள் நார்விச் பகுதியிலே குடி புகுந்தனர். அரசர் நாட்டிற்கு வந்திருந்த பிளமிங் நெசவாளர்களுக்கு வேண்டிய எல்லாச் சலுகைகளையும் கொடுத்திருந்தார். நார்விச் நகரம் துணி தயாரிப்பிலே முக்கியத்துவம் பெற்றது. இந்த ஏற்பாடு ஆங்கில மக்களுக்கு மாற்றுத் தொழிலைக் கொடுத்ததன்றி, கம்பளித் தயாரிப்பை இங்கிலாந்தின் தேசியத் தொழிலாக அமைத்திருந்தது. இங்கிலாந்தின் கம்பளித் தொழிலை அந்நியர் போட்டியிலிருந்து பாதுகாக்கவும் மூன்ரும் எட்வர்டு வர்த்தகக் காப்புக் கொள்கையைப் பின்பற்றினுர்.

இங்ஙனமாக, கருங்கொள்ளை நோயினுல் ஏற்பட்ட விளைவுகளாலும், மூன்ரும் எட்வர்டின் முயற்சியாலும் இவர் காலத்தில் சில பொருளாதார, சமூக மாற்றங்கள் ஏற்பட்டன.

## இரண்டாம் ரிச்சர்டு

## கி. பி. 1377 - 1399

### லாலார்டுகளும் இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சியும் வீழ்ச்சியும்

வயோதிகத்தினால் வருந்தி வந்த மூன்றாம் எட்வர்டு, தம் ஷீன் அரண்மனையில் இறுதியாக கி.பி. 1377 ஜூன் மாதம் 2 ஆம் நாள் காலமானதையொட்டி, ஏற்கெனவே நிர்ணயிக்கப்பட்ட வாரிசுரிமைப்படி, பதினொரு வயது நிரம்பப் பெற்றிருந்த இவரது பேரரும், காலமடைந்த கருங்கவச இளவரசரின் மகனுமான இரண்டாம் ரிச்சர்டு பட்டமேற்றார்.

**ஆட்சிக் கட்டங்கள் ;** இவ்வரசரின் ஆட்சிக்காலம் இருபகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. அரசரின் இளமைப்பருவக் காலத்தில் (கி பி. 1377 - 1388) இவர் தம் தாயார், ஏனைய பிரபுக்களின் கைப்பாவையாக இருந்தார். அடுத்த காலக் கட்டத்தில் (கி. பி, 1389 - 1399) ரிச்சர்டு தாமே சுதந்திரமாகச் செயல்பட ஆரம்பித்தார்.

**இவரது குணநலன்கள் :** இவரது தந்தை கருங்கவச இளவரசருக்கு இருந்த வீரமும், பாட்டனரான மூன்றாம் எட்வர்டிடம் இருந்த அரசியல் சாதுர்யமும் இரண்டாம் ரிச்சர்டிடம் இருந்தன. சமயத்திற்கு ஏற்றபடி விட்டுக்கொடுக்கும் தன்மையும், உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசும் இயல்பும் கொண்டிருந்த ரிச்சர்டு, அதிகார வெறிபிடித்தவராகவும் பழிவாங்கும் எண்ணமுடையவராகவும் இருந்தார். பிளான்டாஜெனட் அரச மரபின் கடைசிப் பிரதிநிதியான இரண்டாம் ரிச்சர்டின் காலம் சில வரலாற்று நிகழ்ச்சிகளால் சிறப்புப் பெறுகிறது.

**ஆட்சிச் சிறப்பு :** இவருடைய இளமைப்பருவ ஆட்சிக் காலத்திலே ஃபிரான்சுடன் போர் (நூற்றாண்டுப் போர்) மீண்டும் தொடங்கி இருந்தது. பிரபுக்களின் அதிகார வெறி தாண்டவமாடியது. திருச்சபையினரின் முறைகேடுகளை எதிர்த்து லாலார்டு இயக்கம் வலுப்பட்டது. உள்குடிகளிடையே கொந்தளிப்பான ஒரு மாபெரும் (குடியானவர்) கலகம் தோன்றி, நாட்டையே கிடுகிடுக்கச் செய்தது.

இவரது ஆட்சியின் அடுத்த கட்டத்தில் இரண்டாம் ரிச்சர்டு வல்லாட்சியை ஏற்படுத்த முனையவே, அதுவே இறுதியில் புரட்சி

யாக முடிந்தது. அப் புரட்சியே லங்காஸ்டர் (Lancaster) மரபை அரசுக் கட்டிலில் ஏற்றியது.

## ஜான் விக்லிஃப்பும் லாலார்டு இயக்கமும்

ஜெர்மனியில் மார்ட்டின் லூதரால் (Martin Luther) கத்தோலிக்கத் திருச்சபைக்கெதிராகச் சமய சீர்திருத்த இயக்கம் தொடங்கப்படுவதற்கு நூறாண்டுகளுக்கு முன்னரேயே இங்கிலாந்தில் திருச்சபைக்கெதிராக ஓர் இயக்கம் தோன்றியிருந்தது. பதினான்காம் நூற்றாண்டின் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படும் இவ் வியக்கத்தைத் தோற்றுவித்த பெரியார் ஜான் விக்லிஃப் (John Wyciliffe) என்பவராவர், இப் பெரியாரால் சமய சீர்திருத்த இயக்கம் இங்கிலாந்தில் தோற்றுவிக்கப்படுவதற்கு ஏதுவாக இக் காலத்தில் திருச்சபையின் நிலைமை மிக இழிவானதாக இருந்தது.

**திருச்சபையின் சீர்கேடுகள்:** திருச்சபையின் தலைவரான போப்பாண்டவர், கி.பி. 1309 ஆம் ஆண்டில் ரோமாபுரியை விட்டு வெளியேறி, ஃபிரான்சு நாட்டிலுள்ள அவின்னன் (Avignon) என்னுமிடத்தில் குடியேறி, சமய ஆட்சியை நடத்தத் தொடங்கியிருந்த போப்பாண்டவர்கள் ஃபிரெஞ்சுக்காரர்களின் செல்வாக்கிற்குள் பட்டே கி.பி. 1378 ஆம் ஆண்டுவரை இருந்து வந்தனர். தேசீய உணர்ச்சியினால் உந்தப்பட்டிருந்த ஆங்கிலேயர்களுக்கு 'அவின்னன்' போப்பாண்டவரின் சமய ஆதிக்கம் எரிச்சலையே கொடுத்து வந்தது. போப்பாண்டவருக்குத் தாங்கள் செலுத்திய 'சமய கட்டணம்', ஃபிரெஞ்சுக்காரர்களுக்குப் போய்ச் சேருகிறதோ என்ற ஐயப்பாடும், போப்பாண்டவர் விதித்த 'சமய கட்டணங்கள்' ஃபிரெஞ்சுக்காரர்களின் தூண்டுதலால் விதிக்கப்படுகிறதோ என்ற சந்தேகமும் ஆங்கிலேயர்களைப் பீடித்து வாட்ட, சமயம் கிடைத்தபோதெல்லாம், போப்பாண்டவரின் அதிகாரத்திற்கு முட்டுக்கட்டையிட இங்கிலாந்து தவறவில்லை.

கி.பி.1351ஆம் ஆண்டில் ஆங்கிலப் பாராளுமன்றத்தினால் கொண்டுவரப்பட்டிருந்த புரவைசர் சட்டம் (Statue of Provisors) ஆங்கிலேய பிஷப் போன்ற பதவிகளுக்குப் போப்பாண்டவர் தம ஆட்களை நியமிக்கக் கூடாதெனத் தடை செய்திருந்தது. கி.பி.1353ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டிருந்த புரேமுனைர் சட்டம் (Statute of Praemunire) ஆங்கிலேயர்கள் இங்கிலாந்துக்கு வெளியே உள்ள எந்தச் சட்டமன்றத்திற்கும் தங்கள் வழக்குகளை மேல் முறையீடாக எடுத்துச் செல்லக்கூடாதென தடைவிதித்திருந்தது (இச் சட்டத்தில் போப்பாண்டவரின் நீதிமன்றம் அப்

பட்டமாகக் குறிப்பிடப்படவில்லையெனினும், அதனையே மனத்தில் கொண்டு, ஆங்கிலப் பாராளுமன்றம் புரேமுனைர் சட்டத்தைக் கொண்டு வந்திருந்தது).

இங்ஙனமாக, போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்தை மறைமுகமாக ஆங்கிலேயர்கள் எதிர்த்து வந்தும், இங்கிலாந்து திருச்சபையிலும் சில சீர்கேடுகள் தலைதூக்கியிருந்தன. ஆங்கிலத் திருச்சபையைச் சார்ந்த பலர், சமய சேவை உணர்ச்சியில்லாமல், பதவிப் பித்தர்களாகவும் ஆடம்பரப் பிரியர்களாகவும் ஒழுக்கம் கெட்டவர்களாகவும் இருந்து வந்தனர்.

சேவை இல்லங்களாக இருக்கவேண்டிய பல மடாலயங்கள் சோம்பித் திரிந்தோரின் உறைவிடங்களாக மாறியிருந்தன. சமய தூதுவர்களாகப் பணியாற்றவேண்டிய துறவியர்களில் பலரும் சுபபோகங்களைத் தேடிக்கொள்ள விழைந்தனர்.

இக் காலத்தில், மக்களிடையே திருச்சபைக்கெதிராக இருந்த கசப்புணர்ச்சிகளையே சாசர் (Chaucer) என்ற ஆங்கிலேயக் கவிஞர், தம் தொகுப்பு நூலான 'கான்டர்பரி கதைகளில்' (Canterbury Tales) இடித்துரைத்திருக்கிறார்.

கருங்கொள்ளை நோயின் கொடுமைக்குப் பலியாகி இருந்த திருச்சபை ஊழியர்களுக்குப் பதிலாக அமர்த்தப்பட்டிருந்தோர், அறவாழ்வில் பற்றற்ற வீணர்களாகவே இருந்தனர். தூய ஆன்மீக உணர்வைக் கொண்டிருக்க வேண்டிய திருச்சபையினரில் பலர், உலகப் பந்தபாசங்களிலே உழன்று வந்தனர்; இவர்கள் தங்களின் கடைமைகளை மறந்ததன்றி, தகாத வழியில் வாழ்க்கை நடத்தியவர்களாகவும் இருந்தனர். சுருக்கமாகக் கூறின். ஆங்கிலத் திருச்சபை, இக் காலத்தில் மக்களின் வெறுப்பிற்கு இலக்காகியிருந்தது.

சமய நிலைமை இங்ஙனம் மோசமாகிக் கொண்டுவர, கி. பி. 1378ஆம் ஆண்டில், திருச்சபையில் பெரும் பிளவு (Great schism) ஒன்று ஏற்பட்டது. அவின்னுனிலிருந்த போப்பாண்டவருக்குப் போட்டியாக, ரோமாபுரியில் இன்னொரு போப்பாண்டவர் பதவியேற்க, இவ்விரு சமயத் தலைவர்களைச் சில ஐரோப்பிய நாடுகள் ஆதரிக்க, கத்தோலிக்க தலைமைத் திருச்சபையே பிளவுபட்டிருந்தது. ஏக காலத்தில் இரு போப்பாண்டவர்கள் செயல்பட்டுவர, ஒருவர் மற்றவரை ஏசுபிரானுக்கு எதிரானவர் என்று கண்டிக்கத் தொடங்கியதோடன்றி, ஒருவருடைய சீடர்களை

மற்ெருருவர் சமய விலக்கமும் செய்து வந்தனர். திருச்சபை விவகாரங்கள் இத்தனை அலங்கோலமாக இருந்த இச் சூழ் நிலையிலேயே ஜான் விக்லிஃப், தம் சமய சீர்திருத்தப் பணியைத் தொடங்கினுர். ஜான் விக்லிஃப், தம் சமய சீர்த்திருத்தக் கருத் துகளைத் துணிவுடன் எடுத்துரைக்க, அப்போது நாட்டிலே எழுந்திருந்த தேசிய உணர்ச்சி, ஒழுக்க வீழ்ச்சியை எதிர்த்த கிளர்ச்சி, அறிவித்துறையில் ஏற்பட்ட மறுமலர்ச்சி ஆகியவை துணைநின்றன.

**விக்லிஃப்பின் பிறப்பும் வளர்ப்பும் :** சமய சீர்திருத்தக் கருத் துகளைத் துணிவுடன் எடுத்துச் சொன்ன இப் பெரியார், கி. பி. 1320ஆம் ஆண்டில் யார்க்ஷயருக்கு அருகேயுள்ள ரிச்மண்டில் (Richmond) ஒரு வசதியான குடும்பத்தில் பிறந்தார். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் லௌகீகக் குருமார்களுக் கான படிப்பைப் பயின்று. பாலியல் கல்லூரியில் ஆசிரியராகவும், பின்னர் சில காலம் கான்டர்பரிக் கல்லூரியின் பொறுப்பாள ராகவும் (Warden) பணியாற்றினுர். மடாலயத் துறவிகளுக்கு என்று சிறப்பாக இருந்த இக் கல்லூரியில் லௌகீகக் குருமார் களும் கல்வி கற்கும் திட்டத்தை விக்லிஃப் புகுத்தினுர். சமய நூல்களைப் படித்து, நன்கு தேர்ச்சிபெற்றிருந்த விக்லிஃப், எதையும் பகுத்தறிவுக் கண்கொண்டு நோக்கினுர். சமயதத்துவம் பற்றிய கருத்து வேறுபாட்டில்தான் இவருக்கும் மற்றவர் களுக்கும் சச்சரவுகள் ஏற்பட்டன. இவருடைய சிந்தனைகள் வேத நூலை (The Bible) ஒட்டியே இருந்ததால், இதில் குறிப் பிடாத எதையும் விக்லிஃப் கொள்கையளவில் எதிர்த்தார்.

நாளுக்குநாள் இவரது சமய பிரச்சாரம் தீவிர மடைந்தது. திருச்சபைக்குள் நிலவி வந்த மோசடிகளைக் களைந்தெரியவும் போப்பாண்டவரின் சிறப்புரிமைகளைத் தடுத்து நிறுத்தவும் என்னென்ன வழிகள் என மக்கள் குழம்பிய வண்ணமிருக்க, திருச்சபையிலே மலிந்திருந்த குறைகளுக்கெல்லாம், அதனிடம் குவிந்திருந்த சொத்துகளே காரணமென்பதை விக்லிஃப் சுட்டிக் காட்டினுர். நாட்டின் மூன்றிலொரு பங்கு நிலபுலன்களையும் செல்வத்தையும் கொண்டிருந்த திருச்சபை, மோசடிகளின் மொத்த இருப்பிடமாக இருப்பதையும் விக்லிஃப் கண்டித்தார். எளிமை கலந்த வாழ்க்கையில் சேவை உணர்ச்சி பிறக்குமென நம்பிய விக்லிஃப், குருமார்களையும், பாதிரிமார்களையும், ஆடம்பர வாழ்வை ஒதுக்கிவைத்து, ஏழை எளியோருக்குச் சேவை செய்யும்படி வற்புறுத்தினுர்.

**விக்லிஃப்பின் கொள்கை :** போப்பாண்டவர் பெற்றிருந்த சிறப்பதிகாரம் திருச்சபையிடமிருந்தோ, செயின்ட் பீட்டரிடமிருந்தோ பெறப்பட்டனவல்ல என்றும், அவ் வதிகாரம் அத்தனையும் அவர் ரோமாபுரிச் சீடரிடமிருந்தே பெற்றிருக்கிறாரென்றும், ஆகவே, அவ் வதிகாரங்களைச் சமய ஆணைகளாக ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை எனவும், ஜான் விக்லிஃப் தம் தத்துவத்தால் ('Theory of Dominion') விளக்கிக் காட்டினார்.

அரசுகளின் விவகாரங்களிலே தலையிட்டுத் தங்களின் சமய செல்வாக்கினைக் குறைத்துக் கொண்ட போப்பாண்டவர்களின் பழக்கத்தை எள்ளி நகையாடினார். அரசுப் பணிகளிலே அமர்ந்திருப்பதை விடுத்து, மதத்துக்காகவும் மக்களுக்காகவும் தொண்டு செய்யும்படி தூண்டினார்.

திருச்சபையிலே மலிந்திருந்த இலஞ்ச ஊழல், தகுதியற்றவருக்குப் பதவியளித்தல், உறவினர்களுக்குச் சலுகை காட்டுதல் போன்ற தீய பழக்கங்களையும் விக்லிஃப் கண்டித்தார்.

**விக்லிஃப் சிறப்படைதல் :** இங்ஙனம் விக்லிஃப், தம் சமய கருத்துகளை வெளிப்படையாகச் சொல்லி, அரசர் மூன்றாம் எட்வர்டு உள்படப் பலரின் மனத்தைக் கவர்ந்திருக்க, கி.பி. 1374-ல், அரசர் இவருக்கு லுட்டர்வர்த் (Lutterworth) என்ற திருச்சபையின் கோயில் வருமானத்தை உரிமையாக்கினார். அப்போதுதான், இக் கோயில் வருமானப் பிரச்சினையில் விக்லிஃப் அன்றைய போப்பாண்டவருடன் சச்சரவிட்டுக் கொண்டார். இவரது துணிச்சலை உள்ளூறப் போற்றிய அரசர் எட்வர்டு, மேற்கொண்டு விக்லிஃபின் சேவையைத் தேடிக்கொண்டார். ஆகவே, அச் சமயத்தில், பர்ஜஸ் (Burges) என்ற இடத்தில் சமயவாதிகளைப்பற்றிய தகராறைப் போப்பாண்டவருடன் பேசிச் சமரசம் காண அனுப்பப்பட்ட ஆங்கிலக் குழுவினரில் விக்லிஃப்பும் ஒரு முக்கிய உறுப்பினராக அனுப்பப்பட்டார். அங்குப் போப்பாண்டவரின் முறைகேடான நடத்தையைக் கண்ணுற்ற இவர், மனத்திற்குள் புழுங்கியவராக நாடு திரும்பியிருந்தார்.

**விக்லிப்ஃபின் பிரச்சாரம்:** பர்ஜஸ் சென்று திரும்பி வந்ததிலிருந்தே விக்லிஃப், தீவிரவாதியாக மாறினார். போப்பாண்டவருக்கெதிராகத் துணிவுடன் தம் பல கருத்துகளை எடுத்துரைக்கலானார். பிரபஞ்சம் (உலகம்) கடவுளுக்கே சொந்தமானதென்றும், கடவுளே அதன் தலைவரென்றும், திருச்சபையினர் (போப்

உள்பட) நேர்மையான வழியில் செல்லவேண்டுமென்றும் விக்லிஃப் வலியுறுத்தினர். திருச்சபை முழுவதிலும் காணப்பட்ட போப் பாண்டவரின் ஆன்மிக அதிகாரம் அர்த்தமற்றது என்றும், போப்பாண்டவர் தம்மைத் தனிப்பட்ட கிறித்துவருக்கும் இயேசு பிரானுக்கும் இடையே நிற்கும் இடையீட்டாளர் (Intermediary) எனச் சொல்லிக் கொண்டது அபத்தமானதென்றும் விக்லிஃப் எடுத்துரைத்தார். மேலும், 'குருமார் உரிமை' அல்லது குற்றம் செய்த குருமார்களுக்கு அளிக்கப்பட்ட (திருச்சபை நீதிமன்றத்தில்) சலுகை முறையற்றது என்றும், திருச்சபையின் கோட்பாடுகள், உரிமைகள் அத்தனையும் நியாயமான ஒழுக்க நியதிகளைச் சார்ந்து இருக்கவேண்டுமென்றும், அதற்கு மாருக, அவை ஒழுக்க நெறிக்குப் புறம்பாக இருந்தால், அரசு குறுக்கிட்டு அதன் மானியங்களைப் பறித்துக்கொள்ள வேண்டுமென்றும் விக்லிஃப் பறைசாற்றினர்.

மேற்கூறிய கொள்கைகளை எவ்விதத் தயக்கமுமின்றித் துணிவுடன் விக்லிஃப் எடுத்துரைத்ததால், அதிகார ஆசையும், ஆதிக்க வெறியும் கொண்ட போப்பாண்டவரின் பகைமையையும் ஆங்கிலத் திருச்சபை ஊழியர்களில் பெரும்பாலோரின் வெறுப்பையும், எதிர்ப்பையும் விக்லிஃப் பெறவேண்டியிருந்தது.

**விக்லிஃப்பிற்கு எதிர்ப்பு :** போப்பாண்டவருக்கெதிராகப் பேசியதற்காகவும் அவருக்குக் கீழ்ப்படிய மறுத்த குற்றத்திற்காகவும் விக்லிஃப் விசாரணைக்குள்ளானர். கி. பி. 1377ஆம் ஆண்டில் செயின்ட் பால் (St. Paul) கோயிலில் இலண்டன் பிஷப் கோர்ட்டினே (Courtenay) என்பவரின் முன்னிலையில் விக்லிஃப்பை விசாரணை செய்வதெனக் குருமார்கள் முடிவெடுத்து, அற்கான தாக்கீதை அனுப்பினர். மூன்றும் எட்வர்டு அரசரின் வயோதிகத்தை முன்னிட்டு, நாட்டின் நிர்வாகத்தைப் பெற்றிருந்த ஜான் காண்ட் (லங்காஸ்டர் பிரபு), கோர்டினேயின் எதிரி என்பதோடு, திருச்சபையின் கட்டுக்கடங்கா அதிகாரத்தையும் வெறுத்தவராக இருந்தார். போப்பாண்டவருக்குச் செலுத்த வேண்டிய சமய வரியிலிருந்து இங்கிலாந்துக்கு விலக்குப் பெற்றுத் தரவேண்டுமெனவும், திருச்சபையின் அதிகபடியான சொத்துகளை அரசுடைமையாக்க வேண்டுமெனவும் நினைத்திருந்த நாட்டின் காப்பாளரான ஜான், தம் முழு ஆதரவை விக்லிஃப்புக்குக் கொடுத்ததோடல்லாமல், விசாரணைக்கு இவருக்குத் துணையாகவும் சென்றார்.

நாட்டின் காப்பாளரே தமக்குக் காவலாக வந்திருக்க, விக்லிஃப் விசாரணைக் கூடத்திற்குள் நுழைந்தார். ஆயினும்,

விசாரணை தொடங்கப்படுவதற்கு முன்னரேயே, ஜான் காண்டுக்கும் கோர்ட்டினேருக்கும் கடுமையாக வாக்குவாதம் முற்றிவிட்டது; கோர்ட்டினேயின் தலைமுடியை இழுத்து, இவரை வெளியே இழுத்துச்செல்லப் போவதாக ஜான் அச்சுறுத்தினர். கோயிலின் வெளி முற்றத்தில் காத்திருந்த மக்கள் கூட்டம், இதற்கிடையே விக்லிஃப்பை எதிர்த்தும் ஆதரித்தும் கலவரம் செய்யவே, நிலைமை கட்டுக்கடங்காமல் போக விசாரணை பாதியிலேயே முடிந்தது; விசாரணையும் தள்ளி வைக்கப்பட்டது.

விக்லிஃப்புக்கு நாட்டில் ஆதரவு பெருகுவதைக் கண்டு வெகுண்ட போப்பாண்டவர், இவரது போதனைகள் தவறானவை என்று மறுப்பு வெளியிட்டு விக்லிஃப்பைக் கைது செய்யும்படி ஆணைகளை (Papal Bull) வெளியிட்டார். இவ்வாணைகள் அரசரின் கைகளுக்கு எட்டுவதற்கு முன்னரேயே மூன்றும் எட்வர்டு காலமாகி விட்டார்.

விக்லிஃப்பின் பிரச்சார வேகம் இன்னும் தீவிரமடைந்தது. போப்பாண்டவரின் ஆதிக்கத் தலையீட்டையும் ஊழல் நிரம்பிய சமய நிர்வாகத்தையும் விக்லிஃப் தொடர்ந்து சாடினர். இதனல், மேலும் கொதிப்படைந்த போப்பாண்டவர் கி.பி. 1378 ஆம் ஆண்டில் மற்றோர் ஆணையைப் பிறப்பிக்க, பிஷப்புகள் மீண்டும் விக்லிஃபை விசாரணைக்கு இழுத்தனர். லேம்பத் (Lambeth) என்ற இடத்தில் விசாரணை ஏற்பாடாயிற்று. குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்ல வரும்படி விக்லிஃப்பிற்குப் போப்பாண்டவரின் ஆணைப்படி குருமார்கள் தாக்கீது அனுப்பியிருந்தார்கள். ஆக்ஸ்ஃபோர்டிலே தங்கியிருந்த விக்லிஃப், சில நாட்களுக்குத் தாக்கீதை ஏற்க மறுத்தார். ஆக்ஸ்ஃபோர்டின் சான்சலரும் தமக்குக் கொடுக்கப்பட்டிருந்த கட்டளையை மீறியவராக விக்லிஃப்பை வெளியேற்ற மறுத்தார். இறுதியில் விசாரணைக்கு வர விக்லிஃப் இசைந்தபோது, இவருக்கு அரசர் இரண்டாம் ரிச்சர்டின் தாயார் (Dowager Princess of Wales) பாதுகாப்புக் கொடுத்தார். விக்லிஃப்பைத் தண்டிக்கக் கூடாதெனவும் மறைமுகமாகப் பிஷப்புகளை மிரட்டலானர். இருப்பினும், விசாரணை தொடர்பாக இம் முறையும் விக்லிஃப்பின் ஆதரவாளர்கள் கலகம் செய்து கூட்டத்தைக் கலைத்தனர். விசாரணை முற்றுப் பெறவில்லை.

**விக்லிஃப்பின் கொள்கையில் தீவிரம்:** தமது மானசீக வெற்றியைத் தொடர்ந்து, அடுத்த இரண்டாண்டுகளில் (கி.பி.1380) விக்லிஃப்பின் மதக் கண்ணோட்டத்தில் புரட்சிகரமான மாற்றம் ஏற்பட்டது. திருச்சபையின் ஊழல்களையும் குருமார்களின்

ஆடம்பரத்தையும் போப்பாண்டவரின் அரசியல் தலையீட்டையும் இதுவரை கண்டித்துவந்த விக்லிஃப் மேற்கொண்டு கத்தோலிக்க மதத்தின் அடிப்படைக் கொள்கையைத் தாக்க முற்பட்டார்.

புனிதப் பொருள் மாற்றம் (Transubstantiation) என்ற கோட்பாட்டின்படி திருக்கோயிலில் கிறித்துவர்கள் பெறும் ரொட்டித் துண்டும் ஒயினும் கர்த்தரின் (ஏசுபிரான்) உடம்பாகவும் செந்நீராகவும் மாறுகின்றன என்ற கோட்பாடு பல நூற்றாண்டுகளாகக் கிறித்துவர்களால் நம்பப்பட்டு வந்திருந்தது; இதனை மறுத்துக் கூறுதல் தெய்வ நிந்தனையாகவும் கருதப்பட்டது. 'பொருள் மாற்றம்' என்பதை மறுத்துப் போப்பாண்டவர் அல்லது மற்ற திருச்சபையின் அதிகாரிகளின் விளக்கங்களைப் பின்பற்றாமல் வேத நூலில் சொல்லப்பட்டிருந்ததையே கிறித்துவர்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்று விக்ளிஃப் வாதாடினார். 'பொருள் மாற்றம்' போன்ற கோட்பாடுகளில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்த அக் கால மக்களுக்குக் குறிப்பாக, சமுதாயத்தின் மேல்மட்டத்திலிருந்த பிரபுக்களுக்கு இப்போது விக்ளிஃப்பின் சமய சீர்திருத்தப் பிரச்சாரம் வெறுப்பைக் கொடுத்தது. இவரது இப் புதிய சமய நிந்தனையை ஏற்க விக்ளிஃப்பின் சீரிய நண்பர்களும் மறுத்து இவரை விட்டு விலகலானார்கள். இதுவரை இவரை ஆதரித்து வந்த ஜான் கான்ட், ஆக்ஸ்போர்டு சென்று பொருள் மாற்றக் கோட்பாட்டை எதிர்ப்பதை விக்ளிஃப் கைவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, இவர் அதை மறுத்ததன் பேரில் விக்ளிஃப்புடன் தமக்கு இருந்த தொடர்பை ஜான் துண்டித்துக் கொண்டார்.

எதிர்ப்புக்கு அஞ்சாத விக்ளிஃப்புக்குத் தாம் சரியென நினைத்ததை எடுத்துச் சொல்லும் துணிவு இருந்தது. தம் கருத்துகளை வாதங்களால் எடுத்துரைத்து மற்றவர்களை ஒப்புக்கொள்ளச் செய்யக்கூடிய திறமையும் இவருக்கு இருந்தது. இதுவரை இவருக்கு உதவிய நண்பர்களும் கருத்து வேறுபாட்டினால் அவரைவிட்டு விலக நேரிட்டபோதும், தம் பிரச்சாரத்தை நிறுத்திக்கொள்ள நினைக்காத மன உறுதியும் இருந்தது.

**விக்ளிஃப்பின் தொண்டு (லாலார்டுகள்)** : பணக்காரர்களாலும் பதவியிலிருப்பவர்களாலும் கைவிடப்பட்டதையுணர்ந்த விக்ளிஃப், தம் கொள்கைகளை ஏழை எளியவர்களிடையே பரப்பத் தொடங்கினார். ஆக்ஸ்ஃபோர்டில் இருந்த இவர்தம் நண்பர்களும் சகாக்களும் விக்ளிஃப்பின் கருத்துகளைப் பெற்றுக்கொண்ட சீடர்களாயினர். பழுப்புநிற நீலமான அங்கிகளை அணிந்து

கொண்டு லாலார்டுகள் (The Lollards) என அழைக்கப்பட்ட இச் சீடர்கள் நாட்டின் பல பாகங்களுக்குச் சென்று, விக்ளிஃப்பின் கருத்துகளை எடுத்துரைத்தனர். எளிய வாழ்க்கையை மேற் கொண்டு, உலகப்பற்றைத் துறந்தவர்களாகச் சேவை உணர்ச்சி யுடன் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்த இந்த எளிய குருமார்கள் (Poor preachers), விக்ளிஃபின் கோட்பாடுகளுக்கு உகந்த உதாரண புருஷர்களாக விளங்கினர்கள்.

நாள்கள் செல்லச் செல்ல விக்ளிஃப்பின் பிரச்சாரம் சூடு பிடிக்க ஆரம்பித்தது. 'ஆதிக்க நிலையைக் கடவுள் தன்மையில் தான் எய்த முடியும்; ஆக, போப்பாண்டவருக்கும் திருச் சபைக்கும் கிறித்துவர்கள் அடங்கத் தேவையில்லை' என்று விக்ளிஃப் கூறியது மட்டுமன்றி, கற்றவர்களுக்கென்றே இதுவரை இலத்தீன் மொழியில் பேசியும் எழுதியும் வந்த விக்ளிஃப், தம் பிரச்சாரத்தைப் பாமரமக்கள் புரிந்து கொள்வதற்கேற்ப ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் ஆரம்பித்தார்.

கிறித்துவ சமயத்தின் அடிப்படையே பைபிள் (விவிலியம்) என்பதையுணர்ந்த விக்ளிஃப், இதை இலத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார் (கி.பி. 1381). இப் பணியில் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தில் தமது ஆதரவாளராகவும் செயலாளராகவும் இருந்த பர்வே (Purvey) என்பவர், விக்ளிஃப் புக்குப் பெரிதும் உதவினர். இலத்தீன் மொழி தெரியாத பாமர மக்களுக்கும் பைபிளின் கருத்துகள் தெரிய வேண்டுமென்பதற் காகவே விவிலிய நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இதன் பின்னரே, விக்ளிஃப்பின் பிரச்சாரங்களும், போதனைகளும் பலரால் புரிந்து கொள்ளப்பட்டன. பெரும்பாலான மக்கள் இவரைப்பின்பற்றலாயினர். பைபிளை ஆதாரமாகக் காட்டி, இனி எண்ணங்களுக்கேற்ப, எவரையும் ஏய்க்க முடியாதென உணர்ந்த தங்களின் கிறித்துவக் குருமார்களுக்குக் கோபம் கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது.

**விக்ளிஃப்புக்கு மேலும் எதிர்ப்பு:** கி.பி. 1382ஆம் ஆண்டு கான்டர்பரியின் ஆர்ச்பிஷப்பான கோர்ட்டினேயின் தூண்டு தலால், ஆங்கிலப் பிஷப்புக்களின் சபையொன்று விக்ளிஃப்பைச் சமய துரோகி எனக் கண்டித்தது. இதைத் தொடர்ந்து விக்ளிஃப்பையும் மற்ற லாலார்டுகளையும் ஆக்ஸ்போர்டிலிருந்து விரட்டி விடும்படி அதன் சான்சலருக்கு ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதன் விளைவாக, விக்ளிஃப்பும் இவரது ஏனைய நண்பர் களும் ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து வெளியேற்றப்பட்டனர்.

விக்ளிஃப்பின் சீடர்களில் பலர், விசாரணைக்காகக் கொண்டுவரப்பட்டுத் தம் கருத்துகள் தவறானவை என்று ஒப்புக்கொள்ளச் செய்யப்பட்டனர். அரசர் இரண்டாம் ரிச்சர்டு, ஆணைகளை வெளியிட்டு விக்ளிஃப்பின் சமய சீர்திருத்த நூல்களைப் பறிமுதல் செய்தார். விக்ளிஃப்பின் எதிர்ப்புக் கொள்கைகள் சமய நிந்தனைக்கு ஒப்பாகும் எனவும் மன்னர் வெளிப்படையாக அறிவித்தார். ஆயினும், இவ் வரசரின் காலத்தில் லாலார்டுகள்மீது எவ்வித பலாத்காரமும் பிரயோகிக்கப்படவில்லை.

லாலார்டுகளின் இயக்கத்திற்குச் சமீப காலம் வரையில் தலைமையிடமாக இருந்த ஆக்ஸ்ஃபோர்டு, அவர்களை விரட்டி விட்டதால், லாலார்டுகளின் சமய சீர்திருத்தபணி முறிந்து விடவில்லை; ஒருசில லாலார்டுகள் சமய விசாரணைக்குட் படுத்தப்பட்டுத் தங்களின் எண்ணங்களை மாற்றிக்கொள்ளும்படி கட்டாயப்படுத்தப்பட்ட போதிலும், லாலார்டுகளின் பிரச்சார வேகம் குறையவில்லை.

மன்னர் இரண்டாம் ரிச்சர்டின் மனைவியான ஆன் ((Anne) அரசியாரின் ஆதரவைப் பெற்றிருந்த ஜான் விக்ளிஃபைத் தண்டிக்க எவருக்கும் துணிவில்லை. தாம் பரப்பிவந்த கொள்கைகளுக்குத் தகுந்த காரணம் கூறத் தெரிந்திருந்த விக்ளிஃப்பைத் தண்டிக்கவும் திருச்சபையினருக்குத் தகுதியில்லை.

தம் கடைசிக் காலத்தை அமைதியாகக் கழித்த விக்ளிஃப் லீசெஸ்டர்ஷயருக்கு அருகேயுள்ள லுட்டர்வொர்த் என்னுமிடத்தில் கி. பி. 1384ஆம் ஆண்டில் இயற்கை எய்தினர்.

கி.பி. 1415 ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட கான்ஸ்டன்ஸ் திருச்சபைக் கூட்டம் (Council of Constance) இவரை ஒரு சமய மறுப்பாளர் எனக் குறை சொல்லிக் கண்டித்திருந்தும், கி. பி. 1428ஆம் ஆண்டில், இலண்டன் பிஷப்பான ஃபிளெமிங் (Fleming) என்பவரால் புதைக்கப்பட்டிருந்த இப் பெரியவரின் எலும்புகள் தோண்டி எடுக்கப்பட்டு எரிக்கப்பட்டு ஆற்றில் வெறுப்போடு வீசியெறியப்பட்டிருந்தும், விக்ளிஃப்பின் வரலாற்றுப்புகழ் இவற்றுள் எதனாலும் மறைவதாக இல்லை.

இங்கிலாந்தின் இடைக்கால வரலாற்றில் ஒரு முக்கிய மனிதராகக் கருதப்படும் விக்ளிஃப், அறிவு முதிர்ச்சி பெற்றிருந்த பெரியவர் ஆவார். திருச்சபையில் மலிந்திருந்த குறைகளைக் களைவதற்காக இவரால் தோற்றுவிக்கப்பட்ட லாலார்டுகள் இயக்கம் விக்ளிஃப் மறைந்த பின்னரும் தொடர்ந்ததென்றால், அஃது

இவரது பிரச்சாரத்திலிருந்த நியாயங்களை எடுத்துக்காட்டியது. ஆழ்ந்த கல்வியறிவு கொண்டிருந்த விக்ளிஃப்பின் சமய சீர்திருத்தக் கருத்துகளைத் திருச்சபையினர் அப்போதே மேற்கொண்டிருப்பார்களேயானால், ஒன்றரை நூற்றாண்டுகள் கழித்து, ஐரோப்பாவில் ஏற்பட்ட சமய புரட்சியைத் தவிர்த்திருக்கலாம். ஆகவே, சமய புரட்சியின் விடிவெள்ளி (The Morning star) என ஜான் விக்ளிஃப்புக்குப் புகழ்மாலை சூட்டப்படுகிறது.

**லாலார்டுகள்**

விக்ளிஃப் காலமாகிவிட்ட போதிலும் இவரால் தொடங்கி வைக்கப்பட்ட லாலார்டுகளின் இயக்கம், இங்கிலாந்தில் இரண்டாம் ரிச்சர்டு ஆட்சிக் காலத்தில் தொடர்ந்தது. அரசரும் அவருடைய அரசியாரான பொஹிமியாவைச் சார்ந்த ஆன் என்பவரும் லாலார்டுகளை மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் முறையே ஆதரித்தனர். இவ் வரசியாரின் அந்தப்புரச் சேவகர் மூலமாகவே விக்ளிஃப்பின் சமய கருத்துகள் பொஹிமியாவுக்கும் (Bohemia) பரவலாயிற்று. தம்முடைய சமய புரட்சிக் கருத்துகளுக்காகப் பின்னர், உயிருடன் எரிக்கப்பட்ட ஜான் ஹஸ் (John Huss) என்பவர், பொஹிமியாவில் விக்ளிஃப்பின் தலைசிறந்த சீடராக விளங்கினர்.

**இரண்டாம் ரிச்சர்டின் காலம்** : இங்கிலாந்தில் லாலார்டுகளின் இயக்கத்திற்கு மக்களின் ஆதரவு பெருகுவதைக் கண்டு கிறித்துவக் குருமார்கள் வெகுண்டு லாலார்டுகளை மதத் துரோகிகளாக அரசர் தண்டிக்க வேண்டுமென்று கூக்குரலிட்டனர். பிரபுக்களின் சூழ்ச்சிகளைக் களைவதிலும். மற்ற அரசியல் சிக்கல்களிலும் தம் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்த இரண்டாம் ரிச்சர்டு, லாலார்டுகளைத் தண்டித்து. இன்னொரு குழப்பத்தை உண்டாக்கத் தயங்கினர். மேலும், மக்களுக்கு லாலார்டுகளின் போதனைகளிலிருந்த கொள்கைப் பிடிப்பினையும் இரண்டாம் ரிச்சர்டு உணர்ந்தவராகவே இருந்தார். அரசரின் தயக்கத்தைப் புரிந்துகொண்ட குருமார்கள், லாலார்டுகளைத் தண்டிக்காமல் அவர்களின் இயக்கத்தை மறைமுகமாக அரசர் ஆதரிக்கிறாரெனக் கண்டிக்கத் தொடங்கினார்கள். இதற்கிடையே, கி. பி. 1399ஆம் ஆண்டில் தோன்றிய புரட்சியின் விளைவாக இரண்டாம் ரிச்சர்டு பட்டம் துறந்தார்.

**நான்காம் ஹென்றியின் காலம்** : அடுத்து, ஆட்சியைக் கைப்பற்றிய நான்காம் ஹென்றி (லங்காஸ்டர் அரச மரபு), தம் ஆட்சி நிலைக்க வேண்டுமெனின், குருமார்களின் ஒத்துழைப்பு

வேண்டுமென எண்ணித் தம் நண்பரும், கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்புமான அருண்டேல் (Arundale) என்பரைக் கொண்டு, கி. பி. 1401ஆம் ஆண்டில், சமய விரோதிகளை எரித்தலைப்பற்றிய சட்டம். (De Haeretico Camburendo) ஒன்றை இயற்றுவித்தார். இச் சட்டத்தைப் பயன்படுத்தி, அருண்டேல் திருச்சபையின் கோட்பாடுகளை எதிர்த்த லாலார்டுகளைப் பழிவாங்கலானார். வில்லியம் சாட்டர் (William Sawtre) என்ற அறிவுச் செம்மலோடு, வேறு பல லாலார்டுகளும் ஸ்மித்ஃபீல்ட் (Smith field) என்னுமிடத்தில் உயிரோடு எரிக்கப்பட்டனர். தண்டனைக்குப் பயந்து சில லாலார்டுகள் தங்களின் சமய சீர்திருத்தக் கருத்துகளைக் கைவிடவும் முன்வந்தனர்.

அருண்டேலின் ஆணைப்படி, முன்னர் விக்ளிஃப்பினால் மொழிபெயர்க்கப்பட்டிருந்த விவிலியத்திலிருந்து, சில பகுதிகளும் 'ஆட்சேபகரமானதாகக்' கருதப்பட்டு நீக்கப்பட்டன .

**ஐந்தாம் ஹென்றியின் காலம் :** இருப்பினும், லாலார்டுகளின் இயக்கம் எதிர்ப்புகளுக்கிடையே தொடர்ந்தது. இவ் வியக்கம், அன்று பட்டமெய்திய ஐந்தாம் ஹென்றியின் காலத்திலேயே நசிய ஆரம்பித்தது. கி. பி. 1413ஆம் ஆண்டில், இவ் வரசர் பல லாலார்டுகளைச் 'சமயத்துரோகிகளாக' நிந்தித்து ஸ்மித்ஃபீல்டில் சுட்டெரிக்கச் செய்தார்.

லாலார்டுகளின் தலைவராக இக் காலத்தில் சர் ஜான் ஓல்டு காஸில் (Sir John Old Castle) என்ற பிரமுகர் இருந்தார். அரசரின் கவனம் அவர்மீது திரும்பியது. சமயதுரோகி என்ற குற்றச்சாட்டை ஐந்தாம் ஹென்றி இவர்மீது சுமத்தித் தம் ஆர்ச் பிஷப் முன்னிலையில் விசாரணை தொடங்கினர். கோழைகளைப் போல் தம் சமய (புதிய) கருத்துகளை மாற்றிக்கொள்ள மறுத்ததோடல்லாமல் ஓல்டு காசில், அரசரையும், ஆர்ச் பிஷப்பையும், அங்குக் குழுமியிருந்த குருமார்களையும் கடும் சொற்களால் சாடினர்; 'போப்பாண்டவரே கிறித்துவ மதத்திற்கு எதிரி: நீரும், உம்மைச் சேர்ந்தவர்களும் போப்புக்கு வால் பிடிப்பவர்கள்...' என ஓல்டு காசில் அரசர் ஐந்தாம் ஹென்றிக்கு முன்பாக எதிர்வாதம் செய்தார்.

பொறுமையிழந்த ஐந்தாம் ஹென்றி, இவருக்கு மரண தண்டனை விதித்துச் சிறையில் அடைத்து வைக்க, தண்டனை பெறும் நாள் வருவதற்கு முன்பாகவே ஓல்டு காசில் தப்பிவிட்டார். சில நாட்கள் ஒதுக்குப்புறமான இடத்தில் பதுங்கியிருந்து,

தமக்கு ஆதரவாக ஆயுதப் பலத்தைப் பெற்று, ஐந்தாம் ஹென்றியைப் பழிவாங்கத் துடித்துக்கொண்டிருந்தார். கி. பி. 1413ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகையின்போது, எல்தாம் (Eltham) அரண்மனையில் அரசர் தங்கியிருக்கும்போது, தம் லாலார்டு நண்பர்களின் உதவியால் அவரைக் கைப்பற்றிக் கொல்ல வேண்டுமென ஓல்டு காஸில் திட்டமிட்டுக் காத்திருந்தார். ஆயினும், இச் சதியைத் தெரிந்துகொண்ட அரசர், லாலார்டுகள் இரகசியமாகக் குழுமியிருந்த இலண்டனில் சேரிங்கிராசுக் கருகேயுள்ள செயின்ட் கைல்ஸ்ஃபீல்ட்ஸ் (St. Gilesfields) என்ற இடத்தைத் தாக்கிப் பல லாலார்டுகளைக் கொன்றார். ஆயினும் ஓல்டு காஸில் தப்பிவிட்டார்.

சிறைப் பிடிக்கப்பட்ட மற்ற முப்பத்தேழு லாலார்டுகள் 1414ஆம் ஆண்டு ஜனவரி முதல் வாரத்தில் தூக்கிலிடப் பட்டார்கள். நான்கு ஆண்டுகள் மறைந்து வாழ்ந்த ஓல்டு காஸில் இறுதியில் வேல்ஸ் பகுதியில் கைது செய்யப்பட்டு, இலண்டனுக்குக் கொண்டுவரப்பட்டார். சமயதுரோகக் குற்றத்துடன், இராசத் துரோகமும் இணைக்கப்பட்டு, ஓல்டு காஸில் விசாரணை செய்யப்பட்டார். விசாரணையின் முடிவில் மரணதண்டனை பெற்ற ஓல்டு காஸில் 1417ஆம் ஆண்டு டிசம்பரில் ஸ்மித்ஃபீல்டு என்னுமிடத்தில் எரிக்கப்பட்டார்.

இங்ஙனமாக, அரசர்களின் கெடுபிடிக் கொள்கையினால், லாலார்டுகளின் இயக்கம் நசுக்கப்பட்டிருந்தாலும், இன்னும் இங்கிலாந்தின் சில கிராமங்களிலே இவ் வியக்கம் இலைமறை காய்போல் இருந்தே வந்தது. லாலார்டு இயக்கம் நசிந்து விட்டதாகத் திருச்சபையினர் நினைத்திருக்க, லாலார்டுகளால் பரப்பப்பட்டிருந்த சமய சீர்திருத்தக் கருத்துகள் மக்களின் மனத்தில் பதிந்திருக்க, அவையே அடுத்த தலைமுறைகளில் சமய புரட்சியாக (The Reformation) வெளிப்பட்டன.

## இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சியும் வீழ்ச்சியும்

மிக இளம்வயதிலேயே ஆட்சிக்கு வந்திருந்த இரண்டாம் ரிச்சர்டிடம் ஆண்மை, திறமை இருந்ததால் இவரது ஆட்சிக்காலம் மிகவும் சிறப்பாக அமையுமெனவே எதிர்பார்க்கப்பட்டது. இருப்பினும், அரசர் பதினொரு வயதே நிரம்பப் பெற்றவராக இருந்ததால், பன்னிரண்டு (பிரபுக்கள், பிஷப்புகள்) பேர் அடங்கிய ஓர் அரச சபையும் அமைக்கப்பட்டு, ஒரு வகையான் பகர ஆட்சி நடத்தப்பட்டது. இரண்டாம் ரிச்சர்டின் இளமைப் பருவத்தைப்

## மூன்ரும் எட்வர்டின் சந்ததி



பயன்படுத்திக் கொண்டு பாராளுமன்றமும் தன் அதிகாரங்களைப் பெருக்கிக் கொண்டது.

இவரது ஆட்சித் தொடக்க காலத்திலேயே மீண்டும் இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் இடையே நூறாண்டுப்போர் தொடங்கியிருந்தது. இப் போரில் புதிய இடங்கள் எதையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றவில்லையென்றாலும், இங்கிலாந்துக்கு வீணாகப் பண விரயம் ஆகி இருந்தது. அரசர் இரண்டாம் ரிச்சர்டு இப் போரிலே நேரிடையான பங்கு எதையும் எடுத்துக்கொள்ளவில்லையென்றாலும், அரசரின் ஆலோசனை சபையே திறமையற்ற சில படைத்தளபதிகளை வைத்துப் போரை நடத்தி வந்திருந்ததால் நாட்டிலே ஓர் அதிருப்தி நிலவ ஆரம்பித்தது. இதற்கிடையே, நாட்டை ஆட்டிப்படைத்த குடியானவர் கலகமும் நடந்து ஓய்ந்தது.

**இரண்டாம் ரிச்சர்டின் தனி ஆட்சிக்கான முயற்சி:** நாட்டில் சமீப காலமாக நிலவி வரும் அதிருப்திக்கு முடிவு கட்ட வேண்டுமென்றால், ஒரு வலுவான நல்லாட்சி அமைய வேண்டுமென்றால், தாம் பிரபுக்களின் (அரச சபை) பிடியிலிருந்து விடுபடவேண்டிய அவசியத்தை இரண்டாம் ரிச்சர்டு உணர ஆரம்பித்தார். ஆகவே, தம் விருப்பத்திற்குப் பணிந்து போகக் கூடிய சிலரைக்கொண்டு, கி. பி 1385ஆம் ஆண்டில் நேரிடை ஆட்சி செய்ய இரண்டாம் ரிச்சர்டு முற்படலானார்.

அரசரின் அபிமானத்திற்கு உகந்தவர்களாக ஆக்ஸ்ஃபோர்டு பிரபுவான இராபர்ட்-டி-வீர் (Robert-d –Vere), ஸஃபோக் பிரபுவான மைக்கேல் டி லா போல் (Michal de la Pole) என்போர் இருந்தனர். இவர்கள் அரசரின் ஆதரவாளர்களாக அரச சபையிலே இருக்க, இப் பிரபுக்களையும் இவர்களைச் சார்ந்தோரையும் அவைக்களக் கட்சியினர் (Court Part\) என அழைத்தனர். ஆயினும், இவ்விரு பிரபுக்களை மற்ற பிரபுக்கள் விரும்பாததாலும், அரசரைத் தொடர்ந்து தங்கள் பிடியில் வைத்திருக்க வேண்டுமென்று விரும்பியதாலும், கிளௌசெஸ்டர் பிரபுவான தாமஸ் உட்ஸ்டாக் (Thomas Woodstock) என்பவரின் தலைமையில், அரசர் அவையிலேயே 'அரசியல் அமைப்புக் கட்சியினர்' என்ற பிளவு தோன்றியது ஜான் கான்ட்டின் மகனும், டெர்பியின் எர்லுமான பாலிங்புரோக் ஹென்றி (Henry of Bolingbroke), ஆர்ச் பிஷப் அருண்டேல் போன்றோர் இக் கட்சியின் முக்கிய ஆதரவாளர்களாக இருந்தனர். ஆகவே, இரண்டாம் ரிச்சர்டுக்கு

நிர்வாகத் துறையில் உதவியாக இருந்து வந்த அரச சபையிலே பிளவும் பூசலும் தொடங்கி விட்டது.

கி. பி. 1385 ஆம் ஆண்டு, நாட்டிலே நிலவி வரும் வரிக் கொடுமைக்கு அரசரின் ஆலோசகர் மைக்கேல் டி லா போல் பொறுப்பாளியெனத் தாமஸ் உட்ஸ்டாக்கும், இவரது நண்பர் களும் குறைகூறி, அவரை உடனடியாகப் பதவியிலிருந்து நீக்கி விடவேண்டுமென்று குரல் கொடுத்தனர். இரண்டாம் ரிச்சர்டு இந்த மிரட்டலுக்குப் பணிய மறுத்ததோடன்றித் தாம் தம் அரண்மனையிலுள்ள எந்தவொரு மிக எளிய வேலையாளையும் இப் பிரபுக்கள் வற்புறுத்துகிறார்களென்பதனால் நீக்க முடியாதென கண்டிப்பாகச் சொன்னார். இதனால், ஆத்திரமடைந்த 'அரசிய லமைப்புக் கட்சியினர்' டி-லா-போலுக்கெதிராகப் பாராளு மன்றத்தைத் தூண்டி விட்டனர்.

அரசரின் செல்வங்களைப் பறித்துக் கொண்டாரென்றும், பாராளுமன்றத்தின் அதிகாரங்களை உதாசீனப்படுத்தினாரென்றும் இவர்மீது குற்றம் சாட்டப்பட்டது. துரோகக் குற்றம் சாட்டப் பட்ட டி-லா-போலைப் பதவியிலிருந்து நீக்கும்படி அரசர் கோரப் பட்டார். டி-லா-போல் மீது சுமத்தப்பட்டிருந்த குற்றங்கள் அனைத்தும் நியாயமற்றவை என்றும், அவரது தண்டனை பொருத்தமற்றதென்றும் இரண்டாம் ரிச்சர்டு பொருமினார். குற்றம் சாட்டப்பட்ட டி-லா-போலை உடனடியாகப் பதவிநீக்கம் செய்யு வில்லை யென்றால், அரசர் பட்டத்தை இழக்க வேண்டியிருக்கு மெனப் பாராளுமன்றம் மிரட்டியது. வேறுவழியின்றி இரண்டாம் ரிச்சர்டு, தம் நண்பரைச் சான்சலர் பதவியிலிருந்து நீக்கினார்.

**மேல் முறையீட்டுப் பிரபுக்கள்:** இதனைத் தொடர்ந்து, அரசரை மேலும் கட்டுப்படுத்த, பிரபுக்களின் தூண்டுதலால், பாராளுமன்றம் ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தது. இச் சட்டத் தின்படி, அரசரின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தும் வகையில், பதினான்கு பேர் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது. இஃது ஓராண்டு மட்டுமே பதவியிலிருக்கவேண்டுமென ஏற்பாடு செய்யப் பட்டது. வரம்பற்ற அதிகாரங்களைப் பெற்றிருந்த இக் குழுவுக்குக் கட்டுப்படுமாறு இரண்டாம் ரிச்சர்டு பணிக்கப்பட்டார்.

இருபது வயது நிரம்பியிருந்த அரசர், இனியும் அவ்வகையான கட்டுப்பாட்டிற்குள் இருக்க விரும்பவில்லை. நீதிபதிகளுக்கு மனுச் செய்து, இரண்டாம் ரிச்சர்டு எழுத்து மூலமாக அவர்களிடமிருந்து சமீப காலத்திய நிலவரங்களைப்பற்றிய கருத்துரைகளைக்கேட்டார்.

அக் கருத்துரையின்படி, பதினான்கு பேர் கொண்ட அக் குழு சட்ட விரோதமானதென்றும், அதற்கு அரசர் கட்டுப்பட்டிருக்க வேண்டியதில்லையென்றும், பாராளுமன்றத்தின் அதிகாரத்தை வரையறுக்கும் அதிகாரம் அரசருக்குண்டென்றும், இம் மன்றத்தை அரசர் தம் விருப்பம் போல் கலைத்து விடலாமென்றும், அரசருடைய அனுமதியின்றி அவரது அமைச்சர்களைக் குற்ற விசாரணைக்கு உட்படுத்தக்கூடாதென்றும் தெளிவாக்கியது. இவ் வகையான கருத்துரைகளை அரசர் தங்களை மிரட்டிப் பெற்று விட்டாரென அந்த நீதிபதிகள் குறைபட்டுக் கொண்டாலும், இக் கருத்துகளைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு, அச் சீர்திருத்தக் குழுவின் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ள முயன்றார். இத்துடனன்றி, சிறையிலடைக்கப்பட்டிருந்த டி-லா-போலை விடுவித்து மீண்டும் அவரைச் சான்சலர் பதவியில் அமர்த்தினார்.

அரசரின் இச் செய்கைகள் முறையற்றதென கிளௌசெஸ்டர் பிரபுவான தாமஸ் உட்ஸ்டாக், பழைய ஆர்ச் பிஷப்பான அருண்டேல், டெர்பி எர்லான ஹென்றி பாலிங்புரோக், வார்விக் எர்லான தாமஸ் போஷாம்ப் (Beuchamp), நாட்டிங்ஹாம் எர்லான தாமஸ் மௌப்ரே (Mowbray) என்ற ஐவர், மேல் முறையீடு செய்து கொண்டார்கள். இவர்களே, 'மேல் முறையீடு பிரபுக்கள்' (The Lords Appellant) என அழைக்கப்பட்டனர்.

அரசரின் இச் செய்கைகளால் வெகுண்ட மேல் முறையீட்டுப் பிரபுக்கள் படைப்பலம் கொண்டு, இரண்டாம் ரிச்சர்டை அடக்க முடிவெடுத்தனர். அரசரும், தமக்கு உதவியாக, அயர்லாந்தில் டியூக்காக இருந்து வந்த இராபர்ட்-டி-வீர் என்பவரைப் படை கொண்டுவரும்படி பணித்தார். ஆயினும், டி-வீரைக் கி.பி. 1387ஆம் ஆண்டில் தாமஸ் உட்ஸ்டாக்கின் கட்சியினர் (மேல் முறையீட்டுப் பிரபுக்கள்) ரேட்கோட் பிரிட்ஜ் (Radcot Bridge) என்னுமிடத்தில் தோற்கடித்து விட்டனர். இத் தோல்வி, அரசரின் ஆதரவாளர்களுக்குப் பேரிடியாக இருந்தது.

**கருணையற்ற பாராளுமன்றம்:** இவ் வெற்றியைத் தொடர்ந்து தாமஸ் உட்ஸ்டாக் கட்சியினர், அரசரைத் தங்கள் பிடிக்குள் கொண்டு வரப் பதினொரு பிரபுக்கள் அடங்கிய ஒரு நிர்வாகக் குழுவை அமைத்தனர். இரண்டாம் ரிச்சர்டின் அதிகாரங்கள், இக் குழுவினால் பறிக்கப்பட்டதால் அரசர் பலமற்றவராக இருந்தார். இத்துடன் நிற்காமல், அரச கட்சியினரைத் தண்டிக்க விரும்பிய இக் குழு, இரண்டாம் ரிச்சர்டை வற்புறுத்தி ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டச் செய்தது.

கி.பி. 1388 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கூட்டப்பட்ட இப் பாராளுமன்றமே, கருணையற்ற பாராளுமன்றம் (Merciless Parliament) என அழைக்கப்பட்டது.

இப் பாராளுமன்றத்தில் 'மேல் முறையீட்டுப் பிரபுக்களின்' செல்வாக்கு மிகுந்திருந்ததால், அரசரின் நண்பர்கள் இரக்கமின்றிப் பழிவாங்கப்பட்டனர். ஏற்கெனவே, நாட்டைவிட்டு ஓடியிருந்த டி-வீர், டி-லா-போல் என்போர் துரோகிகளாக அறிவிக்கப் பட்டனர்; ஆர்ச் பிஷப் நெவில்லயின் மானியங்கள் பறிக்கப் பட்டன; அரசரின் நண்பரும் நாட்டின் பிரதம நீதிபதியுமான ட்ரெச்செலின், இலண்டன் மாநகரின் முன்னாள் மேயருமான நிக்கோலஸ் பிராம்பர் (Nicholas Brember) ஆகியோர் தூக்கி லிடப்பட்டனர். அரசரின் ஏனைய நண்பர்களான சர் சைமன் பர்லி, பெர்னர்ஸ் என்போரும் சிரச்சேத மடைந்தனர். மேலும், இம் மன்றம், தாமஸ் உட்ஸ்டாக் கட்சியினருக்கு (மேல் முறையீட்டுப் பிரபுக்கள்), தாங்கள் முன்பு அடைந்த வசதிக் குறைவிற்காக 20,000 பவுன்களையும் இழப்பீடாக அளித்தது. இறுதியாக, அரசர் மீண்டும் ஒரு முறை கான்டர்பரி ஆர்ச்பிஷப்பின் முன், செயின்ட் பால் திருக்கோயிலில் முடிசூட்டிக் கொண்டு, 'மேல் முறையீட்டுப் பிரபுக்களின்' ஆலோசனையின் பேரில் தாம் ஆட்சி செய்யப் போவதாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டுமென அறிவித்து விட்டு, இக் கருணையற்ற பாராளுமன்றம் கலைந்துவிட்டது.

**இரண்டாம் ரிச்சர்டின் நல்லாட்சி (கி. பி. 1389-1387):** அரசரைக் கட்டுப்படுத்தி, நிர்வாகப் பொறுப்பினைக் கொண்டிருந்த மேல் முறையீட்டுப் பிரபுக்களின் ஆட்சி அவலமாகவே இருந்தது. கொள்கைப் பிடிப்பற்ற தாமஸ் உட்ஸ்டாக், தம் நடத்தையினால், நாட்டின் மற்ற பிரபுக்களிடையே தாம் பெற்றிருந்த மதிப்பை இழந்துவரலானார். ஓராண்டுக் காலம் இரண்டாம் ரிச்சர்டு தம் விதியைநினைத்து நொந்து கொண்டிருந்தாலும், விடிவு காலமொன்றையும் எதிர் நோக்கியே இருந்தார்.

தாமஸ் உட்ஸ்டாக்கின் பிடியிலிருந்து தப்பித் தாமே நேரிடையான ஆட்சி செய்யவேண்டுமென்றும், தம் நண்பர்கள் கருணையற்ற பாராளுமன்றத்தினால் கொல்லப்பட்டதற்குக் காரணமானவர்களைப் பழிவாங்க வேண்டுமென்றும் கருவிக் கொண்டிருந்த இரண்டாம் ரிச்சர்டு, கி.பி. 1389 ஆம் ஆண்டு மே, 3ஆம் நாள், கிளௌசெஸ்டர் பிரபுவான தாமஸ் உட்ஸ்டாக்கை அழைத்து, 'எனக்கு இருபத்திரண்டு ஆண்டுகள் நிரம்பி விட்ட

மையால், இனி எனக்கு அரசியல் ஆலோசகர்கள் தேவையில்லை. இன்னும், எத்தனை நாள் என்னை நீங்கள் ஆட்டிவைக்கப் போகிறீர்கள்? இனி, நானே இந் நாட்டை ஆளப் போகிறேன்.' என்று சொல்லி, அரசவையில் சுற்றிலுமிருந்த எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தினார். தமக்குச் சுயமாகப் பொறுப்பேற்கும் உரிய வயது வந்து விட்டமையால், தமக்கு வேண்டியவர்களை அமைச்சர்களாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, தாமே நாட்டை ஆளப் போவதாக இரண்டாம் ரிச்சர்டு அறிவித்தார்.

அரசியல் வரம்பிற்குற்பட்டு நல்லாட்சியை அமைக்க விரும்பிய இரண்டாம் ரிச்சர்டு, அடுத்த எட்டாண்டுகளில் சர்ச்சைக்குரிய எக்காரியத்தையும் செய்யவில்லை. நாடு கடத்தப்பட்டிருந்த தம் பழைய நண்பர்களை அழைக்காமல், தம் பாட்டனாரான மூன்றும் எட்வர்டின் முதிய அறிவுரையாளர்களை அழைத்துத் தம் அமைச்சர்களாக்கினார். இவர்களில், சான்சலராகப் பணியேற்ற வைக்காமைச் சார்ந்த பிஷப் வில்லியம் (William of Wykcham); பொருளாளராகப் பணியேற்ற எச்ஸிடாரைச் சார்ந்த பிராண்டிங்ஹாம் என்பவர்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவர்களாவர். மேல்முறையீட்டுப் பிரபுக்களின் செல்வாக்கு குறைக்கப்பட்டிருந்தாலும், அரச சபையிலிருந்து இவர்களும் விரட்டியடிக்கப்படவில்லை.

அரசர் பாராளுமன்றத்துடனும் சுமுகமான உறவை வளர்த்துக் கொண்டார். தம் அமைச்சர்களும் அரசவை அங்கத்தினர்களும் ஊழல்களுக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்கவேண்டுமென்று, அவர்களையெல்லாம் பதவிகளை வலிய இராஜினமா செய்துவிட்டுப் பாராளுமன்றத்தின் விசாரணைக்குத் தங்களை உட்படுத்திக் கொள்ளுமாறு இரண்டாம் ரிச்சர்டு கட்டளையிட்டார். பாராளுமன்றம் அவர்களின் நடத்தையைப் பரிசோதித்து, அவ் வலுவலர்களின்மீது எவ்வித ஊழலும் இல்லையெனத் தம் முடிவை அறிவித்தபின் பேரிலேயே, மன்னர் மீண்டும் அவர்களை அந்தந்தப் பதவிகளில் பொறுப்பேற்கச் சொன்னார்.

இதற்கிடையே, அரசரின் சிறிய தந்தையும் தாமஸ் உட்ஸ்டாக்கின் மூத்த சகோதரருமான ஜான் காண்ட் (லங்காஸ்டர்) என்பவர், தம் மனைவியின் நாடான ஸ்பெயினிலிருந்து நாடு திரும்பியிருந்தார். இவருடைய வருகை இரண்டாம் ரிச்சர்டைப் பொறுத்தவரையில் ஒரு நல்ல திருப்பமாக அமைந்தது. ஏனெனில், அரச நிர்வாகத்திலே அனுபவமும், நாட்டுப் பிரபுக்களிடையே செல்வாக்கும் கொண்டிருந்த ஜான்

மையால், இனி எனக்கு அரசியல் ஆலோசகர்கள் தேவையில்லை. இன்னும், எத்தனை நாள் என்னை நீங்கள் ஆட்டிவைக்கப் போகிறீர்கள்? இனி, நானே இந் நாட்டை ஆளப் போகிறேன்.' என்று சொல்லி, அரசவையில் சுற்றிலுமிருந்த எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தினர். தமக்குச் சுயமாகப் பொறுப்பேற்கும் உரிய வயது வந்து விட்டமையால், தமக்கு வேண்டியவர்களை அமைச்சர்களாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, தாமே நாட்டை ஆளப் போவதாக இரண்டாம் ரிச்சர்டு அறிவித்தார்.

அரசியல் வரம்பிற்குற்பட்டு நல்லாட்சியை அமைக்க விரும்பிய இரண்டாம் ரிச்சர்டு, அடுத்த எட்டாண்டுகளில் சர்ச்சைக்குரிய எக்காரியத்தையும் செய்யவில்லை. நாடு கடத்தப்பட்டிருந்த தம் பழைய நண்பர்களை அழைக்காமல், தம் பாட்டனரான மூன்றும் எட்வர்டின் முதிய அறிவுரையாளர்களை அழைத்துத் தம் அமைச்சர்களாக்கினர். இவர்களில், சான்சலராகப் பணியேற்ற வைக்காமைச் சார்ந்த பிஷப் வில்லியம் (William of Wykcham), பொருளாளராகப் பணியேற்ற எக்ஸிடாரைச் சார்ந்த பிராண்டிங் ஹாம் என்பவர்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவர்களாவர். மேல் முறையீட்டுப் பிரபுக்களின் செல்வாக்குக் குறைக்கப்பட்டிருந்தாலும், அரச சபையிலிருந்து இவர்களும் விரட்டியடிக்கப் படவில்லை.

அரசர் பாராளுமன்றத்துடனும் சுமுகமான உறவை வளர்த்துக் கொண்டார். தம் அமைச்சர்களும் அரசவை அங்கத்தினர்களும் ஊழல்களுக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்கவேண்டுமென்று, அவர்களையெல்லாம் பதவிகளை வலிய இராஜினமா செய்துவிட்டுப் பாராளுமன்றத்தின் விசாரணைக்குத் தங்களை உட்படுத்திக் கொள்ளுமாறு இரண்டாம் ரிச்சர்டு கட்டளையிட்டார். பாராளுமன்றம் அவர்களின் நடத்தையைப் பரிசோதித்து, அவ் வலுவலர்களின்மீது எவ்வித ஊழலும் இல்லையெனத் தம் முடிவை அறிவித்ததன் பேரிலேயே, மன்னர் மீண்டும் அவர்களை அந்தந்தப் பதவிகளில் பொறுப்பேற்கச் சொன்னர்.

இதற்கிடையே, அரசரின் சிறிய தந்தையும் தாமஸ் உட்ஸ்டாக்கின் மூத்த சகோதரருமான ஜான் காண்ட் (லங்காஸ்டர்) என்பவர், தம் மனைவியின் நாடான ஸ்பெயினிலிருந்து நாடு திரும்பியிருந்தார். இவருடைய வருகை இரண்டாம் ரிச்சர்டைப் பொறுத்தவரையில் ஒரு நல்ல திருப்பமாக அமைந்தது. ஏனெனில், அரச நிர்வாகத்திலே அனுபவமும், நாட்டுப் பிரபுக்களிடையே செல்வாக்கும் கொண்டிருந்த ஜான்

கான்ட், தம் முழுமனதான ஆதரவை இரண்டாம் ரிச்சர்டுக்கு கொடுத்திருக்க, ஏனைய பிரபுக்களின் முணுமுணுப்பு அரசரை எவ்வகையிலும் பாதிப்பதாக இல்லை.

மேற்கொண்டு, இதுவரை விட்டுவிட்டு ஃபிரான்சு நாட்டுடன் இவ் வரசர் காலத்தில் நடத்தப்பட்டு வந்திருந்த நூறாண்டுப் போரும் ஒரு சமாதான உடன்படிக்கையின்படி (கி.பி. 1396) முடிவடைந்திருந்தது. இதன்படி, அடுத்த முப்பதாண்டுகளுக்கு இரு நாடுகளும் நிலையான சமாதானக் கொள்கையினைப் பின்பற்றுவதாக ஒப்புக் கொண்டிருந்தன. இங்ஙனம், போர் நின்றிருந்த வேளையில், எந்தவொரு புதிய வரிகளுக்கும் தேவையில்லாது போனதால், மக்களின் வரிப்பளுவும் குறைக்கப் பட்டது.

ஜான் விக்ளிஃப்பின் சமய சீர்திருத்தப் போதனைகளால் கவரப்பட்டு லாலார்டுகள் நாட்டிலே இங்கும் அங்குமாகச் சல சலப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்ததைத் தவிர, இரண்டாம் ரிச்சர்டின் இக் காலம் அமைதியாகவே இருந்தது.

கூர்த்த மதியோடும், திறமையோடும் இரண்டாம் ரிச்சர்டு சிறப்பான ஓர் ஆட்சியை அமைத்திருந்ததால், நாட்டு மக்கள் இதை மனமார வரவேற்றனர்.

**ரிச்சர்டின் வல்லாட்சி (கி.பி. 1397—1398):** இரண்டாம் ரிச்சர்டின் மனைவியான ஆன் (Anne) இரண்டாண்டுகளுக்கு முன்னர் காலமானதை ஒட்டி, வயதில் மிகச் சிறியவளான ஃபிரெஞ்சு இளவரசி இசபெல்லா என்பவளை அரசர், அந் நாட்டுடன் ஏற்பட்டிருந்த போர் நிறுத்த உடன்படிக்கையையொட்டி (கி.பி. 1396) மணம் செய்து கொண்டிருந்தார். இத் திருமணம் சில அவசியமற்ற சிக்கல்களுக்குக் காரணமாக அமைந்துவிட்டது.

முதல் மனைவி ஆன் அரசி, பிள்ளைப்பேறு ஏதுமின்றி இறந்து விட்டாள். இசபெல்லாவோ ஏழுவயது நிரம்பிய ஒரு சிறுமியாக இருந்தாள்; இந்த அரசியல் திருமணத்தால், அரியணைக்கு அடுத்த வாரிசு இன்னும் சில ஆண்டுகளுக்குக் கிடைக்காதென்ற நிலைமை இருந்தது. இரண்டாம் ரிச்சர்டு ஒரு தற்காலிக ஏற்பாடாக, மூன்றும் எட்வர்டின் இரண்டாம் மகளான கிளாரன்ஸ் லையனல் (Lionel, Duke of Clarance) என்பவரின் பேரரும், அப்போது அயர்லாந்தில் எல்லைப் பிரபுவுமாக இருந்து வந்த ரோஜர் (Roger, Earl of March) என்பவரைத் தம்

அடுத்த வாரிசாக அறிவித்திருந்தார். இரண்டாம் ரிச்சர்டின் இவ் வறிவிப்பு, இவரது மற்ற சிறிய தந்தையர்க்கும் (ஜான் காண்ட் உள்பட) அவர்களின் பிள்ளைகளுக்கும் (காண்ட்டின் பிள்ளையான ஹென்றி போலிங்புரோக் உள்பட) ஏமாற்றத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது. மேலும், இத் திருமணத்தைத் தொடர்ந்து, நாட்டுக்குப் பல ஃபிரெஞ்சு பிரமுகர்கள் வரத்தொடங்கவே, அரசர் வீணை கவுரவச் செலவுகளைச் செய்து பணத்தை விரயமாக்க முற்பட்டார்.

இந்த வீணை செலவுகளைக் கண்டிக்கும் வகையிலும் அரசரின் அரண்மனைச் செலவுகளைக் கட்டுப்படுத்தும் முறையிலும், கி.பி. 1397 ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றத்தில், சர் தாமஸ் ஹாக்ஸி (Sir Thomas Haxey) ஒரு மசோதாவைத் தாக்கல் செய்தார். இம் மசோதா தம் சிறப்புரிமைகளைப் பாதிப்பதாக அமைந்திருக்கிறதென்று இரண்டாம் ரிச்சர்டு கோபங்கொண்டு இம் மசோதாவைப் பாராளுமன்றத்தில் நிறைவேருமல் தடை செய்ததோடன்றி, சர் தாமஸ் ஹாக்ஸி என்பவரை அரசத் துரோகக் குற்றம் சாட்டித் தண்டிக்கலானர். இச் சம்பவத்தால், தனது உரிமையில் அரசர் குறுக்கிடுவதாகப் பாராளுமன்றம் நினைக்கலாயிற்று.

தம் ஆட்சி நாட்டிலே நிலைத்து விட்டதையும், நாட்டின் பெரும்பாலான மக்கள் தம்மிடம் பற்றுக் கொண்டிருப்பதையும் புரிந்து கொண்டிருந்த இரண்டாம் ரிச்சர்டு, கி. பி. 1388 ஆம் ஆண்டிலிருந்து அபரிமித நம்பிக்கைகொண்டு கண்மூடித்தனமாக நடந்து கொள்ளத் தலைப்பட்டார். முன்பு, தம்மைத் தங்களின் கைப்பாவையாக ஆட்டி வைத்தவர்களும், தம் நண்பர்களில் சிலர் கொல்லப்பட்டதற்குக் காரணமானவர்களுமான அந்த மேல் முறையீட்டுப் பிரபுக்களைப் பழிவாங்க இரண்டாம் ரிச்சர்டு ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினர்.

தம் சிறிய தந்தையார் ஜான் காண்ட்டின் நல்முயற்சியால், முன்னர் தமக்கு எதிரிகளாயிருந்த ஹென்றி போலிங் புரோக்கையும் (டெர்பி எர்ல்), தாமஸ் மௌபரேயையும் (நாட்டிங்ஹாம் எர்ல்), இரண்டாம் ரிச்சர்டு, மற்ற பிரபுக்களிடமிருந்து பிரித்து இவர்களுக்குப் பல சலுகைகளைக் கொடுத்துத் தமக்கு நண்பர்களாக்கிக்கொண்டார்.

எஞ்சியிருந்த தாமஸ் உட்ஸ்டாக் (கிளௌசெஸ்டர் பிரபு), தாமஸ், போஷாம்ப் (வார்விக் எர்ல்), ஆர்ச் பிஷப் அருண்டேல்

ஆகிய இந்த மூவரின் மீதே இரண்டாம் ரிச்சர்டு வஞ்சினம் கொண்டவராக இருந்தார்.

இதற்கேற்ப, இவர்களும் அரசருக்கெதிராகச் சதிகளில் கலந்து கொண்டிருந்தனர். குறிப்பாகத் தாமஸ் உட்ஸ்டாக், அரசருச்குச் சமீப காலமாகப் பல தொல்லைகளைக் கொடுத்து வந்தார். ஃபிரான்சுடன் செய்து கொள்ளப்பட்டிருந்த உடன்படிக்கையைக் கண்டித்தும், அரசரின் திருமணத்தைக் கேலி செய்தும் அரசரின் சில ஆணைகளுக்குக் கட்டுப்பட மறுத்தும் தாமஸ் உட்ஸ்டாக் நடந்து கொண்டுவர, இரண்டாம் ரிச்சர்டின் கோபம் எல்லை கடந்து விட்டது.

தம் சொந்த மாளிகையில் விருந்தொன்றில் கலந்து கொண்டிருந்த கிளௌசெஸ்டர் பிரபுவை (தாமஸ் உட்ஸ்டாக்) அரசர் திடீரென்று தாக்கிக் கைப்பற்றிக் கலே நகரத்திற்கு அப்புறப் படுத்தி விட்டார். சில நாட்கள் கழித்து, அரசரின் ஆணையின் பேரில், தாமஸ் அங்கே கொல்லப்பட்டு விட்டார்.

பின்னர், வார்விக் எர்லான தாமஸ் போஷாம்ப், அருண்டேல் பிரபு, ஆர்ச்பிஷப் அருண்டேல் ஆகியோரையும் கைப்பற்றித் தமக்கு அடங்கிக் கிடந்த பாராளுமன்றத்தின் மூலமாகத் துரோகக் குற்ற விசாரணை செய்தார். 'கருணையற்ற பாராளுமன்றத்தினால்' ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னர், எங்ஙனம் தம் நண்பர்கள் தண்டிக்கப்பட்டார்களோ அதேபோன்று, இவர்களையும் இரண்டாம் ரிச்சர்டு பாராளுமன்றத்தை வைத்தே வஞ்சம் தீர்த்துக் கொண்டார். அருண்டேல் பிரபு சிரச்சேதம் செய்யப்பட்டார். அவரது சகோதரரான ஆர்ச் பிஷப் அருண்டேல் நாடு கடத்தப் பட்டார். வார்விக் எர்லும் நாட்டை விட்டு விரட்டப்பட்டார். நினைத்ததை சாதித்ததில் இரண்டாம் ரிச்சர்டுக்கு பெருமகிழ்ச்சி.

**1399ஆம் ஆண்டுப் புரட்சி** : இரண்டாம் ரிச்சர்டு, தம் ஆட்சியின் கடைசி இரண்டாண்டுகளில் அதிகார ஆணவம் மிக்கவராக நடந்து கொள்ள முற்பட்டார்.

நாட்டின் செல்வந்தர்களை மிரட்டி நன்கொடைகளையும் (Gifts) கட்டாயக் கடன்களையும் (Forced loans) இரண்டாம் ரிச்சர்டு வசூலிக்கத் தலைப்பட்டார். தமக்கு நம்பிக்கையில்லாதவர்களிடம் அவர்களின் கையெழுத்துகளுடன் வெற்றுப் பத்திரங்களை வாங்கி வைத்துக்கொண்டு, தமக்கு விரோதமாக அவர்கள் நடக்க முற்பட்டபோது, தம் விருப்பப்படி எழுதப்பெற்றிராத

அப் பத்திரங்களைப் பூர்த்தி செய்து, ரிச்சர்டு அவர்களுக்குத் தொல்லைகள் கொடுக்க முற்பட, மக்களிடையே அரசர் மதிப்பை இழக்க வேண்டியவரானர்.

பாராளுமன்றத்தைத் தம் விருப்பப்படி ஆட்டிவைக்க நினைத்து இரண்டாம் ரிச்சர்டு, புதிய (அரசியல்) முறையொன்றையும் புகுத்தினர். கி.பி. 1398ஆம் ஆண்டில் ஷிருஷ்பரியில் (Shrewsbury) கூட்டப்பட்ட பாராளுமன்றத்தை மிரட்டி, ஒரு முக்கிய சலுகையைப் பெற்றிருந்தார். இச் சலுகையின்படி, பாராளுமன்றத்தின் அதிகாரங்கள் பத்து பிரபுக்களும், இரண்டு பிஷப்புகளும், ஆறு சாமனியர்களும் அடங்கிய ஒரு நிலையான குழுவிடம் (Parliamentary Committee) ஒப்படைக்கப்பட வேண்டுமென்றும், இக் குழுவின் அநுமதியின்பேரில் தாம் இனி புதியவரி, புதிய சட்டம் கொண்டு வந்தால், அவற்றைச் சட்டப் பூர்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் ஓர் அரசியல் ஏற்பாடு செய்யப்பட்டது. தமக்கு ஆதரவாளர்களாகப் பதினெட்டு அங்கத்தினர்களைக் கொண்ட இக் குழுவை அரசர் தம் விருப்பம்போல் ஆட்டிவைக்கலாம் என்ற அபாய நிலைமை ஏற்பட்டதால், நாட்டின் அரசியல் அமைப்புக்கு முரணக இரண்டாம் ரிச்சர்டு, நடந்து கொள்ள முற்பட்டார். இக் குழுவின் அனுமதியின்பேரில், தமது ஆயுட்கால மானியத்தைப் பெற்றிருந்தார். அரசர் சர்வாதிகாரியாக மாறிவிடுவாரோ என்ற அர்த்தமுள்ள பயம் நாட்டிலே இதனல் பரவ ஆரம்பித்தது.

தம் மனம்போல் நினைத்ததெல்லாம் சாதிக்கப்பட்டு வந்ததால் இரண்டாம் ரிச்சர்டுக்கு மமதை ஏறிவிட்டது; பழிதீர்த்துக் கொள்ளும் பழைய மனப்பான்மையும் அரசரிடம், இப்போது, தலை தூக்கிவிட்டது.

மேல் முறையீட்டுப் பிரபுக்களில் தண்டனைக்குத் தப்பி இன்னும் இருவரே நாட்டில் இருந்து வந்தனர். ஹென்றி பாலிங் புரோக், தாமஸ் மோஷாமப் என்ற அவ்விரு எர்ல்கள், அப்போதைக்கு அரசருக்கு விரோதிகளாக இல்லையெனினும், பத்து ஆண்டுகளுக்கு முன்னர், தம் நண்பர்கள் கொல்லப்பட்டதற்குக் காரணமானவர்கள் என்பதை இரண்டாம் ரிச்சர்டு இன்னும் மறந்தவராக இல்லை. மேலும், அதிகாரப் பலமும் பொருள் பலமும் கொண்டிருந்த இவ்விரு பிரபுக்களால் தம் ஆட்சிக்குப் பங்கம் ஏற்படலாம் எனவும் இரண்டாம் ரிச்சர்டு நினைத்து வந்தார்.

இச் சமயத்தில், இவ்விரு பிரபுக்களிடையே, பொருமையின் காரணமாகச் சச்சரவு ஏற்பட்டது. இதுவும் இரண்டாம்

ரிச்சர்டின் சூழ்ச்சியாகவே இருந்தது. அக்கால வழக்கத்தின்படி அரசரின் முன் அனுமதிபெற்று, இவ்விரு பிரபுக்களும் காவென்டிரி (Coventry) என்னுமிடத்தில் நேருக்கு நேராகத் தனிச் சண்டை (duel) செய்ய முடிவெடுத்து அவ் விடத்தை அடைந்தனர். ஆயினும், திடீரென்று அங்கு வந்து சேர்ந்த அரசர், அச் சண்டையை அனுமதிக்க மறுத்ததோடு, இரு பிரபுக்களையுமே நாடு கடத்தி விட்டார். இம் முடிவு முறையற்றதாகவே நாட்டு மக்களால் கருதப்பட்டது. குறிப்பாகப் பிரபுக்களிடையே அரசரைப்பற்றி அச்சம் பரவலாயிற்று.

இதற்கிடையே, ஜான் விக்ளிஃப்பின் ஆதரவாளர்களான லாலார்டுகள் தங்கள் சமய சீர்திருத்தக் கருத்துகளை நாட்டிலே மும்முரமாகப் பரப்பிக் கொண்டிருக்க, இரண்டாம் ரிச்சர்டு அதைக் கண்டும் காணுதவராக இருந்தமையால், அரசர்மீது திருச்சபையினருக்கு வெறுப்பு வளர்ந்து வந்தது.

கி.பி. 1399 ஆம் ஆண்டு இரண்டாம் ரிச்சர்டு அகங்காரமும் ஆணவமும் கொண்டவராக, வழக்காறுகளையும் மரபுகளையும் மறந்தவராகக் காணப்பட்டார்.

இதே ஆண்டு பிப்ரவரி மாதம் தம் சிறிய தந்தையும் லங்காஸ்டர் பெரும் பிரபுவுமான ஜான் கான்ட், தம் அறுபத் தோராம் வயதில் காலமானுர். சில மாதங்களுக்கு முன்னர், அரசரால் நாடு கடத்தப்பட்டிருந்த (டெர்பி எர்லான) ஹென்றி பாலிங்புரோக், காலமடைந்த ஜானின் மகனும், அவரது பெரும் சொத்துகளுக்கு வாரிசுமாவார். ஹென்றி ஆறு வருடங் களுக்கே நாடு கடத்தப்பட்ட தண்டனையைப் பெற்றிருந்ததால், அவர் நாடு திரும்பும்வரை லங்காஸ்டர் சொத்துகளை அரசர் காப்பாளராகக் கண்காணித்திருக்க வேண்டும். ஆனல், அத்தனை சொத்துகளையும் அரசரே பறிமுதல் செய்து தமதாக்கிக் கொண்டார். ஹென்றியின்மீது துரோகியென்ற குற்றம் சாட்டப் படவில்லை. அப்படியொரு குற்றம் இருந்திருப்பின், அக் குற்றத்திற்குத் தண்டனையாக அப் பிரபு நாடு கடத்தப்பட்டிருந்த வேளையில் அச் சொத்துகளை அரசர் பறிமுதல் செய்திருக்கலாம். அப்படி எதுவுமில்லாத நிலையில் இரண்டாம் ரிச்சர்டு, அச் சொத்துகளைப் பறித்துக் கொண்டது ஓர் அத்துமீறிய செயலாகவே கருதப்பட்டது. அரசரின் இந்த நியாயமற்ற செய்கையால் மனங்குமுறிப் பழிவாங்கத் தீர்மானித்து ஹென்றி காலத்தை எதிர் நோக்கியிருந்தார். அரசரின் எதேச்சாதிகாரப் போக்கினல் கொதிப்படைந்திருந்த ஏனைய பிரபுக்களும் ஹென்றி யுடன் இரகசியத் தொடர்பு கொண்டிருந்தனர்.

பற்பல காரணங்களால், நாட்டில் இரண்டாம் ரிச்சர்டு ஆட்சியின்மீது வெறுப்பு மேலிட்டு வந்தது.

**ரிச்சர்டின் முடிதுறப்பு:** சில ஆண்டுகளுக்கு முன்னர், தமக்கு இறைவணக்கம் செலுத்த ஒப்பக் கொண்டிருந்த ஐரிஷ் தலைவர்கள், அதை மீறியவர்களாகப் பெருங் கலகத்திலிறங்கி, பிரதிநிதியாக அங்கிருந்து வந்த ரோஜர் (எல்லைப் பிரபு) என்பவரைக் கொன்றுவிட்ட செய்தி அரசர் இரண்டாம் ரிச்சர்டுக்கு எட்டியது.

அமைதியை நிலைநாட்ட இரண்டாம் ரிச்சர்டு, உடனுக்குடன் தம் படைகளுடன் கி.பி. 1399ஆம் ஆண்டு ஜூலை மாதம் அயர்லாந்துக்கு விரைந்தார். அரசர் விக்லோ பகுதியில் ஐரிஷ் கலகக்காரர்களுடன் போரிட்டு வந்த நேரத்தில், ஹென்றி (லங்காஸ்டர்) முன்பு அரசரால் நாடுகடத்தப்பட்டிருந்த அருண்டேல் என்பவருடன் சேர்ந்து, ஒரு சில ஆதரவாளர்களுடன் யார்க்ஷயருக்கருகே ராவன்ஸ்பர் (Ravenspur) என்னுமிடத்தை அடைந்தார்.

நாடு திரும்பியிருந்த ஹென்றி, தமக்கு அரசரை விலக்க வேண்டுமென்ற எண்ணம் எதுவும் இல்லையென்றும், சுதந்திரப் பாராளுமன்றம் ஒன்றைக் கூட்டச் செய்து தம்முடைய சொத்துப் பறிபோனதை எதிர்த்து வழக்காடவே தாம் வந்திருப்பதாகவும் அறிவித்துக் கொண்டார். இரண்டாம் ரிச்சர்டின் சார்பில் நிர்வாகத்தைக் கவனித்து வந்த அரசரின் இன்னொரு சிறிய தந்தையான எட்மண்டு (Edmund) (யார்க் பிரபு) இவ்வறிவிப்பை நம்பி, திரட்டியிருந்த படையையும் கலைத்துவிட்டு வாளாவிருந்தார். இதற்கிடையே, வடபுறத்துப் பிரபுக்கள் தத்தம் வீரர்களுடன் ஹென்றியின் கட்சிக்கு ஆதரவளிக்க முன் வந்தனர். நார்த்தம்பர்லாந்தின் எர்லான பெர்ஸி (Persey) என்பவர் இவர்களில் குறிப்பிடத்தக்கவர். நிலைமை இரண்டாம் ரிச்சர்டுக்கு எதிராக இருப்பதைக் கண்டு, எட்மண்டு பிரபுவும். தம் விசுவாசத்தை மறந்தவராக ஹென்றியுடன் சேரலானார்.

நாடு இத்தனைக் குழம்பிய நிலையிலிருக்க இரண்டாம் ரிச்சர்டு அயர்லாந்திலிருந்து திரும்ப முடியாதவராகத் தத்தளித்துக் கொண்டிருந்தார். காலநிலை (climate) சரிப்பட்டு வராததால், ஐரிஷ் கடலைக் (செயின்ட் ஜியார்ஜ் கால்வாய்) கடக்க முடியாதவராக இரண்டாம் ரிச்சர்டு அவதிப்பட்டு, இரண்டு நாட்கள் கழித்தே, வேல்ஸ் பகுதியை அடைந்தார். இரண்டாம் ரிச்சர்டின்

உதவிக்காக, அதுவரை வேல்ஸில் சாலிஸ்பரி பிரபுவின் தலைமையில் காத்திருந்த படைகளும் பொறுமை இழந்தவர்களாக அதற்குள் கலைந்து போய்விட்டமையால், ஆதரவற்ற நிலையில் அரசர் இப்போதிருந்தார்.

தம் ஒரு சில நண்பர்களுடன் இரண்டாம் ரிச்சர்டு, கான்வே கோட்டையில் (வேல்ஸ்) அடைக்கலம் கொண்டிருந்தபோது டெர்ஸியின் தலைமையில் ஹென்றியின் ஆட்கள் இக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டனர். தம்முடைய அரச மகுடத்தைப் பறித்துக் கொள்ளவோ தம்மைக் கைது செய்யவோ திட்டமெதுவுமில்லையெனத் தவறான வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டதை நம்பி இரண்டாம் ரிச்சர்டு சரணடைந்தார்.

சரணடைந்த இரண்டாம் ரிச்சர்டு, இலண்டன் மாநகருக்குக் கொண்டு செல்லப்பட்டதைத் தொடர்ந்து ஒரு பாராளுமன்றம் கூட்டப்பட்டது. இக் கட்டத்தில் தாம் பட்டத்தைப் பெறுவதே தமது குறிக்கோள் என்று ஹென்றி அறிவித்தார். அறநெறிக்குப் புறம்பாகவும் எதேச்சாதிகாரமாகவும்பட்டமளிப்புவாக்குறுதிகளை மீறியதாகவும் இரண்டாம் ரிச்சர்டின்மீது பற்பல உண்மையான, அபத்தமான குற்றங்கள் சுமத்தப்பட்டன. இரண்டாம் ரிச்சர்டு தாமே பதவியை விட்டுக் கொடுத்ததாக அறிவிக்கும் வகையில் ஒரு பத்திரம் தயாரிக்கப்பட்டது. உணர்விழந்த நிலையில், இரண்டாம் ரிச்சர்டு முடிதுறக்க ஒப்புக்கொண்டார்.

இதன் பிறகு, ஹென்றி முறையாக அரசுரிமை தமக்களிக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, பாராளுமன்றம் இதை ஏற்றுக்கொண்டது. லங்காஸ்டர் இங்கிலாந்தின் புது மன்னராக நான்காம் ஹென்றி அறிவிக்கப் பெற்றார்.

பதவி விலக்கப்பட்ட இரண்டாம் ரிச்சர்டு, உற்றார் உறவினர்களிடமிருந்து பிரிக்கப்பட்டவராக, போண்டிஃப்ராக்டு (Pontefract) என்னுமிடத்தில் சிறையிலடைக்கப்பட்டுப் பின்னர் கி.பி. 1400ஆம் ஆண்டு புதிய அரசரின் கட்டளையால் கொல்லப்பட்டுவிட்டார்.

சிறப்பாக முடிந்திருக்க வேண்டிய இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சி, ஒரு சோகக் கதையாக முற்றுப்பெற்றதை ஷேக்ஸ்பியர் தம் அமர காவியங்களில் ஒன்றான 'இரண்டாம் ரிச்சர்டின் சோகக்கதை' (The Targedy of King Richard the Second) என்ற படைப்பில் துல்லியமாகத் துக்ககரமாகக் குறிப்பிடுகின்றார்.

## குடியானவர் கலகம் (கி.பி. 1381)

சமூகத்தின் கடைநிலையிலிருந்த மக்களின் கொந்தளிப்பாக, கி.பி. 1381ஆம் ஆண்டு ஜூன் மாதம் இங்கிலாந்தின் பல பாகங்களில் எழும்பிய இக் குடியானவர் கலகம், இரண்டாம் ரிச்சர்டு அரசரின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டிருந்த இன்னொரு முக்கிய நிகழ்ச்சியாகும். ஆங்கில சமூகத்தின் மேலெழுச்சியாக அமைந்த இக் கலகம், ஒரே சமயத்தில் நாட்டின் பல பாகங்களிலே பரவலாக நடைபெற்றபோதிலும், பற்பல இடங்களிலே பற்பல காரணங்களுக்காக மும்முரம் அடைந்திருந்தது.

**காரணங்கள்**

**உள்குடிகளின் அவலநிலை:** எஸ்ஸெக்ஸ் (Essex) பகுதியில் இக் கலகம் உள்குடிகளின் மானியம் (Villeinage) என அழைக்கப்பட்ட ஏற்பாட்டுக்கு எதிர்ப்பாக எழுந்துள்ளது. நிலமானியத் திட்டத்தின் அடிப்படையில் அமைந்திருந்த இப் பழைய ஏற்பாட்டின்படி, நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களில் வேலை பார்த்து வந்த உள்குடிகளுக்குக் குறைந்த கூலிகளைக் கொடுத்து வந்திருந்ததோடு சில அத்தியாவசியமான உரிமைகளையும் மறுத்து வந்தனர். ஏற்கனவே கருங்கொள்ளை நோயினால் உள்குடிகளின் சமுதாய, பொருளாதார நிலைகளில் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன, ஆனால் நிலக்கிழார்கள் அம் மாற்றங்களை உட்குடிகளின் மானியத்தைச் சுட்டிக்காட்டிப் புறக்கணித்தவர்களாக இருந்தனர்; நிலக்கிழார்கள் அந்த உள்குடிகளுக்குக் கூலி உயர்வு கொடுக்க மறுத்தும், போதிய நில உரிமைகளை வழங்க மறுத்தும், அடக்கப்பட்டுவந்த நில அடிமைகளுக்கு (உள்குடிகள்) விடுதலை அளிக்க மறுத்தபோது, எஸ்ஸெக்ஸ்பகுதியில் வாழ்ந்த அக் குடியானவர்கள் கொதித்தெழுந்தனர்.

**தலைவரி:** கென்ட் பகுதியில் இக் கலகம் தலைவரிக்கு (Poll tax) எதிர்ப்பியக்கமாக அமைந்தது. பதினைந்து வயதிற்கு மேற்பட்ட ஆங்கில மக்கள் ஒவ்வொருவரும், குறிப்பாக ஏழை எளியவர்கள், தலா ஒரு ஷில்லிங் (Shilling) ஆண்டொன்றுக்கு இருமுறை கட்டிவந்ததே தலைவரியாகும். நூறாண்டுப் போரினால் அரசுக்கு ஏற்பட்டிருந்த செலவைச் சரிக்கட்டவே இவ் வரி விதிக்கப்பட்டது. இதுவரையில் நேரடியான வரி எதுவும் (Direct-Tax) கட்டவேண்டிய அவசியம் இல்லாதிருந்த குடியானவர்களுக்குத் தலைவரி வெறுப்பை அளித்தது. ஒரு வாரம் பூராவும் உழைத்துத் தாங்கள் பெற்றுவந்த கூலியை அரசுக்கு வரியாகக் கொடுப்பதில் அக் குடியானவர்கள் தயங்கியதில் நியாயமும் இருந்தது.

**அரசச் சட்டங்கள் :** தொழிலாளர்களுக்கு அல்லது விவசாயி களுக்குப் பழைய கூலியே கொடுக்க வேண்டுமென்றும், உயர்ந்த கூலிகள் தரப்படக்கூடாதென்றும் கொண்டு வரப்பட்டிருந்த சட்டத்திற்கெதிராகவும் சில இடங்களில் இக் கலகம் தோன்றியது.

**பிற காரணங்கள் :** சமயநெறியில் நிலைகுலைந்து வந்த குருமார்கள் வாழ்ந்த திருச்சபைகளுக்கெதிராகவும் கெடுபிடிக் கொள்கையினால் எளிய மக்களைத் துன்புறுத்தி வந்த சில பிரபுக் களுக்கு எதிராகவும் வேறுசில இடங்களில் இக் கலகம் தோன்றியது.

குடியானவர்கள், தொழிலாளர்கள் மட்டுமன்றிச் சமுதா யத்தின் வேறுசில வகுப்பினரும் இக் கலகத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தனர்; இவ் வகுப்பினருக்கும் சில காரணங்களால் அரசின்மீது அதிருப்தி இருந்துவந்தது. முதலாம் எட்வர்டு காலத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் (லேவாதேவி தொழிலில் ஈடுபட்டிருந்த யூதர்கள் வெளியேற்றப்பட்டதை யொட்டி, லம்பார்டியர்கள் (Lombards) போன்ற வேறுசில அந்நிய குடியினர் இங்கிலாந்துக்கு வந்து வட்டித்தொழிலில் ஈடு பட்டு மக்களைச் சுரண்டியதால், ஆங்கில வர்த்தக சமூகத்தில் சிலர் இந்த ஏற்பாட்டை எதிர்த்தனர். அந்நிய பண்முட்டைகளை நாட்டிற்குள் வரவழைத்த அரசின்மீது இதனால் ஆங்கில வர்த்தகர்கள் வெறுப்புக் கொண்டனர். மூன்றாம் எட்வர்டு காலத்தில் ஆங்கில மக்களுக்குக் கம்பளித் தொழிலின் நுணுக்கங் களைக் கற்றுத்தர ஃபிளாண்டர்ஸிலிருந்து இங்கிலாந்துக்கு பிளமியர்கள் வரவழைக்கப்பட்டிருந்தனர். இவர்களின் வருகையை முன்னிட்டு, அதுவரை அத் தொழில் நுணுக்கங்களை மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுத்துவந்த ஒருசில ஆங்கிலத் தேர்ச்சியாளர்களுக்கு வேலைவாய்ப்பும் வருவாயில் லாபமும் குறைய, இவர்களுக்கும் அரசின்மீது வெறுப்பு ஏற்பட்டது.

**இலக்கியப் பிரச்சாரம் :** அரசாங்கத்தின் கவனத்தைத் தங்கள் பக்கம் ஈர்த்து, அடிப்படைக் குறைகளைப் போக்கிக் கொள்ள குடியானவர்களும் தொழிலார்களும் கலகம் செய்த போது, வேறுசில காரணங்களால் அதிருப்தியும், வெறுப்பும் அடைந்திருந்த சமூகத்தின் மற்ற பிரிவினரும் இதில் கலந்து கொண்டனர். ஏற்கெனவே ஏழை எளிய மக்களின் மனநிலை ஓர் குமுறலாக இருந்தபோது சில புரட்சியாளர்கள் அதை மேலும் தூபம் போட்டு வளர்த்தனர்.

கான்ட், தம் முழுமனதான ஆதரவை இரண்டாம் ரிச்சர்டுக்கு கொடுத்திருக்க, ஏனைய பிரபுக்களின் முணுமுணுப்பு அரசரை எவ்வகையிலும் பாதிப்பதாக இல்லை.

மேற்கொண்டு, இதுவரை விட்டுவிட்டு ஃபிரான்சு நாட்டுடன் இவ் வரசர் காலத்தில் நடத்தப்பட்டு வந்திருந்த நூறாண்டுப் போரும் ஒரு சமாதான உடன்படிக்கையின்படி (கி.பி. 1396) முடிவடைந்திருந்தது. இதன்படி, அடுத்த முப்பதாண்டுகளுக்கு இரு நாடுகளும் நிலையான சமாதானக் கொள்கையினைப் பின்பற்றுவதாக ஒப்புக் கொண்டிருந்தன. இங்ஙனம், போர் நின்றிருந்த வேளையில், எந்தவொரு புதிய வரிகளுக்கும் தேவையில்லாது போனதால், மக்களின் வரிப்பளுவும் குறைக்கப் பட்டது.

ஜான் விக்ளிஃப்பின் சமய சீர்திருத்தப் போதனைகளால் கவரப்பட்டு லாலார்டுகள் நாட்டிலே இங்கும் அங்குமாகச் சல சலப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்ததைத் தவிர, இரண்டாம் ரிச்சர்டின் இக் காலம் அமைதியாகவே இருந்தது.

கூர்த்த மதியோடும், திறமையோடும் இரண்டாம் ரிச்சர்டு சிறப்பான ஓர் ஆட்சியை அமைத்திருந்ததால், நாட்டு மக்கள் இதை மனமார வரவேற்றனர்.

**ரிச்சர்டின் வல்லாட்சி (கி.பி. 1397—1398):** இரண்டாம் ரிச்சர்டின் மனைவியான ஆன் (Anne) இரண்டாண்டுகளுக்கு முன்னர் காலமானதை ஒட்டி, வயதில் மிகச் சிறியவளான ஃபிரெஞ்சு இளவரசி இசபெல்லா என்பவளை அரசர், அந் நாட்டுடன் ஏற்பட்டிருந்த போர் நிறுத்த உடன்படிக்கையையொட்டி (கி.பி. 1396) மணம் செய்து கொண்டிருந்தார். இத் திருமணம் சில அவசியமற்ற சிக்கல்களுக்குக் காரணமாக அமைந்துவிட்டது.

முதல் மனைவி ஆன் அரசி, பிள்ளைப்பேறு ஏதுமின்றி இறந்து விட்டாள். இசபெல்லாவோ ஏழுவயது நிரம்பிய ஒரு சிறுமியாக இருந்தாள்; இந்த அரசியல் திருமணத்தால், அரியணைக்கு அடுத்த வாரிசு இன்னும் சில ஆண்டுகளுக்குக் கிடைக்காதென்ற நிலைமை இருந்தது. இரண்டாம் ரிச்சர்டு ஒரு தற்காலிக ஏற்பாடாக, மூன்றும் எட்வர்டின் இரண்டாம் மகளான கிளாரன்ஸ் லையனல் (Lionel, Duke of Clarance) என்பவரின் பேரரும், அப்போது அயர்லாந்தில் எல்லைப் பிரபுவுமாக இருந்து வந்த ரோஜர் (Roger, Earl of March) என்பவரைத் தம்

அடுத்த வாரிசாக அறிவித்திருந்தார். இரண்டாம் ரிச்சர்டின் இவ் வறிவிப்பு, இவரது மற்ற சிறிய தந்தையர்க்கும் (ஜான் காண்ட் உள்பட) அவர்களின் பிள்ளைகளுக்கும் (காண்ட்டின் பிள்ளையான ஹென்றி போலிங்புரோக் உள்பட) ஏமாற்றத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது. மேலும், இத் திருமணத்தைத் தொடர்ந்து, நாட்டுக்குப் பல ஃபிரெஞ்சு பிரமுகர்கள் வரத்தொடங்கவே, அரசர் வீணை கவுரவச் செலவுகளைச் செய்து பணத்தை விரயமாக்க முற்பட்டார்.

இந்த வீணை செலவுகளைக் கண்டிக்கும் வகையிலும் அரசரின் அரண்மனைச் செலவுகளைக் கட்டுப்படுத்தும் முறையிலும், கி.பி. 1397 ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றத்தில், சர் தாமஸ் ஹாக்ஸி (Sir Thomas Haxey) ஒரு மசோதாவைத் தாக்கல் செய்தார். இம் மசோதா தம் சிறப்புரிமைகளைப் பாதிப்பதாக அமைந்திருக்கிறதென்று இரண்டாம் ரிச்சர்டு கோபங்கொண்டு இம் மசோதாவைப் பாராளுமன்றத்தில் நிறைவேருமல் தடை செய்ததோடன்றி, சர் தாமஸ் ஹாக்ஸி என்பவரை அரசத் துரோகக் குற்றம் சாட்டித் தண்டிக்கலானுர். இச் சம்பவத்தால், தனது உரிமையில் அரசர் குறுக்கிடுவதாகப் பாராளுமன்றம் நினைக்கலாயிற்று.

தம் ஆட்சி நாட்டிலே நிலைத்து விட்டதையும், நாட்டின் பெரும்பாலான மக்கள் தம்மிடம் பற்றுக் கொண்டிருப்பதையும் புரிந்து கொண்டிருந்த இரண்டாம் ரிச்சர்டு, கி. பி. 1388ஆம் ஆண்டிலிருந்து அபரிமித நம்பிக்கைகொண்டு கண்மூடித்தனமாக நடந்து கொள்ளத் தலைப்பட்டார். முன்பு, தம்மைத் தங்களின் கைப்பாவையாக ஆட்டி வைத்தவர்களும், தம் நண்பர்களில் சிலர் கொல்லப்பட்டதற்குக் காரணமானவர்களுமான அந்த மேல் முறையீட்டுப் பிரபுக்களைப் பழிவாங்க இரண்டாம் ரிச்சர்டு ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினுர்.

தம் சிறிய தந்தையார் ஜான் காண்ட்டின் நல்முயற்சியால், முன்னர் தமக்கு எதிரிகளாயிருந்த ஹென்றி போலிங் புரோக்கையும் (டெர்பி எர்ல்), தாமஸ் மௌபரேயையும் (நாட்டிங்ஹாம் எர்ல்), இரண்டாம் ரிச்சர்டு, மற்ற பிரபுக்களிடமிருந்து பிரித்து இவர்களுக்குப் பல சலுகைகளைக் கொடுத்துத் தமக்கு நண்பர்களாக்கிக்கொண்டார்.

எஞ்சியிருந்த தாமஸ் உட்ஸ்டாக் (கிளௌசெஸ்டர் பிரபு), தாமஸ், போஷாம்ப் (வார்விக் எர்ல்), ஆர்ச் பிஷப் அருண்டேல்

ஆகிய இந்த மூவரின் மீதே இரண்டாம் ரிச்சர்டு வஞ்சினம் கொண்டவராக இருந்தார்.

இதற்கேற்ப, இவர்களும் அரசருக்கெதிராகச் சதிகளில் கலந்து கொண்டிருந்தனர். குறிப்பாகத் தாமஸ் உட்ஸ்டாக், அரசருக்குச் சமீப காலமாகப் பல தொல்லைகளைக் கொடுத்து வந்தார். ஃபிரான் சுடன் செய்து கொள்ளப்பட்டிருந்த உடன்படிக்கையைக் கண்டித்தும், அரசரின் திருமணத்தைக் கேலி செய்தும் அரசரின் சில ஆணைகளுக்குக் கட்டுப்பட மறுத்தும் தாமஸ் உட்ஸ்டாக் நடந்து கொண்டுவர, இரண்டாம் ரிச்சர்டின் கோபம் எல்லை கடந்து விட்டது.

தம் சொந்த மாளிகையில் விருந்தொன்றில் கலந்து கொண் டிருந்த கிளௌசெஸ்டர் பிரபுவை (தாமஸ் உட்ஸ்டாக்) அரசர் திடீரென்று தாக்கிக் கைப்பற்றிக் கலே நகரத்திற்கு அப்புறப் படுத்தி விட்டார். சில நாட்கள் கழித்து, அரசரின் ஆணையின் பேரில், தாமஸ் அங்கே கொல்லப்பட்டு விட்டார்.

பின்னர், வார்விக் எர்லான தாமஸ் போஷாம்ப், அருண்டேல் பிரபு, ஆர்ச்பிஷப் அருண்டேல் ஆகியோரையும் கைப்பற்றித் தமக்கு அடங்கிக் கிடந்த பாராளுமன்றத்தின் மூலமாகத் துரோகக் குற்ற விசாரணை செய்தார். 'கருணையற்ற பாராளுமன்றத்திலே' ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னர், எங்ஙனம் தம் நண்பர்கள் தண்டிக்கப்பட்டார்களோ அதேபோன்று, இவர்களையும் இரண் டாம் ரிச்சர்டு பாராளுமன்றத்தை வைத்தே வஞ்சம் தீர்த்துக் கொண்டார். அருண்டேல் பிரபு சிரச்சேதம் செய்யப்பட்டார். அவரது சகோதரரான ஆர்ச் பிஷப் அருண்டேல் நாடு கடத்தப் பட்டார். வார்விக் எர்லும் நாட்டை விட்டு விரட்டப்பட்டார். நினைத்ததை சாதித்ததில் இரண்டாம் ரிச்சர்டுக்கு பெருமகிழ்ச்சி.

**1399ஆம் ஆண்டுப் புரட்சி:** இரண்டாம் ரிச்சர்டு, தம் ஆட் சியின் கடைசி இரண்டாண்டுகளில் அதிகார ஆணவம் மிக்க வராக நடந்து கொள்ள முற்பட்டார்.

நாட்டின் செல்வந்தர்களை மிரட்டி நன்கொடைகளையும் (Gifts) கட்டாயக் கடன்களையும் (Forced loans) இரண்டாம் ரிச்சர்டு வசூலிக்கத் தலைப்பட்டார். தமக்கு நம்பிக்கையில்லாதவர் களிடம் அவர்களின் கையெழுத்துகளுடன் வெற்றுப் பத்திரங்களை வாங்கி வைத்துக்கொண்டு, தமக்கு விரோதமாக அவர்கள் நடக்க முற்பட்டபோது, தம் விருப்பப்படி எழுதப்பெற்றிராத

அப் பத்திரங்களைப் பூர்த்தி செய்து, ரிச்சர்டு அவர்களுக்குத் தொல்லைகள் கொடுக்க முற்பட, மக்களிடையே அரசர் மதிப்பை இழக்க வேண்டியவரானார்.

பாராளுமன்றத்தைத் தம் விருப்பப்படி ஆட்டிவைக்க நினைத்து இரண்டாம் ரிச்சர்டு, புதிய (அரசியல்) முறையொன்றையும் புகுத்தினார். கி.பி. 1398ஆம் ஆண்டில் ஷிருஷ்பரியில் (Shrewsbury) கூட்டப்பட்ட பாராளுமன்றத்தை மிரட்டி, ஒரு முக்கிய சலுகையைப் பெற்றிருந்தார். இச் சலுகையின் படி, பாராளுமன்றத்தின் அதிகாரங்கள் பத்து பிரபுக்களும், இரண்டு பிஷப்புகளும், ஆறு சாமனியர்களும் அடங்கிய ஒரு நிலையான குழுவிடம் (Parliamentary Committee) ஒப்படைக்கப்பட வேண்டுமென்றும், இக் குழுவின் அநுமதியின்பேரில் தாம் இனி புதியவரி, புதிய சட்டம் கொண்டு வந்தால், அவற்றைச் சட்டப் பூர்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் ஓர் அரசியல் ஏற்பாடு செய்யப்பட்டது. தமக்கு ஆதரவாளர்களாகப் பதினெட்டு அங்கத்தினர்களைக் கொண்ட இக் குழுவை அரசர் தம் விருப்பம்போல் ஆட்டிவைக்கலாம் என்ற அபாய நிலைமை ஏற்பட்டதால், நாட்டின் அரசியல் அமைப்புக்கு முரணாக இரண்டாம் ரிச்சர்டு, நடந்து கொள்ள முற்பட்டார். இக் குழுவின் அனுமதியின் பேரில், தமது ஆயுட்கால மானியத்தைப் பெற்றிருந்தார். அரசர் சர்வாதிகாரியாக மாறிவிடுவாரோ என்ற அர்த்தமுள்ள பயம் நாட்டிலே இதனால் பரவ ஆரம்பித்தது.

தம் மனம்போல் நினைத்ததெல்லாம் சாதிக்கப்பட்டு வந்ததால் இரண்டாம் ரிச்சர்டுக்கு மமதை ஏறிவிட்டது; பழிதீர்த்துக் கொள்ளும் பழைய மனப்பான்மையும் அரசரிடம், இப்போது, தலை தூக்கிவிட்டது.

மேல் முறையீட்டுப் பிரபுக்களில் தண்டனைக்குத் தப்பி இன்னும் இருவரே நாட்டில் இருந்து வந்தனர். ஹென்றி பாலிங் புரோக், தாமஸ் போஷாம்ப் என்ற அவ்விரு எர்ல்கள், அப்போதைக்கு அரசருக்கு விரோதிகளாக இல்லையெனினும், பத்து ஆண்டுகளுக்கு முன்னர், தம் நண்பர்கள் கொல்லப்பட்டதற்குக் காரணமானவர்கள் என்பதை இரண்டாம் ரிச்சர்டு இன்னும் மறந்தவராக இல்லை. மேலும், அதிகாரப் பலமும் பொருள் பலமும் கொண்டிருந்த இவ்விரு பிரபுக்களால் தம் ஆட்சிக்குப் பங்கம் ஏற்படலாம் எனவும் இரண்டாம் ரிச்சர்டு நினைத்து வந்தார்.

இச் சமயத்தில், இவ்விரு பிரபுக்களிடையே, பொறாமையின் காரணமாகச் சச்சரவு ஏற்பட்டது. இதுவும் இரண்டாம்

ரிச்சர்டின் சூழ்ச்சியாகவே இருந்தது. அக்கால வழக்கத்தின்படி அரசரின் முன் அனுமதிபெற்று, இவ்விரு பிரபுக்களும் காவென்டிரி (Coventry) என்னுமிடத்தில் நேருக்கு நேராகத் தனிச் சண்டை (duel) செய்ய முடிவெடுத்து அவ் விடத்தை அடைந்தனர். ஆயினும், திடீரென்று அங்கு வந்து சேர்ந்த அரசர், அச் சண்டையை அனுமதிக்க மறுத்ததோடு, இரு பிரபுக்களையுமே நாடு கடத்தி விட்டார். இம் முடிவு முறையற்றதாகவே நாட்டு மக்களால் கருதப்பட்டது. குறிப்பாகப் பிரபுக்களிடையே அரசரைப்பற்றி அச்சம் பரவலாயிற்று.

இதற்கிடையே, ஜான் விக்ளிஃப்பின் ஆதரவாளர்களான லாலார்டுகள் தங்கள் சமய சீர்திருத்தக் கருத்துகளை நாட்டிலே மும்முரமாகப் பரப்பிக் கொண்டிருக்க, இரண்டாம் ரிச்சர்டு அதைக் கண்டும் காணாதவராக இருந்தமையால், அரசர்மீது திருச்சபையினருக்கு வெறுப்பு வளர்ந்து வந்தது.

கி.பி. 1399 ஆம் ஆண்டு இரண்டாம் ரிச்சர்டு அகங்காரமும் ஆணவமும் கொண்டவராக, வழக்காறுகளையும் மரபுகளையும் மறந்தவராகக் காணப்பட்டார்.

இதே ஆண்டு பிப்ரவரி மாதம் தம் சிறிய தந்தையும் லங்காஸ்டர் பெரும் பிரபுவுமான ஜான் கான்ட், தம் அறுபத் தோராம் வயதில் காலமானார். சில மாதங்களுக்கு முன்னர், அரசரால் நாடு கடத்தப்பட்டிருந்த (டெர்பி எர்லான) ஹென்றி பாவிங்புரோக், காலமடைந்த ஜானின் மகனும், அவரது பெரும் சொத்துகளுக்கு வாரிசுமாவார். ஹென்றி ஆறு வருடங் களுக்கே நாடு கடத்தப்பட்ட தண்டனையைப் பெற்றிருந்ததால், அவர் நாடு திரும்பும்வரை லங்காஸ்டர் சொத்துகளை அரசர் காப்பாளராகக் கண்காணித்திருக்க வேண்டும். ஆனால், அத்தனை சொத்துகளையும் அரசரே பறிமுதல் செய்து தமதாக்கிக் கொண்டார். ஹென்றியின்மீது துரோகியென்ற குற்றம் சாட்டப் படவில்லை. அப்படியொரு குற்றம் இருந்திருப்பின், அக் குற்றத்திற்குத் தண்டனையாக அப் பிரபு நாடு கடத்தப்பட்டிருந்த வேளையில் அச் சொத்துகளை அரசர் பறிமுதல் செய்திருக்கலாம். அப்படி எதுவுமில்லாத நிலையில் இரண்டாம் ரிச்சர்டு, அச் சொத்துகளைப் பறித்துக் கொண்டது ஓர் அத்துமீறிய செயலாகவே கருதப்பட்டது. அரசரின் இந்த நியாயமற்ற செய்கையால் மனங்குமுறிப் பழிவாங்கத் தீர்மானித்து ஹென்றி காலத்தை எதிர் நோக்கியிருந்தார். அரசரின் எதேச்சாதிகாரப் போக்கினால் கொதிப்படைந்திருந்த ஏனைய பிரபுக்களும் ஹென்றி யுடன் இரகசியத் தொடர்பு கொண்டிருந்தனர்.

சார் பற்பல காரணங்களால், நாட்டில் இரண்டாம் ரிச்சர்டு ஆட்சியின்மீது வெறுப்பு மேலிட்டு வந்தது.

**ரிச்சர்டின் முடிதுறப்பு**: சில ஆண்டுகளுக்கு முன்னர், தமக்கு இறைவணக்கம் செலுத்த ஒப்பக் கொண்டிருந்த ஐரிஷ் தலைவர்கள், அதை மீறியவர்களாகப் பெருங் கலகத்திலிறங்கி, பிரதிநிதியாக அங்கிருந்து வந்த ரோஜர் (எல்லைப் பிரபு) என்பவரைக் கொன்றுவிட்ட செய்தி அரசர் இரண்டாம் ரிச்சர்டுக்கு எட்டியது.

அமைதியை நிலைநாட்ட இரண்டாம் ரிச்சர்டு, உடனுக்குடன் தம் படைகளுடன் கி.பி. 1399ஆம் ஆண்டு ஜூலை மாதம் அயர்லாந்துக்கு விரைந்தார். அரசர் விக்லோ பகுதியில் ஐரிஷ் கலகக்காரர்களுடன் போரிட்டு வந்த நேரத்தில், ஹென்றி (லங்காஸ்டர்) முன்பு அரசரால் நாடுகடத்தப்பட்டிருந்த அருண்டேல் என்பவருடன் சேர்ந்து, ஒரு சில ஆதரவாளர்களுடன் யார்க்ஷயருக்கருகே ராவன்ஸ்பர் (Ravenspur) என்னுமிடத்தை அடைந்தார்.

நாடு திரும்பியிருந்த ஹென்றி, தமக்கு அரசரை விலக்க வேண்டுமென்ற எண்ணம் எதுவும் இல்லையென்றும், சுதந்திரப் பாராளுமன்றம் ஒன்றைக் கூட்டச் செய்து தம்முடைய சொத்துப் பறிபோனதை எதிர்த்து வழக்காடவே தாம் வந்திருப்பதாகவும் அறிவித்துக் கொண்டார். இரண்டாம் ரிச்சர்டின் சார்பில் நிர்வாகத்தைக் கவனித்து வந்த அரசரின் இன்னொரு சிறிய தந்தையான எட்மண்டு (Edmund) (யார்க் பிரபு) இவ்வறிவிப்பை நம்பி, திரட்டியிருந்த படையையும் கலைத்துவிட்டு வாளாவிருந்தார். இதற்கிடையே, வடபுறத்துப் பிரபுக்கள் தத்தம் வீரர்களுடன் ஹென்றியின் கட்சிக்கு ஆதரவளிக்க முன் வந்தனர். நார்த்தம்பர்லாந்தின் எர்லான பெர்ஸி (Persey) என்பவர் இவர்களில் குறிப்பிடத்தக்கவர். நிலைமை இரண்டாம் ரிச்சர்டுக்கு எதிராக இருப்பதைக் கண்டு, எட்மண்டு பிரபுவும். தம் விசுவாசத்தை மறந்தவராக ஹென்றியுடன் சேரலானார்.

நாடு இத்தனைக் குழம்பிய நிலையிலிருக்க இரண்டாம் ரிச்சர்டு அயர்லாந்திலிருந்து திரும்ப முடியாதவராகத் தத்தளித்துக் கொண்டிருந்தார். காலநிலை (climate) சரிப்பட்டு வராததால், ஐரிஷ் கடலைக் (செயின்ட் ஜியார்ஜ் கால்வாய்) கடக்க முடியாதவராக இரண்டாம் ரிச்சர்டு அவதிப்பட்டு, இரண்டு நாட்கள் கழித்தே, வேல்ஸ் பகுதியை அடைந்தார். இரண்டாம் ரிச்சர்டின்

உதவிக்காக, அதுவரை வேல்ஸில் சாலிஸ்பரி பிரபுவின் தலைமையில் காத்திருந்த படைகளும் பொறுமை இழந்தவர்களாக அதற்குள் கலைந்து போய்விட்டமையால், ஆதரவற்ற நிலையில் அரசர் இப்போதிருந்தார்.

தம் ஒரு சில நண்பர்களுடன் இரண்டாம் ரிச்சர்டு, கான்வே கோட்டையில் (வேல்ஸ்) அடைக்கலம் கொண்டிருந்தபோது டெர்ஸியின் தலைமையில் ஹென்றியின் ஆட்கள் இக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டனர். தம்முடைய அரச மகுடத்தைப் பறித்துக் கொள்ளவோ தம்மைக் கைது செய்யவோ திட்டமெதுவுமில்லை யெனத் தவறான வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டதை நம்பி இரண்டாம் ரிச்சர்டு சரணடைந்தார்.

சரணடைந்த இரண்டாம் ரிச்சர்டு, இலண்டன் மாநகருக்குக் கொண்டு செல்லப்பட்டதைத் தொடர்ந்து ஒரு பாராளுமன்றம் கூட்டப்பட்டது. இக் கட்டத்தில் தாம் பட்டத்தைப் பெறுவதே தமது குறிக்கோள் என்று ஹென்றி அறிவித்தார். அறநெறிக்குப் புறம்பாகவும் எதேச்சாதிகாரமாகவும்பட்டமளிப்புவாக்குறுதிகளை மீறியதாகவும் இரண்டாம் ரிச்சர்டின்மீது பற்பல உண்மையான, அபத்தமான குற்றங்கள் சுமத்தப்பட்டன. இரண்டாம் ரிச்சர்டு தாமே பதவியை விட்டுக் கொடுத்ததாக அறிவிக்கும் வகையில் ஒரு பத்திரம் தயாரிக்கப்பட்டது. உணர்விழந்த நிலையில், இரண்டாம் ரிச்சர்டு முடிதுறக்க ஒப்புக்கொண்டார்.

இதன் பிறகு, ஹென்றி முறையாக அரசுரிமை தமக்களிக்கப் படவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, பாராளுமன்றம் இதை ஏற்றுக்கொண்டது. லங்காஸ்டர் இங்கிலாந்தின் புது மன்னராக நான்காம் ஹென்றி அறிவிக்கப் பெற்றார்.

பதவி விலக்கப்பட்ட இரண்டாம் ரிச்சர்டு, உற்றார் உறவினர்களிடமிருந்து பிரிக்கப்பட்டவராக, போண்டிஃபிராக்டு (Pontefract) என்னுமிடத்தில் சிறையிலடைக்கப்பட்டுப் பின்னர் கி.பி. 1400ஆம் ஆண்டு புதிய அரசரின் கட்டளையால் கொல்லப் பட்டுவிட்டார்.

சிறப்பாக முடிந்திருக்க வேண்டிய இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சி, ஒரு சோகக் கதையாக முற்றுப்பெற்றதை ஷேக்ஸ்பியர் தம் அமர காவியங்களில் ஒன்றான 'இரண்டாம் ரிச்சர்டின் சோகக்கதை' (The Targedy of King Richard the Second) என்ற படைப்பில் துல்லியமாகத் துக்ககரமாகக் குறிப்பிடுகின்றார்.

## குடியானவர் கலகம் (கி.பி. 1381)

சமூகத்தின் கடைநிலையிலிருந்த மக்களின் கொந்தளிப்பாக, கி.பி. 1381ஆம் ஆண்டு ஜூன் மாதம் இங்கிலாந்தின் பல பாகங்களில் எழும்பிய இக் குடியானவர் கலகம், இரண்டாம் ரிச்சர்டு அரசரின் ஆட்சிக் காலத்தில் ஏற்பட்டிருந்த இன்னொரு முக்கிய நிகழ்ச்சியாகும். ஆங்கில சமூகத்தின் மேலெழுச்சியாக அமைந்த இக் கலகம், ஒரே சமயத்தில் நாட்டின் பல பாகங்களிலே பரவலாக நடைபெற்றபோதிலும், பற்பல இடங்களிலே பற்பல காரணங்களுக்காக மும்முரம் அடைந்திருந்தது.

### காரணங்கள்

**உள்குடிகளின் அவலநிலை:** எஸ்ஸெக்ஸ் (Essex) பகுதியில் இக் கலகம் உள்குடிகளின் மானியம் (Villeinage) என அழைக்கப்பட்ட ஏற்பாட்டுக்கு எதிர்ப்பாக எழுந்துள்ளது. நிலமானியத் திட்டத்தின் அடிப்படையில் அமைந்திருந்த இப் பழைய ஏற்பாட்டின்படி, நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களில் வேலை பார்த்து வந்த உள்குடிகளுக்குக் குறைந்த கூலிகளைக் கொடுத்து வந்திருந்ததோடு சில அத்தியாவசியமான உரிமைகளையும் மறுத்து வந்தனர். ஏற்கனவே கருங்கொள்ளை நோயினால் உள்குடிகளின் சமுதாய, பொருளாதார நிலைகளில் மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன, ஆனால் நிலக்கிழார்கள் அம் மாற்றங்களை உட்குடிகளின் மானியத்தைச் சுட்டிக்காட்டிப் புறக்கணித்தவர்களாக இருந்தனர்; நிலக்கிழார்கள் அந்த உள்குடிகளுக்குக் கூலி உயர்வு கொடுக்க மறுத்தும், போதிய நில உரிமைகளை வழங்க மறுத்தும், அடக்கப்பட்டுவந்த நில அடிமைகளுக்கு (உள்குடிகள்) விடுதலை அளிக்க மறுத்தபோது, எஸ்ஸெக்ஸ்பகுதியில் வாழ்ந்த அக் குடியானவர்கள் கொதித்தெழுந்தனர்.

**தலைவரி:** கென்ட் பகுதியில் இக் கலகம் தலைவரிக்கு (Poll tax) எதிர்ப்பியக்கமாக அமைந்தது. பதினைந்து வயதிற்கு மேற்பட்ட ஆங்கில மக்கள் ஒவ்வொருவரும், குறிப்பாக ஏழை எளியவர்கள், தலா ஒரு ஷில்லிங் (Shilling) ஆண்டொன்றுக்கு இருமுறை கட்டிவந்ததே தலைவரியாகும்: நூறாண்டுப் போரினால் அரசுக்கு ஏற்பட்டிருந்த செலவைச் சரிக்கட்டவே இவ் வரி விதிக்கப்பட்டது. இதுவரையில் நேரடியான வரி எதுவும் (Direct-Tax) கட்டவேண்டிய அவசியம் இல்லாதிருந்த குடியானவர்களுக்குத் தலைவரி வெறுப்பை அளித்தது. ஒரு வாரம் பூராவும் உழைத்துத் தாங்கள் பெற்றுவந்த கூலியை அரசுக்கு வரியாகக் கொடுப்பதில் அக் குடியானவர்கள் தயங்கியதில் நியாயமும் இருந்தது.

**அரசச் சட்டங்கள் :** தொழிலாளர்களுக்கு அல்லது விவசாயிகளுக்குப் பழைய கூலியே கொடுக்க வேண்டுமென்றும், உயர்ந்த கூலிகள் தரப்படக்கூடாதென்றும் கொண்டு வரப்பட்டிருந்த சட்டத்திற்கெதிராகவும் சில இடங்களில் இக் கலகம் தோன்றியது.

**பிற காரணங்கள் :** சமயநெறியில் நிலைகுலைந்து வந்த குருமார்கள் வாழ்ந்த திருச்சபைகளுக்கெதிராகவும் கெடுபிடிக் கொள்கையினால் எளிய மக்களைத் துன்புறுத்தி வந்த சில பிரபுக்களுக்கு எதிராகவும் வேறுசில இடங்களில் இக் கலகம் தோன்றியது.

குடியானவர்கள், தொழிலாளர்கள் மட்டுமன்றிச் சமுதாயத்தின் வேறுசில வகுப்பினரும் இக் கலகத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தனர்; இவ் வகுப்பினருக்கும் சில காரணங்களால் அரசின்மீது அதிருப்தி இருந்துவந்தது. முதலாம் எட்வர்டு காலத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் (லேவாதேவி தொழிலில் ஈடுபட்டிருந்த யூதர்கள் வெளியேற்றப்பட்டதையொட்டி, லம்பார்டியர்கள் (Lombards) போன்ற வேறுசில அந்நிய குடியினர் இங்கிலாந்துக்கு வந்து வட்டித்தொழிலில் ஈடுபட்டு மக்களைச் சுரண்டியதால், ஆங்கில வர்த்தக சமூகத்தில் சிலர் இந்த ஏற்பாட்டை எதிர்த்தனர். அந்நிய பண்முட்டைகளை நாட்டிற்குள் வரவழைத்த அரசின்மீது இதனால் ஆங்கில வர்த்தகர்கள் வெறுப்புக் கொண்டனர். மூன்றாம் எட்வர்டு காலத்தில் ஆங்கில மக்களுக்குக் கம்பளித் தொழிலின் நுணுக்கங்களைக் கற்றுத்தர ஃபிளாண்டர்ஸிலிருந்து இங்கிலாந்துக்கு பிளமியர்கள் வரவழைக்கப்பட்டிருந்தனர். இவர்களின் வருகையை முன்னிட்டு, அதுவரை அத் தொழில் நுணுக்கங்களை மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுத்துவந்த ஒருசில ஆங்கிலத் தேர்ச்சியாளர்களுக்கு வேலைவாய்ப்பும் வருவாயில் லாபமும் குறைய, இவர்களுக்கும் அரசின்மீது வெறுப்பு ஏற்பட்டது.

**இலக்கியப் பிரச்சாரம் :** அரசாங்கத்தின் கவனத்தைத் தங்கள் பக்கம் ஈர்த்து, அடிப்படைக் குறைகளைப் போக்கிக் கொள்ள குடியானவர்களும் தொழிலார்களும் கலகம் செய்த போது, வேறுசில காரணங்களால் அதிருப்தியும், வெறுப்பும் அடைந்திருந்த சமூகத்தின் மற்ற பிரிவினரும் இதில் கலந்து கொண்டனர். ஏற்கெனவே ஏழை எளிய மக்களின் மனநிலை ஓர் குமுறலாக இருந்தபோது சில புரட்சியாளர்கள் அதை மேலும் தூபம் போட்டு வளர்த்தனர்.

ஏழைக் குடியானவர்களின் மனநிலையையும், வாழ்க்கை முறையையும் வில்லியம் லாங்லாந்து (William Longland) என்ற ஒரு புரட்சிக் கவிஞர், தம், 'பியர்சு பிளவுமென்' (Piers Plowman) என்ற கவிதையில் உணர்ச்சிகரமாக விவரித்திருக்க, சமூகத்தின் அடிமட்டத்திலிருந்தவர்களை இந் நூல் தட்டியெழுப்பியது. மால்வெர்ன் (Malvern) என்ற இடத்திற்கு அருகே பிறந்து இலண்டன் மாநகரில் பல ஆண்டுகள் வாழ்ந்த வில்லியம் லாங்லாந்து ஏழைகளின் பங்காளனாக விளங்கினார். 1377 ஆம் ஆண்டு எழுதப்பட்ட அந் நூலில் ஏழை விவசாயிகளின் பரிதாப நிலை பச்சாதாபத்துடன் வருணிக்கப்பட்டிருந்தது. 'பியர்சு பிளவுமென்' என்னும் அப் பாடலில் ஒரு பகுதி கீழ்வருமாறு:

'தொழிலாளர்கள் தங்கி வாழ்வதற்கு நிலம் இல்லாமையால் தங்களுடைய கைகளையே நம்பி வாழ்ந்தனர். இரவில் உண்ணுவதற்கு உணவில்லாமல் அல்லலுற்றனர். அவர்கள் பன்றி இறைச்சியையும், மாத்தேறலையும் உண்டு மகிழ முடியவில்லை. ஆனால், இறைச்சியை அல்லது மீனினை அரைகுறையாகச் சமைத்து உண்டனர். அவர்களின் வயிற்றுப் பசியைத் தணிக்க இவற்றைக் குழம்போடு கலந்து உண்ணுவதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனால், அவன் வேறு எங்காகிலும் அதிகக் கூலி பெற்று வாழ முடியுமா?...தொழிலாளர்கள் துன்பப்படுமாறு சட்டம் இயற்றிய அரசரையும் அவருடைய ஆலோசனை சபையையும் பழித்துரைத்தான்.'

தங்கி வாழ்வதற்கு நிலமில்லாமலும், இரவில் சாப்பிட உணவில்லாமலும், கிழிந்த மேல் சட்டையுடன், பொத்தல்கள் கொண்ட காலுறைகளுடன் அவதிப்பட்ட ஒரு நலிந்த விவசாயியை மையமாக வைத்து எழுதப்பட்ட இந்நூல், ஏழை மக்கள் துன்பப்படுமாறு சட்டம் இயற்றிய அரசையும், அவருடைய ஆலோசனை சபையினரையும் பழித்துரைப்பது போன்றிருந்தது; நான்கு ஆண்டுகள் கழித்துக் குமுறப்போகும் குடியானவர்களின் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புவது போலவும் இந் நூல் அமைந்தது. ஆக, 'பியர்சு பிளவுமென்' என்று இந்தப் புரட்சிகரமான நூலும் இக் குடியானவர் கலகத்திற்கு ஒரு காரணமாக அமைந்தது.

கீழ்க்குடி வகுப்பினருக்கு வழிகாட்டியாகத் தம்மை நினைத்துச் சேவைப் புரிந்த ஜான் பால் (Jhon Ball) என்ற ஒரு புரட்சிகரமான பாதிரியாரின் பிறச்சார வேகமும் இக் கலகத்திற்கு இன்னொரு முக்கிய காரணமாக அமைந்தது. கென்ட் பகுதியைச் சேர்ந்த ஜான் பால் ஒரு சமதர்மவாதி. ஆதாம் (Adam) ஏவாள் (Eve) என்ற இருவரின் வழித்தோன்றல்களான மனித இனத்தில்

உணவிலும் உடையிலும் இடவசதியிலும் ஏன் பாகுபாடு இருக்க வேண்டும்? ஏன் சமத்துவம் இருக்கக் கூடாது? என ஜான் பால் பிரச்சாரம் செய்தார். நாட்டில் பிரபுக்களும், உட்குடிகளும் இருக்கும் வரை நிலைமை சரிப்படாது என்றும், எவ்விதத்திலே பிரபுக்கள் உள்குடிகளைவிட உயர்ந்தவர்கள் என்றும் ஜான் பால் வாதிட்டார். இவரது பிரச்சார வேகத்திலிருந்த வெப்பத்தை மக்கள் மனமார ஏற்றுக்கொள்ள வில்லையென்றாலும், இங்கிலாந்தில் ஒரு சமதர்ம சமுதாயத்தை உருவாக்க மக்கள் விழையவில்லையென்றாலும், தங்களை வருத்தி வந்த, 'உள்குடிகளின் மானிய முறை' (Villainage), 'தலைவரி' (Poll Tax) போன்ற சில உடனடிக் குறைகளைப் போக்கிக் கொள்ள ஜான் பாலின் பிரச்சாரம் ஏழைக்குடியானவர்களைத் தூண்டிவிட்டது.

**கலகத்தின் போக்கு:** பல காரணங்களை முன்னிட்டுச் சமூகத்தின் கடைநிலையிலிருந்த மக்களிடையே நிலவியிருந்த வெறுப்புக் கலந்த அதிருப்தி, வில்லியம் லாங்லாந்து, ஜான் பால் ஆகியோரின் கருத்துகளின் வலியுறுத்தலால் சுவாலைவிட்டு எரிந்து கொண்டு இருந்த வேளையில், வரப்போகும் பயங்கரத்தை எதிர்நோக்கும் திறனில்லாதும் வந்தால் அதைச் சமாளிக்கும் தகுதியில்லாதும் சைமன் சட்பரி (Simon Sudbury) என்ற சான்சலரும், சர் ராபர்ட் ஹேல்ஸ் (Sir Robert Hales) என்ற நிதியமைச்சரும் வாளாவிருந்தனர்.

கி.பி 1381ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நாட்டின் நிதிநிலைமையைச் சீராக்க, சான்சலரின் யோசனையின் பேரில் ராபர்ட் ஹேல்ஸ் தலைவரியை விதித்திருந்தார். நாட்டின் பல பகுதிகளில் மக்கள் வரி ஏய்ப்புச் செய்தனர். சஃபோக் (Suffolk) பகுதியில் மட்டும் 13,000 மக்கள் வரிகட்டாமல் ஏமாற்றினர். இதுபற்றி விசாரித்துத்தகுந்தஆள் கணக்கெடுப்பை நடத்தி, வரிபணத்தை வசூலிக்கும்படி நாடெங்கிலும் ஆணையாளர்கள் (Commissioners) அனுப்பப்பட்டனர். 1381ஆம் ஆண்டு மே மாத இறுதியில் எஸ்ஸெக்ஸ் பகுதியிலிருந்த பிரன்ட்வுட் (Brentwood) என்னுமிடத்திற்கு ஆணையாளர்கள் வந்து கெடுபிடி செய்தபோது மக்களால் விரட்டியடிக்கப்பட்டனர். இதுவே குடியானவர் கலகத்துக்குத் தொடக்க நிலையாக அமைந்தது; பிரன்ட்வுட் என்ற இடத்தில் தொடங்கிய இக் கலகம் எஸ்ஸெக்ஸ் முழுவதும் விரைவில் பரவிவிட்டது. வீறுகொண்டு எழுந்துவிட்ட குடியான்வர்கள் எஸ்ஸெக்ஸின் மற்றப் பகுதிகளுக்கும் செய்திகள் அனுப்ப, அதனால் கலகக் கூட்டத்தினரின் எண்ணிக்கை பெருகிவிட்டது.

சர் ஜூன் மாத முதல் வாரத்தில் எஸ்ஸெக்ஸ் பகுதியில் குடியானவர் கலகம் மும்முரமான கட்டத்தை அடைந்தது; பண்ணை வீடுகள் சூறையாடப்பட்டன. உள்குடிகளின் மானிய ஏற்பாட்டைக் காட்டிய பெயர்ப் பட்டியல்களும், மற்ற பதிவேடுகளும் கைப்பற்றப்பட்டுக் கொளுத்தப்பட்டன; எதிர்த்த பிரபுக்களும் திருச்சபைப் பாதிரிமார்களும் ஒடுக்கப்பட்டனர்.

இரண்டாம் ரிச்சர்டு அரசரின் ஆலோசனை சபையினர், இக் கலகத்தை முளையிலேயே கிள்ளி ஏறிய எந்தத் தடுப்பு நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை.

இதற்கிடையே வாட் டெய்லர் (Wat Taylor) என்பவரின் தலைமையில், கென்ட் பகுதியில் குடியானவர் கலகம் மிகப் பயங்கரமாகத் தலைதூக்கியது. பல்லாயிரக்கணக்கான கலகக்காரர்களைக் கொண்ட, இக் குடியானவர்படை, தங்கள் கைகளில் கிடைத்த ஆயுதங்களோடு ரோசெஸ்டர் (Rochester), கான்டர்பரி (Canterbury), மெய்ட்ஸ்டோன் (Maidstone) போன்ற இடங்களை அடைந்து வன்முறைச் செயல்களில் இறங்கினர்கள். மெய்ட்ஸ்டோன் என்ற இடத்தில் கலகப் பிரச்சாரம் செய்ததற்காகக் கடந்த சில மாதங்களாகச் சிறைத்தண்டனை அனுபவித்து வந்த ஜான் பாலையும் இக் குடியானவர் படை விடுவித்தது. சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட ஜான் பால், இங்கிலாந்தின் பிற பகுதிகளில் வாழ்ந்த கலகக்காரர்களுக்கு ஊக்கம் ஊட்டும்படியான செய்தியை அனுப்பி வைத்தார். இதைத் தொடர்ந்து ஹெர்ட்ஃபோர்டுஷயர் (Hertfordshire) என்னுமிடத்தில் கலகம் பயங்கரமாக மாறியது.

எஸ்ஸெக்ஸிலிருந்து இலண்டனை நோக்கிக் கலகக்காரர்கள் விரைந்தனர்; வாட் டெய்லரின் தலைமையில் கென்ட் கலகக்காரர்களும இலண்டனை நோக்கிப் புறப்பட்டனர்; ஹெர்ட்ஃபோர்டுஷயரிலிருந்தும் ஒரு குடியானவர்படை இலண்டனை நோக்கிக் கிளம்பியது. தங்களின் குறைகளை அரசுக்கு அறிவித்து அதற்குப் பரிகாரம் தேடுவதே இக் கலகக்காரர்களின் முக்கிய நோக்கமாக இருந்தும, பலாத்காரச் செயல்களுக்கும் இவர்கள் தயாராகவே இருந்தனர்.

**மும்முனைப் படையெடுப்பு:** எஸ்ஸெக்ஸிலிருந்து புறப்பட்டு வந்த கலகக்காரர்கள் இலண்டன் நகருக்குக் கிழக்கேயுள்ள மைல் எண்ட் (Mile End) எனனுமிடத்தில் முகாம் இட்டனர்; ஹெர்ட்ஃபோர்டுஷயரிலிருந்து வந்த கலகக்காரர்கள் ஹைபரியில் தங்

ஞர்கள்; கென்ட்டிலிருந்து வந்த கலகக்காரர்கள் பிளேக் ஹீ (Black Heath) என்னுமிடத்தில் முகாமிட்டனர். அப்போதுதான் இந்த இடத்தில் உள் குடிகளின் மானிய முறையைத் தாக்கும் வகையில் ஜான் பால், 'எப்போது ஆதாம் (Adam) நிலத்தினைத் தோண்டினன்? எப்போது ஏவாள் (Eve) நிலத்தினை அளந்தாள்? அப்போது அங்கிருந்த பண்பாளர் (Gentleman) யார்?' (When Adam delved and Eve span who was then the gentleman) என்ற வாசகத்துடன் ஓர் உணர்ச்சிமிக்க பிரசங்கத்தைச் செய்து அக் குடியானவர் படையை மேலும் கொதிப்படையச் செய்தார். ஜான் பாலின் பிரசித்திபெற்ற இந்த வாசகங்கள் மற்றக் கலகக் காரர்களுக்குக் கொள்கைக் கோஷமாக (Slogan) அமைந்து விட்டன.

ஜூன் மாதம் 13ஆம் தேதி (1381) கென்ட், ஹெர்ட்ஃபோர்டு கலகக்காரர்கள் இலண்டன் மாநகரை நெருங்கினர்கள். அரசர் இரண்டாம் ரிச்சர்டை அவருடைய துன்மந்திரிகளின் பிடியிலிருந்து விடுவிக்கப்போவதாகச் சொல்லிக் கொண்ட இக் கலகக்காரர் களுக்கு இலண்டன் மாநகரப் பொது மக்கள் வாயிலைத் திறந்து, இலண்டனுக்குள் நுழைய விட்டனர். இக் கலகக்காரர்கள், இலண்டனுக்குள் நுழைந்ததும் இவர்களுடன் நகரிலிருந்த சில அனுதாபிகளும் போக்கிரிகளும் சேர்ந்துகொள்ளவும் இலண்டனில் அராஜகம் தலை விரித்தாடியது; சிறைச்சாலைகள் உடைக்கப் பட்டன; கொலை, கொள்ளை போன்ற அக்கிரமங்களோடு தொடர்ந்து இரண்டு நாள்கள் இலண்டன் கதிகலங்கியது. நகரில் வாழ்ந்து வந்த பிளமிங்குகள் பெரிதும் அல்லல்பட்டனர். இங்கிலாந்திலேயே மிகப்பெரும் நிலச்சுவான்தாரரான ஜான் காண்ட்டின் புகழ்பெற்ற சாவாய் (Savoy) மாளிகை தீக்கிரையாக்கப்பட்டது. ஸ்காட்லாந்தில் அப் பிரபு தங்கியிருந்ததால், அவர் உயிர் பிழைத்தார். இல்லாது போயின், இவரது வேலையாட்கள் கண்ட இடத்தில் அடித்துக் கொல்லப்பட்டதுபோல் ஜானும் கொலையுண்டிருப்பார். வழக்கறிஞர்களின் தலைமைப் பீடமான டெம்பிள் (Temple) என்ற இடமும் அங்கிருந்த நூலகமும் எரிக்கப்பட்டன.

இலண்டன் நகரில் நிலைமை இங்ஙனம் கட்டுக்கடங்காமல் போய்க் கொண்டிருக்க, அரசரின் ஆலோசகர்கள் 14ஆம் நாள் (ஜூன் 1381) ஒன்றுகூடிப் பேசி, கலகக்காரர்களோடு சமரசம் பேச அரசர் இரண்டாம் ரிச்சர்டை 'மைல் எண்ட்' என்னுமிடத் திற்கு அனுப்ப முடிவு செய்தனர். அரசர் அங்ஙனம் கலகக்காரர் களோடு கலந்து பேசிக் கொண்டிருந்தபோது, குடியானவர்களின் கோபத்திற்கு ஆளாகியிருந்த சான்சலர் சட்பரியும், நிதியமைச்சர்

பிளார் ராபர்ட் ஹேல்ஸும் இரகசியமாக இலண்டனிலிருந்து தப்பி விட வேண்டுமென்று திட்டம் போடப்பட்டது.

**இரண்டாம் ரிச்சர்டின் சமரச முயற்சி:** மைல் எண்டை அடைந்த இரண்டாம் ரிச்சர்டு, குடியானவர் கலகக்காரருடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். அவர்களுக்கு உள்குடி நிலையிலிருந்து விடுதலை கொடுப்பதாகவும், பல்வேறு வரிகளை ரத்துச் செய்வதாகவும், அவர்கள் அதுவரை செய்த குற்றங்களை மன்னிப்பதாகவும், அவர்கள் கொடுத்து வந்த குத்தகைகளைக் குறைப்பதாகவும் பல வாக்குறுதிகளை அரசர் கொடுத்துக் கொண்டிருக்க, இலண்டனில் நிலைமை மேலும் மோசமாகியது. இலண்டன் தெருக்களில் வெறிபிடித்து அலைந்து வந்த கலகக்காரர்கள் கோட்டையைத் தாக்கிச் சட்பரியையும், ராபர்ட் ஹேல்ஸையும் கொலைசெய்து விட்டனர். சான்சலரையும் நிதியமைச்சரையும் கொலை செய்துவிட்ட வெற்றிக்களிப்பில் இலண்டனிலிருந்த கலகக்காரர்கள் ஆரவாரம் செய்துகொண்டு, மேலும் பல் கொடுமையான செயல்களில் ஈடுபட்டு வந்தனர்.

இவ் வேளையில் பதினைந்தே வயது நிரம்பியிருந்த அரசர் இரண்டாம் ரிச்சர்டு, கென்ட் கலகக்காரர்களை ஸ்மித்ஃபீல்டு (Smithfield) என்னுமிடத்தில் தம்மைச் சந்திக்குமாறு கேட்டுக் கொண்டார். ஸ்மித்ஃபீல்டிலிருந்த சந்தைச் சதுக்கத்தில் அரசரும், அவரது கட்சியினரும், வாட்டெய்லரின் தலைமையில் கலகக்காரர்களும் கூடிப் பேச ஏற்பாடாகியது. அரசருக்குப் பாதுகாப்பாக, இலண்டன் மாநகர் தந்தையான (Mayor), வால்வர்த் (Walworth) என்பவர் ஒருசிறு படையுடன் அங்குச் சென்றிருந்தார். வாட் டெய்லர், தாம் தலைமை ஏற்றுக்கொண்டிருந்த கென்ட் கலகக்காரர்களின் சார்பில் நீண்ட சொற்பொழிவு ஒன்றை ஆற்றினர்; தம் குதிரைமீது அமர்ந்து, ரிச்சர்டு அரசருக்கு மிக நெருக்கமாக வந்து தம் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ள முயன்றார். அச் சமயத்தில் கென்ட் பகுதியைச் சேர்ந்தவனும் அரசரின் மெய்க்காப்பாளர்களில் ஒருவனுமான அப்போதைக்கு அங்கு வந்திருந்த வீரன் ஒருவன், வாட் டெய்லரைக் 'கொள்ளைக்காரன்,' என இழித்துரைத்தான். இதனல் சிற்றமடைந்த வாட் டெய்லர், தம் குதிரைமீது அமர்ந்தபடியே கத்தியைச் சுழற்றியவாறு அவ்வீரனை நோக்கிச் செல்ல, வால் வர்த்தால் தடுத்து நிறுத்தப்பட்டார். அப்போது அவ் விருவருக்கிடையே ஏற்பட்ட கத்திச் சண்டையில் வாட் டெய்லர் படுகாயமடைந்து உயிர் நீத்தார்.

**இரண்டாம் ரிச்சர்டின் சமயோசிதம்:** இத்தனை நிகழ்ச்சிகளும் அரசர் முன்னிலையிலேயே நடந்தன. தங்களின் தலைவர் கொல்லப்பட்டதைக் கண்ட அக் கலகக்காரர்கள் ஆரவாரக் கூச்சலிட்டுக்கொண்டு, அரசரையும் அவரது துணைவர்களையும் மற்ற மெய்க்காப்பாளர்களையும் கொன்று குவிக்கும் எண்ணத்தில் தங்கள் அம்புகளை வில்களில் பொருத்திக் குறிபார்க்க ஆரம்பித்தனர். அரசரும், அவருக்குத் துணைவந்தவர்களும் கொல்லப்படலாம் என்ற அச்ச நிலைமை ஏற்பட்டிருந்தது. அடுத்து என்ன நேருமோ என அரசரின் கட்சியினர் அஞ்சி நின்றபோது, இரண்டாம் ரிச்சர்டு, சமயோசித புத்தி கொண்டவராகக் கலகக்காரர்களின் முன்னே நின்று, தாம் அவர்களின் அரசர் என்றும், தமக்கு எவ்வித ஆபத்தையும் அவர்கள் உண்டாக்கக்கூடாது என்றும், அவர்களின் குறை என்னவென்று சொன்னால் அதைத் தீர்க்க தாம் முன்வருவதாகவும் துணிச்சலுடன் பேசியதைத் தொடர்ந்து, அதுவரை குமுறிவந்த கலக்கக்காரர்களிடையே தெளிவு பிறந்தது. இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்ட அரசர், அக் கலகக்காரர்களைக் கிளார்க்கன்வெல் (Clerkenwell) என்ற இடத்திலிருந்த மைதானத்திற்கு அழைத்துச் சென்று, அவசர அவசரமாக எழுதப்பட்ட விடுதலைப் பத்திரங்களைக் கலகக்காரர்களுக்கு வழங்கிவந்தார். இதற்கிடையே, கலகக்காரர்களால் சூழ்ந்துகொள்ளப்பட்டிருந்த அரசருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்பட்டுவிடக் கூடாது என்ற அச்சத்தில் இலண்டன் மாநகருக்குச் சென்று தன் உதவிப் படைகளுடனும் விசுவாசக் குடிகளுடனும் கிளார்க்கன்வெல்லை அடைந்த வால்வொர்த், அரசரை மீட்டுவிட்டார்.

அரசரால் கொடுக்கப்பட்டிருந்த மன்னிப்பு, விடுதலைப் பத்திரங்களைப் பெற்றுக்கொண்ட மகிழ்ச்சியில் வாட் டெயிலரைப் பின்பற்றி வந்திருந்த கலகக்காரர்கள் கென்ட் பகுதிக்குத் திரும்பிச் சென்றனர்.

இலண்டனில் சுற்றித் திரிந்துவந்த கலகக்காரர்களுக்கும் அரசர் மன்னிப்பு விடுதலைப்பத்திரங்களை வழங்கி, தங்கள் கிராமங்களுக்குப் போகும்படி பணித்தார். இங்ஙனமாக இரண்டாம் ரிச்சர்டின் துணிச்சலாலும் சமயோசிதப் புத்தியாலும் கலகம் ஒருவாறு ஓய்ந்திருந்தது.

**கலகக்காரர்கள் ஒடுக்கப்படுதல்:** இச் சமயத்தில் நாட்டின் நிலக்கிழார்களான பிரபுக்கள் தத்தம் வீரர்களுடன் இலண்டன் மாநகரை அடைந்தனர். உள்குடிகளான தங்கள் குடியான

வர்கள், தம் அனுமதியின்றிச் சுதந்திரம் பெற்றதை இப்பிரபுக்கள் ஏற்றுக்கொள்வதாக இல்லை. தம்முடைய அதிகாரத்திற்கும் உரிமைக்கும் உள்படாத விடுதலைப்பத்திரத்தை மன்னர் குடியானவர்களுக்குக் கொடுத்துவிட்டதாக ரிச்சர்டைக் குறை கூறினர். அரசர் உள்குடிகளுக்கு வழங்கியிருந்த சாசனங்கள், பாராளுமன்றத்தின் அனுமதியைப் பெருமல் கொடுக்கப் பட்டதால், அவை செல்லுபடியாகாது எனப் பாராளுமன்றமும் அறிவித்தது. ஆயினும் அரசருக்கு என்னவோ உள்குடிகளின் மீது பரிதாப உணர்ச்சியே இருந்தது.

இச் சமயத்தில், திடீரென்று கிழக்கு ஆங்கிலியாவில் ஒரு கலகம் தோன்றியது. பியூரி (Bury) என்ற சிற்றூரிலிருந்த மடாலயத்தின் துறவி ஒருவரையும், அந்த ஊருக்கு அப்போது வருகை தந்திருந்த இங்கிலாந்தின் பிரதம நீதிபதியையும் (Lord Chief Justice of England) அக் கலகக்காரர்கள் சிரச்சேதம் செய்து, அவ்வூரின் செயின்ட் எட்மண்டு (St Edmund) மடாலயத்தினரை விரட்டி, வற்புறுத்திக் கலகம் செய்துவந்த குடியானவர்கள் தங்களின் விடுதலைப் பத்திரங்களைப் பெற்றுக்கொண்டனர். செயின்ட் ஆல்பன்ஸ் (Saint Albans) என்ற மற்ருேர் இடத்தில் சில குடியானவர்கள் அவ்வூரின் பிரபு, மடாதிபதி ஆகியோரை மிரட்டித் தங்களுக்கு உரிமை வழங்காவிடின் அவர்களின் இருப்பிடங்களைக் கொளுத்தப்போவதாக அச்சுறுத்தி விடுதலைப் பத்திரங்களைப் பெற்றுக்கொண்டனர். நார்ஃபோக் (Norfolk) பகுதியில் ஜியாஃப்ரே லிஸ்டர் (Geofray Lister) என்பவரின் தலைமையில் கலகம் தோன்றியதால் இங்கும் பல அட்டூழியங்கள் நடத்தப்பட்டன.

ஏற்கெனவே, அரசரால் உள்குடிகளுக்கு வழங்கப்பட்ட உரிமைப்பத்திரங்களை ஏற்றுக்கொள்வதாகில்லையென லண்டனில் குழுமியிருந்த பிரபுக்கள் குமுறிவந்த நிலையில், நாட்டின் சில பாகங்களில் தோன்றிய கலகம் இன்னும் அதிக ஆத்திரத்தைக் கொடுத்தது. இலண்டன் மாநகரை முன்பு வளைத்திருந்த அக்குடியானவர் படைகள், அரசர் இரண்டாம் ரிச்சர்டால் வழங்கப்பட்ட உரிமைச் சாசனங்களைப் பெற்ற மகிழ்ச்சியுடனும் தெம்புடனும் தங்கள் கிராமப்புறங்களுக்குத் திரும்பியிருந்ததால், அந் நகருக்கு இருந்துவந்த அபாய நிலைமை நீங்கியிருந்தது.

இச் சமயத்திலேயே, அரசரின் ஆலோசனைக் குழு செயல்பட ஆரம்பித்தது. சான்சலர் சட்பரியையும், நிதியமைச்சர் இராபர்ட் ஹேல்ஸையும், ஏனையோரையும் இரக்கமின்றி அக் கலகக்

காரர்கள் கொலை செய்ததை அரசரின் ஆலோசனைக்குழு மறந்துவிடவில்லை. நாட்டின் பாராளுமன்றமும் குடியானவர் களுக்கெதிராகவே இருந்தது. கலகக்காரர்களுக்குத் தாம் முன்பு கொடுத்திருந்த வாக்குறுதிகளில் சிலவற்றையாவது நிறைவேற்ற வேண்டுமென்று இரண்டாம் ரிச்சர்டு நினைத்திருந்தும், இதற்கு பிரபுக்களிடத்திலும், பாராளுமன்றத்திலும், அரச சபையிலும் பலத்த எதிர்ப்பு இருந்தது. இந் நிலையில், கலகக்காரக் குடியானவர்களைப் பழிவாங்கும் படலம் தொடங்கியது.

இரண்டாம் ரிச்சர்டு, தம் மனத்தில் என்ன நினைத்திருந் தாலும், தாம் உள்குடிகளுக்கு முன்பு அளித்த உரிமைச் சாசனங்கள் செல்லாதனவென்று அறிவித்தார். நிலக்கிழார்களால் ஆட்டிவைக்கப்பட்ட பாராளுமன்றமும், அரசரை இக் கட்டத்தில் ஆதரித்தது. கலகக்காரர்களைத் தண்டிக்க வேண்டி, ட்ரிசில்லியன் (Trisillian) என்ற புதிய நீதிபதியின் தலைமையில் ஒரு தனிப்பட்ட நீதிமன்றம் (Assizes) அமைக்கப்பட்டது. எங்கெந்தப் பகுதிகளில் கலகங்கள் தோன்றினவோ, அங்கெல்லாம் அரசர் இரண்டாம் ரிச்சர்டுடன் சென்ற ட்ரிசில்லியன் தம் மன்றத்தைக்கூட்டி, கலகத் தலைவர்களையும் அதில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டவர் களையும் தூக்கிலிட்டுக் கொன்றார். அவர்களில் ஜான் பாலும் ஒருவராவர்.

வால்தாம் (Waltham) என்ற இடத்தில் அரசரைக் குடியானவர்கள் சந்தித்து, அவர், முன்பு கொடுத்திருந்த வாக்குறுதியை நினைவூட்டியபோது, மிகவும் ஆணித்தரமாகத் தாம் பாராளுமன்றத்திற்கும் பிரபுக்களுக்கும் எதிராகச் செயல்பட முடியாதென இரண்டாம் ரிச்சர்டு அறிவித்து விட்டார்.

கொடுத்திருந்த வாக்குறுதியை மறந்துவிட்ட அரசர் ஒரு புறம், இரத்த வெறி பிடித்து அலைந்த ட்ரிசில்லியன் இன்னொரு புறம், இடையிலே தங்களை அந்த நிலையிலே திறம்பட நடத்திப் போகக்கூடிய தலைவர்கள் இல்லாத அச் சந்தர்ப்பத்தில் குடியானவர்கள் பணிந்து போக வேண்டியிருந்தது.

ஜியாஃப்ரே லிஸ்டரும் (நார்ஃபோக் கலகத் தலைவர்), வால்ஷாம் (Walsham) என்னுமிடத்தில் நார்விச்சின் பிஷப்பான ஹென்றி என்பவரால் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார்.

செயின்ட் எட்மண்ட், செயின்ட் ஆல்பன் போன்ற இடங்கள் உள்பட இங்கிலாந்தின் பிற பகுதிகளில் குடியானவர்கள்

பெற்றிருந்த விடுதலைப் பத்திரங்கள் ரத்தாயின. கலகக் குடியானவர்கள் சமீபத்தில் பெற்றிருந்த உரிமைகளுடன், அவர்களின் உயிர்களும் பறிக்கப்பட்டுவிட்டன.

**விளைவுகள்**

குடியானவர் கலகம் இங்ஙனமாக இறுதியில் அடக்கப்பட்டு விட்டதெனினும், அதன் விளைவு ஓரளவு இங்கிலாந்தைப் பாதிக்கச் செய்தது.

இக் கலகத்தினால், நிலச்சுவான்தார்கள் பெரிதும் பயந்திருந்ததால், வருங்காலத்தில் குடியானவர்களிடம் எச்சரிக்கையோடு நடந்துகொள்ளத் தலைப்பட்டனர். நிலச்சார்பான அடிமை முறை (Serfdom) முற்றிலும் அப்போதைக்கு ஒழிக்கப்படவில்லையெனினும், இம் முறை மாற்றப்படவேண்டிய அவசியத்தை இக் கலகம் ஏற்படுத்தி வைத்தது. அடுத்த 50 ஆண்டுகளுக்குள்ளாக 'அடிமைக் குடிகள்' என்ற நிலைமாறி, 'கூலி பெறும் வேலையாள்' (Wage Labourer) என்ற புதிய நிலையைக் குடியானவர்கள் பெற்றனர். இப் புதிய முறையின்படி, நிலத்தில் வேலை செய்த விவசாயிகளுக்கு உழைப்பிற்கு ஏற்ற ஊதியம் கொடுக்கப்பட்டதோடு, விரும்பிய இடத்தில், நேரத்தில் வேலை செய்யக் கூடிய உரிமையும் தரப்பட்டன.

சில பிரபுக்கள், இந்த நிலச்சிக்கல்களிலிருந்து விடுபட நினைத்துத் தங்கள் விளைச்சல் நிலங்களையெல்லாம் மேய்ச்சல் நிலங்களாக மாற்றி ஆட்டுப் பண்ணையை வளர்த்தனர். இதனால், அப்போதைக்கு மிகவும் இலாபகரமான தொழிலாகக் கருதப்பட்ட கம்பளித் தாயாரிப்பு (Wool Manufacture) விருத்தியடைந்தது.

இன்னும் சில பிரபுக்கள், தங்களின் நிலங்களைக் குத்தகைக்குக் கொடுத்திருக்க, இங்கிலாந்தில் சொந்தக்காரர்களான பிரபுக்களுக்கும் வேலையாட்களான குடியானவர்களுக்கும் இடையே ஒரு புது விவசாயப் பகுப்புத் தோன்றியிருந்தது. இவர்களே, குத்தகைக்காரர்கள் (Tenants) என அழைக்கப்பட்டனர்.

இறுதியாக, நிலச்சார்பான அடிமை முறை 18 ஆம் நூற்றாண்டின் இறுதிவரை ஃபிரான்சு நாட்டிலும், 19 ஆம் நூற்றாண்டின் இடைக்காலம்வரை ருஷ்யாவிலும் நீடித்திருக்க, 15 ஆம் நூற்றாண்டிலேயே, இம் முறை இங்கிலாந்தில் மறைந்து விட்டதென்றால், அதற்குக் காரணம் இக் குடியானவர் கலகம் ஆங்கில சமூகத்தில் ஏற்படுத்தி வைத்த சலசலப்பின் விளைவே ஆகும்.

# 6. பாராளுமன்றத்தின் தோற்றமும் அதன் வளர்ச்சியும் (மூன்றும் எட்வர்டு வரை)

பாராளுமன்றம் (பார்லிமென்ட்) என்ற வார்த்தை 'பார்லி' (Parly) எனனும் இலத்தீன் சொல்லிலிருந்தே பிறந்தது. இவ் வார்த்தை முதலில் 'கலந்துபேசுதல்' என்ற பொருளிலே பயன்படுத்தப்பட்டது. அரசரும் அவரால் அழைக்கப்பட்டவர் களும் கலந்து பேசிய ஆலோசனைக் கூட்டத்திற்கே 'பாராளு மன்றம்' எனற பெயர் முதன்முதல் வழங்கப்பட்டது. 13ஆம் நூற்றாண்டிலேயே இப் பெயர் வழக்கத்திற்கு வந்திருந்தது.

**ஆங்கில—சாக்சானியர் காலம் :** ஆங்கில — சாக்சானியர் காலத்திலேயே பிரதிநிதித்துவ முறைக்கு (Representation) வழி கோலப்பட்டதெனலாம். பட்டணங்களிலிருந்து (Townships) பிரதிநிதிகள் மன்னரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, நூற்றுவர், ஷயர் மன்றங்களுக்கு அனுப்பப்பட்டதையும், நாட்டு மக்களின் பிரதி நிதிகளடங்கிய விடான் சபை, மன்னருக்கு ஓர் ஆலோசனைக்கூட மாக இருந்ததையும் இதற்கொரு மேற்கோளாகக் கொள்ளலாம்.

**நார்மானியர் காலம் :** நார்மானியர் படையெடுப்பிற்குப் பின்னர், விடான் சபை மறக்கப்பட்டிருந்தாலும் அதற்குப் பதில் அரசருடைய பேரவை (The Great Council) ஒன்று அமைக்கப் பட்டிருந்தது. நிலமானியக் கருத்தின் அடிப்படையில் இம் மன்றம் அமைக்கப்பட்டிருந்ததால் பிரபுக்கள், பிஷப்புக்கள் கூடிய நிலமானியதாரர்கள் எல்லோருமே, இதில் இடம் பெறும் உரிமையைப் பெற்றிருந்தனர். ஆயினும், தொடக்கத்திலிருந்தே அரசர் தமக்கு வேண்டிய சில மானியதாரர்களையே கூட்டத்திற்கு அழைத்திருந்தார். இதுவே சார்பாளர் கொள்கைக்குத் தொடக்க மாக அமைகின்றது. அரசரின் ஆணையின்படி, அமைச்சர்களும் மற்ற அதிகாரிகளும் கலந்து கொண்டதால், இப் பேரவை பெருகி வளர்ந்து, 'கியுரியா ரெஜிஸ்' மன்றமாக விளங்கியது. அரசருடைய பேரவை அல்லது கியுரியா ரெஜிஸ் மன்றமே, நார்மானியர்

காலத்தில் அரசராதிக்கத்தின் ஆணி வேராக இருந்ததெனலாம். இப் பேரவையே ஆரம்ப காலத்தில் பாராளுமன்றமாகக் கருதப்பட்டது.

**தேர்தல் முறை:** நார்மானியர் காலத்தில் பாராளுமன்ற அமைப்பிற்கே அடித்தளமான தேர்தல் முறை வழக்கத்திலிருந்தது. முதலாம் வல்லியம் அரசரால் 'டோம்ஸ்டே புத்தகம்' (கி.பி.1085) தொகுக்கப்பட்டபோது, அதன் விபரங்களைச் சேகரிக்க நாடு முழுவதும் அனுப்பப்பட்டிருந்த ஆணையாளர்கள், ஒவ்வொரு பட்டணத்திலும் மக்களின் சார்பில், குறிப்பிட்ட ஆறு பிரதிநிதிகளையே சந்தித்தனர். இவர்களின் உறுதி மொழியின் பேரிலேயே ஆங்காங்கு வாழ்ந்து வந்த மக்களைப் பற்றிய விவரங்கள் சேகரிக்கப்பட்டன. சார்பாளர்களை (பிரதிநிதிகளை) தேர்ந்தெடுக்கும் முறை நார்மானியர் காலத்திலே வழக்கத்திலிருந்தபோதும், பிலான்டாஜெனட் (இரண்டாம் ஹென்றி) மன்னர்கள் காலத்தில் இன்னும் விரிவுபடுத்தப் பட்டிருந்தது.

மன்னரின் 'சுற்றி வந்த நீதிபதிகள்' கவுண்டி நீதி மன்றங்களுக்குச் சென்றிருந்தபோதெல்லாம், 'மக்களின் பிரதிநிதிகள்' அவர்களைச் சந்திக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நீதித் துறையிலே முதன்முதல் புகுத்தப்பட்டிருந்த மக்களின் பிரதிநிதித்துவம் பின்னர், நீதித் துறையிலும் அமலாக்கப்பட்டது. புனிதப் போர் நடைபெற்று வந்த காலத்தில் 'சாலடின் டைத்' (Saladin Tithe) என்னும் வரி (கி.பி. 1188) விதிக்கப்பட்டபோது, மக்களின் பொது விருப்பத்தை அறியவும், அவர்களின் சொத்து விவரங்களை அறியவும் அவர்களின் பிரதிநிதிகளாகப் பல சார்பாளர்கள் அரசரால் கலந்தாலோசிக்கப்பட்டனர்.

**சார்பாளர் கூட்டம்:** சிற்சில சமயங்களிலே நிலமானியத் திட்டத்தைச் சார்ந்திராத வகுப்புகளின் சார்பாளர்களும் அரசரால் பேரவையின் கூட்டத்திற்கு வரவழைக்கப்பட்டனர். பேரவைக் கூட்டத்திற்கு வந்திருந்த முக்குடிகளின் சார்பாளர்கள் (பிரபுக்கள், பிஷப்புகள், சாமானியர்), சேர்ந்து அமர்ந்து, எந்தவொரு முக்கியப் பிரச்சினைகளையும் ஆராயவில்லை. அரசருடைய பணத் தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே இப் பேரவை (ஆரம்பகாலப் பாராளுமன்றம்) பயன்படுத்தப்பட்டது. (கி.பி. 1193ஆம் ஆண்டில் சிறைப்பிடிக்கப்பட்ட முதலாம் ரிச்சர்டுக்கு மீட்புப்பணம் வசூல் செய்ய இம் முறையே கையாளப்பட்டது.)

மேலும், பேரவையின் கூட்டத்திற்கு அழைக்கப்பட்ட முக்குடிகளின் சார்பாளர்கள், அந்தந்த வகுப்பின் நலன்களைப்பற்றிய முடிவுகளை எடுப்பதற்கே முதலில் அழைக்கப்பட்டனர். போப்பாண்டவருடன் அரசர் ஜான் கொண்டிருந்த சச்சரவு உச்ச கட்டத்தை அடைந்த நிலையில் (கி.பி. 1213) செயின்ட் ஆல்பன்ஸ் (St. Albans) என்னுமிடத்தில் கூட்டப்பட்ட பேரவைக் கூட்டத்திற்கு எல்லாச் சார்பாளர்களும் வரவழைக்கப்பட்டதோடன்றி, நாட்டின் (பொது) விவகாரமும் பரிசீலனை செய்யப்பட்டது. ஆகவே, பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில், பாராளுமன்ற முறையிலே சீரான அமைப்பு இன்னும் ஏற்படவில்லையெனினும், இவ்வமைப்பிற்கு இன்றியமையாத மூன்று அடிப்படை அம்சங்கள் வழக்கத்திற்கு வந்துவிட்டன. இவையே, 'சார்பாளர் கொள்கை' (Representation), 'தேர்தல்' (Election), 'சார்பாளர்களைக் கூட்டுதல்' (Summoning) என்பனவாகும்.

**மகா சாசனத்தின் விளைவு:** மகா சாசனத்தின் காலத்திலிருந்தே (கி.பி. 1215) பாராளுமன்ற அமைப்பு, அதிகாரங்கள் பற்றிய முறைகள் ஓரளவு வரையறுக்கப்பட்டிருந்தன. இச்சாசனத்தின் பன்னிரண்டாவது, பதின்மூன்றுவது உள்பிரிவுகள் வரிப் பணத்தைப் பெறும் முன்னர், மக்களின் பொதுவான கருத்தையறிய ஒரு குறிப்பிட்ட நாளில் ஒரு குறிப்பிட்ட இடத்தில், கோமான்கள் (Earls), பெரிய பிரபுக்கள் (Greater Barons), சிறிய பிரபுக்கள் (Lesser Barons), தலைமை பிஷப், பிஷப்புகள் போன்றோரை மன்னர் கூட்ட வேண்டுமென்று அறிவித்திருந்தது. மேலும், இச் சாசனத்தின் அறுபத்து மூன்றுவது உள்பிரிவு, மகா சாசனத்தின் மற்ற அம்சங்களை மன்னர் மீறுமல் இருக்க, 25 பிரபுக்களடங்கிய ஒரு கண்காணிப்புக் குழுவையும் ஏற்பாடு செய்திருந்தது. இந்த மூன்று உள்பிரிவுகளே வருங்காலத்தில் பாராளுமன்றத் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் அடித்தளங்களாக அமைந்தன.

**மூன்றும் ஹென்றியின் காலத்தில் வளர்ச்சி:** மூன்றும் ஹென்றியின் காலத்திலேயே நாட்டின் பேரவைக் கூட்டத்திற்குச் சாமானிய மக்களின் (commoners) பிரதிநிதிகள் வரவழைக்கப்பட்டிருந்தார்களென்பதற்குக் கி.பி. 1254 ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட மன்றம் ஒரு சான்றாக விளங்குகிறது. வெஸ்ட்மின்ஸ்டரில் கூட்டப்பட்ட அந்தப் பேரவையின் கூட்டத்திற்கு, ஒவ்வொரு ஷயரிலிருந்தும் நான்கு நைட்டுகள் அழைக்கப்பட்டிருந்தனர். ஷயர்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்ட முதல் கூட்டம் இதுவே.

இவ் வரசரின் காலத்திலேயே, கி.பி. 1258ஆம் ஆண்டு கூட்டப்பட்ட 'ஆக்ஸ்ஃபோர்டு பாராளுமன்றம்' முழுக்க முழுக்க பிரபுக்களையே கொண்டிருந்தது. தங்களைக் கொண்ட ஒரு சிறு குழுவாட்சியை (Baronial oligarchy) ஏற்படுத்தியிருந்தபோதிலும் அரசரிடமிருந்து அதிகாரங்களைப் பறித்து, நாட்டு நிர்வாகத்தைத் தானே மேற்கொண்டிருந்தது. இம் மன்றத்தில் பாமர மக்களின் பிரதிநிதிகள் இல்லையென்ற குறையைத் தீர்ப்பதுபோல் கி.பி. 1261 ஆம் ஆண்டில், பிரபுக்கள் ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும் மூன்று நைட்டுகளுக்கு அழைப்பு அனுப்பித் தங்களைச் செயின்ட் ஆல்பன்ஸ் என்னுமிடத்தில் சந்தித்து, நாட்டு விவகாரங்களைப் பற்றி விவாதிக்க வேண்டுமென்று செய்தி அனுப்பினர். இதே நாளில், அந்தப் பிரதிநிதிகள் தம்மை வெஸ்ட்மின்ஸ்டர் நகரில் சந்திக்க வேண்டுமென்று, அரசரும் செய்தி அனுப்பியிருந்தார். பாமர மக்களின் பிரதிநிதித்துவத்தின் முக்கியத்துவத்தை, இச் சமயத்தில் பிரபுக்களும், அரசர்களும் உணர ஆரம்பித்திருந்தனர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

**சைமன் காலத்திய சிறப்பு :** மூன்றும் ஹென்றியின் ஆட்சி கவிழ்க்கப்பட்டுச் சைமன் - டி - மான்ட்ஃபோர்டு அதிகாரம் பெற்றிருந்த காலத்தில் (கி.பி. 1265) நாட்டில் பிரபுக்களின் ஆதரவு தமக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை என்பதால், இடைப்பட்ட மக்களின் ஆதரவைப் பெறவேண்டி, இவர் தம்மால் அழைக்கப்பட்ட பாராளுமன்றத்தின் கூட்டத்திற்கு, ஐந்து எர்ல் கோமான்கள், பதினெட்டுப் பிரபுக்களுடன் தமக்கு ஆதரவான ஒவ்வொரு ஷயரிலிருந்தும் இரண்டு நைட்டுகளையும், ஒவ்வொரு நகரத்திலிருந்தும், பரோவிலிருந்தும் இரண்டிரண்டு சார்பாளர்களையும் அழைத்திருந்தார். நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும், எல்லா வகுப்பினரைச் சேர்ந்த சார்பாளர்கள் சைமனால் வரவழைக்கப்படவில்லையெனினும், இம் மன்றத்தில் சில நகரங்களின் பரோக்களின் பிரதிநிதிகள் அமர்ந்திருந்ததால் இதுவே பொதுமக்கள் சபைக்கு (House of Commons) தொடக்கமாக அமைந்தது.

### முதலாம் எட்வர்டின் காலம்

சைமன் காட்டியிருந்த வழியை முதலாம் எட்வர்டு, தம் ஆட்சிக் காலத்தில் பின்பற்றலானார். ஆரம்பத்தில் தம் பேரவைப் (பாராளுமன்றம்) கூட்டத்திற்குப் பிரபுக்களையும் பிஷப்புகளையுமே இம் மன்னர் அழைத்திருந்தாலும், கி.பி. 1295ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட மன்றம் வரலாற்றுச் சிறப்பைப் பெறுகிறது.

**மாதிரிப் பாராளுமன்றம் (Model Parliament):** இம் மன்றத்திற்கு ஏழு எர்ல் கோமான்களும் நாற்பத்தொரு பிரபுக்களும் தனி முறையாக அழைப்பாணைகளின்மீது (Separate writ) அழைக்கப்பட்டனர். தலைமை பிஷப், இருபது பிஷப்புகள், எழுபது மடாதிபதிகள், சில கீழ்நிலைக் குருமார்கள் (முதன் முதலாக அழைக்கப்பட்டவர்கள்) ஆகியோரும் இம் மன்றக் கூட்டத்தில் கலந்து கொண்டனர். ஷெரிப்புகளுக்கு அனுப்பப்பட்ட அழைப்பாணைகள் மூலமாக, ஒவ்வொரு நகரத்திலிருந்தும் (166) இரண்டிரண்டு நகரவாசிகளும் ஒவ்வொரு பரோவிலிருந்தும் (37) இரண்டிரண்டு பரோ வாசிகளும் இம் மன்றத்திற்கு அழைக்கப்பட்டனர்.

இம் மன்றத்தில் மூவகை வகுப்பினரும் தனித்தனியாகப் பிரிந்து, அரசரின் பணத் தேவையைப் பூர்த்திசெய்ய செயல்பட்ட போதும், நாட்டிலிருந்த அத்தனை வகுப்பாளர்களின் சார்பாளர்களும் இடம் பெற்றிருக்க, இம் மன்றத்தை முன்மாதிரியாகக் கொண்டே (Model Parliament) வருங்காலப் பாராளுமன்றங்கள் அமைந்தன. அதிகாரங்களைப் பொறுத்த வரையில், பாராளுமன்றங்கள் இன்னும் அரசரின் பணத் தேவையைத் தீர்த்து வைக்கும் (வரிவிதிக்கும் அரசரின் அதிகாரத்திற்கு ஆமோதிப்பு) அமைப்பாக இருந்து வரினும், அமைப்பினைப் பொறுத்த வரையில், இக் கட்டத்தில் பாராளுமன்றம் ஓரளவு நிலையான தன்மையைப் பெற்றிருந்தது.

மேலும், கி.பி. 1297ஆம் ஆண்டில், வழக்கத்திற்குப் புறம்பான வரிகளை பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றித் தான் வசூலிப்பதில்லை என ஒப்புக்கொண்டு, மகா சாசனத்தை உறுதிப்படுத்தும் வகையில் 'சாசன உறுதிப்பாடு சட்டம்' ஒன்றை (Confirmatio Cartarum), முதலாம் எட்வர்டு மன்னர் நிறைவேற்றியிருந்தது, இம் மன்றத்தின் வரி விதிப்பு அதிகாரத்திற்கு அங்கீகாரம் கொடுத்ததாக அமைந்தது.

## இரண்டாம் எட்வர்டு காலம்

இரண்டாம் எட்வர்டின் காலம் பாராளுமன்ற வளர்ச்சியிலேயே ஒரு சிறப்பான காலமாக அமைகிறது.

**யார்க் மன்றம்:** ஆர்டெயினர் பிரபுக்களின் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ள இரண்டாம் எட்வர்டால் கி.பி. 1322-ல் யார்க் நகரில் கூட்டப்பட்ட பாராளுமன்றக் கூட்டத்திற்குப் பிரபுக்களும், பிஷப்புகளும், கீழ்நிலைக் குருமார்களும், ஷயர், பரோக்களின் சார்பாளர்களும் அழைக்கப்பட்டனர்.

முதலாம் எட்வர்டு காலத்திய 'மாதிரிப் பாராளுமன்றத்தினால்' ஏற்பட்ட அமைப்பு முறையினை உறுதிப்படுத்துவது போல், இம் மன்றம் அமைந்திருந்ததோடன்றி, இதன் அதிகார முறையிலும், ஒரு முக்கியமான மாற்றம் செய்யப்பட்டிருந்தது. நாட்டின் விவகாரங்களைப்பற்றிய எல்லா முடிவுகளும் இனி, மூவகுப்பினர்களின் சார்பாளர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டால்தான், அம் முடிவுகள் அரசரைக் கட்டுப்படுத்தும் என்ற சட்டத்தினால் சாமானிய மக்களின் சார்பாளர்கள், வருங்காலத்துப் பாராளுமன்றக் கூட்டத்திற்குத் தவறாமல் அழைக்கப்பட வேண்டியவர்களானார்கள்.

**மூன்றாம் எட்வர்டின் காலம்**

மூன்றாம் எட்வர்டின் காலத்தின் அமைப்பிலும், அதிகாரங்களிலும் வேறு சில மாற்றங்கள் ஏற்படலாயின.

**இரு சபைகளின் தோற்றம்:** இவ் வரசரின் காலத்தில் பாராளுமன்றம் இரு சபைகளைக் கொண்டதாக அமைந்தது. பிரபுக்களும், பிஷப்புகளும் அரசரின் (ஆலோசனை சபை) அரங்கில் கூடியபோது, பொது மக்களின் சார்பாளர்கள் வெஸ்ட்மின்ஸ்டர் திருமடக் கோயிலில் கூடலாயினர். இதன் விளைவாகப் பாராளுமன்றம் இக் காலத்திலிருந்து பிரபுக்கள் சபை (House of Lords), பொது மக்கள் சபை (House of Commons) என இரு பிரிவுகளாகப் பிரிந்தது. எல்லோருக்கும் பொதுவான காரியங்களைப்பற்றி விவாதம் வரும்போது இரு சபைகளும் ஒரே அரங்கில் கூடலாயின.

**மக்கள் சபையின் சிறப்பு:** இக் காலத்தின் இன்னொரு விசேடம் என்னவென்றால், இதுவரை பிரபுக்கள் செய்து வந்த பணியை, மக்களின் சார்பாளர்கள் மேற்கொள்ள ஆரம்பித்தனர். பிரபுக்கள் மன்னரை எதிர்ப்பதற்குப் பதில் அவருக்கு ஆதரவாக இருக்க, பொதுமக்களின் பிரதிநிதிகள் அரசரின் தனி அதிகாரங்களை எதிர்த்து ஆட்சியைச் சட்ட வரம்பிற்குட்படுத்த முனைந்தனர்.

அடுத்தபடியாக, இவ் வரசரின் ஆட்சியில் பாராளுமன்றங்கள் காலட்டப்படி ஒழுங்காகக் கூட்டப்பட்டன. தாம் நடத்திய போர்களின் விளைவாக (ஸ்காட்லாந்து, ஃபிரான்சு) ஏற்பட்ட ஏராளமான செலவுகளைத் தீர்ப்பதற்காக, மக்களிடமிருந்து உதவியைத் தொடர்ந்து நாட வேண்டியிருந்ததால் மூன்றாம் எட்வர்டு, ஆட்சிக் காலத்தில் நாற்பத்தெட்டு தடவை பாராளுமன்றம் கூட்டப்பட்டது.

**மூன்று முக்கிய உரிமைகள்:** குறிப்பாக, இம் மன்னரின் ஆட்சியில் பாராளுமன்றம் (காமன்ஸ்சபை) மூன்று முக்கியமான அதிகாரங்களைப் பெற்றது.

பாராளுமன்றத்தின் அனுமதியின்றி விதிக்கப்படும் வரிகள் சட்டத்திற்குப் புறம்பானவை என்றும், மேலும், அரசருக்கு ஒதுக்கப் படும் தொகை சரியான முறையில் செலவிடபட்டிருக்கிறதா எனப் அவற்றைத் (கணக்கை) தணிக்கை (Audit) செய்யவும், சட்டமியற்றுவதில் இரு சபைகளின் ஒத்த சம்மதம் தேவையெனவும், ஆட்சியில் காணப்படும் குறைகளை விசாரணை செய்து, சம்பந்தப் பட்டவர்களைத் (அமைச்சர்கள், நிர்வாகிகள்) தண்டிக்க உரிமை உண்டு எனவும் மூன்று உரிமைகள் பாராளுமன்றத்தினால் பெறப்பட்டன.

மூன்றும் எட்வர்டு, அடிக்கடி தம் சொந்த விருப்பம்போல் வரிகளை விதித்து வர, பாராளுமன்றம் இதைக் கட்டுப்படுத்த லாயிற்று. தங்களின் அனுமதியின் பேரிலேயே வரிகள் விதிக்கப் படவேண்டுமென்றும், நியாயமற்ற வரிகளை ரத்துச் செய்ய வேண்டு மெனவும் பாராளுமன்றம் கி. பி. 1340 ஆம் ஆண்டிலேயே வற்புறுத்தி, அரசரை இசைய வைத்தது. மேலும் ஒரு குறிப்பிட்ட செலவுக்காக ஒதுக்கப்படும் பணம், அதற்காகவே செலவிடப்பட வேண்டுமெனவும் அரசரைக் கட்டுப்படுத்திய அதிகாரமும் வரையறுக்கப்பட்டது. அத்துடன், குறிப்பிட்ட காரியங்களுக் காகத் தரப்படும் வரிப்பணம், அதே காரியங்களுக்குப் பயன் படுத்தப்படுகின்றதா என்பதையறிய தணிக்கை முறையையும், பாராளுமன்றம் கி. பி. 1341ஆம் ஆண்டில் வழக்கத்திற்குக் கொண்டு வந்தது.

சுருக்கமாகக் கூறினால், வரி விதிப்புப்பற்றிய விவகாரத்தில் பாராளுமன்றம் உயர் அதிகாரங்களை இம் மன்னர் காலத்திலேயே பெற்றுவிட்டது.

அடுத்ததாக, சட்டமியற்றும் அதிகாரத்தையும் பாராளு மன்றம் இம் மன்னரின் காலத்தில் அடைந்தது.

'பொது மக்களின் வேண்டுகோளின்படியும், மத தலைவர்கள், எர்ல்கள், பிரபுக்களின் சம்மதத்துடனும்' அரசர் முன் வைக்கப் படும் விண்ணப்பங்களின் அடிப்படையில் சட்டங்களை இயற்றும் முறை, வழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டது.

கி. பி. 1340ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட ஒரு குழு, இத்தகைய விண்ணப்பங்களைச் சட்டமாகக் கொண்டுவரும்

மரபுக்குத் தொடக்க நிலையாக அமைந்தது. இக் குழுவில், கான்டர்பரி தலைமை பிஷப் உள்படச் சில பிஷப்புகள், சில பிரபுக்கள், மக்களின் சபையால் தேர்ந்தெடுக்கப்பட்ட பதினெட்டுப் பிரதிநிதிகள் இடம் பெற்றிருந்தனர்.

அரசருக்குக் கொடுக்கப்பட்டிருந்த விண்ணப்பம், அதற்கு அரசர் கொடுத்திருந்த பதில் (கருத்து) ஆகியவற்றைப் பரிசீலனை செய்து, அவற்றுள் எதை எடுத்துக்கொள்வது அல்லது எதை நீக்கி விடுவது என்பதையே இக் குழு முடிவு செய்தது; இக் குழு சமர்ப்பித்த அறிக்கையின் பேரிலேயே இதற்குப் பின்னர் பாராளுமன்றச் சட்டம் இயற்றப்பட வேண்டியதாயிற்று. இங்ஙனம் கொண்டுவரப்பட்ட சட்டங்களுக்கு அரசர் தம் ஒப்புதலை அளித்திருந்தாலும், நிறைவேற்றப்பட்ட சட்டம் பாராளுமன்றம் கலைந்த பிறகே எழுத்திலே எழுதப்பட்டதால், அரசர், அச் சந்தர்ப்பத்தில் தாம் முன்பு ஒப்புக்கொண்ட சட்டங்களை இப்போது தமக்குச் சாதமாகத் திருத்திக்கொள்ள வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. கி.பி. 1341ஆம் ஆண்டில் பாராளுமன்றக் கூட்டம் கலைக்கப்படுவதற்கு முன்பாகவே மூன்றும் எட்வர்டு, தாம் முன்பு ஒப்புக்கொண்ட கோரிக்கைகளைச் சட்டமாக ஏற்றுக்கொள்ள மறுத்தார் என்பதை ஒரு மேற்கோளாகக் கொள்ளலாம். சில நேரங்களில் ஒப்புக்கொள்ளப்பட்ட கோரிக்கைகள் அரசரின் விருப்பமின்மையால் சட்டப் புத்தகங்களிலும் எழுதப்படாமல் விடப்பட்டன.

கி. பி. 1343-ல் கூட்டப்பட்ட பாராளுமன்றம் மேற்கண்ட குறைகளைப் போக்கும் வகையில் 'பாராளுமன்றத்தினால் ஒப்புக்கொள்ளப்பட்ட சட்டத்தை அரசர் ரத்துச் செய்யவோ மாற்றவோ கூடாது என்றுகூறி அரசரைக் கட்டுப்படுத்தியது. சில சமயங்களில் அரசரால் கொண்டுவரப்பட்ட அவசரச் சட்டங்களையும் பாராளுமன்றம் பரிசீலனை செய்து அவற்றின் குறைகளைப் போக்க முற்பட்டது.

சுருக்கமாகக் கூறின், இவ் வரசர் காலத்தில் பாராளுமன்றம் சட்டமியற்றும் அதிகாரத்தையும், இயற்றப்பட்ட சட்டத்தை அரசர் மீறாமல் இருப்பதற்கான மரபுகளையும் உருவாக்கிக்கொண்டது.

**நற்பாராளுமன்றம் (The good Parliament):** மூன்றும் எட்வர்டு காலத்தில் பாாாளுமன்றம் நிர்வாகத் துறையிலும் உரிமை கொண்டாட ஆரம்பித்தது. இது மட்டுமன்றி, குற்றம் செய்த அலுவலர்களைத் தண்டிக்கவும் முற்பட்டது. கி.பி. 1376-ல்

கூட்டப்பட்ட நற்பாராளுமன்றம் இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

நூறாண்டுப் போரில் ஆங்கிலேயர் தோல்விகளைத் தழுவியிருந்த நேரத்தில், அரசர் மூன்றாம் எட்வர்டு முதுமை அடைந்து அரச விவகாரங்களிலே தலையிட முடியாமல் இருந்தார். இவரது மூத்தமகன் கருங்கவச இளவரசரும் கடுமையான நோயினால் பீடிக்கப்பட்டிருந்தார். இந் நிலையில் நாட்டின் நிர்வாகத்தை அரசரின் இளைய மகனை ஜான் காண்ட் (லங்காஸ்டர் பிரபு) என்பவரே நடத்தி வந்தார். இவரது ஆட்சி அலங்கோலமான நிலையிலிருந்தது.

தம் தந்தையின் மரணத்திற்குப் பிறகு, கருங்கவச இளவரசரின் வாரிசுரிமையை நீக்கிவிட்டுப் பின்னவரின் ஒன்பது வயது பாலகனை ரிச்சர்டையும் அரச பட்டத்திற்கு வராமல் தடுக்க ஜான் முயற்சி செய்து வந்ததாக நாட்டில் ஒரு பரவலான வதந்தி இருந்து வந்தது. ஆனால், ஜான் காண்ட் அரசரின் பிள்ளை என்பதோடல்லாமல் நாட்டின் நிர்வாகத்தை நடத்தி வந்ததால், இவரை வெளிப்படையாகத் தண்டிக்க பாராளுமன்றத்திற்குத் துணிவில்லை. இதே சமயத்தில் ஜான் காண்ட்டின் சில நண்பர்கள் பொதுப் பணத்தைக் கையாடியவர்களாகவும், லஞ்ச ஊழலிலே ஈடுபட்டவர்களாகவும் இருந்ததால் இவர்களைப் பாராளுமன்றம் தண்டிக்க விரும்பியது.

**துரோகக் குற்ற விசாரணை:** காமன்ஸ் சபையின் சபாநாயகராக இருந்த பீட்டர்-டி-லாமேர் (Peter-de-Lamare) என்பவர், ஜான் காண்ட்டின் நண்பர்கள்மீது குற்றச் சாட்டுகளைக் கொண்டு வந்தார். அதாவது, குற்றவாளிகள் காமன்ஸ் சபையினால் குற்றம் சாட்டப்பட்டார்கள்; குற்றம் சாட்டப்பட்டோர் பிரபுக்கள் சபையின் முன்னர் விசாரிக்கப்பட்டனர். இம் முறையே துரோகக் குற்ற விசாரணை (Impeachment) என்று அழைக்கப் படலாயிற்று.

துரோகக் குற்ற விசாரணை என்பது, பாராளுமன்றம் பெற்ற சிறப்பான அதிகாரங்களில் ஒன்றாகும். அரசாங்கம் சரிவர நடத்தப்படவில்லையெனில், இதற்கு அரசரின் ஆலோசகர்களே பொறுப்பானவர்களாவர் என்ற நியதியை இம் முறை நிலை நிறுத்தியதோடல்லாமல், அந்த ஆலோசகர்களைப் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பாளிகளாக்கிய மரபையும் இவ் விசாரணை எடுத்துக் காட்டியிருந்தது. நற்பாராளுமன்றத்தினால் கையாளப்

பிட்ட இவ் விசாரணைமுறை, அடுத்து வரும் காலங்களில் பாராளுமன்றங்களின் சிறப்பதிகாரங்களாகப் பயன்படுத்தப் பட்டன. இம் முறையினால் இடைக் காலத்திலேயே வரம்புக்குள் பட்ட முடியாட்சி ஏற்படுத்தும் முயற்சி எடுக்கப்பட்டு விட்டது.

குற்றம் சாட்டப்பட்டவர்களில் அரசரின் காமக் கிழத்தியான டேம்-அலீஸ்-பெரார்ஸ் (Alice Perrers), அரண்மனைக் காப்பாள ரான லாட்டிமர் (Latimer), அரசரின் பொருளாளரான ரிச்சர்டு லயான்ஸ் (Richard Lions) என்ற மூவர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் 13,330 பவுன்களை அரசரின் சார்பிலே கடனாக வாங்கி யிருந்தனர்; ஆனால், அரசரை ஏமாற்றி எழுதப்பட்ட கடன் தொகையை 20,000 பவுன்களுக்கு மாற்றிக்கொண்டனர். மேலும், பிரிட்டானியின் பெரும் பிரபுவிடம் இலஞ்சம் வாங்கிக்கொண்டு மூன்றும் எட்வர்டுக்குச் சொந்தமான கோட்டைகளையும் பிரிட்டானி யாவில் விட்டுக் கொடுத்திருந்தனர். இவையல்லாமல் நாட்டின் நிர்வாகக் குலைவிற்கும் இம் மூவர் காரணமாயினர்.

குற்ற விசாரணையின்போது இவர்கள் அபரிமிதமான வட்டிக் குப் பணத்தை அரசருக்குக் கடனாகக் கொடுத்திருந்ததும், மன்னரால் செலுத்தப்படவேண்டிய கடன்களைவிட அதிகமாக நாட்டுக் கருவூலத்திலிருந்து பணத்தை எடுத்திருந்தார்களென்றும், தங்கள் சொந்த நலன்களுக்காக அரச அதிகாரங்களைப் பயன் படுத்தி இருந்தார்க்ள் என்றும் சில உண்மைகள் தெரிய வந்தன. இவர்களுடன் வேறு சிலரும் இக் குற்றங்களில் ஈடுபட்டிருந்ததும் தெரிய வந்தது. பிரபுக்கள் சபையினர் இம் மூவரே குற்ற வாளிகள் என்று முடிவு செய்து தண்டனை வழங்கினர்.

குற்றம் சாட்டப்பட்ட லாட்டிமர் பிரபு, அபராதத்துடன் சிறைத்தண்டனை அடைந்தார்; ரிச்சர்டு லயான்ஸ், அபராதத்துடன் தம் பதவியை இழந்தார்; மற்றவர்கள் கடுமையான சிறைத் தண்டனையைப் பெற்றனர்; டேம் அலீஸ் பெரார்ஸ் நாடு கடத்தப் பட்டார்.

இங்ஙனமாக, நற்பாராளுமன்றம் நாட்டு நிர்வாகிகளையே துரோகக் குற்ற விசாரணைக்குட்படுத்தித் தனக்கு நிர்வாகத் துறையிலே குறுக்கிடக்கூடிய அதிகாரம் உண்டு என்பதை நிலை நிறுத்திக்கொண்டது.

மேற்கூறிய துரோகக் குற்ற விசாரணை நடந்து கொண் டிருந்தபோதே, கருங்கவச இளவரசர் காலமானார். உடனே,

இம் மன்றம் அரசர் மூன்றும் எட்வர்டின் பேரரும், காலஞ்சென்ற இளவரசரின் மகனுமான ஒன்பது வயதே நிரப்பப்பெற்றிருந்த ரிச்சர்டை அடுத்த வாரிசாக அறிவிக்க வேண்டுமென்றும், ரிச்சர்டு தகுந்த வயதை அடையும் வரையில் அரசாங்க விவகாரங்களைக் கவனிக்க நிலையான குழு ஒன்றை அமைக்கவேண்டுமென்றும் அரசரிடம விண்ணப்பித்துக் கொண்டது. ஏற்கெனவே, பாலகன் ரிச்சர்டை விஷமிட்டுக் கொல்ல ஜான் கான்ட் முயற்சி செய்ததாக நம்பப்பட்டதால்,அரசரின் வயோதிகத்தை முன்னிட்டு அரச அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொள்ளக் கூடாதென்றே இவ்வேற்பாடு செய்யப்பட்டது. அதன்படி மூன்றம் எட்வர்டும் ஒன்பதுபேர் கொண்ட குழு ஒன்றை நியமித்து, மன்றத்தின் விண்ணப்பத்திற்கு மதிப்பளித்தார்.

மேலும், குற்ற விசாரணை நடந்து கொண்டிருக்கும்போது, காமன்ஸ் சபையினர் நிர்வாகத்தில் காணப்பட்ட பற்பல குறைகளைச் சுட்டிக் காட்டி, இரு கோரிக்கைகள் அடங்கிய விண்ணப்ப மனுவை அரசரிடம் சமர்ப்பித்தனர். இதன்படி, வருங்காலத்தில் பாராளுமன்றம் ஆண்டுக் கொருமுறையாவது கூட்டப்படவேண்டுமென்றும், ஷயர்களின் தேர்தலின்போது அரசரின் அதிகாரிகள் தலையிடக்கூடாதெனவும் நற் பாராளுமன்றத்தினல் கோரப்பட்டது.

மூன்றும் எட்வர்டு காலத்தில் பாராளுமன்றம் உள்நாட்டு விவகாரங்களில் மட்டுமன்றி, அயல்நாட்டு விவகாரங்களிலும் குறிப்பாகப் போர், சமாதானம் ஆகியவற்றிலும் குறுக்கிட்டு அரசருக்கு ஆலோசனை சொல்லக்கூடிய தகுதியையும் பெற்றிருந்தது. ஸ்காட்லாந்து, ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளுடன் நடத்தப்பட்ட போர்களின் போதும், செய்து கொள்ளப்பட்ட சமாதான உடன்படிக்கைகளின் போதும், மூன்றும் எட்வர்டு தம் பாராளுமன்றங்களை அடிக்கடி கலந்தாலோசித்தார். சிற்சில சமயங்களில் சமய விவகாரங்களிலும், பாராளுமன்றம் தலையிட்டது. அந்நியர்களை மதகுருமார்களாகப் போப்பாண்டவர் நியமித்ததைக் கண்டிக்கும் வகையில் பாராளுமன்றம் அரசருக்கு ஒரு விண்ணப்பத்தைக் கொடுத்தது நினைவில் கொள்ளத்தக்கது.

சுருக்கமாக கூறினல், இவ் வரசரின் காலத்தில் பாராளுமன்றம் சில சிறப்பான அதிகாரங்களைப் பெற்றுவிட்டது. அரசருக்கு வரி விதிக்க அனுமதியையும், அரசருக்கு குறித்த காரியங்களுக்குப் பணத்தை ஒதுக்கவும் கொடுக்கப்பட்ட

பணத்தைத் தணிக்கை செய்யவும் பாராளுமன்றம் அதிகாரம் பெற்றுவிட்டது. அடுத்தபடியாக, இரு சபைகளின் அனுமதி பெற்றுச் சட்டமியற்ற வேண்டிய அவசியத்தையும் அரசரிடம் வலியுறுத்தியிருந்தது. இறுதியாக நிர்வாகக் குறைகளை விசாரிக்கவும் அதற்கு உடந்தையான அமைச்சர்களை விசாரித்துத் தண்டிப்பதற்கான அதிகாரத்தையும் பாராளுமன்றம் பெற்றிருந்தது. ஆகவே, மூன்றும் எட்வர்டு காலத்தில் பாராளுமன்றம் இதுவரை பெற்றிராத அதிகாரங்களை அடைந்துவிட்டது எனலாம்.

# 7. லங்காஸ்டியர்கள் யார்க்கியர்கள் காலம்



## நான்காம் ஹென்றி (கி. பி. 1399-1413)

லங்காஸ்டர் அரச மரபில் வந்த மூன்று அரசர்களில் முதல்வரான நான்காம் ஹென்றி, தோற்றத்தில் வசீகரம் குன்றியவராக இருந்தாலும் பேராசைக்காரராகவும் பழிபாவங்களுக்கு அஞ்சாதவராகவும் தமக்குக் கிடைத்திருந்த அரச பீடத்தைக் காத்துக் கொள்ளக்கூடிய வசிய சக்தியைப் பெற்றவராகவும் இருந்தார். சமயத்திற்கேற்றபடி நடந்து கொள்ளக்கூடிய சாதுரியத்தையும் கொண்டிருந்தார். உடைமைகளைப் பெறும் நோக்கத்தோடு ரேவன்ஸ்பூரில் வந்திறங்கியிருந்த ஹென்றி (லங்காஸ்டர்), சாதகமான சந்தர்ப்பச் சூழ்நிலையால் அரசுரிமையை அடைந்தார்.

**நான்காம் ஹென்றியும் பாராளுமன்றமும்:** எவ்வித வரம்பிற்கும் உட்படாது கொடுங்கோலராக இரண்டாம் ரிச்சர்டு ஆட்சி செய்ய முற்பட்டிருந்ததன் காரணமாகவே கி.பி. 1399ஆம் ஆண்டுப் புரட்சியின் வாயிலாக அவர் பதவி நீக்கம் செய்யப்பட்டார். பாராளுமன்றத்தின் வற்புறுத்தலின்படி அவ் வரசர் பட்டத்தைத் துறந்ததால், வாரிசுரிமை மூன்ரும் எட்வர்டின் மூன்ரும் மகனை லியோனல் கிளாரன்சின் இளைய பேரரான மார்ட்டிமர் பிரபுவுக்கே (Earl of Mortimer) கொடுக்கப்பட்டிருக்க வேண்டும்; ஆனல், மூன்ரும் எட்வர்டின் நான்காம் மகனை ஜான் காண்டின் பிள்ளை ஹென்றி (லங்காஸ்டர்), ஆங்கில வாரிசுரிமைக்கு உடையவராக்கப்பட்டார். குலமுறை மரபு உரிமையைக்காட்டிலும், மன்னராவதற்குப் பாராளுமன்றத்தின் ஒப்புதலே அவசியமாகும் என்ற வழக்காறு இப்போது வற்புறுத்தப்பட்டது. நாட்டு மக்களின் இசைவையும் சம்மதத்தையும் பெற்று எங்ஙனம் ஒரு மன்னரை ஆட்சியினின்று நீக்குவதற்கு உரிமை இருந்ததோ, அதே போன்று அவருக்குப் பதிலாக அரச மரபைச் சேர்ந்த இன்னொருவரை மன்னராக்கும் உரிமையும் பாராளுமன்றத்திற்கு உண்டு. அல்லது பாராளுமன்றத்தின் சம்மதத்தின் பேரில் பதவியைப் பெறும் அரசர், பாராளுமன்றத்தின் நிராகரிப்பினல் பட்டத்தை இழக்கக் கூடுமென்ற புதியதோர் அரசியல் முறையும் ஏற்படுத்தப்பட்டு விட்டது. எந்த மன்றம் மரபுரிமையைத் தள்ளிவைத்துத் தம்மை அரசராக்கியிருந்ததோ, அதே மன்றம் தம்மைப் பட்டத்திலிருந்தும் விரட்டக்கூடுமென்பதை நான்காம் ஹென்றி உணர்ந்திருந்தார். தாம், தமது அரச முடிக்குப் பாராளுமன்றத்திடம் நன்றிக்கடன் பட்டிருந்தாலும், இம் முடியைக் காப்பாற்றிக் கொள்ள அம் மன்றத்தின் நல்லாதரவு தேவைப்பட்டதாலும், நான்காம் ஹென்றி, தம் ஆட்சிக் காலத்தில் பாராளுமன்றச் சட்டத்தின் அடிப்படையிலே அதிகாரங்களைச் செலுத்தினர். மன்னரின்

இக்கட்டான நிலையைப் புரிந்துகொண்ட பாராளுமன்றமும் இவரிடமிருந்து சில விசேட அதிகாரங்களைப் பெற்றுக்கொள்ள முற்பட்டது. முக்கியமாக, பாராளுமன்றத்தைக் கலந்தாலோசிக்காமல் மன்னர் தம் அமைச்சரவையை அமைக்கக் கூடாதென ஏற்பாடாகியது. அதாவது, இவ்வேற்பாட்டின்படி எவரெவர் தம் அமைச்சர்களாக இருக்கவேண்டுமென மன்னர் விரும்புகிறாரோ, அவர்களின் பெயர்களைக் கொண்ட பட்டியல் பாராளுமன்றத்தின் ஒப்புதலுக்கு அனுப்பப்பட வேண்டும்.

இவ் வரசரின் காலத்தில் வேல்ஸ், ஸ்காட்லாந்துப் பகுதிகளில் கலகங்களும் சண்டைகளும் அடிக்கடி ஏற்பட்டமையால், போர்ச் செலவுக்காகப் பணம் பெறவேண்டி ஹென்றி, பாராளுமன்றத்தை அவ்வப்போது கூட்டவேண்டியிருந்தது. அரசருக்குப் பண உதவி கொடுத்த ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பாராளுமன்றம் சிற்சில அதிகாரங்களைப் பெற்றுக் கொண்டது. பாராளுமன்றத்தில் எந்தவொரு மசோதாவும் இறுதி அமைப்பைப் பெறும் வரையில், அரசர் தம் விவகாரத்தில் தலையிடக்கூடாதென கி பி. 1401ஆம் ஆண்டில் மன்றத்தினர் நான்காம் ஹென்றியிடமிருந்து ஒரு வாக்குறுதியைப் பெற்றனர். கி. பி. 1404ஆம் ஆண்டில், தம் நான்கு அலுவலர்கள் பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்தவர்களாக ஆனமையால், அவர்களை நீக்கும்படி மன்றத்தினால் நான்காம் ஹென்றி கேட்டுக்கொள்ளப்பட, அரசரும் அதை நிறைவேற்றினார். கி. பி. 1406ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றம், அரசருக்குரிய சில விசேட அதிகாரங்களைப் பறித்துக்கொள்ள வேண்டி முப்பத்தோர் அம்சங்களைக் கொண்ட ஒரு சீர்திருத்தத் திட்டத்தையும் கொண்டு வந்திருந்தது. இதன்படி அரசர் எந்தவொரு முக்கிய முடிவையும் மன்றத்தின் அனுமதியின்றி எடுக்கக் கூடாது எனக் கட்டுப்படுத்தப்பட்டார். கி. பி. 1407ஆம் ஆண்டில் வரி வசூல் சம்மந்தமான சட்டங்களை ஆக்கும் தனி உரிமையையும், பாராளுமன்றம் (காமன்ஸ் சபை) பெற்றிருந்தது.

அரசரும் அவர்தம் அமைச்சர்களும் செய்த தவறுகளை அடிக்கடி பாராளுமன்றம் இடித்துக் காட்டியதோடன்றி, அரசரின் வரவு செலவைக் கண்காணிக்கத் தொடங்கியது; அரண்மனை வீண் செலவுகளையும் கண்டிக்க முற்பட்டது.

நான்காம் ஹென்றி, தம் ஆட்சிக்காலம் முழுவதும் பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டவராகவே இருந்தார். பாராளுமன்ற சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, நான்காம் ஹென்றி ஆட்சி செய்து

வந்தமையால், இதுவே 'லங்காஸ்டியர் சோதனைக்கு' (Lancastrian Experiment) முதல் கட்டமாக அமைந்தது.

ஆகவே, அரசரின் சிறப்பதிகாரங்களுக்கும் பாராளுமன்றத்தின் தனி அதிகாரங்களுக்கும் கடந்த பல ஆண்டுகளாக நடந்து வந்த உரிமைச் சச்சரவு, நான்காம் ஹென்றியின் காலத்தில் பாராளுமன்றத்திற்கே வெற்றியாக முடிந்தது. இதனைத் தொடர்ந்தே, வரம்பிற்குள்பட்ட ஆட்சி முறையும் (Limited Monarchy) இங்கிலாந்தில் நான்காம் ஹென்றியால் அமைக்கப் பட்டது.

**நான்காம் ஹென்றியும் லாலார்டுகளும்:** *கி. பி. 1399ஆம்* ஆண்டின் புரட்சியில் பதவியிழந்திருந்த இரண்டாம் ரிச்சர்டு, லாலார்டுகளைத் தண்டிக்காமல் அவர்களின் இயக்கத்திற்கு ஆதரவு கொடுத்தாரென்ற பழிக்கு ஆளாகியிருந்தாரென்பதை அவரது அடுத்த வாரிசான நான்காம் ஹென்றி நன்கு உணர்ந்திருந்தார். மேலும், தாம் பெற்றிருந்த அரசுரிமை நிலைத்திருக்க வேண்டுமென்றால், நாட்டில் முக்கியத்துவம் கொண்டிருந்த திருச்சபையின் நல்லாசியும் தமக்குத் தேவையென்பதை இவ் வரசர் தெரிந்து வைத்திருந்தார்.

தாம் இரண்டாம் ரிச்சர்டால் நாடு கடத்தப்பட்டிருந்தபோது (கி.பி. 1398), தமக்கு அடைக்கலம் கொடுத்துப் பின்னர் தாம் மன்னராவதற்குப் பேருதவியாயிருந்த அருண்டேல் என்பவரை இம் மன்னர் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக மீணடும் பதவியிலமர்த்தியிருந்தார். லாலார்டுகளின் சமய சீர்திருத்தக் கருத்துகளைத் தெய்வ நிந்தனையாகப் பாவித்த அருண்டேல், அவ் வியக்கத்தை நசுக்க எண்ணி அரசரை வற்புறுத்தலானர். இதற்கேற்ப, நான்காம் ஹென்றியும் தம் பாராளுமன்றத்தைக் கூட்டி, லாலார்டுகளுக்கு எதிராக 'டி ஹெரிட்டிகோ கம்பு ரெண்டோ' என்ற சட்டத்தை இயற்றச் செய்தார். அடுத்து வரும் ஆண்டுகளில் லாலார்டுகள் ஒடுக்கப்படுவதற்கு இச் சட்டமே ஊன்றுகோலாக இருந்தது. பல லாலார்டுகள், இவ் வரசரின் காலத்தில் சமய நிந்தனையாளர்களாக ஒறுக்கப்பட்டனர். இவ்வியக்கத்தின் முக்கிய குருவாகக் கருதப்பட்ட வில்லியம் சாட்டர் என்பவர் உயிரோடு ஸ்மித்ஃபீல்டில் எரிக்கப்பட்டார்.

மூன்றும் எட்வர்டு காலத்தில் தொடங்கி, இரண்டாம் ரிச்சர்டு காலத்தில் வளர்ச்சியுற்றிருந்த லாலார்டுகளின் இயக்கம், இவ் வரசரின் காலத்திலேயே இடர்ப்பாடுகளைக் கண்டது.

**நான்காம் ஹென்றியும் உள்நாட்டுக் கலகங்களும்**

நான்காம் ஹென்றி, தம் ஆட்சிக் காலத்தில் பல கலகங்களைச் சந்திக்க வேண்டியவராக இருந்தார். தாம் ஆட்சிக்கு வந்த முதல் ஒன்பது ஆண்டுகளில் நான்கு கலகங்கள் தோன்றின. கலகங்களை அடக்குவதிலேயே இவ் வரசர் தம்ஆட்சிக் காலத்தைக் கழித்தார்.

**ஹாலந்து சகோதரர்களின் கலகம்:** இரண்டாம் ரிச்சர்டு தமக்கு ஆதரவற்ற நிலையில் பட்டத்தைத் துறந்து சிறையிலடைக்கப்பட்டிருந்தபோதும், அவரது சார்பிலே கி. பி. 1400ஆம் ஆண்டு, தொடக்கத்தில் ஒரு கலகம் ஏற்பட்டது. இக் கலகத்திற்குக் காரணமாக இருந்தவர்கள் இரண்டாம் ரிச்சர்டின் ஒன்றுவிட்ட சகோதரர் (Step brother) ஜான் ஹாலந்து (ஹன்டிங்டன் பிரபு), அவருடைய மைத்துனர் (Step nephew) தாமஸ் ஹாலந்து (கென்ட் பிரபு) என்பவர்களாவர். மீண்டும் இரண்டாம் ரிச்சர்டை எப்படியேனும் அரச பதவியில் அமர்த்த வேண்டுமென்பதே இவர்களின் குறிக்கோளாக இருந்தது.

இக் கலகத் தலைவர்களுடன் நான்காம் ஹென்றியின் பாராளுமன்றத்தினால் தங்கள் சலுகைகளையும் அதிகாரங்களையும் இழந்திருந்த ரட்லாந்து பிரபு (Earl of Rutland), சாலிஸ்பரி பிரபுவான மான்டேகு, சோமர்சட் பிரபுவான ஜான் பியோஃபோர்ட் (Beaufort) ஆகியோரும் கலந்து கொண்டிருந்தனர்.

விளையாட்டுப் போட்டி (Tournament) ஒன்றிற்காக ஆயிரக் கணக்கான வீரர்களைக் கூட்டுவதுபோல் கூட்டி, திடீரென்று நான்காம் ஹென்றி தங்கியிருந்த விண்ட்சர் (Windsor) மாளிகையைத் தாக்கி, அவரைக் கைப்பற்றுவதே இக் கலகக்காரர்களின் இரகசியத் திட்டமாகும். ஆனால், இச் சதியை முன்கூட்டியே தெரிந்து கொண்ட அரசர், இலண்டன் மாநகருக்குத் தப்பிச் சென்று மக்களைச் சண்டைக்குத் தயாராகும்படி பணித்தார். தங்களின் திட்டம் கடைசி நேரத்தில் பிசுபிசுத்து விட்டதால், அரசரை எதிர்க்கப் பெரும்படை தேடவேண்டி, இக் கலகத் தலைவர்கள் வேல்ஸ் பகுதியை நோக்கி ஓடினார்கள். கலகக்காரர்களுக்குப் போதிய அவகாசம் கொடுத்தால், அது தமக்கே ஆபத்தாக முடியுமென்பதை உணர்ந்திருந்த நான்காம் ஹென்றி, தம் படைகளுடன் அவர்களை உடனுக்குடன் பின்தொடர்ந்தார். சிரன்செஸ்டருக் (Cirenchester) கருகே கென்ட் பிரபுவும், சாலிஸ்பரி பிரபுவும் பிடிபட்டுக் கொல்லப்பட்டார்கள். எஸ்ஸெக்ஸ் பகுதியில் ஹன்டிங்டன் பிரபுவும், சோமர்செட் பிரபுவும் சிறைப் பிடிக்கப்பட்டுச் சிரச்சேதம்

அடைந்தனர். இவர்களின் பல ஆதரவாளர்கள் விசாரணை ஏதுமின்றிச் சிறையிலடைக்கப்பட்டனர்.

இக் கலகம் இங்ஙனமாக எளிதில் அடக்கப்பட்டிருப்பினும் இரண்டாம் ரிச்சர்டை உயிரோடு (சிறையில்) வைத்திருப்பது உசிதமாகாதென்ற முடிவுக்கு நான்காம் ஹென்றி வந்திருந்தார். இதன் விளைவாகவே சிறைக் கைதியாக இருந்த இரண்டாம் ரிச்சர்டு, இரண்டு வாரங்களுக்கு உணவு உட்கொள்ள மறுத்துப் பட்டினியால் போண்டி.ஃபிராக்டு கோட்டையில் காலமடைந்து விட்டார்.

**வெல்ஷ் கலகம் :** இரண்டாம் ரிச்சர்டு கொல்லப்பட்டாலும், இன்னும் புதிய அரசரின் (நான்காம் ஹென்றி) நிலைமை சீரடையவில்லை. ஃபிரெஞ்சு அரசரான ஆறும் சார்லஸ், லங்காஸ்டியரின் ஆட்சியை ஒப்புக் கொள்ளாதவராகப் (நூறுண்டுப்) போரைத் தொடங்கப் போவதாக மிரட்டி வந்தார். ஸ்காட்லாந்திலும், நான்காம் ஹென்றிக்கு எதிராகப் போர் முயற்சிகள் செய்யப்பட்டு வந்தன. ஃபிரெஞ்சுக்காரர்களின் உதவியுடன் ஸ்காட்டியர்கள் எல்லை கடந்து வந்து தாக்குதல் நடத்தக்கூடிய அபாய நிலைமையை முறியடிக்க நான்காம் ஹென்றி தாமே படைகொண்டு வடக்கு நோக்கிச் சென்றுர். அச் சமயத்திலேயே (கி. பி. 1401) வேல்ஸ் பகுதியில் ஒரு மும்முரமான கலகம் தோன்றியது.

முதலாம் எட்வர்டு காலத்தில் வேல்ஸ் கைப்பற்றப்பட்டிருந்தும், அங்கு வாழ்ந்த மக்களிடையே சுதந்திர உணர்ச்சி இன்னும் பூரணமாக மறையவில்லை. ஆங்கிலேயரின் ஆதிக்கத்தைக் களைந்தெறியத் தகுந்த காலத்தை எதிர்நோக்கியிருந்த வெல்ஷ் மக்களுக்கு ஓவன் கிளன்டோவர் (Owen Glendower) என்ற பெருநிலக்கிழாரின் தலைமை கிடைத்தது.

ஓவன் கிளன்டோவர், கார்வென் (Corwen) என்ற வெல்ஷ் பகுதியில் சிச்சார்த் (Sycharth) என்னுமிடத்தைச் சேர்ந்த ஒரு நிலப்பிரபு ஆவார். அறிவும், வீரமும், திறமையும் கொண்டிருந்த கிளன்டோவர் கருத்து வேறுபாட்டின் காரணமாக மார்ச் கிரே பிரபுவுடன் (Lord Grey of March) தகராறு கொண்டிருந்தார்; பின்னவர் தமக்கு உதவியாக நான்காம் ஹென்றியின் நட்பை நாடுவாரென்ற நிலை ஏற்பட்டபோது, அரசருக்கெதிராகவே கிளன்டோவர் கலகம் செய்ய முற்பட்டார்.

'ஆட்சியைப் பறித்துக் கொண்டவர்' (usurper) என்ற குற்றச்சாட்டை நான்காம் ஹென்றியின்மீது சுமத்தி, தம்

நாடு விடுதலைபெற வேண்டி வெல்ஷ் மக்களை இக் கலகத்தில் சேரும்படி கிளன்டோவர் அறைகூவல் விடுத்ததையொட்டி, வேல்ஸ் பகுதியே கொதித்தெழுந்தது. தம்மை 'வேல்ஸ் இளவரசராக' (**Prince of Wales**) அறிவித்துக் கொண்ட ஓவன் கிளன் டோவர், மக்கள் பலம் கொண்டு, தெற்கு வேல்ஸிலிருந்த கார்டிங்கன்ஷயர் வரையிலான பல கோட்டைகளைக் கைப்பற்றி, வெல்ஷின் (பழைய) தனிக் கொடியைப் பறக்க விட்டார்.

வேல்ஸில் இங்ஙனம் தோன்றியிருந்த கலகத்தை அடக்க நான்காம் ஹென்றி பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்.

தம் முதலாவது படையெடுப்பில் நான்காம் ஹென்றி வேல்ஸில் சில இடங்களை மீட்டிருந்தாலும், மலைகளில் பதுங்கிக் கொண்டு தொல்லைகளைக் கொடுத்த கிளன்டோவரையும் அவர் தம் கலகக்காரர்களையும் அரசரால் பணியவைக்க முடியவில்லை. கி.பி. 1401ஆம் ஆண்டில் மீண்டும் ஆங்கிலப்படை மார்டிமர் பிரபுவின் (அரசருக்கு கி. பி. 1399-ல் வாரிசுப் போட்டியாக இருந்திருக்க வேண்டியவர்) தலைமையில் வேல்ஸை விடுவிக்க முயன்றது. இம்முயற்சியும் தோல்வியடைந்தது. மார்ட்டிமர் பிரபு எதிரிகளால் சிறைப்பிடிக்கப்பட்ட பின்னர், அவர்களுடன் சேர்ந்து கொண்டு. நான்காம் ஹென்றியை எதிர்க்கலானார். கி. பி. 1402ஆம் ஆண்டில் அரசர் ஹென்றியே பெரும்படை கொண்டு, கலகப் பகுதிகளை அடக்க நினைத்தார். மூன்று வாரங்கள் கடுமையாக முயற்சிசெய்தும் ஓவன் கிளன்டோவரை அடக்க முடியவில்லை; மலைகளிலும், காடுகளிலும் ஒளிந்து கொண்டு, அக் கலகத் தலைவர் ஆங்கிலேயப் படைகளை அலைக் கழித்தார். கிளன்டோவர் பிடிபடும் வரையில் வேல்ஸ் கலகம் ஓயாது என்ற அந்த நிலைமையில், அங்கு அடைமழை தொடர்ந்து பெய்யவும் அரசர் பயனேதும் காணமல் நாடு திரும்பினார்.

வேல்ஸ் இன்னும் மீட்கப்படாமலேயே இருந்தது.

**பெர்சிக்களின் கலகம் (கி. பி. 1403) :** வேல்ஸ் பகுதிகளில் நான்காம் ஹென்றி தம் பயனற்ற படையெடுப்புகளில் காலம் கழித்து வந்தபோது, இவருக்கு எதிராக இன்னொரு சதி உருவாகியது.

இரண்டாம் ரிச்சர்டின் விதவையான இசபெல்லா ஃபிரான்சுக்குத் திரும்பிச் சென்றிருந்ததையொட்டி, அவளது தந்தையாரான ஃபிரெஞ்சு மன்னர் ஆறாம் சார்லஸ், தம் மருமகனைக்

கொன்று பட்டத்தைக் கவர்ந்து கொண்ட நான்காம் ஹென்றி யின்மீது சினம் கொண்டிருந்தார். இதே சமயத்தில், ஸ்காட்டிய அரசரான நான்காம் இராபர்ட் என்பவரும் ஹென்றிக்குத் தொல்லை கொடுக்க விரும்பினர். ஃபிரெஞ்சுக்காரர்களின் கப் பற்படை இங்கிலாந்தின் தென்பகுதிகளைத் தாக்கத் தொடங்கி யிருந்தபோது, ஸ்காட்டியர்களும் டக்ளஸ் பிரபுவின் தலைமை யில் எல்லையைக் கடந்து நியுகாசில் (New Castle) வரை முன் னேறி, கொள்ளைச் செயல்களில் ஈடுபட்டிருந்தனர்.

நான்காம் ஹென்றிக்கு இது போதாத காலமாக இருந் தாலும், இச் சமயத்தில் இவருக்கு வேண்டிய உதவியும் கிடைத்திருந்தது. ஸ்காட்டியப் படைகள் தாங்கள் கொள்ளை யடித்திருந்த பொருள்களோடு நாடு திரும்புகையில் ஹோமில் டன் குன்று (Homildon Hill) என்னுமிடத்தில் நார்த்தம் பரியாவின் எர்ல் ஹென்றி பெர்சி (Henry Percy) என்பவரின் படைகளால் தடுத்து நிறுத்தப்பட்டனர். இவருக்கு உதவியாக மகன் பெர்சி ஹாட்ஸ்பர் (Hotsper) என்பவரும் தம் ஆங்கிலப்படையுடன் சேர்ந்து கொண்டார். அங்கு நடந்த சண்டையில் (கி. பி. 1402) ஸ்காட்டியர்கள் சிதறடிக்கப்பட் டனர்; டக்ளஸ் பிரபு உள்படப் பல ஸ்காட்டியர்கள் சிறை பிடிக்கப்பட்டனர். பெர்சிக்கள் பெற்றிருந்த இவ் வெற்றியே, இவர்களின் கலகத்திற்குக் காரணமாக அமைந்தது.

ஹோமில்டன் குன்றுச் சண்டையை அடுத்து, ஸகாட் டியர்களால் கொள்ளையடிக்கப்பட்ட பொருள்கள், பெர்சிக் களின் வசம் சிக்கியிருந்தது. மேலும், தங்களிடம் சிறைப் பட்டிருந்த ஸ்காட்டிய பிரபுகளுக்குப் பெர்சிக்கள் ஸ்காட்டிய அரசரிடமிருந்து மீட்புப் பணமும் கேட்டு வந்தார்கள். வேல்ஸ் போர்களினல் பணத்தை விரயம் செய்திருந்த நான் காம் ஹென்றிக்கு இப்போது பொருள் தேவைப்பட்டது. ஆகவே, பெர்சிக்களால் கைப்பற்றப்பட்டிருந்த பொருள்களை யும், மீட்புப் பணம் பெறக்கூடிய ஸ்காட்டியக் கைதிகளையும் தமக்கு அனுப்பி வைக்கும்படி நான்காம் ஹென்றி கட்டளையிட்டார். அரசரின் இந்த உத்தரவு பெர்சிக்களுக்குக் கோபத்தைத் தோற்றுவித்தது.

கி. பி. 1399 ஆம் ஆண்டில் ஹென்றி, அன்றைய அரச ரான இரண்டாம் ரிச்சர்டுக்கு எதிராகப் போர்க் கோலம் பூண்டபோது, நார்த்தம்பரியா பிரபு (தாமஸ் பெர்சி) பேருதவி செய்தார். நான்காம் ஹென்றி பட்டமெய்தியதற்கே இப்

பிரபு மிகவும் உதவியாக இருந்திருக்கின்றார். ஆயினும் அதற்குக் கைம்மாருக அரசரிடமிருந்து இதுவரையிலும் எதையுமே பெற்றிராத பெர்சி, ஹோமில்டன் சண்டையில் கிடைத்த பொருள்களை இழக்க மனமில்லாதவராக இருந்தார்.

பெர்சி ஹாட்ஸ்பருக்கும் அரசரிடத்தில் மனத் தாங்கல் ஏற்பட்டது. வேல்ஸ் படையெடுப்பில் (கி. பி. 1401) ஆங்கிலப் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்று எதிரிகளிடம் சிக்கிக் கொண்ட மார்ட்டிமர் பிரபு என்பவர் இவருக்கு மைத்துனராவர். தம்மிடம் சிறைக் கைதியாக இருந்த மார்ட்டிமரை விடுவிக்க, ஓவன் கிளன்டோவர் மீட்புப் பணம் கேட்டிருந்தும், அரசர் நான்காம் ஹென்றி கொடுக்க மறுத்திருந்ததை பெர்ஸி ஹாட்ஸ்பர் மறக்கவில்லை. அதற்குப் பதிலடி கொடுப்பதுபோலத் தம்வசம் இருந்த ஸ்காட்டியப் பிரபுக்களைப் பெர்ஸி ஹாட்ஸ்பர் அரசருக்கு ஒப்படைக்க மறுத்தார்.

அரசர் நான்காம் ஹென்றி, தம் உத்தரவுக்கும் பெர்சிக்கள் கட்டுப்பட்டே தீரவேண்டுமென வற்புறுத்த, அதை இவர்கள் ஏற்க மறுத்ததால், முடிவில் அது கலகமாக மாறியது.

கலகத்தில் இறங்கிவிட்ட பெர்சிக்கள். தங்களுக்கு உதவியாக வொர்செஸ்டரின் பிரபுவையும், (தாமஸ் பெர்சியின் சகோதரர்) சேர்த்துக் கொண்டதன்றி, வேல்ஸ் கலகத்தில் ஏற்கெனவே ஈடுபட்டிருந்த ஓவன் கிளன்டோவரோடும் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். சிறைப்பட்டிருந்த ஸ்காட்டியப் பிரபு டக்ளஸ்சும் விடுவிக்கப்பட்டு இக் கலகத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

மூத்த பெர்சி (தாமஸ்), யார்க்ஷயரில் தம் படைகளுடன் அரசருக்கு வரக்கூடிய உதவியாளர்களைக் கண்காணித்துவர, இளைய பெர்சியும் (ஹாட்ஸ்பர்), வொர்செஸ்டர் பிரபுவும், டக்ளஸ் பிரபுவும் தங்கள் படைகளுடன் செஸ்ஷயர் (Cheshire) என்னுமிடத்தைக் கடந்து, கிளன்டோவரோடு சேர்ந்துகொள்ள வேல்சை நோக்கிச் சென்று கொண்டிருக்க, நான்காம் ஹென்றி தம் படைகளுடன் ஷுருஸ்பரி (Shrewsbury) என்னுமிடத்தில் கலகக்காரர்களோடு மோதினர். இச் சண்டையில் இளவரசர் ஹென்றியும் (வருங்கால ஐந்தாம் ஹென்றி) கலந்து கொண்டிருந்தார். இச் சண்டையின் முடிவு அரசருக்கே சாதகமாக முடிந்தது.

இளைய பெர்சி சண்டையில் கொல்லப்பட்டார். சிறை பிடிக்கப்பட்ட வொர்செஸ்டர் பிரபு, இராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிரச்சேதம் அடைந்தார். டக்ளஸ் பிரபு சிறையிலடைக்கப்பட்டார். போரில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கியிருந்து விட்ட மூத்த பெர்சி, தம் கீழிருந்த பல கோட்டைகளை அரசருக்கு ஒப்படைத்து நான்காம் ஹென்றியின் மன்னிப்பைப் பெற்றுக் கொண்டார்.

**இறுதிக் கலகங்கள் (கி. பி. 1405—1408):** இரண்டாண்டு களுக்கு முன்னர், அரசரிடம் கருணைபெற்று உயிர்தப்பிய மூத்த பெர்சி (நார்த்தம்பர்லாந்து பிரபு), வேல்ஸில் இன்னும் அடக் கப்படாமலிருக்கும் ஓவன் கிளன்டோவருடனும் அப்போதைக்கு ஓவனின் மருமகனை ஏற்றுக் கொள்ளப்பட்ட மார்ட்டிமர் பிரபு வுடனும் ஓர் இரகசியத் திட்டத்தைத் தீட்டினர்; அதன்படி, இங்கிலாந்தை மூன்று பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியில் சுதந்திர மன்னராக ஆட்சி புரிவதென்ற திட்டம் வகுக்கப்பட்டது.

தம் திட்டத்தைச் செயல்படுத்த மூத்த பெர்சி, கி. பி. 1405 ஆம் ஆண்டில் நார்டிங்ஹாம் எர்லான தாமஸ் மௌபரேயை அரசருக்கெதிராகக் கலகம் செய்யும்படி தூண்டி விட்டார் (தாமஸ் மௌபரேயின் தந்தை நான்காம் ஹென்றியின் விரோதி. முன்பு, ஹென்றி லங்காஸ்டருடன் சேர்ந்து அவர் ரிச்சர்டால் நாடு கடத்தப்பட்டிருந்தார்). தம் தந்தையார் நாடு கடத்தப் பட்டு அங்கு இறந்ததற்கு இப்போதைய அரசரான நான்காம் ஹென்றி, ஒரு வகையில் காரணமென்பதை உணர்ந்திருந்த தாமஸ் மௌபரே, பழிக்குப்பழி வாங்க கலகத்தில் இறங்கினர். இவருக்கு உதவியாக யார்க் ஆர்ச் பிஷப்பான ஸ்கோர்ப் (Scorpe) என்பவரும் சேர்ந்து கொண்டார்.

யார்க் நகருக்கருகேயுள்ள ஷிப்டன்மூர் (Shiptonmoor) என்னுமிடத்தில் இக் கலகக்காரர்கள் ஒரு படை திரட்டி நிற்க, அரசரின் படைகள் இவர்களை வளைத்து விட்டது. அரசரின் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்ற வெஸ்ட் மூர்லாந்து எர்லான ரால்ப் நெவில் (Ralph Neville of West Moorland) தந்திரமாகக் கலகப் படையினரைக் கலையச் செய்து, அவ் விரு தலைவர்களையும் சிறைப்படுத்தினர். அரசர் ஹென்றி, இவர்களை விசாரணை எதுவுமின்றிக் கழுவிலேற்றிக் கொன்றார்.

இவ்விரு தலைவர்களைக் கொன்று பழி தீர்த்துக்கொண்ட இரண்டாம் ஹென்றிக்கு, இக் கலகத்திற்கே காரணமாக இருந்த

மூத்த பெர்சியைத் தண்டிக்க வேண்டிய கடமையும் இருந்தது. ஷிப்டன்மூர் சண்டைக்குப் பிறகு ஸ்காட்லாந்துக்கும், பின் அங்கிருந்து ஃபிரான்சு நாட்டுக்கும் மூத்த பெர்சி தப்பி ஓடி விட்டமையால், ஆத்திரம் கொண்ட நான்காம் ஹென்றி, அவரது பல கோட்டைகளை நார்த்தம்பரியாவில் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டார். கி. பி. 1408ஆம் ஆண்டு, ஸ்காட்டிய ஃபிரெஞ்சு உதவியுடன் வட இங்கிலாந்தைத் தாக்க, மூத்த பெர்சி முயற்சி செய்தபோது பிராம்ஹம் மூர் (Bramham Moor) சண்டையில் கொல்லப்பட்டு விட்டார்.

கி. பி. 1408ஆம் ஆண்டிலிருந்து நான்காம் ஹென்றிக்கு இன்னல்கள் குறைய ஆரம்பித்தன.

வேல்ஸில் இன்னும் ஓவன் கிளன்டோவரின் கலகம் அடக்கப் படவில்லை யெனினும், இளவரசர் ஹென்றி, சிறிது சிறிதாக வேல்ஸின் பல பகுதிகளை மீட்கலானார். ஸகாட்டிய இளவரசர் ஜேம்ஸ், ஃபிரான்சுக்குப் போய்க் கொண்டிருந்த வழியில் ஆங்கிலேய மாலுமிகளால் கைப்பற்றப்பட்டு, லண்டனில் சிறைப் படுத்தப்பட்டதால், இவரது உயிருக்கு ஆபத்து நேராமலிருக்க, ஸ்காட்டியர் தங்களின் படையெடுப்பை நிறுத்திவைத்திருந்தனர். எனவே, ஸ்காட்டியப் படையெடுப்புப் பயம் நீங்கியிருந்தது. ஃபிரான்சு நாட்டில் பர்கண்டி டியூக்கிற்கும், ஆர்மானியாக் டியூக் கிற்கும் சச்சரவு தோன்றியதால், அந்த நாடே உள்நாட்டுப் போர் அபாயத்திலிருந்தது. ஃபிரெஞ்சு அரசரான ஆறும் சார்லசும் சித்தப்பிரமை நோயினால் அவதிப்பட்டவராகவும், உள்நாட்டுப் பூசலைத் தீர்க்க முடியாதவராகவும் இருந்தமையால், இங்கிலாந் திற்கு இக் காலத்தில் ஃபிரெஞ்சுப் படையெடுப்பு அபாயமும் இல்லாமல் இருந்தது.

**நான்காம் ஹென்றியின் இறுதிக் காலம்:** தாம் அடைந்திருந்த அரச பீடத்தைக் காப்பாற்றிக் கொள்ளப் பாராளுமன்றத்துடன் ஒத்துழைத்தவராகவும் திருச்சபையினரோடு நல்லுறவு கொண்டவ ராகவும், கலகக்காரப் பிரபுக்களை ஒடுக்கியவராகவும் இருந்த நான்காம் ஹென்றி, தம் வாழ்நாளின் கடைசி ஆண்டுகளில் குட்ட நோயினால் அவதிப்படலானார். நோயின் கடுமையால் பாதிக்கப் பட்டிருந்த அரசருக்குத் தம் **பிள்ளை**யின் (பட்டத்து இளவரசர்) சூழ்ச்சியும் கெட்ட நடத்தையும் தகாத நட்பும் அளவிலாத் துயரத்தைக் கொடுத்தன. இளவரசர் ஹென்றியும், ஆர்ச் பிஷப் பான அருண்டேலும் தம் அவையிலேயே கட்சிகளை உண்டாக்கிச் சச்சரவிட்டுக் கொண்டது அரசரின் மன நிம்மதியைக் குலைத்து விட்டது.

தாங்கொணாத துக்கத்திலிருந்து விடுபட நினைத்த நான்காம் ஹென்றி, தம் நாற்பதாவது வயதில் (கி. பி. 1413, மார்ச், 20) நீங்காத் துயிலுற்றார்.

இங்கிலாந்தின் அரியணையைத் தம் குடும்பச் சொத்தாகப் பாதுகாத்தது மட்டுமன்றி, தமக்குப் பின் தம் வாரிசு எதிர்ப்பில்லாமல் பட்டத்திற்கு வரக்கூடிய வாய்ப்பினை உருவாக்கிச் சென்றிருந்ததே நான்காம் ஹென்றியின் சிறந்த சேவையாகக் கருதப்படுகிறது.

## ஐந்தாம் ஹென்றி (கி. பி. 1413-1422)

தம் தந்தையார் இறந்த பிறகு, எவ்விதச் சிக்கல்களும் இல்லாமல் சட்டப்படி வாரிசுரிமையைப் பெற்ற ஐந்தாம் ஹென்றியின் ஆட்சி, இந் நாட்டின் வரலாற்றுக்குச் சிறப்பளித்ததாக அமைந்தது.

தம் சிறு வயதில் பல தீய பழக்கங்களுக்கும் தகாத நட்புக்கும் இலக்காகி இருந்த ஹென்றி, தாம் பட்டத்தை அடைந்ததும் கடுமையான உழைப்புக்கும் ஒழுங்கு முறைக்கும் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார்.

**ஆட்சியைப் பலப்படுத்துதல்:** தம் தந்தையாரின் இறுதிக் காலத்திலே அவரது மனச் சஞ்சலத்திற்கும், உடல்நலக் குறைவுக்கும் பெரிதும் காரணமாக இருந்த ஹென்றி, தாம் அரசரானதைத் தொடர்ந்து முன்னவரின் கொள்கைகளில் பலவற்றைப் பின்பற்றியும் சிலவற்றை மீறவும் செய்தார். தம் தந்தையாரால் தொடங்கப்பட்ட 'லங்காஸ்டர் பரிசோதனை'யைப் பின்பற்றியவராகப் பாராளுமன்றங்களை அடிக்கடி கூட்டி, அதன் அதிகாரங்களுக்கு உட்பட்டே ஐந்தாம் ஹென்றி ஆட்சிபுரியலானார். சமய எரிப்புச் சட்டத்தின்படி, லாலார்டுகளையும் ஒறுத்தார். சதி செய்த ஓல்டு காசிலையும் அவரது மற்ற ஆதரவாளர்களையும் ஒழித்துக் கட்டி, தம் குல ஆட்சியை வலுப்படுத்திக் கொண்டார். ஓவன் கிளன்டோவரைக் காடுகளிலும் மலைகளிலும் ஒளிந்து வாழும்படி செய்து வேல்ஸின் பல பகுதிகளை மீட்டிருந்தார். இங்ஙனமாக, தம் தந்தையாரின் வழியைப் பின்பற்றியவராக ஐந்தாம் ஹென்றி விளங்கினார். தம்முடைய தந்தையால் சிறையில் வைக்கப்பட்டிருந்த எல்லைப் பிரபுவான எட்மண்டை விடுதலை செய்து அவருக்குரிய சொத்துகளை ஒப்படைத்தார். தம் தந்தையினால் கொல்லப்பட்ட தாமஸ் மௌபரேயின் சகோதரருக்கு (ஜான் மௌபரே) நாட்டில் ஹாம் எர்ல் அதிகாரத்தைக் கொடுத்

தார். தம் தந்தையின் ஆணைப்படி பட்டினி போட்டுக் கொல்லப் பட்ட முன்னாள் அரசர் இரண்டாம் ரிச்சர்டின் உடலை இலண்டன் மாநகருக்குக் கொணர்ந்து, சகல அரச மரியாதைகளுடன் மீண்டும் புதைக்கச் செய்தார். இக் கருணைக் காரியங்களால் ஐந்தாம் ஹென்றி, தம் தந்தையாரின் காலத்தில் லங்காஸ்டர் குடிக்கு இழைத்த தீமைகளினால் ஏற்பட்டிருந்த பகைமையைப் போக்கித் தமது ஆட்சியை நிலைப்படுத்திக் கொண்டார்.

தமது தந்தையாரின் காலத்தில் ஃபிரான்சுப் படையெடுப்புப் பயம் நீடித்திருந்தமையால் ஐந்தாம் ஹென்றி, இவரது ஆட்சிக் காலத்திலே நிலைமையைத் தலைகீழாக மாற்றி, இங்கிலாந்தை ஃபிரெஞ்சு நாட்டின்மீது படையெடுக்கச் செய்தார். சுருங்கக் கூறினால், ஐந்தாம் ஹென்றி, தம் ஆட்சிக் காலத்தில் இவரது தந்தையால் தொடங்கப்பட்ட பணியை முடித்தவராகவும் முடிக் காதவற்றைத் தொடங்கியவராகவும் விளங்கினார்.

இவரது செய்கைகளிலேயே மிக முக்கியமாக அமைந்தது, ஐந்தாம் ஹென்றியால் மீண்டும் தொடங்கப்பட்ட நூறாண்டுப் போராகும்.

**நூறாண்டுப் போரின் தொடர்ச்சி (கி. பி. 1422 வரை)**

தம் பதினைந்தாவது வயதிலேயே போர்க்களத்தைக் (ஷ்ரூஸ்பரி) கண்டிருந்த ஹென்றி, இயற்கையிலேயே ஒரு சிறந்த வீரர். போர்ப் பற்று மிகுதியாகக் கொண்டிருந்த இவ் வரசரின் காலத்தில் இப் போர் மீண்டும் தொடங்கியிருந்ததில் வியப்பெதுவு மில்லை.

மூன்றும் எட்வர்டு காலத்தில் ஆரம்பித்திருந்த நூறாண்டுப் போர், பல வெற்றி தோல்விகளுக்குப் பிறகு அவ்வரசரின் கடைசிக் காலத்தில்தான் ஓய்ந்திருந்தது. இரண்டாம் ரிச்சர்டின் காலத்தில் இங்கிலாந்து உள்நாட்டுப் பூசல்களால் பாதிக்கப்பட்டுப் பலவீன மான நிலையில் இருந்ததால், ஃபிரான்சு அரசரான ஆறும் சார்லஸ் மீண்டும் போரைத் தொடங்கியிருந்தார். ஃபிரெஞ்சுக் கப்பற்படை ஒயிட் தீவு, மற்றும் இங்கிலாந்தின் தெற்குக் கரைகளைத் தாக்கிய தோடல்லாமல், ரை (Rye), ஹேஸ்டிங்ஸ் என்ற நகரங்களையும் தீக்கிரையாக்கித் தேம்ஸ் முகத்துவாரத்தையடைந்து, எந்த ஒரு எதிர்ப்பும் இல்லாமல் திரும்பியிருந்தது. தொடர்ந்து சில ஆண்டு கள் இவ்விரு நாடுகளும் பலனற்ற போரிலே ஈடுபட்டுச் சளைத்தனவாக, கி. பி. 1396ஆம் ஆண்டில் ஒரு சமாதான உடன் படிக்கையை ஏற்றுக்கொண்டிருந்தன. இதன்படி, கலே, போர்டே,

பேயான் போன்ற ஃபிரெஞ்சு மாவட்டங்களை ஆங்கிலேயர் வைத்துக் கொள்வதென்றும், போரில் தாங்கள் ஏற்கெனவே இழந்து விட்டிருந்த ஃபிரெஞ்சுப் பகுதிகளை ஆங்கிலேயர் இனி கைப்பற்றக் கூடாதெனவும் ஏற்பாடாகியிருந்தது. இச் சமாதானத்தை உறுதிப்படுத்தும் வகையில் ஃபிரெஞ்சு இளவரசியை இரண்டாம ரிச்சர்டு மணந்து கொண்டிருந்தார்.

ஆனல், கி. பி. 1399 ஆம் ஆண்டில் ஏற்பட்டிருந்த புரட்சியின் காரணமாக இரண்டாம ரிச்சர்டு பட்டம் இழந்து, பின் கொல்லப் பட்டமையால் விதவையாகிவிட்ட இசெபெல்லா நாடு திரும்பியிருந்தாள். இந் நிகழ்ச்சிகளால் கொதிப்படைந்திருந்த ஆரும் சார்லஸ், அப்போது இங்கிலாந்தில் புதிய அரச மரபைத் தோற்றுவித்திருந்த நான்காம் ஹென்றியின் ஆட்சியை ஒப்புக்கொள்ளாதவராகச் சில சூழ்ச்சிகளில் ஈடுபடலானர். ஸ்காட்டியர்கள் தூண்டிவிடப்பட்டனர்; வெல்ஷ் கலகக்காரரான ஓவன் கிளன்டோவருக்கு உதவி தரப்பட்டது. சதிகாரரான மூத்த பெர்சிக்கும் ஃபிரெஞ்சு மன்னர் அடைக்கலம் கொடுத்துச் சிலகாலம் ஆதரித்தார். அவ்வப்போது ஃபிரெஞ்சுக் கப்பற்படை இங்கிலாந்தின் கரைகளைத் தாக்கி வந்தது. உள்நாட்டுக் குழப்பங்களிலே தம் கவனத்தைச் செலுத்தியிருந்த நான்காம் ஹென்றி மன்னர், ஃபிரெஞ்சுப் போரிலே செயல்பட முடியாமல் இருந்துவிட்டார்.

அடுத்துப் பட்டத்திற்கு வந்திருந்த ஐந்தாம் ஹென்றி, சில காரணங்களை முன்னிட்டு ஃபிரெஞ்சுக்காரர்கள்மீது போர் தொடுத்தார். இதுவே நூற்றண்டுப் போரின் அடுத்த கட்டமாக அமைந்தது.

**போருக்கான காரணங்கள் :** வீரதீரச் செயல்களிலே மிகவும் நாட்டம் கொண்டவராக இருந்த ஐந்தாம் ஹென்றி, தமது அரிய பண்புகளை நாட்டுமக்கள் தெரிந்துகொள்வதற்கேற்ப நூற்றண்டுப் போரை ஒரு நல்ல வாய்ப்பாகப் பயன்படுத்த விரும்பினர். தம் தந்தையாரின் காலத்தில் தகராறு செய்துவந்த பிரபுக்களின் கவனத்தைத் திசை திருப்பவும் ஐந்தாம் ஹென்றிக்கு இப் போர் அவசியமாயிருந்தது. புரட்சியினல் மகுடம் பெற்றுத் தம் தந்தையாரால் நிறுவப்பட்ட லங்காஸ்டர் அரச மரபை வலுப்படுத்திக் கொள்ளவும் இப்போர் ஐந்தாம் ஹென்றிக்குத் தேவையாக இருந்தது.

இதல்லாமல், நாட்டின் பல்தரப்பட்ட மக்களிடையேயும், தொடங்கப்போகும் போருக்கு ஆதரவு இருந்தது. போரிலே பெயரும் புகழும் அடைய விரும்பிய பிரபுக்களும், போரினல்

கொள்ளையடிக்கக்கூடிய வாய்ப்பை எதிர்நோக்கிய பிரபுக்களும் இப்போரை வரவேற்றார்கள். போர் ஒன்று ஏற்பட்டால், மக்களின் கவனம் திருச்சபை விவகாரத்திலிருந்து திசை திரும்புமென எண்ணி, லாலார்டுகளின் பிரச்சாரத்தால் தாக்கப்பட்டு வந்த திருச்சபையினரும் நூறாண்டுப் போரை எதிர்நோக்கினார்கள். ஃபிரென்சுக் கப்பல்களின் தாக்குதல்களால் இடர்ப்பட்டு வந்த ஆங்கில வர்த்தக சமூகத்தினரும் பழிக்குப் பழிதீர்க்கும் பொருட்டு இப் போரை விரும்பியவர்களாய் இருந்தனர்.

தங்கள் நாட்டின் கீர்த்தியை ஐரோப்பிய விவகாரங்களில் நிலைநிறுத்த வெற்றிகரமான போரைத் தேசிய உணர்ச்சியால் உந்தப்பட்டிருந்த ஆங்கிலப் பொதுமக்களும் விரும்பினர். ஒரு வெற்றிப் போரைத் தொடங்கவேண்டிய அவசியத்திலிருந்த ஐந்தாம் ஹென்றிக்கு ஃபிரான்சில் அப்போது நிலவியிருந்த அவல நிலைமை தெம்பூட்டியது.

ஃபிரான்சை ஆண்டுவந்த நான்காம் சார்லஸ் (கி. பி. 1380–1422) சித்தப்பிரமை நோயினால் அல்லலுற்றவராக இருந்துவந்தார். இந் நோயின் கடுமை கோடைக்காலத்தில் அதிகமாக இருந்தமையால், ஒவ்வோர் ஆண்டும் நான்கு அல்லது ஐந்து மாதங்கள் இவ் வரசர் ஆளும் தகுதியே இல்லாதவரானார். இவர் பிள்ளைகளும் போதிய வயதினராக இல்லாமலிருந்ததால், நாட்டில் காப்பாளர் ஆட்சி (பகர ஆட்சி) அமைக்க வேண்டி, இரு பிரபுக்கள் போட்டியிட்டனர். ஃபிரெஞ்சு அரசரின் சொந்த சகோதரர், ஆர்லியன்ஸ் (Orleans) பிரபுவான லூயியும், இவ் வரசரின் சிற்றப்பனின் மகன், பர்கண்டி (Burgandy) பிரபுவான 'பயமறியா' ஜானும் (John the fearless) இவ் விரு பிரபுக்கள் ஆவர். கி. பி. 1407 ஆம் ஆண்டில், ஆர்லியன்ஸ் பிரபுவான லூயி பாரிஸ் நகர் தெரு ஒன்றில் ஜானால் ஏவிவிடப்பட்ட ஆளொருவனால் கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, இவ் விரு பிரபுக்களின் ஆதரவாளர்களிடையே சண்டையும் சச்சரவும் தோன்றி ஃபிரெஞ்சு நாடே அல்லோல கல்லோலப்பட்டு வந்தது. இந்த உள்நாட்டுப் போரைத் தவிர்க்க முடியாமலும் தடுக்க முடியாமலும் அரசர் ஆறாம் சார்லஸ் திண்டாடி வந்தார்.

இந்த அவல நிலையைத் தம் அரிய வாய்ப்பாக ஐந்தாம் ஹென்றி பயன்படுத்திக் கொள்ள விரும்பினார். நாடு பிளவுபட்டிருந்த நிலையில் போரை விரும்பாத பிரெஞ்சுக்காரர்கள் ஐந்தாம் ஹென்றிக்கு ஒரு சமாதானத் திட்டத்தைச் சமர்ப்பித்தனர். இதன்படி, ஆறாம் சார்லசின் மகளும், ஃபிரெஞ்சு இளவரசியுமான

காதரீன் (Cetherine) என்பவளை ஐந்தாம் ஹென்றி மணந்து கொள்ளவேண்டுமென்றும், சீதனமாக 6,00,000 தங்கக் காசுகளைக் கொடுப்பதாகவும் (முன்பு ஆங்கிலேயர்களால் போரில் இழக்கப் பட்டிருந்த) கைனி, காஸ்கனி, அக்குவிடெயின் பகுதிகளை இங்கிலாந்திடம் ஒப்படைப்பதாகவும் அறிவிக்கப்பட்டது.

இவ் வுடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள மறுத்த ஐந்தாம் ஹென்றி, சோம் ஆற்றின் கரையிலிருந்த பிரன்னிஸ் (Pyrenees)மலை யெல்லைக்குள்பட்ட மொத்த நிலப்பகுதி ஃபிரான்சையே தமக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டதால், ஃபிரெஞ்சு அரசாங்கம் இக் கோரிக்கையை நிராகரித்து விட்டது.

எப்படியும் போர் தொடுக்கவேண்டுமென்ற தீர்மானத்தி லிருந்த ஐந்தாம் ஹென்றி, முன்பு தம் கொள்ளுப்பாட்டனர் மூன்றும் எட்வர்டு செய்ததைப் போலவே, அதே காரணத் தைக் காட்டி, ஃபிரெஞ்சு அரியணைக்கு உரிமை கொண்டாடினர். பல மாதப் பேச்சு வார்த்தைகளுக்குப் பின்னர், இனி போர் தவிர்க்க முடியாது என்ற நிலைமையில் ஐந்தாம் ஹென்றி, ஃபிரான்சு நாட்டுடன் இருந்த உறவை அறுத்துக்கொண்டு போருக்குத் தயாரானர்.

**போரின் போக்கு**

கி. பி. 1415ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றம் அரசருக்குப் போர் தொடுக்க அனுமதியளித்ததோடு, அதற்குத் தேவையான செலவையும் ஏற்றுக்கொள்ள முன் வந்தது. போருக்கு வேண்டிய கப்பல்களையும் வீரர்களையும் பணத்தை யும் மிகவும் பிரயாசைப்பட்டு ஐந்தாம் ஹென்றி சேகரிக்கலானர். தம் அரண்மனையிலிருந்த ஆபரணங்களையும் அடகு வைத்துப் போர்ச் செலவுக்கு அரசர் பணம் திரட்டலானர். இங்கிலாந்தில் ஃபிரெஞ்சுக்காரர்களால் நிறுவப்பட்டிருந்த மடாலயங்களின் சொத்துகளையும், தம் போர்ச் செலவுக்காகப் பாராளுமன்றத் தின் சட்டத்தின் மூலம் அபகரிக்கலானர். வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டு, இளமைத் துடிப்புக்கொண்ட ஐந்தாம் ஹென்றி, தம் 30,000 வீரர்களுடன் ஆங்கிலக் கால்வாயைக் கடந்து ஹேவ்ரி (Havere) என்ற ஃபிரெஞ்சுக் கரையை அடைந்தார்.

ஹார்ஃப்ளூர் முற்றுகை: போரின் முதல் கட்டமாக ஆங்கிலப் படைகள் ஹார்ஃப்ளூர் (Harfleur) என்ற கோட்டை நகரை முற்றுகையிட்டன. இந் நகர மக்கள் வீராவேசமாக

எதிர்த்துச் சண்டையிட்டும் ஐந்து வார முற்றுகைக்குப் பின்னர், ஐந்தாம் ஹென்றி இந் நகரைக் கைப்பற்றி வெற்றி வாகை சூடினர். ஃபிரான்சின கோடை வெப்பத்தாலும், கூடாரக் காய்ச்சல் (Tent fever) என்னும் நோயினலும பல ஆங்கில வீரர்கள் இச் சமயத்தில் காலயாகி விட்டனர். சிலர் இங்கிலாந்துக்குத் திருப்பி அனுப்பப்பட்டனர். எஞ்சியிருந்த வீரர்களும் களைத்திருந்தனர். ஃபிரெஞ்சுத் தலைநகரான பாரிஸ் நகரைத் தாக்கும் திட்டத்தைக் கைவிட்டுப் பாதுகாப்புத் தேடி, கலே நகரத்தை நோக்கி ஐந்தாம் ஹென்றி தம் படைகளைச் செலுத்தினர். ஹார்ஃப்ளூர் நகரைக் காத்திருந்தவர்கள் போக, ஐந்தாம் ஹென்றியின் படையில் 4,000 வில்லாளிகள் உள்பட சுமார் 6,000 வீரர்களே இருந்தனர். கலே நகரத்தை நோக்கிச் சென்ற ஆங்கிலப்படைகள் கொள்ளைச் செயல்களில் ஈடுபடாமல் பகைவர்கள் மிகுதியாக இல்லாத வழியில் ஹென்றியால் நடத்திச் செல்லப்பட்டன.

வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்த சோம் நதியைப் பெரோன் (Peronne) என்னுமிடத்தில் கடந்த ஆங்கிலப் படை, பிக்கார்டி (Picardy) என்ற பகுதியின் வழியாகக் கலே நகரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

**அஜின்கோர்ட் சண்டை:** இதற்கிடையே தங்கள் நாட்டுக்கு அந்நியப் படையெடுப்பினல் ஏற்பட்ட அபாயத்தைப் போக்க, அதுவரையில் ஒற்றுமையிழந்திருந்த ஆர்லியன்சுகளும், பர்கண்டியர்களும் ஒன்றுபட்டு ஃபிரெஞ்சு அரசருக்கு உதவியாகப் பெரும் படையை அனுப்பியிருந்தனர் இந்த ஃபிரெஞ்சுப் படையே, கலேய்க்குச் செல்லும் வழியிலிருந்த அஜின்கோர்ட் (Agincourt) என்னுமிடத்தில் ஆங்கிலேயர்களை முன்னேற விடாமல் தடுத்தது. எதிர்த்து நின்ற ஃபிரெஞ்சுப் படையினர் ஆங்கிலப் படையைவிட எண்ணிக்கையில் மிக அதிகமாக இருந்தனர். ஆனல் கிரெசி, பாயிட்டர்ஸ் சண்டைகளில் செய்த அதே தவறுகளை மீண்டும் ஃபிரெஞ்சுக்காரர்கள் செய்தனர். தற்காப்பு முறையைப் பின்பற்றிய ஐந்தாம் ஹென்றி, தம் வில்லாளிகளையே பெரிதும் நம்பியிருந்தார். குதிரைப் படைகளைக் கொண்டு சண்டையைத் தொடங்கியிருந்த ஃபிரெஞ்சுக்காரர்கள், இடையில் இருந்த சகதி நிறைந்த நிலங்களைக் கடந்து வரும் போது வில்லாளிகளால் வீழ்த்தப்பட்டனர். அவர்களைப் பின்தொடர்ந்து வந்த காலாள் படைகளுக்கும் அதே கதி ஏற்பட்டது.

கி. பி 1415, அக்டோபர் 25 ஆம் நாள் நடந்து முடிந்த இச் சண்டை, ஐந்தாம் ஹென்றியின் போர்த் திறமைக்குச் சிறந்த

வெற்றியாக அமைந்தது. ஆங்கிலப் படையினருக்கு மிகச் சொற்பச் சேதமே ஏற்பட்டிருக்க, இரண்டு இளவரசர்கள், 1,500 நைட் வீரர்கள் உள்பட 10,000-க்கும் மேற்பட்ட ஃபிரெஞ்சு வீரர்கள் கொல்லப்பட்டனர். ஏராளமானோர் ஆங்கில வீரர்களால் சிறைபிடிக்கப்பட்டனர்.

தம் வீரத் தலைமையினாலும், சமயோசிதப்புத்தியினாலும் பெரும் வெற்றி பெற்றிருந்த ஐந்தாம் ஹென்றி, நான்கு நாள் கழித்து




அஜின்கோர்ட் சண்டை (1415)

ஆங்கிலப் படைகளுடன் கலே நகரத்தைப் பத்திரமாகச் சென்றடைந்தார். தம்மிடம் போர்க் கைதிகளாக இருந்த ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு மீட்புப் பணம் பெறும்படி கட்டளையிட்டுவிட்டு, சில நாள்களில் ஐந்தாம் ஹென்றி நாடு திரும்பிவிட்டார். அஜின் கோர்ட் வெற்றியால் ஆங்கிலேயர்களுக்கு (ஹார்ஃப்ளூர், கலே தவிர) எவ்விதப் பலனும் ஃபிரான்சில் கிடைக்கவில்லையாயினும், இவ் வெற்றி அரசர் ஐந்தாம் ஹென்றியின் புகழைப் பரப்பியது. அஜின்கோர்ட்டில் அரசர் பெற்ற பெரு வெற்றியை இங்கிலாந்தில் ஆங்கில மக்கள் ஒரு தேசீய விழாவாகக் கொண்டாடினர். ஐந்தாம் ஹென்றியின் பெருமைக்கு மெருகு ஊட்டுவது போல், பேரரசர் சிகஸ்மாண்டு (Emperor Sigismand) அப்போது கிறிஸ்தவ சமயத்தில் ஏற்பட்டிருந்த பெரும் பிளவை (Great

Schism) தீர்த்து, கிறிஸ்தவ உலகத்தின் ஒற்றுமையையும் அமைதியையும் நிலைநாட்ட இவ்வரசரின் உதவியை நாடி இங்கிலாந்துக்கு வருகை புரிந்திருந்தார்.

**நார்மண்டி படையெடுப்பு:** தமக்கு மேலும் பெருமையைத் தேடிக்கொள்ளவும், அரசர் ஜான் காலத்தில் ஆங்கிலேயர்களால் இழக்கப்பட்ட நார்மண்டியை மீண்டும் கைப்பற்றவும், கி பி. 1417அம் ஆண்டில் ஐந்தாம் ஹென்றி மீண்டும் ஃபிரான்சின் மீது படையெடுத்தார். ஃபிரான்ஸ் நாட்டில் ஆர்லியன்ஸ்—பர்கண்டி கட்சியினர்களிடையே தொடர்ந்து பிளவு ஏற்பட்டிருக்க, நார்மண்டியை அடைந்த ஐந்தாம் ஹென்றி, தப் படைகளுடன், கேன் (Caen), லிசக்ஸ் (Lisieux), பேயாக்ஸ் (Bayeux), ஆலன்சன், மார்ட்டெயின், செயின்ட்லோ, கவுடான்ஸஸ், செர்பாக், இறுதியாக ரூவன் (தலைநகர்) நகரையும் கைப்பற்றியதால், நார்மண்டி பகுதியே ஐந்தாம் ஹென்றி வசமாகியது.

எவ்விதக் சடும் எதிர்ப்புமின்றி வெற்றிமேல் வெற்றி பெற்று வரும் ஹென்றியுடன் மியூலான் (Meulan)நகரில் பர்கண்டி டியூக்கான 'பயமறியா' ஜான் சமாதானம் செய்து கொள்ள விரும்பினார். ஆயினும், சமாதானத்திற்குப்பரிசாக முன்பு பிரெடிக்னி உடன்படிக்கையால் மூன்றாம் எட்வர்டுக்குக் கொடுக்கப்பட்டிருந்த நிலங்கள் அத்தனையும், ஐந்தாம் ஹென்றி கேட்கலானார். இக்கோரிக்கையை ஏற்கமுடியாத நிலையிலிருந்த ஜான், எப்படியும் ஆங்கிலேயர்களைப் ஃபிரான்சு நாட்டிலிருந்து விரட்ட முடிவு செய்தார்.

அந்நியர்களான ஆங்கிலேயர்களைப் ஃபிரெஞ்சு மண்ணிலிருந்து விரட்ட வேண்டுமெனின், நாட்டிலே இனி பிளவு நீடிக்கக் கூடாதென்ற நல்லெண்ணத்தில் வலிய ஆர்லியன்ஸ் கோஷ்டியுடன் சமரசம் நாடினார். யோன் ஆற்றங்கரையிலிருந்த மான்டிரோ (Montereu) என்னுமிடத்தில் இரு கட்சியினரும் கூடிப் பேசுவதாக ஏற்பாடு செய்யப்பட்டது. இப்போது, ஆர்லியன்ஸ் (ஆர்மானியாக்) கட்சியினருக்கு இளவரசர் சார்லஸ் (ஆறாம் சார்லசின் மகன்) தலைவராக இருந்தார். ஏற்கெனவே இருந்து வந்த கடும் பகையின் காரணமாக, பர்கண்டி டியூக்கான ஜான் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கும் முன்னர், இளவரசன் சார்லசுக்கு மண்டியிட்டு வணக்கம் செலுத்திய நேரத்தில், சில அர்மானியர்கள் (ஆர்லியன்கள்) இவரை வெட்டிக் கொன்று விட்டனர் (கி. பி. 1419).

**பர்கண்டியர் நட்பு:** பர்கண்டி டியூக் இங்ஙனம் அநியாயமாகக் கொலை செய்யப்பட்டதால், அவரது மகனும் அடுத்த

டியூக்குக்குமான பிலிப் என்பவர் (Philip the Good), ஆங்கிலேயர் பக்கம் சேர்ந்து கொண்டார். கொலைக்கு உடந்தையாக இருந்த இளவரசர் சார்லசை ஃபிரான்சின் அடுத்த வாரிசாக ஏற்றுக் கொள்வதைவிட, ஐந்தாம் ஹென்றியையே சித்த பிரமையினால் பீடிக்கப்பட்ட ஆறும் சார்லசின் அடுத்த வாரிசாக்குவது என்ற முடிவுக்குப் பர்கண்டியர்கள் வந்து விட்டனர். ஃபிரான்சின் வடக்கில் இருந்த பர்கண்டிப் பட்டணங்களில் எல்லாம் ஐந்தாம் ஹென்றி வரவேற்கப்பட்டார். பர்கண்டியர்களின் செல்வாக்கிற் குட்பட்டிருந்த பாரிஸ் நகரில் தங்கியிருந்த ஃபிரெஞ்சு அரசரான ஆறும் சார்லசை வற்புறுத்தி, பிலிப் ஓர் உடன்படிக்கைக்கு ஏற்பாடு செய்தார். இதுவே ட்ராயிஸ் உடன்பாடு (Treaty of Troyes) எனப்படுகிறது.

**ட்ராயிஸ் உடன்பாடு:** *கி. பி. 1420, மே, 20ஆம் நாள் பாரிசுக்கு அருகேயுள்ள ட்ராயிஸ் நகரின் திருக்கோயிலில், ஏற்பாடாகியிருந்த இவ் வுடன்படிக்கை மூலம் பல வெற்றி களாலும் கிடைத்திருக்க முடியாத பயன்கள் ஐந்தாம் ஹென்றிக்குக் கிடைத்தன. இந்த உடன்படிக்கையின்படி ஐந்தாம் ஹென்றி, ஃபிரெஞ்சு இளவரசி காதரீனை மணந்து கொள்ள வேண்டுமெனவும் ஆறும் சார்லசின் சார்பாக ஐந்தாம் ஹென்றி ஃபிரான்சு நாட்டுக்குக் காப்பாளராக இருக்க வேண்டு மென்றும், ஃபிரெஞ்சு அரசரின் மரணத்திற்குப் பிறகு ஃபிரான்சின் வாரிசுரிமை ஐந்தாம் ஹென்றிக்கும் இவரது சந்ததியர்களுக்கும் சேரும் என்றும் ஏற்பாடாகியது. ஆறும் சார்லசின் மகன் இளவரசர் சாரலஸ் பட்ட உரிமையிலிருந்து விலக்கப்பட்டார்.*

தம் வாழ்நாளில் மறக்க முடியாத சிறப்பைக் கொடுத் திருந்த இவ் வுடன்பாட்டையொட்டி, வீரத்திருமகனை ஐந்தாம் ஹென்றி பாரிஸ் நகரத்திற்குச் சென்றார். இவர் ஃபிரெஞ்சுப் பாராளுமன்றமான முப்பேராயத்தை (Estates general) கூட்டிக் காப்பாளர் என்ற முறையில் சில சீர்திருத்தச் சட்டங்களை அறிவித்து, நாட்டு நிர்வாகத்தைச் சீர்படுத்த முயன்றார். மேலும், அக் காலத்தில் தாம் ஃபிரெஞ்சு பழக்க வழக்கங்களுக்கு முரணாக நடந்து கொள்வதில்லையென்றும் வாக்களித்தார். தம் மனைவி காதரீனுடன் இதே ஆண்டு, டிசம்பர் மாதம் நாடு திரும்பி யிருந்த ஐந்தாம ஹென்றியை ஆங்கில மக்கள் வெற்றித் திருமகனாக வானுயரப் போற்றினார்கள். இவர்கள் சென்ற இடமெல்லாம் வாழ்த்தும் வரவேற்பும் கொடுக்கப்பட்டன; நாடே மகிழ்ச்சியாரவாரத்தில் திளைத்திருந்தது.

கி. பி. 1421ஆம் ஆண்டில், ஆங்கிலேயர்களின் மகிழ்ச்சியைக் குலைக்கும்படியான ஒரு செய்தி எட்டியது.

**இறுதிப் படையெடுப்பு:** ஐந்தாம் ஹென்றி, ஃபிரான்சு நாட்டைவிட்டுப் புறப்படுவதற்கு முன்னர், தம் பிரதிநிதியாகத் தமது சகோதரர் கிளாரன்ஸ் டியூக் தாமஸ் என்பவரைப் படைகளுடன் விட்டுவிட்டு வந்திருந்தார். ட்ராயிஸ் உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள மறுத்த ஆர்மானியக் கட்சியினர், சில ஸ்காட்டிய வீரர்களின் துணையுடன், இளவரசர் சார்லஸ் தலைமையில் இந்த ஆண்டு மார்ச் 22ஆம் தேதியன்று டியூக் தாமசையும் அவரது படையினரையும் பாஹி (Beaque) என்னுமிடத்தில் சுற்றி வளைத்துக் கொன்றுவிட்டனர். அஜின்கோர்ட் சண்டைக்குப் பிறகு ஃபிரெஞ்சுக்காரர்கள் பெற்றிருந்த முதல் வெற்றியாக இந்நிகழ்ச்சி அமைந்தது. நிலைமையை உடனடியாகச் சரிக்கட்டாவிட்டால், தாம் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை இழக்க நேருமென்று நினைத்த ஐந்தாம் ஹென்றி, மூன்றாம் முறையாகத் தம் வீரர்களுடன் ஃபிரான்சை நோக்கிச் சென்றார்.

கி. பி. 1421ஆம் ஆண்டு, ஜூலை மாதத்திற்குள்ளாகவே ஆர்மானியர் கட்சியின் வசமிருந்த மத்திய ஃபிரெஞ்சுப் பகுதிகளை ஐந்தாம் ஹென்றி கைப்பற்றி, இளவரசர் சார்லஸை லூவர் ஆற்றுக்கு அப்பால் விரட்டியடித்திருந்தார். ஆயினும், மியோக்ஸ் (Meaux) நகர முற்றுகையே ஐந்தாம் ஹென்றிக்குப் பெரும் சோதனையாக இருந்தது. கி. பி. 1421, ஜூலை மாதம் தொடங்கிய முற்றுகை, அடுத்த ஆண்டு மார்ச் மாதம்வரை நீடித்தது. பல இன்னல்களுக்கிடையே ஐந்தாம் ஹென்றி முற்றுகையைத் தொடர்ந்தார்; இவரது உடல் நிலையும் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. இறுதியில், மியோக்ஸ் நகரம் பணிந்தபோது, அரசர் ஹென்றி கொடுமையான முறையில் அந்நகர ஆளுநரையும், அவரது துணைவர்களையும் கொன்று தன் கோபத்தைத் தீர்த்துக் கொண்டார்.

மியோக்ஸ் நகர முற்றுகையின்போது போதிய உணவில்லாமலும் சரியான கவனிப்பு இன்றியும் அவதிப்பட்ட ஐந்தாம் ஹென்றி, களைப்பு மேலிட்டவராகச் சோர்ந்து உடல் நலம் கெட்டுப் பாரிஸ் நகரையடைந்தார். தமக்கு மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறதென்பதை உணர்ந்தவராக ஐந்தாம் ஹென்றி, சில மாதங்களுக்கு முன்னர் தமக்குப் பிறந்த ஆண்மகவைத் தம் அடுத்த வாரிசாக அறிவித்துவிட்டு, கி. பி. 1422, ஆகஸ்டு 31 ஆம் நாள் வின்சென்னஸ் (Vincennes) கோட்டையில் (பாரிஸ்) காலமானார்.

தமது முப்பத்தைந்தாவது வயதில் மரண மடைந்த ஐந்தாம் ஹென்றி, இடைக்கால ஆங்கில மன்னர்களுக்குள் பெரும் புகழ் பெற்றவராவர். உயர்ந்த வீரராகவும் போர்த்திறமை கொண்ட தலைவராகவும் நிர்வாகச் செம்மலாகவும் பண்புள்ள அரசராகவும் வாழ்ந்த இம் மன்னரின் ஆட்சிக் காலமே ஒரு வெற்றிபபட்டியலாக அமைந்திருந்தது.

## ஆறும் ஹென்றி-(நூறாண்டுப் போரின் இறுதிக்கட்டம் (கி. பி. 1422-51)

ஆங்கில வரலாற்றில் பரிதாபத்திற்குரிய ஓர் அரசராகக் கருதப்படும் ஆறும் ஹென்றி, தமது தந்தை (ஐந்தாம் ஹென்றி) வின்செஸ்ஸெஸ் கோட்டையில் இறந்தபோது, ஒரு வயதுகூட நிரம்பாத குழந்தையாக இருந்தார். காலம் சென்ற அரசரின் விருப்பப்படியே இப் பாலகன், இங்கிலாந்தில் அடுத்த அரசராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

ஐந்தாம் ஹென்றி காலமாகி ஆறு வாரங்கள் கழித்து அவரது மாமனாரும் (ஆறும் ஹென்றியின் தாய்வழிப் பாட்டனார்) ஃபிரெஞ்சு அரசருமான ஆறும் சார்லசும் மரணமடைந்ததால், ட்ராயிஸ் உடன்படிக்கையின்படி இப் பாலக அரசரான ஆறும் ஹென்றி, ஃபிரான்சு நாட்டுக்கு அரசராக அறிவிக்கப்பட்டார்.

ஒரு வயதுகூட நிரம்பப்பெறாத ஆறும் ஹென்றி, இங்ஙனம் இவ்விரு நாடுகளுக்கும் அரசராக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தும், இவரது காலத்திலே இந்தப் பட்டத்து உரிமைகளை இவ் வரசர் இழக்க வேண்டியிருந்தது ஒரு சோக வரலாறாக அமைகிறது.

இவரது தந்தை ஐந்தாம் ஹென்றியின் வரலாறு செந்நீரால் எழுதப்பட வேண்டியதென்றால், ஆறும் ஹென்றியின் வரலாறு கண்ணீரால் எழுதப்படவேண்டும். அரசர் இளம் வயதினராதலால், ஆறும் ஹென்றியின் சிறிய தந்தையான ஜான் (பெட்ஃபோர்டு டியூக்) ஃபிரான்சு நாட்டில் அரசப் பிரதிநிதியாக அமர்த்தப்பட்டார். இன்னொரு சிறிய தந்தையான ஹம்பிரி (குளௌசெஸ்டர் டியூக்) அரசரின் காப்பாளராக இங்கிலாந்தில் பதவி பெற்றார். எல்லாம் சுமுகமாக நடைபெறுமென்ற நம்பிக்கையினடிப்படையில் ஆறும் ஹென்றியின் ஆட்சி தொடங்கியது.

**நூறாண்டுப் போர் மீண்டும் தொடங்குதல்:** ஃபிரான்சில் அரசப் பிரதிநிதியாக இருந்த பெட்ஃபோர்டு டியூக் (ஜான்),

வீரமும் விவேகமும் ஆர்வமும் பெருந்தன்மையும் ஒருங்கே பெற்றவர். ஃபிரான்சிலிருந்த ஆங்கிலப் பகுதிகளைக் காப்பாற்ற வேண்டியதே இவரது தலையாய கடமையாக இருந்தது.

ட்ராயிஸ் உடன்படிக்கையை ஒப்புக்கொள்ளாதிருந்த இளவரசர் சார்லஸ், தம் தந்தையாரும் ஃபிரெஞ்சு அரசருமான ஆறும் சார்லஸ் காலமானதையொட்டித் தம்மையே ஃபிரெஞ்சு நாட்டின் அரசராக, ஏழாம் சார்லசாக அறிவித்துக் கொண்டு விட்டார். இவருக்கு ஆதரவாக ஆர்மானியர்கள் (ஆர்லியன்ஸ் கட்சியினர்) இருந்தனர். ஃபிரான்ஸ் நாட்டில் லூவார் (Loire) ஆற்றுக்குத் தெறகேயுள்ள பிரதேசத்தை, பௌர்ஜஸ் (Bourges) என்னுமிடத்திலிருந்து ஏழாம் சார்லஸ் ஆண்டுவந்தார்.

**ஆங்கில-பர்கண்டி உறவு:** லூவார் ஆற்றுக்கு வடக்கே பர்கண்டியர்களின் உதவியுடன் பெட்ஃபோர்ட் டியூக்கின் தலைமையில் ஆங்கிலேயர் ஆதிக்கம் பெற்றிருந்தனர். ஆங்கிலேயரின் ஆட்சி ஃபிரான்சில் நிலைபெற்று, மேலும் பரவ வேண்டுமெனின், பர்கண்டியர்களின் உதவி மிக அவசியமெனக் கருதிய பெட்ஃபோர்ட் பிரபு, இதற்கேற்ப பர்கண்டி பிரபுவான பிலிப்பின் தங்கை ஆன் (Anne) என்பவரை மணம் செய்து கொண்டார். இத் திருமணம் ஆங்கில-பர்கண்டியரின் உறவை மேலும் உறுதிப்படுத்தியது. மேலும், பிரிட்டானியா டியூக்குடனும் பெட்ஃபோர்ட் பிரபு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு ஃபிரான்சிலிருந்த ஆங்கிலேயப் பகுதிகளுக்கு அவர் மூலமாக எவ்வித இடையூறும் வராமல் தடுத்திருந்தார். லூவர் ஆற்றுக்குத் தெற்கே ஆட்சி புரிந்துவந்த ஏழாம் சார்லஸின் அதிகாரத்தைக் குலைத்து, அப் பகுதிகளையும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வரவேண்டுமென பெட்ஃபோர்ட் டியூக் நினைத்தார். இதற்கிடையே தம் பகுதியின் எல்லைகளைத் தாக்க வந்த ஏழாம் சார்லசின் படைகளை பர்கண்டியர்களின் உதவியுடன் கிரவான்ட் (Crevant) என்னுமிடத்தில் கி. பி. 1423ஆம் ஆண்டில் பெட்ஃபோர்ட் தம் வீரர்களுடன் தோற்கடித்தார். அடுத்த ஆண்டு, நார்மண்டிப் பகுதிகளில் ஆர்மானியர்களின் உதவியுடன் தாக்க வந்த ஏழாம் சார்லஸின் படைகள் வெர்னாயில் (Verneuil) என்னுமிடத்தில் மீண்டும், பெட்ஃபோர்டு பிரபுவினால் வெல்லப் பட்டன. இதுவரை தற்காப்புச் சண்டைகளில் ஈடுபட்டிருந்த பெட்ஃபோர்டு பிரபு, லூவார் ஆற்றைக் கடந்து ஏழாம் சார்லசின் பகுதிகளைத் தாக்க ஆகரமிப்புப் போரில் இறங்க முனைந்தார்.

**ஆர்லியன்ஸ் முற்றுகை:** ஏழாம் சார்லசின் ஆட்சிக்குட் பட்டிருந்த மத்திய, தென் ஃபிரான்சின் பகுதிகளை எளிதில் கைப்பற்றவசரகேற்ப நுழைவாசலாக இருந்த ஆர்லியன்ஸ் (Orleans) நகரமே ஆங்கிலேயரின் குறிக்கு இலக்காக இருந்தது. படையெடுப்பு முயற்சியிலேயே மும்முரமாக பெட்ஃபோர்ட் பிரபு ஈடுபட்டிருக்கும்போது இவர் உடனடியாக இங்கிலாந் துக்குச் செல்ல வேண்டியிருந்தது.

இங்கிலாந்தில் அரசரின் காப்பாளராக இருந்த கிளௌ செஸ்ட்டர் பிரபுவுக்கும் அரசரின் அவைக்குத் தலைவராயிருந்த வின்செஸ்ட்டர் போஃபோர்ட் (Beaufort of Winchester) என்ப வருக்கும் அடிக்கடி ஏற்பட்டு வந்த சச்சரவைத் தீர்த்து, நாட்டு நிர்வ கத்தைச் சீராக இயங்கச் செய்து பெட்ஃபோர்டு நாடு திரும்பியிருந்தார்.

பெட்ஃபோர்டு பிரபு ஃபிரான்சில் இல்லாதிருக்க ஆங்கிலேயப் படை சாலிஸ்பரி பிரபுவான மான்டேகு (Moutague) என்பவரின் தலைமையில் ஆர்லியன்ஸ் நகரை அடைந்து முற்றுகையைத் தொடங்கியது. சுமார் 4,000 வீரர்களையே கொண்டிருந்த சாலிஸ்பரி பிரபு, தம் முற்றுகையால் இந் நகரை நெருக்கிக் கொண்டுவர, எவ்வித உதவிப் படையையும் அனுப்பாது 7ஆம் சார்லஸ் சினன் (Chinon) என்ற நகரில் செயலற்றுக் கிடந்தார். இவ்வரசர் சிற்சில சமயங்களில் எல்லையைக் கடந்து ஆங்கிலப் பகுதிகளைத் தாக்கி வந்தாரேயொழிய, அந்நியர்களை விரட்டித் தம் நாட்டை மீட்டு, ஐக்கியப்படுத்த வேண்டுமென்ற எண்ணமும் இவருக்கு மற்றவர்கள் சொல்லியே தெரிய வேண்டியிருந்தது. மேலும், இவர் ஆண்ட பகுதிகளில் நிலைமை மிகவும் சீர்கெட் டிருந்தது; எந்த நேரத்தில் ஆங்கிலேயரின் படைகள் இவரைச் சூழ்ந்துகொள்ளுமோ என்ற அபாய நிலைமையும் இருந்தது. ஆர்லியன்ஸ் நகர் எந்த நேரத்திலும் ஆங்கிலேயர்களால் கைப்பற்றப்படக்கூடும்; இந்த நகர் வீழ்ச்சியடைந்தால், தமக் கிருந்த ஃபிரெஞ்சுப் பகுதியில் தமது ஆட்சியே அஸ்தமிக்கக்கூடு மென்பதை உணர்ந்து செய்வதறியாமல் ஏழாம் சார்லஸ் திகைத்துக்கொண்டிருக்க, இவரைத் தேடி அவைக்கு ஒரு பெண் வந்தாள்.

**ஜோன்–டி-ஆர்க் (Joan De Arc):** வரலாற்றில் ஓர் அரிய நிகழ்ச்சியைச் செய்து காட்டிய இந்த அதிசயப் பெண்ணே ஜோன் ஆஃப் ஆர்க் (Joan of Arc) என்பவளாவள்

லொரெயின் (Lorraine) பகுதியிலிருந்த தோம்ரெமி (Domremy) என்னுமிடத்தில் கி. பி. 1412ஆம் ஆண்டில் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்த ஜோன், தன் தந்தையாரின் ஆடுகளை ஒரு குன்றின் சரிவிலே மேய்த்துக் கொண்டிருக்கும்போது, அதிசயிக்கத்தக்க ஒரு சம்பவம் நடந்தது. செயின்ட் காதரீன், செயின்ட் மைக்கேல் போன்ற தேவ தூதுவர் இவளது அகக் கண்முன் தோன்றி, நாட்டின் தொல்லைகளை நீக்கி, எதிரிகளை விரட்டி ஃபிரான்சை ஒற்றுமைப் படுத்த வேண்டுமென்று ஆணை பிறப்பித்ததை ஜோன் தன் அகச் செவியில் கேட்டாள். நாள்தோறும் இக் காட்சிகளையும், ஆணைகளையும் ஜோன் கண்டவளாகவும், கேட்டவளாகவும் இருக்க, கி. பி. 1429 ஆம் ஆண்டு ஒரு நாள் தம் பெற்றோர் தடுத்தும் கேளாமல் ஆங்கிலேயர் ஆதிக்கத்திலிருந்த வடஃபிரான்சைக் கடந்து, வாகோவியுர்ஸ் (Vaucouleurs) என்னுமிடத்தையடைந்து, அதன் ஆளுநரிடம் தான் வந்த நோக்கத்தைச் சொல்லி, ஏழாம் சார்லஸ் தங்கியிருக்குமிடத்திற்குத் தன்னை உடனே அனுப்பி வைக்கும்படி ஜோன் கேட்டுக் கொண்டாள். தன்னம்பிக்கையும், கடமையுணர்ச்சியும் கொண்ட ஜோனை அந்த ஆளுநர், தமது ஆள்களுடன் ஏழாம் சார்லஸ் தங்கியிருந்த சினோன் நகருக்கு அனுப்பிவைத்தார்.

'ஆங்கிலேயர்களை விரட்டி உம்மை ரீம்ஸ் நகரிலே ஃபிரெஞ்சு மக்களுக்கு அரசராக முடி சூட்டும்படியாகத் தேவனின் கட்டளையோடு வந்துள்ளேன்' என்று வீர முழக்கமிட்ட இப் பெண்ணை, சித்தப் பிரமை கொண்டவளோ என ஏழாம் சார்லஸ் உள்பட பல ஃபிரெஞ்சுக்காரர்கள் சந்தேகித்தனர். பெரிய படைத் தளபதிகளாலும், அரசியல் வல்லுநர்களாலும் சாதிக்க முடியாமலிருப்பதைப் பதினேழு வயது கொண்ட இந்தக் கிராமியப் பெண்ணா செய்யப் போகிறாள் எனப் பலர் வியந்தனர். சீர்கெட்டிருந்த அப்போதைய நிலைமையில், எந்த ஓர் உதவியையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்த ஏழாம் சார்லஸ், வலிய வரும் ஜோனின் சேவையை உதறக் கூடாதென்ற எண்ணங் கொண்டவராக, இறுதியில் ஆர்லியன்ஸ் நகரை மீட்க ஜோனின் தலைமையிலேயே ஒரு படை கொடுத்தனுப்ப ஒப்புக்கொண்டார்.

போர் உடை தரித்து, வெண்ணிறக் கொடியைக் கையிலேந்திப் பரிமீதமர்ந்து புறப்பட்டுவிட்ட இந்த வீராங்கனையைப் பின்தொடர்ந்து, ஒரு ஃபிரெஞ்சுப் படை ஆர்லியன்சை நோக்கிப் புறப்பட்டது. ஜோனின் கொள்கை ஆர்வத்தால்

கவரப்பட்டு நாட்டின் பிற பகுதிகளிலிருந்தும் ஃபிரெஞ்சு இளைஞர் கூட்டம் இவளைப் பின்தொடர்ந்தது.

**ஜோனின் வெற்றி:** ஆர்லியன்ஸ் நகரில் மும்முரமாக முற்றுகையிலீடுபட்டு இருந்த ஆங்கிலேயர்களின் படைத் தலைவர் சாலிஸ்பரி பிரபு ஏற்கெனவே குண்டடிப்பட்டுக் கொல்லப்பட்டிருந்ததால், டால்பட் (Talbot) என்பவரின் தலைமையில் தாக்குதலை நடத்திவந்தனர். கி. பி. 1429, ஏப்ரல் 29 ஆம் நாள் தம் ஃபிரெஞ்சு வீரர்களுடன் ஆர்லியன்ஸ் நகர்ப்புரத்தை அடைந்த ஜோன், ஆங்கிலேயர்களின் பாதுகாப்பு அரண்களையெல்லாம் தாக்கி முற்றுகையைக் குலைத்தாள். இவளது வீரத்தால் ஊக்குவிக்கப்பட்ட ஃபிரெஞ்சு மக்கள், அல்லது படையினர் ஆவேசம் கொண்டு எதிரிகளை மும்முரமாகத் தாக்கலாயினர். ஃபிரெஞ்சுக்காரர்களின் இந்த திடீர்த் தாக்குதல்களால் திணறிய ஆங்கிலப் படைகள் முற்றுகையைக் கைவிட்டுப் பாதுகாப்பான இடத்திற்கு விரைந்தன. ஆர்லியன்ஸ் நகரை மீட்ட ஜோன், தன் வீரர்களின் உதவியுடன் ஆங்கிலேயரைப் பின்தொடர்ந்து, படாய் (Patay) என்னுமிடத்தில் இன்னொரு வெற்றியைப் பெற்று, ஜார்கியு (Jargeau) பகுதியையும் விடுவித்தாள்.

இவ் வெற்றிக்குப்பின், தமக்குக் கொடுக்கப்பட்டிருந்த தெய்வக் கட்டளைப்படி, சார்லசை ரீம்ஸ் (Reims) நகருக்கு கி. பி. 1429, ஜூலை 17 ஆம் நாள் அழைத்துச் சென்று, 'அனைத்து ஃபிரெஞ்சு மக்களுக்கும் அரசராக' ஜோன் முடிசூட்டி வைத்தாள். கடவுள் பக்தி கொண்ட அத்தனை ஃபிரெஞ்சுக்காரர்களும் சார்லசைத் தங்களின் மன்னராக ஏற்றுக்கொள்ள முன்வந்தனர்.

புகழ்பெற்ற தளபதிகளாலும் செய்ய முடியாத ஒரு காரியத்தை ஓர் ஆடு மேய்த்த பெண் சாதித்திருந்தது போற்றத் தக்க ஒரு செயலாகும். தனக்கிடப்பட்ட தெய்வக் கட்டளையை நிறைவேற்றிவிட்ட நிம்மதியில் ஜோன், தன்னுடைய சிற்றூருக்குத் திரும்ப விருப்பினாள். ஆனால், அவ் வீரப் பெண்மணியின் சேவை தமக்கு இன்னும் தேவையாக இருந்ததால் ஏழாம் சார்லஸ் ஜோனை மன்றாடிப் போகவிடாமல் தடுத்தார். ஆங்கிலேயர்—பர்கண்டியர் வசமிருந்த பாரிஸ் நகரைத் தாக்கி, மீட்டு அந் நகரைத் தம் தலைநகராகக் கொண்டு ஆள வேண்டுமென்ற ஆசையினால் உந்தப்பட்ட ஏழாம் சார்லஸ், ஜோனின் படைத் தலைமையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினார். பாரிஸ் மீட்புக்கான படையெடுப்புத் திட்டம் தயாரிக்கப்பட்டது.

**ஜோனின் கொலை:** ஆங்கிலேயர்களை ஃபிரான்சைவிட்டு வெளியேறுமபடி ஜோன் வேண்டுகோள் விடுத்தாள். இவளைச் 'சைத்தானின் கையாள்' என நினைத்த ஆங்கிலேயர்கள் இதற்கு மறுக்க, மீண்டும் போர் தொடங்கியது. சார்லஸின் ஆணைப்படி பாரிஸ் நகர்மீது படையெடுத்த ஜோன், காம்பேன் என்னுமிடத்தை முற்றுகையிட்டு வந்தபோது, கி. பி. 1430, மே. 24 ஆம் நாள் தற்செயலாக எதிரிகளிடம் சிக்கிக்கொண்டாள். பர்கண்டியர்களிடம் சிறைப்பட்டிருந்த ஜோனை விடுவிக்க நன்றிகெட்ட ஏழாம் சார்லஸ் எவ்வித முயற்சியும் செய்யவில்லை. ஜோனின் திடீர்ப் புகழால் மனம் குமுறிவந்த ஃபிரெஞ்சு பிரபுக்களும் படைத் தலைவர்களும் வாளாவிருந்தனர். ஜோனுக்கு மீட்புப் பணம் வருமென்று காத்திருந்து ஏமாற்றமடைந்த பர்கண்டிப் பிரபுவான பிலிப், இப் பெண்ணை 10,000 கிரவுனுக்கு (ஃபிரெஞ்சு நாணயம்) ஆங்கிலேயருக்கு விற்றுவிட்டார். இதற்கிடையே ஃபிரான்சு திரும்பியிருந்த பெட்ஃபோர்டு பிரபு, ஆங்கிலேயர்கள் பெற்றிருந்த தோல்விகளை மறக்காதவராக இத் தெய்வீகப் பெண்மீது 'சூனியக்காரி' என்று குற்றஞ் சாட்டி, ரூவன் (Rouen) நகரில் ஃபிரெஞ்சு திருச்சபை நீதிமன்றத்தால் விசாரிக்கச் செய்தார். இவ் விசாரணையின் முடிவில் கி. பி. 1431. மே, 30 ஆம் நாள் 'சைத்தானின் கையாள்' என்ற குற்றஞ் சாட்டப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்டாள்.

ரூவன் சந்தைச் சதுக்கத்திலே ஜோனை எரித்த தீ, ஃபிரான்சு நாடு முழுவதும் வீர உணர்ச்சியையும், தியாக உணர்வையும் கொழுந்துவிட்டு எரியச் செய்தது. ஆங்கிலேயரை வெல்ல முடியாதென்ற கருத்தைத் தம் வெற்றிகளால் பொய்யாக்கிக் காட்டிய ஜோனின் தியாக மரணம் கோழைத்தனமும் துரோக உணர்வும் உள் பூசல்களும் கொண்டிருந்த ஃபிரெஞ்சு பிரபுக்களுக்குப் புத்துணர்வு ஊட்டியது. ஜோன் காலமடைந்துவிட்டாலும், அவளால் தொடங்கப்பட்ட விடுதலை இயக்கம் முடிந்துவிடவில்லை.

**ஆங்கில—பர்கண்டி உறவு முறிவு:** அந்நியர் ஆதிக்கத்திற்கெதிராகப் புதிய தேசீய உணர்ச்சி, ஃபிரான்சு நாட்டில் பரவி வரும்போது அதுவரை நிலைத்திருந்த ஆங்கில—பர்கண்டி உறவும் சீர்கெட ஆரம்பித்தது.

ஃபிரெஞ்சு மக்களின் உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பி, அவர்களிடையே ஒற்றுமை உணர்வைத் தோற்றுவித்த வீரப் பெண்மணி ஜோன் எரிக்கப்பட்டுவிட்ட நாளிலிருந்தே இதுவரை

ஆங்கிலேயர்களை ஆதரித்து வந்த பர்கண்டிக் கட்சியினரில் பல பிரமுகர்கள் ஏழாம் சார்லஸ் பக்கம் சேரத் துடித்தனர். ஃபிரெஞ்சு சுதந்திரத்திற்காகப் போரை நடத்திவரும் சார்லசின் முயற்சிகளை வெற்றி பெறச் செய்ய வேண்டுமெனப் பர்கண்டியர் எண்ணியிருந்த காலத்தில், பெட்ஃபோர்டு டியூக்கின் மனைவியும் பர்கண்டிப் பிரபுவின் சகோதரியுமான ஆன் காலமாகி விட்டாள். இதனால், ஆங்கில—பர்கண்டி உறவுக்கு அதுவரை யிருந்து வந்த பிடிப்புத் தளர்ந்தது. இதல்லாமல் பர்கண்டி பிரபுவின் சிற்றூரான லக்சம்பர்ச் (Luxemburg) என்ற பெண்ணை, முன்னவரின் அனுமதியைப் பெறாமல் பெட்ஃபோர்டு இரண்டாம் தாரமாக மணம் செய்து கொண்டதும் பர்கண்டிப் பிரபு ஆங்கிலப் பிரபுவை வெறுக்கக் காரணமாக அமைந்தது. மேற்கொண்டு பெட்ஃபோர்டின் சகோதரரான ஹம்பரி என்பவர், பர்கண்டி பிரபு காதலித்த பெண்ணை மணம் செய்துகொள்ளவும் ஆங்கில—பர்கண்டி பிளவு இன்னும் அதிகரித்தது.

**ஆராஸ் மாநாடு:** இருப்பினும், நாட்டில் நிலவி வரும் போர்ச் சூழ்நிலையை முடிக்க, பர்கண்டி பிரபுவான பிலிப், தமது சுய முயற்சியால் ஆராஸ் (Arras) என்னுமிடத்தில் ஏழாம் சார்லசும் பெட்ஃபோர்டு டியூக்கும் சந்திக்க ஏற்பாடு செய்தார். கி. பி. 1435 ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட ஆராஸ் மாநாட்டில் நிரந்தரச் சமாதானத்தைக் கோரி, ஆங்கிலேயர்களுக்கு ஒரு சமரசத் திட்டம் உருவாக்கப்பட்டது. இதன்படி, ஃபிரெஞ்சு வாரிசுக்கான உரிமையை ஆங்கிலேயர்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டுமென்றும், அவர்களால் ஃபிரான்சில் கைப்பற்றப் பட்டிருக்கும் பகுதிகளை விட்டு வெளியேற்ற வேண்டுமென்றும், இதற்கு ஈடாக, நார்மண்டி, அக்குவிட்டேய்ன் பகுதிகள் அவர் களுக்கே உரிமையாக்கப்படும் என்றும் ஃபிரெஞ்சுக்காரர்களால் தெரிவிக்கப்பட்டது (ட்ராயிஸ் உடன்படிக்கையின்படி). தம் அரசருக்குக் கிடைக்கச் செய்யவேண்டுமென விரும்பிய, பெட்ஃபோர்டு பிரபு, ஆராஸ் மாநாட்டு ஏர்பாட்டை நிராகரித் தார். ஆங்கிலேயரின் பிடிவாதக் குணம் பர்கண்டி பிரபுவுக்கு எரிச்சலையும் ஏமாற்றத்தையும் கொடுத்தது.

இதற்கிடையே தேசீய உணர்வு கொண்டிருந்த ஃபிரெஞ்சு மக்கள், பாரிஸ் நகரிலும் நார்மண்டிப் பகுதியிலும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்கெதிராகக் கலகங்களில் ஈடுபட்டனர். நாட்டிலே ஏற்பட்ட விழிப்புணர்ச்சியைக் கண்ட பர்கண்டிப் பிரபுவுக்கு அந்நியரின் நட்பு தேசத் துரோகமாகப்பட்டது. ஆகவே, பர்கண்டி பிரபுவான பிலிப், ஆராஸ் மாநாட்டைத் தொடர்ந்து

ஏழாம் சார்லசுடன் உடன்பாடு செய்துகொண்டார். முன்பு பிலிப்பின் தந்தையான ஜான், தமது ஆணையினால் கொல்லப் பட்டதற்கு மன்னிப்பு கேட்டுக் கொண்ட ஏழாம் சார்லஸ், இந்த உடன்பாட்டை மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளும் வகையில் பிகார்டி (Piccardy) என்னுமிடத்தைப் பர்கண்டி பிரபுவுக்கு அன்பளிப்பாக அளித்தார்.

**பாரிஸ் இழப்பு:** ஆங்கிலேயருக்குச் சோதனைக் காலம் ஆரம்பித்துவிட்டது. இங்கிலாந்தில் இப் போரைத் தொடர்ந்து நடத்துவதா அல்லது நிறுத்தி அமைதி கோருவதா என்பதைப் பற்றி ஏற்கெனவே இருந்து வந்த சர்ச்சை இன்னும் அதிகரிக்க லாயிற்று. போரை வற்புறுத்திய ஹம்பரியும் (கிளௌசெஸ்டர்) அமைதியை விரும்பிய போபார்ட்டும் அரசவையில் இரு கட்சி களை உருவாக்கிச் சச்சரவிட்டு வந்ததால் ஃபிரான்சிலிருந்த ஆங்கிலேயருக்குப் போதிய மேலுதவி கிடைக்கவில்லை. தம்மாலான அளவு ஆங்கில ஆதிக்கத்தை ஃபிரான்சில் நிலைநிறுத்த முயன்று வந்த பெட்ஃபோர்டு பிரபு, கி. பி. 1435, செப்டம்பர் 15ஆம் நாளில் காலமாகிவிட்டார். பெட்ஃபோர்டின் மரணம் ஆங்கி லேயருக்கு ஈடு செய்ய முடியாத இழப்பு. இவரது தலைமை யின்றித் தவித்த ஆங்கிலப் படைகளைச் சில மாதங்களில் பாரிஸ் நகரிலிருந்து பர்கண்டியர் உதவி பெற்ற ஏழாம் சார்லஸ் விரட்டிவிட்டு அந் நகரத்தைத் தம் தலைநகராக்கிக் கொண்டார்.

இக் கட்டத்திலிருந்தே ஆங்கிலேயரின் தோல்விப்படலம் தொடங்குகிறது.

**டூர்ஸ் ஒப்பந்தம்:** பெட்ஃபோர்டு பிரபு காலமாகிவிட்டதால் ஆங்கிலேயர்களுக்குப் போரைத் தொடர்ந்து நடத்துவதிலிருந்து வந்த உற்சாகம் குறைந்தது. போர்க் கட்சியைச் சேர்ந்த ஹம்பரியும் தம் அரசியல் செல்வாக்கை இழந்துவிட்டார். ஹம்பரியின் காப்பாளர் ஆட்சியிலிருந்து விடுபட்டவராக கி. பி. 1442ஆம் ஆண்டு முதல் ஆறாம் ஹென்றி தாமாகவே நேரிடையான ஆட்சியை மேற்கொண்டார். ஃபிரெஞ்சுப் போரை முடிக்க எண்ணங் கொண்டவராக அரசர், தம் கருத்தையே கொண்டிருந்த சஃப்போக் எர்லான வில்லியம் டி லாபோல் (William de La Pole of Suffolk) என்பவரை அமைதித் தூதுவ ராக ஃபிரான்சு நாட்டுக்கு அனுப்பிவைத்தார்.

சமாதானம் வேண்டிப் பாரிஸ் நகரை அடைந்த சஃபோக் பிரபு, அதற்கேற்ப ஃபிரெஞ்சு அரசரின் மகளைத் தம் அரசருக்கு மணம் முடித்துக் கொடுத்துப் போரை நிறுத்திக்கொள்ளக்கூடிய யோசனையை ஏழாம் சார்லசுக்குத் தெரிவித்தார். ஆனால், தம் மகளை ஆங்கில அரசருக்கு மணம் முடித்துக் கொடுக்க சார்லஸ் விரும்பவில்லை. இரண்டாம் ரிச்சர்டுக்கு மணம் முடித்துக் கொடுக்கப்பட்டிருந்த தம் மூத்த சகோதரி இசபெல்லாவுக்கு ஏற்பட்ட கதியையும் ஐந்தாம் ஹென்றிக்கு மணம் செய்விக்கப்பட்ட தம் மற்றொரு சகோதரி காதரினின் விதியையும் நினைவுபடுத்திக் கொண்டவராக ஏழாம் சார்லஸ், இத் திருமணத்திட்டத்தை மறுத்திருந்தாலும், போர் நிறுத்தத்தில் விருப்பம் கொண்டு தம் உறவினரும் சிற்றரசுமான ஆன்ஜு கோமகனின் புதல்வி மார்கரெட் (Margaret) என்பவளை ஆங்கில மன்னர் ஆறாம் ஹென்றிக்கு மண முடித்து வைக்க ஒப்புக்கொண்டார். இதற்கு ஈடாக, போர் நிறுத்தத்தோடு ஆங்கிலேயர் மெயின் (Maine) என்ற பகுதியை விட்டு வெளியேற வேண்டுமெனவும் நிபந்தனை போடப்பட்டது. இதுவே டூர்ஸ் (Towres) உடன்படிக்கையென அழைக்கப்பட்டது.

சஃபோக் பிரபு, இதற்கெல்லாம் ஒப்புக்கொண்டு பதினைந்தே வயது நிரம்பியிருந்த மார்கரெட்டுடன் இங்கிலாந்தை அடைந்து அவளை அரசருக்கு மணமுடித்து வைத்தார் (கி.பி. 1445).

இத் திருமணத்தாலும், ஆங்கிலேயர்களுக்கு வரவிருந்த இழப்பைத் தவிர்க்க முடியவில்லை.

**நார்மண்டி இழப்பு :** ஆறாம் ஹென்றி, நல்லவராக இருந்தும் வல்லவராக இல்லாததால், இங்கிலாந்தில் பல அரசியல் குழப்பங்கள் தோன்றின. இதனால், ஃபிரான்சிலிருந்த ஆங்கிலப்படை வீரர்கள் புறக்கணிக்கப்பட்டவர்களாக இருந்தனர். இவ் வீரர்களுக்குச் சம்பளமும் ஒழுங்காகக் கொடுக்கப்படவில்லை. ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்த ஃபிரெஞ்சுப் பகுதிகளிலும் ஒழுங்கற்ற அரசியல் நிலவியிருந்தது. ஃபிரெஞ்சுப் பகுதிகளுக்கு ஆங்கிலக் கவர்னராக அனுப்பப்பட்டிருந்த சோமர்செட் பிரபுவும் நிலைமையைச் சமாளிக்கக் கூடிய திறமை இல்லாதவராயிருந்தார். ஆங்கிலேயர்களின் பலவீனங்களைப் புரிந்து கொண்ட ஃபிரெஞ்சு மன்னரான ஏழாம சார்லசும் போரைத் தொடர்ந்து நடத்தி இறுதி வெற்றி பெறத் தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்.

பல மாதங்கள் சம்பளம் பெறாமலிருந்த ஆங்கிலப் படையினர், பொறுமை யிழந்தவர்களாக எல்லைப்புறமான பிரிட்டானியாவை கி.பி. 1450ஆம் ஆண்டில் தாக்கிக் கொள்ளையடித்துப் பொருள் சேகரித்தனர். இந்த அடாத செயலால் மனம் வெதும்பிய பிரிட்டானிய பிரபு, ஆங்கிலேயரின் உறவை அறுத்தெறிந்து ஏழாம் சார்லசைத் தம் மேலாளராக மீண்டும் ஏற்றுக்கொண்டார். பிரிட்டானிய எல்லைகளை ஆங்கிலேயர்கள் அடிக்கடி தாக்கிவர, ஏழாம் சார்லஸ் பொறுமை இழந்தவராக, டூர்ஸ் உடன்பாட்டை மீறி மீண்டும் போர் தொடுத்தார்.

ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்து அடிக்கடி கலகங்கள் செய்து வந்த நார்மண்டிமீது ஏழாம் சார்லஸ் படையெடுத்தார். டூர்ஸ் போர் நிறுத்தத்திற்குப் பிறகு இருந்துவந்த சமாதான காலத்தில் ஆங்கிலக் கவர்னரும் சோமர்செட் பிரபுவுமான எட்மண்டு போபர்டு, எவ்விதப் பாதுகாப்பு நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளாதிருந்ததால், ஃபிரெஞ்சுப் படைகள் மிக எளிதாக நார்மண்டிக்குள் நுழைந்தன. இங்கிலாந்திலிருந்து சர் தாமஸ் கைரியல் (Kyriel) என்பவரின் தலைமையில் அனுப்பப்பட்ட ஆங்கிலப்படைகள், ஃபார்மிக்னி (Formigny) என்னுமிடத்தில் கி.பி 1450, ஏப்ரல் 15ஆம் நாள் ஃபிரெஞ்சுக்காரர்களால் சின்னா பின்னப்படுத்தப்பட்டன. நார்மண்டிக்குள் நுழைந்த ஃபிரெஞ்சுப் படையினரை அப் பகுதி மக்கள் தங்களை அந்நிய ஆட்சியிலிருந்து விடுவிக்க வந்த வீரர்களாக வாழ்த்தி வரவேற்றனர். கேன் (Caen), செர்போர்க் (Cherbourg), ரூவன் போன்ற நார்மானிய நகரங்கள் ஒன்றன்பின் ஒன்ருக வீழ்ந்தன. நான்கு மாதங்களுக்குள்ளாக, நார்மண்டி முழுவதையும் ஆங்கிலேயர்கள் இழந்து விட்டனர்.

**காஸ்கனி இழப்பு:** நார்மண்டியை மீட்டுவிட்ட களிப்பில் ஏழாம் சார்லஸ், ஆங்கிலேய ஆதிக்கம் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு மேலாக நீடித்து வரும் இன்னெரு ஃபிரெஞ்சுப் பகுதியான காஸ்கனிமீது படையெடுத்தார். போர்டியக்ஸ், பேயோனி ஆகிய முக்கிய பட்டணங்களோடு, காஸ்கனியும் ஃபிரெஞ்சுக்காரர்களால் மீட்கப்பட்டது. கி.பி. 1451ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதிக்குள், காஸ்கனி ஏழாம் சார்லஸின் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது. ஃபிரெஞ்சு மன்னரின் வல்லாட்சியை எதிர்த்து, அவ்வப்போது காஸ்கனியில் கலகங்கள் நடந்து வந்தன. இக் கலகக்காரர்களுக்கு உதவி புரியும் வகையிலும், ஃபிரெஞ்சு நாட்டில் ஆதிக்கம் பெற இறுதி முயற்சியாகவும் ஷிருஸ்பரி பிரபுவான டால்பட் (Talbot) தலைமையில் கி. பி. 1453ஆம் ஆண்டில் ஓர் ஆங்கிலப்படை அனுப்பப்பட்டது, ஆனல்,

காஸ்டீலன் (Castillon) என்னுமிடத்தில் நடந்த சண்டையில் டால்பட் உள்பட பல ஆங்கில வீரர்கள் வீழ்த்தப்பட, ஃபிரெஞ்சுக் காரர்கள் பெரு வெற்றி பெற்றனர்.

ஆங்கிலேயர் ஆதிக்கம் ஃபிரான்சில் என்றென்றும் நிலைத் திருக்கவேண்டுமென்ற எண்ணத்தில் கி. பி. 1339ஆம் ஆண்டில் ஸ்லூயிஸ் சண்டையுடன் தொடங்கிய நூறாண்டுப்போர், அந்நிலைவு கனவாக முடியும்படி கி. பி. 1453ஆம் ஆண்டில் காஸ்டீலன் சண்டையோடு முற்றுப்பெற்றது. கலே நகரம் தவிர, மற்ற எல்லா ஃபிரெஞ்சுப் பகுதிகளையும் ஆங்கிலேயர்கள் இழந்தவர் களாயினர்.

மூன்றாம் எட்வர்டு காலத்தில் வெற்றிகரமாகத் தொடங்கப் பட்ட இப்போர், ஆறாம் ஹென்றியின் காலத்தில் படுதோல்வியாக முடிந்தது.

**ஆங்கிலேயரின் இறுதித் தோல்விக்குக் காரணங்கள் கி. பி. 1422—1453) :** வெற்றிவீரர் ஐந்தாம் ஹென்றியின் அகால மரணத்திற்குப்பின், ஆங்கிலேயருக்கு வெற்றி வாய்ப்புகள் குறை யலாயின. ஆனாலும், பெட்ஃபோர்டு பிரபு பர்கண்டியர்களோடு ஏற்கெனவே இருந்து வந்த உறவை மேலும் பலப்படுத்தி, ஃபிரான்சில் ஆங்கிலேய ஆதிக்கத்திற்கு எவ்வித ஆபத்தும் வராமல் தடுத்து வந்தார். ஆயினும், ஆங்கில—பர்கண்டி உறவு முறிந்ததுமே ஆங்கிலேயரின் தோல்விப்படலம் தொடங்கி விட்டது. இதற்கிடையே, வீரமும், திறமையும் கொண்ட பெட்ஃபோர்டு பிரபு இறந்து விட்டதும், ஆங்கிலேயருக்குப் பேரிழப்பாக இருந்தது.

ஆங்கிலேயர்கள் போர் நடப்பில் அதிகக் கவனம் செலுத்த முடியாதவாறு, உள்பூசல்களால் அல்லல்பட்டனர். அரசரின் அவையிலே எதிரும் புதிருமான கட்சிகளை அமைத்துக்கொண்டு ஹம்பிரியும், வின்செஸ்டர் போபார்ட்டும் சச்சரவிட்டுக் கொண் டிருக்க, ஆங்கிலேயர்களால் போர்ப்பிரயத்தனங்களில் முழு மூச்சுடன் ஈடுபட முடியவில்லை.

கி. பி. 1445ஆம் ஆண்டிலிருந்து போரைச் சரிவர நடத்தக் கூடிய திறமையான ஆளுநர்களும் படைத்தளபதிகளும் ஆங்கி லேயர்களுக்கு இல்லாமலிருந்ததும் ஒரு பெருங்குறையாகும்.

வீரப்பெண் ஜோனின் தியாக மரணம், ஃபிரான்சு நாட்டிலே ஒரு தேசீயக் கனலை எரியவிட்டிருந்தது. புத்துணர்ச்சி பெற்

றிருந்த ஃபிரெஞ்சுப் படைகள் புதிய போர் முறைகளோடு போரிட்டு இறுதி வெற்றியைத் தேடிக்கொண்டன.

**போரின் விளைவுகள் (கி. பி. 1339 - 1453) :** போர்ச் செலவுகளைச் சமாளிக்க முடியாத நிலையில் மூன்றும் எட்வர்டு, ஐந்தாம் ஹென்றி போன்ற ஆங்கில அரசர்கள் அடிக்கடி பாராளுமன்றக் கூட்டங்களைக் கூட்டி அதிக மானியத் தொகைகள் கேட்டனர். அச் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொண்ட பாராளுமன்றம், தனக்கிருந்த அதிகாரத்தையும் இல்லாத உரிமைகளையும் பெற்றது. இதனால், இங்கிலாந்தின் பாராளுமன்ற வளர்ச்சிக்கு இப்போர் உதவியாக இருந்தது.

கிரெஸி, பாய்ட்டியர்ஸ், அஜன்கோர்ட் சண்டைகளில் ஆங்கிலப் படைகள் பெற்ற வெற்றிகள் இங்கிலாந்து மக்களைப் பெருமைப்படச் செய்தது. அந்தப் பெருமிதத்தில் ஆங்கில சமுதாயத்திலிருந்த பலதரப்பட்ட மக்களிடையே தேசீய உணர்வோடு ஒற்றுமையுணர்வும் பிறந்தது. 'எல்லோரும் ஒரு நாட்டின் மக்கள்' என்ற புத்துணர்ச்சி அம் மக்களிடையே எழுந்திருந்தது. அதுவரை ஃபிரெஞ்சு மொழியையும், பழக்க வழக்கங்களையும் பின்பற்றி வந்த ஆங்கிலேய மேட்டுக்குடியினர், அவை அந்நிய வழக்கமென உதறித்தள்ளித், தங்கள் நாட்டின் மொழியையும் (ஆங்கிலம்), பழக்கங்களையும் (கலாச்சாரம்) பின்பற்ற ஆரம்பித்தனர்.

நூறாண்டுப் போரில் கலந்துகொண்ட பல நிலமானியப் பிரபுக்கள் பல சண்டைகளிலே கொல்லப்பட்டதால், நில மானியப் முறையே இங்கிலாந்தில் அழியத் தொடங்கியது. இதனால், நாட்டிலே இப் பிரபுக்களால் ஏற்பட்டு வந்த குழப்பங்களும் குறையலாயின.

இப்போரினால் ஏற்பட்ட செலவுகளைச் சரிகட்ட, ஆங்கில அரசு பல வரிகளை மக்கள்மீது விதித்ததால், பொருள் பற்றாக் குறையால் நாட்டில் பண்டங்களின் விலைகளும் கூடிவிட, குடியானவர் கலகம் இங்கிலாந்தில் ஏற்பட்டதும் நூறாண்டுப் போரின் விளைவாகும்.

நாட்டிலே அந்நியர்களுக்கெதிராக ஏற்பட்ட விழிப்புணர்ச்சி, சமயத்திலும் புகுத்தப்படவே, போப்பாண்டவரின் ஆதிக்கத்துக்கு எதிராக லாலார்டு இயக்கம் ஏற்படவும் இப் போர் காரணமாயிற்று.




நூறாண்டுப்போரில் ஆங்கிலேயரின் எழுச்சியும் வீழ்ச்சியும்

நூறுண்டுப்போர் இறுதியாக முடிந்தபோது ஏராளமான ஆங்கில வீரர்கள் நாடு திரும்பியிருந்தனர். சண்டையிடுவதையே முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்த இவ் வீரர்களுக்கு, வேலை வாய்ப்பு இல்லாத நேரத்தில் லங்காஸ்டியர்—யார்க் குடியினருக் கிடையே நடந்த ரோசாச் சின்னப்போர் (Wars of Roses) அரிய வாய்ப்பை அளிக்க, நாட்டின் அமைதியே கெட்டுவிட்டது.

இங்ஙனமாக, நூறுண்டுப்போர் இங்கிலாந்தைப் பொறுத்த வரையில் சில விளைவுகளுக்குக் காரணமாகியது.

மிகச் சோதனையான காலத்தில் அரசாட்சியைப் பெற்ற ஆரும் ஹென்றியே லங்காஸ்டர் மரபின் கடைசி மன்னராவர். தம் ஆட்சிக் காலத்தின் இடையிலேயே ஃபிரென்சுப் பகுதிகளை இழந்து விட்ட இம் மன்னர், தமது ஆயுள் முடிவதற்கு முன்னதாகவே இங்கிலாந்தின் மகுடத்தையும் இழக்க வேண்டியவரானர்.

கல்வி ஞானத்தையும் சமய பற்றினையும் கொண்டு மிக எளிமையான வாழ்க்கையை விரும்பிய ஆரும் ஹென்றி, போர் களில் நாட்டமில்லாமல் அமைதிக் கொள்கையை விரும்பியவராய் இருந்தார். தம் புகழ் என்றென்றைக்கும் நிலைக்கும்படி, வின்ட் சருக்கருகே ஈடன் (Eton) கல்லூரியையும் கேம்பிரிட்ஜில் அரசர் கல்லூரியையும்(King's College) உருவாக்கிய இவ் வரசருக்குத் தம் ஆட்சியைக் கட்டிக் காக்கக்கூடிய திறமையில்லாமல் போய் விட்டது.

ஓர் ஆண்டுகூட நிரம்பாத பாலகப் பருவத்தில் அரசராக அறிவிக்கப்பட்ட ஆரும் ஹென்றி, அடுத்த இருபது ஆண்டுகளில் ஜான் (பெட்ஃபோர்டு பிரபு), ஹம்பரி (கிளௌசெஸ்ட்டர்), ஹென்றி போபர்ட் (வின்செஸ்ட்டர் பிஷப்) ஆகியோரின் கட்டுப் பாட்டின்கீழ் ஆட்சியைச் செலுத்த வேண்டியவரானர். பெட் ஃபோர்டும் காலமடையவும், போபர்ட்டும் அரசியலிலிருந்து விலகி யிருக்கவும், ஆரும் ஹென்றி கி. பி. 1442 ஆம் ஆண்டில் ஹம்பரி யின் காப்பாளர் ஆட்சியிலிருந்து விடுபட்டுத் தம் இருபதாம் வயதில் நேரிடை ஆட்சியைத் தொடங்கினர்.

இவரது அந்தரங்க ஆலோசனையாளராக அமர்த்தப் பட்டிருந்த வில்லியம் - டி - லாபோல் (சப்ஃபோக் எர்ல்) என்ப வரின் முயற்சியாலேயே போரில் ஈடுபட்டிருந்த ஃபிரான்சு நாட் டுடன் கி. பி. 1444 ஆம் ஆண்டில் டூர்ஸ் உடன்படிக்கை ஏற்படுத்தப் பட்டது. இந்த உடன்பாட்டின் ஒரு முக்கிய அம்சமாக, ஆன்ஜு

வைச் சார்ந்த மார்கரெட் என்பவளை ஆறும் ஹென்றி மணம் செய்து கொண்டார். அடுத்து வரப்போகும் அரசரின் இன்னல் களுக்கெல்லாம் மார்கரெட் அரசியும், சப்ஃபோக் பிரபுவுமே பொறுப்பாளிகளாகப் போகின்றனர் என்பது காலப்போக்கில் தெரியவந்தது.

**கிளௌசெஸ்டரின் கொலை :** டூர்ஸ் உடன்பாட்டின்படி ஆங்கிலேயர் மெயினை ஃபிரென்சுக்காரர்களுக்குக் கொடுத்ததைக் கிளௌசெஸ்ட்டர் பிரபு (ஹம்பரி) விரும்பாததால், அவ்வுடன்பாட்டுக்குக் காரணமான சப்ஃபோக் பிரபுவையும் மார்கரெட்டையும் பகைத்துக் கொண்டார். மார்கரெட், தம் கணவர் ஆறும் ஹென்றியைப் போலன்றித் திறமை மிக்கவராகவும் தீவிர விருப்பு வெறுப்பு உணர்ச்சிகளைக் கொண்டவராகவுமிருந்தார். கிளௌசெஸ்டரின் அரசியல் செல்வாக்கை ஆரம்பத்திலிருந்தே எதிர்த்து வந்த சப்ஃபோக் பிரபு, கி. பி. 1447 ஆம் ஆண்டில் அரசி மார்கரெட்டோடு சேர்ந்துகொண்டு ஹம்பரியைப் பழிவாங்கினர். இதே ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றத்தில் இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டு ஹம்பரி தண்டனையடைந்தார். சிறையிலடைக்கப்பட்ட ஹம்பரி சந்தேகச் சூழ்நிலையிலேயே சில நாட்களில் கொல்லப்பட, அரசரின் நெருங்கிய உறவினரான ரிச்சர்டு (யார்க் பிரபு) பிரபலமடைந்தார்.

அடுத்து நடக்கப்போகும் பல அரசியல் நிகழ்ச்சிகளுக்கு யார்க் பிரபுவான ரிச்சர்டே காரணமானர்.

**ரிச்சர்டு யார்க் :** போர்த் திறமையும் அரசியல் அறிவும் கொண்ட ரிச்சர்டு யார்க், காலமாகிவிட்ட பெட்ஃபோர்டு பிரபுவுக்குப் பதிலாகக் கி. பி. 1435 ஆம் ஆண்டிலிருந்து ஃபிரான்சுப் பகுதியில் ஆளுநராக இருந்துவந்தவர். இவரது பதவிக் காலத்தில் பல ஃபிரன்சுத் தாக்குதல்களை யார்க் பிரபு முறியடித்து ஆங்கிலேயரின் பெருமையைக் காத்து வந்தார். ஆயினும், அரசரைக் காப்பாளராகக் கொண்டு, நாட்டின் நிர்வாகத்தை நடத்தி வந்த அரசி மார்கரெட்டும் சஃப்போக் பிரபுவும் தங்களின் அபிமானம் பெற்ற எட்மண்ட் போபர்ட் (சாமர்செட் பிரபு) என்பவரை, ஃபிரெஞ்சுப் பகுதிக்கு (நார்மண்டி) ஆளுநராக அனுப்பி வைத்து, ரிச்சர்டு யார்க்கைப் பதவி விட்டு விலகும்படி ஆணையிட்டனர். தம்மை விலக்கிவிட்டு சாமர்செப் பிரபுவைப பதவியில் அமர்த்தியதால் ரிச்சர்டு யார்க் மனத்திற்குள் புழுங்கியவராக இருந்தார்.

ஆரும் ஹென்றிக்குத் திருமணமாகி ஐந்து ஆண்டுகள் கழிந்திருப்பினும் இவருக்கு இன்னும் பிள்ளைப்பேறு ஏதுமில்லை. அரசரின் சிறிய தந்தையான கிளௌசெஸ்டர் பிரபு சிறையிலேயே கொல்லப்பட, ஆரும் ஹென்றிக்குக் குழந்தைகளே பிறக்காமல் போனால், அரசரின் அடுத்த வாரிசாக வரக்கூடிய உரிமை ரிச்சர்டு யார்க்குக்கே இருந்தது. சந்தேக மனப்பான்மையைக் கொண்டிருந்த அரசி மார்கரெட்டும், சப்ஃபோக் பிரபுவும் அரசரை பலவந்தப்படுத்தி ரிச்சர்டைத் துணைப்பிரபுவாக அயர்லாந்துக்கு அனுப்பி வைத்தனர். அரசியலில் செல்வாக்குப் பெறாமல் தடுக்கவே அத்தனை தொலைவான தூரத்திற்கு ரிச்சர்டை அனுப்பி வைத்தனர். இவர் அயர்லாந்தில் தம் புதிய பொறுப்பையும் சீரும் சிறப்புமாகச் செய்துவர, அதே சமயத்தில் ஃபிரான்சுப் பகுதியில் இவருக்குப் பதிலாக ஆளுநர் பொறுப்பைப் பெற்றிருந்த சாமர்செட் பிரபு, தம் தகுதியற்ற தலைமையினால் ஃபிரெஞ்சுக்காரர்களிடம் நார்மண்டியை இழந்தவரானார்.

**சப்ஃபோக் பிரபுவின் கொலை :** நார்மண்டி இழப்பு ஆங்கிலேயருக்குப் பெரும் அதிர்ச்சியைக் கொடுத்தது. அரசினரிடம் அதிருப்தி கொண்ட மக்கள், நாட்டின் சில இடங்களிலே கலகம் செய்தனர். சப்ஃபோக் பிரபுவின் திறமையின்மையினாலேயே ஆங்கிலேயர் நார்மண்டியை இழக்க வேண்டியிருந்ததென மக்கள் நம்பினர். மக்களின் எண்ணத்தைப் பிரதிபலிப்பதாகப் பாராளுமன்றமும் இருந்தது. கி. பி. 1450 ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தார், சப்ஃபோக் பிரபுமீது துரோகக் குற்றத்தைச் சாட்டி நாடு கடத்தினர். கலே நகரத்திற்குக் கப்பலில் சென்று கொண்டிருந்த சப்ஃபோக் பிரபு ஏவி விடப்பட்ட ஒரு கப்பற் படை வீரனால் வெட்டி வீழ்த்தப்பட்டார். கொலையாளியைத் தண்டிக்கவோ, அவனை ஏவி விட்டவர்களை விசாரிக்கவோ திறனில்லாமல் ஆரும் ஹென்றி பரிதாப நிலையிலிருக்க, அந்த அளவிற்கு ஆட்சி வலுவற்றிருந்தது.

சப்ஃபோக் பிரபு கொல்லப்பட்டும் கூட, அமைச்சரவை மீது மக்களுக்கு வெறுப்பு நீடித்தது. ஃபிரெஞ்சுப் போர்களினால் நாட்டின் பொருளாதாரம் மிகவும் சீர்கெட்டிருக்க அதைச் சரிக்கட்ட அரசினரால் விதிக்கப்பட்ட வரிப்பளுவையும் மக்கள் எதிர்த்தனர். ஆரும் ஹென்றியின் திறமையற்ற ஆட்சி மக்களுக்கு ஏமாற்றத்தைக் கொடுத்தது. அரசாங்கத்தை எதிர்த்து சஸ்ஸெக்ஸ், நார்ஃபோக் போன்ற இடங்களில் கலகங்கள் தொடர்ந்தன. ஆனால், ஜான் கேடு (John Cade) என்பவரால்

நடத்தப்பட் கலகமே சில நாள்களுக்கு அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்தது.

**கேடு கலகம் (John Cade) :** ஜான் கேடு ஃபிரான்சிலும் அயர்லாந்திலும் ரிச்சர்டு யார்க்கின் தலைமையில் படை வீரராகப் பணியாற்றியவர். கென்ட் பகுதியைச் சார்ந்த மக்கள் கூட்டத்தை அழைத்துக் கொண்டு கி. பி. 1450, ஜூலை மாதம் 3 ஆம் நாள் கேடு இலண்டன் மாநகருக்குள் நுழைந்து அரசரின் படைகளைச் சிவனேக்ஸ் (Sevanooks) என்னுமிடத்தில் தோற்கடித்தார். இந் நிலைமையை எதிர்க்கத் திறனில்லாது ஆறும் ஹென்றி கெனில் வொர்த் (Kenilworth) என்ற இடத்திற்கு ஓடிவிட்டார்.

சில நாட்களுக்கு ஜான் கேடு என்பவர் இலண்டன் மாநகருக்கு அதிபதியாக இருந்தார். ஆறும் ஹென்றியின் அரசாட்சியின் நலிந்த நிலைமையை இக் கலகம் எடுத்துக் காட்டியது. நல்ல சீரான ஆட்சியையும், வரிக் குறைப்பையும் அமைச்சரவை நீக்கத்தையும் ஏற்படுத்துவதாகக் கூறிக் கலகத்தில் இறங்கியிருந்த கேடு, தம்மை ரிச்சர்டின் கையாள் என்றும் சொல்லிக் கொண்டார். பொருள் காப்பாளர் "சே" பிரபு உள்படச் சில அமைச்சர்களும் இக் கலகக்காரர்களால் கொல்லப்பட்டதன்றி, இலண்டன் மாநகரமும் கொள்ளையடிக்கப் பட்டது. கெனில் வொர்த்தில் அடைக்கலம் புகுந்திருந்த அரசர் செயலற்றிருக்க, இலண்டன் மாநகர மக்களே ஆயுதந்தாங்கி டவர் (Tower) சிறையதிகாரிகளான ஸ்கேல்ஸ் (Scales), பிரபு மாத்யு கௌ (Gough) என்பவர்களின் தலைமையில் போராடி இக் கலகக்காரர்களை விரட்டிக் கேடையும் கொன்றுவிட்டனர்.

இக் கலகம் மன்னரது கீழ்த்தரமான ஆட்சியை எடுத்துக் காட்டியது. இக் கலகம் அடக்கப்பட்டவிதமும், தனிப்பட்ட மனிதனால் இந்த அவல ஆட்சியை மாற்ற முடியாதென்பதையும் எடுத்துக் காட்டியது.

**ரிச்சர்டு—சாமர்செட் தகராறு :** இங்கிலாந்தில் மூண்டிருந்த கலகங்களைக் கேள்வியுற்ற ரிச்சர்டு யார்க், அயர்லாந்தை விட்டுப் புறப்பட்டு இலண்டன் மாநகரையடைந்தார். சாமர்செட் பிரபுவும் நார்மண்டிப் பகுதியை இழந்து தலைநகருக்குத் திரும்பியிருந்தார். அரசியாரின் வற்புறுத்தலுக்கு இணங்கி சாமர்செட் பிரபுவை ஆறும் ஹென்றி, தம் முக்கிய அமைச்சராக அமர்த்திக் கொண்டார். இங்கிலாந்தின் தோல்விக்கே காரண

மானவராக. மக்களால் வெறுக்கப்பட்ட சாமர்செட்டுக்கு முதலமைச்சர் பதவி கொடுத்ததை ரிச்சர்டு கண்டித்தார். மன்னரவையில் இப்போது எதிர்க்கட்சித் தலைவராக இருந்த யார்க் பிரபு (ரிச்சர்டு), சமயம் கிடைத்தபோதெல்லாம் அமைச்சரவையின் கையாலாகாத் தன்மையைத் தாக்கிவந்தார். இதற்கிடையே ஃபிரெஞ்சுக்காரர்கள் அக்குவிடேய்ன் பகுதியையும் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டனர். இஃது அமைச்சரவையின் திறமையின்மையை நன்கு வெளிப்படுத்தியது அக்குவிடெய்னின் இறுதி வீழ்ச்சியே (கி.பி. 1452), இதுவரை வார்த்தைகளில் எதிர்ப்புக் காட்டி வந்த ரிச்சர்டு யார்க்கைச் செயலில் இறங்கத் தூண்டியது. தமது ஆதரவாளர்களுடன் படையொன்றைச் சேகரித்து அரசரை வற்புறுத்தித், திறமையற்ற சாமர்செட் பிரபுவைப் பதவியினின்று விரட்டுவதே இவரது திட்டம்.

ஆனல், உள்நாட்டுப் போரைத் தவிர்க்க எண்ணிய ஆறும் ஹென்றி, டார்ட்ஃபோர்ட் என்னுமிடத்தில் ரிச்சர்டைச் சந்தித்துச் சாமர்செட்டை விலக்குவதாகவும் நாட்டில் நல்லாட்சியை அமைப்பதாகவும் வாக்களித்தார். ரிச்சர்டும் மேற்கொண்டு விவகாரத்தை வளர்க்க விரும்பாமல் தம் படையைக் கலைத்துவிட்டார். ஆயினும், அரசர் தம் சுய விருப்பப்படி எதுவும் செய்யமுடியாத நிலையிலிருந்தார். அரசி மார்கரெட் ஆறும் ஹென்றியைக் கட்டாயப்படுத்திச் சாமர்செட் பிரபுவைப் பதவியில் நீடிக்க வைத்தாள். இதனல் ரிச்சர்டு பொருமிக் கொண்டு வந்தபோதுதான் காஸ்கனிமீது ஃபிரெஞ்சுக்காரர்கள் தங்களின் தாக்குதலைத் தொடங்கியிருந்தனர். சாமர்செட்டின் திறமையின்மைக்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகவே இருந்தது. டாப்போட் பிரபுவின் தலைமையில் அனுப்பப்பட்ட ஆங்கில உதவிப் படைகளும் அழிக்கப்பட்டுவிட்டன. கலே நகரத்தைத் தவிர, ஆங்கிலேயர் ஃபிரான்சில் அத்தனைப் பகுதிகளையும் இழந்தவராயினர். இதனல், மேலும் வெகுண்ட ரிச்சர்டு, அரசரை மீண்டும் வற்புறுத்திச் சாமர்செட் பிரபுவைப் பதவியினின்று நீக்கும்படி கோரினர். அனல், அரசியின் பிடிவாதக் குணம் இதற்கு இடையூறாக இருந்தது. ரிச்சர்டின் கோபத்திற்கும் மார்கரெட் அரசியாரின் பிடிவாதத்திற்கும் இடையே சிக்கித் தவித்த ஆறும் ஹென்றிக்குப் புத்தி ஸ்வாதீனம் தவறிவிட்டது.

**ரிச்சர்டு காப்பாளராதல் :** தம் தாய்வழிப் பாட்டனருக்கு (ஃபிரான்சு அரசர் ஆறும் சார்லஸ்) இருந்த அந்த சித்த சுவாதீன நோய், கி. பி. 1453ஆம் ஆண்டில் இவருக்குத் தொடர்ந்து, அடுத்த பதினெட்டு மாதங்கள் நீடித்தது. அரசர் பைத்தியமாகி

மூன்று மாதங்களுக்குப் பின்னர், அரசி மார்கரெட் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். ஆரும் ஹென்றிக்குப் பிறகு தம் நெருங்கிய உறவினர் வழியில் இங்கிலாந்தின் வாரிசுரிமையைப் பெறலாமென நினைத்திருந்த ரிச்சர்டுக்கு, 'வேல்ஸ் இளவரசர்' பிறந்திருந்தது ஏமாற்றத்தைக் கொடுத்திருப்பினும் அதை வெளிப் படையாகக் காட்டிக் கொள்ளாமல் அக் குழந்தையே அடுத்த வாரிசென அங்கீகரித்து இறைவணக்கமும் செய்து, யார்க் பிரபு தம் அரசியல் நேர்மையையும் பெருந்தன்மையையும் காட்டிக் கொண்டார். கடந்த மூன்று மாதங்களாக மன்னர் மனநிலை கெட்டிருக்க, இதுவரை அவரது பெயரில் ஆட்சியை நடத்திவந்த பேரவை, நாட்டுக்கு ஒரு காப்பாளரை அமர்த்த வேண்டுமென்று விரும்பியது. பாராளுமன்றமும் இதற்கு ஒப்புக்கொள்ளவே கி. பி. 1454 ஆம் ஆண்டில் ரிச்சர்டு யார்க், நாட்டின் காப்பாளராக அமர்த்தப்பட்டார்.

பதவி ஆசை தமக்கில்லையென்றாலும் நாட்டின் நிலைமையை மனத்திற் கொண்டு இப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ரிச்சர்டு, முதல் காரியமாகப் பல அவல நிலைகளுக்குக் காரணமாயிருந்த திறமையற்ற சாமர்செட் பிரபுவை அமைச்சரவையிலிருந்து நீக்கி னார். மிக நல்லமுறையிலேயே இக் காப்பாளர் ஆட்சி நடத்தப் பட்டு வந்தது.

**ரிச்சர்டு பதவி யிழப்பு:** கி.பி. 1454 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மன்னரின் மனநிலை தெளிந்தது. தமக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்ததுகூட இப்போதுதான் இவருக்குத் தெரிய வந்தது. இந் நோயிலிருந்து மீளாமல் அரசர் இன்னும் சில காலத்திற்கு இருந்திருப்பாரேயானால் நாட்டுக்கும் இவருக்கும் இவரது வாரிசுக்கும் நல்ல காலமாக இருந்திருக்கும். புதுத் தெளிவு பெற்று விட்ட அரசர், நிர்வாகப் பொறுப்பை மீண்டும் ஏற்றுக் கொண்டதால், ரிச்சர்டு யார்க், தம் காப்பாளர் பதவியை இழந் தார். ரிச்சர்டு இதற்காக மனம் நொந்து கொள்ளவில்லை. ஆயினும் தம் விரோதியையும் தம்மால் பதவியிலிருந்து விரட்டப் பட்டவருமான சாமர்செட் பிரபுவை மீண்டும் அரசியாரின் வற்புறுத்தலுக்கிணங்கி ஆரும் ஹென்றி பதவியில் அமர்த்தியதே ரிச்சர்டுக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. இதற்கிடையே, அரசி மார்கரெட் பொய்க்குற்றம் சாட்டி ரிச்சர்டைக் கைது செய்ய முயற்சி செய்தாள். இனி வாளாவிருந்தால் தம் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து வரும் என்று உணர்ந்துகொண்ட ரிச்சர்டு யார்க், தம் மற்ற ஆதரவாளர்களுடன் சேர்ந்து போர்க் கோலம்

பூண்டார். இதுவே, 'ரோஜாச் சின்னப் போர்' என்ற உள் நாட்டுப் போருக்குத் தொடக்க நிலையாகும்.

## ரோசாச் சின்னப் போர்
## ( Wars of the Roses )

லங்காஸ்டர் குடும்பத்தின் வாரிசான ஆறும் ஹென்றிக்கும் யார்க் குடும்பத்தின் வாரிசான ரிச்சர்டு பிரபுவுக்கும் கி.பி. 1455ஆம் ஆண்டு ஏற்பட்ட கை கலப்பு, ஆங்கில வரலாற்றில் மிக முக்கிய நிகழ்ச்சியாக மட்டும் இருந்ததன்றி, 'ரோஜாச் சின்னப் போர்' என்றும் அழைக்கப்படுகிறது.

### இதர காரணங்கள்

ஆறும் ஹென்றியின் அவல ஆட்சியிலே அதிருப்தி அடைந்து ரிச்சர்டு யார்க் போர்க் கோலம் பூண்டது ஒரு முக்கிய காரணமெனினும், பதினைந்தாம் நூற்றாண்டின் இடையிலே இந்த உள் நாட்டுப் போர் தோன்றுவதற்கேற்ப சூழ்நிலை இங்கிலாந்தில் இருந்தது.

**பிரபுக்களின் சுயநலம்** : நிலமானியமுறை அழிந்து வந்த காலமாக அஃது இருந்திருப்பினும், பிரபுக்கள் இன்னும் தங்களின் செல்வாக்கையும் பலத்தையும் முற்றிலும் இழந்தவர்களாக இல்லை. நாட்டில் ஃபிரெஞ்சுப் போர்களால் ஓரளவு பிரபுக்களின் எண்ணிக்கை குறைந்திருப்பினும் தங்கள் குடும்பங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டிருந்த திருமண உறவினால், சிலர் அமோக பலத்தையும் ஏராளமான சொத்துகளையும் பெற்றவர்களாக இருந்தனர். குறிப்பாக, மூன்றும் எட்வர்டு காலத்திலிருந்தே அரச குடும்பத்தினரோடும் இப் பிரபுக்களின் சில குடியினர் மண உறவை வைத்துக் கொண்டிருந்ததால், நாட்டில் இவர்களது செல்வாக்கும் உயர்ந்திருந்தது. இப் பிரபுக்களிலேயே சிலர், பலவீனமான ஆட்சி தொடர்ந்திருக்குமேயானால் தங்களின் அதிகாரங்களுக்கும் செல்வாக்கிற்கும் குந்தகம் வராது என்று எண்ணி அலங்கோல ஆட்சியை நடத்தி வந்த ஆறும் ஹென்றியை ஆதரித்தனர். இன்னும் சில பிரபுக்கள், நாட்டிலே திறமைசான்ற ஆட்சி நிறுவப்பட வேண்டுமென விரும்பிக் கட்டுப்பாடான நிர்வாகத்தை விரும்பிய ரிச்சர்டு யார்க்கை ஆதரிக்கலாயினர்.

நூறாண்டுப் போர்க் களத்தில் ஃபிரான்சில் சண்டையிட்டுக் கொள்ளைப் பொருள்களைச் சேகரித்து வந்த பிரபுக்களில் சிலருக்கு அப் போர் முடிந்த பின்னரும், அப் பழக்கமும், மனப்பான்மையும் மாறியிருக்கவில்லை. நாட்டில் உள்நாட்டுக் குழப்பமொன்று

ஏற்படின், தங்கள் எண்ணம் நிறைவேறலாமென அப் பிரபுக்கள் நினைத்து வந்ததால், அரச குடும்பத்தைச் சார்ந்த இரு கிளையின ரான லங்காஸ்ட்டியர்களுக்கும், யார்க்கியருக்கும் இடையே ஆட்சிக்குப் போட்டி ஏற்பட்டபோது அவர்கள் இக் கட்சிகளை ஆதரிக்கத் தொடங்கினர்.

ஃபிரெஞ்சுப் போர் (நூறாண்டு) முடிந்திருந்த இவ் வேளையில், நாடு திரும்பியிருந்த ஏராளமான வீரர்கள் இங்கிலாந்திலே குழுமி யிருந்தனர். போரிடுவதைத் தவிர வேறு எந்தத் தொழிலையும் விரும்பாத அவ் வீரர்களில் பலர், தங்கள் ஜீவனத்திற்காகப் போர் வெறிகொண்டு அலைந்த பிரபுக்களை அண்டலாயினர். அவ் வீரர் களைக் காப்பாற்றக்கூடிய பொறுப்பை (Maintenance) இப் பிரபுக்கள் ஏற்றுக் கொண்டிருந்ததால், பதிலுக்கு வீரர்கள் இவர்களுக்குப் படை ஊழியம் செய்ய வேண்டுமென ஏற்பா டாகியது. ஒவ்வொரு பிரபுவுக்கும் இதுபோன்ற பல வீரர்கள் சேவகம் செய்தனர். தங்களிடம் வேலை பார்த்துவந்த ஒவ்வொரு வீரருக்கும் அந்தந்த பிரபுக்கள் தங்களின் ஊழியச் சின்னங்களை (Livery) வழங்கியிருந்தனர். ஊழியச் சின்னங்களைப் பெற் றிருந்த ஆயிரக்கணக்கான வீரர்களை அந்தந்த பிரபுக்கள் தங்களின் உரிமை ஏவலாளராகக் (Retainers) கொண்டிருந்தனர். எத்தன்மையான ஆட்சி இங்கிலாந்தில் அமைக்கப்பட வேண்டு மென ஏற்பட்டிருந்த கருத்து வேறுபாட்டில் இரு கட்சிகளாகப் பிரிந்திருந்த பிரபுக்களும் தங்களின் சுய நலத்திற்காக நாட்டில் எழுந்துள்ள குழப்பத்தையே விரும்பியிருந்த ஏனைய பிரபுக்களும் தங்களுக்குத் துணையிருந்த இந்த ஏவலாளர் கூட்டத்தை நம்பித் துணிந்து ஆயுதப் பரீட்சையில் இறங்கினர்.

**போரின் தன்மை:** லங்காஸ்டர்கள் தங்கள் அடையாள மாகச் சென்னிற ரோசாச் சின்னத்தையும், யார்க்கியர்கள் வெள்ளை ரோசாச் சின்னத்தையும் அணிந்து கொண்டு ஒருவரை யொருவர் எதிர்த்துப் போரிட்ட இப் போர், ஓர் உள்நாட்டுப் பூசலாகவே இருந்தது. இப் போரில் பொது மக்களோ, பாராளுமன்றமோ கலந்து கொள்ளவில்லை. இரு குடிகளுக்கு மிடையே ஏற்பட்ட இவ் வாரிசுரிமைப் போரில் ஒவ்வொருவர் தரப்பிலும் சுமார் நாற்பது அல்லது ஐம்பது பிரபுக்களும் நைட்டுக்களும் மேலும் ஐந்தாயிரம் ஏவல் வீரர்களும் கலந்து கொண்டனர். இப்போர் மும்முரமாக நடந்த காலத்தில் வீரர் களின் எண்ணிக்கையும் கூடுதலாக இருந்தது; இப் போரின் உச்ச கட்டம் அதிகமானபோது தான், உயிர்ச் சேதமும் அச்சப்படும் அளவிற்கு உயர்ந்தது.

நாட்டில் பரவலாக இரு கட்சியினருக்கும் சமமான ஆதரவு இருக்க, வேல்ஸ் பகுதியில் லங்காஸ்ட்ரியருக்கும் மத்திய நிலங்களில் யார்க்கியருக்கும் இப் போரின் ஆரம்பக் கட்டத்தில் நல்ல செல்வாக்கு இருந்தது. இப்போர் தொடங்கிய காலத்தில் நாட்டின் வடபுறம் லங்காஸ்ட்டியருக்கு ஆதரவாகவும், கிழக்கு, தெற்குப் பகுதிகள் யார்க்கியர்களுக்கு ஆதரவாகவும் விளங்கின. இப் போரின் நடப்புச் சமயத்தில், ஸ்காட்லாந்து லங்காஸ்ட்டர் கட்சியினரையும் அயர்லாந்து யார்க்கியரையும் ஆதரிக்கலாயின.

கி. பி. 1455 ஆம் ஆண்டில் செயின்ட் ஆல்பன்ஸ் சண்டையுடன் தொடங்கி, கி. பி. 1487 ஆம் ஆண்டு ஸடோக் என்னுமிடத்தில் முடிந்த, இப் போரில், நடந்த பல சண்டைகள் லண்டன் மாநகருக்கு அருகிலேயும் செல்லும் வழியிலேயும் பெரும் சாலைகளிலேயுமே நடந்தன.

சுமார் 30 ஆண்டுகளுக்கு மேலாக நாட்டின் அமைதியைக் கெடுத்து ஆங்கிலேயரின் வரலாற்றைக் கறைபடுத்திய இப் போர், நான்கு முக்கிய காலப் பகுதிகளைக் கொண்டிருந்தது.

**முதல் நிலை (கி. பி. 1455):** தம்மைக் காப்பாளர் பதவியிலிருந்து நீக்கியதோடன்றித் தம் பரம விரோதியும் திறமையற்ற அமைச்சருமான சாமர்செட் பிரபுவுக்கு மீண்டும் அதிகாரம் கொடுக்கப்பட்டதால், பொறுமை இழந்தவராக ரிச்சர்டு யார்க் தம் ஆதரவாளர்களுடன் அரசர் ஹென்றிக்கெதிராகப் படையொன்றைத் திரட்டினர். நாட்டின் பெரும் செல்வந்தரும், வன்மை வாய்ந்தவருமான வார்விக் எர்லும், சாலிஸ்பரி எர்லும் இவருக்குத் துணை நின்றனர். இலண்டன் மாநகரை நோக்கிப் படையெடுத்து வந்த யார்க்கியரை கி. பி. 1455, மே, 22 ஆம் நாள் ஆறும் ஹென்றி (லங்காஸ்ட்டர்) தம் வீரர்களுடன் செயின்ட் ஆல்பன் தெருவில் (St. Alban) எதிர்த்துச் சண்டையிட்டார்.

இச் சண்டையில் ஒவ்வொரு கட்சியிலும் இரண்டாயிரம் போர் வீரர்களே பங்கு கொண்டனர். முப்பது நிமிடங்களே நடைபெற்ற இச் சண்டையில் யார்க் பிரபுவான ரிச்சர்டே வெற்றி பெற்றார். இவ் வெற்றிக்கு வார்விக் எர்லான ரிச்சர்டு நெவில் (Neville) என்பவரே பெரும் காரணமாக இருந்தார். ரிச்சர்டு யார்க்கின் மைத்துனரான நெவில், தம் வீரர்களுடன் அரசரின் வீரர்களைச் சின்னாபின்னப் படுத்தியதல்லாமல், சாமர்செட் பிரபுவையும் சண்டையில் கொன்றுவிட்டார். இச்

சண்டையில் தோல்வியடைந்த ஆறும் ஹென்றி, அவ் வதிர்ச்சியைத் தாங்க முடியாதவராக மீண்டும் புத்தி ஸ்வாதீனத்தை இழந்தார். இதனைத் தொடர்ந்து ரிச்சர்டு யார்க், இரண்டாம் முறையாகக் காப்பாளர் பதவியைப் பெற்றார். அரசரைக் கௌரவமாக நடத்திய ரிச்சர்டு யார்க், இக் காலத்தில் தமது கூட்டாளிகளான வார்விக் பிரபுவுக்கும், சாலிஸ்பரிக்கும் அரசாங்கத்தில் உயர்பதவிகளைக் கொடுத்து நாட்டின் நிர்வாகத்தைத் திறமையாக நடத்தினர். ஃபிரான்சில் ஆங்கிலேயர்கள் இழந்திருந்த பகுதிகளை மீட்பதற்கும் முயற்சிகள் எடுக்கப்பட இருந்த வேளையில் அரசர் பூரண குணமடையவும் ரிச்சர்டு யார்க் தம் பதவியைத் துறக்க வேண்டியிருந்தது.

யார்க் பிரபு காப்பாளராகப் பதவி பெற்றிருந்த இந்த ஓராண்டுக் காலத்திற்கு, அந்த ஏற்பாட்டை ஒப்புக் கொள்ளாதவராக மார்கரெட் அரசி மனதிற்குள்ளாகவே புழுங்கி வந்தாள். அரசரின் சித்தம் தெளிவடைந்ததும் மார்கரெட், தம் உண்மைச் சொரூபத்தைக் காட்ட ஆரம்பித்தாள். மார்கரெட் அரசரை வற்புறுத்தி, யார்க் தலைவர்களை அரசாங்கத்திலிருந்து நீக்கச் செய்தது மட்டுமன்றி, தம் நம்பிக்கைக்கு உகந்தவர்களை, அப் பதவிகளில் அமர்த்தினள். இதனால் அரசரின் கட்சிக்கும், ரிச்சர்டு யார்க் கட்சிக்கும் மன வேற்றுமை தோன்ற ஆரம்பித்தது. அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கு இப் பகைமையின் காரணமாக நாட்டில் ஒரு குழப்பமான நிலையே மேலிட்டது. இரு கட்சியினரும் அடுத்த சண்டைக்கு ஆயத்தமாயினர்.

ரிச்சர்டு யார்க் மீண்டுமொரு முறை காப்பாளர் பதவியைப் பெற வேண்டுமென்ற விருப்பத்தோடன்றி, அங்ஙனம் அப் பதவியைப் பெறாரல், இனி அதைவிடக் கூடாதென்று தீர்மானித்தவராகவும் இருந்தார். அரசரின் கோஷ்டிக்குத் தலைமை பெற்றிருந்த மார்கரெட், தம் மகனுக்கு அரசுரிமை கிடைக்க வேண்டுமாயின் ரிச்சர்டு யார்க் தொலைக்கப்படவேண்டிய அவசியத்தை உணர்ந்திருந்தாள். எந்த நேரத்திலும் மீண்டும் சண்டைஏற்படலாமென்றும், இச் சமயத்தில் அமைதியை விரும்பிய ஆறும் ஹென்றியின் முயற்சியால் கி. பி. 1458 ஆம் ஆண்டு தூய பால் திருக்கோயிலில் (லண்டன்) இரு கட்சியினரும் கூடிப் பேச ஏற்பாடு செய்யப்பட்டது. ஆயினும், இன்னும் சில மாதங்களில் மீண்டும் நடக்கப் போகும் சண்டையை இந்தச் சமாதானப் பேச்சு வார்த்தைகளால் நிறுத்த முடியவில்லை என்பதை அடுத்து நேர்ந்த சம்பவங்கள் நிரூபணம் செய்தன.

இதுவரை காப்பாளர் பதவிக்கு ஆசைப்பட்டு வந்த ரிச்சர்டு யார்க், அரசருக்குப் பிறகு தமக்கே வாரிசு கிடைக்கவேண்மென விருப்பம் கொண்டவரானர். எப்படியும் தம் மகனுக்கே (எட்வர்டு வேல்ஸ் இளவரசர்) அடுத்த வாரிசுரிமை கிடைக்க, வேண்டுமென அரசி மார்கரெட் எதிர்பார்த்ததன்றி, ரிச்சர்டு யார்குக்கு எதிராக உதவியைத் தேடலானுள். மேற்கில் டெவனிலிருந்த கோர்ட்டினே பிரபுக்களையும் வடக்கிலிருந்த பெர்சிக்களையும். பக்கிங்ஹாம், அகஸ்டார் டியூக்குகளையும், ஆகிஸ்ஃபோர்டு, ஷிருஸ்பரி பிரபுக்களையும் அரசி மார்ரெட் தம்முடன்சேர்த்துக் கொண்டாள்.

**இரண்டாம் நிலை (கி. பி. 1459–61):** ரிச்சர்டு யார்க்கை எதிர்க்க தன்னுலான முயற்சிகளை எல்லாம் செய்து முடித்திருந்த மார்கரெட் அரசி, கி, பி. 1459 ஆம் ஆண்டில் யார்க்கியத் தலைவர்கள் அனைவரும் அரசரை நேரில் வந்து சந்திக்கவேண்டு மென ஆறும் ஹென்றியின் பெயரால் கட்டளையிட்டார். தங்களைக் கைது செய்வதற்காகவே இந்த ஆணை பிறப்பிக்கப்பட்டிருப்பதை உணர்ந்த ரிச்சர்டும் (யார்க்) இவர்தம் ஆதாவாளர்களும் போருக்குத் தங்களை ஆயத்தம் செய்துகொள்ள முனைந்தனர்.

யார்க் பிரபுவின் ஆதரவாளரான சாலிஸ்பரி பிரபு, தம் வீரர் களுடன் ரிச்சர்டு போர் முயற்சியில் ஈடுபட்டிருந்த இடத்தை நோக்கிச் செல்லுகையில் ஆட்லி (Audley) பிரபுவின் தலைமையில் எதிர்ப்பட்ட லங்காஸ்ட்டர் கட்சியினரை ஸ்ரோஃபோர்டுஷயரில் (Strafordshire) சண்டையிட்டு விரட்டினர் (கி. பி. 1459). இங்கிருந்தே இப் போரின் இரண்டாம் நிலை தொடங்கியது.

கலே நகரத்திலிருந்து வார்விக் பிரபுவும் இங்கிலாந்து வந்து அடைந்து, ரிச்சர்டு யார்கருடன் சேர்ந்து கொண்டார். லட்லோ (Ludlow) என்னுமிடத்தில் யார்க்கியர் ரிச்சர்டு பிரபுவின் தலைமையில் போர்க்கோலம் பூண்டிருந்தனர். தமக்கெதிராக யார்க் தலைவர்கள் ஒன்று சேர்ந்திருப்பதைக் கண்டு கொதிப் படைந்த அரசர் ஆறும் ஹென்றி, என்றுமில்லாத புது வேகத் துடன் தம் படையைத் திரட்டிக் கொண்டு லட்லோவை அடைந் தார். தமக்கெதிராகப் போர் செய்வது இராஜத்துரோகமாகும் என்று ஆறும் ஹென்றி எடுத்துரைத்ததன் விளைவாகப் பல யார்க்கிய வீரர்கள் அவ் விடத்தை விட்டகன்றனர். அரசரின் சுறு சுறுப்பையும், சமயோசிதப் புத்தியினையும் கண்டு மலைத்துவிட்ட யார்க் தலைவர்கள், மேற்கொண்டு எதிர்ப்பதில் பயனில்லை என்று உணர்ந்து, மூலைக் கொருவராகச் சிதறினர். ரிச்சர்டு யார்க்,

அயர்லாந்தில் தஞ்ச மடைந்தார். சாலிஸ்பரி பிரபுவுடன் வார்விக் பிரபு மீண்டும் கலே நகரத்திற்கு ஓடிவிட்டார்.

சண்டையிடாமலேயே பெரும் வெற்றிபெற்ற ஆறும் ஹென்றியின் புகழ் உச்ச கட்டத்தையடைந்தது. இப் புதிய செல்வாக்கைப் பயன்படுத்திக்கொண்டு அரசியார் இதே ஆண்டு (கி.பி. 1459) பாராளுமன்றமொன்றைக் கூட்டச் செய்தார். பழி வாங்கும் எண்ணத்தில் லங்காஸ்டியர் இக் கட்டத்தில் நடந்து கொண்டதே இவர்களின் கட்சிக்கு இறக்கமாக அமைந்தது.

யார்க் தலைவர்கள்மீது துரோகக் குற்றம் சாட்டப்பட்டுப் பாராளுமன்ற அனுமதியின்பேரில் அவர்களின் சொத்துகள் பறிமுதலாயின. ரிச்சர்டு யார்க்கின் பல நண்பர்கள், மற்ற யார்க்கிய அநுதாபிகள் பாராளுமன்ற ஆணையினால் சிரச்சேதம் செய்யப்பட்டனர். ரிச்சர்டுக்குச் சொந்தமான நியூபரி (Newbury) நகரமும், அரசியாரின் கட்டளைப்படி சூரையாடப்பட்டது. இந்த அடாத செயல்களால் யார்க்கியரின் எதிர்ப்பு அதிகரித்த தோடல்லாமல் நாட்டிலும் லங்காஸ்டியர்மீது வெறுப்பு ஏற்பட்டது. லங்காஸ்டியர் அயர்லாந்தையோ கலே பட்டினத்தையோ தாக்கி, அங்குத் தஞ்சம் அடைந்திருந்த யார்க் தலைவர்களைத் தண்டிக்க முயற்சிகள் எதுவும் செய்யாதிருந்த வேளையில், அவர்கள் இன்னொரு படையெடுப்பிற்கும் ஆயத்தம் செய்து வந்தனர். கி.பி. 1460ஆம் ஆண்டில் கலேயிலிருந்து வார்விக் பிரபுவும், சாலிஸ்பரி பிரபுவும் தங்கள் ஆதரவாளர்களுடன் கென்ட் பகுதியை அடைந்தனர். லங்காஸ்டியரின் கொடுமையான செயல்களினால் கொதிப்படைந்திருந்த பல யார்க்கியர்கள் இவர்களுடன் சேர்ந்தனர். ரிச்சர்டு யார்க்கின் மகனும், மார்ச் எர்லுமான எட்வர்டும் வேல்சிலிருந்து தம் வீரர்களுடன் வார்விக்குடன் கலந்து கொண்டார். திடீரென்று ஏற்பட்ட இந்தப் படையெடுப்பை எதிர்க்கத் திறனில்லாது அரசர் தடுமாறினர். ஆயினும், அரசியார் அவசர அவசரமாகத் தம் கட்சியினரை ஒன்றுபடுத்தி, இலண்டன் மாநகரை நோக்கி முன்னேறி வந்த யார்க் படையெடுப்பாளர்களை நார்த்தாம்டன் (Northampton) என்னுமிடத்தில் நிறுத்திச் சண்டையிட்டார். கி.பி. 1460, ஜூலை 10ஆம் நாள் நடந்த இச் சண்டையில், வார்விக் பிரபுவின் தலைமையில் யார்க்கியர் வென்றனர். தோற்கடிக்கப்பட்ட பல லங்காஸ்டியர் பிரபுக்கள் போர்க்களத்திலேயே சிரச்சேதம் செய்யப்பட்டனர். இலண்டன் பிடிபட்டு ஆறும் ஹென்றி சிறைப்படுத்தப்பட்டார். அரசியாரும்

அவருடைய பாலக மகனும் வடதிசை நோக்கி ஓடி, நார்த்தம்பர்லாந்து பிரபுவிடம் தஞ்சமடைந்தனர்.

வார்விக் பிரபு பெற்ற இவ் வெற்றியால், யார்க்கிபருக்கு நல்ல காலம் பிறக்கவும், ரிச்சர்டும் அயர்லாந்திலிருந்து இலண்டனையடைந்தார். யார்க்கியரின் செல்வாக்கு உச்ச கட்டத்திலிருக்கும் இவ் வேளையில், பாராளுமன்றம் ஒன்று கூட்டப்பட்டது. முந்திய ஆண்டில் யார்க்கியர்மீது சுமத்தப்பட்ட துரோகக் குற்றச்சாட்டுகளை இம் மன்றம் தள்ளுபடி செய்தது. பறிக்கப்பட்ட சொத்துகளும் அவர்களுக்குத் திருப்பிக்கொடுக்கும்படியாக உத்தரவாகியது. அவற்றிற்கும் மேலாக, நாட்டின் வாரிசுரிமை நிர்ணயிக்கப்பட்டது. எவருக்குமே தீங்கு நினைக்காத ஆறும் ஹென்றி, தாம் ஆயுள்காலம் பூராவும் அரசராக இருக்கவும், இக் காலத்தில் ரிச்சர்டு யார்க், நாட்டுக் காப்பாளராக இருக்கவும், ஹென்றியரசர் காலமான பிறகு நாட்டின் வாரிசுரிமையை ரிச்சர்டுக்கே கொடுக்க வேண்டுமென்றும் ஏற்பாடாகியது.

நார்த்தாம்டன் சண்டைக்குப் பின்னர் ஆறும் ஹென்றி, மீண்டும் மன நோயினால் பீடிக்கப்பட்டமையால் காப்பாளர் என்ற முறையில் ரிச்சர்டு யார்க் திறம்பட ஆட்சி செய்து வந்தார். இதே சமயத்தில் தம்மை அரசியலிலிருந்து விலக்கியும், தம் மகனை வாரிசுரிமைக்குத் தகுதியற்றவராக்கியிருந்த யார்க் கட்சியினர்மீது பழிதீர்க்க மார்கரெட் அரசி திட்டமிட்டு வந்தாள். இவ் வரசிக்கு நார்தம்பர்லாந்து பிரபுவும், வெஸ்ட்மூர்லாந்து பிரபுவும் ஆதரவு காட்டினர். இந் நிலையில் மீண்டும் போர் தொடர்ந்தது. தம் ஆதரவாளர்களையெல்லாம் ஒன்று திரட்டி, மார்கரெட், அரசரை யார்க்கியரின் பிடியினின்று விடுவித்துத் தம் மகனுக்கு வாரிசுரிமையை நிச்சயிக்க லண்டனை நோக்கி விரைந்தாள். இதே சமயத்தில் ஓவன் டியூடர் (Oven Tudor) என்பவரின் தலைமையில் லங்காஸ்டியர் வேல்ஸ் பகுதியிலும் கலகம் செய்தனர். யார்க்கியர்களுக்கு இது சோதனைக் காலமாக இருக்க, ரிச்சர்டு யார்க் துரிதமாகச் செயல்பட்டார். தம் மகனை எட்வர்டைப் படையுடன் வேல்சுக்கு அனுப்பி வைத்தார். ஆறும் ஹென்றியைக் கண்காணிக்க வார்விக் பிரபுவை லண்டனிலேயே இருக்கச் செய்துவிட்டுத் தம் சில ஆதரவாளர்களுடனும் வீரர்களுடனும் வடக்கு நோக்கி விரைந்து லங்காஸ்ட்டர் கட்சியினரை (மார்கரெட்) வேக்ஃபீல்ட் (Wakefield) என்னுமிடத்தில் எதிர்த்தார். தம் வீரர்களை விட எதிரிப் படைகள் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பது தெரிந்திருந்தும், ரிச்சர்டு சண்டையைத்

தொடங்கியிருக்க இது இவருக்கே ஆபத்தாக முடிந்தது. யார்க கட்சியினரின் தலைவரான ரிச்சர்டு, இச் சண்டையில் கொல்லப் பட்டதால் யார்க்கியர்கள் தோற்றனர். கி. பி. 1460, டிசம்பர் 30ஆம் நாளில் நடந்த இச் சண்டையில் சிறை பிடிக்கப்பட்ட சாலிஸ்பரி பிரபு உள்பட பல யார்க் தலைவர்கள் களத்திலேயே சிரச்சேதம் செய்யப்பட்டனர். ரிச்சர்டின் இளைய மகனும் குத்திக் கொல்லப் பட்டார். நார்த்தாம்டன் சண்டைக்குப் பழிவாங்குவது போல் வேக்ஃபீல்டு சண்டையின் முடிவு இருந்தது. இதற்கிடையே தம் வீரர்களுடன் வேல்சுக்குச் சென்ற எட்வர்டு யார்க் (ரிச்சர்டின் மூத்தமகன்), எதிர்த்த லங்காஸ்டியர்களை கி.பி. 1460, பிப்ரவரி 2ஆம் நாள், மார்ட்டிமர் கிராஸ் (Mortimer Cross) என்னு மிடத்தில் வென்றார். ஓவன் டியூடர் கொல்லப்பட்டார். அவரது மகனை எட்மண்டு டியூடர், பேரனை ஹென்றி ரிச்மாண்ட் ஆகியோர் பிரிட்டானியாவிற்குத் தப்பியோடினர்.

வேக்ஃபீல்டு வெற்றிக்குப் பின்னர், மார்கரெட்டின் தலைமையி லிருந்த லங்காஸ்டியருக்கு நாட்டின் பல பக்கங்களிலிருந்தும் பெரும் ஆதரவு கிடைத்தது. தம் பெரும் படையுடன் மார்கரெட் லண்டன் நகரை நோக்கி விரைந்தார். இவரை எதிர்க்க வேண்டி யிருந்த பொறுப்பைப் பெற்றிருந்த வார்விக் பிரபு, எஞ்சியிருந்த தம் வீரர்களை அழைத்துக் கொண்டு, மார்கரெட் படையினரை கி.பி. 1461 பிப்ரவரி 17ஆம் நாள், செயின்ட் ஆல்பன்ஸ் (St. Albans) என்னுமிடத்தில் தடுத்துச் சண்டையிட்டார். இச் சண்டையிலும் லங்காஸ்டியர்களே வெற்றி பெற்றனர். போர்க் களத்திற்கு வார்விக் பிரபுவினால் கொண்டு செல்லப்பட்ட ஆறும் ஹென்றி அங்கேயே விடுதலையடைந்தார். உடனுக்குடன் லண்டன் மாநகரையடையாமல், தோல்வியடைந்த யார்க்கியர் தம்முடன் உடன்படிக்கை செய்து கொள்ள வர இருப்பதாக நம்பி, அவர் களிடம் நடத்தவேண்டிய சமாதான ஒப்பந்தத்தைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டு மார்கரெட் காலத்தை வீணடித்துக் கொண்டிருந்தாள். இக் கால தாமதமே யார்க்கியர்களுக்குப் புத்துயிர் கொடுத்தது.

வேல்சில் பெரு வெற்றி கண்டு திரும்பிக் கொண்டிருந்த எட்வர்டு யார்க்கைச் செயின்ட் ஆல்பன்ஸ் சண்டையில் தோற்ற வார்விக் பிரபு, உயிர் தப்பிய தம் சில வீரர்களுடன் ஆக்ஸ் ஃபோர்டுக்கு அருகே சந்தித்தார். இச் சந்திப்பைத் தொடர்ந்து, பத்தொன்பதே வயதா நிரம்பியிருந்த எட்வர்டு, யார்க் கட்சியின் தலைவராக அறிவிக்கப்பெற்றார். மேலும், லங்காஸ்டியர் படையினர் லண்டன் மாநகரைக் கைப்பற்றுவதற்குள் அங்குப்

போய்ச் சேர எட்வர்டும் வார்விக்கும் முடிவெடுத்தனர். மிக வேகமாக முன்னேறி ஒரே நாளில் தங்களின் 12,000 வீரர்களுடன் யார்க் தலைவர்கள் லண்டன் மாநகரை அடையவும் இதுவே போரின் போக்கினையும் வரலாற்றின் போக்கையும் மாற்றிவிட்டது.

நாட்டிலே ஏற்பட்டிருக்கும் அவலநிலையைப் போக்கவல்ல திறமை இவரிடம் இருக்குமென நினைத்து லண்டன் நகரை அடைந்திருந்த எட்வர்டை மக்கள் வெற்றி வீரராகப் போற்றினர். கி. பி. 1461 மார்ச் 4ஆம் நாள் எட்வர்டு யார்க், நாட்டின் அரசராக (நான்காம் எட்வர்டு) தம்மைத் தாமே அறிவித்துக் கொண்டார். மிகக் காலதாமதமாக இலண்டன் நகரை அடைந்த மார்கரெட், இந் நகரை முற்றுகையிட நினைத்தாள். லண்டனைச் சூரையாட இவரது வடக்கத்தியப் படையினர் அனுமதி கேட்ட போது மார்கரெட் மறுத்ததால், அவர்களும் முற்றுகையிட மறுத்தனர். சிறிது தயக்கத்திற்குப் பின் மார்கரெட், யார்க் நகர் வழியாக வடக்கு நோக்கித் திரும்பலானர். மார்கரெட்டின் படைகள் இந் நகரைக் கடந்து போகும் பொழுது பல கொள்ளைச் செயல்களில் ஈடுபட்டுத் தங்கள் கட்சிக்கு நாட்டு மக்களிடையே அவப் பெயரைத் தேடிக் கொண்டன.

நான்காம் எட்வர்டு மன்னராகி விட்டபோதிலும் ஹென்றி உயிருடன் இருந்தார். ஒரு குற்றமும் செய்யாத இந்த லங்காஸ்டர் அரசர் (ஆறும் ஹென்றி), தம் மனைவி மார்கரெட்டின் பேராசையால் எல்லையில்லாத துன்பங்களை அனுபவித்ததால் குடிமக்களின் அநுதாபத்திற்கு உரியவராயும் இருந்தார். குறிப்பாக, இங்கிலாந்தின் வடபகுதியில் ஹென்றிக்கு மிகுந்த ஆதரவு இருந்து வந்தது. மார்கரெட்டும் தம் கணவன் சார்பில் வடஇங்கிலாந்திலிருந்த லங்காஸ்டியரை ஒன்று திரட்டி, மீண்டுமொரு சண்டைக்கு ஆயத்தமாகியிருந்தார்.

தம் அரச முடியைக் காத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருந்த நான்காம் எட்வர்டு, சுமார் 35,000 வீரர்களுடன் லங்காஸ்டியருடன் இருந்த எதிர்ப்பை இறுதியாக ஒழித்துக்கட்ட வடக்கு நோக்கிச் சென்றார். மார்கரெட்டும் தம் ஆதரவாளர்களுடன் சண்டைக்குத் தயாராக இருந்தார். கி. பி. 1461, மார்ச் 28ஆம் நாள் டவுடன் (Tow Ton) என்னுமிடத்தில் நடந்த இச் சண்டையே ரோஜாச் சின்னப் போரில கடுமையாக நடந்த கைகலப்பாகும். லங்காஸ்டியர் படையில், சுமார் 50,000 வீரர்கள் இருந்தும், இச் சண்டையில் நான்காம் எட்வர்டே வெற்றி பெற்றார்.

இரண்டு தரப்பிலும் சுமார் 28 000 வீரர்கள் கொல்லப்பட்டனர். லங்காஸ்டியர் சார்பிலே சேதம் மிகக் கடுமையாக இருந்தது. மார்கரெட்டுக்கு இதுவரை மிகப் பேருதவியாக இருந்த நார்தம்பர்லாந்து பிரபு உள்படப் பல லங்காஸ்டியத் தலைவர்கள் கொல்லப்பட்டனர். சிறைபடுத்தப்பட்ட இன்னும் சில தலைவர்கள் களத்திலேயே சிரச்சேதமடைந்தனர். வேக்ஃபீல்டு சண்டை யார்க்கியரால் டவுடனில் பழிதீர்க்கப்பட்டது.

இச் சண்டையின் முடிவையறிந்த உடனேயே மார்கரெட் தம் கணவனுடனும், இளம் மகனுடனும் ஸ்காட்லாந்தை நோக்கி ஓடிவிட்டாள்.

டவுடன் சண்டையில் பெரும் வெற்றி பெற்று லண்டன் திரும்பியிருந்த நான்காம் எட்வர்டு, உடனுக்குடன் பாராளு மன்றத்தினைக் கூட்டித் தாம் இங்கிலாந்தி அரசர் என ஒப்புக்ன் கொள்ளச்செய்தார். கி.பி. 1399 ஆம் ஆண்டில் லங்காஸ்டியர்கள் பெற்றிருந்த அரச உரிமை செல்லுபடியாகாதென இம் மன்றத்தை அறிவிக்கச் செய்து, இதன் வாயிலாக நான்காம் ஹென்றி பட்டவிலக்குச் செய்யப்பட்டார். லங்காஸ்டியரின் உரிமைகளையும் உடைமைகளையும் பறிமுதல் செய்யும்படியாக இதேமன்றம் பல உரிமை நீக்கும் சட்டங்களையும் (Attainder) எட்வர்டின் வற்புறுத்தலினால் கொண்டு வந்தது.

**மூன்றாவது நிலை (கி. பி. 1461—1471):** லங்காஸ்டியரின் எதிர்ப்பு ஓய்ந்திருந்த இவ் வேளையில் நான்காம் எட்வர்டு, தமது நிலையை நாட்டில் பலப்படுத்திக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டார். தம் வட்டாரத்து மக்களின் அபிமானத்தைப் பெற்றவராகவும் அரசியலிலே 'மன்னரியற்றி' (King-Maker) என்ற புகழ்ப் பெயரை அடைந்தவராகவும் அரசருக்கு நிகராக நாட்டின் பல பகுதிகளில் தமக்கிருந்த நிலங்களிலிருந்து ஆண் டொன்றுக்கு 40,000 பவுன்கள் வருமானத்தைக் கொண்டவராகவும் விளங்கிய வார்விக் பிரபுவே, யார்க் குடியைச் சேர்ந்த முதல் மன்னர் நான்காம் எட்வர்டின் ஆட்சிக்குப் பெரிதும் துணையாக இருந்தார். இவரது உறவினர்களே நாட்டின் முக்கிய அதிகாரங் களைப் பெற்றிருந்தனர். இவரது ஒரு சகோதரரான மான்டேகு நெவில் என்பவர், நார்தம்பர்லாந்தின் எர்ல்லாகவும், இன்னொரு சகோதரர் யார்க் ஆர்ச்பிஷப்பாகவும் அரசரின் சான்சலராகவும் பதவி பெற்றிருந்தனர். நான்காம் எட்வர்டு, தம் ஆட்சியை இந்த வார்விக் குடும்பத்தின் உதவியால் நிலைப்படுத்திக் கொண்டிருக்க,

மார்க்ரெட் லங்காஸ்டியரின் சார்பில் ஃபிரான்சுக்குச் சென்று படையெடுப்பு முயற்சியில் ஈடுபட்டிருந்தார்.

தம் கட்சி போரிலே வெற்றி பெற்று ஹென்றியை மீண்டும் பட்டத்தில் அமர்த்துமானல், கலே நகரத்தைப் ஃபிரெஞ்சுக்காரர்களுக்குக் கொடுப்பதாகச் சொல்லி, ஃபிரான்ஸ் மன்னர் பதினேராம் லூயி என்பவரிடம் பொருளுதவியைப் பெற்றிருந்த மார்கரெட்," ஸ்காட்லாந்துக்குத் திரும்பி வந்து தம் படைக்கு ஆட்களைச் சேர்த்தார். ஸ்காட்டிய அரசரும் மார்க்கரெட்டுக்குச் சிறு படை கொடுத்து உதவினர். இங்ஙனம் மார்கரெட்டின் விடா முயற்சியினல் ஸ்காட்டியர் இன்னெரு சண்டைக்குத் தயாராயினர்.

கி. பி. 1462ஆம் ஆண்டில் மார்கரெட் கட்சியினர், எல்லையைக் கடந்து வந்து நார்த்தம்பர்லாந்துப் பகுதிகளைத் தாக்கினர். ஆனல், வார்விக் பிரபுவின் தலைமையில் அனுப்பப் பட்ட அரசரின் படைகள் லங்காஸ்டியரைப் புறமுதுகிடச் செய்தன. மார்கரெட் தம் பிள்ளையுடன் ஃபிளாண்டர்ஸ் நாட்டுக்கு ஓடிவிட்டார். வருங்காலத்தில் லங்காஸ்டியர் கட்சிக்கு அயல்நாட்டு ஆதரவு கிடைக்கவெட்டாமல் தடுக்க, வார்விக் பிரபுவின் யோசனையின் பேரில் நான்காம் எட்வர்டு, ஸ்காட்டியருடன் சமாதான உடன்படிக்கையைச் செய்து கொண்டார். நான்காம் எட்வர்டின் பகையை விரும்பாத ஸ்காட்டியர்கள் ஹென்றியைக் கைவிட்டனர்.

வட இங்கிலாந்தில் இங்குமங்குமாகப் பதுங்கி வாழ்ந்து வந்த ஹென்றி, கி. பி. 1464ஆம் ஆண்டில் தம் சில ஆதரவாளர்களுடன் ஹெட்ஜ்லிமூர் (Hedgley Moor), ஹெக்சாம் (Hexham) ஆகிய இடங்களில் நான்காம் எட்வர்டுக்கெதிராகக் கலகங்கள் செய்தார். இக் கலகங்கள் மிக எளிதாக அடக்கப்பட்டன. வட இங்கிலாந்தில் ஒதுக்கிடங்களில் தன்னம்பிக்கையிழந்து மாறு வேடத்தில் சுற்றி வந்த ஹென்றியைக் கிளியதரோ என்னுமிடத்தில் கைதுசெய்து நான்காம் எட்வர்டின் ஆட்கள் அவரை இலண்டனுக்குக் கொண்டு வந்தனர். அளவில்லாத் துன்பங்களை இடைவிடாமல் அனுபவித்த ஹென்றியைச் சிறையிலடைத்தார்கள். அடுத்த ஆறு ஆண்டுகள் சித்தம் கெட்டவராக ஹென்றி, சிறையிலேயே இருக்க வேண்டியவரானர்.

மார்கரெட் இங்கிலாந்தைவிட்டு ஓடிவிடவும், ஹென்றியும் சிறையிலடைக்கப்பட்டிருந்ததால் இனி, லங்காஸ்டியரின் தொல்லை தமக்கில்லை என்ற நிலையிலிருந்த நான்காம் எட்வர்டு,

வார்விக் பிரபுவின் பிடியிலிருந்தும் செல்வாக்கிலின்றும் விடுபட நினைத்தார். தம்முடைய வாளின் வன்மையாலும் மதிநுட்பத்தாலுமே எட்வர்டு யார்க். இங்கிலாந்து அரச உரிமையை அடைந்தார் என்று வார்விக் பிரபு நினைத்தோடல்லாமல், அரசரைத் தம் கைப்பாவையாகக் கொண்டிருக்கவும் முயன்றார். ஆயினும், திறமை கொண்டவரான நான்காம் எட்வர்டு, தக்க சமயத்தில் வார்விக் பிரபுவின் கொட்டத்தை அடக்க நினைத்திருந்தார். கி.பி. 1464 ஆம் ஆண்டிலிருந்தே இவ் விருவருக்கும் மனதாங்கல் ஏற்பட்டது.

**எட்வர்டு - வார்விக் தகராறு :** ஃபிரெஞ்சு மன்னரான பதினோராம் லூயி, மேற்கொண்டு லங்காஸ்டியருக்கு எவ்வித உதவியும் கொடுக்காமலிருக்கும் பொருட்டு அவ் வரசருடன் நான்காம் எட்வர்டை ஒரு நிரந்தர உடன்பாட்டைச் செய்துகொள்ளும் படியும், இதற்கேற்ப ஃபிரான்சு அரசரின் மைத்துனியும் சாவாய் இளவரசியுமான போனு (Bona of Savoy) என்பவரை நான்காம் எட்வர்டு மணந்துகொள்ள வேண்டும் எனவும் வார்விக் பிரபு வற்புறுத்தினர். முதலில், இத் திருமணத்திற்கு ஆமோதித்த நான்காம் எட்வர்டு, ரகசியமாக லக்சம்பர்க்கைச் சார்ந்த எலிசபெத் உட்வில் (Elizebeth Woodville of Luxemburg) என்பவளை மணம் செய்து கொண்டது வார்விக் பிரபுவை அவமதித்தது போலாயிற்று. மேற்கொண்டு, தம் மனைவியின் உறவினரை எட்வர்டு முக்கியப் பதவிகளில் அமர்த்தி, வார்விக் பிரபுவின் அரசியல் செல்வாக்கைக் குறைக்கலானார். வார்விக்கின் சகோதரரான யார்க் பிஷப்பை, நான்காம் எட்வர்டு சான்சலர் பதவியிலிருந்து நீக்கிவிட்டார். தமக்கெதிராக செயல்பட்டு வரும் நான்காம் எட்வர்டைப் பழிவாங்கவேண்டுமென்ற எண்ணம் கொண்ட வார்விக் பிரபு, தம் மகளான இசபெல்லா என்பவளை அரசரின் சகோதரரும் கிளாரன்ஸ் பிரபுவுமான ஜார்ஜ் (George of Clarance) என்பவருக்கு மணமுடிக்கத் திட்டமிட்டார். நான்காம் எட்வர்ட்டைத் தக்க சமயத்தில் பட்டத்திலிருந்து விரட்டி, ஜார்ஜை அடுத்த அரசராக்குவதே வார்விக் பிரபுவின் இரகசிய எண்ணமாகும். ஆனால், வருங்காலத்தில் இத் திருமணம் சில அரசியல் சிக்கல்களை உண்டாக்கலாமென நினைத்த நான்காம் எட்வர்டு, இத் திருமணத்தை நடத்தி வைக்க மறுத்தார். இருப்பினும் ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்ட வார்விக் பிரபு, கலே நகரத்திற்குச் சென்று அங்கேயே இத் திருமணத்தை நடத்தி முடித்துவிட்டார். இக் காரியம் அரசரை அவமதித்தது போலிருந்தது. கலேயிலிருந்து கொண்டே எட்வர்டிற்கெதிராக வார்விக் பிரபு கி.பி. 1469 ஆம்

ஆண்டில் கலகச் செயல்களில் ஈடுபட்டார். நான்காம் எட்வர்டை நீக்கிவிட்டுத் தாம் ஜியார்ஜை இங்கிலாந்தின் அரசராக்கப் போவதாக, வார்விக் பிரபு பகிரங்கமாக அறிவித்ததைத் தொடர்ந்து, இவரது ஆதரவாளர்கள் ரெடஸ்டேல் ராபின் (Redesdale Robin) என்பவரின் தலைமையில் நாட்டில் கலகம் செய்தனர். இதனை அடக்க அனுப்பப்பட்ட மன்னரின் படைகள் எட்ஜ்கோட் (Edgecote) என்னுமிடத்தில் தோற்கடிக்கப் பட்டது. இப் படையை நடத்திச் சென்ற அரசரின் மாமனார், சண்டையின் முடிவில் சிரச்சேதமடைந்தார். சில கட்டுப்பாடுகளுக் கிணங்கி, நான்காம் எட்வர்டு இனி ஆட்சி செய்ய வேண்டு மென்று வார்விக் பிரபுவின் சார்பில் கேட்டுக்கொள்ளப்பட்டது. ஆனால், எவ்வித எதிர்ப்பையும் சமாளிக்கக் கூடிய மன வலிமையைப் பெற்றிருந்த எட்வர்டு, இக் கலகக்காரர்களைச் சில மாதங்களிலேயே (கி.பி. 14:0) சிதறடித்தார். தோற்றோடிய கலகக்காரர்கள், தங்கள் அங்கி கலைந்து அவிழ்ந்தமை தெரியாமல் சிதறி ஓடியதால், இச் சண்டை 'அங்கியிழந்த களம்' (Lose coat field) எனப் பெயர் பெற்றது. எட்ஜ்கோட் சண்டையை யொட்டி இங்கிலாந்திற்குத் திரும்பியிருந்த வார்விக் பிரபுவும், இவரது மருமகன் ஜார்ஜும் 'லாஸ்-கோட்' சண்டையின் முடிவு தெரிந்த உடனேயே ஃபிரான்சு நாட்டுக்கு ஓடிவிட்டனர். நான்காம் எட்வர்டின் வெற்றிகளைக் கண்டு ஏற்கெனவே பொறாமையடைந்திருந்த ஃபிரெஞ்சு அரசர் பதினோராம் லூயி, தம்மிடம் அடைக்கலம் அடைந்த வார்விக் பிரபுவை மையமாக வைத்து, எட்வர்டின் ஆட்சியைத் தொலைக்கத் திட்டமிட்டார். லங்காஸ்டியர்களையும் யார்க்கியர்களையும் ஒற்றுமைப்படுத்தி, அதன் மூலம் நான்காம் எட்வர்டின் ஆட்சியைக் கவிழ்ப்பதே அத் திட்டமாகும். இதற்கேற்ப, வார்விக் பிரபுவுக்கும் (யார்க்) ஹென்றியின் மனைவியான மார்கரெட்டுக்கும் (லங்காஸ்ட்டர்) சமரசம் செய்து வைக்கப்பட்டது. இச் சமரசத்தை உறுதிப் படுத்தும் வகையில், வார்விக் பிரபுவும் தம் இளைய மகள் ஆன் நெவில் (Anne Neville) என்பவளை மார்கரெட்டின் மகன் எட்வர்டிற்குத் திருமணம் செய்து வைத்தார். இத் திருமணத்தைத் தொடர்ந்து, வார்விக் பிரபு, தம் ஆட்களை இங்கிலாந்துக்கு அனுப்பி, ஏனைய ஆதரவாளர்கட்குக் கலகத்திற்குத் தயாராக இருக்கும்படி இரகசியச் செய்தியை அனுப்பினார். மார்க ரெட்டும் இன்னும் எஞ்சியிருந்த லங்காஸ்டியருக்கு அவ்வாறே செய்தியை அனுப்பியிருந்தார். நான்காம் எட்வர்டைப் பட்டத் திலிருந்து நீக்கிச் சிறைப்பட்டிருக்கும் ஹென்றியை மீண்டும் அரசராக்குவதே இவர்களின் கூட்டுத் திட்டமாகும். இதற்குப் பதினோராம் லூயி தம் முழு ஆதரவைக் கொடுத்திருந்தார்.

கி.பி 1470ஆம் ஆண்டு எட்வர்டு மன்னர் இலண்டனில் இல்லாதபோது வார்விக் பிரபு, தம் ஆதரவாளர்களுடன் பிளிமத் (Plymoth) என்னுமிடத்திற்கு வந்து சேர்ந்தார். வார்விக்கின் சகோதரரான நார்த்தம்பர்லாந்து எர்லும் தம் பெரும் படையுடன் அரசருக்கெதிராக வார்விக் பிரபுவுடன் சேர்ந்து கொண்டார். நாட்டிலிருந்த ஏனைய யார்க் தலைவர்களும் எஞ்சியிருந்த லங்காஸ்ட்டர் குடியினரும் இப் படையெடுப்பாளர்களுடன் சேர்ந்து கொண்டனர். எதிரிப்படைகள் இலண்டனுக்குள் நுழைந்து நகரைத் தங்கள் வசமாக்கிக் கொண்டன. தமக்கு ஆதரவில்லாத நிலையில் சில நண்பர்களோடு நான்காம் எட்வர்டு தம் மைத்துனர் ஆட்சி செய்துவந்த நெதர்லாந்திற்குக் கப்பலேறினர்.

இலண்டனைத் தம் வசமாக்கிக் கொண்ட வார்விக் பிரபு, சிறைப்பட்டிருந்த ஹென்றியை விடுவித்துச் செயின்ட் பால் திருச்சபைக் கோயிலில் அவருக்கு முடிசூட்டச் செய்து, நாட்டின் அரசராக அறிவித்தார். அரசர் இன்னும் பைத்திய நோயினல் அவதிப்பட்டுவர, வார்விக் பிரபுவே முழு அதிகாரங்களைப் பெற்றிருந்தார். நாட்டைவிட்டு ஓடியிருந்த நான்காம் எட்வர்டின் மனைவியையும் அவளது மகனையும் வார்விக் பிரபு, வெஸ்ட் மின்ஸ்டர் திருக்கோயிலில் பிணையப் பொருள்களாகக் காவலில் வைத்தார். எட்வர்டு யார்க், அவரது மற்ற நண்பர்களின் சொத்துகள் பறிமுதல் செய்யப்படுவதற்கு வார்விக் பிரபுவினல் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. தாம் நினைத்ததைச் சாதித்து முடித்த வார்விக் பிரபுவுக்கு இன்னும் சில சங்கடங்களிருந்தன. ஆரும் ஹென்றியை மீண்டும் மன்னராக்கியிருந்ததால், தமக்கு வாரிசுரிமை கிடைக்குமா என்று வார்விக்கின் முதல் மருமகனை கிளாரன்ஸ் பிரபு மனம் குமுறி வந்தார். தமது திருமணத்தின் போது கிளாரன்ஸ் பிரபுவுக்கு வார்விக் கொடுத்திருந்த வாக்குறுதியைப்பற்றி எவரும் அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை. வார்விக் பிரபுவின் இளைய மகளை மணம் செய்து கொண்டிருந்த ஆரும் ஹென்றியின் மகனை எட்வர்டுக்கே அடுத்த வாரிசுரிமை கிடைக்குமென எதிர்பார்க்கப்பட்டது. இதனல், கிளாரன்ஸ் பிரபு மிகவும் ஏமாற்றமடைந்திருந்தார்.

மார்க்கரெட்டும், இவரது மகனும் இன்னும் ஃபிரான்ஸ் நாட்டிலேயே இருந்து வர, நாட்டிலே இருந்த லங்காஸ்டியருக்கு வார்விக் பிரபுவினிடத்து நம்பிக்கை இல்லாமலிருந்தது. யார்க்கியருக்கும், தங்கள் பழைய விரோதிகளான லங்காஸ்டியர் பிரபுக்களுக்குமிடையே பிடிப்பு இல்லை. இங்ஙனமாக, இங்கிலாந்தின்

[illegible] இருக்க, படையெடுப்புக்கான முயிற்சியில் நான்காம் எட்வர்டு மும்மரமாக ஈடுபட்டிருந்தார். தமக்கு வேண்டிய ஆதரவைத் தேடிக்கொண்டு, கி.பி. 1471 ஆம் ஆண்டில் நான்காம் எட்வர்டு, ரேவன்ஸ்பர் (கி.பி.1399-ல் இரண்டாம் ரிச்சர்டுக்கு எதிராக நான்காம் ஹென்றி லங்காஸ்டியர் படையிறக்கிய இடம்) என்னுமிடத்தில் இறங்கினர். சென்ற ஆண்டு வார்விக் பிரபுவின் ஆணையால் பறித்துக் கொள்ளப்பட்ட யார்க் டச்சியை (Duchy) கைப்பற்றிக் கொள்ளவே (முன்பு நான்காம் ஹென்றி சொல்லியிருந்ததைப் போலவே) தாம் நாடு திரும்பியிருப்பதாக நான்காம் எட்வர்டு அறிவித்துக்கொண்டார். வார்விக் பிரபுவின் சகோதரரும், கார்த்தம்பர்லாந்து எர்லுமான மாண்டேகு பிரபுவின் எச்சரிக்கையின்மையால், நான்காம் எட்வர்டு இலண்டனை நோக்கி விரைந்தார். இச் சமயத்தில் நான்காம் எட்வர்டுக்குப் பல ஆதரவாளர்கள் கிடைத்தனர். தமக்கு நாட்டிலே இன்னும் செல்வாக்கு இருப்பதை உணர்ந்து கொண்ட நான்காம் எட்வர்டு, பட்டத்தை மீண்டும் பெறவே தாம் படையுடன் வந்திருப்பதாக அறிவித்தார். சூழ்நிலை கட்டுக்கடங்காமல் போவதை உணர்ந்த வார்விக் பிரபு, துரிதமாகச் செயல்பட ஆரம்பித்தார்.

இலண்டனை நோக்கி விரைந்து கொண்டிருந்த நான்காம் எட்வர்டையும் அவர்தம் படையினரையும் கி.பி. 1471 ஏப்ரல், 12 ஆம் நாளில் பார்னெட் (Barnet) என்னுமிடத்தில் வார்விக் பிரபு தம் படையினருடன் சுற்றி வளைத்தார். ஆனால், சண்டை நடந்து கொண்டிருக்கும் போதே, கிளான்ஸ் பிரபு படையினருடன் தம் சகோதரர் நான்காம் எட்வர்டு பக்கம் சேர்ந்து கொண்டார். தம் மருமகன் இழைத்த இத் துரோகம் வார்விக் பிரபுவை ஆபத்தில் சிக்கவைத்தது. தொடர்ந்து நடந்த சண்டையில் வார்விக் பிரபு கொல்லப்பட்டுவிட்டார். வார்விக்கின் படைகள் கடுமையாக எதிர்த்துப் போரிட்டும் எண்ணிக்கையில் மிகுந்திருந்த நான்காம் எட்வர்டின் படைகளால் வெல்லப்பட்டன.

பார்னெட் சண்டை நடந்து கொண்டிருக்கையில், மார்கரெட் தம் மகன் எட்வர்டுடன் இங்கிலாந்தை வந்தடைந்தார். ஆனால், அதற்குள்ளாகவே வார்விக் பிரபுவின் மரணத்தையும், பார்னெட் சண்டையின் தோல்வியையும் தாம் தெரிந்துகொண்டதால் மார்க்கரெட் தம் ஆதரவாளர்களுடன் வேல்சை நோக்கிச் சென்றார். ஆனால், டியூக்ஸ்பரியில் (Tewkesbury) நான்காம் எட்வர்டின் படைகளை மடக்கிச் சண்டையிட்டார். கடுமையான

சண்டைக்குப் பிறகு, நான்காம் எட்வர்டு பெரும் வெற்றி பெற்றார். பல லங்காஸ்டியர்கள் கொல்லப்பட்டனர். ஆறும் ஹென்றிக்கும் மார்கரெட்டுக்கும் பிறந்த எட்வர்டு இளவரசரும் களத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டுக் கொலைசெய்யப்பட்டார். மார்கரெட் சிறைபடுத்தப்பட்டார். கி.பி. 1471, மே, 4 ஆம் நாளில் நடந்த இச் சண்டை நான்காம் எட்வர்டின் அரச உரிமையை ஊர்ஜிதம் செய்தது.

வெற்றி கொண்டு இலண்டன் திரும்பிய நான்காம் எட்வர்டு, ஒருவருக்கும் எந்தத் தீங்கும் செய்யாத, இன்னும் பைத்திய நிலையிலேயே இருந்த ஆறும் ஹென்றியை அரசியல் நெருக்கடி காரணமாகக் கொலைசெய்யும்படி ஆணையிட லங்காஸ்டியரின் அரசமரபு முடிந்துவிட்டது.

**இறுதிநிலை (கி.பி. 1487) :** டியூக்ஸ்பரி சண்டைக்குப் பின்னர், லங்காஸ்டியர் வம்சமே முடிவுற்றதால், எதிர்ப்பில்லாத நிலையில் கி.பி. 1483 ஆம் ஆண்டு வரை நான்காம் எட்வர்டு ஆட்சி புரிந்தார். அச் சமயத்தில், முன்பு தாம் வேல்சிலிருந்து விரட்டியிருந்த எட்மண்டு டியூட்டர் என்பவரின் மகன் ஹென்றி ரிச்மாண்ட் (Henry Richmond) என்பவரின் தலைமையில் கி.பி. 1485 ஆம் ஆண்டில், லங்காஸ்டிய ஆதரவாளர்கள் தம் யார்க் அரச பரம்பரையை முடித்தழிப்பார்களென்பது, நான்காம் எட்வர்டிற்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

நான்காம் எட்வர்டு காலமானதும், நாட்டில் காப்பாளராகப் பதவிப் பெற்ற இவரது சகோதரரான ரிச்சர்டு (கிளௌசெஸ்டர்) பிரபு, பாலக அரசர் ஐந்தாம் எட்வர்டைக் கொலை செய்துவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு, தம்மை மூன்றும் ரிச்சர்டு என அழைத்துக் கொண்டார். இவரது ஆட்சிக் காலத்திலேயே ஹென்றி ரிச்மாண்டு, தம் லங்காஸ்டிய ஆதரவாளர்களுடன் பாஸ்வொர்த் (Boseworth) போர்க்களத்தில் மூன்றும் ரிச்சர்டைக் கொன்று யார்க் அரசமரபை முடித்தார். நாட்டிலே புதிய அரசமரபை (டியூடர்) உருவாக்கியதோடு, பல ஆண்டுகளாகக் குடும்பப் பகை கொண்டு ஒருவரோடு ஒருவர் பொருது வந்த லங்காஸ்டியர்-யார்க் குடிகளுக்கிடையே நிரந்தர சமாதான உறவை ஏற்படுத்த எண்ணி ஹென்றி டியூடர், நான்காம் எட்வர்டின் மகளையும் மணம் செய்துகொண்டு, செந்நிற ரோஜாவையும் வெள்ளை ரோஜாவையும் ஐக்கியப்படுத்தினர். ஆனாலும், சில யார்க்கியத் தலைவர்கள் கி. பி. 1487 ஆம் ஆண்டு, ஹென்றி

டியூடரோடு ஸ்டோக் (Stoke) என்னுமிடத்தில் மோதித் தோல்வி யடைந்தனர்.

இச் சண்டையே ரோஜாச்சின்னப் போரின் கடைசிக் கைகலப்பாகும்.

### இப் போரின் விளைவுகள்

இப் போரினால் கடந்த பல ஆண்டுகளாக நாட்டின் அமைதி கெட்டிருந்தது; எண்ணிலடங்காதவாறு எவ்வளவோ உயிர்கள் பல களங்களிலே பலியிடப்பட்டன. முக்கியமாக, இப் போர் தொடங்கப்படுவதற்குக் காரணமாயிருந்த பிரபுக்களின் பலம் மிகவும் நொடிந்திருந்தது.

இப் போரில் பிரபுக்கள் குடியினர் இரு கட்சியினரோடு சேர்ந்து போரிட்டுக்கொண்டிருந்ததால், களங்களிலேயே பலர் கொல்லப்பட்டனர்; தப்பியோடியோர், எதிர்க் கட்சியினரால் மரண தண்டனை விதிக்கப்பட்டு இறந்தனர். இப் பிரபுக்களின் குடி, இங்ஙனம் நசித்து, இனி இவர்களால் அரசியலில் அத்து மீறிப் பிரவேசித்து நாட்டை அலங்கோலப்படுத்த முடியாமல் இப் போரின் விளைவு அமைந்திருந்தது. பிரபுக்களின் பலமற்ற இச் சூழ்நிலையைப் பயன்படுத்திக்கொண்டே, டியூடர்கள் காலத்தில் நாட்டில் வல்லாட்சி ஏற்பட்டது.

நாட்டில் சீரான நிர்வாகம் நடக்கவும் அமைதி நிலவவும் மன்னருடைய அதிகாரங்களைப் பலப்படுத்த வேண்டுமென பாராளுமன்றமும் மக்களும் நினைத்ததற்கேற்ப, இப் போரின் முடிவில் தோன்றிய புதிய அரசமரபு (டியூடர்), இவ் வெண்ணத்தைப் பயன்படுத்திக் கொண்டது. சுருங்கக் கூறின், இப் போரின் விளைவாக, அடுத்த ஒரு நூற்றாண்டுக்கு மேலாக நாட்டிலே வல்லமை பெற்ற தேசீய முடியாட்சி (Strong National Monarchy) தோன்றியிருந்தது.

## ரோசாசின்னப் போரின் பட்டியல்

### ஆறும் ஹென்றியின் காலம்

1. செயின்ட் : ஆல்பன்ஸ் (கி.பி. 1455) (யார்க்கியர் வெற்றி)
2. ஸ்ட்ராஃபோர்டு (கி.பி. 1459) (யார்க் வெற்றி)
3. லட்லோ (கி.பி. 1459) (லங்காஸ்டியர் வெற்றி)

4. நார்த்தாம்டன் (கி.பி. 1460) (யார்க் வெற்றி)
5. வேக்ஃபீல்டு (கி.பி. 1460) (லங்காஸ்டியர் வெற்றி)
6. மார்ட்டிமர் கிராஸ் (கி.பி. 1460) (யார்க் வெற்றி)
7. செயின்ட் ஆல்பன்ஸ் (கி.பி. 1460) (லங்காஸ்டியர் வெற்றி)
8. டவுடன் (கி.பி. 1461) (யார்க் வெற்றி)

**நான்காம் எட்வர்டின் காலம்**

9. எட்ஜ்கோட் (கி.பி. 1469) (அரசர் தோல்வி)
10. லூஸ்கோட் ஃபீல்டு (கி.பி. 1469) (அரசர் வெற்றி)
11. பார்னெட் (கி.பி. 1471) (அரசர் வெற்றி)
12. டியூக்ஸபரி (கி.பி. 1471) (அரசர் வெற்றி)

**மூன்றும் ரிச்சர்டு, ஏழாம் ஹென்றி**

13. பாஸ்வொர்த் (கி.பி. 1485) (மூன்றும் ரிச்சர்டு தோல்வி)
14. ஸ்டோக் (கி.பி. 1485) (ஏழாம் ஹென்றி வெற்றி)

## யார்க்கியர் ஆட்சி (நான்காம் எட்வர்டு) (கி. பி. 1461-83)

ரோசாச்சின்னப் போருக்கிடையே தம் வாளின் வன்மையால் அரசுரிமையைப் பெற்ற முதலாம் எட்வர்டே யார்க் குடியைச் சேர்ந்த முதல் மன்னராவார். டவுடன் சண்டைக்குப் பிறகு, எட்வர்டையே பாராளுமன்றம் இங்கிலாந்தின் அரசராக அறிவித்திருந்தது. கி.பி. 1461ஆம் ஆண்டிலிருந்து பத்தாண்டுகள் தாம் பெற்றிருந்த அரசமுடியைக் காப்பாற்றிக்கொள்ள நான்காம் எட்வர்டு பெரும் பிரயத்தனங்களைச் செய்ய வேண்டியவரா யிருந்தார். டியூக்பரிச் சண்டையிலேயே, இவரது அரசுரிமை நிலைக்கப்பெற்றது.

நான்காம் எட்வர்டு, ரோசாச்சின்னப் போரினல் இங்கிலாந்துக்குக் கிடைத்த அரசராவார். கம்பீரமான தோற்றத்தையும், இனிய பண்பினையும் கொண்டிருந்த நான்காம் எட்வர்டிடம், எதற்கும் உடனே முடிவு கண்டு விரைவில் செயலாற்றும் தன்மை இருந்தது. ரோசாச்சின்னப் போரினுல் அலைக்கழிக்கப்பட்ட நாட்டுக்கு, அப்போதைக்குத் தேவையாக இருந்த அமைதியையும் சீரான நிர்வாகத்தையும் நான்காம் எட்வர்டு கொடுக்கலானார்.

எட்வர்டு - III

④ ஜான் காண்ட் (லங்காஸ்டர் பிரபு)

⑤ எட்மண்டு (யார்க் பிரபு)

பிளேன்சி (காஸ்டைல் இளவரசி) = ஜான் காண்ட் (லங்காஸ்டர் பிரபு) = கேதரின் (இரண்டாம் மனைவி)

ஹென்றி - IV (லங்காஸ்டர் அரசர்)

ஜான் போபர்ட் (மூத்தவர்)

ரீச்சர்டு

ஹென்றி - V = கேதரின் (பிரெஞ்சு இளவரசி) = ஓவன் டியுடர்

ஜான் போபர்ட் (இளையவர்)

ரீச்சர்டு (யார்க் பிரபு)

ஹென்றி - VI (கி.பி. 1422 - 1461) = மார்கரெட் (ஆன்ஜூ)

எட்மண்டு டியுடர்

(போபர்ட்) மார்கரெட்

எட்வர்டு - IV (யார்க் அரசர்) (கி.பி. 1461 - 1483)

ரீச்சர்டு - III (கி.பி. 1483 - 1485)

எட்வர்டு இளவரசர்

ஹென்றி - VII (கி.பி. 1485 முதல்) (டியுடர் அரசர்)

எட்வர்டு - V (கி.பி. 1483)

மூன்றாம் எட்வர்டின் சந்ததி

வன்மையான ஆட்சியை அமைத்து, நாடு முன்னேற்றமடைய நான்காம் எட்வர்டு எடுத்துக்கொண்ட ஒவ்வொரு காரியத்திற்கும் மக்களின் பேராதரவைப் பெற்றிருந்தார். தம் ஆட்சிக் காலத்தில், நான்காம் எட்வர்டு பாராளுமன்றத்திற்கோ, பிரபுக்களுக்கோ, ஏனைய அமைச்சுள ஆலோசனையாளர்களுக்கோ அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் நாட்டில் வல்லாட்சியை ஏற்படுத்தினர். இவருக்குப் பணம் தேவையாக இருந்த காலத்திலும், நான்காம் எட்வர்டு பாராளுமன்றத்தின் தயவை நாடாமல் பிரபுக்களிடமிருந்தும், பெருந்தனககாரர்களிடமிருந்தும் நன்கொடைகளைப் பெற்றுக்கொண்டார். தம் சகோதரரும் கிளாரன்ஸ் டியூக்குமான ஜியார்ஜ் தமது அதிகாரத்திற்கு ஆபத்து விளைவிக்கக் கூடியவரெனத் தெரிந்தபோது, நான்காம் எட்வர்டு, அவரைத் தண்டிக்கத் தவறவில்லை. சுருக்கமாகக் கூறின், வருங் காலத்தில் அமைக்கப்படப் போகும் டியூடர் வல்லாட்சிக்கு இவ்வரசரின் ஆட்சிக் காலம் ஒரு முன்னோடியாக விளங்கியது.

நாட்டில் வல்லாட்சி அமைக்கப்பட்டிருந்த போதிலும் இது நல்லாட்சியாக இருந்தது. வர்த்தகமும் வியாபாரமும் வளர்ந்தன. லண்டன் மாநகரில், நான்காம் எட்வர்டின் முயற்சியால் பொருள்களைச் சேகரித்து வைக்கக் கிடங்குகளும் வியாபாரிகளுக் கென்று தங்கும் விடுதிகளும் கட்டப்பட்டன. அச்சுத் தொழிலில் (Printing) புதுமையைப் புகுத்தியிருந்த வில்லியம் காக்ஸ்ட்டன் (William Caxton) என்பவரை இவ் வரசர் ஆதரித்துப் பொருளுதவி கொடுத்துக் கௌரவப்படுத்தியதாலும் நான்காம் எட்வர்டின் ஆட்சி சிறப்புற்றதாக அமைகிறது.

**நான்காம் எட்வர்டின் வெளிநாட்டுக் கொள்கை:** சிறந்த வீரராகவும், நல்ல ஆட்சியாளராகவும் இவர் விளங்கிய தோடல்லாமல், அரசியல் தந்திரம் தெரிந்தவராகவும் இருந்தார். ஐரோப்பிய அரசியலில் தமக்குச் செல்வாக்குத் தேடிக் கொள்ள தமது சகோதரி மார்கரெட் என்பவளைப் பர்கண்டியின் டியூக்கான சார்லசுக்கு (Charles the Bold) மணமுடித்து வைத்தார். இவரது உதவியைக் கொண்டு, ரோசாச் சின்ன போர்க் காலத்தில் தமக்கெதிராகச் சூழ்ச்சியில் ஈடுபட்டிருந்த ஃபிரெஞ்சு அரசரை ஒடுக்க நான்காம எட்வர்டு நினைத்தார். இதற்கேற்ப கி.பி. 1475ஆம் ஆண்டில் தம் பெரும்படையுடன் நான்காம் எட்வர்டு ஃபிரான்சு நாட்டையடைந்து, எவ்வித எதிர்ப்பும் இல்லாமல் பெக்குவிசனி (Pecquigny) என்னும் இடம் வரை முன்னேறினர். நூற்றாண்டுப்போரின் இறுதிக் கட்டத்தில் ஆங்கிலேயர் அடைந்திருந்த அவமானம் நான்காம் எட்வர்டால்

நீக்கப்படுவதாக இப் படையெடுப்பு அமைந்தது. படைகொண்டு எதிர்க்கத் துணிவில்லாத ஃபிரெஞ்சு அரசர் பதினோராம் லூயி, இதே ஆண்டு ஆகஸ்டு 13ஆம் நாள் பெக்குவிக்னியில் ஆங்கில அரசரைச் சந்தித்து, ஓர் உடன்பாட்டைச் செய்துக் கொண்டார். இவ்வுடன்படிக்கையின் படி, எட்வர்டுக்கு ஆண்டொன்றுக்கு 50,000 பொற்காசுகளைக் கொடுப்பதாக ஃபிரெஞ்சு அரசர் ஒப்புக் கொண்டு போரைத் தவிர்த்தார். மேலும் நான்காம் எட்வர்டால் சிறைப்படுத்தப்பட்டிருந்த மார்கரெட்டை (ஆறும் ஹென்றியின் மனைவி) விடுதலை செய்யும்படி கேட்டுக்கொண்டு அவருக்கு மீட்புப் பணமாக 75,000 பொற்காசுகளையும் பதினோராம் லூயி கொடுத்திருந்தார். சண்டையெதுவுமில்லாமலேயே புகழும், பொருளும் கொண்டு நான்காம் எட்வர்டு நாடு திரும்பினர். ரோசாச்சின்னப் போர்க் காலத்தில் தமக்கெதிராகச் சில சமயங்களில் செயல்பட்ட ஸ்காட்டியர்களையும் நான்காம் எட்வர்டு ஒடுக்க விரும்பினர். கி.பி. 1480ஆம் ஆண்டில், இதற்கான ஓர் சந்தர்ப்பமும் கிடைத்தது. ஸ்காட்டிய அரசரான மூன்றும் ஜேம்ஸ், அடிக்கடி, வடஇங்கிலாந்தின் எல்லைப் புறங்களைத் தாக்கினர். ஸ்காட்டிய அரசரால் நாடு கடத்தப்பட்டிருந்த அவரது சகோதரரான ஆல்பனி டியூக் (Duke of Albany) என்பவர், அப்போது இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்திருந்தார். நான்காம் எட்வர்டு தம் படையினரை ஆல்பனிடியூக்கிற்கு கொடுத்து, தம் சார்பிலே ஸ்காட்லாந்துமீது படையெடுக்கச் செய்தார். பெர்விக் Berwick) நகர்வரை இப் படையினர் முன்னேறிவிடவே, மூன்றும் ஜேம்ஸ் பணிந்து சமாதானத்திற்கு ஒப்புகொண்டார்.

ஃபிரெஞ்சு அரசரான பதினோராம் லூயி, தாம் முன்பு கொடுத்திருந்த வாக்கினை மீறி, தம் மகனை (ஃபிரான்சு மூத்த இளவரசர்) நான்காம் எட்வர்டின் மகளான எலிசபெத்துக்கு மணம் முடித்து வைக்க தயக்கம் காட்டியபோது, கி.பி. 1483ஆம் ஆண்டில் அந் நாட்டின்மீது படையெடுக்க இவ் வரசர் திட்டமிட்டார். ஆயினும், அதற்குள்ளாகத் தம் நாற்பத்திரண்டாவது வயதில் நான்காம் எட்வர்டு காலமாகி விட்டார்.

இடைக் காலத்தில் இங்கிலாந்தையாண்ட மன்னர்களிடையே ஒரு திறமைசாலியாகக் கருதப்பட்ட நான்காம் எட்வர்டு வாள் ஏந்தி, இரத்தம் சிந்தி தம் யார்க் குடியினருக்குப் பெற்றுக் கொடுத்திருந்த வாரிசுரிமை கி.பி. 1485ஆம் ஆண்டில் முற்றுப் பெறப் போகின்றது என்பதற்கான அறிகுறிகள் கி.பி. 1483ஆம் ஆண்டில் காணப்பட வில்லையானலும் அதற்கேற்ப ஒரு சூழ்நிலை இவரது மரணத்தை ஒட்டிக் காணப்பட்டது.

## ஐந்தாம் எட்வர்டு (கி. பி. 1483)

காலம் சென்ற நான்காம் எட்வர்டுக்கு எலிசபெத் என்ற மூத்த பெண்ணை அடுத்து, பன்னிரண்டு வயது நிரம்பிய எட்வர்டு என்ற மகனும் (வேல்ஸ் இளவரசர்) ஒன்பது வயது நிரம்பப்பெற்ற ரிச்சர்டு (யார்க் கோமகன்) என்ற மற்றொரு மகனும் இருந்தனர். இவர்களில் எட்வர்டே பட்டத்திற்குரியவராதலால், இப் பாலகனே நாட்டின் அடுத்த அரசராக ஐந்தாம் எட்வர்டு என அறிவிக்கப்பட்டார்.

அரசர் இளவயதினராகையால், இவர் பெயரில் ஒரு காப்பாளர் ஆட்சி அமைக்க ஏற்பாடாயிற்று. இவ் வுரிமைக்கு, அரசரின் தாயான எலிசபெத் (உட்வில்), அரசரின் சிறிய தந்தையான ரிச்சர்டு (கிளௌசெஸ்ட்டர்) என்பவர்கள் போட்டியிட்டனர். எலிசபெத்துக்கும் ரிச்சர்டுக்கும் ஏற்கெனவே இருந்த குடும்பப் பகையும், இந் நிலைமையை மேலும் மோசமாக்கியது. இருப்பினும் நாட்டில் அப்போதிருந்த அரசியல் சூழ்நிலை காரணமாக, ரிச்சர்டு கிளௌசெஸ்ட்டரே அரசரின் காப்பாளராக நியமனம் பெற்றார். பேராசையும் கபட உள்ளமும் கொண்ட ரிச்சர்டு, தாமே ஆட்சியைக் கைப்பற்றிக்கொள்வதற்குத் திட்டமிட்டார். முடிசூட்டு விழாவிற்காக இலண்டன் மாநகருக்கு ரிச்சர்டால் அழைக்கப்பட்ட ஐந்தாம் எட்வர்டும், சகோதரர் ரிச்சர்டு யார்க்கும் வஞ்சகமாக வழியிலேயே சிறைபிடிக்கப்பட்டனர். முடிசூட்ட வேண்டிய ஐந்தாம் எட்வர்டு, லண்டன் டவருக்கு அனுப்பப்பட்டார். அரசரின் அன்னையார் எலிசபெத் உட்வில் வெஸ்ட்மின்ஸ்டர் திருக் கோயிலில் பாதுகாப்புக் கோரித் தஞ்சமடைந்துவிட்டார். ஆங்கிலேய அரியணையை அபகரித்துக் கொள்ள ரிச்சர்டு (காப்பாளர்), இன்னொரு சூழ்ச்சியையும் செய்தார். ஐந்தாம் எட்வர்டின் தாயான எலிசபெத் உட்வில்லை, நான்காம் எட்வர்டு எவ்விதச் சமயச் சடங்கும் இல்லாமல் திருமணம் செய்து கொண்டிருந்ததால் இந்தப் பாலக அரசரின் வாரிசு செல்லாதென்றும், அந் நிலையில் தமக்கே பட்டம் சேரவேண்டுமென்றும் ரிச்சர்டு சொன்னதை நாட்டுப் பிரபுக்கள் ஏற்றுக் கொண்டனர். பின்னர், கூட்டப்பட்ட பாராளுமன்றமும் இதை ஒப்புக் கொண்டது. இச் சூழ்நிலையிலேயே நான்காம் எட்வர்டின் சகோதரரும், கிளௌசெஸ்டர் பிரபுவுமான ரிச்சர்டு, தம்மை நாட்டின் அரசராக கி.பி.1483, ஜூன் 6ஆம் நாள் அறிவித்துக் கொண்டார்.

பட்டத்தை அபகரித்துக் கொண்ட மூன்ரும் ரிச்சர்டு, தம்மிடம் சிறைப்பட்டிருந்த எட்வர்டையும், ரிச்சர்டு இளவரசரையும் ரகசியமாகக் கொலை செய்துவிட்டார். இரண்டு மாதங்களே நாட்டின் அரசராக இருந்த ஐந்தாம் எட்வர்டின் காலம் இங்ஙனமாக முடிந்தது.

## மூன்ரும் ரிச்சர்டு (கி. பி. 1483 - 1485)

வஞ்சகத்தால் மகுடத்தை அபகரித்துக் கொண்ட மூன்ரும் ரிச்சர்டே யார்க் குடியின் கடைசி அரசராவார்.

நாட்டிலிருந்த குழப்ப நிலையைச் சமாளிக்கத் திறமையும் கண்டிப்பும் கொண்ட ஒரு வல்லவனே அரசராக இருக்கவேண்டுமென மக்களிடையே நிலவிவந்த எண்ணத்தைப் புரிந்து கொண்டவராகவே மூன்ரும் ரிச்சர்டு நாட்டை ஆள முற்பட்டார்.

வீரத்திற்கும் திறமைக்கும் புகலிடமாக இருந்த இளவரசர், தம் ஆட்சியைப் பலப்படுத்துவதற்காகப் பல செயல்களை மேற்கொண்டார். அரசியாரின் (உட்வில்) கட்சியைச் சேர்ந்த ஹேஸ்டிங்ஸ் பிரபுவையும், கிரேசி பிரபுவையும் இராஜத்துரோகக் குற்றம் சாட்டிக் கொன்ருர். தம் உரிய நண்பராக இருந்து, பின்னர் பேராசை கொண்டு தம் ஆட்சியைக் கவிழ்க்கத் திட்டமிட்டுக் கலகத்தில் இறங்கிய பக்கிங்ஹாம் பிரபுவையும் அடக்கித் தூக்கிலிட்டுக் கொன்ருர்.

கி.பி. 1484ஆம் ஆண்டில் பாராளுமன்றம் ஒன்றைக் கூட்டிச் சட்டவரம்பிற்குட்பட்டவராக ஆட்சி செலுத்த மூன்ரும் ரிச்சர்டு தாமே வலிய ஒப்புக்கொண்டார். நான்காம் எட்வர்டின் காலத்தில் பாராளுமன்ற அனுமதியின்றி வசூலிக்கப்பட்ட நன்கொடைகளைச் சட்ட விரோதமாக்கினுர். பாராளுமன்றத்தின் அனுமதியின்றி மக்களிடம் நேரடியாக வரி வசூலிக்கும் முறை, இங்ஙனம் இவர் காலத்தில் கைவிடப்பட்டது.

இவர், தம் ஆட்சிக் காலத்தில் வேறு சில நல்ல திட்டங்களையும் கொண்டு வந்திருந்தார். ஜூரி (Jury) முறை திருத்தப்பட்டு, நீதி நிர்வாகம் சீராக்கப்பட்டிருந்ததுடன் அரசரின் பண்ணைகளில் வேலை பார்த்த உள் குடிகளுக்கு (பாராளுமன்றம்) வாக்குரிமை வழங்கப்பட்டது; நாட்டில் துரிதமான கடிதப் போக்குவரத்தை நடத்த, தபால் முறையொன்றும் கொண்டுவரப்பட்டது. போர்க் காலத்திற்கு ஏற்ப முன்னேற்பாடாக, வீரர்களுக்கு வேண்டிய

ஆயுதங்களும், வில்களும் தயாரிக்கப்பட்டன, நாட்டின் கப்பல் களும் பழுதுபார்க்கப்பட்டுத் தயாரான நிலையில் வைக்கப் பட்டன.

இத்துணைக் காரியங்களையும் மூன்றும் ரிச்சர்டு செய்திருந்தும், நாட்டிலே இவருக்கு இன்னும் எதிர்ப்பு இருந்தது. குறிப்பாகப் பாலக அரசரையும் அவர்தம் சகோதரரையும் மூன்றும் ரிச்சர்டு கொன்றுவிட்டதால், இவருக்கு அவப்பெயர் ஏற்பட்டிருந்தது. தம் தமையனரின் மகளான எலிசபெத் இளவரசியை மணந்து கொள்ள மூன்றும் ரிச்சர்டு விரும்பி இருந்ததும் இவருக்கு எதிர்ப்பைத் தேடிக் கொடுத்தது.

யார்க் குடும்பத்தினரே, இவரை உள்ளூர வெறுத்து வந் தனர். ரோசாச் சின்னப்போரின் இறுதியில் நசுக்கப்பட்ட லங்காஸ்ட்ரியரும் மூன்றும் ரிச்சர்டை எதிர்க்க நேரம் பார்த்துக் கொண்டிருந்தனர். இரு கட்சியினராகச் சேர்ந்து அரசருக் கெதிராக ஓர் சூழ்ச்சிகரமான திட்டத்தில் ஈடுபட்டனர்.

லங்காஸ்டர் குலத்திற்குத் தூர உறவினரான ஹென்றி ரிச்மாண்டு (டியூடர்) என்பவர், அப்போது பிரிட்டானியாவில் அடைக்கல வாழ்வை நடத்தி வந்தார். இவருக்கு, காலம் சென்ற நான்காம் எட்வர்டின் மூத்த மகளான எலிசபெத்தை மணம் செய் வித்து லங்காஸ்டர்–யார்க் ஆதரவாளர்க்கிடையே ஒற்றுமையை ஏற்படுத்தி மூன்றும் ரிச்சர்டை எதிர்க்க வேண்டுமென்பதே அத் திட்டமாகும். இதற்கு, ஹென்றி டியூடர் ஒப்புக்கொண்டார்.

கி.பி. 1485, ஆகஸ்டு முதல் தேதியன்று, ஃபிரெஞ்சு அரசரான எட்டாம் சார்லசால் கொடுக்கப்பட்ட படை உதவியைக் கொண்டு, ஹென்றி (டியூடர்) இங்கிலாந்தை வந்தடைந்தார். உட்வில் கட்சி யினரும், பக்கிங்ஹாம் ஆதரவாளர்களும், வேறு சில யார்க் குடும் பத்தினரும் நாட்டில் இன்னும் இருந்து வந்த லங்காஸ்டிரியர் ஆதரவாளர்களும் படைகொண்டு வந்திருந்த ஹென்றியுடன் சேர்ந்து கொண்டனர். தம் குடும்பத்தினரின் பூர்வீக இடமான வேல்சை நோக்கி ஹென்றி முன்னேறினர். பழைய லங்காஸ்ட்ரிய குடியைச் சார்ந்த டால்போட்டுகளும் (Talbots) ஷிருஸ்பரி பிரபுக் களும், இப் புதிய படையெடுப்பாளர்களுக்கு உதவிபுரிய முன் வந்தனர்.

தமக்கு இங்ஙனம் ஒரு பெரிய ஆபத்து உருவாகி யிருப்பதைக் கண்டதும் மூன்றும் ரிச்சர்டு, தம் எதிரிகளைப் பாஸ்வொர்த் (Bosworth) என்னுமிடத்தில் சந்தித்து மோதினர். ஆயினும், இக்

காலத்தில் நண்பர்கள் என நம்பப்பட்டவர்கள் எதிரியின் பக்கம் சேர்ந்து கொண்டனர். யார்க்கியப் பிரபுக்களான ஸ்டான்லியும், நார்த்தம்பர்லாந்து எர்லான இன்னொரு யார்க்கியர் வில்லியமும் தம் படையினரோடு அரசரைக் கைவிட்டு ஹென்றியின் பக்கம் சேர்ந்து போரிட்டனர்.

வீரத்துடனும் கடுமையாகவும் சண்டையிட்டும், போர்க் களத்திலேயே மூன்றாம் ரிச்சர்டு கொல்லப்பட்டுவிட்டார். யார்க் அரசமரபு இத்துடன் முடிவுற்றது.

## லங்காஸ்ட்ரியர் பரிசோதனையின் முடிவும் யார்க்கியர் வல்லாட்சியும்

லங்காஸ்ட்டர் குலத்தின் முதல் அரசரான நான்காம் ஹென்றியின் (கி. பி. 1399 - 1413) காலத்திலேயே 'லங்காஸ்ட்டர் பரிசோதனை'யின் முதற்கட்டம் (Lancastrian Experiment) அமைந்திருந்தது.

**நான்காம் ஹென்றியின் காலம் :** பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெற்றிருந்த அவ் வரசர், அம் மன்றத்தின் தயவினாலேயே ஆட்சியை நடத்தவேண்டியவரானார். அரசரின் நிலையைப் புரிந்து கொண்டிருந்த பாராளுமன்றம் அவரது ஆட்சிக் காலத்தில் அங்ஙனம் பல உரிமைகளைப் பெற்றிருந்ததென்பதை நான்காம் ஹென்றியின் ஆட்சியில் காண முடிகிறது. மன்றத்தின் அனுமதி இல்லாமல் அரசர் அமைச்சரவை அமைக்கக் கூடாதென்றும், பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்த அமைச்சர்களை அரசர் நீக்கிவிடவேண்டுமென்றும், மன்றத்தினரின் ஒப்புதலின்றி அரசர் எந்த ஓர் ஆட்சி விவகாரத்திலும் எந்த ஒரு முடிவுக்கும் வரக் கூடாதென்றும் நான்காம் ஹென்றியின் காலத்தில் அரசரின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டிருந்தன.

**ஐந்தாம் ஹென்றியின் காலம் :** அடுத்து பட்டமெய்திய ஐந்தாம் ஹென்றி (கி. பி. 1413—1422), தம் லங்காஸ்ட்ரிய குடி பெற்றிருந்த (பலமற்ற) அரசுரிமையை வெற்றிகரமான போர் ஒன்றை நடத்தி மறைக்க முற்பட்டவராகத் தம் காலத்தையும் ஆற்றலையும் நூற்றாண்டுப் போரிலே கழித்தவரானார். அப் போர்ச் செலவுகளைச் சமாளிப்பதற்காக ஐந்தாம் ஹென்றியும் பாராளுமன்றத்தின் தயவை எதிர்ப்பார்த்தவராக இருந்ததால், இவ் வரசரின் காலத்திலும், பாராளுமன்றம் அடிக்கடி கூட்டப் பட்டது. முந்தைய ஆட்சியில் பெற்றிருந்த சிறப்புரிமைகள், இவ் வரசரின் காலத்திலும் பாராளுமன்றத்தால் பாதுகாக்கப் பட்டன.

**ஆரும் ஹென்றியின் காலம் :** காலமடைந்த அரசர் ஐந்தாம் ஹென்றியின் அடுத்த வாரிசு இளைய பிள்ளையென்பதால், தம் சகோதரர் பெட்ஃபோர்டு பிரபுவை ஃபிரான்சுக்குப் பகர ஆட்சியாளராகவும், மற்றோர் இளைய சகோதரர் கிளௌ செஸ்ட்டர் பிரபுவை இங்கிலாந்தின் பகர ஆட்சியாளராகவும் அமர்த்தும்படி கேட்டுக்கொண்டார். ஆனால், பாராளுமன்றம் அதனை ஒப்புக்கொள்ளாது, அவர்கள் இருவரையும் அந்தந்த இடத்திலே காப்பாளராக அமர்த்தியிருந்தது. ஆகவே, இவ் வரசர் பாலகப்பருவத்திலேயே பட்டத்தைப் பெற்றிருந்ததால், அரசருக்குப் பதிலாக எவரொருவர் காப்பாளராக இருக்க வேண்டும் என்பதை முடிவு செய்யும் அதிகாரத்தைப் பாராளு மன்றம் பெற்றிருந்தது. ஆனால், ஆரும் ஹென்றி, தாமே சுயமாக ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட காலத்திலிருந்து பாராளு மன்றத்தின் முன் ஒப்புதலைப் பெறாமல் தம் விருப்பத்திற்குப் பாத்திரமான சிலருக்கு (சப்ஃபோக் பிரபு) அமைச்சர் பதவிகளைக் கொடுத்திருந்ததும் (கி. பி. 1437), நூறாண்டுப் போரைச் சரிவர நடத்தவில்லையென்று குற்றம் சாட்டப்பட்ட சப்ஃபோக் பிரபுவைத் தண்டிக்க நினைத்தபோது, அதனின்று அவரைக் காக்க அரசர் நாடுகடத்தியிருந்ததும் வல்லாட்சிக்கான அறிகுறிகளாகக் காணப்பட்டன. 'லங்காஸ்ட்டர் பரிசோதனை' முடிவுக்கட்டத்தை யடைந்துவிட்டதாகக் காணப்பட்டது. ஆனால், அரசரின் மன நோயும், பிரபுக்களிடையே தோன்றியிருந்த பூசலும் (ரோசாச் சின்னப் போரின்தொடக்க நிலை) பாராளுமன்றம், தான் ஏற்கெனவே பெற்றிருந்த உரிமைகளைக் காத்துகொள்வதற்கும், புதிய சில உரிமைகளைப் பெற்றுக்கொள்வதற்கும் சாதகமாக அமைந்தது. பொதுவாக லங்காஸ்ட்ரியர் காலத்தில் பாராளு மன்றம் இங்கிலாந்தின் அரசியலமைப்பில் ஒரு நிரந்தரமான இடத்தைப் பெற்றிருந்தது. வரிவிதிப்பு, சட்டமியற்றுதல், பண அளிப்புப் பகிர்வு முறை, தணிக்கைமுறை, அரசுரிமை நிர்ணயிக்கும் பொறுப்பு, அமைச்சர்கள்மீது குற்ற விசாரணை செய்தல் போன்ற அதிகாரங்களை இக் காலத்தில் பாராளுமன்றம் தன்னகத்தே கொண்டு விளங்கியது.

ரோஜாச் சின்னப் போர் நடந்த காலத்திலும். வெற்றி கொண்ட கட்சியினர் பாராளுமன்றத்தின் மூலமாகத் தோல்வி யடைந்த கட்சியினரை 'உரிமை நீக்கும் மசோதா' வைக் கொண்டு பழிவாங்கலாயினர். ஆயினும், இப் போரின் காலத்தில் பாராளுமன்றம் எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்ததென்பதை மறக்கலாகாது. வெற்றி கொண்ட லங்காஸ்ட்ரியரின் வற்புறுத்த லினால், கி. பி. 1459 ஆம ஆண்டு யார்க்கியர் சொத்துகளைப்

பறிமுதல் செய்த பாராளுமன்றம், அடுத்த ஆண்டு வெற்றிபெற்ற யார்க்கியர் கெடுபிடியினால் முன்பு கொண்டுவந்திருந்த துரோகக் குற்றச் சட்டங்களை ரத்துச் செய்துவிட்டு, ரிச்சர்டு (யார்க்) நாட்டின் காப்பாளர் பதவியையும் ஆறும் ஹென்றிக்குப் பின்னர் வாரிசுரிமையையும் கொடுத்திருந்தது. கி. பி. 1461 ஆம் ஆண்டு தம் வாளின் வன்மையினால் மகுடத்தைப் பெற்றிருந்த நான்காம் எட்வர்டு பணிந்து, லங்காஸ்ட்ரியரின் உரிமைகளையும், உடைமைகளையும் பறித்த பாராளுமன்றம் கி.பி. 1470 ஆம் ஆண்டு, வெற்றி வீரர் வார்விக் பிரபுவினால் மீண்டும் பட்டம் சூட்டப்பட்டிருந்த ஆறும் ஹென்றி அரசரென்றும் ஒப்புக் கொண்டது. இங்ஙனம் பற்பல ஆண்டுகளிலே கூட்டப்பட்ட பாராளுமன்றங்கள், சமயத்திற்கேற்ப தமது ஒப்புதல்களைக் கொடுத்திருந்தது. ஆயினும், இம் மன்றத்தின் ஒப்புதல் ஆட்சியாளருக்கு அப்போதைக்கப்போது தேவைப்பட்டதாகவே இருந்தது. ரோஜாச் சின்னப் போரின் இடையிலேயே ஆட்சியைக் கைப்பற்றி, யார்க் அரச மரபைத் தோற்றுவித்த நான்காம் எட்வர்டு காலத்திலிருந்தே பாராளுமன்றத்தின் செல்வாக்கு குறையலாயிற்று.

இதுவே, பாராளுமன்றத்துடன் லங்காஸ்ட்ரிய அரசர்கள் நடத்தி வந்த அரசியல் சோதனைக்கு முடிவுக் காலமாகவும் வல்லாட்சிக்குத் தொடக்க காலமாகவும் அமைந்தது.

**யார்க்கியர் வல்லாட்சி (கி.பி. 1461—85)**

தம் வாளின் வன்மையினால் ஆட்சியைப் பெற்ற நான்காம் எட்வர்டுக்கு (லங்காஸ்ட்ரியருக்கு தேவைப்பட்டது போல்) பாராளுமன்றத்தின் தயவு தேவையாக இல்லை. தாம் பெற்றிருந்த அரச மகுடம், இவருக்குப் பாராளுமன்றச் சட்டத்தினால் கிடைத்ததல்ல. ஆகவே, இவ் வரசரை எந்த ஒரு சட்டத்தினாலும் பட்டத்திலிருந்து பாராளுமன்றம் நீக்க இயலாது. பாராளுமன்றத்தின் ஒப்புதலினால் (கி. பி. 1399-ல்) லங்காஸ்ட்ரியர் பெற்றிருந்த மரபுரிமையைவிட நான்காம் எட்வர்டு தம் வாள் கொண்டு இரத்தம் சிந்தி, யார்க்கியருக்கு மேலான மரபுரிமையைப் பெற்றுக் கொடுத்திருந்தார். ஆகவே தான் நான்காம் எட்வர்டின் காலத்தில் கி. பி. (1461—83) அரசருடைய அதிகாரம் மீண்டும் நிலைநாட்டப்பட்டது.

**நான்காம் எட்வர்டின் காலம்:** இதற்கேற்ப சாதகமான சூழ்நிலையும் நாட்டிலே இருந்தது. அடிக்கடி அரசியல் விவகாரங்களில் தலையிட்டு மன்னராட்சியை அலங்கோலப்படுத்தி வந்த பிரபுக்களில் பெரும்பாலோர் ஏற்கெனவே ரோசாச் சின்னப்

போரில் கொல்லப்பட்டுவிட்டனர். சில பிரபுக்கள்மீது துரோகக் குற்றங்களைச் சாட்டி, நான்காம் எட்வர்டு கொலைக்களத்திற்கு அனுப்பி வைத்தார். மேலும், எஞ்சியிருந்த சில பிரபுக்களிடையேயும் அப் போரின் விளைவாக, ஒற்றுமை உணர்ச்சி இல்லாமல் இருந்தது. பிரபுக்களின் குறுக்கீடு இல்லாமல் இருந்த இக் காலமே வல்லாட்சிக்கு ஏற்ற காலமாக இருந்தது.

இவ் வரசரின் காலத்தில், பணம் விரயமாகும்படி, வெளி நாட்டுப் போர் எதுவும் நடக்கவில்லை. இதனால், செலவுக்காக வேண்டிப் பாராளுமன்றத்தை அடிக்கடி கூட்ட வேண்டிய நிர்ப்பந்தமும் நான்காம் எடுவர்டுக்கு இல்லாமலிருந்தது. சுருக்கமாக சொல்வதெனில், இவ்வரசருக்குப் பணமுடையே ஏற்படவில்லை. ரோசாச் சின்னப் போரில் தாம் பெற்ற இறுதி வெற்றியைத் தொடர்ந்து, நாட்டிலிருந்த லங்காஸ்ட்ரியர் சொத்துகளை நான்காம் எட்வர்டு பறிமுதல் செய்தார். படை மானிய வரிகளையும், வர்த்தகக் கட்டணங்களையும் இவ் வரசர் தவறாது வசூலித்தார். மத குருமார்களிடமிருந்து பதின்மை வரியையும் பெற்றார். பிரபுக்களின் வருமானத்திலிருந்தும் பத்தில் ஒரு பங்கை அரசர் பெற்றுக் கொண்டார். குறிப்பாக, செல்வர்களைக் கட்டாயப்படுத்தி 'நன்கொடைகளை' (Benevolences) நான்காம் எட்வர்டு வசூலித்தார். இந்த நன்கொடைகளின் வழியில் மட்டும் அரசருக்கு 12,000 பவுன்கள் கிடைத்தன. பெக்கு விக்னி உடன்பாட்டின்படியும் ஃபிரெஞ்சு அரசரிடமிருந்து இவருக்குப் பொருள் கிடைத்தது.

தனக்குப் பணப்பற்றுக் குறையே இல்லாததால், நான்காம் எட்வர்டு, பணத்திற்காகப் பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டிய அவசியமில்லாமல் போய்விட்டது. தம் இருபத்திரண்டு வருட ஆட்சிக் காலத்தில் நான்காம் எட்வர்டு, ஏழு பாராளுமன்றங்களையே கூட்டியிருந்தார். ஒவ்வோர் ஆண்டும் பாராளுமன்றம் அழைக்கப்படவில்லை. சில சமயங்களில் தொடர்ந்தாற்போல் மூன்று ஆண்டுகள் இவ் வரசர் பாராளுமன்றத்தைக் கூட்டவே இல்லை. கி. பி. 1478ஆம் ஆண்டிலிருந்து தான் இறக்கும் வரையில் (கி. பி. 1483) ஆறும் எட்வர்டு பாராளுமன்றத்தைப் பற்றி நினைக்கக்கூட இல்லை. பாராளுமன்றம் அடிக்கடி கூட்டப் படாமல் போகவே, அரசரைக் கட்டுப்படுத்துவதற்கான வாய்ப்புகள் குறைந்து விட்டன.

இவ் வரசரின் காலத்தில் பாராளுமன்றம் நான்காம் எட்வர்டுக்குக் கீழ்ப்படிந்த ஓர் அரசியல் நிறுவனமாகவே

இருந்தது. நாட்டின் வாணிபத்தைப் பெருக்கி, அதன் வாயிலாகத் தம் வருமானத்தைப் (வர்த்தக வரிகள்) பெருக்கிக் கொள்ள வேண்டி, நான்காம் எட்வர்டு தம் ஆட்சிக் காலத்தில் பாராளு மன்றத்தைக் கட்டாயப்படுத்தி, வாணிபத்தைப்பற்றிய சில சட்டங்களைக் கொண்டு வந்திருந்தாரே தவிர, அதன் குறைகளைத் தீர்ப்பதற்கோ, அதற்கு உரிமைகளை வழங்குவதற்கோ எந்த ஓர் அரசியல் ஏற்பாடும் செய்யப்படவில்லை.

**மூன்றும் ரிச்சர்டின் காலம்:** மூன்றும் ரிச்சர்டு (கி.பி. 1483—1485), தம் ஆட்சிக் காலத்தில் கூட்டியிருந்த ஒரே பாராளு மன்றத்தில் (கி. பி 1484), மன்றத்தின் அனுமதியின்றி 'நன்கொடைகளை' வசூலிப்பது முறையற்றது என்று ஒப்புக் கொண்டிருந்தாலும், பின்னர், அவற்றை வசூலிக்கலானார். இவ் வரசரும், தம் மூத்த சகோதரர் நான்காம் எட்வர்டின் வழியையே பின்பற்றலானார். அரசரின் ஆலோசனைச் சபையிலும் தமக்கு வேண்டிய பிரபுக்களையே அமர்த்தி, அதையும் தங்களுக்குக் கீழ்ப்படிந்த ஒரு கருவியாக யார்க் அரசர்கள் அடக்கிவைத்திருந்தனர்.

யார்க்கியர் வல்லாட்சியே அடுத்து வரப்போகும் டியூடர்களுக்குக் கற்றுத்தரக்கூடிய ஆட்சிப் பாடமாக அமைந்தது. பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை (ஸ்டூவர்டுகள் காலம்) பாராளுமன்ற அமைப்பு அரசருக்குக் கீழ்படிந்த ஓர் நிறுவனமாகவே இருந்தது.

# 8. இடைக்கால நாகரிகம்

## இடைக்கால நாகரிகத்தின் மேம்பாடு

இடைக்காலத்தில் (Middle Ages) எந்தக் காலம் வரையில் மேம்பாடான நாகரிகம் தழைத்திருந்தது என்று நிச்சயமாகக் குறிப்பிட்டுக் காட்ட முடியாதெனினும், பொதுவாகப் பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றுண்டுகளிலேயே நாகரிகம் உன்னத நிலையி லிருந்தது. இந்த நூற்றுண்டுகளிலேயே திருச்சபை மிகுந்த செல்வாக்குப் பெற்றுச் சீரும் சிறப்புமாக விளங்கியது. கல்விக் கூடங்களும், பல்கலைக் கழகங்களும், (Universities) வளர்ச்சியைப் பெற்றிருந்தன. கட்டடக் கலை சிறந்தோங்கியது. நகரங்களும், கூட்டுறவுக் கழகங்களும் மேம்பாடடைந்திருந்தன. சுருக்கமாகக் கூறின், இந்தக் காலத்திலேயே இடைக்கால நாகரிகம் உச்ச நிலையை அடைந்திருந்தது.

### திருச்சபையின் செல்வாக்கு

ஐரோப்பிய நாடுகளில் பெரும்பான்மையானவை கத்தோ லிக்க கிறித்துவ சமயத்தை ஏற்றுக்கொண்டிருக்க, இக் காலத்தில் திருச்சபை தன் செல்வாக்கின் உச்சக் கட்டத்திலிருந்தது. திருச் சபையின் தலைவரான போப்பாண்டவர் கிறித்துவ மக்களின் ஆன் மீகத் தலைவராக (Spiritual Leader) ஏற்றுக்கொள்ளப்பட்டிருந் தார். போப்பாண்டவரின் இருப்பிடமான ரோமாபுரி இம் மக்களின் ஆன்மீகத் தலைநகரமாக விளங்கியது. சமய நம்பிக்கை மிகுந்திருந்த இக் காலத்தில், திருச்சபை மக்களின் மனத்தை மிகவும் கவர்ந்ததாகவும் இருந்தது.

**பொதுக் காரணங்கள் :** திருச்சபை, இக் காலத்தில் மக்களின் உள்ளத்தில் அழியா இடம் பெற்று, சீரும் சிறப்புமாக விளங்கிய தற்குச் சில காரணங்கள் இருந்தன.

சமய (திருச்சபை) வழிபாடுகளினுலே தாங்கள் செய்திருக்கும் பாவங்களும், தங்கள் ஆன்மாவைப் பீடித்திருக்கும் பிணிகளும் தீருமென்ற நம்பிக்கை மக்களிடையே பரவியிருந்தது.

திருச்சபையினரும், தாங்கள் இலத்தீன் மொழியிலே கிறித்துவ நாடுகள் அனைத்திலும் நடத்தி வந்த பிரார்த்தனை வழிபாடுகளில், இந்த நம்பிக்கையை வலியுறுத்தி வந்தனர். எழுதவும், படிக்கவும் தெரிந்திருந்த லௌகீகர்கள் (Laymen) ஒரு சிலரே இருந்த இக் காலத்தில், கல்வி கற்பதும் கற்பிப்பதும் திருச்சபையின் ஏகபோக உரிமையாக (Monopoly) இருந்தது.

சமுதாயத்தின் கடைநிலையில் இருப்பவர்களாயினும், எவ் வகுப்பைச் சார்ந்தவர்களாயினும் மனத்திண்மை கொண்டவர் களாகவும் ஒழுக்கச் சீலராகவும் திறமை படைத்தவர்களாகவும் இருந்தால், திருச்சபைப் பணியின் வாயிலாக உன்னத நிலையை அடைய முடியுமெனவும் திருச்சபை வழிகாட்டியது. ஒரு தாழ்ந்த குடியில் பிறந்திருந்த ஹில்டிபிராண்ட் (Hildebrand) தன் தகுதி யினாலும் திறமையினாலும் புகழ்பெற்ற போப்பாண்டவராக உயர்ந் திருந்தார் என்ற உண்மையும், ஒரு வேலையாளின் மகனை லாங்சாம்ப் (Longchamp,) தன் சீரிய நடத்தையினாலும் உழைப்பா லும் முதலாம் ரிச்சர்டு காலத்தில் ஈலியின் (Ely) பிஷப்பாகவும் அரசரின் சான்சலராகவும் இருந்து வந்தாரென்பதையும் மக்கள் திருச்சபையினர் உணர்திருந்தனர்.

மக்களின் அன்றாட வாழ்க்கையை அதிகமாக இயக்கி வந்த திருமணச் சட்டங்களை விசாரிக்க அதிகாரம் பெற்றிருந்ததோடு, குற்றம் புரிந்த குருமார்களைத் தண்டிக்கும் சிறப்புத் தனி உரிமை யையும் திருச்சபையைச் சார்ந்திருந்த நீதிமன்றங்கள் பெற் றிருந்தன. மக்களின் எண்ணத்திலேயே திருச்சபையின் செல் வாக்கு உயர்ந்திருந்தது.

**திருச்சபையின் ஆதிக்கப் போட்டி:** திருச்சபை எல்லாவற் றையும் தன்னுள் உட்படுத்திய சர்வ தேசிய நிறுவனமாக (Universal on Super National) விளங்கிய இக் காலத்தில், அரசியல் துறையில் சமயத் தலைவராகவும் விளங்கிய புனித ரோமப் பேரரசரோடு (Holy Roman Empire) சச்சரவிட்டது.

இச் சச்சரவில் மூன்று கொள்கை நிலைகள் (Theories) வற்புறுத்தப்பட்டிருந்தன. முதலாவது கொள்கையின்படி, போப் பாண்டவரும் அரசரும் மக்களின் அகத்தையும் புறத்தையும் ஆள்வதற்காக ஆண்டவனால் அமர்த்தப்பட்டவர்கள்; ஆக, போப்பாண்டவரும் அரசரும் சமநிலை பெற்றவராக ஒருவருக் கொருவர் உதவிசெய்து கொள்ளவேண்டும் என்ற கருத்து வற்புறுத்தப்பட்டது. உலகியலைப் (Seculor) பொறுத்தவரை அரசரே போப்பாண்டவரைவிட உயர்ந்தவர் என்பது இரண்டா

வது கொள்கை; இயேசுபிரானே 'அரசருக்குச் சேரவேண்டியதை அரசருக்குக் கொடுத்து விடுங்கள்' என்று சொன்னதாகச் சொல்லப்பட்ட அறிவுரையை அரசர்கள் தங்கள் சார்பிலே சுட்டிக் காட்டினர்; மேலும், மகா சார்லஸ் (ஃபிராங்), மகா ஆட்டோ (ஜெர்மனி) போன்ற அரசர்கள் காலத்தில் போப்பாண்டவர்கள் இவர்களிடமிருந்து, நிலங்களைப் பெற்றுக் கீழாளர்களாக (Vassals) இருந்தனரென்றும், இடைக்கால அரசர்கள் தங்கள் வாதத்திற்குச் சான்றுகள் காட்டினர். மூன்றாவது கொள்கையின்படி, எங்ஙனம் ஆண்டவன் உலக நன்மைக்காகச் சூரிய சந்திரர்களைப் படைத்திருந்தாரோ, அதுபோல் மக்களை நல்வழிப்படுத்த அதே ஆண்டவன் ஆன்மீக அதிகாரத்தைப் போப்பாண்டவருக்கும் உலகியல் அதிகாரத்தை அரசருக்கும் அளித்திருக்கிறார். எங்ஙனம் சந்திரன் தன் ஒளியை சூரியனிடமிருந்து பெற்றுப் பிரகாசிக்கின்றதோ, அது போன்று அரசரும் தன் அதிகாரங்களைப் போப்பாண்டவரிடமிருந்து பெற்றவராகின்றார். ஆக, அரசர்கள் போப்பாண்டவருக்குக் கீழாட்களாக இருக்கவேண்டும். இது திருச்சபையின் கருத்துரை வாதம்.

இக் கொள்கை வேறுபாடுகளால் திருச்சபைக்கும் அரசருக்கும் தோன்றியிருந்த ஆதிக்கப் போட்டி, போப்பாண்டவர் ஹில்டிபிராண்ட் (ஏழாம் கிரிகொரி) காலத்திலிருந்து ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளுக்கு (கி.பி. 1073 - 1250), அதாவது, போப்பாண்டவர் நான்காம் இன்னசென்ட் காலம் வரையிலும் நீடித்தது. இங்கிலாந்திலும் அதன் எதிரொலி ஒலித்தது. முதலாம் வில்லியம்—ஏழாம் கிரிகொரி, முதலாம் ஹென்றி—ஆன்சலம், இரண்டாம் ஹென்றி—தாமஸ் பெக்கட் ஆகியோருக்கிடையே எழுந்த கருத்து வேறுபாடுகளை இதற்கு உதாரணங்களாகக் கொள்ளலாம்.

இந்த ஆதிக்கப் போராட்டம் போப்பாண்டவர் ஒன்பதாம் கிரிகொரி, ரோமானியப் பேரரசர் இரண்டாம் பிரடரிக் காலத்தில் உச்சநிலையை அடைந்தது. இவ்வரசர் காலமான பிறகு, திருச்சபையின் கட்சிக்கே வெற்றி ஏற்பட்டிருக்க, அதன் ஆதிக்கம் மீண்டும் உறுதி பெற்றதாக அமைந்தது. பெரும் மன்னர்களையே, இறுதியில் அடக்கித் தன் செல்வாக்கினை அவர்களின்மீது திணித்த திருச்சபையின் மதிப்பு, மக்களிடையே மேலும் உயர்ந்திருந்தது.

**சிலுவைப் போர்:** புண்ணிய பூமியிலே திருத்தலங்களை (ஜெருசலம், ஏனைய இடங்கள்) மீட்க இடைக்காலத்தில் போப்பாண்டவர்கள் அப்போதைக்கப்போது விடுத்த அறை

கூவலுக்கிணங்கிப் பல கிறித்துவ அரசர்களும் (முதலாம் ரிச்சர்டு) வீரர்களும் சிலுவைப் போர்களிலே கலந்து கொண்டிருந்ததும், திருச்சபையின் செல்வாக்கை உணர்த்துவதாகவே இருந்தது. இப் போரின் இறுதிக் கட்டத்தில் ஜெருசலம் ஆகிய இடங்கள் கைவிடப்பட்டிருந்தும், சிலுவைப் போர் என்ற அந்தச் சொற்றொடர், கிறித்துவ நாடுகளிடையே ஒற்றுமையையும் கட்டுப்பாட்டையும் ஓரளவு கட்டிக் காத்திருந்ததால் அச் சிறப்புக்குக் காரணமான திருச்சபைக்கு மேலும் பெருமை கூடியது.

**தண்டனைச் சட்டங்கள்:** சமயநம்பிக்கை மிக அதிகமாகப் பரவியிருந்த இக் காலத்தில், சமய நிந்தனை அல்லது சமய மறுப்பு (H e sy) பெரும் குற்றமாகக் கருதப்பட்டது. அரசர் ஜான் காலத்தில், சமய ஆணைக்குட்பட மறுத்த ஆங்கில மன்னரை அப்போதைய போப்பாண்டவரான மூன்றும் இன்னசன்ட் இறுதியில் பணியவைத்தது இதற்கோர் உதாரணமாகும். தென் ஃபிரான்சிலே கடவுள் நிந்தனையாளர்களாக இருந்த அல்பிகென்சியன் (Albigensian) என்போரைச் சண்டையிட்டு அடக்கியிருந்ததும் மற்றுமோர் உதாரணமாகும். நாடுகளைத் தண்டிக்க தடுப்பு ஆணையையும் (Interdict) அரசர்களைத் தண்டிக்க விலக்காணைகளையும் (Excommunication) தனிப்பட்டோரைத் தண்டிக்க சமய நீதி மன்றத்தையும் (Inquistion) பிரயோகித்த திருச்சபை இக் காலத்தில் எதிர்ப்புகளை முறியடித்து, சர்வ வல்லமை பெற்றதாக இருந்ததால், இதன் செல்வாக்கு எல்லாரையும் கட்டுப்பட வைத்தது.

**திரிதுறவியரின் தொண்டு** (The Friars): திருச்சபையின் சார்பிலே பல அரும்பெரும் தொண்டுகளைச் செய்த திரிதுறவியர்களும் இடைக்காலத்தில், திருச்சபையின் செல்வாக்கு உயரக் காரணமாயினர்.

ஃபிரான்ஸ் நாட்டின் தென் பகுதியிலே பரவிவந்த சமய நிந்தனைக் கருத்துகளைப் பிரசாரத்தால் அடக்கி ஒடுக்க, செயின்ட் டாமினிக் (St. Domnic) என்பவரால் கி.பி. 1216ஆம் ஆண்டில், முதல் திரிதுறவியர் அமைப்புச் சங்கம் (order) நிறுவப்பட்டது. இத்னைத் தொடர்ந்து அசிசியைச் (Assisi) சார்ந்த செயின்ட் ஃபிரான்சிஸ் (St. Francis) என்பவரால் இன்னொரு திரிதுறவியர் சங்கமும் தோற்றுவிக்கப்பட்டது. இடைக்காலத்தில் இச் சங்கங்களைச் சேர்ந்த டாமானிகன் ஃபிரான்சிஸ், தம் திரிதுறவியர்கள் ஐரோப்பாவின் பல இடங்களில் சுற்றித் திரிந்து, சமயக் கல்விப் பணிகளைப் புரிந்து திருச்சபைக்குப் பெருமை தேடிக் கொடுத்தனர்,

**டாமினிகன் திரிதுறவியர்:** அரசர் மூன்ரும் ஹென்றியின் காலத்தில் முதன்முதலாக, டாமினிகன் திரிதுறவியர்கள் இங்கிலாந்தை வந்தடைந்தனர். அவர்களின் முதல் இருப்பிடம் (கி.பி. 1221) ஆக்ஸ்ஃபோர்டில் இருந்திருப்பினும், அடுத்த ஐம்பது ஆண்டுகளில், அத் துறவியர்கள் இங்கிலாந்து, வேல்ஸ் பகுதிகளில் ஐம்பது குடியிருப்புகளை அமைத்துக்கொண்டனர். உலக வாழ்க்கையில் எவ்விதப் பற்றும் இன்றி, மக்களின் தொண்டுகளுக்காகவே தங்களை அர்ப்பணித்துக் கொண்ட அத் துறவியர்கள் எல்லாரையும் கவர்ந்தவர்களாகவே இருந்தனர்.

**பிரான்சிஸ்கன் திரிதுறவிகள்:** கி. பி. 1224 ஆம் ஆண்டில் இங்கிலாந்துக்கு வந்திருந்த ஃபிரான்சிஸ்கன் திரிதுறவியர்களும் கான்டர்பரி, லண்டன் ஆக்ஸ்ஃபோர்டு ஆகிய இடங்களில் தங்கி, சமயப் பிரச்சாரப் பணியைச் சிறப்பாகச் செய்தனர். இப் பிரிவைச் சார்ந்த இராபர்ட் குரோசெட் யெஸ்ட் (Robert Grosset Este) கி. பி. 1230 ஆம் ஆண்டில் முழுக்க முழுக்க தம்மைக் கல்விப் பணிக்கே உள்படுத்திக்கொண்டார். இவரிடம் பயின்ற பல சீடர்கள், இங்கிலாந்தில் பணியாற்றியதன்றி, ஃபிரான்சு, இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளுக்குச் சென்று கல்வித் தொண்டாற்றினர்.

இக் கல்வி அறிவினுல் சிறப்புப் பெற்றவர்களில் (திரிதுறவி) ரோஜர் பேகன் (Roger Bacon) என்பவரும் ஒருவர். கி.பி. 1214—1294 ஆம் ஆண்டுகளில் வாழ்ந்த இம் மேதை தற்கால விஞ்ஞானத்திற்கே தந்தையாகப் போற்றப்படுகிருர். மூக்குக் கண்ணுடி, தூர தரிசனக் கண்ணுடி, துப்பாக்கி, விலங்குகளால் இழுக்கப்பட வேண்டியிராத வண்டி, பறக்கும் இயந்திரம், பாய்மரமில்லாத கப்பல் போன்றவை கண்டுபிடிக்கப்படுவதற்குச் சாத்தியமாகலாம் என்று சொன்ன இம் மாமேதை, எதையும் துருவிப் பார்க்கும் சிந்தனை சக்தியை (Spirit of Inquiry) மக்களுக்குப் போதித்தார். வருங்காலத்தில் தோன்றப் போகும் மறுமலர்ச்சி (Renaissance) இயக்கத்திற்குத் திரிதுறவியர்களான குரோசெட் யெஸ்ட், ரோஜர் பேகன் போன்றவர்களே விடிவெள்ளிகளாக இருந்தனரென்ருல், அது மிகையாகாது.

**திரிதுறவியரின் சேவை:** திரிதுறவியர்கள், சமயப் பணிகளோடு கல்விச் சேவையும் செய்து வர, மக்கள் அறிவுச் செல்வத்தைப் பெற்றிருந்தனர். கல்வியறிவை மேலும் வளர்ச்சியுறச் செய்ய திரிதுறவியர்களின் துணையினுல், திருச்சபை சில தொடக்ககால பல்கலைக்கழகங்களை நிறுவியது. இங்கிலாந்தி

விருந்த ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்களும், ஃபிரான்சிலிருந்த பாரிஸ், போலன்ய பல்கலைக்கழகங்களும் இக்




இங்கிலாந்தின் முக்கியமான மடாலயங்கள்

காலத்தைச் சேர்ந்தவையே. கல்வி வளர்ச்சிக்கு இவ்வாறு சீரிய சேவையைச் செய்த திருச்சபை, மக்களால் போற்றப்பட்டதில் வியப்பேதுமில்லை.

**திருச்சபையின் சிறப்பியல்புகள்:** கோத்திய (Gothic) கட்டடக்கலை அமைப்பிலே திருக்கோயில்களும், மடாலயங்களும் கட்டப்பட்டதற்கும் திருச்சபையின் ஆதரவான உதவியே காரணமாக இருந்தது. பதின்மூன்றும் நூற்றுண்டில் கட்டப்பட்ட வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயமும் சாலிஸ்பரி திருக்கோயிலும் சிறந்த இரு பெருங் கட்டடங்களாகும்.

நகரங்களிலும், பரோக்களிலும் இருந்த கூட்டுறவுக் கழகங்களையும் திருச்சபை தன் செல்வாக்கின் கீழ்க் கொண்டு வந்திருந்தது. பல தரப்பட்ட மக்களை வியாபாரத்தின்மூலம் பிணைத்திருந்த இக் கழகங்கள், நாட்டிலே ஒற்றுமையுணர்ச்சி ஏற்படவும் காரணமாயிருந்ததைப் புறக்கணிக்க முடியாது. இக் கழகங்கள் நல்ல முறையில் செயலாற்றியதற்குத் திருச்சபையின் நல்லாதரவே காரணமாயிருந்தது.

இங்ஙனம், பல சிறப்புகளைப் பெற்று, இடைக்காலத்தின் (12, 13ஆம் நூற்றுண்டுகள்) திருச்சபை உயர்ந்தோங்கியிருந்தது.

**கட்டடக் கலை**

இடைக்கால நாகரிகத்தின் மற்ருெரு சிறப்பாக இக் காலத்தில் கட்டப்பட்டிருந்த திருக்கோயில்கள் விளங்கின. காலத்தால் அழியாத இக் கட்டடங்கள் இன்றும் நின்று, அக் காலக் கட்டடக் கலையின் பெருமையைப் பறைசாற்றுகின்றன.

**நார்மானியர் பாணி:** இங்கிலாந்திலுள்ள தலைக் கோயில்களும்,(Cathedrals) திருக்கோயில்களும் (Churches) தொடக்கத்தில் நார்மானியப் பாணியிலே (Norman style) கட்டப்பட்டிருந்தன; நார்மானியப் பாணி ஏற்கெனவே இங்கிலாந்தில் பின்பற்றப்பட்டு வந்த சாக்சானியர் பாணியைப் போன்றே, ரோமானியர் கட்டடக் கலையை ஒத்ததாக இருந்தது. நார்மானியர் பாணியின்படி, சுவர்கள் தடித்துக் கனமாக இருந்ததுடன், வட்ட வடிவமான தூண்களையும் (Massive round column) வட்ட வளைவுகளையும் (Round arch), அழகான சாளரங்களையும் கொண்ட கட்டடங்கள் கட்டப்பட்டிருந்தன.

நார்மானியர் பாணியில் கட்டப்பட்டிருந்த சிறு மடங்களும் (Abbey), கோட்டைகள் பலவும் இன்று சிதைந்த நிலையிலிருந்தாலும், இக் காலக் கட்டடக் கலைக்குச் சிறப்புக் கூட்டுவதாகத் தெரிகின்றன. சிச்செஸ்டர், டர்ஹாம், ஈலி (Ely), கிளௌ செஸ்டர், ஹெர்ஃபோர்டு, நார்விச், பீடர்பரோ, ரோச்செஸ்டர், செயின்ட்

ஆல்பன்ஸ், சௌத்வெல்லின் (Southwell) தலைக்கோயில்களும் திருக்கோயில்களும் பாழடைந்த நிலையிலிருந்தாலும், நார்மானியர் கட்டடக் கலைக்கு நல்ல உதாரணங்களாக விளங்குகின்றன. ஹாம்ஷயரிலிருக்கும் ராம்சே மடாலயக் கோயில் (Ramsey Abbey Church) நார்மானியப் பாணிக்குச் சிறப்பான விளக்கமாகும். இங்கிலாந்தில், பன்னிரண்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதி வரையில் இக் கட்டடக் கலைப் பாணியே பின்பற்றப்பட்டு வந்தது.

**கோத்தியர் கட்டடக் கலை:** இக் காலவரையறைக்குப் பின்னரே புதியபாணி ஒன்று இங்கிலாந்தில் பரவ ஆரம்பித்தது. இது கோத்தியக் (Gothic) கட்டடக் கலை ஆகும். தொடக்கத்தில் வட ஃபிரான்சில் பிறந்த இக் கலை, பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றுண்டுகளில் உச்ச கட்டத்தை அடைந்தது. கி. பி. 1140—1250 ஆண்டுகளுக்கிடையே சார்ட்டீஸ் (Chartes), ரீம்ஸ் (Rheims), ஆமியன்ஸ் (Amiens) பாரிஸ், நாட்டர்டாம் (Notredam) ஆகிய இடங்களில் கட்டப்பட்டுள்ள உன்னத தலைக்கோயில்களும் திருக்கோயில்களும் (ஐரோப்பிய) கோத்தியக் கலைக்குச் சிறப்பு உதாரணங்களாக அமைகின்றன.

கோத்தியப் பாணியில் அமைக்கப்பட்ட கட்டடங்கள் முனைப் புடைய வளைவுகளையும் (painted arches) பெரும் சாளரங்களையும் பருமனில்லாத சுவர்களையும், குடைக் கும்பிகளைப் போல் ஒந்துக் கோல்களையும் (Ribbed vaults), சுவர் தாங்கிகளையும் (Buttress) கொண்டு காற்றேட்டம், வெளிச்சம் கூடிய எளிமையான, ஆனல், கம்பீரமான காட்சிப் பொருள்களாக விளங்கின.

இங்கிலாந்தில் புகுத்தப்பட்ட கோத்தியக் கட்டடக் கலை மூன்று வகையாகக் காணப்படுகிறது. பண்டைய ஆங்கிலப் (Early English) பாணி, சித்திர அணி ஒப்பனைப் (Decorated), பாணி, செங்குத்தான (Perpendicular) பாணி என்பவையே அவை.

பண்டைய ஆங்கிலப் பாணியென்பது, ஃபிரான்ஸ் நாட்டில் பரவியிருந்த கோத்தியப் பாணியின் அப்பட்ட தழுவலாக இருந்தது. யார்க்ஷயர், லிங்கன் ஆகிய இடங்களில் காணப் படும் மடங்கள் இந்தத் தரத்தைச் சேர்ந்தவையே. ஆயினும், வெல்ஸ் (Wells), சாலிஸ்பரி, வெஸ்ட்மின்ஸ்டர் ஆகிய இடங்களி லுள்ள மடாலயங்கள் இப் பாணியின் மற்ற சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.










சன்னல்கள்






வாசற்கதவுகள்






தூண்கள்.

இடைக்காலக் (ஆங்கில) கட்டடக்கலை

சித்திர அணி ஒப்பனை பாணியின்படி சாளரங்கள் வடிவ இயலின் (Geometrical) தோற்றத்தில் அமைக்கப்பட்டிருந்தன. எக்ஸ்டரில் காணும் தலைக்கோயில்களும் இம் முறைக்குச் சிறந்த உதாரணமாகும்.

செங்குத்தான கட்டடப் பாணியின்படி, சாளரங்கள் வடிவ இயலில் அமையாமல், வெளிச்சம் பரப்பக் கூடியனவாகப் பெரிய அளவில் அமைக்கப்பட்டிருந்தன. காவென்டரியில் காணும் செயின்ட் மைக்கல் கோயிலும் வார்விக்கில் காணும் செயின்ட் மேரி கோயிலும் இந்த ரகத்தைச் சேர்ந்தவையே.

நாளாவட்டத்தில் கோட்டைகளைக் கட்டும் பாணியிலும், காலத்திற்கேற்ப மாற்றம் காணப்பட்டது. நார்மானியர் காலத்தில் கட்டப்பட்ட கோட்டைகளில் சில, அப்போதைக்கப்போது தேவையான மாற்றங்களை அடைந்தன. இதற்கோர் உதாரண மாக, கெனில்ஒர்த் கோட்டையைக் குறிப்பிடலாம். ஜான், மூன்றும் ஹென்றி அரசர்கள் காலத்தில் இக் கோட்டையைச் சுற்றிச் சுற்று மதில் (Encircling wall), அமைத்து, மதிலுக்கு வெளியே ஒரு செயற்கை ஏரியும் வெட்டிவிடப்பட்டன. பதின் மூன்றும் நூற்றுண்டின் இறுதியில், இக் கோட்டை அரண்மனையாக மாற்றப்பட்டதோடு பெரிய விருந்து மண்டபத்தையும் (Banqueting Hall) கொண்டு விளங்கியது.

கோட்டை வடிவத்தில் கட்டப்பட்டிருந்த வீடுகளும் அரண்மனைகளும் இக் காலத்தில் எளிய, அழகிய முறையில் வாழ வசதியாக அமைக்கப்பட்டன.

**பள்ளிகளும், பல்கலைக்கழகங்களும்**

இடைக் காலத்துக் கல்விமுறை, அமைப்புத் தரம் எல்லாமே திருச்சபையையே சார்ந்தனவாக இருந்தன. தொடக்க காலத்தில், திருச்சபையினரால் இருதரப்பட்ட கல்விக்கூடங்கள் அமைந்திருந்தன; அல்லது அமைக்கப்பட்டிருந்தன. தங்களின் மடாலயத்திலேயே பயிற்சி பெற வந்த புதிய நபர்களுக்குத் தேவையான நன்னெறியைப் புகட்ட, மடாலயத் துறவிகள் கல்வியை ஊட்ட அமைத்திருந்த பள்ளிகளும், லௌகீகர்களுக்குப் (சாதாரணமானவர்கள்) பொதுப்படையாக அமைக்கப்பட்ட பள்ளிகளுமே இவையாகும்.

சாக்சானியர் காலத்திலேயே, இக் கல்வி அமைப்பு வழக்கத்திலிருந்து வந்தது. செயின்ட் அகஸ்டஸினல் கான்டர்பரியின் தலைக்

கோயிலில் அமைக்கப்பட்ட கல்விக்கூடமே இங்கிலாந்தில் தோற்றுவிக்கப்பட்ட முதல் பள்ளியாகக் கருதப்படுகிறது. செயின்ட் ஆல்டெல்ம் (St. Aldelm) என்பவரால் தொடங்கப்பட்டு ரோசெஸ்டர், இலண்டன், யார்க்ஷயர், போர்ன் ஆகிய இடங்களில் நிறுவப்பட்ட ஆரம்பகாலப் பள்ளிகளும் இந்த ரகத்தைச் சேர்ந்தவையே.

ஹெர்ஃபோர்டு, ஒர்செஸ்டர், வின்செஸ்டர், ஷிரூஸ்பரி, வா ரிவிக் ஆகிய இடங்களிலிருந்த சாக்சானியத் தலைக் கோயில்களிலெல்லாம் பள்ளிகள் அமைக்கப்பட்டிருந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

**பள்ளிகள் :** நார்மானியரின் படையெடுப்பையொட்டி, திருக்கோயில்களோடு இணைக்கப்பட்ட பல பள்ளிக்கூடங்கள் தோன்றலாயின. இப்பள்ளிகளில் இலத்தீன் இலக்கணமே முக்கியப் பாடமாகப் போதிக்கப்பட்டது. அக் காலத்தில் எல்லா நூல்களும் இலத்தீன் மொழியிலேயே இருந்ததால் மேற்கொண்டு பல இடங்களிலே அறிவு பெற விரும்பியோர், இம் மொழியின் இலக்கணத்தைக் கற்றறிய வேண்டிய அவசியத்தைப் பெற்றிருந்தனர். மேலும், இம் மொழி, ஐரோப்பா முழுவதும் பரவியிருந்ததால், இலத்தீன்மொழி தெரிந்தோர் பாரிஸ், இலண்டன், ரோம் போன்ற எந்த நகரத்திலும் சுற்றித் திரியவும், கலந்து பேசவும் ஏதுவாக அமைந்தது. ஆகவே, இலத்தீன் இலக்கணப் பாடத்திற்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

இலத்தீன் இலக்கணத்தோடு கல்வி பயின்றோருக்கு அணியிலக்கணம் என்ற சொல்லாட்சிக் கலையும் (Rhetoric), தர்க்க சாஸ்திரமும் (Logic) போதிக்கப்பட்டன. இவையே முக்கலைகள் (Trivium) என வழங்கப்பட்டன; இவற்றுடன் கணக்கு (Mathematics), வடிவியல் (Geometry), இசை (Music), வானியல் (Astronomy) ஆகிய நாற்கலைகளும் (Quadrivium) உயர்படிப்பாகப் போதிக்கப்பட்டன.

**பல்கலைக்கழகங்கள் :** பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே ஆரம்பகாலப் பல்கலைக்கழகங்கள் தொடங்கப்பட்டன. முதன் முதலாகத் தொடங்கப்பட்ட பல்கலைக்கழகங்கள் சாதாரணமாகப் பள்ளிகளிலிருந்து மாறுபட்டவையாக இல்லை என்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்தல்லாமல், பிற பகுதிகளிலிருந்தும் பன்னிரண்டு வயது முதல் இருபது வயதுவரை

யிலிருந்த மாணவர்களுக்கு, தலைக்கோயில், அல்லது திருக்கோயில்களில் பாதிரிமார்களால் கல்வி போதிக்கப்பட்ட வழியிலிருந்தே, இப் பல்கலைக்கழகங்கள் தோன்றலாயின முதன்முதலாகத் தொடங்கப்பட்ட பல்கலைக்கழகங்களில் பாரிஸ், போலஞு ஆகிய இடங்களில் தோன்றியிருந்த மன்றங்களே இடம் பெறுகின்றன. பாரிஸ் பல்கலைக்கழகங்களில் தத்துவம் (Philosophy), இறைமையியலும் (Theology) போதிக்கப்பட்டமையால், போலன்ஞுவில் சட்டமும் (Law), சலாரிஞே பல்கலைக்கழகத்தில் மருத்துவமும் போதிக்கப்பட்டன.

கற்பிப்போர், கற்போர் ஆகியோரின் கூட்டுறவுக் கழகமாக விளங்கிய பல்கலைக்கழகங்களையும் பின்னர் இயற்றப்பட்ட சட்டங்கள் (Statutes) ஒழுங்குபடுத்தின.

இங்கிலாந்தில் முக்கியப் பல்கலைக்கழகங்களில் ஒன்ருன ஆக்ஸ்ஃபோர்டு (Oxford University), இரண்டாம் ஹென்றியின் காலத்திலேயே தொடங்கப்பட்டது.

அரசர் இரண்டாம் ஹென்றிக்கும் ஆர்ச் பிஷப் தாமஸ் பெக்கட்டுக்கும் தகராறு முற்றிவந்த காலத்தில், அப்போதைய ஃபிரெஞ்சு மன்னர் பின்னவரை ஆதரிக்கலானுர்; அதனுல் வெகுண்ட அரசர், கி.பி. 1167ஆம் ஆண்டில் ஆங்கிலம் தெரிந்த ஆசிரியர்களையும், மாணுக்கர்களையும் ஃபிரெஞ்சுத் தலைநகரான பாரிஸிலிருந்து இங்கிலாந்துக்குத் தம் ஆணையின்மூலமாக வரவழைத்தார்; இங்ஙனம் வந்தவர்களைக் கொண்டே, ஆக்ஸ்ஃபோர்டு நகரில் ஒரு பல்கலைக்கழகம் ஏற்படுத்தப்பட்டது.

இங்கிலாந்தின் மற்ருெரு முக்கியப் பல்கலைக்கழகம், கேம்பிரிட்ஜ் (Cambridge University). கி.பி. 1209ஆம் ஆண்டில், ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து வெளியேறிய அறிஞர்களை உதவியாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது.

அரசர் ஜான் காலத்தில், ஆக்ஸ்ஃபோர்டு நகரில் திருக்கோயில் அதிகாரிகளுக்கும் (Clergy) நகர மக்களுக்கும் இடையே, ஒரு கலவரம் ஏற்பட்டதால், போப்பாண்டவரால் விலக்காணை பெற்ற மன்னர் வாளாவிருந்தார்; இதனுல், அதிருப்தி அடைந்த சில அறிஞர்கள், தங்கள் பாதுகாப்பைக் கருதி, ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தைவிட்டு வெளியேறி, கேம்பிரிட்ஜில் குடிபுகுந்தனர். இவ்வகையிலே, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் தொடங்கப்பட்டது.

ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகக் கட்டடத்திற்குள்ளாகவே, ஒவ்வொரு துறைக்கும் தனித்தனி கல்லூரிகள் தோன்றின. மாணவர்கள் ஒன்றுசேர்ந்து வாழ்ந்த இடங்கள், 'இல்லங்கள்' (House or Halls) என அழைக்கப்பட்டன. இவ் வில்லங்களிலிருந்தே பற்பல கல்லூரிகள் தோன்றலாயின. 'பல்கலைக்கழகப் பேரில்லம்' (Great University Hall) என்ற இல்லத்திலிருந்துதான் 'ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகக் கல்லூரி' (University College, Oxford) தோன்றியதை ஓர் உதாரணமாகக் கொள்ளலாம். இதே முறை, கேம்பிரிட்ஜில் பின்பற்றப்பட்டது.

தற்கால அமைப்பின்படி, கல்லூரிகளில் சில விதி முறைகளைப் புகுத்தி, இங்கிலாந்தின் சான்சலராகப் பணியாற்றிய வால்டர்-டி-மெர்ட்டன் (Walter-de-Merton) என்பவர், ஒரு புதிய கல்லூரியைத் தொடங்கியிருந்தார். இதே ஆண்டில் (கி. பி. 1263) ஸர் ஜான்-டி-பாலியல் (Sir John-de-Balliol) என்பவரால் பாலியல் கல்லூரி தொடங்கப்பட்டது; கி.பி. 1284ஆம் ஆண்டில், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பீட்டர் ஹவுஸ் (Peter house) கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது; பின்னர் வில்லியம் வைக்ஹாம் (William Wykeham) என்பவரால் ஆக்ஸ்ஃபோர்டில் நியூ கல்லூரி (New College) என்ற பிரசித்திபெற்ற கல்லூரி நிறுவப்பட்டது.

இடைக்கால பல்கலைக்கழகங்களால் கட்டுப்பாடும், அதற்கான விதிமுறைகளும் இல்லாதிருந்தும், மாணவர்கள் கல்வி கற்பதையே முழு நேரப் பணியாகக் கொண்டிருக்கவில்லை யென்றாலும், ஆசிரியர்கள் அரிஸ்ட்டாடில் போன்ற கிரேக்கப் பெரியாரின் போதனைகளையும், கிறித்துவப் பெரும் பாதிரிமார்களின் தத்துவங்களையும், தாமஸ்-அக்குனஸ் (Acquinas) என்ற டாமின்கள் திரிதுறவியாரின் கருத்துகளையும் சிரத்தையுடன் போதித்து வந்தனர்.

**நகரங்களின் வளர்ச்சி (Towns)**

இடைக்காலத்தில் சிறப்புற விளங்கிய பெரும்பாலான நகரங்கள், முன்பு சாக்சானியர்களாலும், அதற்குமுன் ரோமானியர்களாலும் நிறுவப்பட்டிருந்தமையே ஆகும். பல்வேறு காரணங்களால் இந்தப் பழைய நகரங்கள் புது சிறப்புப்பெற்று விளங்கலாயின.

**காரணங்கள்:** பிரிஸ்டல் (Bristol) என்ற நகரம் அதற்கு அருகில் பாயும் ஆவன் (Avon) நதிக்கு மேல் அமைக்கப்பட்டிருந்த

பாலத்திஞல் சிறப்புப் பெற்றது. ஆவன் நதி உள்நாட்டை ஆங்கிலக் கால்வாயோடு இணைத்ததால், மேற்கு ஐரோப்பிய துறைமுகங்களிலிருந்து அனுப்பப்பட்ட வியாபாரச் சரக்குகள், பிரிஸ்டல் வழியாகக் கடக்க வேண்டியிருந்ததால், இந்த நகரம் சிறப்பான வியாபாரத் தலமாக அமைந்தது. சவுதாம்ப்டன் (Southampton), யார்மவுத் (Yarmouth), போர்ட்ஸ்மவுத் (Portsmouth), சிங்க் (Cinge) பட்டணங்களிலும், தாங்கள் பெற்றிருந்த துறைமுகங்கள் வியாபாரத்திற்கு ஏற்றவையாக இருந்ததாலேயே சிறப்புகளைப் பெற்றிருந்தன. ஆற்றங்கரைகளில் அமைக்கப்பட்டிருந்த ஆக்ஸ்ஃபோர்டு, ஸ்டார்ட்ஃபோர்டு (Stratford), கிளௌசெஸ்டர் ஆகிய பட்டணங்களும் வர்த்தகம், பிற காரணங்களுக்காகப் பொலிவுபெற்று விளங்கின. பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ் (Bury St. Edmands), செயின்ட் ஆல்பன்ஸ், ஆபிங்டன் (Abington) போன்ற நகர்களும், பெரும் மடாலயங்களைக் கொண்டிருந்த காரணத்திஞல் சிறப்புற்றன. வார்விக் (Warwick), அருண்டேல் (Arundel), லங்காஸ்டர் ஆகிய நகரங்கள் பெரும் கோட்டைகளைப் பெற்றிருந்ததால் பெருமை அடைந்தன. இலண்டன், டர்ஹாம், செப்ஸ்டோவ் (Chepstow) ஆகிய சில நகரங்கள், மேற்கூறிய பல்வேறு காரணங்களை ஒருங்கே பெற்றுச் சிறப்பு அடைந்தன.

பல்வேறு காரணங்களால், இக் காலத்தில் சிறப்புப் பெற்று விளங்கிய பல நகரங்கள் (இலண்டன் உள்பட) தொடக்கத்தில் கிராமங்களாகவே இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது.

**பரோக்கள்;** மகா ஆல்ஃபிரடு காலத்தில், இங்கிலாந்தின் மீது படையெடுத்த டேனியர்களும் சில நகரங்கள் உருவாவதற்குக் காரணமாயினர்.

நகரங்களை நிர்மாணிப்பதில் கைதேர்ந்தவர்களாக இருந்த டேனியர்கள், அக் காலத்தில், டெர்பி, நாட்டிங்ஹாம், லிங்கன், லீசெஸ்டர், ஸ்டாப்ஃபோர்டு ஆகிய சிறு பரோக்களை நிர்மாணித்திருந்தனர்.

டேனியர் தாக்குதலிலிருந்து பாதுகாப்புப் பெற மரச் சுவர்களைச் சுற்றிலும் கொண்டிருந்த வேறு சில நகரங்களும், மகா ஆல்ஃபிரடிஞலும், அவர் மகஞன எட்வர்டு, மகள் எதல் பிரிடா போன்றவர்களாலும் உருவாக்கப்பட்டன; பிரிட்ஜ்நார்த் (Bridgenorth), டாம் ஓர்த் (Tom worth), டவுசெஸ்டர் (Tow Chester), மால்டன் (Malton) ஆகியவையே அவற்றில் சிலவாகும். நார்ஸ்

மக்களால் (Norserian) ஏற்படுத்தப்பட்ட நகரமாக நார்விச் விளங்கியது.

சுமார் எட்டாயிரம் பேர்களை மக்கள் தொகையாகவும், தற் காப்பு அரண்களையும் கொண்டிருந்த பரோக்கள், கிராமங்களை விடப் பெரியனவாகவும் ஆனால். நகரங்களைவிடச் சிறியனவாகவும் இருந்தன. சில பரோக்கள் நாளடைவில் பெரும் நகரங்களாயின (காலண்டன், பிரிஸ்டல்).

இங்ஙனமாக, இங்கிலாந்தின் பல பகுதிகளில் உருவாக்கப் பட்ட நகரங்கள், தொடக்கத்தில் நிலமானிய முறைக்கு உள்பட்டன வாக இருந்தன. அதிருஷ்டவசமாகப் பெரும்பான்மையான நகரங் களுக்கு, அரசரே மேலானவராக இருந்தார். வணிகப் பெருக் கத்தால் செல்வ வளத்தைப் பெற்றிருந்த பல நகரங்கள், அரச ருக்குப் பணமுடை ஏற்பட்டிருந்தபோது பெரும் பொருளைக் கொடுத்துத் தங்களை விடுவித்துக் கொண்டன. இரண்டாம் ஹென்றி, முதலாம் ரிச்சர்டு, அரசர் ஜான் காலங்களில் யார்க், ரார்லிச், வின்செஸ்டர், சவுதாம்டன், கிளௌசெஸ்டர் ஆகிய நகரங்கள் நிலமானியக் கட்டுப்பாட்டிலிருந்து (வரித்தொல்லை உட்பட) விடுதலை பெற்று உரிமைச் சாசனங்களைப் (Charter of Liberties) பெற்றிருந்தன.

பிரபுக்களின் வசமிருந்த சில நகரங்களும் தங்கள் மேலாளர் களின் ஊதாரித்தனத்தைப் பயன்படுத்திப் பணம் கொடுத்துத் தங்களின் உரிமைச் சாசனங்களை அடைந்திருந்தன. ஆயினும், திருச்சபையின் மேலாண்மை கொண்டிருந்த சில நகரங்களுக்கு, இடைக்காலத்தின் இறுதிவரையில் 'விடுதலை வழங்கப்படவில்லை' என்பது குறிப்பிடத்தக்கது.

### உரிமைச் சாசனமும் சிறப்பும்

உரிமைச் சாசனம் பெற்றிருந்த காலத்தில் இந் நகரங்கள் அரசரின் பிரதிநிதியான 'ரீவு' என்பவரால் பரிபாலிக்கப்பட்டன. ஆயினும், உரிமைச் சாசனம் பெறப்பட்டிருந்த காலத்தில், பர்ஜஸ் (Burgesses) என்பவர்களிடத்தே நகரத்தின் நிர்வாகப் பொறுப்பு விடப்பட்டது.

தொடக்கத்தில் வீடு, நிலங்கள் (நிலமானிய அமைப்பிலிருந்து) சுதந்திர உரிமை போன்றவற்றை அனுபவித்து வந்த பர்ஜஸ் மக்கள் எண்ணிக்கையிலே குறைவாகவே இருந்தனர். நகரத்தைப் பரிபாலிக்க வேண்டியிருந்த மேயர் (Mayor) போன்ற முக்கிய

அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்புகளைப் பர்ஜஸ்களே அனுபவித்தனர்.

பர்ஜஸ்களின் ஆதரவினால் நகரங்கள் பரிபாலிக்கப்பட்டதோடன்றி, கட்டடங்களும் இவர்களின் மேற்பார்வையில் விருத்தியடைந்தன. குறிப்பாகத் திருக்கோயில்களும் கூட்டுறவுச் சங்கக் கூடங்களும் நகரங்களில் கட்டப்பட்டன. லீவிஸ் (Leuves) என்னும் சிறிய இடத்தில் எட்டுத் திருக்கோயில்களும், நார்விச் பகுதியில் ஐந்து திருக்கோயில்களும் கட்டப்பட்டதைச் சிறந்த மேற்கோள்களாக எடுத்துக் காட்டலாம்.

இந் நகரங்கள், அந்தந்த மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகளால் பரிபாலிக்கப்பட்டமையால், நகர மக்களிடையே அரசியல் உணர்வு ஏற்பட்டிருந்தது. இந் நகரங்களில் தல அரசாங்கமுறையும் (Local Govt.) அமைக்கப்பட்டதால் நிர்வாகத் துறையில் மக்கள் பயிற்சி பெற்றவர்களாகவும் இருந்தனர். அந் நகரங்களிலிருந்தும், பரோக்களிலிருந்தும் காமன்ஸ் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அரசியல் உணர்வுகொண்டவர்களாகவும், தல அரசாங்க முறையில் பயிற்சி பெற்றவர்களாகவும் இருந்ததால், வருங்காலத்தில் பிரிட்டிஷ் பாராளுமன்றமுறை (காமன்ஸ் சபை) நல்ல முறையில் இயங்க ஏதுவாயிற்று.

**கழகங்கள்** (The Guilds)

இடைக்காலத்தில் அந்தந்த, நகரங்களில் வாழ்ந்த மக்கள் தங்களுக்குள் ஒரு கூட்டு மனப்பான்மை கொண்டிருந்தனரெனினும் மற்ற நகரவாசிகளை அந்நியர்களாகவே கருதினர். குறிப்பிட்ட நகரவாசி ஒருவர், இன்னொரு நகரத்திற்குள் நுழைவதற்குமுன் அதற்கான பிரத்தியேக வரியைக் கட்டும்படி இருந்தது.

இச் சூழ்நிலையில்தான், ஒவ்வொரு நகரமும் தத்தம் வாணிபத்தை விருத்தி செய்ய வணிகர் கழகம் என்ற கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டது.

'கில்டு' எனப்பட்ட கூட்டுறவுக் கழகம், நகரம், பரோக்களின் வாணிபத்தைக் கண்காணித்து இயக்கியது. நார்மானியர் படையெடுப்பிற்குப் பின்னர், இங்கிலாந்தில் பல கழகங்கள் தோன்றியிருந்தன. பர்ஃபோர்டு (Burford) என்னும் இடத்தில் அமைக்கப்பட்ட வணிகர் கழகம் மிகப் பழமையானதாகக் கொள்ளப்படுகிறது (1087—1109).

**வணிகர் சங்கம்:** ஒவ்வொரு நகரத்திலும் வாழ்ந்த வியாபாரிகள் தங்களின் வியாபார நலனுக்காக அமைத்துக் கொண்ட கூட்டுறவுச் சங்கங்களை 'வியாபாரிகளின் கில்டு' (Merchants Guild) என அழைக்கப்பட்டன. தொடக்கத்தில் நகரத்தில் வாழ்ந்த எல்லா வியாபாரிகளும் இச் சங்கத்தின் உறுப்பினர்களாக இருந்தனர். இதன் உறுப்பினர்கள், தங்களுக்குள் பொருள்களை வாங்கவும் விற்கவும் உரிமை பெற்றிருந்தனர். இச் சங்கத்தின் விதிமுறைகளுக்கு எல்லா அங்கத்தினர்களும் கட்டுப்பட்டனர். 'அந்நியர்' எவரையும் நகரத்தில் வியாபாரம் செய்ய விடக்கூடாது எனவும், சங்கத்தைச் சேர்ந்த வியாபாரிகள், மக்களின் பொது நலனைக் கருதி அதிக இலாப நோக்கில்லாமல் நியாயமான விலைக்குப் பொருள்களை விற்கவேண்டும் எனவும் இச் சங்கம் தன் வியாபார அங்கத்தினர் களைக் கட்டுப்படுத்தியது. ஒவ்வொரு நகரத்திலும் கோதுமை, பார்லி ஆகிய தானியங்களின் விலைகள் நிர்ணயிக்கப்பட்டன; இப் பொருள்கள் எந்த விலைக்கு வாங்கப்பட்டிருந்தனவோ அதை வைத்து வியாபாரிகள் இவற்றின் விற்பனை விலைகளை நிர்ணயித் திருந்தனர். இவற்றை வற்புறுத்தும்படியாக, ரொட்டி விலையுறுதிச் சட்டமும், தேறல் விலையுறுதிச் சட்டமும் (Assizes of Bread and Ale) கொண்டுவரப்பட்டிருந்தன.

குறைந்த அளவுக்கு அல்லது எடைக்குப் பொருள்களை விற்ற வியாபாரிகளும் தரமில்லாத பண்டங்களை விற்ற வியாபாரிகளும் இச் சங்கத்தால் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். தரம் கெட்டிருந்த மதுவை (ஒயின்) விற்பனை செய்தவர்கள் விநோதமான முறையில் தண்டிக்கப்பட்டனர். அதை விற்ற வியாபாரியே அதைக் குடிக்கவேண்டும்; குடித்தது போக மீதி மது அவன் தலையில் ஊற்றப்பட்டது. குறைவான எடையில் ரொட்டியை விற்ற வியாபாரிகளும் தண்டிக்கப்பட்டனர். அக் குற்றத்திற்குப் பொறுப்பான வியாபாரிகளின் கழுத்துகளில், அந்தத் தரம் கெட்ட ரொட்டித் துண்டுகள் மாலையாக அணிவிக்கப்பட்டு, தெருக்களிலே நடத்திச் செல்லப்பட்டனர். பொதுவாக, குற்றவாளிகளான வணிகர்களைத் தண்டிக்க சந்தைக்கடையிலே மரச்சட்டம் (Pillory) ஒன்று வைக்கப்பட்டிருந்தது.

சுருக்கமாகக் கூறின், நகரத்தின் வர்த்தகத்தையும், விலையையும் கட்டுப்படுத்திய (Control) வணிகர்களையும் தவறு செய்த வியாபாரிகளையும் தண்டிக்க இச் சட்டங்கள் தவறவில்லை.

**தொழிலாளர் கழகம்:** பதின்மூன்றும் நூற்றாண்டிலே வியாபாரிகளின் சங்கத்தைப் போன்று (வணிகர் கழகம்) தொழி

லாளர் கழகம் ஒன்றும் (Craft guild) அமைக்கப்பட்டிருந்தது. தனிப்பட்ட தொழில்களைச்செய்த ஒவ்வொரு பிரிவினருக்கும் தனித்தனியான தொழிற் சங்கங்கள் அமைக்கப்பட்டிருந்தன. உதாரணமாக, நெசவாளிகள், மீனவர்கள், துணி வியாபாரிகள் போன்ற தொழில்களைக் கொண்டோருக்கு ஏற்றதாகத் தொழிற் கழகங்கள் உருவாக்கப்பட்டிருந்தன. இத் தொழில்களில் ஈடுபாடு கொண்டவர்களைப் படிப்படியாக இச் சங்கங்கள் பயிற்சிப் பெறச் செய்தது. இளம் வயதிலே தொழிலைக் கற்றுக்கொள்ளச் சென்றவர் களுக்கு ஏழு ஆண்டுகள் பயிற்சி தரப்பட்டது; இவர்கள் தொழில் பயில்வோர் அல்லது 'கற்றுக் குட்டிகள்' (Apprentices) என அழைக்கப்பட்டனர். பயிற்சி முடிந்த பின்னர், இவர்கள் கூலிக்கு உழைச்கும் தொழிலாளர்கள்' (Journeymen) என அழைக்கப் பட்டனர். தாம் கற்றுக்கொண்டு உழைத்த தொழிலில் கைத் திறனைப் பெற்றவர்கள், 'தொழிலே மேலோராகக் (Master Crafts-men) கருதப்பட்டனர். இத் தொழில்களின் சார்பிலே தயாரிக்கப் பட்ட பொருள்களின் விலைகளை நிர்ணயித்ததோடு. தொழிலாளர்க் குரிய ஊதியத்தையும் இச் சங்கம் வரையறுத்தது. முக்கியமாக, அந்தந்தத் தொழிலின் திறனையும் தரத்தையும் அந்தந்தச் சங்கமே தீர்மானித்தது. தொழிலில், தயாரிப்பில் தவறு செய்தவர்கள் தண்டிக்கப்பட்டனர். உதாரணமாக, இழை விட்டு அல்லது நூல் இழைகள் போதுமான அளவிற்கு இல்லாமல் துணியை நெய்திருக்கும் நெசவாளியின் கருவிகள், அந்தக் குறைபட்ட துணி யோடு எரிக்கப்பட்டன. குறைபட்ட விதத்தில் காலணிகளைத் தயாரித்த ஒரு செருப்புத் தொழிலாளி செஸ்மில், கி.பி. 1420 ஆம் ஆண்டு £ 10 (பவுண்டுகள்) அதற்கான அபராதம் செலுத்தி யிருந்ததையும் மற்றுமோர் உதாரணமாகக் கொள்ளலாம்.

**கழகங்களின் தொண்டு:** பொதுவாக, இச் சங்கங்கள் (Guilds) பல நல்ல தொண்டுகளுக்கும் காரணமாக இருந்தன. இச் சங்கங்களைச் சார்ந்தோர், ஆண்டுதோறும் சமயத்தைச் சார்ந்த நாடகங்களை நகர மக்களுக்கு நடத்திக் காட்டியதால், நாடகக் கலை வளர்ச்சியுற ஆரம்பித்தது. மேலும் சில சமூகத் தொண்டு களுக்கும் நோயாளிகளுக்கும், இறந்துவிட்ட தொழிலாளியின் குடும்பத்திற்கும், பொது நிதியிலிருந்து அந்தந்தச் சங்கங்கள் பொருளுதவி செய்தன.

உதாரணமாக, இலண்டனைச் சேர்ந்த ஒரு நாவிதன் வறுமை யால் வாடியபோது, அத்தொழிலுக்கான சங்கம், அவனுக்கு வாரந்தோறும் குறிப்பிட்ட தொகையைக் கொடுத்து உதவி யிருந்தது.

எல்லாவற்றுக்கும் மேலாக, இச் சங்கங்கள் கல்வித் தொண்டினையும் செய்திருந்தன. இவற்றின் நன் முயற்சியால், நாடெங்கும் பல இலக்கணப் பள்ளிகள் அமைக்கப்பட்டன. மேலும், கார்பஸ் கிறிஸ்டி கல்லூரி (கேம்பிரிட்ஜ்) போன்ற மேல்கல்வி நிலையங்கள் சிலவும் இச் சங்கங்களின் பொருளாதார ஆதரவைப் பெற்றிருந்தன.

## 14, 15ஆம் நூற்றுண்டுகளில் இங்கிலாந்தின் பொருளாதார சமூகநிலை

ஆங்கிலேயரின் வரலாற்றில் போர்களாலும் அரசியல் புரட்சிகளாலும் காலச்சுழற்சியினுலும் குறிப்பிடத்தக்க சில மாற்றங்கள் பொருளாதார சமூகத் துறைகளில் ஏற்பட்டிருந்தன. 14, 15ஆம் நூற்றுண்டுகளிலே ஏற்பட்ட இம் மாற்றங்கள் இங்கிலாந்தின் இடைக்கால நாகரிகத்தைப் பிரதிபலிப்பனவாக இருந்தன.

**புது நாகரிக இயல்புகள்:** சில நகரங்களின் தோற்ற அமைப்பில் முன்பிருந்த நிலையே நீடித்துவரினும், வர்த்தகச் சிறப்பினுல் இலண்டன், பிரிஸ்டல் ஆகிய நகரங்கள் செல்வத்தால் கொழித்து விளங்கின. இப் பெரும் நகரங்களைச் சார்ந்த சுற்றுப் புறங்களும் புதிதாக எழுப்பப்பட்டிருந்த ஆலயங்களும் ஆடம்பர மாளிகைகளாலும், தொழிற் சங்கக் கூடங்களாலும் அழகுடன் மிளிர்ந்தன. இங்கிலாந்தின் கிழக்குப்புறங்களில் களிமண்ணுல் சுடப்பட்ட செங்கற்களைக் கொண்டு, பெரும் பண்ணை வீடுகள் எழும்பின. இப் பண்ணைவீட்டு அறைகளின் சுவர்களிலும் வேற்புக் கூடங்களிலும் ஆர்ராஸ் துணியினுல் (Cloth of Arras) ஆன (விலையுயர்ந்த) திரைச்சீலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. குளிர் காய்வதற்காக, அறையின் நடுவே நெருப்பை மூட்டியிருந்த அப் பழக்கத்தைவிட்டு, இக் காலத்தில் கட்டப்பட்டிருந்த வீடுகளில் புகைப்போக்கிகள் (Chimneys) அமைக்கப்பட்டிருந்தன. ஃபிரெஞ்சுப் போர்களில் கொள்ளையர்களாகவும், ரோசாச்சின்னப் போரில் கொலையாளிகளாகவும் ஆங்கிலேயர் வாழ்ந்திருந்த இதே காலத்தில் கட்டடக்கலைப் பிரியர்களாகவும், நாகரிக வாழ்க்கை விரும்பிகளாகவும் இம் மக்கள் இருந்துவந்தனர்.

இக் காலத்திய மணவாழ்விற்குக் காதல் முக்கியத்துவம் பெற்றிருந்தது. மணவாழ்வு எங்ஙனம் அமைய வேண்டுமென்ற எண்ணம் இக் கால மக்களிடையே இல்லையெனினும், பெற்றோர்களாலேயே திருமணம் நிச்சயிக்கப்பட்டு வந்தபோதிலும்,

காதலின் புனிதத்தன்மையை இம் மக்கள் புறக்கணிக்க முடியாத வர்களாக இருந்தனர். 'காதல் கடவுளாகிய மன்மதன் எல்லாவித நன்மைகளையும் அருள வல்லவர்' என்ற கருத்து இக் காலத்து மக்களிடையே மிளிர்ந்தது. வகுப்பு வேறுபாடின்றி ஆங்கிலேயர் பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணத்தில் எத்தனை ஈடுபாடு கொண்டிருந்தார்களோ, காதல் திருமணத்திலும் அதே ஊக்கத்தைக் காட்டினர். திருமணம் ஆனதும் பெண்களுக்கு அதிகாரமும் அந்தஸ்தும் கொடுக்கப்பட்டன. மனைவியர்கள் தத்தம் கணவன்மாருக்கு நம்பிக்கைத் துணைவியராகவும், ஆலோசனை கூறுபவர்களாகவும் இருந்தனர். குடும்பத்திற்குரிய பலவித அலுவல்களோடு கணவன்மார்களின் சில பொறுப்புகளையும் அவர்கள் பகிர்ந்துகொண்டனர். வயதுவந்த அல்லது வயது முதிர்ந்த மணமாகாத பெண்கள், ஒரு குறிப்பிட்ட தொகை கட்டப்பட்டுக் கன்னிமடத்தில் சேர்ப்பிக்கப்பட்டனர்.

இக் காலத்தில் கல்விமுறைக்கும் ஊக்கம் அளிக்கப்பட்டு வந்தது. பிரபுக்கள், ஜென்ட்ரி (Gentry) வகுப்பினர் தங்களின் தகுதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்றவாறு தத்தம் பிள்ளைகளுக்குக் கல்வியைக் கற்பித்தனர். இலத்தீன் மொழியிலிருந்த இலக்கியங் களும், பல கிறித்துவப் பாதிரிமார்களின் நூல்களும் கற்பிக்கப் பட்டு வந்தன. இலக்கிய மறுமலர்ச்சி இயக்கம் இங்கிலாந்து வந்தடைவதற்கு முன்னரே, இலத்தீன் மொழியின் சிறப்பு ஆங்கிலேயருக்குத் தெரிந்திருந்தது. 'புதியனவாகத் தோன்றும் அனைத்தும் இடைக்காலத்திலே இருந்து வளர்ந்தவையே' என்ற முதுசொல் இக் கால ஆங்கிலேயர்களின் கல்விமுறைக்கு மிகவும் பொருந்தும்.

**புதிய நிலமுறைகள் :** முந்திய நூற்றாண்டுகளைப் போலவே, 14ஆம் நூற்றாண்டிலும் இங்கிலாந்து ஒரு விவசாய நாடாகவே இருந்தது. கருங்கொள்ளை நோய்க்குப் பிறகு, உள்குடிகள் என்னும் பண்ணை அடிமைகளைவைத்து வேலை வாங்கப்பட்ட பழைய பண்ணைமுறை அழிவுற ஆரம்பித்தது. இதற்கு வேறு இரண்டு முக்கிய காரணங்களுமிருந்தன. நூறாண்டுப்போர் நடந்துவந்த அக் காலத்தில், அதில் பங்கெடுத்துக்கொண்டிருந்த பல நிலக்கிழார்களுக்குப் பொருள்களையும் வீரர்களையும் அனுப்ப வேண்டிய கடமை இருந்தது. ஆனால், பண்ணைகளிலிருந்து அப் பிரபுக்களுக்குக் கிடைத்த வருமானம் போதுமானதாக இல்லை. நாட்டிலே துணிவாணிகம் பெருகிவந்த அவ் வேளையில், அத் தொழிலில் ஈடுபட்டிருந்தோருக்குப் புதிய விகிதத்தில் கூலிகள் கொடுக்கப்பட்டு வந்தன. இதனைக்கண்டு, பண்ணைகளில்

வேலை செய்துவந்த ஆட்கள் தங்களுக்கும் அதே கூலி முறையினைக் கேட்டனர். ஆகவே, நிலக்கிழார்கள் வேறுசில மாற்றுத் திட்டங்களைக் கையாள ஆரம்பித்தனர். தமக்குச் சொந்தமாக இருந்த பெரும் பண்ணைகளைத் தாமே வேளாண்மை செய்வதற்குப் பதிலாக, தம் பண்ணையாட்களுக்கே குறிப்பிட்ட தொகையை மூலதனமாகக் கொடுத்து, பல ஆண்டுகளுக்கு நிலத்தைக் குத்தகைக்குக் கொடுத்தனர். இக் குத்தகை உரிமையைப் பெற்ற பண்ணையாளர்கள் தம் ஆட்களை வைத்து நிலத்தில் வேலை பார்த்தனர். குறிப்பிட்ட தொகையை நிலச் சொந்தக்காரருக்குக் குத்தகையாகவும் கொடுத்தனர். இதுவே குத்தகை விவசாய முறை என அழைக்கப்பட்டது. பழைய முறையில் இன்னும் மேனர்ப் பண்ணைகளில் வேலை பார்த்துவந்த உள்குடிகளும் ஆண்டுதோறும் குறிப்பிட்ட தொகையைக் குத்தகையாகக் கொடுத்துவிட்டு, நிலத்தை உழும் உரிமை பெற்றிருந்தனர். இவர்களின் கடமைகள், உரிமைகள்பற்றி எழுத்துமூலமாக உடன்பாடு தயாரிக்கப்பட்டு, அதன் ஒரு படிவம் (copy) உள் குடிகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. சுதந்திரக் குடியான வர்களாக மாறியிருந்த இப் பழைய உள்குடிகளே, 'படி உரிமை நிலத்தவர்களாக' (copy holders) என அழைக்கப்பட்டனர். ஆகவே, நிலத்தை மையமாக வைத்து நாட்டிலே நிலவியிருந்த நில அடிமைமுறை சிறுகச்சிறுக மறையலாயிற்று.

**கம்பளித் தொழில் :** மேற்கண்ட இருமுறைகளையும் விரும்பாத வேறுசில நிலப்பிரபுக்கள், நாட்டிலே வேகமாக வளர்ந்துவரும் கம்பளி வியாபாரத்தில் நிச்சயமான இலாபத்தைப்பெறும் நோக்கத்தோடு, தங்களது பண்ணைகளை ஆட்டு மந்தைகள் மேய மேய்ச்சல் நிலங்களாக (புல் தரைகளாக) மாற்றிக்கொண்டனர். இங்கிலாந்தில் கம்பளித்தொழில் விருத்தியடைய, இதுவே முக்கியக் காரணமாயிற்று. ஆங்கிலக் கம்பளிக்கு (Wool) ஐரோப்பிய நாடுகளில் மிகுந்த தேவை இருந்ததால், இத் தொழிலில் ஈடுபட்டோருக்கு நிறைய இலாபம் கிடைத்தது.

யார்க்ஷயரிலுள்ள வெஸ்ட்ரைடிங் (Westriding), கிழக்கு ஆங்கிலியா, காட்ஸ் ஓல்டுஸ் (Cots wolds) என்னுமிடங்கள் கம்பளி நூல் தயாரிப்பில் பிரபலமடைந்தன. தொடக்கத்தில், இங்கிலாந்தில் தயாரான கம்பளி நூலை ஃபிளாண்டர்ஸ் பட்டணங் களுக்கும், பின், அரச ஆணையின்படி கலே நகரத்திற்கும் ஏற்று மதியைச் செய்து வந்திருப்பினும், 15ஆம் நூற்றாண்டில் கம்பளி நூற்புத்தொழில் இங்கிலாந்திலேயே விருத்தியடைந்தது. மேற்கு இங்கிலாந்திலிருந்த நார்ஃபோக் (Norfolk) நகரம், கம்பளித்

தொழிலில் சிறப்புற்று விளங்க ஆரம்பித்தது. நார்விச் (Norwich) மாவட்டத்தில், உரோமத்தினால் நெய்யப்பட்ட, உல்லனைவிட (Wollen) லேசான ஊஸ்டட் (Worsted) துணியும் நெய்யப்பட்டது. கம்பளி நூல் தயாரிப்பிலும், கம்பளி நூல் நூற்பதிலும், கம்பளி ஆடை நெய்தலிலும், கம்பளி ஆடைகளை ஏற்றுமதி செய்யும் வியாபாரத்திலும், பெருவாரியான மக்கள் ஈடுபட்டிருந்ததால், இத் தொழில் ஒரு தேசீய தொழிலாக வளர்ந்தது.

ஆரம்பத்தில் கச்சாக் கம்பளியை ஏற்றுமதி செய்வதில் மும்முரமாக இருந்த ஆங்கிலேயர்கள், இக் காலத்தில் அக் கம்பளியை வைத்தே புதிய பொருளாதார அமைப்பைத் தேடிக் கொண்டனர். கம்பளித் தயாரிப்பிலிருந்து, சிக்கெடுப்பவர், நூல் நூற்பவர் நெய்பவர், நெய்த ஆடையைச் சுத்தம் செய்பவர், சாயம் தோய்ப்பவர், விற்பவர் எனப் பலதரப்பட்ட தொழிலாளர்கள் இருந்தனர். இதனாலேயே கம்பளித் தொழில் இங்கிலாந்திலேயே விருத்தியடைந்தது.

**இல்லத்தொழில் முறை :** வேறு சில தொழில்களும் நாட்டிலே வளர்ந்து வந்திருப்பினும், கம்பளித் தொழிலுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. 14ஆம் நூற்றாண்டில் கம்பளித் தொழில் உள்பட பல தொழில்கள் தொழில் கில்டுகளால் அல்லது தொழிற் சங்கங்களால் (Industrial Guilds) கட்டுப்படுத்தப்பட்டு வந்தன. ஆனால், 15ஆம் நூற்றாண்டில், இல்லத் தொழில் முறை (Domestic system) என்ற ஒரு புதிய முறை வழக்கத்திற்கு வந்தது. தத்தம் வீடுகளிலேயே நெசவாளிகள் நெசவு செய்தனர் ; தங்களுக்குத் தேவையான பயிற்சித் தொழிலாளர்களை (Apprentiees) உதவிக்கு வைத்துக்கொண்டனர். தங்களுக்கு விலை கட்டி வரும்படியாக விருப்பம்போல் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி விற்றனர். இம் முறையே தற்காலத் தொழிற்சாலை முறை (Factory system) வரும் வரையில் நீடித்தது.

**அயல்நாட்டு வாணிபம் :** கம்பளி ஆடைத் தொழில் நாட்டிலே வேகமாக வளர்ந்துவர, இதன் பலனாக நாட்டில் வெளிநாட்டு வாணிபமும் பெருகி வளர்ந்தது. 14ஆம் நூற்றாண்டு முடிய கடந்த சில நூற்றாண்டுகளாக, இங்கிலாந்தின் அயல்நாட்டு வாணிபம் ஜெர்மனி நகர வியாபாரிகளின் உரிமையாக இருந்தது. கோலோன் (Cologne), ஹேம்பர்க் (Hamburg), பிரிமென் (Bremen), லுபெக் (Lubeck), டேன்ஜிக் (Danzig) ஆகிய வட ஜெர்மானியப் பட்டணங்கள் தங்களுக்குள் ஹான்ஸ் (வியாபார) கூட்டுக்குழு

(Hanseatic League) என்ற வியாபாரக் கம்பெனியை அமைத்துக் கொண்டிருந்தனர். இக் கம்பெனியின் வியாபாரக் கப்பல்களே இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதியான கம்பளிநூல், கச்சாப் பொருகள் முதலானவற்றை உலகின் பிற இடங்களுக்கு எடுத்துச் சென்றன. இதே கம்பெனியாரின் கப்பல்கள் ஃபிரான்சிலிருந்து மது வகைகளையும், பால்டிக் நாடுகளிலிருந்து மீன் வகைகளையும், இத்தாலிய நகரங்களிலிருந்து ஆடம்பரப் பொருள்களையும், கான்ஸ்டான்டிநோபிளிலிருந்து வாசனைப் பொருள்களையும், இங்கிலாந்துக்கு ஏற்றி வந்தன. இங்கிலாந்தின் அயல்நாட்டு வியாபாரத்தையே தமது சிறப்புரிமையாகக் கொண்டிருந்த 'ஹான்ஸ்' வியாபாரிகள், நாட்டில் சில சில்லறை வியாபாரங்களிலும் ஈடுபட்டிருந்தனர். ஆங்கில அரசினரும் இவ் வியாபாரிகளுக்குப் பல வரிச்சலுகைகளைக் கொடுத்து வந்தனர். இங்கிலாந்தில் அந்நியர்கள்மீது விதிக்கப்பட்ட பல கட்டுப்பாடுகளிலிருந்து இந்த, 'ஹான்ஸ்' வியாபாரிகள் விலக்குப் பெற்றிருந்தனர். கால வரையறையின்றியும் நாட்டில் தங்க அனுமதிக்கப்பட்டனர். நாட்டின் எந்தப் பகுதியிலும் வியாபாரம் செய்ய உரிமை பெற்று இருந்தனர்.

ஹான்ஸ் பட்டணங்களின் வியாபாரக் குழு அல்லாமல், வெனிஸ் (Venice), ஜெனோவா (Genoa) என்ற இத்தாலியப் பட்டணங்களும் 14ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து வியாபாரத்தில் பங்கு கொண்டிருந்தன. ஜெர்மனி பட்டணங்கள் வடகடலைத் தங்களது வியாபார வழியாகவும், இத்தாலியப் பட்டணங்கள் ஜிப்ரால்ட்டர் (Gibralter) ஜலசந்தியைத் தங்களது வழியாகவும் கொண்டு போட்டியிட்டு ஆங்கிலேயரின் ஏற்றுமதி இறக்குமதிகளைப் பெருவாரியாகக் கையாண்டு இலாபம் பெற்றுவந்தனர்.

**வாணிபக் கழகங்கள்:** நாட்டின் வெளிநாட்டு வியாபாரத்தைத் தங்களது ஏகபோக உரிமைகளாகக் கொண்டிருந்த ஜெர்மனி—இத்தாலியப் பட்டணங்களின் செல்வாக்கைக் குறைக்க 15ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்கள் இரு வியாபாரக் கம்பெனிகளைத் தொடங்கினார்கள். 'மெர்சென்ட் அட்வெஞ்சரர்ஸ், (Merchant Adventurers) துணிகர வியாபாரிகள் என்ற ஆங்கிலேய வியாபாரக் கம்பெனி அதில் முதன்மையாக இருந்தது. இக் கம்பெனி, இலண்டன் மாநகரைத் தலைமையிடமாகக் கொண்டும் நியுகேசல், பிரிஸ்டல், யார்க் போன்ற நகரங்களைக் கிளை இடங்களாகக் கொண்டும் ஹாலந்து, பெல்ஜியம் ஆகிய நெதர்லாந்து நாடுகளுடன் வியாபாரத்தை மேற்கொண்டது. 'கிழக்கு நாட்டுக் கம்பெனி,' அல்லது ஈஸ்ட்லாந்து கம்பெனி (Eastland Company)

என்ற இன்னொரு ஆங்கிலேயக் கம்பெனி ஸ்காண்டிநேவியா, ஜெர்மனி நாடுகளோடு வியாபாரத்தில் ஈடுபட்டது.

**வர்த்தக வகுப்பினரின் தோற்றம்:** இந்த அயல்நாட்டு வியாபாரம் நன்கு விருத்தியடைய, நாட்டிலே வளம் சேர்ந்தது. நாட்டின் செல்வம் அதிகரித்ததால், வியாபாரம் மேலும் வளர்ந்தது வாணிபம் வளர வளர, வியாபாரிகளின் வளமும் வளர்ந்தது. நாட்டிலிருந்த நிலப் பிரபுக்களைவிட, இவ் வியாபாரிகள் செல்வம் பெற்று விளங்கினர்கள். நாட்டில் தோன்றியிருந்த இப் புதிய வியாபார வகுப்பினரே டியூடர்கள் காலத்தில் சமூகச் சிறப்பினைப் பெற்றுப் பிரபுக்களின் செல்வாக்கை அரசியலிலிருந்து விலக்கியவர்களானர்கள்.

**ஆதார அங்காடிகளின் தோற்றம் :** இடைக் காலத்தின் பிற்பகுதியில் இங்கிலாந்தின் ஏற்றுமதி வியாபாரத்தின் போக்கைக் கட்டுப்படுத்த சௌத்தாம்ப்டன் (Southampton), சாண்ட்விச் (Sandwich) இலண்டன் ஆகிய இடங்களிலே ஆதார அங்காடிகள் (Staple Markets) நிறுவப்பட்டிருந்தன. இங்கிருந்தே உரோமம், கச்சாத்தோல், பதனிடப்பட்ட தோல், வெள்ளீயம் (Tin), காரீயம் (Lead) ஆகியபொருள்கள் வாங்கப்பட்டன. அப்போதைக்கப்போது இந்த ஆதார அங்காடிகளை அமைக்கும் முறையில் அரசினரால் மாறுதல்கள் செய்யப்பட்டு வந்தன.

**கப்பல் கட்டும் தொழில் :** நாட்டின் அயல்நாட்டு வியாபாரம் ஆங்கிலேயர்களால் நடத்தப்பட்டு வந்த இக் காலத்தில் கப்பல் கட்டும் தொழிலும் விருத்தியடைய ஆரம்பித்தது. அரசினரால் கொண்டு வரப்பட்ட நாவாய்ச் சட்டமும் (Navigation Act) கப்பல் கட்டும் தொழிலை ஊக்குவித்தது. இச் சட்டத்தின்படி, இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்கள் ஆங்கிலக் கப்பல்களிலேயே ஏற்றிச் செல்லப்படவேண்டுமென்றும், இறக்குமதியாகும் பொருள்கள் ஆங்கிலக் கப்பல்களிலேயே கொண்டு வரப்பட வேண்டுமென்றும் ஏற்பாடாகியது. இந்தக் கட்டுப்பாட்டினல் ஆங்கில வியாபாரிகளுக்கு நிறைய வியாபாரக் கப்பல்கள் தேவைப்பட்டதால், ஏராளமான கப்பல்கள் கட்டப்படலாயின.

**காப்புரிமைக் கொள்கை :** அயல்நாட்டு இறக்குமதிகளிலிருந்து உள்நாட்டு கைத்தொழில்களைக் காப்பாற்றிக்கொள்ள காப்புரிமைக் கொள்கையும் (Tarrif) பின்பற்றப்பட்டது. இக் கொள்கையின்படி, நாட்டில் இறக்குமதியான பொருள்கள்மீது அதிகமான காப்பு வரிகள் விதிக்கப்பட்டன. அதே சமயத்தில்,

நாட்டிலிருந்து ஏற்றுமதியான பொருள்களின்மீது வரிகள் குறைக்கப்பட்டன. உள்நாட்டுத் தொழில்களை அயல்நாட்டு வியாபாரப் பொருள்களின் போட்டியிலிருந்து பாதுகாக்கவும், தம் நாட்டு அந்நிய வியாபாரத்தை வளர்த்துக் கொள்ளவுமே இவ்வேற்பாடு செய்யப்பட்டது.

இடைக்காலத்தின் இறுதிக்கட்டம் என்று கருதப்படும் 15 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இங்கிலாந்தில் மேற்கண்ட மாற்றங்கள் தென்படலாயின. இதன் விளைவாக, அடுத்துத் தொடங்கப் போகும் நவீன காலத்திற்கு (Modern Age) இங்கிலாந்து தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டது.

## ஆங்கில மொழியின் வளர்ச்சி
## (இடைக்காலம் முடிய)

ஆங்கில மொழியின் வரலாறு, கி.பி. 5ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டிருந்த ஆங்கிலோ-சாக்சானியர்களின் படையெடுப்பைத் தொடர்ந்தே தொடங்கப்பட்டது. ஆங்கிலோ-சாக்சானியர்கள் ஜெர்மானிய இனத்தினைச் சேர்ந்தவராதலால், இம் மக்களால் பேசப்பட்டு வந்த ஆங்கிலம் (English) தொடக்கத்தில் டியுடானியச் (Teutonic) சாயலையே பெரிதும் கொண்டிருந்தது.

அடுத்து ஏற்பட்ட டேனியர் (வைக்கிங்) படையெடுப்பினால், இங்கிலாந்தில் ஆங்கிலோ-சாக்சானியர்களால் பேசப்பட்டு வந்த இம் மொழியில் சில டேனிஷ் (ஸ்காண்டிநேவியன்) சொற்களும் சேர்த்துக்கொள்ளப்பட்டன.

**நார்மானியப் படையெடுப்புக்கு முற்பட்ட ஆங்கில இலக்கியம்:** இலக்கியப் படைப்புகளின் தன்மையினைப் பொறுத்தே, மொழியின் வளர்ச்சி கணிக்கப்படுகிறது. இம் முறைப்படி, கி. பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 11 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை, ஆங்கிலோ-சாக்சானியர்களின் மொழியாகப் பேசப்பட்டு, எழுதப்பட்டு வந்த ஆங்கிலத்தில் சில எழுத்துப் படைப்புகள் தோன்றின.

ஏற்கெனவே, இங்கிலாந்தில் நாட்டுக்கதைப் பாடலாக (Ballad) இருந்து வந்த பியோவுல்ஃப் (Beowulf) என்ற ஒரு டேனியப் பெருவீரரின் வீரதீரச் செயல்களை, நார்த்தம்பிரியாவைச் சார்ந்த ஒரு கவிஞர் பெருங்காப்பியமாகப் புனைந்தார். 'பியோவுல்ஃப்' என்ற பெயரிலேயே எழுதப்பட்ட அக் காப்பியத்

தில், எங்ஙனம் அந்த இதிகாசத் தலைவர் டேனிஷ் அரசருக்குச் சொந்தமான பகுதிகளில் பன்னிரண்டு ஆண்டுக் காலமாக அட்டகாசம் செய்துவந்த ஒரு கொடுமையான பயங்கரப் பிராணியைக் (Monster) கொன்றுரென்பதை அழகான எழுத்து நடையுடன் அக் கவிஞர் விளக்கியிருந்தார். 'பியோவுல்ஃப்' என்ற இக் காப்பியமே ஆங்கிலோ-சாக்சானிய ஆங்கிலத்தில் எழுதப்பட்ட முதல் நூலாகும்.

ஏழாம் நூற்றூண்டில் வாழ்ந்த காட்மன் (Cadmon) என்பவரே ஆங்கில மொழியின் முதல் கவிஞரெனப் போற்றப்படுகின்றூர். விட்பி (Whitby) மடாலயக் குதிரை லாயத்தில் வேலைபார்த்து வந்த காட்மனை, ஒரு நாளிரவு கடவுளின் ஆதிப் படைப்பைப் பற்றிப் பாடும்படி தெய்வத்தூதுவர் (Angel) கட்டளையிட்டதாகவும், தமக்குத் தெய்வ ஆசியினல் அளிக்கப்பட்ட நாவன்மையைக் கொண்டு அதற்கேற்ப அவர் தம் கவிதைகளை இயற்றிஞரென்றும் நம்பப்படுகிறது. கிறித்துவ சமயத்தை மையப் பொருளாகக் கொண்டிருந்த அவரது கவிதைகள் (poems) ஆங்கில மொழியில் ஒரு கவிதை யுகத்தைத் தொடங்கி இருந்தது.

கி.பி. எட்டாம் நூற்றூண்டில் வாழ்ந்த சினேவுல்ஃப் (Cynewwulf) என்பவரும், ஒரு நாளிரவு வானில் புனிதச் சிலுவையின் காட்சியைக் கண்டு மெய்சிலிர்த்தவராகக் கிறித்துவ சமயப் பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டு பல கவிதைகளை ஆங்கில மொழியில் இயற்றினர்.

ரூட்டின் கனவு (Dream of the Rood), கிறித்து (Christ), எலினி (Elene), ஜூலியானு (Juliana) என்ற இவரது சமயக் கவிதைகள், அக் கால ஆங்கிலப் பாணியிலே எழுதப்பட்டன.

ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் ஆங்கிலக் கவிதை முறை, நாட்டின் வடபுறத்திலும் உரைநடைமுறை (prose) தென் பகுதியிலும் வளர்ச்சி பெறலாயின.

மகா ஆல்ஃபிரட் காலத்தில் தொகுத்துத் தொடங்கிவைக்கப் பட்ட 'ஆங்கிலோ-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பு' (The Anglo-Saxonic Chronicle), ஆங்கில உரைநடையின் அடிப்படை உருவமாக அமைந்தது. தொன்மையான, பரம்பரை வெஸ்ஸெக்ஸ் நாட்டுக் கதைகளில் தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் ஆதாரமாகக் கொண்டு, புகழ்பெற்ற அவ் வரலாற்றுக் குறிப்புத் தொகுக்கப்பட்டிருந்தது. நார்மானியக் கடைசி அரசர் ஸ்டீபன் காலம்வரையிலான (கி. பி 1514) ஆங்கில வரலாறு, இந்தத்

தொகுப்பு நூலில் அடங்கியிருக்கிறது. மகா ஆல்ஃபிரடால் தொடங்கி வைக்கப்பட்ட இந்த வரலாற்றுக் குறிப்பு, ஆங்கில இலக்கியத்திற்கு ஆக்கம் கொடுத்ததாக அமைந்தது.

மேலும், பீடு (Bede) இலத்தீன் மொழியில் இயற்றியிருந்த திருச்சபை வரலாற்றையும், பாலஸ் ஒரோசியஸ் (Paulus Orosius) என்பவரால் ஆக்கப்பட்ட 'உலக வரலாற்றையும்' 'மகா கிரிகோரி என்ற போப்பாண்டவரால் உருவாக்கப்பட்ட 'மேய்ப்பதை காத்தல்' என்னும் நூலையும், பொயீதியஸ் (Boethius) 'என்பாரின் தத்துவ சாத்திரத்தின் 'ஆறுதற் கூற்றுகளை'யும் அக் காலத்திய ஆங்கிலத்தில், மகா ஆல்ஃபிரட் மொழிபெயர்க்கச் செய்திருந்தார். இவ் வரசரின் இலக்கியத் தொண்டின் காரணமாகத் தென்புறத்தில் ஆங்கில இலக்கியமுறை உருவாக்கப் பட்டது.

சுருக்கமாகக் கூறின், ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் கவிதைகள், உரைநடைப் பகுதிகளைக் கொண்டு ஆங்கில மொழி ஓரளவுக்கு வளர்ச்சி பெற்றுவிட்டது.

**நார்மானியர் காலத்திலிருந்து இடைக்காலம் வரை:** நார்மானியர் படையெடுப்பைத் (கி.பி.1066) தொடர்ந்து, அதன் விளைவாக, ஆங்கில மொழியின் வளர்ச்சி ஓரளவு தடைப்பட்டது.

நாட்டு மக்களிடையே இம் மொழி பரவலாகப் பேசப்பட்டு வந்தபோதும், குறிப்பிடத்தக்க இலக்கியங்கள் அடுத்த 150 ஆண்டுகளுக்கு இம் மொழியில் எழவில்லை.

நார்மானிய அரசர்களும் பிரபுக்களும் ஃபிரெஞ்சுப் பகுதியிலிருந்து வந்திருந்ததால், அவர்களின் மொழி ஃபிரெஞ்சுக் (French) கலவையாக இருந்தது. ஆகவே, பிரெஞ்சு மொழியே இங்கிலாந்தின் ஆட்சி மொழியாகவும் (Court language), உயர் வகுப்பினரிடையே (upper class) பேசப்பட்ட மொழியாகவும் விளங்கியது. ஆனாலும், ஏக காலத்திலே கீழ்மட்டத்தில் ஆங்கில மொழியும், மேல்மட்டத்தில் ஃபிரெஞ்சுக் கலவை (நார்மானிய மொழி), ஃபிரெஞ்சு மொழியும் வழக்கத்தில் இருந்துவர, பற்பல புதுவார்த்தைகள் ஆங்கில மொழியில் புக ஆரம்பித்தன. ஆங்கிலோ-சாக்சானியரின் பழைய ஆங்கிலம் (Old English), மெல்ல மெல்ல மறைந்து, புது மெருகைப் பெற்று விளங்கலாயிற்று.

கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், ஆங்கில மொழி மீண்டும் புத்துயிர் (revival) பெறலாயிற்று. குறிப்பாக, ஜான்

அரசர் காலத்திலேயே, வெல்லப்பட்ட ஆங்கிலோ-சாக்சானியருக்கும், படையெடுப்பாளர்களான நார்மானியர்களுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டதால், இது மொழிக்கலப்பிற்கும் வித்திடுவதாக அமைந்தது. இவ் வரசர் காலத்தில், ஃபிரெஞ்சுப் பகுதியிலிருந்த நார்மண்டி இழக்கப்பட்டதைத் தொடர்ந்து, பல நார்மானியப் பிரபுக்கள் இங்கிலாந்தையே தங்கள் தாயகமாகக் கொள்ள முற்பட்டனர். நார்மானியரின் இந்த இடமாற்றம், இவர்களை இங்கிலாந்து விவகாரத்தில் அதிகமாக ஈடுபாடு கொள்ளச் செய்ததால், இந்த மனமாற்றம் அதுவரை இருந்துவந்த வேற்றுமைகளை மறையச் செய்துவிட்டது. இதனால் நாட்டிலே ஒரு புதிய ஒற்றுமையுணர்ச்சி மலர்ந்ததால், இஃது ஆங்கில மொழிக்கு உயர்வு கொடுத்துவிட்டது. பிற மொழிகள் அந்நிய மொழிகளெனச் சற்றுப் பின்னுக்குத் தள்ளப்பட்டன. ஆனால், முழுமையாக, ஃபிரெஞ்சு மொழி இன்னும் புறக்கணிக்கப் படவில்லை. மறுமலர்ச்சி அடைந்திருந்த ஆங்கில மொழியில், பதின்மூன்றும் நூற்றாண்டில் சில இலக்கியப் படைப்புகளும் தோற்றுவிக்கப்பட்டன.

லேயாமோன் (Layamon) என்ற செஸ்டர்ஷயரைச் சேர்ந்த பாதிரியொருவர், 30,000 வரிகளடங்கிய கவிதையில் பழங்கால இங்கிலாந்தின் வரலாற்றை வடித்தெடுத்தார். லிங்கன்ஷயரைச் சார்ந்த ஓர்ம் (Orm) என்ற இன்னொரு பாதிரியார், மிக எளிய நடையில் ஓர்முலம் (Ormulum) என்ற செய்யுள் தொகுப்பைத் தயாரித்தார். 'ஆந்தையும் குயிலும்' (Owl and the Nightingale) என்ற தலைப்பைக் கொண்ட ஓர் உரைநடைப் பாடலும் அக்கால வரலாற்றுப் பின்னணியில் எழுதப்பட்டிருந்தது. மாத்யூ பாரிஸ் (Mathew Paris) என்ற ஆசிரியரொருவரும் ஆங்கிலேயரின் வரலாற்றினை (History of England) முக்கிய நிகழ்ச்சிகளோடு விவரித்து வெளியிட்டார்.

இந்த மூல நூல்கள் எங்ஙனம் ஆங்கில மொழிக்குச் சிறப்பையளித்தனவோ, அதேபோன்று சில மொழிபெயர்ப்பு நூல்களும் இம் மொழிக்கு மெருகேற்றின.

இராபர்ட் மேன்யிங் (Robert Mannyng) என்பவரால் எழுதப்பட்ட 'பாவங்களின் சுருக்க நூல்' (Manual of Sins), 'மனச்சாட்சியின் வருத்தம்' (Remorse of Conscience) என்ற இரு ஃபிரெஞ்சு நூல்கள் 14ஆம் நூற்றாண்டில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தன. ஜான் பிராயிஸார்ட் என்ற அவைக்களக் கவிஞர், மூன்றும் எட்வர்டு ஆட்சிக் காலத்தை விவரித்து எழுதி

யிருந்த ஃபிரெஞ்சு நூலும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டது. இதல்லாமல் அப்போதைக்கப்போது சில இலத்தீன் மொழி நூல்களும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுவந்தன. இதனால் சிறிது சிறிதாக ஃபிரெஞ்சும் இலத்தீனும் ஆங்கில மொழியில் புகலாயின.

ஆக, 13ஆம் நூற்றாண்டின் மூலப்படைப்புகளும், 14ஆம் நூற்றாண்டின் மொழிபெயர்ப்புகளும் இடைக்கால ஆங்கில மொழிக்கு அடிப்படையாக விளங்கிவந்தன.

இங்கிலாந்து வரலாற்றில் 14ஆம் நூற்றாண்டு ஒரு தேசிய உணர்ச்சிபெற்ற காலமாகக் கருதப்படுகிறது. மூன்றாம் எட்வர்டு காலத்தில் இங்கிலாந்திற்கும், ஃபிரான்சுக்குமிடையே தோன்றி யிருந்த நூறாண்டுப் போர், இவ்விரு நாடுகளிலும் தேசிய உணர்ச்சியைக் கிளப்பிவிட்டிருந்தது. இந்த உணர்ச்சி இவ்விரு நாடுகளிடையே அதுவரை இருந்து வந்த கலாசாரத் தொடர்பு களைத் துண்டித்தது. இதுவரை இங்கிலாந்தில் ஆட்சி மொழி யாகவும், உயர் பிரபுக்களிடையே பேச்சு மொழியாகவும் இருந்து வந்த ஃபிரெஞ்சு, இப் போர் உச்சக்கட்டத்தை அடைந்திருந்த வேளையில், ஆங்கில மன்னராலும் பிரபுக்களாலும் மற்ற மக்கள் பிரிவினராலும் அந்நிய மொழியாகக் கருதப்பட்டது. கி. பி. 1362ஆம் ஆண்டில் மூன்றாம் எட்வர்டு கொண்டுவந்த ஒரு சட்டத்தை இதற்கோர் உதாரணமாகக் கொள்ளலாம். இச் சட்டத்தின்படி, இனி நீதிமன்றங்களில் வழக்குகள் ஃபிரெஞ்சு மொழியில் அல்லாமல் ஆங்கில மொழியிலேயே எடுத்துரைக்கப் படவேண்டும்; விசாரிக்கப்பட வேண்டும்; நீதி வழங்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது.

இதுவரை நாட்டிலிருந்து வந்த 'ஆங்கில - நார்மானிய- ஃபிரெஞ்சு' என்னும் மரபு ஒழிந்து, ஆங்கில மரபு ஒன்றே எஞ்சி நின்றது. சுருக்கமாகக் கூறினால், மூன்றாம் எட்வர்டு காலமே ஆங்கிலமொழி அரியமுறையில் வளர்ச்சியுற்ற காலமாகும்.

**இடைக்கால இலக்கிய மேதைகள்**

ஃபிரெஞ்சு மொழிக்கு மாறாக, அரசரின் அவையிலிருந்து, நாட்டிலிருந்த கல்விக்கூடம் வரை ஆங்கிலமொழி புழக்கத்தில் கொண்டுவரப்பட்டது. 14ஆம் நூற்றாண்டில் சில இலக்கிய மேதைகள் தங்கள் படைப்புகளால் ஆங்கில மொழிக்குப் பெருமை தேடிக்கொடுத்தனர்.

**வில்லியம் லாங்லாந்து (William Langland)** : இங்கிலாந்தின் மத்திய மேற்குப் பகுதியிலிருந்த மால்வெர்ன் என்னுமிடத்தில் பிறந்து, இலண்டன் மாநகரின் திருக்கோயில் ஒன்றில் தொழுகை மந்திரம் ஓதும் சமய ஊழியராகப் பணியாற்றி வந்த வில்லியம் லாங்லாந்து, இலத்தீன் மொழியையும் ஆங்கில மொழியையும் கசடறக் கற்றவராவார். தனிமையில் வாழ்ந்த இவர், தம் முழு நேரத்தையும் கவிதைகளைப் புனைவதிலேயே கழித்தார். இவருடைய கவிதைகள் அடுக்கு மொழிகளற்ற மோனைச் சந்தத்தில் அமைந்திருந்தன. இவரது கவிதைகளிலேயே, 'பியர்சு பிளவுமென்' என்ற நூலே மிகவும் போற்றத்தக்கதாய் அமைந்தது. கி.பி. 1362-ல் இயற்றப்பட்ட இந்தக் கவிதை ஆங்கிலக் கவிதைக்கே ஆக்கம் கொடுத்ததாகவுமிருந்தது.

இவர் இக்கவிதையில், சமயத்திலிருந்த சில குறைபாடுகளையும், சமூகத்திலிருந்த பல இடர்ப்பாடுகளையும் அழகாக விவரித்திருக்கிறார். இயேசு கிறித்துவையும், அவருடைய தூய்மையான அன்னை மேரியையும் போற்றிய அக்கால மக்கள், அவர்களின் கருத்துகளை மட்டும் போற்றவில்லை என்று இவர் தம் கவிதையில் கடுமையாகச் சாடினார். திரிதுறவிகள் ஆழ்ந்த பற்றுடன் வேத நூலைப் படித்து விளக்கம் பெறாமல், வயிற்றுப் பிழைப்புக்காக அந் நூலை மற்றவர்களுக்கு விளக்கம் செய்து வந்ததையும் கண்டித்தார். உலகை ஆட்டுவிக்கும் ஏழு பாவங்களைப் போக்கச் சமய போதகர்கள் துணிய வேண்டுமென்றும் இவர் எடுத்துரைத்தார். சொர்க்கத்திலுள்ள இயேசுநாதர் ஏழை மனிதன் போன்று உடை உடுத்தி எளிமையாக வாழ்ந்ததைப் போல், திருச்சபையினரும் எளிய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்றும் இவர் தம் கவிதையில் குறிப்பிட்டார். கிறித்துவர்கள் ஒருவருக்கொருவர் அன்புடன் கலந்து வாழ்வதே களங்கமற்ற கிறித்துவ சமயமாகும் என இக் கவிஞர் தம் நூலில் வற்புறுத்தினார்.

இவைமட்டுமன்றி, சமுதாயத்தின் கடைநிலையிலே இருக்கும் ஏழை எளியோரை அரசரும், பிரபுக்களும் காக்கக் கடமைப்பட்டவர்கள் என்றும், வியாபாரிகள் மோசடிகளில் ஈடுபடாமல் தம் பொருளைப் பொதுப் பணிகளுக்குச் செலவிட வேண்டுமென்றும், ஆண்கள் பொருளுக்காக மட்டுமன்றி, காதலுக்காகவும் பெண்களை மணந்து கொள்ளவேண்டுமென்றும் தம் காவியத்தில் வற்புறுத்தியிருந்தார்.

'பியர்சு பிளவுமென்,' என்ற அக் காவியத்தின் கதாநாயகன் ஓர் ஏழை விவசாயி. தங்கி வாழ்வதற்கு கூரை இல்லாமலும்,

உழைத்து உண்பதற்கு நிலமில்லாமலும் இரவில், சாப்பிடப் போதிய உணவில்லாமலும், கிழிந்த உடையுடனும் பொத்தல்கள் கொண்ட காலணிகளுடனும் வாழ்க்கையோடு போராடிய, நலிந்து மெலிந்த பியர்சு என்ற அந்த விவசாயி, அரசராலும் அவரது அவையினராலும் பிரபுக்களாலும் புறக்கணிக்கப்பட்டவராக இருக்க, இயேசுநாதர் அக் குடியானவன் முன்பு தோன்றித் தம் மேலங்கியை அணிவித்ததாக வில்லியம் லாங்லாந்து தம் கவிதையை முடிக்கிருர்.

இவர் தம் கவிதையில், 'ஏழைகளுக்கு இவ்வுலகமே பாவ விமோசன இடம்; பணக்காரர்கள் சொர்க்கத்தை அடைய முடியாதவர்கள்; இயேசுநாதர் எப்போதும் ஏழையினிடத்திலே ஐக்கியமாகியிருக்கிருர்' என்ற தூய்மைக் கருத்துகளை வற்புறுத்தியிருந்தார்.

இவரது 'பியர்சு பிளவுமென்' என்ற கவிதையும் மற்றக் கவிதைகளும் இடைக்கால இங்கிலாந்தின் குறைபாடுகளைக் கண்டித்ததோடு, ஆங்கிலக் கவிதை நடைக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தன.

**ஜான் கோவர்** (John Gower): கென்ட்டில் வாழ்ந்துவந்த ஒரு பண்ணைக்காரரான கோவர், ஃபிரெஞ்சு, இலத்தீன் மொழிகளில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தவர். இக் கவிஞர் ஆங்கிலத்தில் எழுதியதைவிட ஃபிரெஞ்சு, இலத்தீன் மொழிகளிலேயே அதிகமாகக் கவிதைகளை எழுதியிருந்தார். இருப்பினும், ஆங்கிலத்தில் எழுதப்பட்ட கவிதைகள் இலக்கியச் சிறப்பைப் பெற்றவையாக அமைந்தன. பண்டைய செய்யுள் நடையில் ஒட்டு உவமைகளைக் கொண்டு இவரால் எழுதப்பட்ட சில ஆங்கிலக் கவிதைகள் காதலைக் கருப்பொருளாகக் கொண்டு அமைந்திருந்தன. இவ்வகையில் ஜான் கோவர், இத்தாலிய இலக்கிய மேதையான பொக்காஷியோவைப் (Boccacio) பின்பற்றியவராக இருந்தார். ஏழைமக்கள் படும்பாட்டினை விவரித்து இவர் எழுதியிருந்த சில கவிதைகள், வில்லியம் லாங்லாந்தின் பாணியில் அமைந்திருந்தன. அவிக்ஞனிலிருந்த போப்பாண்டவரின் முறையற்ற செயல்களையும் அவரது சமயப் பிரதிநிதிகள் செய்த முறைகேடுகளையும் கண்டித்து இவரால் எழுதப்பட்ட வேறு சில கவிதைகள் ஜான் விக்ளிஃபின் சமயச் சீர்திருத்தப் பிரச்சாரத்தை ஒட்டியதாகவுமிருந்தன. ஆயினும் விக்ளிஃபின் கொள்கைகளை ஜான் கோவர் முழுக்க ஏற்றுக்கொண்டவராக இல்லை,

பண்டைய உவமைகளைத் தம் கவிதைகளில் மேற்கோளாகக் காட்டி, கத்தோலிக்கக் கிறித்துவ சமயத்தின் சிறப்பைக் கோவர் வற்புறுத்தியிருந்தார். வேதநூல் முழுவதையும் கற்று (விக்ளிஃபைப்போல்) மூடநம்பிக்கையோடு வாழ்வதைவிட, அதைக் கற்றுக் கொள்ளாமலிருப்பதே நலம் என்றும், லாலார்டுகள் செய்து வந்த தவற்றை ஏனையோர் செய்யக்கூடாதென்றும், கோவர் தம் கவிதையில் வற்புறுத்தியிருந்தார். இவரது கவிதைகளும் இடைக்கால ஆங்கிலத்திற்குச் சிறப்பு ஊட்டும்படியாக அமைந்தன.

**ஜான் விக்ளிஃப்** (John Wycliff): யார்க்ஷயரில் பிறந்து ஆக்ஸ்ஃபோர்டு கலாசாலையில் கல்வி பெற்றிருந்த இச் சீர்திருத்தச் செம்மல், போப்பாண்டவரின் பிரத்தியேக அதிகாரத்தையும், திருச்சபையினரின் முறைகெட்ட நடத்தைகளையும், சமயத்தில் மலிந்திருந்த முறைகேடுகளையும் கண்டிக்கும் வகையில் இலத்தீன் மொழியில் அவ்வப்போது சில நூல்களை இயற்றி இருந்திருப்பினும், ஆங்கிலத்திலும் தம் கருத்துகளை வலியுறுத்தும் வகையில் பல சிறு சமயப் புத்தகங்களையும் (Tract), துண்டுப் பிரசுரங்களையும் (Pamphlets) எழுதி வெளியிட்டார்.

இவரது எழுத்துகளுக்குச் சீர்திருத்தக் கருத்தே கருப்பொருளாக அமைந்திருந்தது. சமய உருவ வழிபாட்டையும், புனிதச் சின்னங்களின் வழிபாட்டையும், பாவ மன்னிப்புச் சீட்டுகள் விற்பதையும், திருச்சபையினரால் ஆன்மாக்கள் ஈடேறும் என்ற கருத்தினையும் விக்ளிஃப் தம் சமய நூல்களிலே கடுமையாகக் கண்டித்தார். தனி மனிதனுக்கும் கடவுளுக்குமிடையே தரகர்கள் (திருச்சபையினர்) தேவையில்லையென்றும், தனிமனிதன் நேராகக் கடவுளிடத்துத் தொடர்புகொள்ள வேண்டுமென்றும் விக்ளிஃப் நம்பினார். கடவுள் வழிபாட்டில், 'தரகர்கள் தேவையில்லை' என்பதை வற்புறுத்திக் கூறும்வகையில் ஜான் விக்ளிஃபின் ஆங்கிலப் பாடல் ஒன்று பின் வருமாறு :

'குற்றவாளியாகக் குற்றம் சுமத்தப்பட வேண்டிய ஒவ்வொரு மனிதனும், அவன் செய்த குற்றத்திற்காகக் குற்றவாளியாக்கப்பட வேண்டும்; காப்பாற்றப்பட வேண்டிய ஒவ்வொரு மனிதனும் அவனுடைய தனிப்பட்ட தகுதிக்காகவும் மதிப்பிற்காகவும் காப்பாற்றப்படவேண்டும்.'

இவரது சமயச் சீர்திருத்தப் பிரச்சாரப் பணியின் சிறப்புக் கட்டமாக, இனி ஆங்கில மொழியிலேயே வழிபாடு நடத்தப்பட

வேண்டுமென்று தெரிவித்திருந்தது, இம் மொழிக்கே பேருக்கம் கொடுப்பதாக இருந்தது. தம் செயலாளரான 'பர்வே' என்பவரைக் கொண்டு இலத்தீன் மொழியிலிருந்து வந்த விவிலிய நூலை முழுமையாக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கச் செய்திருந்தார். இவ் வாங்கில மொழிபெயர்ப்பு, புலமை மிக்கதாகவும் போற்றத்தக்கதாகவும் அமைந்திருந்ததோடன்றி, ஆங்கில மொழியின் வரலாற்றிலும் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுவிட்டது. விவிலியத்தின் இந்த ஆங்கில மொழிபெயர்ப்பு, இம் மொழியின் உரைநடை முறைக்கு ஓர் உரைகல்லாக அமைந்தது.

**ஜியாஃப்ரே சாஸர் (Geoffrey Chaucer):** *14ஆம் நூற்றாண்டில் ஆங்கிலம் இங்கிலாந்தில் தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ளப் பட்டதால் ஜியாஃப்ரே சாஸர் (கி.பி. 1340-1400) என்ற ஆங்கில தேசியக் கவிஞர் தோன்றி இலக்கியச் சேவை செய்வதற்கு அக் காலம் பொருத்தமானதாக அமைந்தது.*

ஆங்கில இலக்கிய மலர்ச்சிக்கு, அதாவது ஆங்கிலச் செய்யுள் இலக்கியத்திற்கு அடிப்படையிட்டவரே இந்த மாபெரும் புலவராவார்.

இலண்டன் மாநகரில் கி.பி. 1340-ல் சாராயக்கடை வியாபாரி ஒருவரின் மகனாகப் பிறந்த சாஸர், முறைப்படி கல்வி பயின்று தம் பதினேழாவது வயதில் மூன்றும் எட்வர்டின் அரண்மனையிலே வேலையில் சேர்ந்தார். நூறாண்டுப்போர் தொடங்கியபோது சாஸரும் ஃபிரான்சு நாட்டிற்குச் சென்று அரசரின் படையிலே சேர்ந்து போரிட்டார். எதிரிகளால் ஒருமுறை இவர் சிறைப் படுத்தப்பட்டதைத் தொடர்ந்து, ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு மீட்புப் பணத்தைக் கொடுத்துத் தம் விடுதலையைச் சாஸர் தேடிக் கொண்டார். நாடு திரும்பிய சாஸருக்கு அரண்மனையிலேயே துரைமகனாக (Squire) வேலை தரப்பட்டது. பின்னர், இலண்டன் துறைமுகச் சுங்கவரி அதிகாரியாகவும், காமன்ஸ் சபையில் கென்ட்டின் பிரதிநிதியாகவும் சிலகாலம் சாஸர் பணியாற்றி வந்தார். மூன்றும் எட்வர்டின் தூரத்து உறவினள் ஒருத்தியை சாஸர் மணந்து கொண்டதால், இவருக்கு அரசியலிலும் செல்வாக்கு வளர்ந்தது. இதைத் தொடர்ந்து அரசரால் இங்கிலாந்தின் தூதராகச் சாஸர் இருமுறை இத்தாலிக்கு அனுப்பப்பட்டார்.

சாஸர் இத்தாலிக்குச் சென்று சிலகாலம் தங்கி இருந்தது, இவரது வருங்கால இலக்கியப் பணிக்கு வித்திடுவதாக அமைந்தது. இவர் இத்தாலிக்குச் சென்றிருந்த சமயத்தில்

டான்டே (Dante) என்ற பெருங் கவிஞரின் அமர காவியமான 'டிவைன் காமெடி' (Divine Comedy) என்ற நூலைக் கற்று உணர முடிந்தது. மேற்கொண்டு பீட்ரார்க் (Petrarch), பொக்காஷியோ (Boccacio) என்ற இத்தாலியப் பெரும்புலவர் களோடு நெருங்கிப் பழகி அவர்களின் இலக்கியங்களைச் சாஸர் படித்து உணரமுடிந்தது.

மூன்று அரசர்களால் (மூன்றும் எட்வர்டு, இரண்டாம் ரிச்சர்டு, நான்காம் ஹென்றி) ஆதரிக்கப்பட்ட பெரும் வாய்ப்பினைப் பெற்றிருந்த சாஸர், கி. பி. 1370—1400 வரையுள்ள காலத்தில் பல சிறந்த கருத்துகளைக் கவிதைகளாகவும், கட்டுரைகளாகவும், இலக்கியமாகவும் புனைந்திருந்தார். இத்துடன் ஃபிரெஞ்சு மொழியின் சில படைப்புகளையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்.

சாஸர் தம் எழுத்துகளில் வில்லியம் லாங்லாந்தைப்போல் சன்மார்க்கப் போதனைகளை மட்டும் வற்புறுத்தவில்லை; ஜான் கோவரைப்போல் காதலைப்பற்றியும் அதிகமாக வர்ணிக்கவில்லை; பழைய மூடக்கொள்கைகளைக் கண்டித்தார்; இயற்கையின் எல்லா நிலைகளையும் போற்றிப் புகழ்ந்தார்; சமய குருமார்களின் நேர்மையின்மையைக் கண்டித்தார்; ஆனாலும் லாலார்டுகளின் போதனைகளை ஏற்க மறுத்தார். அரசரின் கொடுங்கோலாட்சியை வெறுத்தார்; இருப்பினும், முடியாட்சியை வரவேற்றார்; ஏழை களிடம் இரக்கம் காட்டினார்; பிரபுக்களின் சிறப்பதிகாரங் களையும் ஏற்றார்; இவரால் ஆக்கப்பட்ட எழுத்துப் படைப்புகள் சாஸர் காலத்து இங்கிலாந்தின் பிரதிபிம்பமாகவே இருந்தன.

இவரால் எழுதப்பட்ட நூல்களிலே, 'கான்டர்பரிக் கதைகள்' (Canterbury Tales) என்னும் காவியமே தலைசிறந்ததாகப் போற்றப்படுகிறது. இங்கிலாந்தின் நிறைவையும் குறையையும் அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்டும் இந் நூல், இடைக்காலக் கவிதைகளுக்கு மட்டுமன்றி, ஆங்கிலக் கவிதை முறைக்கே ஒரு சிறந்த உதாரணமாக விளங்குகிறது.

'கான்டர்பரிக் கதைகளில்' சாஸர் இங்கிலாந்தின் பல பிரிவு களைச் சேர்ந்தவர்களும், பல வேலைகளைச் செய்தவர்களுமான முப்பது கற்பனைப் பாத்திரங்களை உருவாக்கியிருந்தார். சவுத்வார்க் (Southwark) என்னுமிடத்திலிருந்து கான்டர் பரியிலிருந்த (தியாகி) தாமஸ் பெக்கட்டின் சமாதிக்குப் புனித யாத்திரிகர்கள் வழிப்பயணத்தின்போது, தங்களுக்குள் சொல்லிக்

கொண்ட கதைகளாகவே இந் நூல் அமைந்திருக்கிறது. இந் நூல், அக் காலச் சமுதாயத்திலும் சமயத்திலும் அரசியலிலும் இருந்து வந்த குறைகளை நையாண்டி செய்வதாகவும், நிறைவுகளைப் போற்றுவதாகவும் எழுதப்பட்டிருக்கிறது.

சாஸர் இந் நூலில், தம் கற்பனைப் பாத்திரங்களான யாத்திரிகர்களின் வாய்ச்சொற்களால் திருச்சபையின் சீர்கேடு களையும், சமய நெறியை மறந்த குருமார்களையும், சன்மார்க்க முறையைத் துறந்த மடாலயத் தலைவர்களையும் தாக்கினர். மென்மையான இதயத்தில் மட்டுமே அன்பு சுரக்கும் என்றும், அன்பு கொண்டோரையே கர்த்தர் நேசிப்பார் என்றும் சாசர் அந் நூலில் இடித்துரைத்தார். இறுதியாக, ஒரு கதாபாத் திரத்தைக் கொண்டு பின்வரும் கருத்துரையையும் சாஸர் அந் நூலில் வலியுறுத்தினர்.

'யாத்திரீகனே!' வீறுகொண் டெழுந்திரு;
உன் நாட்டைத் தெரிந்துகொள் ;
மேலே நோக்கிப்பார் ; எல்லோருக்குமான
இறைவனை வேண்டி வணங்கு ; நன்றி செலுத்து ;
நீண்ட நெடுவழியில் உன் ஆவியே உன்னை
வழிநடத்திச் செல்லுமாறு துணிந்து செல் :
கொஞ்சமும் அஞ்சாது உண்மையே பேசு.'

சாஸர் இந்த நூலில் கொந்தளிப்பான நிலையற்ற வாழ்க்கைச் சுழல்களைப்பற்றிய உண்மைகளை அக் காலத்திய இங்கிலாந்தின் பின்னணியில் எடுத்துரைத்தார்.

ஆகவே, இவரது பல இலக்கியப் படைப்புகள் ஆங்கில மொழிக்கு இன்றியமையாத சிறப்பினைத் தேடிக் கொடுத்தன.

சாஸர் இன்னொரு வழியிலும் ஆங்கில மொழியின் வளர்ச்சிக்கு மறக்க முடியாத தொண்டு ஆற்றியிருந்தார்.

ஆங்கில மொழி, இங்கிலாந்தில் (இக் காலத்தில்) எல்லோ ராலும் பேசப்பட்டு எழுதப்பட்டு வந்திருப்பினும், பற்பல பகுதி களில் இன்னும் பற்பல பிரதேச மொழியாகவோ அல்லது தல மொழியாகவோ (Dialects) இருந்து வந்தது. நாட்டின் வடபுறத்தில் பரவியிருந்த ஆங்கில மொழி, தென்புறத்து மொழியிலிருந்து சற்று வேறுபட்டதாக இருந்தது; மத்திய புறத்து (Midlands) மொழி மற்றப் பகுதிகளில் புழக்கத்திலிருந்த ஆங்கிலத்திலிருந்து மாறு

பட்டதாக இருந்தது. கிழக்குப் பகுதியில் பேசப்பட்ட இம் மொழி மேற்குப் பகுதியில் பேசப்பட்ட ஆங்கிலத்திலிருந்து வேறு பட்டது. சுருக்கமாகக் கூறின், நார்த்தம்பிரியா, மெர்சியா, வெஸ்ஸெக்ஸ், கென்ட், கீழ் ஆங்கிலியா என்ற அந்தப் பழைய (ஆங்கிலோ-சாக்சானிய) பகுதிகளை நினைவுபடுத்தும் வகையில் ஆங்கிலமொழி அந்தந்தப் பகுதியில் ஒன்றுக்கொன்று மாறு பட்டநிலையில் வேறுபட்டே இருந்து வந்தது.

ஜியாஃப்ரே சாசர் தம் எழுத்துப் படைப்புகளில் கீழ் மத்திய புறத்துப் (East Midlands) பகுதியில் பரவியிருந்த ஆங்கில மொழியையே பயன்படுத்தினர். இப் பகுதியில்தான் புகழ்பெற்ற ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகங்களும், வாணிபக் கேந்திரங்களும், பாராளுமன்றமும் அரசவையும் கூடிவந்த தலைநகரான இலண்டன் மாநகரமும் இருந்தன. இப் பகுதியில் பேசப்பட்ட, எழுதப்பட்ட ஆங்கிலத்தைச் சாஸர் பயன்படுத்திய தால், இதுவே இடைக்கால ஆங்கில நடைக்கே வித்திடுவதாக அமைந்தது. இதுவரை நாட்டின் பல பகுதிகளில் ஆங்காங்கு மக்கள் பேசிவந்த தல மொழிகள் மறைந்து, சாஸரின் ஆங்கிலமே பொது ஆங்கில மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

முதலாம் எலிசபெத் காலத்திய நவீன ஆங்கிலத்திற்கு (New English) சாஸர் காலத்து இடைக்கால ஆங்கிலமே வழிகாட்டியாக அமைந்தது.

# 9. நவீனகால இங்கிலாந்து

உலக வரலாறு, வரலாற்றாசிரியர்களால் பழைய காலம், இடைக்காலம், நவீன காலம் என்று மூன்று காலப்பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ரோமானியப் பேரரசு கி. பி. 476ஆம் ஆண்டில் மிலேச்சர்களால் சிதைக்கப்பட்டதோடு, வரலாற்றின் பழங்காலம் முடிவு பெறுகின்றது. அடுத்து ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் இருண்ட காலமாகவும் (Dark Age) இடைக்கால மாகவும் அமைகின்றன. பதினைந்தாம் நூற்றாண்டே உலக வரலாற்றில் ஓர் இடை மாறுபாட்டுக் (Transitional) காலமாகக் கருதப்படுகின்றது. ஏனெனில், இந் நூற்றாண்டே இடைக்காலத்தின் முடிவாகவும் நவீன காலத்தின் தொடக்கமாகவும் இருந்தது. இந்த விதிமுறையிலிருந்து இங்கிலாந்தின் பதினைந்தாம் நூற்றாண்டின் வரலாறும் விதி விலக்கானதன்று.

**நிலவியல் கண்டுபிடிப்புகள்:** வர்த்தக மண்டலத்தில் மேற்கத்திய நாடுகளுக்கும் (ஐரோப்பா) கீழை நாடுகளுக்கும் (ஆசியா) முக்கிய இணைப்பாக இருந்து வந்த கான்ஸ்டான்டிநோபிள் துருக்கியர் வசம் அடைந்ததை ஒட்டி ஏற்பட்டிருந்த சில முக்கியமான விளைவுகளால், நவீன காலம் தொடங்கியதெனலாம். கி. பி. 1356ஆம் ஆண்டிலிருந்தே ஐரோப்பியப் பகுதிகளைத் தாக்கத் தொடங்கியிருந்த ஆட்டோமன் (Ottoman) துருக்கியர்கள், பால்கன் (Balcan) நாடுகளை ஏற்கெனவே கைப்பற்றிக்கொண்டிருந்தனர். கிழக்கு ஐரோப்பிய நாடுகளை வென்று தங்கள் வசம் கொண்டுவந்த ஆட்டோமன் துருக்கியர், கி. பி. 1453 மே 29ஆம் நாள் இரண்டாம் சுல்தான் முகமத் என்பவரின் தலைமையில் கான்ஸ்டான்டிநோபிள் நகரைக் கைப்பற்றி, இதுவரை ஐரோப்பாவுக்கும், ஆசியாவுக்கும் இடையே நடந்து வந்த தரைமார்க்க வியாபார வழியைத் துண்டித்தனர். கீழ் நாடுகளிலிருந்து பெற்று வந்த அத்தியாவசிய ஆடம்பரப் பொருள்கள், இனி ஐரோப்பியருக்குக் கிடைக்க வழி இல்லாமற் போக, கடல் மார்க்கமாகப் புதிய வழி கண்டுபிடிக்க ஐரோப்பியர் இறங்கலாயினர். இதுவே புதிய நிலவியல் கண்டுபிடிப்புகளுக்கு (Geographical discoveries) முதற் கட்டமாக அமைந்தது. இப் புது நிலவியல் கண்டுபிடிப்புகளே இடைக்காலத்தை முடித்து, நவீன காலத்தைத் தொடக்கி வைத்தன.

ஜான் கான்ட்டின் பெண்வழிப் பேரரரும், போர்ச்சுகல் நாட்டு அரசருமான மாலுமி ஹென்றி (Henry the Navigator) என அழைக்கப்பட்ட அரசர் ஹென்றியின் ஆர்வமும் அயராத உழைப்பும் நிலவியல் கண்டுபிடிப்புகளுக்குப் போர்ச்சுகல் நாட்டை முன்னோடியாக்கின. 15ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் அட்லான்டிக் பெருங்கடலில் இருக்கும் மெடிரா (Madira), அஜ்ஜோரஸ் (Azores) என்ற தீவுகளோடு இருண்ட கண்டம் (Dark continent) என அழைக்கப்பட்டு வந்த ஆப்பிரிக்காவையும் மேற்கிலுள்ள கினியாக் (Guinea) கடற்கரையோரத்தையும் பின்னர், ஆப்பிரிக்காவின் தென் பகுதியான நன்னம்பிக்கை முனையையும் (Cape of Good Hope) போர்ச்சுகீசியர் கண்டு பிடித்துவிட்டனர்.

போர்ச்சுகல்லின் அடிச் சுவட்டைப் பின்பற்றி இன்னொரு மேற்கு ஐரோப்பிய நாடான ஸ்பெயினும் நிலவியல் கண்டுபிடிப்புகளில் ஈடுபட்டது. ஸ்பெயினின் அரச தம்பதிகளான பெர்டினண்டு (Ferdinand), இசபெல்லா (Isabella) என்பவர்களின் உதவியைப் பெற்றிருந்த ஜெனோவாவைச் சேர்ந்த கிறிஸ்டோஃபர் கொலம்பஸ் (Christopher Columbus) என்ற ஒரு மாலுமி, மேற்குத் திசையாகச் சென்று கிழக்கத்திய நாடுகளுக்குப் புதிய கடல்வழியைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டுகி.பி. 1492ஆம் ஆண்டு, தன்னையறியாமல், புதிய உலகத்தை (New World) கண்டுபிடித்தார். போர்ச்கல்லும், ஸ்பெயினும் புதுக் கடல்வழிகளைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் முன்னோடிகளாக விளங்கின. இக் காலத்தில் இவற்றுக்குள் போட்டி பூசல்களைத் தவிர்க்க, கி.பி. 1493ஆம் ஆண்டில் அன்றைய போப்பாண்டவர் ஓர் ஆணையைப் பிறப்பித்து, போர்ச்சுகல் நாடு கிழக்குப் புறமாகவும், ஸ்பெயின் மேற்குப் புறமாகவும் தங்களின் கடல் ஆய்வை (Exploration) நடத்த வேண்டும் என அந் நாடுகளை ஒப்புக்கொள்ளச் செய்திருந்தார்.

இதன் தொடர்ச்சியாகவே கி.பி. 1498ஆம் ஆண்டில் வாஸ் கோடகாமா (Vasco-da-Gama) என்ற போர்ச்சுகீசியர் இந்தியாவிலுள்ள கள்ளிக்கோட்டையை வந்தடைந்தார். இங்ஙனமாக, பதினைந்தாம் நூற்றாண்டு முடிவதற்கு முன்னரேயே புதிய உலகத்திற்கு ஒரு கடல்வழியும், பழைய உலகத்திற்கு ஒரு புதிய கடல் வழியும் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. பதினைந்தாம் நூற்றாண்டின் இந்த நிலவியல் கண்டுபிடிப்புகளே அடுத்த நூற்றாண்டில் வேறு பல புதிய பகுதிகளான அமெரிக்கா, ஆசியாப் பகுதிகள் கண்டு பிடிக்கப்படுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தன. இதனைத் தொடர்ந்தே நவீன கால வரலாறு சிறப்புப் பெற்றது.

**கான்ஸ்டான்டிநோபிள் வீழ்ச்சி:** கி.பி. 1453-ல் துருக்கியர் கான்ஸ்டான்டிநோபிளைக் கைப்பற்றிய நிகழ்ச்சி, இன்னொரு முக்கிய விளைவுக்கும் காரணமாயிற்று. இதுவரை அந் நகரில் தங்கி வாழ்ந்து வந்த பல கிரேக்க இலக்கிய மேதைகள், மாறிய சூழ் நிலையில் அங்குத் தொடர்ந்து வாழ இயலாது பிழைப்புத் தேடி இத்தாலியை (Italy) வந்தடைந்தனர்.

**மறுமலர்ச்சி இயக்கம் :** இம் மேதைகளின் வருகையைத் தொடர்ந்தே இத்தாலியில் மறுமலர்ச்சி (Renaissance) இயக்கம் தோன்றியது. இலக்கியத் துறையிலும் கலைத் துறையிலும் இவ்வியக்கம் புரட்சிகரமான மாறுதலைச் செய்து வைத்தது. இவ் வியக்கத்தைச் சார்ந்ததாகவே மனிதாபிமான கட்டம் (Humanistic phase) வளர ஆரம்பித்தது. இக் கட்டமே இடைக் காலத்தில் மூடநம்பிக்கைகளைக் களைந்தெறிந்து பகுத்தறிவுக் காலத்திற்கு (Age of Reason) வித்திடுவதாக இருந்தது.

நிலவியல் கண்டுபிடிப்புகள், மறுமலர்ச்சி இயக்கமல்லாமல் இக் காலத்தில் சில அறிவியல் (Scientific) கண்டுபிடிப்புகளும் ஏற்பட்டதால், இதுவே, நவீன காலத்திற்கு நிலையான தொடக்கத் தைக் கொடுத்தன. உதாரணமாக, போர்த் துறையிலும் கல்வித் துறையிலும் ஏற்பட்டிருந்த இரு முக்கிய நவீன மாற்றங்கள் ஐரோப்பாவிலேயே முதலில் தோன்றியிருந்தாலும், இங்கி லாந்தையும் பாதித்ததாகவே இருந்தது. வெடிமருந்து கண்டு பிடிப்பும் அச்சு இயந்திரக் கண்டுபிடிப்புமே அவ்விரு நவீன மாற்றங்களாகும்.

பதினைந்தாம் நூற்றாண்டில் ஏற்பட்டிருந்த நிலவியல் கண்டு பிடிப்புகளும் அறிவியல் கண்டுபிடிப்புகளும் மறுமலர்ச்சி இயக்க மும் இங்கிலாந்தை உடனுக்குடன் பாதிக்கவில்லையெனினும், ஐரோப்பியப் பொது முன்னேற்றத்துடன் ஒப்பிடுகையில் இந் நாட்டின் முன்னேற்றம் சற்றுப் பின்தங்கியதாகவே இருந்திருப் பினும், பழையன கழித்துப் புதியன புகுத்துவதற்கு ஆங்கிலேயரும் தங்களை அர்ப்பணித்துக் கொண்டனர்.

**நவீன மாற்றங்கள் :** பதினைந்தாம் நூற்றாண்டின் இடையி லேயே நவீன காலத் தொடக்கத்தின் அறிகுறிகள் இங்கிலாந்தில் தோன்றியிருந்தன. கருங்கொள்ளை நோயினால் ஏற்பட்ட சமூக, பொருளாதார விளைவுகளும், திருச்சபையினருக்கெதிராக லாலார்டுகள் நடத்திய சமயச் சீர்திருத்த இயக்கமும், ரோசாச்

சின்னப்போரினால் நிலமானியமுறை அழிவுபடத் தொடங்கியிருந்ததும் இந் நாட்டின் இடைக்கால வரலாற்றை முடிப்பனவாகவே இருந்தன. அரசியல் முறையிலே பாராளுமன்றத்தின் செல்வாக்குக் குறைவுபட்டபோதிலும் நாட்டிலே சீரான வல்லாட்சிமுறை அமைக்கப்பட்டிருந்த இக் காலத்தில் வேறுசில போற்றத்தக்க மாற்றங்களும் ஏற்பட்டிருந்தன. ஓரினம், ஒருமொழி என்ற வரம்பிற்குள் ஏற்கெனவே தேசிய உணர்வு பெற்றிருந்த இங்கிலாந்து, உள்நாட்டுத் தொழிலிலும் அயல்நாட்டு வர்த்தகத்திலும் முன்னேற்றம் அடைந்திருந்ததோடு, அவ்விரு நவீன மாற்றங்களையும் ஏற்றுக்கொண்டதாகவும் இருந்தது.

பழைய நீண்ட விற்களைப் (long bows) போன்ற மரபு வழக்கமான (conventional) போர்க் கருவிகள் இன்னும் புழக்கத்திலிருந்த போதிலும், வெடிமருந்தின் (gun powder) உபயோகமும் பீரங்கிகளின் (canons) பலனும், இந் நாட்டில் சிறுகச் சிறுக அறிந்துகொள்ளப்பட்டன. போர் முறையில் ஏற்பட்டிருந்த இப் புதுமையினால், இங்கிலாந்தில் நிலமானியப் பிரபுக்களின் சேவை இனி அரசருக்குத் தேவையில்லாமல் போய்விட்டது. பிரபுக்கள் அவ்வப்போது அரசருக்குக் கொடுத்துதவிய படைகள் பழைய போர் முறையிலேயே பழக்கப்பட்டிருந்ததாலேயே, துப்பாக்கி போன்ற புதிய போர்ச் சாதனங்களின்முன் அவை ஈடுபடாமல் போயின. மேலும், நிலமானியப் படையினரின் முக்கியக் கேந்திரங்களாக இதுவரை விளங்கிவந்த கோட்டைகளும் இனிப் பயனில்லாமல் போயின. முற்றுகையிட்டு அல்லது மதில் கடந்து கைப்பற்ற வேண்டுமென்ற நிலைமை மாறி, எத்துணை வலிமையான கோட்டையாக இருந்தாலும் வெடிமருந்தினால் இயங்கும் பீரங்கியைக் கொண்டு தகர்க்கலாம் என்ற வழி தெரிந்து கொள்ளப்பட்ட இக் காலத்தில், பிரபுக்களின் அதிகாரப் பீடங்களாகவும், பல சமயங்களில் அரசருக்கே எதிர்ப்பு இடங்களாகவும் இருந்துவந்த இக் கோட்டைகள் தங்களின் முக்கியத்துவத்தை இழக்க ஆரம்பித்தன. நிலமானிய முறையின் தனிச் சின்னங்களாக இருந்துவந்த இக் கோட்டைகளின் நசிவே, அம் முறைக்கு முடிவுக் கட்டமாக விளங்கியது. நிலமானிய முறையின் சிதைவிலேயே, நவீன காலத்தின் கரு இங்கிலாந்தில் உருவாகியிருந்தது. இதுவரை நிலத்தின் அடிப்படையிலேயே இருந்து வந்த சமூகக் கட்டுக்கோப்பும் பற்பல மாறுதல்களுக்குள்ளாகியது. இதே சமயத்தில் ஐரோப்பாவில் ஏற்பட்டு வந்த புதுப்புது மாற்றங்களும், முன்னேற்றங்களும் இங்கிலாந்திலும் ஏற்பட்டமையால் இடைக்காலத்தின் எச்சத்திலிருந்து (Legacy) இந் நாடு தன்னைக் காத்துக் கொள்ள முன்வந்தது.

**அச்சு இயந்திரம் :** இடைக்காலத்தின் அடையாளச் சின்ன மான நிலமானியமுறை அழிந்துகொண்டு வந்த இச் சமயத்தில், நவீன காலத்திற்கு வித்திடுவதாக அமைந்த அச்சு இயந்திரக் கண்டுபிடிப்பு இங்கிலாந்தை வந்தடைந்தது. ஜெர்மனியிலுள்ள மெயின்ஸ் (Mainz) என்னும் நகரைச் சார்ந்த ஜான் கூட்டன்பர்க் (John Gutenberg) என்பவர், ஓர் அச்சு இயந்திரத்தைக் கண்டு பிடித்தார். கட்டை அச்சுகளுக்குப் பதிலாக, உலோக அச்சுகள் பயன்படுத்தப்பட்டன. பழைய முறையின்படி, எழுத வேண்டிய எழுத்துகள் மரக்கட்டையில் செதுக்கப்பட்டு, அதன் மீது மையிட்டுக் காகிதத்தில் அச்சிடப்படும். இம் முறையினால் அச்சிடப்பட்டவையே 'கட்டை நூல்கள்' (Block books) என அழைக்கப்பட்டன. ஜான் கூட்டன்பர்க் கண்டு பிடித்திருந்த புதிய முறையில், உலோகத்தை உருக்கிச் செய்யப்பட்ட எழுத்துகள் கட்டைகளின் இடைவெளியில் கோக்கப்பட, இதனால் அச்சிடுதல் விரைவாகவும் சுலபமாகவும் தெளிவாகவும் இருந்தது. இந்த அச்சு முறையை வில்லியம் காக்ஸ்டன் (William Caxton) என்ற ஆங்கிலேயர், கி.பி. 1474ஆம் ஆண்டில் இங்கிலாந்திற்குக் கொணர்ந்தார்.

புருஜஸ் (Bruges) நகரில் பல ஆண்டுகள் துணிகர வியாபாரச் சங்கத்தின் ஆளுநராகப் பணியாற்றி வந்த காக்ஸ்டன், தாம் நாடு திரும்பியபோது இந்தப் புது அச்சுகளைக் கொண்டு வந்திருந்த தோடு, கி.பி. 1477ஆம் ஆண்டில் இலண்டனிலுள்ள வெஸ்ட் மின்ஸ்டர் பெரிய கோயிலில் தம் அச்சகத்தை நிறுவினார். இப் புதிய அச்சிடும் முறையில் பல அரிய நூல்கள் வெளியிடப்பட்டன. 'தத்துவத்தின் சொற் கூறுகள், (Sayengis of the Philosophies) என்ற இலத்தீன் நூலே முதன்முதல் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்டது. இதனைத் தொடர்ந்து, மலோரியின் ஆர்தர் கதையும் (Malory's Morte 'D' Aurther), ஈசாப் கதைகளும் (Aesop's Fables), இனிடாஸ் (Eneydos) என்பவரின் ஃபிரெஞ்சு நூலும், 'சதுரங்க ஆட்டத்தின் விளக்கம்' (The Game and Play of the Chess) என்ற நூலும் ஆக சுமார் இருபது நூல்கள் அச்சிடப்பட்டன. கோவர், (Gower), லிட்கேட் (Lydgate) ஆகியோரின் இலக்கியப் படைப்பு களும் குறிப்பாகச் சாசரின் 'கான்டர்பரிக் கதைகளும்' புதிய அச்சில் வெளியிடப்பட்டன.

காக்ஸ்டன் காட்டியிருந்த வழியில் பற்பல அரிய நூல்கள் (புதிய அச்சு இயந்திர சாதனையால்) வெளியே கொணரப்பட்டு, புத்தகங்கள் மலிவான விலைக்கு ஏராளமான எண்ணிக்கையில் நாட்டிலே கிடைக்க வழி ஏற்பட்டது. இதனைத் தொடர்ந்து.

நாட்டிலே இருந்து வந்த அறியாமை இருள் சிறுகச் சிறுக நீங்கி, அறிவுச் சுடர் பிரகாசிக்கத் தொடங்கியது. இலக்கியக் கல்வி உலகில் ஏற்பட்ட இப் புரட்சிகரமான மாறுதலே, இங்கிலாந்தின் நவீன காலத்திற்கு நல்ல தொடக்கமாக அமைந்தது.

சுருக்கமாகச் சொன்னால், இடைக்காலத்தின் இறுதியாகவும் நவீன காலத்தின் தொடக்கமாகவும் அமைந்துவிட்ட பதினைந்தாம் நூற்றாண்டு இங்கிலாந்தின் வரலாற்றிலும் முக்கிய காலப் பகுதியாக விளங்குகின்றது.

**இங்கிலாந்தும் மறுமலர்ச்சியும்**

சமுதாயத்தை மையப் பொருளாகக் கொண்டு புதிய இலக்கியங்களும் கலைகளும் கருத்துகளும் தோன்றக் காரணமாகவிருந்த மறுமலர்ச்சி இயக்கம், இடைக்காலத்திற்கு விடை கொடுத்து அனுப்பி நவீன காலத்தை வரவேற்ற அதிமுக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது.

**மறுமலர்ச்சி விளக்கம்:** 'மறுமலர்ச்சி என்ற சொல்லின் பொருள் 'மறு பிறப்பு' (Rebirth) என்பதாகும். ஆயினும், வரலாற்று அகராதியில் இச் சொல், பதினாறும் நூற்றாண்டில் ஐரோப்பாவில் புராதன கிரேக்க ரோமானிய இலக்கியம், கலை ஆகியவற்றின் மீது ஏற்பட்டிருந்த ஒரு புதிய ஆர்வத்தையே குறிக்கின்றது.

ரோமப் பேரரசு, ஐந்தாம் நூற்றாண்டில் மிலேச்சர்களால் அழிவுபட்டதைத் தொடர்ந்து, பண்டைய கிரேக்க, இலத்தீன் இலக்கியம், கலை ஆகியனவும் புறக்கணிக்கப்பட்டன. ஐரோப்பா அறியாமை இருளில் மூழ்கியது. கல்வியின்மீது நாட்டம் குறைந்தது. திருச்சபையினரால் போதிக்கப்பட்டவற்றையே மக்கள் எவ்வித ஐயமும் கொள்ளாமல் எந்த ஒரு வினாவும் எழுப்பாமல் நம்பினர். ஆனால், பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரேக்க, இலத்தீன் மொழிகளிலுள்ள இலக்கியங்களைக் கற்க வேண்டுமென்ற ஆர்வம் ஏற்பட்டது. குறிப்பாக, கிரேக்க இலக்கியங்களின் புத்துயிர்ப்பையே இவ்வியக்கம் தனது பின்னணியில் கொண்டிருந்தது.

திருச்சபையினர் கூறுவனவற்றையெல்லாம் கண்மூடித்தனமாக இதுவரை ஏற்றுக் கொண்டிருந்த இடைக்காலப் பழக்கத்திற்குக், கிரேக்க நூல்களில் வலியுறுத்தப்பட்டிருந்த ஆய்ந்தறியும் அறிவு முற்றிலும் முரண்பட்டதாக இருந்தது. இவ் வியக்கங்களில் பொதிந்திருந்த கருத்துகள், ஆய்வுக் கண்ணோட்டத்தை

வளர்த்திருந்தன. இதுவரை சமய கண்ணோட்டத்திலேயே உழன்று வந்த மனித சமுதாயம், தன் கவனத்தை வேறு திசைகளில் திருப்பியது. இதனால் இலக்கியம், அறிவியல், நிலவியல், கலை கட்டடக்கலை, சமயம், அரசியல் ஆகிய துறைகளில் புதிய சிந்தனைகள் தோன்றலாயின. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமாயின், பகுத்தறிவுக் காலம் தொடங்கியது எனலாம்.

**ஆக்ஸ்ஃபோர்டு சீர்திருத்தக்காரர்கள் :** மறுமலர்ச்சியின் தாயகம், ஐரோப்பாவின் கல்விக்கூடம் என்றழைக்கப்பட்ட இத்தாலியில் மட்டுமன்றி, இவ்வியக்கம் பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்திலும் பரவியது. மறுமலர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட புதுக்கல்வி (new learning) நான்காம் எட்வர்டு காலத்திலேயே இங்கிலாந்தைச் சிறப்புறச் செய்ய ஆரம்பித்திருந்தும, ஏழாம் ஹென்றி, எட்டாம் ஹென்றி என்ற டியூடர் அரசர்கள் காலத்திலேயே இப் புதுக்கல்வி இயக்கம் வேகமாகப் பரவியது. ஆக்ஸ்ஃபோர்டு சீர்திருத்தக்காரர்கள் (Oxford Reformers) என அழைக்கப்பட்ட அறிவு சார்ந்த பெருமககளே இப் புதுக்கல்வி இயக்கத்திற்குக் காரணகர்த்தாக்களாக இருந்தனர்.

**வில்லியம் செல்லிங்** (William Selling): கான்டர்பரியில் கிறிஸ்து திருச்சபைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வந்த வில்லியம் செல்லிங் என்ற ஆக்ஸ்ஃபோர்டு பட்டதாரி, முதன்முதலாகக் கிரேக்க எழுத்துப் பிரதிகளை (manuscripts) இங்கிலாந்திற்குக் கொண்டுவர, அம் மொழிமீது ஆங்கிலேயர்களுக்கு மோகம் வளர ஆரம்பித்தது.

**தாமஸ் லினகர்** (Thomas Linacre): செல்லிங்கின் மாணாக்கர்களிலே ஒருவரான லினக்கர், கிரேக்க மொழியைக் கற்கவேண்டுமென்ற ஆர்வத்தினால் இத்தாலியிலுள்ள ஃபிளாரன்ஸ் (Florence) நகருக்குச் சென்று, மெடிசி (Medici) குடும்ப இளவரசர்களோடு பழகி, அவர்களுக்குப் போதிக்கப்பட்ட கிரேக்க அறிவைக் கற்றார். வெனிஸ் நகரில் ஆல்டோ (Aldo) அறிவுச் செம்மலின் நட்பையும் பெற்றவராக இருந்த லினகர், ரோமாபுரியிலுள்ள வாடிகன் (Vatican) நூலகத்தில் கிரேக்கமொழி நூல்களைப் பயின்று தம் நாடு திரும்பி, அப் பழைய மொழியின் இலக்கியச் சிறப்பை மற்றவர்களுக்குத் தெரியவைத்தார். டியூடர் அரசர்களுக்கு, அரண்மனை மருத்துவராகப் பணியாற்றிய லினகர், கி.பி. 1518ஆம் ஆண்டில் இலண்டன் மாநகரில் இராயல் மருத்துவக் கல்லூரியையும் தொடங்கி வைத்தார்.

**வில்லியம் குரோசின் (William Grocyn)** : இத்தாலிய மறுமலர்ச்சி இயக்கத்தில் மிகவும் ஈடுபாடு கொண்ட வில்லியம் குரோசின் என்ற மற்றோர் ஆக்ஸ்ஃபோர்டு ஆசிரியரும், கிரேக்க மொழியை ஆர்வத்துடன் பயின்று, பின் தம் பல்கலைக்கழகத்தில் அம் மொழியிலுள்ள இலக்கியங்களைப்பற்றிச் சிறப்புச் சொற்பொழிவுகளை ஆற்றி, கிரேக்க மொழியின் சிறப்பை எடுத்துரைத்தார்.

**ஜான் கோலெட் (John Colet)** : குரோசினின் சீடர்களிலே ஒருவரான கோலெட் என்பவரும் கி.பி. 1496ஆம் ஆண்டு இத்தாலி சென்று கிரேக்க மொழியைக் கசடறக் கற்றார். பின்னர், நாடு திரும்பியிருந்த கோலெட், சமயத்தைப்பற்றி ஆக்ஸ்ஃபோர்டில் கிரேக்க மொழியிலேயே ஒரு சிறந்த சொற்பொழிவை ஆற்றிக் கேட்டோருக்கு அம் மொழியின்மீது மோகம் பிறக்கச் செய்தார்.

இங்ஙனமாக, கிரேக்க மொழி, கிரேக்க இலக்கியங்கள்மீது 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேயர்களுக்கு ஒரு தனி விருப்பம் மேலிடலாயிற்று. இதுவே புதுக் கல்வி இயக்கத்தின் தொடக்கமாகும்.

இலக்கிய மறுமலர்ச்சியின் அடிப்படையில் எங்ஙனம் புதிய கருத்துகளைப் பரப்பிய புதுக்கல்விமுறை அமைந்ததோ, அதே போன்று புதுக்கல்வியை அடிப்படையாகக் கொண்டு சில கல்விக் கூடங்களும் அமைக்கப்பட்டன.

இலண்டனில் நிறுவப்பட்ட செயின்ட் பால் (St. Paul) பள்ளியும் கேம்பிரிட்ஜின் கிறிஸ்து, செயின்ட் ஜான் கல்லூரிகளும் இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும். இக் கல்விக்கூடங்களில் வழக்கமாக இதுவரை அளிக்கப்பட்டுவந்த சமய கல்விமுறை புறக்கணிக்கப்பட்டுத் தேசிய மொழியான ஆங்கிலத்தில் கிரேக்க இலக்கியத்தின் கருத்துகள் புதிய அறிவாகப் (New knowledge) போதிக்கப்பட்டன.

**ஏராஸ்மஸ் (Erasmus)** : நாட்டிலே பரவி வந்த இப் புதிய அறிவிற்கு உரம் இடுவதுபோல், இரு அறிவுச் செம்மல்களின் இலக்கியச் சேவை இங்கிலாந்திற்குக் கிடைத்தது. டச்சு நாட்டில் பிறந்து, இங்கிலாந்தில் வாழ்ந்து வந்த எராஸ்மஸ் என்ற அறிவு உலக மேதை அவர்களிலே ஒருவராவர். இவர் எழுதிய 'அறிவீனத்தின் புகழ்ச்சி' (Praise of Folly) என்ற நூலில் திருச்சபையினரால் போதிக்கப்பட்டு வந்த பழங்காலப் போதனைமுறை கிண்டல் செய்யப்பட்டது.

**சர். தாமஸ் மூர் (Sir Thomas Moore) :** இன்னொரு புகழ் பெற்ற எழுத்தாளரான மூர், கி.பி. 1516ஆம் ஆண்டில் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட (மூல) விவிலியத்தின் புதிய ஏற்பாட்டை (New Testament) முழுமையாகத் தொகுத்தார். இத்துடன் இலத்தீன் மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட விவிலியத்தின் புதிய ஏற்பாட்டை ஒப்பிட்டுத் தமக்குத் தவறுகளாகத் தெரிந்தவற்றையெல்லாம் திருத்தினர். இவரது உன்னத எழுத்துப் படைப்பாக 'உதோப்பியர்' (Utopia) என்ற நூல் அமைகின்றது. இந் நூலில் மூர், அன்றைய அரசியல், சமூக, சமய முறைகளைக் கண்டித்தார். அரசியலிலும் சமூகத்திலும் திருச்சபையிலும் செய்யவேண்டிய மாற்றங்களை வலியுறுத்தினர். எக் குறையுமில்லாத, எல்லாத் தேவைகளும் நிறைந்த ஒரு கற்பனைச் சமுதாயம் இந் நூலில் படைக்கப்பட்டது. சுருக்கமாகக் கூறினல், இந்த நூல் நிகழ்காலத்தின் கண்டனமாகவும் வருங்காலத்தின் இன்பக் கனவாகவும் இயற்றப்பட்டது.

எழுத்திலும் பிரச்சாரத்திலும் 'புதுக் கல்வியின்' சாராம்சத்தைப் போதித்த இந்த ஆக்ஸ்ஃபோர்டு இலக்கிய மேதைகள், வருங்காலத்தில் நிகழப்போகும் பல மாற்றங்களை ஏற்றுக் கொள்ளக்கூடிய வகையில் மக்களின் மனத்தைப் பக்குவப்படுத்தினர்கள்.

**விளைவுகள் :** அடுத்துவரும் நூற்றுண்டுகளில் அறிவியல், இசை, கட்டடக் கலை ஆகிய துறைகளில் மாறுதல்களைத் தோற்றுவித்திருந்த மறுமலர்ச்சி இயக்கம், தொடக்கத்தில் இலக்கியத் துறையினையே அதிகமாகப் பாதித்தது. இம் மறுமலர்ச்சி இலக்கியங்கள், சுருக்கமாகக் கூறின், மக்களின் அறிவு வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பத்தைத் தோற்றுவித்தது. இப் புதுக்கல்வி அல்லது இலக்கிய மறுமலர்ச்சியினுல் அதிகமாகக் கவரப்பட்ட ஆங்லேயர்களே அடுத்தடுத்து நிகழ்ந்த கடல்வழிப் பிரயாணங்களுக்கும் புது உலகைக் கண்டுபிடிப்பதற்கும் இறுதியில் சமய புரட்சிக்கும் காரணகர்த்தாக்களாயினர்.

## கடல்வழிப் பிரயாணங்களும் காரணங்களும்

மறுமலர்ச்சி இயக்கத்தையொட்டிப் புதிய நாடுகளையும் கடல் வழிகளையும் கண்டுபிடிப்பதற்கான ஆர்வமும், ஆசையும் ஐரோப்பிய நாடுகளிடையே தோன்றலாயின. இந்தியா, சீன கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து ஐரோப்பியர்களுக்கு வேண்டிய ஆடம்பரப் பொருள்களும் தங்களின் குளிர்கால உணவுக்கு

அத்தியாவசியமான பொருள்களும் (Spices) கான்ஸ்டாண்டி நோபிள் வழியாகவே ஐரோப்பாவுக்குக் கிடைத்து வந்தன. கி.பி. 1453-ல் அந் நகரம் ஆட்டோமன் துருக்கியர்களால் கைப் பற்றப்பட, நில வழியில் நடைபெற்று வந்த வியாபாரம் தடைப் பட்டது. கீழைநாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொள்ளு வதற்கு வேறு வழிகளைக் காணவேண்டிய அவசியம் ஏற்பட, கடல் வழியாகப் புதிய மார்க்கங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சி மேற் கொள்ளப்பட்டது. அம் முயற்சியில் ஸ்பெயின், போர்ச்சுகல் போன்ற நாடுகளே முன்னணியிலிருந்தன. புதிய உலகத்தின் பகுதியான மேற்கிந்தியத் தீவுகளைக் கண்ட கொலம்பஸும், நன் னம்பிக்கைமுனை வழியாக இந்தியாவுக்குக் கடல் வழிகள் கண்டு பிடித்த வாஸ்கோடகாமாவும் (1498) தங்களின் நாடுகளுக்கு முக்கியத்துவத்தைத் தேடிக் கொடுத்த அக் காலத்தில் இங்கிலாந் திலும் பரபரப்புக் காணப்பட்டது.

இடைக்காலத்தில் போதிக்கப்பட்டு வந்த மூடநம்பிக்கைகளை ஒழித்து எதையும் துருவிப் பார்க்க வேண்டுமென்ற மறு மலர்ச்சியின் கருத்து இங்கிலாந்தில் பரவிவந்த அக் காலத்தில் ஸ்பெயின், போர்ச்சுகல் போன்ற நாடுகளின் புதிய கண்டு பிடிப்புகள் ஆங்கிலேயரையும் தூண்டியதில் வியப்பேதுமில்லை.

வாஸ்கோட காமா (Vasco-da-Gama), தம் ஆய்வுக் கப்பலில் நன்னம்பிக்கை முனையைச் சுற்றி (Cape of Good Hope) இந்தியா வுக்குக் கடல் வழியே போய்க்கொண்டிருந்த அந் நேரத்தில், கொலம்பஸ் மேற்கிந்தியத் தீவுகளை நெருங்கிக்கொண்டிருந்த அந்த நேரத்தில், இங்கிலாந்து தன் அரசியல் சிக்கலைத் தீர்த்துக் கொண்டிருந்தது. புது உலகக் கண்டுபிடிப்பாளரெனப் புகழப்படும் கிறிஸ்டோஃபர் கொலம்பஸ் (Christopher Columbus), தம் சகோதரன் பார்த்தலோமியோ கொலம்பஸ் (Bartholemew Columbus) என்பவரின் வாயிலாகத் தம் கடல்வழி ஆய்வுப் பிரயாணத்திற்கு இங்கிலாந்தின் அரசரான ஏழாம் ஹென்றியின் உதவியைத்தான் முதலில் கோரினார். தம் நாட்டு அரசியலில் அதிகக் கவனத்தைச் செலுத்த வேண்டியிருந்த ஹென்றி, கோரிய உதவியைக் கொடுக்கத் தயங்கியபோது கொலம்பஸ், ஸ்பெயினின் உதவியை நாடிப் பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது. இங்கிலாந்து பெற்றிருக்கவேண்டிய பெருமையை ஸ்பெயின் நாடு அடைந்துவிட்டது. கொலம்பஸின் சேவை இங்கிலாந்துக்குக் கிடைக்காமல் போய்விட்டதெனினும், இன்னொரு கடல் ஆய்வாளரால் அந் நாடும் புதிய பகுதிகளைக் கண்டு பிடிக்கும் போட்டியில் இறங்கியது. அவரது பெயர் ஜான் காபட் (John Cabot) ஆகும்.

**நடப்பு (Course):** ஜெனேவா என்ற இத்தாலிய நகரைச் சேர்ந்த ஜான் காபட் (Cabot), இங்கிலாந்தைத் தம் அகமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார். மத்திய ஆசியா, இந்தியா போன்ற நாடுகளுக்கு நில மார்க்கமாக வியாபாரத்தின் நிமித்தம் ஏற்கெனவே சென்று திரும்பியிருந்த காபட்டுக்குக் கீழை நாடுகளுக்குப் புதிய வழியைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. தென்மேற்காகக் கடல் பிரயாணம் செய்து கொலம்பஸால் கண்டுபிடிக்கமுடியாத 'கேதே'யைத் (Cathay China) தம்மால் வடமேற்கு மார்க்கத்தில் கடல் பிரயாணம் செய்து கண்டுபிடிக்க முடியுமெனக் காபட் திடமாக நம்பினர். அரசன் ஏழாம் ஹென்றியிடம் அதற்கான அனுமதி பெற்று, கி.பி. 1497-ல் பதினேழு உதவியாளர்கள் கொண்ட சிறு கப்பலில் பிரிஸ்டல் (Bristol) துறைமுகத்திலிருந்து கிளம்பினர். வடமேற்காக அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து, கீழை நாடுகளை அடைந்து விடலாமெனக் காபட் நினைத்திருந்தார். பாறைகள் நிறைந்து பனி மூடிக்கிடந்த ஒரு பெருந்தீவைக் (நியூஃபவுண்ட்லாந்து) (New foundland) காபட் அடைந்தார். தீவைச் சுற்றிலும் அடைந்திருந்த மீன் கூட்டங்களைத் தவிர, காபட் எதையும் காணவில்லை. ஆனல், தாம் கண்டது ஒரு தீவு என்பது மட்டும் அவருக்குத் தெரியும். அதே ஆண்டில் இங்கிலாந்து திரும்பிய காபட், தாம் சீனுவுக்கருகே இருந்த ஒரு தீவைக் கண்டுபிடித்து விட்டதாக நம்பினதோடு அல்லாமல், தம் நாட்டு மக்களையும் நம்பச் செய்தார். கொலம்பஸால் சாதிக்க முடியாததைத் தாம் சாதித்து முடித்துவிட்ட மனநிறைவு காபட்டுக்கு இருக்க, அச் செய்தி இங்கிலாந்து முழுவதும் ஓர் ஆனந்தமான பரபரப்பை உண்டாக்கியது. தலைநகரான இலண்டனில் மக்கள் காபட்டை வானுயரப் போற்றினர்கள். நாட்டு மக்களிடையே அவரது திறமையில் அதிக நம்பிக்கை பிறந்தது. மக்களின் உற்சாகத்தால் ஊக்குவிக்கப்பட்ட ஜான் காபட், தம்முடைய இரண்டாவது கடல் ஆய்வுப் பிரயாணத்தை கி.பி. 1498-ல் தொடங்கினர்.

சீனத்துப் பட்டுத்துணியைக் கொண்டுவரும் நோக்கத்தோடு, தம் ஐந்து கப்பல்களில் இங்கிலாந்துத் துணிகளை எடுத்துக் கொண்டு தாம் முதலில் சென்ற வழியிலே கடற் பிரயாணம் மேற்கொண்ட காபட், நியூபவுண்ட்லாந்து தீவை மீண்டும் அடைந்தார். மேற்கொண்டு துருவிப்பார்க்க வேண்டிப் பல மைல்கள் கடற்பிரயாணம் செய்தும், அவருக்குச் சீன நாட்டுப் படகுகளோ, அரண்மனைகளோ தென்படவில்லை. மனித நடமாட்ட மில்லாத நெருக்கமான மரங்கள் அடங்கிய பெரும் நிலப் பரப்பையே கண்டார். சீனுவையும், இந்தியாவையும் அடைந்து

விடலாமென்று ஆங்கில வியாபாரிகளின் உதவியையும் வாழ்த்துக்களையும் பெற்றுவந்த ஜான் காபட், அப்போது வட அமெரிக்கக் கண்டத்தின் கிழக்குக் கரையையே கண்டார். மனம் தளர்ந்து திரும்பிய காபட், சில நாட்களுக்குள்ளாகக் காலமானார்.

அவரது மகனான செபஸ்டியன் காபட் (Sebestian Cabot) என்பவரும் வடமேற்குத் திசையில் அட்லாண்டிக்கில் ஆய்வுப் பிரயாணத்தை மேற்கொண்டால் கீழைநாடுகளை அடைந்து விடமுடியுமென நம்பினார். கி.பி. 1509-ல் தம் கடல் பிரயாணத்தைத் தொடங்கிய செபஸ்டியன், நியூஃபவுண்ட்லாந்துக்கு வடக்கே இருந்த லாப்ரடார் (Labrador) பகுதியைத்தான் கண்டு பிடித்தார். அவருடைய முயற்சியும் தோல்வியிலேயே முடிந்தது.

கீழை நாடுகளுக்குப் புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிக்க முடியாமல் போனதில் ஆங்கிலேயர்களுக்கு ஏமாற்றம் இருந்த போதிலும், காபட்டுகளால் இங்கிலாந்துக்கு இன்னொரு நன்மையே கிடைத்தது. நியூஃபவுண்ட்லாந்து, லாப்ரடார் கரையோரப் பகுதிகளில் மிகுதியாகக் காணப்பட்ட காட் மீன்கள் இங்கிலாந்தின் மீன் வியாபாரத்திற்கு நல்ல இலாபம் கொடுத்தன.

இதற்கிடையே, சூறாவளிக் காற்றினால் அலைக்கழிக்கப்பட்ட கப்ரல் (Cabral) என்ற போர்ச்சுகீசியர் தற்செயலாகக் கி. பி. 1500-ல் தென் அமெரிக்காவின் கீழ்க் கரையை அடைந்து, பிரேசிலைக் (Brazil) கண்டு பிடித்தார். 1501-ல் அமெரிகோ வெஸ்புகி (Amerigo Vespucci) என்ற இத்தாலியர், இன்னும் தெற்கே சென்று பெருநிலப் பரப்பைக் கண்டு பிடித்திருந்தார். 1513-ல் பால்போ (Balboa) என்பவர், பனமா பூசந்தியை அடைந்து புதிய கடலைக் (பசிபிக் கண்டுபிடித்திருந்தார்.) கி. பி. 1519-ல் பெர்டினண்டு மெகல்லன் (Ferdinand Magellan) என்ற ஸ்பானிஷ் ஆய்வாளர் தென் அமெரிக்காக் கீழ்முனையைக் கடந்து, பசிபிக் கடலைக் கடந்து தென்கிழக்கு ஆசியாவில் புதிய தீவுகளைக் கண்டுபிடித்தார்.

இங்ஙனம், ஸ்பெயினும் போர்ச்சுகலும் போட்டியிட்டுப் பற்பல புதிய பகுதிகளைக் கண்டுபிடித்துக் கொண்டிருக்க, ஆங்கிலேயர்களுக்கு மீண்டும் சபலம் தட்டத் தொடங்கியது. கடல் ஆய்வுப் பிரயாணத்தைப்பற்றி ராபர்ட் தார்ன் (Robert Thorn) என்பவர், 'கீழை நாடுகளைப்பற்றிய அறிவிப்பு' (Declaration of the Indies) என்ற நூலை எழுதி, மன்னர் எட்டாம் ஹென்றிக்குக் கி. பி. 1527-ல் அனுப்பி வைத்தார். நன்னம்பிக்கை

முனை வழியாகவும், மெகல்லன் ஜலசந்தி வழியாகவும் ஆசியாவை அடையும் முயற்சியைவிட, வடமேற்கு மார்க்கமாக ஆர்டிக் பகுதியை ஊடுருவி ஆசியாவை அடைய முயன்றால் உசிதமாக இருக்குமென அந் நூலில் அவருக்குத் தெரிந்த ஆதாரங்களுடனும் வரைபடங்களுடனும் விளக்கி இருந்தார். கீழ் நாடுகளுக்குத் தாங்களும் புதுக்கடல் வழியைக் காணவேண்டுமென ஆர்வம் கொண்டிருந்த ஆங்கிலேயர்களுக்கு அந் நூல் வரப்பிரசாதமாக இருந்தது. ஆக, அதற்கான முயற்சிகள் தொடங்கப்பட்டன.

கி. பி. 1527-ல் ஜான்ரட் (John Rut) என்ற ஆங்கிலக் கப்பற் படை வீரரின் தலைமையில் வடக்கு நோக்கி, ஓர் ஆய்வுக் கப்பல் புறப்பட்டது. ஆர்டிக் பனிப் பிரதேசத்தின் மிகக் கடுமையான குளிரைப் பொறுக்க முடியாத ஜான் ரட், தெற்கே திரும்பினர். அமெரிக்காக் கண்டத்தின் கிழக்குக் கரையோரமாக மேற்கத்தியத் தீவுகளை ரட் அடைந்தபோது, அப் பகுதியில் ஏற்கெனவே ஆதிக்கத்தை நிலைநாட்டியிருந்த ஸ்பானியர்கள், ஆங்கிலக் கப்பலைப் பீரங்கிகளால் தாக்கினர். அதனால் மேற்கொண்டு கடற் பிரயாணத்தைத் தொடர முடியாத நிலை ஏற்படவே, ரட் நாடு திரும்ப வேண்டியதாயிற்று.

புதிய உலகத்தைக் கண்டு பிடித்ததிலும், பழைய உலகுக்குப் புதிய கடல் மார்க்க வழிகளைக் கண்டு பிடித்ததிலும் ஸ்பெயின், போர்ச்சுகல் நாடுகள் பெரு வெற்றிகளைக் கொண்ட போதிலும், பிற்காலத்தில் ஆங்கிலம் பேசும் மக்கள் நிரம்பிய பகுதியாக வட அமெரிக்காவும், பிரிட்டிஷ் பேரரசின் பகுதியாக இந்தியாவும் விளங்கியதைக் காணும்போது, ஆங்கிலேயர்கள் பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் பெற்ற சிறு வெற்றிகள் பெரும் விளைவுகளுக்குக் காரணமாகவே இருந்தன. அடுத்த நூற்றாண்டுகளில் ஃபிரான்சு, ஸ்பெயின் போன்ற நாடுகளுடன் இங்கிலாந்து செய்ய வேண்டி இருந்த ஆதிக்கப் போர்களுக்கும், இப் புதுநாடு கண்டுபிடிப்புகள் காரணமாக அமைந்தன என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

# 10. டியூடர்கள் ஆட்சி



## ஏழாம் ஹென்றி (கி. பி.1485- 1509)

ரோசாச் சின்னப் போரின் இறுதிக் கட்டத்தில் நடந்த பாஸ்வர்த் சண்டையில் லங்காஸ்டிரியர்களின் ஆதரவுடன் யார்க் குடியின் கடைசி மன்னரான மூன்றும் ரிச்சர்டைக் கொன்று பெரு வெற்றிபெற்ற ஹென்றி ரிச்மாண்டு (டியூடர்), இங்கிலாந்தில் ஒரு புதிய அரச மரபு தோன்றக் காரணமானர்.

ஹென்றி டியூடர், தாம் அப் போர்க்களத்தில் வெற்றி கொண்டதாலேயே இங்கிலாந்தின் அரசுரிமையைப் பெற முடிந்தது என்பதோடு, இவருக்கும் இங்கிலாந்தின் அரச மரபினருக்கும் நெருங்கிய தொடர்பும் இருந்தது. தம் தந்தை வழியில் லங்காஸ்டர் அரசரான ஐந்தாம் ஹென்றியின் விதவை காதரீனின் பேரரான ஹென்றி டியூடர், தம் தாய் வழியில் ஜான் கான்ட்டுக்கும் உறவினராவார்.

லங்காஸ்டிரியர்களுக்கும், யார்க்கியருக்கும் நடந்து வந்த ஆதிக்கப் போரில் (ரோசாச் சின்னப்போர்) குடும்பரீதியாக, முன்னவர்களைப்போலத் தலைமை தாங்க ஹென்றி டியூடருக்குத் தகுதி இருந்தது. சண்டையில் வெற்றி பெறக்கூடிய திறமையும் இருந்தது. போர்க்களத்தில் மூன்றும் ரிச்சர்டு கொல்லப்பட்டதைத் தொடர்ந்து, சற்று முன்புவரை அவர் தலையை அலங்கரித்து வந்த இங்கிலாந்தின் மணிமகுடம், களத்தில் ஒரு புதரில் கேட்பாரற்று விழுந்து கிடக்க, அதை ஹென்றி டியூடர் போர்க்களத்திலேயே அணிந்து கொண்டு, இங்கிலாந்தின் அரசரென அறிவித்துக் கொண்டார்.

லங்காஸ்டர் குடியினரின் உறவினர் என்ற முறையிலும் பாஸ்வர்த் களத்தின் வெற்றி வீரர் என்ற வகையிலும் ஆங்கில வாரிசுரிமைக்குத் தகுதியானவராயிருந்த ஹென்றியை ஆங்கிலப் பாராளுமன்றமும் ஓர் அறிவிப்பின்படி இங்கிலாந்தின் அரச ராகப் பிரகடனப்படுத்தியதால், அன்றைய போப்பாண்டவரான எட்டாம் இன்னசென்ட் என்பவரின் ஆசியுடன், கி. பி 1485ஆம் ஆண்டு நவம்பர் மாதம் வெஸ்ட்மின்ஸ்டர் பெரிய கோயிலில் முறைப்படி பட்டம் சூட்டிக் கொண்டார். இதனைத் தொடர்ந்தே, இங்கிலாந்தின் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தம் தொடங்கியது.

**குணநலன்களும், குறிக்கோளும்:** பிறர் இடத்தில் சரளமாகப் பழகும் இயல்பை ஏழாம் ஹென்றி கொண்டவரல்லர் எனினும், தம் அறிவுத்திறனல் பிறரைத் தம்பால் ஈர்த்துக் கவர்ந்து கொள்ளும் குணத்தைப் பெற்றிருந்தார். தன்னலம் ஒன்றே கருதிய

மனப்பான்மை இவருக்கு இருந்தாலும், அதிலும் நாட்டின் நலன்கள் புறக்கணிக்கப்படவில்லை. அன்பும், அருளும் மென்மைத் தன்மையும் கொண்டிருந்த இவ் வரசர், சமயங்களில் கொடியவ ராகவும் பணப்பித்துக் கொண்டவராகவும் இருந்தார்.

ரோசாச் சின்னப்போரினால் அலைக்கழிக்கப்பட்டிருந்த நாட்டுக்கு, அன்றைய உடனடித் தேவையான சட்டத்தின் மேற் பார்வையில் ஒழுங்குடன்கூடிய அமைதியைக் கொடுக்க விழைந்த செயல் வீரரான ஏழாம் ஹென்றி, தம் ஆட்சியை நிலைப்படுத்திக் கொள்ள முனைந்ததோடு, அரச பதவியின் கௌரவத்தையும் உயர்த்தியவராகவே இருந்தார். மார்ட்டன், பிரே, பாயினிங்ஸ், வார்ஹாம், பாக்ஸ் போன்ற அரசியல் நிபுணர்களின் உதவியுடன் நாட்டுக்குத் தேவையான நல்ல சூழ்நிலையை நிர்மாணித்த இவ்வரசர், வல்லாட்சியை விரும்பினவராகவே இருந்தார். இவ ரால் தோற்றுவிக்கப்பட்ட இப் புதிய முடியாட்சி இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றிலே முக்கிய இடம் பெறுகிறது. டியூடர்களின் காலமே ஆங்கிலேயர்களின் பொற்காலம் என்றால், அதற்கு வித்திட்ட பெருமையை ஏழாம் ஹென்றி அடைகின்றார்.

**வாரிசுக் கலகங்கள்:** ரோசாச் சின்னப்போரின் காலத்தில் போரிட்டுக் கொண்ட லங்காஸ்ட்டிரியர்—யார்க்குகளின் மனக் கசப்பைப் போக்க வேண்டுமென்ற நல்லெண்ணத்தில் நான்காம் எட்வர்டின் மகளும், யார்க் குடும்பத்தைச் சார்ந்தவளுமான எலிசபெத்தைத் தாம் முன்பு கொடுத்திருந்த வாக்கின்படியும் பாராளுமன்றத்தின் வேண்டுகோளின்படியும் கி. பி. 1486ஆம் ஆண்டு தொடக்கத்திலேயே ஏழாம் ஹென்றி திருமணம் செய்து கொண்டார். பரம்பரைப் பகைமையைப் பாராட்டாது, யார்க் குடும்பத்தினரோடு ஏழாம் ஹென்றி மண உறவுகொண்டு, இங்கிலாந்தின் அரசுக் கட்டிலுக்குத் தமக்குரிய உரிமையை மேலும் பலப்படுத்திக் கொண்டது. இவரது இராசதந்திரத்தை எடுத்துக் காட்டியது. எவ்வித வாரிசுரிமைச் சச்சரவுக்கும் மேற்கொண்டு இடம் தரக்கூடாது என்ற எண்ணத்தில் ஏழாம் ஹென்றி இத் திருமணத்தைச் செய்து கொண்டிருந்தும், சில இன்னல்கள் தவிர்க்கப்படமுடியாமலேயே இருந்தன.

கிளாரன்ஸ் டியூக்கின் (ஏழாம் எட்வர்டின் சகோதரர்) மகனும், வார்விக் பிரபுவுமான எட்வர்டு சிறையில் அடைக்கப் பட்டிருந்தபோதிலும் நான்காம் எட்வர்டின் சகோதரியும் பர்கண்டி சார்லசின் விதவையுமான மார்கரெட், டியூடர் அரச மரபை ஏற்றுக் கொள்ளாதவராகவே இருந்தாள். இவளது

ஆதரவிலேயே ஏழாம் ஹென்றிக்கு எதிராக இரு கலகங்கள் நடத்தப்பட்டன.

**சிம்னெல் கலகம்:** பாஸ்வர்த் சண்டைக்குப் பின்னர், பர்கண்டிக்குத் தப்பிவிட்ட சில யார்க்கியர்களும், மார்கரெட்டின் உதவிகொண்டு கி.பி 1487 ஆம் ஆண்டில் ஒரு கலகத்தில் ஈடுபட்டனர். இக் கலகத்திற்கு லேம்பர்ட் சிம்னெல் (Lambert Simnel) என்ற ஒரு பொய்யனே மையமாக விளங்கினன். ஆக்ஸ்ஃபோர்டைச் சார்ந்த ஒரு ரொட்டிக் கடைக்காரனை சிம்னெல், தன்னை வார்விக் பிரபு எட்வர்டு எனத் தம்பட்டம் அடித்துக்கொண்டான் (வார்விக் பிரபு இதே சமயத்தில் இலண்டன் டவரில் சிறைவாசம் இருந்து வருகிறார்). இவனது கூற்றை நம்பி நான்காம் எட்வர்டின் நெருங்கிய உறவினரும், லிங்கன் எர்லுமான ஜான் டி லா போல் (John–de-la-Pole) என்பவரும், மூன்றும் ரிச்சர்டின் நண்பருமான லோவல் (Lovel) பிரபுவும் மார்கரெட்டின் ஆதரவில் ஒரு சதித்திட்டம் தீட்டினர்கள். இத் திட்டத்தின்படி, யார்க்கியர்களுக்கு இன்னும் சற்று ஆதரவிருந்த அயர்லாந்துக்கு லேம்பர்ட் சிம்னெல் அனுப்பப்பட்டான். இவனுக்குத் துணையாக அவ்விரு யார்க் தலைவர்களும் ஒரு கூலிப்பட்டாளமும் சென்றனர். அயர்லாந்தின் மக்களாலும், ஐரிஷ் பாராளுமன்றத்தாலும் வரவேற்கப்பட்ட சிம்னெல், டப்ளின் திருக்கோயிலிலே அரசராகவும் முடிசூட்டப் பெற்றான். சில நாட்கள் கழித்து, தன் ஆதரவாளர்களுடன் சிம்னெல் லங்காஷையரில் இறங்கி நீவார்க் என்ற இடத்திற்கு அருகே இருந்த ஸ்டோக் (Stoke) வரை முன்னேறினன்.

லேம்பர்ட் சிம்னெலை அரசராக்கவேண்டுமென்ற முயற்சியை மேற்கொண்டே யார்க்கியர்கள் இங்கிலாந்தை வந்தடைந்தனர். ஆனல், ஸ்டோக் சண்டையில் ஏழாம் ஹென்றியே வெற்றி பெற்றார். லிங்கன் எர்லும், லோவல் பிரபுவும் தாங்கள் கொண்டு வந்திருந்த அக் கூலிப் பட்டாளத்துடன் அழிந்தனர். சிறைபிடிக்கப்பட்ட சிம்னெல், அரசரின் வெறுப்புக்குப் பாத்திரமாயிருந்தாலும், மன்னிப்புப் பெற்று அரசருடைய அரண்மனைச் சமையற்கட்டில் வேலைபெற்றான்.

**பெர்க்கின் வார்பெக்கின் கலகம்:** இக் கலகம் இங்ஙனம் பிசுபிசுத்த போதிலும், யார்க்கியர் தங்கள் இறுதித் தோல்வியை ஒப்புக்கொள்வதாக இல்லை. கி. பி. 1492 ஆம் ஆண்டில் மற்றொரு கலகம் தோன்றியது. இதற்கு மையமாக இருந்தவன் பெர்க்கின் வார்பெக் (Perkin Warback) என்ற பிளமிங் நாட்டு

யூதனவன். பிரிட்டானிய வர்த்தகரொருவரின் வேலையாளான வார்பெக், தன்னை நான்காம் எட்வர்டின் இளைய மகனான ரிச்சர்டு (யார்க்) என்று சொல்லிக்கொண்டான். ரிச்சர்டு, தம் சிற்றப்பனால் (மூன்றாம் ரிச்சர்டு) சிறைப்படுத்தப்பட்டிருந்தது மட்டுமே அன்றைக்குத் தெரிந்திருந்ததே தவிர, அவர் இரகசியமாகக் கொலை செய்யப்பட்டது மர்மமாகவே இருந்தது. வார்பெக்கின் இக் கூற்றை மார்கரெட் உள்படப் பல யார்க்கியர்கள் நம்பினர். இக் கலகக்காரன் தன் முதல் முயற்சியை, யார்க்கியர் குலத்திற்கு ஆதரவு இருந்து வந்த அயர்லாந்திலேயே தொடங்கினான். ஆயினும், அன்றைய ஆங்கிலக் கவர்னரான பாயினிங்ஸ் என்பவர், அக் கலகம் வெற்றிபெற முடியாமல் தடுத்தார்.

அயர்லாந்திலிருந்து விரட்டப்பட்ட வார்பெக், ஃபிரான்சு நாட்டுக்குச் சென்று, அதன் அரசர் எட்டாம் சார்லசிடம் உதவி கேட்டு ஏமாற்றமடைந்ததையொட்டி, பிளமிங் நாட்டுக்குச் சென்று தனக்கு ஆதரவாக ஒரு சிறு படையைச் சேகரித்துக்கொண்டு, ஸ்காட்லாந்தை அடைந்தான். வார்பெக்கின் போலித் தன்மையினை அறியாத ஸ்காட்டிய அரசரான நான்காம் ஜேம்ஸ், இவனுக்கு அடைக்கலத்துடன்கூடிய ஆதரவை அளித்ததோடன்றி, தம் உறவினரான காதரின் கார்டன் என்ற பெண்ணையும் மணமுடித்து வைத்தார். தான் கலகத்தில் வெற்றி பெற்றால் ஸ்காட்டியருக்குப் பெர்விக் நகரைக் கொடுப்பதாக வார்விக் சொன்னதன் பேரில் இவனுக்குச் சில போர் வீரர்களை நான்காம் ஜேம்ஸ் கொடுக்க, தன் ஆதரவாளர்களைக் கொண்டு இப் பொய்யன் இங்கிலாந்தின் மீது படையெடுத்தான். இக் கலகப் படையினர் எல்லையைக் கடந்து வந்தும், எந்தவொரு ஆங்கிலேயனும் கலகத்தில் அக்கறை காட்டாது இருக்கவே, வார்பெக் மனம் தளர்ந்து அயர்லாந்தை மீண்டும் அடைந்தான்.

கி. பி. 1497 ஆம் ஆண்டில் அரசரின் வரிக் கொடுமையைத் தாளாது மேற்கு இங்கிலாந்தில் சிறு சிறு கலகங்கள் தோன்றியதால், அவற்றைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள விரும்பிய, பெர்க்கின் வார்பெக், தன் ஆதரவாளர்களுடன் கார்ன்வால் (Cornwall) பகுதியை அடைந்தான். ஆனால் ஏழாம் ஹென்றியின் படையினர் தென்பட்டதும் தன் படையைத் தவிக்க விட்டுவிட்டு வார்பெக் தலைமறைவானான். ஆனாலும் சில காலத்திற்குப் பிறகு இக் கலகத் தலைவன் கைப்பற்றப்பட்டுத் தூக்குத் தண்டனை அடைந்து மாண்டான்.

வார்பெக் சிறையில் இருந்தபோது, அவனுடன் சேர்ந்து தப்பிக்க நினைத்த வார்விக் பிரபுவான எட்வர்ட்டையும் அரசர்

கொலைத் தண்டனைக்கு உள்ளாக்கினர். இத்துடன் யார்க்கியர்களின் எதிர்ப்பு ஓய்ந்தது.

**அதிகாரத்தை நிலைப்படுத்துதல் :** தம் ஆட்சிப் பீடத்திற்கு யார்க்கியர்களால் இனி போட்டி இராது என்ற தெளிவான நிலைமையில் ஏழாம் ஹென்றி, தம் அதிகாரத்தை நிலைப்படுத்திக் கொள்ளும் வகையில் முழுமூச்சுடன் செயல்பட ஆரம்பித்தார். இதற்குச் சந்தர்ப்பங்களும் சாதகமாகவே இருந்தன.

**சாதகமான சூழ்நிலை :** ரோசாச் சின்னப்போரில் தீவிரமாக இரு கட்சியினருடனும் சேர்ந்து சண்டையிட்ட பிரபுக்களின் பலம் மிகவும் நொடிந்திருந்தது. பிரபுக்கள் அனுபவித்து வந்த சலுகைகளும் அதிகாரங்களுமே அவர்களை அடிக்கடி அரசியலில் அத்துமீறிப் பிரவேசிக்கத் தூண்டி நாட்டை அலங்கோலப்படுத்தியதென்பதை உணர்ந்திருந்த ஏழாம் ஹென்றி, அவர்களை உதாசினப்படுத்த முற்பட்டார். அதிர்ஷ்டவசமாக, அரசரின் இம்முயற்சியை எதிர்க்கும் அளவுக்குப் பிரபுக்களுக்கு இப்போது பலமில்லை. ஏற்கெனவே, ரோசாச் சின்னப் போரில் பல பிரபுக்கள் கொல்லப்பட்டதாலும் சிலர் மரண தண்டனை அடைந்து இறந்து பட்டதாலும் அவர்களுடைய பலம் மிகவும் குறைந்திருந்தது. எஞ்சியிருந்த பிரபுக்களும் போர்ச் செலவுக்காகத் தங்கள்மீது விதிக்கப்பட்ட அபராதத் தொகைகளைக் கட்டவேண்டிய நிர்ப்பந்தத்தில் தங்களுடைய சொத்துகளை விற்றுவிட்டமையால், போதிய பணப்பலம் இல்லாதவர்களாக இருந்தனர்.

**பிரபுக்களை ஒடுக்குதல் :** பிரபுக்கள் தங்களின் ஆள்களுக்குக் கொடுத்து வந்த ஊழியச் சின்னங்கள் (Livery) சட்ட விரோதமாக்கப்பட்டன. தங்கள் வேலையாள்களுக்குப் பிரபுக்கள் கொடுத்து வந்த பராமரிப்பு (Maintenance) முறையும் ஒழிக்கப்பட்டது. ரோசாச் சின்னப் போருக்கே முக்கியமான ஒரு காரணமாக இருந்த இவ்விரு வழக்கங்கள் தடை செய்யப்பட்டன. ஏழாம் ஹென்றி, பிரபுக்களுக்கெதிராக எடுத்துக் கொண்ட முதல் முக்கிய நடவடிக்கை இதுவேயாகும்.

தேசிய விவகாரங்களில் பிரபுக்களுக்கு எவ்வித முக்கியத்துவமும் கொடுக்கக்கூடாதென்ற எண்ணத்தில், தம் ஆலோசனைச் சபையில் ஆக்ஸ்ஃபோர்டு, சர்ரே (Surrey) எர்ல்லுகள் என்ற இருவரைத் தவிர, மற்ற பிரபுக்களை அனுமதிக்கவே இல்லை. திருச்சபையைச் சேர்ந்த ஆர்ச்பிஷப் மார்டன் (Morton), மேலும் நடுத்தரக் குடியைச் சேர்ந்த வழக்கறிஞர்களையே இவ்வரசர் தம் அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டார்.

**நடுத்தர வகுப்பினருக்கு ஊக்கமளித்தல்:** அரசர் செய்யும் காரியங்களுக்கு உறுதுணையாக இப்போது, நாட்டிலே ஒரு விசுவாச வகுப்புத் தோன்றியது. இலாபகரமான அயல் நாட்டு வியாபாரத்தில் பெரும் பொருளீட்டுச் சமுதாயத்தில் செல்வாக்கைப் பெற்றிருந்த நடுத்தர வகுப்பினர் (middle class), தங்கள் வர்த்தகம் மேலும் செழிக்க வேண்டுமென்றால், நாட்டில் நல்ல சீரான நிர்வாகம் இருக்கவேண்டிய அவசியத்தை உணர்ந்து, அதை ஏற்படுத்தவல்ல அரசரின் அதிகாரத்தைப் பலப்படுத்த முன்வந்தனர். பலகாலமாகப் பதவியும் செல்வாக்கும் பெற்றுத் தங்களின் சுயநலத்தால் நாட்டில் பல இன்னல்களை உண்டாக்கி வந்த பிரபுத்துவத்தை ஒழித்துக்கட்ட வேண்டுமென்றால், தமக்கும் ஒரு புதிய விசுவாசக் குடியின் ஆதரவு தேவை என்பதை அரசரும் உணர்ந்திருந்தார். இப் புதிய வகுப்பினரின் எழுச்சி, பிரபுக்களின் முக்கியத்துவத்தைப் பெரிதும் குறைத்ததாக இருந்தது.

**பிரத்தியேக நீதிமன்றங்கள்:** நாட்டிலே, பிரபுக்களாலும் மற்ற தீயவர்களாலும் அராஜகம் ஏற்படவொட்டாமல் தடுக்க, ஏழாம் ஹென்றி, 'விண்மீன் (நட்சத்திர) நீதிமன்றம்' (Star Chamber) என்ற ஒரு புதிய நீதிமன்றத்தினை அமைத்தார். இம் மன்றம் கூடிய இடத்தில் (வெஸ்ட்மின்ஸ்டர்) அதன் அடையாளச் சின்னமாக விண்மீன் பொறிக்கப்பட்டிருந்ததாலேயே இதற்கு அப் பெயர் வந்தது. இம் மன்றத்தில் அரசரின் ஆலோசனைக் குழுவினைச் (பிரிவி கவுன்சில்) சேர்ந்த சிலரும் இடம் பெற்றனர். ஏழை எளியோர்களை வலியோரின் கொடுமையினின்று காத்து நாட்டிலே சட்டத்தை வலியுறுத்தி, அமைதியைக் காத்தலே இம் மன்றத்தின் முக்கியப் பொறுப்பாக இருந்தது. இது மட்டுமன்றி, நாட்டின் மற்ற பொது நீதிமன்றங்கள் (Common Law Courts) அச்சமற்ற சூழ்நிலையில் சிறப்பாக செயல்படவும் இம் மன்றம் பாதுகாப்பளித்தது. மேலும், ஆற்றலும் செல்வாக்கும் பெற்றவர்களுக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கச் சாதாரணமாகத் தயங்கும் தீர்ப்புச் சான்றோர் குழுவினரும் (ஜூரர்கள்) வழக்கினை உண்மைக்கு மாறாக ஆராய்ந்து தீர்ப்பு வழங்கினால் இம் மன்றத்தின்முன் அதற்குக் காரண விளக்கம் தரவேண்டுமெனக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். இந் நீதிமன்றம் பிரபுக்களின் கொட்டத்தை அறவே அழித்ததெனலாம்.

சட்ட ஒழுங்கீனத்தால் அடிக்கடி நிர்வாகக் குலைவு ஏற்பட்டு வந்த வட இங்கிலாந்திலும், வேல்ஸ் பகுதியிலும் சட்டங்களை வலியுறுத்தி, நீதிநிர்வாக முறையைச் சீராக அமலாக்க மற்ற

இரு சிறப்புரிமை மன்றங்களையும் (Prerogative Courts) ஏழாம் ஹென்றி அமைத்தார். வட இங்கிலாந்தில் அமைக்கப்பட்டது வடநீதிமன்றமென்றும் (Council of North), வேல்ஸில் அமைக்கப்பட்டது வேல்ஸ் நீதிமன்றமென்றும் (Council of Wales) அழைக்கப்பட்டன.

நீதி நிர்வாகத்தில் பெரிதும் அக்கறை கொண்ட ஏழாம் ஹென்றி, அரச ஊழியர்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டுகோள் மன்றம் (Court of request), கடற்படை வீரர்களின் வழக்குகளை விசாரிக்கக் கடற்படை மன்றம் (Court of Admiralty), சமயவழக்குகளை விசாரிக்க உயர்நீதி ஆணை (திருச்சபை) மன்றம் (Ecclesiastical Court of High Commission) ஆகியவற்றையும் ஏற்படுத்தியிருந்தார்.

ஏழாம் ஹென்றி, தம் பாராளுமன்றத்தின் துணைகொண்டு, பிரபுக்களின் கொட்டத்தை மேலும் குலைக்கும் வகையில் ஒரு சட்டத்தைப் பிறப்பித்தார். இதன்படி, அரசரின் அனுமதியில்லாமல் எந்தப் பிரபுவும் வெடிமருந்தினையோ, துப்பாக்கியையோ பயன்படுத்தக்கூடாதென்று கட்டுப்படுத்தப்பட்டது. புதிய கண்டுபிடிப்புகளான வெடிமருந்தையும், துப்பாக்கியையும் உபயோகிக்கக்கூடிய ஏகபோக உரிமை (Monopoly) அரசருக்கே கொடுக்கப்பட்டிருந்தது. இத்தடை ஆணையினால் அரசர், தம்மை எதிர்க்கும் எந்த ஒரு பிரபுவின் கோட்டைக் கொத்தளத்தையும் எளிதாக நொறுக்கிவிடக்கூடிய வாய்ப்பினைப் பெற்றிருந்தார்.

**புதிய முடியாட்சி:** மன்னரது அரசியல் அதிகாரத்தை வளர்த்துக்கொள்ளுதலையே தம் முக்கியக் குறிக்கோளாகக் கொண்டிருந்த ஏழாம் ஹென்றி, பிரபுக்களின் கொட்டத்தை ஒடுக்குவதற்காகக் கொண்டுவந்திருந்த ஒவ்வொரு காரியத்தையும் நாட்டு மக்கள் பரவலாக ஆதரித்தனர். நாட்டிலே ஓர் அமைதியான சூழ்நிலை நீடித்து நிலவவேண்டுமெனில், சட்டதிட்டங்கள் எல்லோராலும் மதிக்கப்பட்டுச் சீரான நிர்வாகம் இயங்கவேண்டுமெனில், அதிக அதிகாரங்கள் கொண்ட வல்லாட்சி அமைக்கப்படவேண்டுமென்பதை மக்கள் உணர்ந்ததால், இதை ஏழாம் ஹென்றி தமக்குச் சாதகமாகவே பயன்படுத்திக்கொண்டார்.

நிலப் பிரபுக்களின் தொல்லைகள் ஒடுக்கப்பட்டிருந்த இக்காலத்தில், பொதுவாக, அரசர்களுடைய தனி அதிகாரத்திற்கு முட்டுக்கட்டை இடவல்ல ஆங்கிலத் திருச்சபையும் மதிப்பற்றுக் கிடந்தது. யார்க்கியர் காலத்திலிருந்தே தீவிர அரசியலிலிருந்து

விலக்கப்பட்டிருந்த ஆங்கிலப் பாராளுமன்றமும் அதிகாரமற்று இருந்தது. ஏழாம் ஹென்றி, தம் ஆட்சிக் காலத்தில் பாராளுமன்றத்தைத் தமது விருப்பம்போல் பயன்படுத்தும் ஒரு கருவியாகவே பாவித்தார். வெளி நாட்டுப் போர்களில்லாத சூழ்நிலையில் அரசாண்ட ஏழாம் ஹென்றிக்குப் பணமுடை இல்லாதிருக்க, பாராளுமன்றத்தின் தேவையும் இல்லாமலிருந்தது. பெரும் சிக்கனக்காரரான இவ் வரசர், ஆடம்பரச் செலவுகளைத் தவிர்த்தும், வர்த்தகர்களிடமிருந்து டன் (Tonnage), பவுண்டு (Poundage) வரிகளை வசூலித்தும், செல்வந்தர்களிடமிருந்து கட்டாய நன்கொடைகளைப் (Benevolences) பெற்றும் யார்க்கியர் சொத்துகளை அபகரித்தும், நீதிமன்றங்களில் கட்டப்பட்ட அபராதங்களை வசூலித்தும் தமக்கு நிதி நிறைவைப் பெற்றதால், அடிக்கடி பாராளுமன்றங்களைக் கூட்ட ஏழாம் ஹென்றிக்கு அவசியமே இல்லாமல் போய்விட்டது. 1,800,000 பவுன்களைத் தமது சொத்தாகப் பல வழிகளில் சேர்த்திருந்த இவ் வரசர், தமது பாராளுமன்றத்தை கி.பி. 1497-1509 காலத்தில் அடிக்கடி கூட்டாமல் உதாசீனப்படுத்தினர்.

இவர், தம் ஆட்சியின் காலத்தில் பன்னிரண்டே முறைதான் பாராளுமன்றங்களைக் கூட்டியிருந்தார். அடிக்கடி பாராளுமன்றம் கூட்டப்படாமலிருந்த இந் நிலையில், ஏழாம் ஹென்றியின் அரச அதிகாரத்தைத் தட்டிக் கேட்க எவரும் இல்லை. இவரது இந்த வல்லாட்சி அன்றைய சூழ்நிலையில் நாட்டுக்கு உகந்ததாகவே இருந்ததால், வரம்பற்ற அதிகாரங்களைக்கொண்ட அரசராகவும் ஏழாம் ஹென்றி விளங்கினர்.

**வர்த்தக வளர்ச்சியும் சிறப்பும்**

நாடு பலமுள்ளதாக இருக்கவேண்டுமெனில், அதனுடைய வளமும் வர்த்தகமும் பெருகவேண்டுமென்ற அவசியத்தை உணர்ந்த ஏழாம் ஹென்றி, வியாபாரிகளின் நலன்களைப் பாதுகாத்து, வர்த்தகத்தைப் பெருக்கும் பணியில் ஈடுபட்டார்.

**புதிய தொழில் :** ஃபிரான்சிஸ் பேகன் (Francis Bacon) என்ற அரசரின் வாழ்க்கை வரலாற்றாசிரியரின் கருத்தின்படி, நாட்டு வியாபாரம் நலிவதை ஏழாம் ஹென்றி விரும்பாதவராக இருந்தாராம்.

இதுவரை கம்பளி, மற்றும் துணி வகைகளே இங்கிலாந்திலிருந்து பிற நாடுகளுக்கு அனுப்பப்பட்டு வந்த முக்கிய வியாபாரப் பொருள்களாக இருந்தன. இப் பொருள்கள் அயல்

நாட்டு வியாபாரிகளால் அயல்நாட்டுக் கப்பல்களிலேயே இங்கிலாந்திலிருந்து ஏற்றி அனுப்பப்பட்டன. நாட்டில் இறக்குமதியான பொருள்களும் ஐரோப்பிய நாட்டுக் கப்பல்களிலேயே வந்திறங்கின. ஆகவே ஏற்றுமதிக்குப் பிரதானத் தொழிலாக இருந்த ஆடைத் தொழிலையும், அவற்றை அயல் நாட்டுச் சந்தைகளுக்கு ஆங்கிலக் கப்பல்களில் ஏற்றி அனுப்ப வேண்டி, கப்பற் கட்டும் தொழிலையும் ஏழாம் ஹென்றி ஊக்குவித்தார்.

**நாவாய்ச் சட்டம் :** இங்கிலாந்தின் வர்த்தக நாவாய்களுக்கு ஊக்கமளிக்கக் கடமைப்பட்டிருந்த இவ் வரசர், கி.பி. 1485ஆம் ஆண்டில் நாவாய்ச் சட்டமொன்றைக் (Navigation Act) கொண்டு வந்தார். இதன்படி ஃபிரான்சிலிருந்து வரும் மது (ஒயின்) ஆங்கில வியாபாரக் கப்பல்களிலேயோ அல்லது ஆங்கில மாலுமிகளால் இயக்கப்படும் கப்பல்களிலேயோ அனுப்பப்படவேண்டிய நிர்ப்பந்தம் உண்டாக்கப்பட்டது. வடகடல், பால்டிக் கடற் கரையோரத் துறைமுகங்களுடன் ஆங்கிலக் கப்பல்களுக்கு நேரடியான தொடர்பை ஏற்படுத்திக் கொடுக்க, டென்மார்க் நாட்டுடனும் ஏழாம் ஹென்றி வியாபார ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டார். இதனால் அப் பகுதிகளில் வியாபார ஏகபோக உரிமை கொண்டிருந்த அன்சா வியாபாரச் சங்கத்தின் செல்வாக்குப் பாதிக்கப்பட்டது.

வெனிஸ் (Venice), ஜெனோவா (Genoa) ஆகிய இத்தாலியப் பட்டணங்களின் நாவாய்களே, மத்தியதரைக்கடல் நாடுகளிலிருந்து இங்கிலாந்துக்கு வியாபாரப் பொருள்களை ஏற்றிக் கொண்டு வந்தன. அந்நிலையை மாற்ற, மத்தியதரைக்கடல் நாடுகளோடு ஏழாம் ஹென்றி உடன்பாடு செய்துகொண்டு, அந்த நாடுகளின் துறைமுகங்களுக்கு ஆங்கிலக் கப்பல்களை அனுப்பிவைத்தார். முதன்முறையாக ஆங்கிலக் கப்பல்கள் தூரத்து லெவன்ட் (The Levent) பகுதிக்குச் சரக்குகளை ஏற்றிச்சென்று திரும்பின.

**வர்த்தக உடன்பாடுகள்:** கி.பி. 1496ஆம் ஆண்டில் இவ் வரசர், 'இன்டர்கர்சஸ் மாக்னஸ்' (Intercursus Magnus) என்ற உடன்பாட்டைப் பேரரசர் மாக்ஸ்மில்லியனோடு செய்துகொண்டார். இதன்படி, இங்கிலாந்துக்கும் நெதர்லாந்துக்கும் வியாபாரத் தொடர்பு ஏற்பட்டது. கி. பி. 1503ஆம் ஆண்டில் பிளமிங்ஸ் வியாபாரிகளுடன் 'இன்டர்கர்சஸ் மாலஸ் (Intercurses Malus) என்ற இன்னொரு வர்த்தக ஒப்பந்தத்தைச் செய்துகொண்டு, ஏழாம் ஹென்றி இப் பகுதியில் ஆங்கிலச் சரக்குகளுக்குச் சந்தைகளைத் தேடிக்கொடுத்தார்.

இதற்கிடையே, புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் இடங்களில் ஆங்கிலக் கொடிகளைப் பறக்கவிடும் அதிகார உரிமைகளைப் பெற்றிருந்த காபட்டுகள், நியூஃபௌன்ட்லாந்து, லெபரடார் பகுதிகளுக்குக் கடற்பயணம் சென்று மீன்பண்ணைகளைப்பற்றி அரும் செய்திகளைக் கொண்டு வந்ததால், இலாபகரமான மீன் வியாபாரத்திலும் ஏழாம் ஹென்றி தம் நாட்டை உள்படுத்தினர்.

தாங்கள் நினைத்த இடத்திற்குப் பொருள்களை ஏற்றிச்செல்ல ஆங்கில வியாபாரக் கப்பல்களுக்கு உரிமையும் வாய்ப்பும் கிடைத்ததால், அஃது இங்கிலாந்து வியாபாரத்திற்கு இதுவரை கிடைத்திராத பெருமையாக இருந்தது. இதற்குமுன், எக்காலத்திலும் இங்கிலாந்தில் கட்டப்பட்டிராத வலுவான நீளமான நாவாய்களை, இவ் வரசர் தம் சொந்தச் செலவிலேயே கட்டி, வியாபாரிகளுக்கு வாடகைக்கு விடுத்தார். ஏழாம் ஹென்றியால் கட்டப்பட்ட இக் கப்பல்கள் நீண்டதூரக் கடல்வழிப் பிரயாணங்களுக்கு ஏற்றவாறு இருந்தன. இவர் தொடங்கிய இப் பெரும் பணி வருங்காலத்தில் இங்கிலாந்து சிறந்த கப்பற்படை ஒன்றைப் பெறுவதற்கு வித்திடுவதாக அமைந்தது.

ஐரோப்பிய நாடுகளில் இங்கிலாந்திலிருந்து அனுப்பப்பட்டு வந்த கம்பளிக்கு நல்ல கிராக்கி இருந்தது. அதனால், இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பதப்படுத்தாத கம்பளி, ஆங்கிலேயர்களுக்கு நல்ல வாணிக வளத்தினை அளித்து வந்ததால், இத் தொழிலுக்கு உள்நாட்டுச் சிக்கல்களாலும், அயல்நாட்டுத் தடைகளாலும் எவ்விதத் தொல்லையும் நேராவண்ணம் ஏழாம் ஹென்றி சிரமமெடுத்துக் கொண்டார். ஃபிரான்சுடன் செய்துகொண்ட ஒரு வர்த்தக உடன்பாட்டின்மூலம், இங்கிலாந்திலிருந்து துணிகள் எவ்வித அனுமதிச் சீட்டுமின்றி இறக்குமதி செய்வதற்கான தனிச் சலுகை ஒன்றையும் இவ் வரசர் பெற்றுக் கொடுத்தார்.

### மெர்கன்டைல் முறை

துணி தயாரிப்பிலும், கப்பல் கட்டுவதிலும் இங்கிலாந்தைத் தன்னிறைவு பெற்ற ஒரு நாடாக ஏழாம் ஹென்றி மாற்றியது மட்டுமேயன்றி, உள்நாட்டுத் தொழிலுக்கு எவ்விதப் போட்டியும் இல்லாதிருக்க, அயல்நாடுகளிலிருந்து வரும் இறக்குமதியைக் குறைத்தும், தம் நாட்டின் தொழில் செழிக்க வேண்டுமென்று உள்நாட்டு ஏற்றுமதியை அதிகரித்தும், பிற்காலத்தில் மெர்கன்டைல் முறை (Mercantile System) என்று கூறப்பட்ட ஒரு வியாபார முறையை இவ் வரசர் புகுத்தினர்.

**அயல் நாட்டுக் கொள்கை**

ஐரோப்பிய அரசியல் அரங்கிலோ, ஸ்பெயின், ஃபிரான்சு, புனித ரோமப் பேரரசு (Holy Roman Empire) ஆகிய அரசுகள் முக்கியத்துவம் பெற்றுவந்த இக் காலத்தில், இங்கிலாந்துக்கும் தம் அயல்நாட்டுக் கொள்கையினால் ஏழாம் ஹென்றி சிறப்பைத் தேடிக் கொடுக்க விழைந்தார்.

முடிந்தவரையில் போர்களைத் தவிர்த்து, பிற நாடுகளுடன் சமாதான உறவை வளர்த்துக்கொள்ள நினைத்த இவ் வரசர், தமது திருமண உறவுக் கொள்கையினால் டியூடர் குலத்திற்குப் பெருமையைத் தேடிக் கொடுத்ததுடன், இங்கிலாந்திற்கும் அரசியல் கௌரவம் ஏற்படக் காரணமாக விளங்கினார். ஐரோப்பிய அமைதி காக்கப்பட வேண்டுமாயின், அரசுகளுக் கிடையே சக்தி சமநிலையும் (Balance of Power) நிலவவேண்டு மென்பதையே ஏழாம் ஹென்றி விரும்பி இதற்கேற்ப செயல் பட்டார்.

**ஃபிரெஞ்சுப் போர் :** ஃபிரான்சுக்கு மேற்கே டியூக் பிரான்சிஸ் என்ற சுதந்திரக் கோமகனின் ஆட்சியின்கீழ் இருந்துவந்த பிரிட்டானி என்ற பகுதியை, ஃபிரெஞ்சு அரசர் எட்டாம் சார்லஸ் தாக்கிக் கைப்பற்ற முயற்சி செய்து கொண்டிருந்தபோது, இங்கிலாந்தின் நட்பு நாடான இப் பகுதியைக் காக்கவும், ஃபிரெஞ்சு அரசரின் பலம் பெருகுவதைத் தடுக்கவும், கி. பி. 1487 ஆம் ஆண்டிலே ஏழாம் ஹென்றி, தம் படையுடன் பிரிட்டானியை அடைந்தார். இவ் வரசரின் முயற்சியால் ஃபிரெஞ்சு அரசருக்கும் டியூக் ஃபிரான்சிஸுக்கும் போர் நிறுத்த உடன்பாடொன்று ஏற் பட்டது.

சில காலத்திற்குள்ளாக, ட்யூக் பிரான்ஸிஸ் காலமாகி விடவே, பன்னிரண்டு வயது நிரம்பிய ஆன் (Anne) என்ற அவரது மகள், பிரிட்டானியாவின் அடுத்த வாரிசாக அறிவிக்கப் பட்டிருந்தாள். பிரிட்டானியாவின் சுதந்திரத்தைக் காப்பாற்றும் பொறுப்பை, ஏழாம் ஹென்றி ஆனிடமிருந்து ஓர் உடன்பாட் டின்மூலம் பெற்றிருந்தார். ஆனால் அரசியல் தந்திரம் அறிந்த எட்டாம் சார்லஸ், கி. பி. 1491ஆம் ஆண்டில் ஆனை மணந்து கொண்டு பிரிட்டானியாவைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். இதனால் வெகுண்ட ஏழாம் ஹென்றி, தமக்குப் பாராளுமன்றம் கொடுத்த பெரும் பணத்தில் படையொன்றைத் திரட்டிக் கொண்டு, ஃபிரான்ஸ் நாட்டை அடைந்து பூலோன் நகரை முற்றுகையிட்டார். ஏழாம் ஹென்றியின் காலத்தில்

ஏற்பட்ட ஒரே போராக இப் படையெடுப்பு அமைந்தது. சண்டையை விரும்பாத எட்டாம் சார்லஸ், ஈடேபல்ஸ் (Etaples) என்னுமிடத்தில் ஆங்கில அரசருடன் ஒரு சமாதான உடன் பாட்டைச் செய்துகொண்டார்.

இவ் வுடன்படிக்கையின்படி, ஏழாம் ஹென்றியின் எதிரிகளுக்குத் தாம் உதவுவதில்லையெனவும், போர் நஷ்ட ஈடாக 180,000 பவுன்களல்லாமல், ஆண்டொன்றுக்கு 12,000 பவுன்களைத் தொடர்ந்து கொடுப்பதாகவும், ஆங்கில வியாபாரிகளுக்கு ஃபிரெஞ்சுத் துறைமுகங்களிலே வர்த்தகம் செய்ய உரிமை கொடுப்பதாகவும் எட்டாம் சார்லஸ் ஒப்புக்கொண்டார். போர் எதுவும் இல்லாமலேயே இங்கிலாந்தின் செல்வாக்கை, இவ்வுடன் படிக்கையின்மூலம் ஏழாம் ஹென்றி ஐரோப்பிய அரசியலில் உயர்த்திவிட்டார்.

**மற்ற அரசுகளுடன் உறவு :** கி.பி.1494ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு அரசர் இத்தாலியின்மீது படையெடுத்தபோது அவரை எதிர்க்க பேரரசர் மாக்ஸிமில்லியன், ஸ்பானிய அரசர் பெர்டினண்டு ஆகியோர் ஓர் எதிர்ப்பு உடன்பாட்டைச் செய்து கொண்டு அதில் ஏழாம் ஹென்றியையும் சேரும்படி கேட்டுக் கொண்டதிலிருந்து எந்த அளவிற்கு அரசியல் விவகாரங்களில் இவ் வரசரின் புகழ் வளர்ந்தோங்கியிருந்ததெனத் தெரியவரும். கலகக்காரப் பெர்க்கின் வார்பெக்குக்குப் பேரரசர் மாக்ஸிமில்லியனும், அவரது மகனும் ஃபிளாண்டர்ஸ் தலைவருமான ஆர்ச்டியூக் ஃபிலிப் என்பவரும் மானசீக ஆதரவு கொடுத்தார்களென்ற காரணத்தினால் ஏழாம் ஹென்றி, இக் கூட்டணியில் சேராமல் ஒதுங்கியிருந்தார்.

ஆயினும், நாளடைவில் இக் கசப்புணர்ச்சியை மறந்தவராக ஏழாம் ஹென்றி, ஆங்கில வர்த்தகத்தை மேம்பாடு அடையச் செய்ய பேரரசர் மாக்ஸிமில்லியனோடு 'இன்டர்கர்சஸ் மாக்னஸ்' என்ற உடன்பாட்டையும், பின்னர், புயல் காற்றினால் அலைக் கழிக்கப்பட்டு இங்கிலாந்தின் கரையில் ஒதுங்கிய ஃபிலிப்பை வற்புறுத்தி 'இன்டர்கர்சஸ் மாலஸ்' என்ற இன்னொரு வர்த்தக உடன்பாட்டையும் ஏழாம் ஹென்றி செய்துகொண்டார்.

**திருமண ஏற்பாடுகள் :** ஃபிரான்ஸ் நாட்டின் புதிய மன்னரான பதினொன்றும் லூயி, தாம் இத்தாலியப் போரைத் தொடங்கி அமைதியைச் சீர்குலைக்க முற்பட்டபோது, ஐரோப்பிய வல்லரசு சமநிலையைக் காப்பாற்ற, ஏழாம் ஹென்றி, ஸ்பெயின் நாட்டுடன் நெருங்கிய அரசியல் உறவுகொள்ள முனைந்தார். இதனால் தம்

மூத்த மகன் இளவரசர் ஆர்தரை ஸ்பானிய இளவரசி காதரீனுக்கு கி. பி. 1501ஆம் ஆண்டில் மணமுடித்து வைத்தார். இத் திருமணத்தினுல், தம் மகன் சார்பில் ஏழாம் ஹென்றிக்கு ஏராளமான சீதனப் பொருள்கள் கிடைத்தன. ஆனால் சில மாதங்களுக்குள்ளாக, இளவரசர் ஆர்தர் காலமாகி விட்டபடியால், ஸ்பானிய உறவு அறுந்துவிட்ட நிலையிலிருந்தது. இருப்பினும் தாம் ஏற்கெனவே செலவழித்துவிட்ட ஸ்பானியச் சீதனத் தொகையைத் திருப்பிக் கொடுக்க மனமில்லாதவராகவும், ஸ்பானியர்களின் அரசியல் உறவை இழக்க விரும்பாதவராகவும் போப்பாண்டவரின் பிரத்யேக அனுமதி பெற்றுத் தம் அடுத்த மகன் ஹென்றிக்கு விதவையாகியிருந்த காதரீனை மறுமணத்திற்கு நிச்சயம் செய்திருந்தார். இங்கிலாந்தின் அடுத்த அரசரான எட்டாம் ஹென்றியின் காலத்தில் இப் பொருந்தாத் திருமணமே ஆங்கிலச் சமய புரட்சிக்கு முக்கிய காரணமாக அமைந்தது.

இங்கிலாந்தின் வடபுறத்தில் அடிக்கடி தொல்லைகளைக் கொடுத்துவந்த அண்டை நாடான ஸ்காட்லாந்துடன் அமைதி யான உறவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டித் தம் மகள் மார்கரெட் என்பவளை கி.பி. 1502ஆம் ஆண்டில் ஸ்காட்டிய அரசர் நான்காம் ஜேம்சுக்கு மணமுடித்துக் கொடுத்தார். இவ் அரசரின் பேத்தியும், கன்னியரசியுமான முதலாம் எலிசபெத் காலமானதைத் தொடர்ந்து, வருங்காலத்தில், ஸ்காட்டிய அரசர் நான்காம் ஜேம்ஸ் (கி.பி. 1603-ல்) இங்கிலாந்தில் மகுடத்தைப் பெற்று, ஸ்டுவர்டுகளின் ஆட்சிக் காலத்தைத் தொடங்கி வைத்ததற்கு இந்த அரசியல் திருமணமே காரணமாக இருந்தது.

தம் அரசியார் எலிசபெத் காலமானதால், ஆர்ச் டியூக் ஃபிலிப்பின் சகோதரியும் நெதர்லாந்தின் காப்பாளருமான மார்கரெட் என்பவளையும் அரசியல் இலாபத்தைக் கருதி மணம் செய்து கொள்ளத் திட்டமிட்டிருந்தார். ஆனால், ஃபிலிப் கி.பி. 1506ஆம் ஆண்டில் காலமடைந்ததால் அவரது மனைவியான ஜோனு (Johnna) என்பவளைப் பெரும் பொருளுக்கு ஆசைப்பட்டு மறுவிவாகம் செய்துகொள்ள நினைத்தார். ஆயினும், இத் திருமணத் திட்டங்கள் நிறைவேறுவதற்கு முன்னரேயே ஏழாம் ஹென்றி தமது நாற்பத்து ஒன்பதாவது வயதிலேயே காலமடைந்துவிட்டார்.

ஐரோப்பிய நாடுகளுக்கிடையே போட்டியும், பொறாமையும், பூசலும் முளைத்திருந்த இவரது காலத்தில், ஏழாம் ஹென்றியால் பின்பற்றப்பட்ட வெளிநாட்டுக் கொள்கை எச்சரிக்கையானதாகவும்

உறுதியானதாகவும் விளங்கியது. இருபத்துநான்கு ஆண்டுக் காலம் வல்லாட்சி புரிந்து டியூடர் அரச மரபினை நிலைபடுத்தி இருந்த ஏழாம் ஹென்றி, கி.பி. 1509 ஆம் ஆண்டில் இறந்ததால், வெஸ்ட்மின்ஸ்டர் பெரிய கோயிலில் இவரது சடலம் ஒரு தனிப்பட்ட அழகான கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டது.

## எட்டாம் ஹென்றி (கி. பி. 1509-1547)

ஆங்கிலேய வரலாறு கண்ட முக்கிய அரசர்களுள் ஒருவராக மதிக்கப்படும் ஹென்றி, தமது பதினெட்டாவது வயதில் இங்கிலாந்தின் அரசுக் கட்டிலை அடையும் உரிமையைப் பெற்ருர்.

திறமையும், துணிவும், பேராசையும், தன்னலமும், விட்டுக் கொடுக்காத மனப்பான்மையினையும், மூர்க்கத் தனத்தையும் தம் குணவியல்புகளாகக் கொண்டிருந்த இவ் வரசரின் ஆட்சிக் காலத்தில் டியூடர்களின் வல்லாட்சி மேலும் பலப்படுத்தப் பட்டது.

தமக்கெதிராகச் சதி செய்பவர்களின் கதி என்னவாக இருக்கும் என மற்றவர்களுக்கு உணர்த்தும் வகையில், தாம் பட்டம் சூட்டிக் கொண்ட அதே நாளில் தம் நம்பிக்கைக்கு உகந்தவர்களாக இல்லாதிருந்த எம்ப்சன் (Empson), டட்லி (Dudly) என்ற இரு அமைச்சர்களைக் கைது செய்து, பின் கொலைக்களத்திற்கு அனுப்பினர். வருங்காலத்தில் எட்டாம் ஹென்றியால் மரண தண்டனை விதிக்கப்பட்ட நபர்களின் நீண்ட பட்டியலுக்கு இக் கொலைகள் முத்தாய்ப்பு வைத்தன. இறந்து விட்ட தம் மூத்த சகோதரரின் விதவையும், ஸ்பானிய இளவரசியு மான காதரீனை (ஆரகான்) அரசியல் காரணங்களுக்காகவும், பொருளாசையாலும் தம் தந்தையார் நிச்சயம் செய்துவைத்திருக்க, எட்டாம் ஹென்றி, தாம் பட்டத்திற்கு வந்த அதே ஆண்டில் ஜூன் ஏழாம் நாளில் திருமணம் செய்து கொண்டார். இத் திருமணமே சில ஆண்டுகள் கழித்து, இங்கிலாந்தில் சமய புரட்சி தோன்றுவதற்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்தது.

இவ் வரசரின் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியில் சமய புரட்சி சிறப்பைப் பெறுகின்றதெனின், முற்பகுதியில் இவரது வெளிநாட்டுக் கொள்கையே முக்கியத்துவம் அடைகின்றது.

### தாமஸ் உல்சி (கி. பி. 1471-1536) ✓

இவ் வரசரின் வெளிநாட்டுக் கொள்கைக்கு உறுதுணையாக தாமஸ் உல்சி (Thomas Woolsey) என்பவர் இருந்தார்.

உல்சி, கி.பி.1471ஆம் ஆண்டில் இப்ஸ்விச் (Ipswich) என்னுமிடத்தில் ஒரு வர்த்தகக் குடும்பத்தில் பிறந்தவர். தமது பதினைந்தாம் வயதிலேயே ஆக்ஸ்ஃபோர்டு மக்டாலன் கல்லூரியிலிருந்து பட்டம் பெற்றுத் தேறியதால், 'வாலிபக் கல்விமான்' (Boy Bachelor) என்ற புகழ்ப் பெயருடன் அழைக்கப்பட்டார். வாழ்க்கையில் எப்படியும் முன்னேற வேண்டுமென்ற பேராசை கொண்டிருந்த உல்சி, சமய துறையில் ஒரு பாதிரியாராகவே தம் வாழ்க்கை நெறியைத் தொடங்கினர். சமயத்தில் இவருக்கு இருந்த பற்றைவிட, இத் துறையின்மூலமாகவே தாம் அதிகாரத்தையும் பொருளையும் புகழையும் அடையமுடியுமென்ற யுக்தியே உல்சிக்கு அதிகமாக இருந்தது.

உழைப்பும் உறுதிக் குறிக்கோளும் கொண்டிருந்த உல்சி, ஏழாம் ஹென்றியின் காலத்திலேயே, அரசரின் ஆலோசனைச் சபையின் அங்கத்தினராகத் திருச்சபையின் சார்பில் சேர்க்கப்பட்டிருந்தார். தமக்கு விசுவாசமாகச் சேவை செய்யக்கூடிய பணிவும் திறமையும் உல்சிக்கு இருந்ததால், எட்டாம் ஹென்றி கி. பி. 1515ஆம் ஆண்டில் இலண்டன் பிஷப்பாக இருந்த இவரைத் தம் சான்சலராகவும் அமர்த்தியிருந்தார். அடுத்த மூன்று ஆண்டுக் காலத்திற்குள்ளாக உல்சி, தாம் போப்பாண்டவரிடம் பெற்றிருந்த நன்னம்பிக்கையின்மையின் காரணமாகக் கார்டினலாகவும் இங்கிலாந்தில் போப்பின் பிரதிநிதியாகவும் (Papal Legate) பதவி உயர்வு பெற்றிருந்தார்.

தாமஸ் உல்சி, உள்நாட்டு விவகாரங்களிலும் சமய துறையிலும் அரசருக்கு மிகவும் உடந்தையாகவே நடந்து கொண்டார்.

பிரபுக்களால் அரச அதிகாரத்திற்கு எவ்விதப் பங்கமும் ஏற்படாமலிருக்க, மிகுந்த எச்சரிக்கையுடன் உல்சி அவர்களைக் கண்காணித்தார்.

நாட்டின் சட்ட திட்டங்களை எவரும் மீறவிடாமல் தடுத்து, அமைதியைக் காப்பதிலும் உல்சி கண்ணுங் கருத்துமாக இருந்தார். நீதித்துறையிலும் கல்வித் துறையிலும் நல்ல சீர்திருத்தங்கள் கொண்டு வரவும் இவர் காரணமாக இருந்ததுடன் சமயத்தில் இருந்த சீர்கேடுகளைக் களையவும் எண்ணமுடையவராக இருந்தார். தேசிய விவகாரங்களில் எட்டாம் ஹென்றிக்குப் பெரிதும் துணையாக இருந்த உல்சி, தம் விவேகத்தாலும் அரசியல் அறிவினுலும் இராச தந்திரத்தினுலும் அரசரின் வெளிநாட்டுக் கொள்கையிலும் முக்கியமான ஒரு பங்கினை ஆற்றியிருந்தார்.

**எட்டாம் ஹென்றியின் வெளிநாட்டுக் கொள்கை**
**(கி. பி. 1509—1529)**

ஐரோப்பிய சக்தி சமநிலையைப் பாதுகாத்து, இங்கிலாந்தின் கீர்த்தியை ஐரோப்பிய அரசியல் அரங்கில் உயர்த்த வேண்டுமென்ற ஓர் உறுதியான குறிக்கோளே இவரது வெளிநாட்டுக் கொள்கையின் முக்கிய அம்சமாக விளங்கியது. இதற்குத் தாமஸ் உல்சி அரசருக்குப் பெரிதும் துணையாக இருந்தார்.

ஏற்கெனவே திருச்சபை விவகாரங்களில் நல்ல அனுபவம் பெற்றவராகவும், அரசரின் அந்தரங்க அமைச்சராகவும் இருந்து வந்த உல்சி, தாம் கார்டினல் என்ற முறையிலும், போப்பின் பிரதிநிதி என்ற தகுதியிலும் எப்படியும் போப்பாண்டவராகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற அடங்காத ஆசையால் உந்தப்பட்டவராக, அடிக்கடி இங்கிலாந்தின் சார்பில் ஐரோப்பிய விவகாரங்களில் தலையிட்டுத் தம் செல்வாக்கையும் பெருமையையும் வளர்த்துக்கொள்ள விரும்பினர்.

உல்சியின் திறமையில் அபார நம்பிக்கை வைத்திருந்த அரசரும், தம் சான்சலரின் விருப்பத்திற்கேற்ப வெளிநாட்டுக் கொள்கையை அமைத்தார். எந்த ஐரோப்பிய அரசும் அமோகப் பலம் பெறக்கூடாதென்பதே எட்டாம் ஹென்றியின் வெளிநாட்டுக் கொள்கையின் முக்கிய தன்மையாக விளங்கியது. அதாவது, ஃபிரான்சு, ஸ்பெயின், ஆஸ்திரியா போன்ற ஐரோப்பிய அரசுகளுக்கிடையே சக்தி சமநிலை (Balance of Power) காக்கப்படவேண்டும். ஐரோப்பிய அமைதி பாதுகாக்கப்படவேண்டுமாயின், இச் சக்தி சமநிலை மிக முக்கியமாகக் கருதப்பட்டதோடு, இதைச் செயல்படுத்தும் விதத்தில் இங்கிலாந்தின் அரசியல் கௌரவத்தையும் வளர்த்துக்கொள்ள முடியுமென எட்டாம் ஹென்றியும் உல்சியும் திடமாக நம்பினர்.

**ஃபிரெஞ்சுப் போர்:** இத்தாலியப் போரில் தீவிரமாக ஈடுபட்டு ஆக்கிரமிப்புச் செயலில் இறங்கியிருந்த ஃபிரெஞ்சு அரசர் பன்னிரண்டாம் லூயிக்கு எதிராகப் போப்பாண்டவராக இரண்டாம் ஜூலியஸ் (Julius II) என்பவர், கி. பி. 1511 ஆம் ஆண்டில் பேரரசர் மாக்ஸிமில்லியனோடும், ஸபானிய அரசரான பெர்டினண்டுடனும், வெனிஸ் குடியரசுடனும் சேர்ந்து ஒரு புனிதக் கூட்டை (Holy League) அமைந்திருந்தார். போப்பாண்டவருக்கு உதவும் நோக்கத்தில் உல்சி இக் கூட்டில் எட்டாம் ஹென்றியைச் சேரும்படி வற்புறுத்தியதால், அரசரும் இதை வரவேற்பதாகவே இருந்தார். ஃபிரான்சுடன் வெற்றிகரமான

போரொன்றை நடத்தி, நூறாண்டுப்போரின் இறுதியில் இழந்த காஸ்கனிப் பகுதியை மீண்டும் கைப்பற்றிக் கொள்ளக்கூடிய வாய்ப்புக் கிடைக்கும் என நினைத்து, எட்டாம் ஹென்றி புனிதக் கூட்டில் சேர்ந்து, ஃபிரெஞ்சுப் படையெடுப்பைத் தொடங்கினர்.

கி. பி. 1512 ஆம் ஆண்டு டோர்செட் பிரபுவின் தலைமையில் அனுப்பப்பட்ட ஆங்கிலப்படை எதையும் சாதிக்காமல் நாடு திரும்பியதால், அடுத்த ஆண்டு எட்டாம் ஹென்றி, தாமே படைத் தலைமை கொண்டு தகுந்த ஏற்பாட்டுடன் கலே நகரத்தை அடைந்து, பின்னர் ஃபிரெஞ்சுப் பகுதிகளாக இருந்த தேரோன், டூர்னே என்னுமிடங்களைக் கைப்பற்றி, ஸ்பர்ஸ் சண்டையில் (Battle of the Spurs) வெற்றிபெற்றார்.

**ஸ்காட்டியச் சண்டை:** எட்டாம் ஹென்றி, இன்னும் ஃபிரான்சிலேயே தங்கிப் போரில் கவனம் செலுத்திவர, பண்டைய மரபின்படி இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கும் இடையே போர் மூண்டது. அரசர் ஹென்றி, இங்கிலாந்தில் இல்லாதிருந்த இச் சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு இவரது மைத்துனரும் ஸ்காட்டிய அரசருமான நான்காம் ஜேம்ஸ், பெரும்படையுடன் எல்லையைக் கடந்து ஆக்கிரமிப்புச் செயலில் இறங்கினர். ஆயினும், அரசி காதரின் பொறுப்பேற்றுச் சர்ரே பிரபுவின் தலைமையில் 30,000 வீரர்களை ஸ்காட்டியர்களை எதிர்க்க அனுப்பிவைத்தாள். ஃபிளாடன் (Flodden) என்னுமிடத்தில் நடந்த கடும் சண்டையில் ஸ்காட்டியர் படுதோல்வி அடைந்ததோடு அவர்களின் அரசர் நாலாம் ஜேம்சும் கொல்லப் பட்டுவிட்டார். இங்ஙனமாக, ஸ்காட்டியப் படையெடுப்பிலிருந்து இங்கிலாந்து காக்கப்பட்டது.

**ஃபிரான்சுடன் உடன்பாடு:** இதற்கிடையே ஆங்கில-ஃபிரெஞ்சு உறவு ஏற்பட உல்சி வழிவகுத்துக் கொடுத்திருந்தார். புனிதக் கூட்டினுல் ஃபிரான்சு தொடர்ந்து தாக்கப்படுமானுல், அது பேரரசர் மாக்ஸிமில்லியனுக்கே அதிக நன்மையாக முடியுமென்பதை எட்டாம் ஹென்றி உணர்ந்துகொண்டு, பன்னிரண்டாம் லூயியுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொள்ள விரும்பி, உல்சியின் உதவியுடன் பதினெரு வயதே நிரம்பியிருந்த தம் தங்கையான மேரியை ஐம்பத்தெட்டு வயதுகொண்ட ஃபிரெஞ்சு அரசருக்கு கி.பி. 1514ஆம் ஆண்டில் திருமணம் செய்து கொடுத்து நட்புறவை மேற்கொண்டார்.

ஐரோப்பிய அரசியல் சூதாட்டத்தில் உல்சியின் உதவியினுல் தம் கை ஓங்கியிருப்பதாகவே எட்டாம் ஹென்றி நினைத்து

இறுமாந்தார். ஆனால், அடுத்தடுத்து நடந்த நிகழ்ச்சிகள் ஐரோப்பியச் சிக்கல்களை அதிகமாக்கின.

**ஸ்பெயினுடன் உறவு:** கி.பி. 1515ஆம் ஆண்டில் எட்டாம் ஹென்றியின் மைத்துனரும், ஃபிரெஞ்சு அரசருமான பன்னிரண்டாம் லூயி காலமடைந்ததால் அவரது வாரிசாக முதலாம் ஃபிரான்சிஸ் (Francis I) பட்டம் பெற்றிருந்தார். ஆதிக்க வெறியும், பேராசையும் கொண்ட முதலாம் ஃபிரான்சிஸ் (கி.பி. 1515-1547), ஆல்ப்ஸ் (Alps) மலையைக் கடந்து, எதிர்த்த ஸ்விட்டியர்களை மாரிக்னனோ (Marignano) சண்டையில் வென்று மிலான் (Milan) நகரைக் கைப்பற்றி, இத்தாலியப் போரைத் தொடங்கினார். இத்தாலியிலுள்ள போப்பாண்டவரின் பகுதிக்கு ஃபிரெஞ்சுப் படையெடுப்பினால் ஆபத்து ஏற்படக் கூடுமெனப் பயந்த உல்சி, ஆங்கிலப் படைகளை அனுப்ப எத்தனித்தார். ஆனால், இதற்குள்ளாகப் பேரரசர் மாக்ஸிமில்லியனும், போப்பாண்டவரான பத்தாம் லியோவும் (Leo X) ஃபிரெஞ்சு அரசருடன் சமாதானம் கோரி உடன்பாட்டினைச் செய்து கொண்டனர். ஃபிரான்சின் ஆதிக்கம் ஓங்கியிருந்த இவ் வேளையில், ஐரோப்பிய சக்தி சமநிலை பாதிக்கப்பட்டதாக இருந்தது. ஆகவே, ஃபிரான்சின் பலத்தை ஒடுக்க வேண்டிய அவசியம் எட்டாம் ஹென்றிக்கும் உல்சிக்கும் இப்போது ஏற்பட்டது. இவர்களுக்கு இப்போது ஸ்பெயின் நாட்டின் உறவு மிகவும் இன்றியமையாததாக இருந்தது.

கி.பி. 1516ஆம் ஆண்டில் எட்டாம் ஹென்றியின் மாமனாரும் ஸ்பானிய அரசருமான பெர்டினண்டு காலமடைந்ததை ஒட்டி, அவரது மகள்வழிப் பேரரான ஐந்தாம் சார்லஸ் (கி.பி. 1519-1556), ஸ்பானிய அரசை அடைந்திருந்தார். கி.பி. 1519ஆம் ஆண்டில் பேரரசர் மாக்ஸிமில்லியனும் காலமடைந்ததால், பேரரசின் ஆஸ்திரியப் பகுதிகளையும் அவரது மகன்வழிப் பேரர் என்ற உரிமையில் ஐந்தாம் சார்லஸ் அடைந்தார். தம் தந்தை ஃபிலிப்பின் வாரிசு என்ற முறையில் ஃபிளாண்டர்ஸ் பகுதியையும் பெற்றிருந்த ஐந்தாம் சார்லஸ், புனித ரோமப் பேரரசராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அக் கால மன்னர்களிடையே ஐந்தாம் சார்லஸ், செல்வமும் பலமும் கொண்ட ஒரு பேரரசராகவே விளங்கினார். புனித ரோமானியப் பேரரசுப் பதவிக்கு ஐந்தாம் சார்லஸோடு போட்டியிட்டுத் தோல்வியடைந்த முதலாம் ஃபிரான்சிஸ், அவரோடு பெரும் பகைகொண்டதன்றி அவரால் தம் நாட்டுக்கும் ஆபத்து ஏற்படலாமென நினைத்தார். ஐந்தாம் சார்லஸின் பலத்தை நன்குணர்ந்திருந்த ஃபிரெஞ்சு மன்னர்,

தன்னந்தனியாக அவரை எதிர்க்க முடியாததை உணர்ந்த எட்டாம் ஹென்றியின் நட்பை நாடினர். இத்தாலியப் போரினல் எட்டாம் ஹென்றியும் உல்சியும் வெகுண்டிருந்தபோதிலும், ஐந்தாம் சார்லஸின் அமோகப் பலத்தைக் கண்டும், இவர்கள் கவலை கொண்டவர்களாக இருந்தனர். முடிந்தவரையில் ஃபிரான் சுடனும், ஸ்பெயினுடனும் சமரசமாகவே இருக்க இவ்விருவரும் திட்டமிட்டனர்.

**குஸ்னிஸ் சந்திப்பு:** இதற்கேற்ப, கி.பி. 1520ஆம் ஆண்டில் உல்சி, தம் அரசர் எட்டாம் ஹென்றிக்கும் ஃபிரெஞ்சு மன்னர் முதலாம் ஃபிரான்சிசுக்கும் இடையே குஸ்னிஸ் (Guisnes) என்னுமிடத்தில் ஒரு சந்திப்பை ஏற்படுத்திக் கொடுத்துச் சமரசப் பேச்சுவார்த்தைக்கு வழிசெய்தார். அமோகமான வரவேற்புக் கிடையேயும் ஆடம்பர அலங்காரத்துடனும் நடந்த இச் சந்திப்பு, 'பொன்னுடை நிலச் சந்திப்பு' (Field of the cloth of Gold) எனப் பெயர் பெற்றது. இச் சந்திப்பினல் எவ்வித நிரந்தர உடன்பாடும் ஏற்படவில்லை என்பது அடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் தெரிய வந்தது.

**கிரெவிலென்ஸ் உடன்பாடு:** நாளடைவில் ஃபிரான்சின் நட்பைவிட ஐந்தாம் சார்லஸின் நட்பே இலாபகரமானதென்று அரசரும் உல்சியும் நினைத்தவர்களாயினர். ஸ்பெயின், ஸ்பானிய அமெரிக்கா, ஆஸ்திரியா, ஜெர்மனி, நெதர்லாந்து, பர்கண்டி, நேப்பிள்ஸ் ஆகிய பகுதிகளுக்குப் பேரரசராக வல்லமை பெற்றிருந்த ஐந்தாம் சார்லசை விரோதித்துக்கொள்ள எட்டாம் ஹென்றி விரும்பவில்லை. பத்தாம் லியோ காலமாகிவிடவும், போப்பாண்டவர் பதவிக்கு ஐந்தாம் சார்லஸின் அபேட்சகரான ஆரும் அட்ரியன் தேர்ந்தெடுக்கப்பட்டார். இப் பேரரசரின் தயவில்லாமல் தாம் உள்ளத்தின் வெகுநாளைய ஆசையான போப்பாண்டவர் பதவியை அடைய முடியாதென்பதைப் புரிந்து கொண்ட உல்சியும் அரசருக்குச் சாதகமாகவே நினைத்தார். இதன் விளைவாக, எட்டாம் ஹென்றியும் ஐந்தாம் சார்லசும் கிரேவிலென்ஸ் (Gravelines) என்னுமிடத்தில் சந்தித்துப் பேச, கி. பி. 1521 ஆம் ஆண்டில் உல்சி ஏற்பாடு செய்தார். இச் சந்திப்பின் விளைவாக, ஆங்கில—ஸ்பானிய உடன்பாடு ஏற்பட்டது.

**மீண்டும் பிரெஞ்சுப் போர்:** கி. பி. 1522 ஆம் ஆண்டில் ஐந்தாம் சார்லசுக்கும் முதலாம் ஃபிரான்சிசுக்கும் இத்தாலியப் போர் மூண்டிருந்த வேளையில், உல்சியின் யோசனையின்பேரில் தம் படைகளை எட்டாம் ஹென்றி ஃபிரெஞ்சுப் பகுதிகளைத் தாக்க

அனுப்பி வைத்தார். சர்ரே எர்லின் தலைமையில் அனுப்பப்பட்ட ஆங்கிலப்படை, பிக்கார்டி (Picardy) வரை முன்னேறியிருந்ததே தவிர, வேறெந்தப் பலனையும் பெறவில்லை. சஃப்போக் டியூக்கின் தலைமையில் அனுப்பப்பட்ட இன்னொரு ஆங்கிலப் படை, பாரீஸ் நகரை நெருங்கியிருந்தும், கடுங்குளிரினால் பின் வாங்க வேண்டியிருந்தது.

இப் ஃபிரெஞ்சுப் படையெடுப்பு எட்டாம் ஹென்றிக்கு எதிர்பார்த்த பலன்களைக் கொடுக்கவில்லை. ஆதலால், மக்களிடையே வெறுப்புணர்ச்சியே வளர்ந்திருந்தது. போர்ச் செலவுக்காக, கி. பி. 1523 ஆம் ஆண்டில் உல்சி அரசரின் சார்பில் சான்சலர் என்ற முறையில் 8,00,000 பவுன்களைக் கேட்டிருந்தும், போரின் போக்கில் திருப்தியடையாத அம் மன்றம் 4,00,000 பவுன்களையே கொடுக்கச் சம்மதித்திருந்தது; மீதித் தொகையைச் சரிக்கட்டுவதற்காக, உல்சி மக்கள்மீது கட்டாயக்கடனை (forced loan) சுமத்தியிருந்ததால் நாட்டிலே இவ் வமைச்சரின்மீது வெறுப்பு வளர ஆரம்பித்தது. மிலானைக் காப்பாற்றும் முயற்சியில் தோல்வியுற்று முதலாம் ஃபிரான்சிஸ் கி.பி. 1525ஆம் ஆண்டு பேவியாச் (Pavia) சண்டையில் ஐந்தாம் சார்லசால் சிறைபிடிக்கப்பட்டிருந்த போது இச் சந்தர்ப்பத்தைச் சாதகமாகக்கொண்டு ஃபிரான்சை மீண்டும் தாக்க ஹென்றியும் உல்சியும் திட்டமிட்டனர். ஆயினும், போர்ச் செலவுக்கான பணத்தைப் பாராளுமன்றம் கொடுக்கத் தயங்கிய இந் நிலையில் இத் திட்டம் கைவிடப்பட்டது.

சில மாதங்களுக்குள்ளாக முதலாம் ஃபிரான்சிஸ் நிபந்தனையுடன் கூடிய விடுதலையைப் பெற்று நாடு திரும்பியிருந்தார். இக் கட்டத்தில் இங்கிலாந்துடன் நட்புறவை வைத்துக் கொண்டாலொழிய, சார்லசின் பலத்தை ஒடுக்க முடியாதென நினைத்த முதலாம் ஃபிரான்சிஸ் 20,00,000 கிரௌன்களைக் (ஃபிரெஞ்சு நாணயம்) கொடுத்து எட்டாம் ஹென்றியுடன் சமரசம் செய்து கொண்டார்.

**ஸ்பெயினுடன் உறவு முறிவு:** பேவியாச் சண்டையை யொட்டி இத்தாலியப்போரில் ஐந்தாம் சார்லஸ் பெருவெற்றி பெற்றிருந்ததால், ஏற்கெனவே ஐரோப்பிய சக்தி சமநிலை பாதிக்கப்பட்டிருந்தது. இப் பேரரசர் மேற்கொண்டு பெருவெற்றிகளைப் பெறுவாரேயானால், அஃது இங்கிலாந்தின் நலன்களைப் பாதிக்கக் கூடியதாக இருக்குமென்ற அச்சத்தினாலும், தாம் ஃபிரெஞ்சுப் பகுதியினை (காஸ்கனி) மீட்டுக்கொள்ள ஐந்தாம் சார்லஸ் உதவவில்லையென்ற வெறுப்பினாலும், எட்டாம் ஹென்றி ஃபிரான்சின்

உறவை வரவேற்ருர். ஆரும் அட்ரியன் இறந்ததால், போப் பாண்டவர் பதவிக்கு ஏழாம் கிளமென்டு (Clement VII) என்ற மெடிசி (இதாலி) கார்டினலுக்குத் தம் ஆதரவைக் கொடுத்து, ஐந்தாம் சார்லஸ் அவரையே தேர்ந்தெடுக்கச் செய்திருந்ததால், போப்பாண்டவர் பதவியில் நாட்டம் கொண்டிருந்த உல்சிக்கும் பேரரசர்மீது மனத்தாங்கல் ஏற்பட்டது. ஆகவே, இவரும் ஃபிரெஞ்சு மன்னரோடு எட்டாம் ஹென்றி செய்துகொண்ட உடன்பாட்டை வரவேற்ருர். ஆங்கில அரசர், இங்ஙனமாக ஃபிரெஞ்சு அரசரோடு சமாதானம் செய்துகொண்டதால், ஐந்தாம் சார்லசின் பெருமைக்கு எவ்விதப் பங்கமும் அவரது அடுத்த வெற்றிப் போர்களுக்கும் எந்த இடர்ப்பாடும் ஏற்படவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

ஐந்தாம் சார்லசின் ஆதரவினுல் பதவி பெற்றிருந்த போதிலும், போப்பாண்டவரான ஏழாம் கிளமென்ட் இப் பேரரசரின் ஆதிக்கத்தை இத்தாலியில் குலைப்பதற்காக முதலாம் ஃபிரான்சி சுடன் சேர்ந்து கி. பி. 1527 ஆம் ஆண்டில் புனிதக் கூட்டை அமைத்திருந்தார். ஆனல் ஐந்தாம் சார்லசின் படைகள் ஜெனரல் பெஸ்காரா (Pescara) என்பவரின் தலைமையில், போப் பாண்டவரின் தலைநகரான ரோமாபுரியைத் தாக்கி, இரண்டாம் கிளமெண்டைச் சிறைபிடித்தனர். போப்பாண்டவிரின் உதவிக்குச் சென்ற ஃபிரெஞ்சுப் படைகளும் லேண்ட்ரியானே (Landriano) என்னுமிடத்தில் சிதைக்கப்பட்டன. போப்பாண்டவருக்கும் முதலாம் ஃபிரான்சிசுக்கும் உதவும் நோக்கத்தில் உல்சியின் யோசனையின்பேரில் எட்டாம் ஹென்றி, இப் போரில் கலந்து கொள்ள நினைத்தபோது, கி. பி. 1529 ஆம் ஆண்டில் இத்தாலியில் ஒரு சமரச உடன்பாடு ஏற்பட்டதால், மேற்கொண்டு ஆங்கில அரசர் எதுவும் செய்ய முடியாதவராக இருந்தார்.

நிலையற்ற வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்றி, அவசிய மற்ற போர்களில் கலந்து கொண்டதால், இங்கிலாந்திற்குப் பண விரயமானதே முக்கிய ஒரு விளைவாக இருந்தபோதிலும், எட்டாம் ஹென்றியும் உல்சியும் தங்கள் நாட்டுக்கு ஐரோப்பிய அரசியலில் மதிப்பைத் தேடிக் கொடுக்க முயற்சி செய்தார் களென்பதை மறுக்க இயலாது.

## இங்கிலாந்தில் சமய புரட்சி

இடைக்காலத்தின் முற்பகுதிவரையில் சமயத்தின் சீரிய நிறுவனமாகவும் நல்லொழுக்கத்தின் உறைவிடமாகவும் சேவையின் நற்சின்னமாகவும் இருந்து வந்த கத்தோலிக்கத் திருச்

ஐரோப்பிய அரசியல் திருமணங்கள் (டியூடர் காலம் இங்கிலாந்து)



சபை நாளாவட்டத்தில் ஊழல்களையும் குறைபாடுகளையும் சீர் கேடுகளையும் கொண்ட ஓர் அவல அமைப்பாகத் தரம்கெட்டு விளங்கியது. 14ஆம் நூற்றாண்டில் இதன் அமைப்பிலும், கொள் கையிலும், நடைமுறைப் பழக்கவழக்கங்களிலும் காணப்பட்ட பற்பல முறைகேடுகளையும் ஒழுங்கீனங்களையும் அபத்தங்களையும் களைந்தெறிய ஜான் விக்லிஃப்பும் அவரது லாலார்டுகளும் முயன்ற போது திருச்சபை, தன் குற்றங்களைக் களைந்துகொள்ள மறுத்தது. இருப்பினும் லாலார்டுகளின் சேவை வீண்போகவில்லை. 16ஆம் நூற்றாண்டில் அவர்களின் குரல்கள் சமய புரட்சியாக எதிரொலித்தன.

மறுமலர்ச்சியின் விளைவாக அறிவு விரிவுபெற்றிருந்த சில மெய்யுணர்வாளர்கள் தாமாகத் திருத்திக்கொள்ள மறுத்த கத்தோலிக்கத் திருச்சபையினைத் திருத்திக் கொள்ளும்படி கட்டாயப்படுத்தினர். இந்த முயற்சியின் முதல் கட்டமாகவும் முடிவுகட்டமாகவும் சமய புரட்சி அமைந்தது.

சமய சீர்திருத்தக் கருத்துகளில் மனம் ஒன்றியிருந்த மார்டின் லூதர் (Martin Luther) என்ற ஜெர்மானியர் (கி.பி. 1484-1546), தாம் விட்டன்பர்க் ஆலயக் கதவுகளில் திருச்சபையின் கோட் பாடுகளுக்கெதிராக 95 கூற்றுகளை எழுதி ஒட்டிய நேரத்தி லிருந்து (கி.பி. 1517), தாம் சொன்னது, செய்தது அத்தனையும் சரி என்று வோர்ம்ஸ் சபையினர் (Diet of Worms) வாதம் செய்தவரையிலான நிகழ்ச்சிகள் (கி.பி. 1521), சமய புரட்சிக் கான நடப்பாக ஜெர்மனியில் அமைந்தன. ஆக்ஸ்பர்க் மாநாட் டிற்குப் (கி.பி. 1530) பின்னர், கத்தோலிக்கச் சமயத்தை எதிர்த்த லூதரின் சீடர்களுக்கும் அவரைப் பின்பற்றியவர்களுக்கும் புராட்டஸ்டண்ட்ஸ் (எதிர்ப்பாளர்கள்) என்பது பெயராயிற்று. ஃபிரெஞ்சுக்காரரான ஜான் கால்வின் (John Calvin) என்ப வரும், சுவிட்சர்லாந்தைச் சார்ந்த உல்ரிச் சுவிங்கிலி (Ulrich Zwingli) என்பவரும் லூதரின் வழியைப் பின்பற்றிச் சமய சீர்திருத்தப் பணியைத் தொடர்ந்து வந்தார்கள். மார்ட்டின் லூதரால் மூட்டப்பட்ட சமய சீர்திருத்தத் தீ, ஐரோப்பிய நாடு களில் பரவிக்கொண்டிருந்த சமயத்தில் அதைப் பொருட்படுத்தா மல் எட்டாம் ஹென்றி இருந்து வந்தார். இதுமட்டுமன்றி லூதரின் சமய கொள்கைகளை ஏற்றுக் கொள்ளாதவராக, கத்தோலிக்கக் கோட்பாடுகளை ஆதரித்து எட்டாம் ஹென்றி, 'சமய விளையின் பாதுகாப்பு' ('Defence of the Sacraments') என்ற நூலெழுதிப் போப்பாண்டவருக்குச் சமர்ப்பித்து, அதற்காக அவரிடமிருந்து 'சமயத்தின் காவலர்' (Defender of the Faith) என்ற பட்டப்

பெயரினையும் பெற்றிருந்தார். கி.பி. 1521ஆம் ஆண்டில் இங்ஙனமாக சமயபாரகர் (காவலர்) எனப் பட்டம் பெற்றிருந்த எட்டாம் ஹென்றி, கி.பி. 1534 ஆம் ஆண்டில் சமயபாதகர் என்று திருச்சபையின் நிந்தனைக்கு ஆளானார். இதுவே, இங்கிலாந்தில் சமய புரட்சிக்கு முதற்கட்டமாக அமைந்தது.

**காரணங்கள்**

**போப்பாண்டவரின்மீது வெறுப்பு :** தேசிய உணர்வு வளர்ந்து கொண்டுவந்த பதினாறும் நூற்றாண்டில் மதத்தின் பெயரால் தங்கள் நாட்டின் அரசியல், சமயம் ஆகிய உள் விவகாரங்களில் தலையிட்டுவந்த போப்பாண்டவர்களின் ஆதிக்கத்தை ஆங்கில மக்கள் உள்ளூர வெறுத்து வந்தனர். ரோமாபுரியிலிருந்துகொண்டு சமய பரிபாலனம் செய்த போப்பாண்டவரைத் தங்கள் உணர்ச்சிகளை, உணர்வுகளை மதிக்க இயலாத ஓர் அந்நியராகவே ஆங்கிலேயர் நினைத்தனர். எந்தவொரு ஆங்கிலேயனும், கடந்த சில நூற்றாண்டுகளில் போப்பாண்டவராக வந்திராத நிலையில், அப் பதவிமீதே பொறாமையின் காரணமாக, மக்களிடையே சற்று வெறுப்பு ஏற்பட்டிருந்தது. சமயத்தின் முதற் பிரதிநிதியாகவும், மற்றவர்களின் தூய வாழ்வுக்கு ஒரு சிறந்த உதாரணத் திருமனிதராகவும் எளிய, ஆடம்பர மற்ற வாழ்வுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவராகவும், மனித இன நலத்திற்குச் சீரிய சேவை செய்ய வேண்டியராகவும் இருக்கவேண்டிய போப்பாண்டவர்கள், சமீப காலமாக அதிகார வெறிகொண்ட ஆட்சியாளர்களாகவும் கலைப்பித்தர்களாகவும் சொகுசான வாழ்க்கையை நுகர்பவர்களாகவும் சமயத்தையே புறக்கணித்தவர்களாகவும் இருந்துவர, ஆங்கில மக்கள் இதனால் அதிருப்தியே அடைந்திருந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாகத் தங்கள் நாட்டின் ஆக்க வேலைகளுக்குப் பயன்படவேண்டிய வரிப்பணத்தைச் சமயத்தின் பெயரால் அன்னேட்ஸ் (Annates) பணமாகவும் (முதலாண்டு வரும்படி) குருமார்களின் பங்குப பணமாகவும் (Contributions of the clergy) போப்பாண்டவர் அபகரித்துச் சென்றதை மக்கள் மனத்திற்குள் எண்ணிப் புழுங்கினர்.

**முறைகேடுகள் :** போப்பாண்டவரைத் தலைவராகக் கொண்டிருந்த கத்தோலிக்கத் திருச்சபையிலே, சமீப காலமாகவே இலஞ்ச ஊழல், தகுயற்றவர்கட்குப் பதவியளித்தல், உறவினர்களுக்குச் சலுகை காட்டுதல் போன்ற முறைகேடுகள் மலிந்திருந்ததையும் ஆங்கில மக்கள் உணராதவர்களாக இல்லை.

இதோடல்லாமல், குருமார்களின் ஒழுங்கீனச் செயல்களும் புனித இடங்களாக இருக்க வேண்டிய மடாலயங்கள் சோம்பேறிகளின் உறைவிடங்களாகச் சீர்கெட்டிருந்த நிலையும் மன்னிடபுச் சீட்டுச் சலுகை (Sale of Indulgence) போன்ற பகுத்தறிவுக்குப் புறம்பான போதனைகளும் 'குருமார்களின் உரிமை' என்ற அநீதியும் கத்தோலிக்கத் திருச்சபையின்மீது மக்களுக்கு வெறுப்பைக் கொடுத்து வந்தன.

மறுமலர்ச்சி இயக்கத்தின் விளைவாகத் தோன்றிய துருவிப் பார்க்கும் அறிவு, ஆங்கில மக்களை வேத புத்தகத்தில் இல்லாததையும் சொல்லாததையும் ஏற்க மறுக்கும்படி தூண்டியிருந்தது.

**சீர்திருத்தப் பிரசாரம் :** லாடிமர் (Latimer) கவர்டேல் (Coverdale) போன்ற கேம்பிரிட்ஜ் மேதைகள், லூதரின் கருத்துகளால் ஈர்க்கப்பட்டு இங்கிலாந்தின் சமயத்தின்மீதிருந்துவரும் போப்பாண்டவரின் ஆதிக்கத்தை அகற்ற வேண்டுமெனக் குரல் எழுப்பி வந்தனர். டைன்டேல் (Tyndale) என்ற ஆங்கில எழுத்தாளர், தம் சீரிய முயற்சியால் விவிலியத்தின் புதிய ஏற்பாட்டை ஆங்கிலத்தில் வெளியிட்டு, மக்கள் மனத்தைப் பக்குவப்படுத்தலானார்.

இங்ஙனம், சமயப் புரட்சிக்கான சூழ்நிலைகள் இலைமறை காய்போல் இங்கிலாந்தில் இருந்துவந்த இச் சமயத்திலேயே, எட்டாம் ஹென்றியின் விவாகரத்துப் பிரச்சனை எழுந்தது.

**விவாகரத்து விவகாரம் :** எட்டாம் ஹென்றி, தாம் பட்டத்திற்கு வந்தவுடன், தம் சகோதரரின் விதவையான காதரீன் என்ற ஸ்பானிய இளவரசியை மணந்திருந்தார். பதினெட்டு ஆண்டுகள் தொடர்ந்த மண வாழ்க்கையின் பயனாக, இத் தம்பதிகளுக்கு ஏழு குழந்தைகள் பிறந்திருந்தும், மேரி என்ற ஒரு பெண்ணைத் தவிர, மற்றவர்கள் இளம் பிராயத்திலேயே இறந்து விட்டனர். அப்போதிருந்த அரசியல் சூழ்நிலையில் தமக்குப்பின் ஒரு பெண்ணரசி பட்டத்திற்கு வருவதை ஹென்றி விரும்பவில்லை. ஆண் மகப்பேறு வேண்டும் என்ற அவா நாளுக்கு நாள் அரசருக்கு அதிகமாயிற்று. தமக்குக் காதரீனிடம் மகப்பேறு இனி உண்டாகாது என்ற எண்ணமும் அரசருக்கு எழுந்தது. தாம், தம் சகோதரரின் விதவையை மணந்து கொண்டதாலேயே ஆண்மகவு கிட்டாத சாபக்கேடு தமக்கு இருப்பதாகவும் எட்டாம் ஹென்றி நம்பினார். மேலும், ஃபிரான்சுக்கு உடந்தையாக அரசர் பின்

பற்றிய வெளிநாட்டுக் கொள்கையினையும், அரசி காதரீன் விரும்பாதவளாக இருந்தாள். உண்மையான காரணம் என்னவாயினும், தாம் அரண்மனையில் சந்தித்த ஆன் பொலீன் (Anne Boleyn) என்ற அழகியை அரசர் காதலித்தது மட்டுமன்றி, மணம் செய்து கொள்ளவும் விரும்பினர். ஆன் பொலீனைத் தாம் மணம் செய்து கொள்ள வேண்டுமெனில், காதரின் அரசியை விவாகரத்துச் செய்யவேண்டும். போப்பாண்டவரின் உத்தரவு இல்லாமல் தாம் காதரீனை மணவிலக்குச் செய்ய முடியாதென்பதையும் உணர்ந்ததால், எட்டாம் ஹென்றிக்கு அதற்கான அனுமதியைக் கோரிப் போப்பாண்டவருக்கு விண்ணப்பித்துக் கொண்டார்.

எதையும் முடிவு செய்ய முடியாத ஒரு சிக்கலான சூழ்நிலையில் போப்பாண்டவரான ஏழாம் கிளமென்ட் அப்போதிருந்தார். அரசி காதரின் அப்போது ஸ்பெயினுக்குப் பேரரசராகவும், புனித ரோமச் சக்கரவர்த்தியாகவும் இருந்துவந்த ஐந்தாம் சார்லசுக்குச் சிற்றன்னை முறையாவாள். விவகாரத்தை அனுமதித்து, சில மாதங்களுக்கு முன்னர், ரோமாபுரியைத் தாக்கித் தம்மைச் சிறைப்படுத்திய அப் பேரரசின் கோபத்திற்குப் போப்பாண்டவர் ஆளாக விரும்பவில்லை. இதே சமயத்தில், எட்டாம் ஹென்றியையும் பகைத்துக் கொள்ள போப் விரும்பவில்லை. இந்த இக்கட்டான நிலையில் சில மாதங்கள் மௌனம் சாதித்து வந்த போதிலும், ஹென்றியின் தொந்தரவைப் பொறுக்க முடியாமல் விவாகரத்து விவகாரத்தை விசாரிக்க, ஆங்கிலேய கார்டினலான உல்சி, இத்தாலிய கார்டினலான காம்பெஜ்ஜியோ (Compeggio) என்ற இருவர் கொண்ட குழுவைப் போப்பாண்டவர் அமைத்தார்.

காம்பெஜ்ஜியோ இங்கிலாந்துக்கு வந்து ஏழு மாதங்களாகியும், இக் குழு தனது விசாரணையைத் தொடங்கவில்லை. கி.பி. 1529ஆம் ஆண்டு மே மாதத்தில் விசாரணை தொடங்கியது. ஆனால், இக் குழுவினர் முன்னிலையில் தம் வாதங்களை எடுத்துரைக்கக் காதரீன் மறுத்ததோடன்றி, போப்பாண்டவருக்கு நேரிடையாகக் கருணை மனுச் செய்துகொண்டார். இதன் பிறகு, இலண்டனில் கூடியிருந்த குழுவினர் இந்த விசாரணையை நிறுத்த வேண்டுமென்றும், எட்டாம் ஹென்றியையும் காதரீன் அரசியாரையும் நேரில் வந்து விவகாரங்களை விளக்கும்படி போப்பாண்டவர் உத்தரவு பிறப்பித்தார்.

தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான உல்சி விசாரணைக் குழுவிலிருந்தமையால், வழக்கு தமக்குச் சாதகமாக இருக்குமென

ஹென்றி நினைத்தார். ஆனால், இவ் வழக்கு இழுபறி நிலையிலிருந்ததால் பெருத்த ஏமாற்றமடைந்த அரசர், இந் நிலைக்கு உல்சியே காரணமென நினைத்து, இவரைத் திறமையற்றவரென்று சொல்லி சான்சலர் பதவியிலிருந்து நீக்கியது மட்டுமல்லாமல், பொய்ச் சாட்சியங்கள்மீது இராசத் துரோகக் குற்றத்தையும் சாட்டினர். திருச்சபையைச் சார்ந்தவராக இருந்தும், தம் காலமெல்லாம் அரசருக்கு விசுவாசமாக உழைத்த உல்சி, பதவியை இழந்து, மனம் நொந்து கி.பி. 1530ஆம் ஆண்டில் தம்மீது குற்ற விசாரணை தொடங்கப்படுவதற்கு முன்னரேயே லீஸ்ட்டர் கோயிலில் காலமாகி விட்டார்.

தாம் இறப்பதற்கு முன்னர், 'மன்னருக்குச் செய்த சேவையைப் போல் கடவுளிடம் பக்தி செலுத்தியிருப்பேனேயானல், நான் இந்தக் கதிக்கு ஆளாகியிருக்க மாட்டேன்' என்று உல்சி மனம் வெதும்பிக் குமுறியது அவரது கடைசி வாசகமாகிவிட்டது. சாதகமான தீர்ப்பைக் கொடுக்காமல், வழக்கை இழுத்தடித்து வந்த போப்பாண்டவரையும் பகைத்துக் கொள்ள எட்டாம் ஹென்றி முடிவெடுத்ததும், இங்கிலாந்தில் தோன்றிய சமயப்புரட்சிக்கு இறுதிக் காரணமாயிற்று.

### சமய புரட்சி பாராளுமன்றம் (1529—1536)

எட்டாம் ஹென்றியால் கூட்டப்பட்ட இப் பாராளுமன்றத்தின் சாதனையே ஆங்கிலேயச் சமய புரட்சியின் முதல் கட்டமாக அமைந்தது. தம் விருப்பத்திற்கு அரசர் அம் மன்றத்தை இணங்க வைத்துப் பல சட்டங்களை இயற்றிப் போப்பாண்டவரிடம் தமக்கிருந்த மனக் கசப்பைக் காட்டிக்கொண்டார்.

இச் சமயத்தில், சமய இயலை நன்குணர்ந்தவரும், பிராட்டஸ்டன்ட் சமயத்தை ஆதரித்தவரும் கேம்பிரிட்ஜ் பட்டதாரியுமான தாமஸ் கிரான்மர் (Thomas Granmer) என்பவர், அரசரின் சான்சலராக இருந்தார். தொடக்கத்தில் உல்சியின் அரசியல் சீடராகவும் நாளடைவில் மன்னரின் அபிமானத்திற்கு ஆளாகி இருந்தவருமான தாமஸ் கிராம்வெல் (Thomas Cromwell) என்பவர், அரசரின் சமய ஆலோசகராகவும் பொறுப்பேற்றார்.

இம் மன்றத்தினல் கொண்டு வரப்பட்ட சட்டங்களின்படி, குருமார்கள் அதுவரை அனுபவித்து வந்த உயில் நிரூபணக் கட்டணம், சாவுக் கட்டணம் போன்ற வருவாய்கள் நிறுத்தப்பட்டன. அரசரின் அனுமதியில்லாமல் குருமார்கள் மானியம்

பெறுவதும் தடுக்கப்பட்டது. அரசரின் சம்மதம் இல்லாமல் திருச்சபையின் சட்டங்கள் மாற்றப்படுவதும் நிறுத்தப்பட்டது.

இச் சட்டங்களை ஏற்றுக் கொள்வதில் தயக்கம் காட்டிய குருமார்களை அச்சுறுத்தும் வகையில் அரசர், தம் சொந்தப் பொறுப்பில் அவர்கள் அத்தனைப் பேர்மீதும் 1,00,000 பவுன்கள் அபராதம் விதித்து அடக்கி வைத்தார்.

மேற்கொண்டு, பிஷப்புகளை நியமிக்கும் அதிகாரம் மன்னருக்கே உண்டென்றும், ஆங்கிலேயரின் திருச்சபை இனி போப்பாண்டவரின் பிரதிநிதிகளுக்கு அடங்கி இயங்கக் கூடாது என்றும், இதுவரை போப்பாண்டவருக்கு அனுப்பப்பட்டு வந்த 'முதல் ஆண்டு வரும்படி' நிறுத்தப்படவேண்டுமென்றும் எட்டாம் ஹென்றியின் வற்புறுத்தலில் இப் பாராளுமன்றம் சட்டங்களைக் கொணர்ந்தது.

போப்பாண்டவரின் அதிகாரம் இனி, இங்கிலாந்தில் செல்லாத வகையில் இயற்றப்பட்ட இச் சட்டங்கள், திருச்சபையின் அதிகாரங்களைப் பறித்து மன்னருக்குக் கொடுத்தன. இச் சட்டங்களை இயற்றித் தமது ஆத்திரத்தை வெளிபபடுத்திக் கொண்ட எட்டாம் ஹென்றி, இக் கட்டத்தில் போப்பாண்டவரின் அனுமதியின்றியே காதரீனை மண விலக்குச் செய்ய முடிவெடுத்தார்.

தம் நண்பரும், கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாகப் பதவி பெற்றிருந்தவருமான தாமஸ் கிரான்மரின் யோசனைப்படி, ஐரோப்பிய பல்கலைக்கழக அறிஞர்களின் கருத்துகளைச் சேகரித்து, கி. பி. 1533ஆம் ஆண்டில் காதரீனிடமிருந்து ஒருதலைப்பட்சமான விவாகரத்தைப் பெற்றுக்கொண்ட எட்டாம் ஹென்றி, ஏற்கெனவே தாம் இரகசியமாகத் திருமணம் செய்து கொண்டிருந்த ஆன் பொலினைப் பகிரங்கமாகத் தம் மனைவியென்றும் இங்கிலாந்தின் அரசியென்றும் அறிவித்தார்.

இதனைல் வெகுண்ட போப்பாண்டவர், இதே ஆண்டு ஜூலை மாதம் ஹென்றியை மதப் பிரஷ்டம் செய்ய முடிவெடுத்தார். இதற்குப் பதிலடி கொடுப்பது போல, இங்கிலாந்திலிருந்து சமய தொடர்புள்ள வழக்குகள் எதுவும் போப்பாண்டவருக்கு மேல் முறையீடாகக் (அப்பீலாக) கொண்டு செல்லலாகாது என்ற சட்டத்தையும் இங்கிலாந்து திருச்சபையின்மீது இனி போப்பாண்டவரின் ஆதிக்கம் செல்லுபடியாகாதென்ற சட்டத்தையும் அரசர் இம் மன்றத்தின்மூலமாக இயற்றச் செய்தார். அரசர்,

காதரீனை விவாக விலக்குச் செய்ததையும், ஆன் பொலினை மணந் திருந்ததையும் சட்டப்படி பாராளுமன்றம் செல்லுபடியாக்கியது மட்டுமல்லாமல், அடுத்த வாரிசுரிமையை ஆன் பொலினுக்குப் பிறந்திருந்த மகனுக்குச் சேரும்படியாக வாரிசு உரிமைச் சட்டம் (Act of Succession) ஒன்றினையும் கி.பி. 1534ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கொண்டு வந்திருந்தது.

கி.பி. 1534ஆம் ஆண்டில், அரசரை இங்கிலாந்து திருச் சபையின் 'மாபெருந் தலைவர்' என்று அறிவித்த 'ஆதிக்கச் சட்டம் (Act of Supremacy) என்ற சட்டமொன்று கொணரப்பட்டது.

போப்பாண்டவரின் அதிகாரத்திற்கு எதிராகக் கொண்டு வரப்பட்டிருந்த சட்டங்களை எதிர்த்தவர்களும், ஆன் பொலினின் திருமணத்தை ஒப்புக்கொள்ளாதவர்களும், அரசரின் சமய தலைமையை ஏற்க மறுத்தவர்களும் அரச துரோகிகளாகக் குற்றம் சாட்டப்பெற்றுக் கொடிய தண்டனைக்கு உள்ளாயினர். இவர்களிலே இலண்டன் பாதிரியான ஜான் அக்டன் (Hougton) அரசரின் ஆலோசகரான பெருமேதை சர். தாமஸ் மூர், ரோசெஸ் டரின் பிஷபபான ஃபிஷர் (Fisher), ஜல்லொத்திரி துறவியாரான ஜான் ஹேல் (Hale) ஆகியோர் அவர்களுள் சிலராவர்.

**கீழ்நிலை மடாலயங்கள் அபகரிக்கப்படல்:** இங்கிலாந்து திருச்சபையைத் தம் விருப்பத்திற்கு அடிமைப்படுத்திக் கொண்ட எட்டாம் ஹென்றியின் கவனம், அடுத்து இந் நாட்டிலிருந்த மடாலயங்களின்மீது திரும்பியது.

பாராளுமன்றத்தினால் இதுவரை இயற்றப்பட்ட சட்டங்களை முழுமனத்துடன் ஏற்றுக்கொள்ளத் தயங்கிய மடாலயங்களின் அபரிமிதமான சொத்துகளை எப்படியும் அபகரித்துக்கொள்ள வேண்டுமென்னும் அவா, பொருளாசை கொண்ட எட்டாம் ஹென்றிக்கு எழுந்தது. இதற்கேற்ப, அறம் செய்யும் நிலையங் களாகவும் கல்விக் கூடங்களாகவும் இருக்க வேண்டிய மடாலயங்கள் சேவையுணர்ச்சி இல்லாதவர்களின் மடங்களாக இருந்துவந்தன. தாம் நினைத்ததைச் செய்து முடிக்கத் துடித்த எட்டாம் ஹென்றிக்கு, மடாலயங்களின் சீர்கெட்டநிலை நல்ல வாய்ப்பினைக் கொடுத்தது. மடாலயங்களின் சொத்துகளை அபகரிப்பதில் அரசருக்குப் பெருந்துணையாகத் தாமஸ் கிராம்வெல் என்ற 'விக்கர் ஜெனரல்' (Vicar-General) இருந்தார்.

ஒரு கருமான் குடும்பத்தில் பிறந்த தாமஸ் கிராம்வெல், சிலகாலம் போர் வீரராகவும் வியாபாரியாகவும் பின்னர்,

வழக்கறிஞராகவும் பணியாற்றிவந்த அவர், உல்சியால் அரசியல் வாழ்வில் ஈடுபடுத்தப்பட்டிருந்தார். தம் சுயநலத்திற்காக எவ்விதத் தீவினைக்கும் துணிந்திருந்த தாமஸ் கிராம்வெல், கி.பி. 1534—1540ஆம் ஆண்டுகளில் அரசரின் சமய ஆலோசகராக இருந்தார். ஒவ்வொரு கட்டத்திலும் அரசரின் விருப்பத்திற்கேற்ப பாராளுமன்றத்தை ஒரு முக்கியக் கருவியாகக் கொண்டு, தேவைக்கேற்ப சட்டங்களைக் கொண்டுவந்தது இவரது தனித் திறமையாக இருந்தது.

கி.பி. 1535ஆம் ஆண்டில் விக்கர் ஜெனரலாக நியமிக்கப்பட்ட தாமஸ் கிராம்வெல், நாட்டிலுள்ள மடாலயங்கள் நல்ல முறையில் இயங்குகின்றனவா என்று கண்டறிய அரசரால் பணிக்கப்பட்டார். மடாலயங்களைப் பொறுத்தவரையில் முழு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்த தாமஸ் கிராம்வெல், நாட்டிலுள்ள பல மடாலயங்களைச் சுற்றிப் பார்த்து, அவை சீர்கெட்ட முறையில் நிர்வகிக்கப்படுகின்றன என்று தம் அறிக்கையைச் சமர்ப்பித்தார்.

கி.பி 1536ஆம் ஆண்டில் இவ்வறிக்கையை ஏற்றுக்கொண்ட பாராளுமன்றம், கீழ்நிலை மடாலயங்களின் (Lesser Monastries) சொத்துகளை அபகரித்துக்கொள்ளும் வகையில் ஒரு சட்டத்தைக் கொண்டுவந்தது. ஓர் ஆண்டுக்கு இருநூறு பவுனுக்கு மேற்படாமல் வருவாயுள்ள கீழ்நிலை மடாலயங்கள், இச் சட்டத்தால் ஒழிக்கப்பட்டன. இச் சட்டத்தினால் அபகரிக்கப்பட்ட 276 மடாலயங்களின் மொத்த சொத்து, ஏறக்குறைய 30,000 பவுண்கள் அரசருக்குச் சொந்தமாயின. சமய புரட்சி, பாராளுமன்றத்தினால் அரசருக்குச் செய்யப்பட்ட இறுதிப் பணியாக இச் செய்கை அமைந்திருந்தது.

**அருள் யாத்திரை:** மன்னரின் மடாலய அபகரிப்பை எதிர்த்து லிங்கன்ஷயரிலும் வடபுறத்திலும் கலகங்கள் தோன்றின. போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்திற்கெதிராகக் கொண்டுவரப்பட்ட சட்டங்களை ரத்துச் செய்யச் சொல்லியும், தாமஸ் கிராம்வெல்லைப் பதவியிலிருந்து விரட்டச் சொல்லியும், சமய சீர்திருத்தக்காரர்களான கிரான்மர், லாட்டிமர் ஆகியோரைத் தண்டிக்கச் சொல்லியும் இக் கலகக்காரர்கள் வற்புறுத்தினர். சஃபோக் பிரபுவின்கீழ் அனுப்பப்பட்ட படை லிங்கன்ஷயரில் தோன்றியிருந்த கலகத்தை எளிதாக அடக்கியது. ஆனால், இராபர்ட் ஆஸ்க் (Robert Aske) என்பவரின் தலைமையில், ஸ்கிப்வொர்த் மூர் (Skipworth Moor) என்னும் இடத்தில் கூடிய

கலகக்காரர்கள், யார்க்ஷயரைக் கைப்பற்றி மடாலயங்களை விடுவித்து இவற்றை மடாதிபதிகளுக்கு ஒப்படைத்தனர். இக் கலகமே 'அருள் யாத்திரை' (Pilgrimage of Grace) என அழைக்கப்பட்டது.

கலகத் தலைவர்களுக்கு மன்னிப்பு வழங்குவதாகவும் அவர்களின் குறைகளைத் தீர்ப்பதாகவும் இக் கலகக்காரர்களுடன் சமரசம் பேசி, இவர்களைக் கலைந்துபோகும்படி அரசர், தொடக்கத்தில் முயற்சி செய்து அருள் யாத்திரையின் தீவிரத்தைக் குறைத்தார். இக் கலகக்காரர்களின் பலம் குறைந்திருந்த வேளையில், நார்ஃபோக் பிரபுவின் தலைமையில் படைகளனுப்பி இராபர்ட் ஆஸ்க், மற்றும் டேர்சி, ஹஸ்ஸி போன்ற தலைவர்களோடு சில மடாதிபதிகளையும் கைப்பற்றி, இராசத்துரோகக் குற்றத்தின்மீது அரசர் தூக்கிலிட்டுக் கொன்றார். இத்துடன் அருள் யாத்திரை முடிந்தது; ஆயினும் அரசரின் கோபவெறி தீரவில்லை.

போப்பாண்டவர்மீது தமக்கிருந்த வெறுப்பு இன்னும் குறையவில்லை என்பதைக் காட்டுவதுபோல், திருச்சபையின் அதிகாரங்களை அரசரின் ஆதிக்கத்திலிருந்து காப்பாற்ற இறுதி வரைப் போராடிக் (கி.பி. 1170) கொல்லப்பட்ட (செயின்ட்) தாமஸ் பெக்கட்டின் சமாதி அரசரின் கட்டளையால் கி பி. 1538ஆம் ஆண்டில் சேதமாக்கப்பட்டது. அவரது எலும்புகள் எரிக்கப்பட்டன. படைப்புகள் பறிமுதல் செய்யப்பட்டன. பெக்கட் ஒரு போலிச் சாமியார் என ஓர் இகழ்வான அறிவிப்பை அரசர் வெளியிட்டார்.

**மேல்நிலை மடாலயங்களை அபகரித்தல்:** கீழ்நிலை மடாலயங்களை ஒழித்து அவற்றின் சொத்துகளைச் சூறையாடிய எட்டாம் ஹென்றியின் கவனம், கி.பி. 1539ஆம் ஆண்டில் மேல்நிலை மடாலயங்கள் (Larger Monastries) மீது திரும்பியது. ஓர் ஆண்டிற்கு 1,60,000 பவுன்களுக்கு மேலாக வருவாயளித்த 616 மடாலயங்கள் அரசரால் அபகரித்துக்கொள்ளப்பட்டன.

கவரப்பட்ட மடாலயங்களின் நிலச் சொத்துகள் பல செல்வர்களுக்கும், பிரபுக்களுக்கும் விற்கப்பட்டன. இவ்விதம் சொத்துகளைப்பெற்ற இப் புதுப் பிரபுக்களின் இனம் (New Nobility) டியூடர் அரச மரபுக்கும், சமய புரட்சிக்கும் பெரும் ஆதரவாக இருந்தது. அபகரிக்கப்பட்ட சொத்துகள் எல்லாவற்றிற்கும் பெரும் உரிமையாளராக இருந்த மன்னர், இதில் ஒரு பகுதியை

நாட்டின் ஆக்க வேலைகளுக்கும், பாதுகாப்புப் பணிகளுக்கும் செலவிட்டார். இம் மடாலயச் சொத்துகளை அரசர் அபகரித்த தற்கு எதிர்ப்பு காட்டிய ரீடிங் (Reading), கோல்செஸ்டர், கிளாஸ்டன்பரி (Glastonbury) ஆகிய மடாலயத் தலைவர்கள் கொலைத்தண்டனை அடைந்தனர். இம் மடாலய ஒழிப்பினால் 20,000,000 பவுன்களையும், தமக்குப் பக்கபலமாக ஒரு புதிய வகுப்பையும் பெற்றிருந்த எட்டாம் ஹென்றியின் எதிர்ப்பு வெறி இன்னும் அதிகரிக்க ஆரம்பித்தது.

**சமய சீர்திருத்த முயற்சி :** தம்மைச் சீர்திருத்தப்பட்ட மதத்தின் சார்பாளராக எட்டாம் ஹென்றி இன்னும் நினைக்கவில்லையாயினும், சில ஆண்டுகளுக்கு முன்னர், மைல்ஸ் கவர்டேல் (Miles Coverdale), டைன்டேல் (Tyndale) என்பவர்களால் ஆங்கில மொழியில் வெளியிடப்பட்ட விவிலியத்தின் புதிய ஏற்பாடு ஜான் ரோஜர்ஸ் என்பவரால் திருத்தம் செய்யப்பட்டு ஒவ்வொரு திருக்கோயிலிலும் யாவரும் காணும்படியாக வைக்கப்பட வேண்டுமென, கி.பி. 1539ஆம் ஆண்டில் அரசர் கட்டளையிட்டிருந்தார். சில காலமாகவே எட்டாம் ஹென்றி, தாம் பிராட்டஸ்டன்ட் சமயக் கொள்கைகளையே தீவிரமாகப் பின்பற்றவேண்டுமெனத் தாமஸ் கிராம்வெல், தாமஸ் கிரான்மர், லாட்டிமர் ஆகிய எதிர்ப்புச் சமயத்தின் ஆதரவாளர்களால் வற்புறுத்தப் பட்டு வந்தார். அவர்களை ஓரளவாவது திருப்தி செய்யவேண்டுமெனவே, பிராட்டஸ்டன்டு சமய கோட்பாடுகளைச் சற்றுத் தழுவியதாக இருந்த அந்த விவிலியத்தின் படிகளை (Copy) வைத்து இந்த ஏற்பாட்டைச் செய்திருந்தார்.

**ஆறு விதிச் சட்டம் :** ஆனால், போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்ததுடன் திருப்திகொண்டு, மேற்கொண்டு சமயத்தில் எந்தக் கொள்கை மாற்றங்களையும் அரசர் செய்யக் கூடாதென, நார்ஃபோக் பிரபுவின் செஸ்டர் பிஷப்பான கார்டினர் (Gandiner) லண்டன் பிஷப்பான போனர் (Bonner) ஆகியோர் எட்டாம் ஹென்றியை வற்புறுத்தி வந்தனர். இதன் விளைவாகவே இதே ஆண்டில் அரசரால் 'ஆறு விதிச் சட்டம்' (Act of six Articles) பாராளுமன்றத்தின்மூலமாக இயற்றப்பட்டது. இது கத்தோலிக்கச் சமய நம்பிக்கைகளை ஆதரிக்கும் சட்டமாக விளங்கியது. 'பொருள் மாற்றம்' பாதிரிமார்களின் திருமணத் தடுப்பு, லத்தீன் மொழியில் பிரார்த்தனை போன்ற கத்தோலிக்கர்கள் நம்பும் ஆறு கொள்கைகளை ஏற்றுக் கொள்ளாதவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவர் என்று இச் சட்டம்

வலியுறுத்தியது. இவ் விதிகளை ஒப்புக்கொள்ளாதோர், இச் சட்டத்தின்படி, கொலைத் தண்டனை அடைந்தனர்.

இவ் விதிகளை மனத்திற்குள் வெறுத்தவராகத் தாமஸ் கிரான் மர் ஜெர்மனி நாட்டுக்குச் சென்றுவிட்டார். மடாலயச் சொத்துகளை அரசர் கைப்பற்றுவதற்குப் பெரிதும் உதவியாக இருந்த தாமஸ் கிராம்வெல், எவ்வாறேனும் கத்தோலிக்க எதிர்ப்புச் சமயத்தை நாட்டில் பலப்படுத்த எண்ணி, ஜெர்மானியச் சிற்றரசரின் மகளும் புராட்டஸ்டன்ட் சமயத்தைச் சார்ந்தவருமான ஆன் (கிளிவ்ஸ்) என்ற பெண்ணை அரசருக்கு மணமுடிக்க ஏற்பாடு செய்தார். ஏற்செனவே, தாம் நேசித்து மணம் புரிந்துகொண்ட ஆன் பொலினைத் துரோகக் குற்றம் சாட்டிக் கொலைக்களத்திற்கு (கி.பி. 1536) அனுப்பிய எட்டாம் ஹென்றி, பின்னர், ஜேன் செய்மோர் (Jane Saymoure) என்ற இன்னொரு அழகியை மணந்து ஓர் ஆண் மகவுக்குத் (ஆறும் எட்வர்டு) தந்தையாகியிருந்தும், அவள் காலமாகிவிட்டதால் (கி. பி. 1537) இப்போது தாமஸ் கிராம் வெல்லின் ஏற்பாட்டின்படி ஆன் கிளிவ்ஸ் (Anne Cleves) என்ற பெண்ணை கி பி. 1340 ஆம் ஆண்டில் அரசர் மணந்து கொண்டார். இத் திருமணத்தால், மேற்கு ஜெர்மனி (புராட்டஸ்டன்ட்) இள வரசர்களுடன் தொடர்பு கிடைக்குமெனவே எட்டாம் ஹென்றி நினைத்தார். இது நிறைவேறாமல் போகவே, அரசருக்குத் தம் புதிய மனைவியின்மீதும், இத் திருமணத்தை முடித்துவைத்த தாமஸ் கிராம்வெல் மீதும் கடுங்கோபம் உண்டாகியது. இதன் விளைவாக, முன்னவர் பாராளுமன்றத்தின் மூலமாக மண விலக்குப் பெற்றார்; விசாரணை எதுவுமின்றித் துரோகக் குற்றம் சாட்டப் பட்டுத் தாமஸ் கிராம்வெல் கொலைத்தண்டனை அடைந்தார் (கி.பி. 1540).

**சமய புரட்சியின் தன்மை:** திருச் சபையின் ஆதிக்கத்தி லிருந்து, குறிப்பாகப் போப்பாண்டவரின் அதிகாரங்களிலிருந்து தம்மையும் தம் நாட்டையும் விடுவித்துக்கொள்ள வேண்டுமென்ற அரசியல் அவசியமே, இவ்வரசரின் காலத்தில் சமய புரட்சியாக இருந்ததேயொழிய, கத்தோலிக்கச் சமய கருத்துகளைச் சீர்திருத் தம் செய்ய வேண்டுமென்ற எண்ணம் இல்லை. இருப்பினும், நாட்டில் ஏற்பட்டுவரும் மாற்றங்களை உணர்ந்து கி.பி 1544 ஆம் ஆண்டில் புராட்டஸ்டன்டுகளின் கருத்துகளுக்கேற்ப விவிலி யத்தின் வழிபாட்டுப் பகுதிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க் கவும், அம் மொழி பெயர்ப்பினைத் திருக்கோயில்களில் பின்பற் றவும் எட்டாம் ஹென்றி அனுமதித்தாரென்பதிலிருந்து தம்

இறுதிக் காலத்தில் அரசர் தமது கத்தோலிக்கக் கொள்கைகளைச் சற்று மாற்றிக்கொள்ள முற்பட்டாரென்று தெரிகிறது.

**அரசியல் விளைவுகள் :** கி.பி. 1529 ஆம் ஆண்டிலிருந்து போப்பாண்டவரின் அதிகாரத்தை ஒழிக்கும் வகையில், படிப்படியாகக் கொண்டு வரப்பட்ட சட்டங்கள் அத்தனையும் ஹென்றி மன்னரை இங்கிலாந்து மத நிறுவனத்தின் தலைவராக ஆக்கியிருந்தது.

மேல் முறையீடுகளைப்பற்றிக் கொண்டுவரப்பட்ட சட்டம் திருச்சபை நீதி மன்றங்களின் அதிகாரத்தைக் குறைத்து, அரசரின் நீதி பரிபாலன முறைக்குச் சிறப்பைக் கொடுத்தது.

இங்கிலாந்து மத நிறுவனத்தின் ஒரே பெருந்தலைவர் (Supreme Head of the English Church) என்ற பட்டத்தைப் பெற்றிருந்த இவ்வரசர், திருச்சபைகளைக் கண்காணிக்கவும் அவற்றைச் சீர்படுத்தவும் உரிமை பெற்றிருந்ததோடு, போப்பாண்டவரின் மேலாதிக்கத்தை இங்கிலாந்திலிருந்து அறவே அகற்றியும் இருந்தார்.

போப்பாண்டவருடன் தாம் நடத்திவந்த சச்சரவைப் பயன்படுத்தி எட்டாம் ஹென்றி, ஆங்கிலப் பாராளுமன்றத்தைத் தம் விருப்பம்போல் நடக்கக்கூடிய ஒரு தலையாட்டி மன்றமாக மாற்றியிருந்தார்; இதனால் அரசர், தம் விருப்பம்போல் ஆண்டு எதேச்சாதிகாரங்களைப் பெற முடிந்தது.

மடாலயங்களின் ஒழிப்பிற்குப் பின்னர், அதுவரை பிரபுக்கள் சபையில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த மடத்தலைவர்கள் அகற்றப்பட்டிருந்ததால், திருச்சபையினரின் செல்வாக்கும் பாராளுமன்றத்தில் குறைவுபடலாயிற்று.

எல்லாவற்றுக்கும் மேலாக, கி. பி. 1529–1539 ஆண்டுகளில் எட்டாம் ஹென்றியின் வற்புறுத்தலுக்கிணங்கிப் பாராளுமன்றத்தினால் கொண்டு வரப்பட்ட வாரிசுரிமை உள்பட அத்தனைச் சட்டங்களும் அரசியல் அமைப்பு முறைகளுக்கு உட்பட்டே இயற்றப்பட்டிருந்தன.

சுருக்கமாகக் கூறின், இவ்வரசர் காலத்தில் கொண்டுவரப்பட்டிருந்த பற்பல சட்டங்கள், மதக்கோட்பாடுகளில் மாறுதல்களை ஏற்படுத்திய இயக்கமாக இல்லாமல், போப்பாண்டவரின் அதிகாரத்தை நீக்கும் உறுதியான நடவடிக்கையாகவே இருந்ததெனினும், அரசரே வருங்காலத்தில் இங்கிலாந்து திருச்சபைக்குக்

(Church of England) காவலர் என்ற மரபு இறுதியாக நிலை நிறுத்தப்பட்டுவிட்டது.

**ஹென்றியின் வெளிநாட்டுக் கொள்கை (தொடர்ச்சி)**

போப்பாண்டவரின் ஆதிக்கத்திற்கெதிராக நடத்திய சண்டையில் (Quarrel) முழு வெற்றி அடைந்து, ஐரோப்பிய அரசியலில் சலனத்தை உண்டாக்கியிருந்த எட்டாம் ஹென்றி, தம் அதிகாரத்தைப் பிரிட்டிஷ் தீவுகளில் நிலைநிறுத்தவும் தவறவில்லை.

**வேல்ஸ் இணைப்புச் சட்டம்:** தந்தை வழியில் தம் முன்னோர்கள் வேல்ஸ் பகுதியைச் சார்ந்தவர்களாக இருந்ததை மறக்காத இவ்வரசர், அப் பகுதியிலிருந்து வந்த 141 எல்லைப் பிரபுக்களின் (Marcher Lords) நிலமானிய ஆட்சியை முடித்து, கி. பி. 1536 ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட இணைப்புச் சட்டத்தின்படி (Act of Union) வேல்சை இங்கிலாந்துடன் ஐக்கியப்படுத்தினர். வேல்சின் எல்லைப்புறங்கள் இச் சட்டத்தினல் ஐந்து ஷயர்களாகத் திருத்தியமைக்கப்பட்டன. முதன் முறையாக, இங்கிலாந்து பாராளுமன்றத்திற்கு வேல்சிலிருந்து பிரதிநிதிகளும் வரவேற்கப்பட்டனர். தங்களின் வேறுபட்ட மொழிகளுக்கும், கலாச்சாரத்திற்கும் எவ்வித இடையூறும் ஏற்படாத வகையில் ஆங்கிலோ—வெல்ஷ் ஐக்கியம் இவ் வரசரின் காலத்தில் ஏற்பட்டிருந்தது.

**ஐரிஷ் கொள்கை:** அயர்லாந்தைப் பொறுத்தவரையில் எட்டாம் ஹென்றி, தம் தந்தையாரின் கொள்கையினைப் பின்பற்றி, ஆங்கில மேலாதிக்கத்தை அப் பகுதியின்மீது இறுக்கினர். 'பாயினிங்ஸ் சட்டம்' நடைமுறையில் வைக்கப்பட்டிருந்தது. போப்பாண்டவருடன் சச்சரவு மேலிட்டிருந்த காலத்தில், 'மேலாதிக்க பிரபு' (Over Lord) என்ற முறையினை விடுத்து எட்டாம் ஹென்றி, தம்மை 'ஐரிஷ் அரசராகப்' பிரகடனப்படுத்திக் கொண்டார். இங்கிலாந்தில் சமய சீர்திருத்தப் பாராளுமன்றத்தினல் கொண்டு வரப்பட்ட சட்டங்களேயும் அயர்லாந்தில் புகுத்த இவ் வரசர் முயற்சி செய்யவும், இதற்கெதிராகக் கில்டேர் (Kildare) எர்ல் தலைமையில் ஒரு கலகம் எழுந்தது. ஆயினும், இக் கலகம் கடுமையாக அடக்கப்பட்டதுடன், அக் கலகத் தலைவர்களும் கி. பி. 1537 ஆம் ஆண்டில் டைபர்ன் (Tyburn) என்னுமிடத்தில் இராசத் துரோகக் குற்றம் சாட்டப்படுக் கொலையுண்டனர். தம் அதிகாரத்தை ஐரிஷ் திருச்சபையின்மீதும் உறுதிப்படுத்தும் முயற்சியில் எட்டாம் ஹென்றி முழு வெற்றியைப்

பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பிளாடன்ஃபீல்டு சண்டையின் தொடர்ச்சியாக, ஸ்காட்லாந்தைப் பொறுத்த வரையில் எட்டாம் ஹென்றிக்கு விவகாரங்கள் சற்றுச் சிக்க லாகவே இருந்து வந்தது.

**ஸ்காட்டிய விவகாரம்:** தம் சகோதரியின் மகனும், ஸ்காட்டிய அரசருமான ஐந்தாம் ஜேம்ஸ், கி. பி. 1528ஆம் ஆண்டிலேயே கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்த ஃபிரெஞ்சு இளவரசியான மேரி (குயிஸ்) என்பவரை மணந்து கொண்டிருந்தார். இம் மன்னர், ஸ்காட்லாந்தில் ஜான் நாக்ஸ் (John Knox) என்பவரால் புகுத்தப்பட்டிருந்த புராட்டஸ்டன்டு சமயத்தை எதிர்த்தவராக இருந்ததுடன், போப்பாண்டவரை எதிர்த்து இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றி நடத்திய இயக்கத்தையும் ஆதரிக்காதவரா கவும் இருந்தார். இதனால் கோபம் கொண்ட ஆங்கில மன்னர், கி. பி. 1542 ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்துமீது தம் படையினரை ஏவினார். ஸால்வே மாஸ் (Solway Moss) என்னுமிடத்தில் நிகழ்ந்த சண்டையில் ஸ்காட்டியப்படை தோற்கடிக்கப்பட்டு விட்டது. இத் தோல்வியைச் சகிக்க முடியாதவராக மனம் நொந்து, சின்னாட்களில் ஐந்தாம் ஜேம்ஸ் காலமடைந்து விட்டார்.

இவரது அடுத்த வாரிசாக, இளவயதினளான மேரி, ஸ்காட்டிய அரசியாக அறிவிக்கப்பட்டாள். இந் நிலையில் இங்கிலாந்து — ஸ்காட்லாந்து ஆட்சிகளை ஐக்கியப்படுத்தும் முயற்சியில் தம் மகனும், பட்டத்து இளவரசருமான எட்வர்டுக்கும் மேரிக்கும் மணமுடிக்கும் திட்டத்தை எட்டாம் ஹென்றி நினைத்தார். ஆனால், ஸ்காட்டிய கத்தோலிக்கர்களின் தலைவரா யிருந்த கார்டினல் பீட்டன் (Beaton) என்பவரின் தூண்டுதலால், ஸ்காட்டிய பிரபுக்கள் இத் திருமணத் திட்டத்தைப் புறக்கணித்த துடன், ஃபிரெஞ்சுக்காரர்களின் நட்பையும் உறவையும் நாடினர்.

**ஃபிரான்சுடன் போர்;** மேரி, ஃபிரெஞ்சு இளவரசான முதலாம் ஃபிரான்சிசுக்கு நிச்சயமாக்கப்பட்டாள். இதனால் கோபமடைந்த எட்டாம் ஹென்றி, கி. பி. 1543 ஆம் ஆண்டில், ஃபிரெஞ்சுக்கெதிராகப் பேரரசர் ஐந்தாம் சார்லசுடன் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டு போரில் இறங்கினார். தாமே தலைமை தாங்கி நடத்திச் சென்ற படையைக் கொண்டு எட்டாம் ஹென்றி, கி.பி. 1544–ல் பூலோன் நகரைக் கைப்பற்றிப் பாரிசை நோக்கி முன்னேறத் திட்டமிட்டிருந்தார். ஆனால், ஐந்தாம் சார்லஸ் ஃபிரெஞ்சுக் காரர்களுடன் கிரிபி (Crepy) என்னு மிடத்தில் தனியாகச் சமாதானம் செய்துகொண்டிருந்ததை

யொட்டி, ஃபிரெஞ்சுப் போர்களில் மேற்கொண்டு எதையும் செய்ய முடியாது ஆங்கில அரசர் நாடு திரும்பிவிட்டார்.

**நாவாய்க் கொள்கை:** போர்ச் சூழ்நிலை தொடர்ந்து இருந்து வந்த இச் சமயத்தில் ஃபிரெஞ்சுத் தாக்குதல்களிலிருந்து இங்கிலாந்தைக் காக்கும் வகையில் தக்க ஒரு கடற்படை நிறுவப் படவேண்டிய அவசியத்தை எட்டாம் ஹென்றி உணர்ந்தவரானார்.

இதுவே இவ்வரசரின் புகழ் பெற்ற நாவாய்க் கொள்கை (Navel Policy) எனப் பெருமையோடு அழைக்கப்படுகின்றது.

போர்ட்ஸ் மவுத் (Portsmouth), டெப்ட்ஃபோர்டு (Deptford), உல்விச் (Woolwich) என்னுமிடங்களில் கப்பற்கட்டும் தளங்கள் அமைக்கப்பட்டன. கப்பல் கட்டுவதற்குத் தேவைப்படும் பிரத்தியேக மரங்களும் இங்கிலாந்திற்கு வரவழைக்கப்பட்ட துடன், உள் நாட்டிலும் இம் மர இனம் நடப்பட்டது. கப்பற் படையில் வேலை பார்க்கவேண்டிய மாலுமிகளுக்கும் மற்ற பணி யாளர்களுக்கும் பயிற்சி கொடுக்கக்கூடிய நிறுவனங்களுந் தொடங்கப்பட்டன. கப்பற்படை விவகாரங்களைக் கண்காணிக்க ஒரு பிரத்தியேக கூட்டவைச் சங்கமும் (Corporation) டிரினிடி என்னுமிடத்தில் நிறுவப்படடது.

தம் தந்தையாரின் காலத்தில் பெரியதும் சிறியதுமாக இருந்த ஏழு போர்க் கப்பல்களையே கொண்டிருந்த ஆங்கிலக் கப்பற்படை, எட்டாம் ஹென்றியின் காலத்தில் ஐம்பத்து மூன்றுக்கு உயர்ந் திருந்தது. பெரும் பீரங்கிகள் பொருத்தபபட்டிருந்த இப் போர்க் கப்பல்கள், மிக விரைவாகச் செல்லக் கூடியனவாகவும், உறுதியாகக் கட்டப்பட்டனவாகவும் இருந்தன. 1,500 டன் எடையுள்ள 'மகா ஹெர்ரி' (Great Harry) என்னும் போர்க் கப்பலே இவரது கடற் படைக்குக் கொடிக் கப்பலாக விளங்கியது.

எட்டாம் ஹென்றி எதிர்பார்த்தபடியே கி. பி. 1545ஆம் ஆண்டில் இங்கிலாந்தைத் தாக்க ஒரு ஃபிரெஞ்சுக் கப்பற்படை ஏவிவிடப்பட்டது. லிஸ்லி பிரபு (Lord Lisle) என்பவரின் தலைமையில் எதிர்த்துச் சண்டையிட்ட ஆங்கிலக் கப்பற்படை, இங்கிலாந்தின் தென்கரைக்கருகே நடந்த கடற் சண்டையில் ஃபிரெஞ்சுக் கப்பற் படையை நொறுக்கிப் பெருவெற்றி பெற்ற தென்றால், இதற்கு இவ்வரசரின் முன்யோசனையே காரணமாகும்.

ஆங்கில—ஃபிரெஞ்சுப் போருக்கிடையே கி. பி. 1544ஆம் ஆண்டில் ஹென்றியால் அனுப்பப்பட்ட படையொன்று ஸ்காட்லாந்தின் தென்கிழக்குப் பகுதிகளைத் தாக்கி, எடின்பர்க் நகர்வரை முன்னேறியிருந்தது. கார்டினல் பீட்டன் இரகசியமாகக் கொலை செய்யப்படுவதற்கும், எட்டாம் ஹென்றி காரணமானர். ஆங்கில அரசரின் அநுதாபிகள் செயின்ட் ஆண்ட்ரூஸ் என்ற கோட்டையையும் கைப்பற்றிக் கொண்டனர். இந்நிலையில், கி. பி. 1546ஆம் ஆண்டில் ஸ்காட்டியர்கள் ஃபிரெஞ்சுக்காரர்களுடன் சேர்ந்து எட்டாம் ஹென்றியுடன் சமாதானம் மேற்கொண்டனர்.

இங்கிலாந்தை ஆண்ட மன்னர்களுக்குள் காமுகராகவும் காரியவாதியாகவும் உறுதியுள்ளம் கொண்ட ஒரு மன்னராகவும் சுமார் முப்பத்தெட்டு ஆண்டுகள் நாட்டைப் பரிபாலித்துத் தம் உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரக் கொள்கையினல் ஆங்கில வரலாற்றில் மறையாத ஓர் இடத்தைப் பெற்றிருந்த எட்டாம் ஹென்றி, கி. பி. 1547ஆம் ஆண்டு, ஜனவரி 28-ல் காலமானர்.

## ஆரும் எட்வர்டு (கி.பி. 1547—1553)

பாராளுமன்றத்தினல் ஆங்கில வாரிசுரிமையை நிர்ணயிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டதற்கிணங்க எட்டாம் ஹென்றி, தம் கடைசிக் காலத்தில் தயாரித்திருந்த உயிலின் (will) படி, தம் மூன்ரும் மனைவியான ஜேன் செய்மோருக்குப் (Jane Seymour) பிறந்திருந்த எட்வர்டு ஆங்கில அரியணைக்கு அடுத்த வாரிசாகவும், பிள்ளைப்பேறு ஏதுமின்றி எட்வர்டு காலமானல், ஆங்கில வாரிசுரிமை தம் முதல் மனைவி காதரீன் (ஆரகான்) மகளான மேரியை அடைய வேண்டுமென்றும், வாரிசின்றி இவரும் காலமானல், தம் இரண்டாம் மனைவி ஆன் பொலினுக்குப் பிறந்திருந்த எலிசபெத் அவ்வுரிமையைப் பெற வேண்டுமென்றும் ஏற்பாடு செய்திருந்தார்.

எட்டாம் ஹென்றி காலமானதைத் தொடர்ந்து, இவ்வுயிலின் படி, கி.பி. 1547, பிப்ரவரி 28ஆம் நாள் தம் பத்தாவது வயதில் ஆரும் எட்வர்டு பட்டம் பெற்ருர். இவ்வரசர் பாலகப் பருவத்தினராக இருந்தபோதிலும், தம் வயதிற்கு மிஞ்சிய அறிவுக் கூர்மையைப் பெற்றிருந்தார். நற்குணங்களுக்கு ஓர் உறைவிடமாக இருந்த ஆரும் எட்வர்டு, கொள்கைப் பற்றுடையவராகவும் அரசியலில் மிகுந்த அக்கறை கொண்டவராகவும் இருந்தார். இவர் பிறந்து பன்னிரண்டு நாட்களுக்குள்ளாகவே தம் தாயார் ஜேன்

செய்மோர் காலமாகி விட்டிருந்ததால், அந் நாளிலிருந்தே கத்தோலிக்க எதிர்ப்பு மதக் கொள்கையைப் பின்பற்றிய செய்மோர் குடும்பத்தினரால் குறிப்பாக, இவரது தாய்மாமன் எட்வர்டு செய்மோரால் வளர்க்கப்பட்டு வந்திருந்த ஆறும் எட்வர்டின் சமய புரட்சிக் கருத்துகளை ஆதரித்தவராக இருந்தார்.

இளவயதினரான ஆறும் எட்வர்டு, அரச கவுன்சில் கூட்டத்தில் தாம் பட்டத்திற்கு வந்த முதல் ஆண்டிலேயே கலந்து கொண்டு, துணிவுடன் தம் கருத்துகளை எடுத்துச் சொல்லுங் கூடியவராக இருந்திருந்தும் தமக்கு ஆட்சியில் உதவி செய்ய 16 பேர்களடங்கிய பகராட்சிக் குழு ஒன்றை (Regency Council) அமைத்துக் கொண்டார். இக் குழுவின் தலைவராகவும், நாட்டின் காப்பாளராகவும் எட்வர்டு செய்மோர் அமர்த்தப்பட்டார். அரசரின் அபிமானத்தைப் பெற்றிருந்த இவர், சின்னாட்களில் சோமர்செட் என்ற பட்டத்தினையும் கௌரவத்தையும் பெற்றவரானார்.

**சோமர்செட்டின் காப்பாளாட்சி (கி.பி. 1547—1549):** ஓரளவு திறமையும், சிறிதளவு பெருந்தன்மையும் கொண்டவராக சோமர்செட் பிரபு இருந்திருந்தும், பதவி வெறியும், பண ஆசையும் கொண்டவராக இருந்ததால், தொடக்கத்திலிருந்தே தமக்கு நண்பர்களைவிட விரோதிகளையே அதிகமாகப் பெற்றிருந்தார். நாட்டின் காப்பாளராக அதிகாரம் பெற்றிருந்த சோமர்செட் பிரபு, இரு குறிக்கோள்களைக் கொண்டவராக இருந்தார். அரசியல் ரீதியிலே இங்கிலாந்தையும், ஸ்காட்லாந்தையும் இணைக்க வேண்டுமென்பதும், சமய சீர்திருத்தக் கருத்துகளைக் கொள்கையளவில் நாட்டில் புகுத்தவேண்டுமென்பதும் அவ்விரு திட்டங்களாகும்.

**ஸ்காட்டியப் போர்:** ஸ்காட்டியக் கொள்கையினைப் பொறுத்த வரையில், எட்டாம் ஹென்றியின் திருமகன் திருமணத்திட்டத்தைப் பின்பற்றியவராகவே சோமர்செட் பிரபு இருந்தார். அரசர் ஆறும் எட்வர்டுக்கு ஸ்காட்டியப் பாலக அரசி மேரியை மணமுடித்து வைத்து, இவ்விரு நாடுகளையும் ஒரே அரசின்கீழ் இணைக்க வேண்டுமென்று சோமர்செட் விரும்பினார். அங்ஙனம் இவ்விரு நாடுகளும் ஒரே அரசாங்கத்தின்கீழ் இயங்குமானால், தம் பதவியின் அதிகாரங்கள் பெருகுவதோடு, நாட்டில் தம் அரசியல் புகழும் பெருகும் என்ற சுயநலமும் இத் திருமணத் திட்டத்தில் இருந்தது. எட்டாம் ஹென்றியின் காலத்திலேயே இவ்வுடன்பாட்டை நிராகரித்த ஸ்காட்டியர், இப்போதும்,

இத் திட்டத்தை வரவேற்பவர்களாக இல்லை. இங்கிலாந்தில் சிறிது சிறிதாகச் செல்வாக்குப் பெற்றுவரும் பிராட்டஸ்டன்டு இயக்கத்தினால்; தங்கள் நாட்டின் சமய நிலை பாதிக்கப்படலா மென்ற அச்சத்தில் ஸ்காட்டியக் கத்தோலிக்கர்கள் ஆங்கில உறவை அறவே வெறுத்தனர்.

முடிவாக, தம் யோசனைக்கு ஸ்காட்டியர் மறுப்புத் தெரிவித்திருக்கவும், இதனால் வெகுண்ட சோமர்செட் பிரபு 20,000 வீரர்களைக் கொண்ட படையுடன் கி.பி. 1547, செப்டம்பரில் ஸ்காட்லாந்தின்மீது படையெடுத்தார். ஆங்கிலக் கப்பற் படையும் இப் போரில் ஈடுபடுத்தப்பட்டது. ஸ்காட்டியக் காப்பாளரான ஆரான் எர்ல் (Earl of Aarun) என்பவரின் தலைமையில் அனுப்பப்பட்ட ஸ்காட்டியப்படை, எடின்பர்க் நகருக்கு அருகிலிருந்த பிங்கி (Pinkie) என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டது. ஆங்கிலப் படைகளால் தங்களது பாலக அரசிக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படக் கூடாதென நினைத்து, ஸ்காட்டியர் மேரியை வட ஸ்காட்லார்திலிருந்த டம்பார்ட்டன் (Dumbarton) என்னுமிடத்திலிருந்து ஃபிரான்சு நாட்டுக்கு இரகசியமாகக் கப்பலில் அனுப்பிவிட்டனர்.

இச் சண்டையில் சோமர்செட் பிரபு இங்கிலாந்துக்கு வெற்றியைத் தேடிக் கொடுத்திருந்தபோதிலும், இதனால் எவ்வித நற்பலனையும் இந் நாடு பெறவில்லை. ஆயுதப் பலத்தினால் ஸ்காட்டியரைப் பணிய வைத்து, அத் திருமணத் திட்டத்தை நிறைவேற்றத் துடித்த சோமர்செட் பிரவையும், அவர் காப்பாளராக இருந்த இங்கிலாந்தையும், இச் சண்டைக்குப் பின்னர் ஸ்காட்டியர் தம விரோதிகளாகவே பாவித்தனர். ஃபிரான்ஸ் நாட்டில் அடைக்கலம் அடைந்திருந்த ஸ்காட்டிய அரசி மேரி, அங்கேயே வளர்ந்து, பின்னர் கத்தோலிக்கக் காப்பாளரான ஃபிரெஞ்சு இளவரசன் பிரான்சிஸை (கி. பி. 1543—1560) மண முடித்துக் கொண்டார். இத் திருமண உறவினால் ஃபிரெஞ்சு-ஸ்காட்டிய உறவு ஏற்பட்டிருக்க, இங்கிலாந்துக்கு இதனால் பாதகமே ஏற்பட்டது.

இங்ஙனமாக, சோமர்செட் பிரபுவின் ஸ்காட்டியக் கொள்கை இங்கிலாந்தின் அரசியல் நலனுக்கு முரணாகவே அமைந்தது.

**பிராடஸ்டான்டியம் (சமய சீர்திருத்தம் புகுத்தப்படல்) :** அரசியல் துறையிலே எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் தொடங்கி இருந்த கத்தோலிக்க எதிர்ப்பியக்கத்தைக் கொள்கையளவில்

இங்கிலாந்தில் புகுத்த சோமர்செட் பிரபு விழைந்தார். இதற்குச் சமய சீர்திருத்தக் கொள்கையினால் கவரப்பட்டிருந்த ஆறாம் எட்வர்டின் முழு மனதான ஆதரவு இருந்தது.

லாலார்டுகளுக்கு எதிராக முன்பு (நான்காம் ஹென்றியின் காலத்தில்) கொண்டு வரப்பட்டிருந்த சமய விரோதிகளை எரித்தல் சட்டம் ரத்துச் செய்யப்பட்டது. கத்தோலிக்கச் சார்பான கொள்கைகளை வற்புறுத்தி எட்டாம் ஹென்றியின் காலத்தில் கொண்டு வரப்பட்ட 'ஆறு விதிச் சட்டமும்' தள்ளுபடி ஆகியது. தீவிர சமய சீர்திருத்தக் கருத்துகளைக் கொண்டோர்களை அரசத் துரோகிகளாகக் கொலைக்களத்திற்கு, முன்னைய 'ஆட்சி அனுப்பி வைத்த அடக்குமுறைச் சட்டமும் திருத்தபபட்டது.

நாட்டிலுள்ள சமய நிலையங்கள் நிலைமையைக் கண்டறிந்து, அவற்றைப்பற்றி அறிக்கைகளைச் சமர்ப்பிக்கும்படி சோமர்செட் பிரபு சில பிரத்தியேக ஆணையாளர்களைப் பணித்தார். இவர்கள் தாக்கல் செய்த விவரங்களின்மேல் இக் காப்பாளர் தீவிர நடவடிக்கையில் இறங்கினர். கொள்கையளவில் சமய சீர்திருத்தக் கருத்துகள் இங்கிலாந்தில் புகுத்தப்படுவதில் இவரது இச் செய்கையே முதற் கட்டமாக விளங்கியது.

சமய நிலையங்களிலிருந்த சிலைகளையும், சின்னங்களையும் அகற்ற உத்தரவு தரப்பட்டது; பாதிரிமார்கள் திருமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர்.

**வழிபாட்டு ஒருமைச் சட்டம்:** இலத்தீன் மொழியில் ஓதப்பட்ட இறை வணக்கப் பாடல்களுக்குப் பதில், ஆங்கில மொழியில் பிராடஸ்டன்டு பாடல்களை ஓதுமபடி ஆணை யிடப்பட்டது. இப் பிரார்த்தனைப் பாடல்கள் முழுமையாக அமைந்த பொது வழிபாட்டு நூலொன்று கிரான்மரால் தயாரிக்கப் பட்டதால், அதையே எல்லாத் திருக்கோயில்களிலும் பின்பற்ற வேண்டுமென்ற 'வழிபாட்டு ஒருமைச் சட்டம்' (Act of Uniformity) ஒன்றையும் சோமர்செட் பிரபு கொண்டு வந்திருந்தார்.

சமய சீர்திருத்தங்களை எதிர்த்த பல கத்தோலிக்கக் குருமார்களும் பாதிரிமார்களும் தங்கள் பதவிகளிலிருந்து விரட்டப்பட்டதல்லாமல், அப்பொறுப்புகளில் பிராடஸ்டண்டுகள் அமர்த்தப்பட்டனர். சமய சீர்திருத்தக் கருத்துகளைப் போதித்த சமய உரையாளர்கள் (Preachers) ஜெனிவா, ஜூரிச், ஜெர்மனி, இத்தாலி, போலந்து, நெதர்லாந்து, ஃபிரான்சு ஆகிய பகுதிகளி

லிருந்து, இங்கிலாந்தில் அடைக்கலம் கொண்டதால், சோமர்செட் பிரபு இவர்களை ஆதரித்து,ப் பிராடஸ்டண்டு கருத்துகள் நாட்டில் பரவ உதவினர்.

**சமய நிலையங்கள் அபகரிப்பு :** சமய பாடல்களைப் பாடுவதற்கும், பிராத்தனை செய்வதற்கும் கத்தோலிக்கசமயத்தினர் கூடுமிடங்களாகச் சான்ட்ரிஸ் (Chantries) எனப்படும் ஒரு நிலையங்கள் நாட்டிலே நூற்றுக்கணக்கில் இருக்க, கி.பி. 1548 ஆம் ஆண்டில் இவரது வற்புறுத்தலால் கொண்டு வரப்பட்ட ஒரு சட்டத்தின்படி ஒழிக்கப்பட்டன. கத்தோலிக்கச் சமய சார்பில் நாட்டிலிருந்து வந்த வாணிகச் சங்கங்களின் (இலண்டன் நீங்கலாக) சொத்துகளும், கல்வி நிலையங்களின் (சர்வகலாசாலைகள், ஈடன், வின்செஸ்டர் கல்லூரிகள் நீங்கலாக) சொத்துகளும் பறிமுதல் செய்யப்பட்டு, இவரால் அரசுடைமையாக்கப்பட்டன. நாட்டிலிருந்த கத்தோலிக்க குருமார்களின் மானியங்களும் பிடுங்கப்பட்டன. இங்ஙனம் பறிமுதல் செய்யப்பட்ட சொத்துகளைச் சோமர்செட் பிரபுவும் மற்ற பிராடஸ்டன்டு தலைவர்களும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர்.

இக் காப்பாளரின் காலத்தில் கொண்டு வரப்பட்ட ஆணைகளாலும், மாற்றங்களாலும், சட்டங்களாலும் இங்கிலாந்தில் சிறுகச்சிறுகப் பிராடஸ்டன்டு சமயம் வேரூன்ற ஆரம்பித்து விட்டது.

**சோமர்செட் பிரபுவின் வீழ்ச்சி :** ஸ்காட்டியக் கொள்கையில் தம் அவசரச் செய்கையால் நாட்டு மக்களின் அபிமானத்தை ஓரளவு இழந்த சோமர்செட் பிரபு, தம் தீவிரச் சமய சீர்திருத்த கொள்கையால் நாட்டிலிருந்த கத்தோலிக்கர்களின் கோபத்திற்கும் இலக்காகியிருந்தார். டெவான், கார்ன்வால், வேல்ஸ் ஆகிய பகுதிகளிலும் அயர்லாந்திலும் கத்தோலிக்கர்கள் சோமர்செட்டின் காப்பாளர் ஆட்சியை எதிர்த்துக் கலகங்களில் ஈடுபட்டனர். இக் கலகங்கள் எளிதாக அடக்கப்பட்டதெனினும், இவரது அரசியல் விரோதிகள் இவற்றைப் பயன்படுத்திச் சோமர்செட் பிரபுவுக்கு எதிரான காரியங்களில் இறங்கினர். இவர்களில் இருவர் குறிப்பிடத்தக்கவராவர். இவரது உடன் பிறந்தவரும், ஆங்கிலக் கப்பற்படையின் தலைவருமான செய்மோர் பிரபு, பல பிரபுக்களைத் தம் பக்கம் சேர்த்துக் கொண்டு, சோமர்செட்டைக் காப்பாளர் பதவியிலிருந்து விரட்ட முயன்றார். ஆயினும், இம் முயற்சி பலிக்கவில்லை; மாறாக, செய்மோர் பிரபு பிடிபட்டுப் பின் மரண தண்டனை அடைந்தார்.

சோமர் செட்டின் மற்ருேர் அரசியல் எதிரியாக டட்லி (Dudley) எனப்பட்ட வார்விக் பிரபு இருந்து வந்தார். திறமையும், சாதுர்யமும் கொண்டவராக இருந்த டட்லி சோமர் செட் அதிகாரத்தைக் கவிழ்க்கத் தகுந்த காலத்தை எதிர் நோக்கியவராக இருக்க, நார்ஃபோக்கில் கெட் (Ket) என்பாரின் தலைமையில் ஒரு மாபெருங் கலகம் தோன்றியது. இதுவே சோமர் செட் பிரபுவின் காப்பாளர் ஆட்சியை முடித்து வைத்தது.

**கெட்டின் கலகம் :** மடாலயங்களின் சொத்துகள் பிடுங்கப் பட்ட காலத்திலிருந்து, குருமார்களின் மானியங்களைப் பறிமுதல் செய்யப்பட்டது வரை, அவ்வுடைமைகள் பல பெருந்தனக்காரர் களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. இப் புதிய பிரபுகள் தங்களுக் களிக்கப்பட்ட நிலங்களை வேலியிட்டு அடைத்துவிட்டதால், சிறு பண்ணையாளர்கள் (Yeomen class) தங்கள் நிலங்களை விற்றுப் பராரிகள் ஆக வேண்டியிருந்தது. இலாபத்தைக் கருதிச் சில பிரபுக்கள் விவசாய (பண்ணை) நிலங்களை ஆடு வளர்ப்புக்காக மேய்ச்சல் நிலங்களாக மாற்றியதால், பல விவசாயிகள் வேலையிழந்தவர்களாக இருந்தனர். இக் குறைகளை விபரமாகக் கேட்டறிந்து தகுந்த நிவாரணச் செயல்களை மேற்கொள்ள நினைத்த சோமர்செட் பிரபு, கி. பி. 1549 ஆம் ஆண்டு ஓர் ஆணையாளர் குழுவினை அமர்த்தியிருந்தபோதிலும், நிலப் பிரபுக்கள் செல்வாக்குப் பெற்றிருந்த ஆங்கிலப் பாராளுமன்றம், அக் குழு சுதந்திரமாகச் செயல்படுவதற்கே முட்டுக்கட்டையாக இருந்தது. அரசாங்கம் பரிகாரம் எதுவும் செய்ய இயலாது இருந்த இந்த நிலையில், நாட்டிலே ஏழ்மையும் வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகமாயிற்று. மடாலயங்கள் ஏற்கெனவே ஒழிக்கப்பட்டிருந்ததால், இப் பாமரர்களும் வறியவர்களும் எவ்வித உதவியும் எங்கிருந்தும் பெற முடியாதவர்களாக வாடினர். சோதனைகள் தொடர்ந்து வருவதற்கேற்ப, வானம் பொய்த்த தால், நாட்டிலே இங்கும் அங்குமாகப் பஞ்சம், பட்டினி தலை காட்டத் தொடங்கின. அரசாங்கத்தின் திறமையற்ற பொருளா தாரக் கொள்கையினால் நாட்டில் விலைவாசி உயர்வு பயங்கரமாக எழுந்தது. இதனால் ஏழை, எளிய மக்களே மிகவும் பாதிக்கப் பட்டனர்.

கிளௌசெஸ்ட்டர், டோர்செட் பகுதிகளில் அதிருப்தி கொண்ட மக்கள் கலகங்களில் இறங்கியிருந்த இவ் வேளையில் இராபர்ட் கெட் என்பவரின் தலைமையில் நார்ஃபோக்கில் ஒரு பயங்கரச் சூழ்நிலை ஏற்பட்டது. இக் கலகத் தலைவரை அடக்க அரசினரால் அனுப்பப்பட்ட படையும் கெட்டின் தலைமையில்

கலகம் செய்தவர்களால் மௌஸ்ஹொல்டு (Mousehold) என்னு மிடத்தில் தோற்கடிக்கப்பட்டது.

நார்விச் நகரம் கலக்காரர்களால் பிடிப்பட்டுவிட்டது. இக் கலகத்தைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள எண்ணி, பிங்கி தோல்விக்குப் பழிதீர்ப்பதுபோல் ஸ்காட்டியர்கள் இதே ஆண்டு ஆகஸ்டு மாதம் ஃபிரெஞ்சுக்காரர்களின் உதவி யைக் கொண்டு இங்கிலாந்தின்மீது போர் தொடுத்தனர்.

உள்நாட்டுக் கலகத்தாலும், ஸ்காட்டியப் படையெடுப்பாலும் அரசின் கௌரவம் பாதிக்கப்பட்டதால், சோமர்செட் பிரபுவின் திறமையில் நம்பிக்கையை இழந்த அரச கவுன்சில், நிலைமையைச் சமாளிக்க ஜான் டட்லி என்ற வார்விக் ஏர்லுக்குப் படைத் தலைமையைக் கொடுத்தது. மிகுந்த சிரமத்துடன் டட்லி, அக் கலகக்காரர்களை ஒடுக்கி, கெட்டைச் சிறைப்பிடித்தார். பின்னர், இக் கலகத் தலைவர் தூக்கிவிடப்பட்டார்; ஸ்காட்டியப் படை யெடுப்பும் முறியடிக்கப்பட்டது. பறிமுதல் செய்யப்பட்ட கத்தோலிக்க சமய நிலையங்களின் சொத்துகளைத் தம் சுய தேவைக்குச் சோமர்செட் பிரபு எடுத்துக் கையாண்டு இருந்த தைப் பொறுக்காத கவுன்சிலின் அங்கத்தினர்கள், இச் சந்தர்ப் பத்தைப் பயன்படுத்தி, அவரைக் காப்பாளர் பதவியிலிருந்து நீக்கிச் சிறைக்கு அனுப்பினர்.

நல்லதையே நினைத்திருந்தும் தம் அவசரச் செயல்களாலும் அதிகாரச் செருக்கினாலும பொருளாசையாலும் தமக்குக் கேடுதலைத் தேடிக்கொண்ட சோமர்செட், கி.பி. 1549 அக்டோபரில் பதவியிழந்ததையொட்டி, ஜான் டட்லி நாட்டின் புதிய காப்பாள ராக நியமனம் பெற்றார்.

**நார்த்தம்பர்லாந்து பிரபுவின் ஆதிக்கம் (கி.பி. 1549-1553) :** அரசரின் அபிமானத்தைப் பெற்றிருந்த ஜான் டட்லி, தமக்குக் காப்பாளருக்குரிய அதிகாரங்களுடன் நார்த்தம்பர்லாந்து பிரபு (Duke of Northumberland) என்ற புதிய பட்டமொன்றையும் பெற்றார். சோமர்செட் பிரபுவின் காலத்தையும் விஞ்சும்படியாக இவரது பதவிக் காலத்திலேயே சமய சீர்திருத்தம் இங்கிலாந்தில் வேகமாகப் பரவியது.

பிராடஸ்டன்டு சமயத்தில் இவருக்கு மிகுந்த நம்பிக்கை இருந்ததென்பது ஐயத்திற்குரியது எனினும், நாட்டிலிருந்த சமய சீர்திருத்தக்காரர்களின் நல்லாதரவைப் பெறுவதற்கும், கத்தோலிக்க சமய நிலையங்களின் சொத்துகளை அபகரிக்கவுமே

நார்த்தம்பர்லாந்து பிரபு, இங்கிலாந்தில் பிராடஸ்டன்டியத்தைப் பரப்ப முனைந்தார்.

### தீவிரப் பிராடஸ்டண்டு கொள்கை

கத்தோலிக்கக் கோயில்களில் இருந்த பிரார்த்தனைப் பீடங்கள் (Altars) இடிக்கப்பட்டன; திருவுருவங்கள் பதிக்கப்பட்ட வண்ணச் சாளரங்கள் அகற்றப்பட்டன. கத்தோலிக்கத் திருக்கோயில்களிலிருந்து தங்கத்தினாலும், வெள்ளியினாலும் செய்யப் பட்ட சிலுவைகள், மெழுகுவர்த்தி நிலைத்தாங்கிகள் மற்ற பிரார்த்தனைப் பொருள்கள் அபகரிக்கப்பட்டன. புதிய சமய சீர்திருத்தக் கருத்துகளை ஏற்றுக்கொள்ள மறுத்த பல கத்தோலிக்க மதகுருமார்கள் தத்தம் பதவிகளிலிருந்து விரட்டியடிக்கப்பட்டனர். பிஷப்புக்களின் மானிய நிலங்களும் பிடுங்கப்பட்டன. கார்டினர் (Gardiner), போனர் (Bonner), ஹீத் (Heath), டே (Day) என்பார்கள் உள்பட, இவ்வேறுபாடுகளை எதிர்த்த சில கத்தோலிக்க பிஷப்புகள் தண்டிக்கப்பட்டனர்.

பிராடஸ்டன்டு கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்த ஜான் ஹூப்பர் (John Hooper) என்பவர் கிளஸ்ட்டருக்கும் மைல்ஸ் கவர்டேல் (Miles Coverdale) என்பவர், எக்ஸிடருக்கும் நிக்கோலஸ் ரிட்லி (Nicholas Ridley) என்பவர், இலண்டனுக்கும் ஹியுலாட்டிமர் (Huqu Latimer) என்பவர், வொர்செஸ்டருக்கும் பிஷப்புகளாக அமர்த்தப்பட்டனர்.

புதிய சமய கொள்கைகள் எடுத்தோதப்பட்டு மக்களின் மத மாற்றத்திற்கு அடிகோலப்பட்டது. சமய சாத்திரங்களைக் கோயில்களில் போதிக்க வேண்டுமென்றும், சமய அறங்களைக் குருமார்கள் வழிபடுவோர்களுக்கு எடுத்துரைக்க வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது.

கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த சான்ட்ரிகள், கில்டுகள் மற்ற சமய நிலையங்களின் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. இங்ஙனம் பறிமுதல் செய்யப்பட்ட சொத்துகளின் பெரும் பகுதியைத் தங்கள் சுய தேவைக்கு நார்த்தம்பர்லாந்து பிரபுவும், இவரது ஏனைய நண்பர்களும் எடுத்துக் கையாண்டிருந்த போதிலும், இச் செல்வத்தின் ஒரு பகுதி நற்பணிகளுக்கும் செலவிடப்பட்டது. ஏழை எளியோருக்கு உதவும்படியாகச் சில தான தர்ம காரியங்களுடன், அரசர் எட்வர்டின் பெயரில் பல புதிய இலக்கணப் பள்ளிகள் (Grammar Schools) நாட்டிலே

நிறுவப்பட்டன. இக் கல்விக்கூடங்களில் சமய சீர்திருத்தக் கருத்துகள் போதிக்கப்பட, இவையே பிராடஸ்டன்டு சமயத்தின் ஆணி வேர்களாக வருங்காலத்தில் விளங்கின.

வெளி நாடுகளிலிருந்து இங்கிலாந்துக்கு அடைக்கலம் தேடி வந்திருந்த பிராடஸ்டன்டு சமய போதகர்களுக்கு ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகளில் வேலை வாய்ப்புகள் தரப் படவே, இவர்கள் தங்கள் தீவிரப் பிரச்சாரத்தால் புதிய மதத் தைப் பரப்பலாயினர்.

முற்றிலும் பிராடஸ்டன்டு சமய கருத்துகளைக் கொண்டிருந்த புதிய பிரார்த்தனை நூல்கள் வெளியிடப்பட்டதோடன்றி, இந் நூல்களையே எல்லாக் கோயில்களிலும் பின்பற்ற வேண்டுமென்ற ஒரே விதமான வழிபாட்டுமுறையை (Act of Uniformity) வற்புறுத்தும் சட்டமும் கொண்டுவரப்பட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக, பிராடஸ்டண்டு சமயத்தின் அடிப்படைச் சாராம்சமாக கி. பி. 1553-ல் 'நாற்பத்திரண்டு விதிகள்' (Forty Two Articles) என்ற கோட்பாடுகள் வெளியிடப்பட்டன.

இங்ஙனமாக, நார்த்தம்பர்லாந்து பிரபுவின் ஆதிக்கத்தில் ஆங்கில சமயபுரட்சி, கொள்கையளவிலும் புரட்சிகரமாகவும் மாறியிருந்தது.

**ஆறும் எட்வர்டின் மரணம்:** என்றைக்குமே நல்ல உடல் நலம் பெற்றிராத அரசர் ஆறும் எட்வர்டு, ஆட்சிப் பளுவினல் மேலும் ஆரோக்கியம் இழந்து காலமடைந்துவிட்டால், தம் பதவியும் அதிகாரமும் பறிபோய் விடுமென்ற பயத்தில் நார்த் தம்பர்லாந்து ஒரு புதிய வாரிசுரிமைக்கு வழி செய்ய முற்பட்டார்.

ஆறும் எட்வர்டுக்குப் பின், ஆங்கில அரசுரிமையை நியாய மாகப் பெற வேண்டியது இவ் வரசரின் தமக்கையான மேரி யெனினும், இவர் கத்தோலிக்கச் சமயத்தைச் சார்ந்தவராதலால், ஆட்சிக்குதவாதவளென்றும் சமய பற்றில்லாமல் இருந்த இன்னெரு தமக்கை எலிசபெத்தும் ஒதுக்கப்பட வேண்டுமென்றும் நார்த்தம்பர்லாந்து பிரபு மன்னரிடம் எடுத்துரைக்க, சீர்திருத்தச் சமயத்தில் மிகுந்த அக்கறை கொண்டிருந்த அரசரும் இதற்கு ஒப்புக் கொண்டவராகி, ஒரு வாரிசு உயிலைத் தயாரித்தார். இவ்வுயிலின்படி, அடுத்த வாரிசுரிமை தம் அத்தையின் பேத்தியும் நார்த்தம்பர்லாந்து பிரபுவின் மருமகளுமான ஜேன் கிரேசீமாட்டிக்குத் (Lady Jane Grey) தரப்பட வேண்டுமென ஏற்பாடாகியது.




ஆரும் எட்வர்டு காலமானலும், தாம் தொடர்ந்து பதவியி லிருக்க வேண்டிய், சீமாட்டி ஜேன் கிரேயைத் தம் மகனை கில்டு போர்டு டட்லிக்கு மணம் செய்வித்து இவளேயே அரசியாக்க நார்த்தம்பர்லாந்து திட்டமிட்டிருந்தார். கவுன்சிலும், ஆரும் எட்வர்டின் உயிலை வற்புறுத்தப்பட்ட நிலையில் ஏற்றுக்கொண்டது. தம் கடமையை முடித்துவிட்ட நிம்மதியில், ஏற்கெனவே உடல் நலம் மிகவும் கெட்டிருந்த ஆரும் எட்வர்டு, தம் பதினுருவது வயதில் கி. பி. 1553, ஜூன் 6 ஆம் நாளில் காலமாகி விட்டார்.

'ஆண்டவனே! போப்பின் சமயத்திலிருந்து இந் நாட்டை விடுவித்து, உண்மையான (பிராடஸ்டன்டு) சமயத்தைக் காத்தருள்' என்பதே இவ் வரசரின் கடைசி விருப்பமாக இருந்தது.

**நார்த்தம்பர்லாந்து பிரபுவின் வீழ்ச்சி:** ஆரும் எட்வர்டு காலமானதும், அவரால் தயாரிக்கப்பட்ட உயிலின்படி, நார்த் தம்பர்லாந்து பிரபு, தம் மருமகளாகிய ஜேன் கிரே சீமாட்டியை அரசியென அறிவித்தார். அரச பதவிக்குப் போட்டியிடுவதில் உள்ள இன்னல்களே நன்குணர்ந்திருந்த இச் சீமாட்டிக்கு நாட்டின் அரசியாக வேண்டுமென்ற எண்ணம் இல்லையெனினும், நார்த்தம்பர்லாந்தின் வற்புறுத்தலுக்கிணங்கியே ஜேன் கிரே இந்த ஏற்பாட்டை ஒப்புக்கொண்டிருந்தார். ஆனல், இதே சமயத்தில் எட்டாம் ஹென்றியின் உயிலின்படி, ஆரும் எட்வர்டுக்குப் பிறகு, வாரிசுரிமையைப் பெறவேண்டியிருந்த மேரி, தமக்குச் சாதகமாக நாட்டின் கிழக்குப் பகுதிகளில் ஆதரவாளர் களைச் சேர்த்துக்கொண்டிருந்தார். இதனைக் கேள்வியுற்ற நார்த்தம்பர்லாந்து பிரபு, தம் படையினருடன் இலண்டன் நகரை விட்டு அகன்றிருக்க, கவுன்சிலின் பெரும்பான்மை அங்கத்தினர்கள், மேரி (டியூடரின்) உரிமையை ஆதரித்து அறிக்கை விட்டனர்

நாட்டு மக்களின் விருப்பமும் இதுவாகவே இருந்தது. இராணுவத்தினரும், கப்பற்படையினரும் மேரிக்கு விசுவாசம் காட்ட முன் வந்தனர். தமக்கு வெகுவாக ஆதரவு பெருகி வந்த இச் சூழ்நிலையில் மேரி, மக்களின் ஆனந்த ஆரவாரத்திற்கிடையே இலண்டன் நகருக்குள் நுழைந்து தமக்குரிய வாரிசு உரிமையைப் பெற்றார். நிலைமை மிஞ்சி விட்டதை உணர்ந்த நார்த்தம்பர்லாந்து சரண் அடையவும், மேரியின் ஆணையால் சிறைப்படுத்தப்பட்டார்.

இங்கிலாந்தில் சீர்திருத்த மதம் வேரூன்றுவதற்குக் காரணமாக இருந்த மன்னர் ஆறும் எட்வர்டு, இளவயதிலேயே காலமடையவும், இதற்குப் பெருந்துணையாக இருந்த நார்த்தம்பர்லாந்து பிரபுவும் சிறைப்படுத்தப்பட்டிருக்க, கத்தோலிக்க சமயத்தில் பற்றுக்கொண்ட மேரி வாரிசுரிமை அடைந்ததால், சமீப காலத்தில் தொடங்கியிருந்த சமய சீர்திருத்த இயக்கம் குன்றிப் போகக்கூடிய நிலைமை ஏற்பட்டது.

## மேரி டியூடர் (கி.பி. 1553 - 1558)

இங்கிலாந்தை ஆண்ட முதல் பெண் அரசியான மேரி (டியூடர்), தம் முப்பத்தாறுவது வயதில், தம் பிறப்புரிமையால் ஆங்கில வாரிசை அடைந்திருந்தார்.

**குணவியல்புகள்:** தம் தாயார் காதரீனுக்கு (ஆரகான்) தம் இளம் பருவத்தில் தந்தை எட்டாம் ஹென்றியால் இழைக்கப்பட்ட எண்ணற்ற துன்பங்கள் மேரியின் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்ததால், அதன் விளைவாக இரக்கமற்ற தன்மையினை இவ்வரசியார் கற்றுக்கொண்டவராக இருந்தார். கவர்ச்சி குன்றியவராகவும் மிதமான திறமை கொண்டவராகவும் இருந்த மேரி, கத்தோலிக்க சமயத்தில் பெரிதும் நாட்டமுடையவராக இருந்தார். எளிமையையும் தூய்மையையும் சுய வாழ்க்கையிலே பெரிதும் போற்றிய மேரி அரசியார், தம்மை ஒரு சமய சேவகியாகவும் பாவித்துக் கொண்டார். கத்தோலிக்க சமயம் இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றியின் காலத்திலிருந்து இழந்திருந்த செல்வாக்கையும் சிறப்பையும் மீண்டும் பெறவேண்டுமென்பதே இவர் வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளாக அமைந்தது. இவரது ஐந்தாண்டு ஆட்சிக்காலமும் இதையே பிரதிபலிப்பதாக இருந்தது.

**சமய சீர்திருத்த எதிர்ப்பு இயக்கம்:** முந்திய ஆட்சியில் சமய சீர்திருத்தங்களைப் புகுத்துவதில் மிகவும் தீவிரம் காட்டியவரும் தம் கத்தோலிக்க சமயபற்றினைக் காரணம் காட்டித் தம்மை

ஆங்கில வாரிசுரிமைக்கு அருகதையற்றவராக்க முயன்றவருமான நார்த்தம்பர்லாந்தைக் கொலைக்களத்திற்கு அனுப்பியதே மேரி அரசி செய்த முதற் காரியமாக இருந்தது. கொள்கையில் கோழைத்தனம் கொண்டவராக இருந்த நார்த்தம்பர்லாந்து, தாம் உண்மையில் கத்தோலிக்க மதத்திலேயே நம்பிக்கை வைத்திருப்ப தாகக் கொலைக்களத்தில் புலம்பியிருந்தும் தண்டனை நிறுத்தப் படவில்லை.

தம் தாயார் காதரீன் மணவிலக்கு (illegitimate) அடைந்திருந்ததற்கும் சட்டப்பூர்வமற்ற இளவரசியாகத் தாம் இளவபதில் ஸ்பெயினில் அடைக்கல வாழ்வு நடத்தி வந்திருந்ததற்கும் இச் சமய சீர்திருத்தக்காரர்களின் துர்ப்போதனையே காரணமெனத் திடமாக நம்பிய மேரி அரசிக்குக் கத்தோலிக்க மதத்தில் தீவிரப் பற்றுக் கொண்டிருந்த பாதிரிமார்களே ஆலோசகர்களாகவும், உரிய நண்பர்களாகவும் இருந்ததால், தம ஆட்சிக் காலத்தில் மீண்டும் இங்கிலாந்தை ரோமானிய கத்தோலிக்க நாடாக மாற்றிவிட வேண்டுமென இவ் வரசியார் தீர்மானித்ததால், இதன் விளைவாக இந் நாட்டில் சமய சீர்திருத்த எதிர்ப்பியக்கம் (Counter Reformation) செயல்படுத்தப்பட்டது.

**பிராட்டஸ்டன்டுகள் நீக்கப்படல்:** சீர்திருத்தக் கருத்துகளின் கருவூலமாக இருந்த தாமஸ் கிரான்மரைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப பதவியிலிருந்து மேரி நீக்கியதிலிருந்து, இங்கிலாந்தில் கத்தோலிக்க இயக்கம் மீட்கப்பட முயற்சி செய்யப்பட்டது

தம் சகோதரர் (ஆறும் எட்வர்டு) ஆட்சிக் காலத்திலிருந்து, சமய சீர்திருத்தத்தின் கருத்துகளை எதிர்த்ததால், சிறைத் தண்டனை அனுபவித்து வந்த கார்டினர், போன்னர் ஆகியோரும் விடுதலையடைந்து, வின்செஸ்டர் பிரப்புகளாக மீண்டும் பதவி பெற்றனர். முந்திய ஆட்சியில் பிஷப்புகளாக அமர்த்தப் பட்டிருந்த பிராடஸ்டென்டுகளான ஜான் ஹூப்பர், நிக்கோலஸ், ரிட்லி, ஹியு லாட்டிமார் ஆகியோர் பதவி நீக்கம் அடைந்ததோடு சிறைக்கும் இவ்வரசியாரால் அனுப்பப்பட்டனர்.

**சமய எதிர்ப்புச் சட்டங்கள் மாற்றப்படல்:** மேரியினால் கூட்டப்பட்டிருந்த முதல் பாராளுமன்றம், இவருடைய பிறப்பு மணவினைக்குப் புறம்பானது என முந்திய ஆட்சிக் காலத்தில் கூறப்பட்டிருந்ததை மறுத்துச் சட்டமியற்றியது. இதே பாராளுமன்றம், முந்திய ஆட்சியில் இயற்றப்பட்டிருந்த சமய தொடர்புள்ள சட்டங்கள் அத்தனையையும் மேரி அரசியாரின்

வற்புறுத்தலின் பேரில் மாற்றியது. பிராடஸ்டன்டு கருத்துகளைக் கொண்டிருந்த பிரார்த்தனை நூல்கள் தடை செய்யப்பட்டன; ஒரு வழிபாட்டு முறைச் சட்டம் ரத்தானது. இலத்தீன் மொழியில் போதிக்கப்பட்ட கத்தோலிக்க வழிபாட்டுச் சுவடி (Liturgy) மீண்டும் வழக்கத்திற்குக் கொண்டு வரப்பட்டது. கத்தோலிக்க சடங்கு முறைகள், பழக்கவழக்கங்கள், தொழுகை ஆசாரங்கள் ஆகியன மீண்டும் புகுத்தப்பட்டன.

இங்ஙனமாக, கத்தோலிக்கச் சமயத்தில் மிகுந்த பற்றும் நம்பிக்கையும் கொண்டிருந்த மேரி அரசியார், இங்கிலாந்தில் சமய சீர்திருத்த எதிர்ப்பியக்கத்தை நடத்தலானார்.

**அரசியாரின் ஸ்பானிய மணஉறவு:** வருங்காலத்தில் அரசியல் நெருக்கடியைத் தவிர்ப்பதற்காக மேரி அரசியாரைத் திருமணம் செய்து கொள்ளுமாறு பாராளுமன்றம் வற்புறுத்தி வந்த வேளையில், இவ்வரசியாரின் மாமன் மகனை பேரரசர் ஐந்தாம் சார்லஸ், கத்தோலிக்க சமயத்தை மறுபடியும் இங்கிலாந்தில் பரப்ப எண்ணங் கொண்டவராகத் தம் மகனும், வாரிசுமான ஃபிலிப்பையே இவர் மணந்துகொளள வேண்டுமென்று விரும்பினார். இத் திருமண உறவுத் திட்டத்தினால் இங்கிலாந்தில் ஸ்பானிய ஆதிக்கம் ஏற்பட்டு விடுமோ எனற அச்சமான சூழ்நிலை ஏற்பட்டது. ஃபிரென்சுத் தூதுவரான டி நோயிலிஸ் (De Noailles) என்பவரும் இத் திருமணத்திட்டத்திற்கெதிராக வெறுப்பு உணர்ச்சியைக் கிளறி விட்டார். கத்தோலிக்கரான அமைச்சர் கார்டினரும் இத் திருமணத்திட்டத்தை ஒப்புக் கொள்ளாதவராக அரசியார் தம் தூர உறவினரும், ஆங்கிலேயருமான எட்வர்டு கோர்ட்டினே (நான்காம் எட்வர்டின் கொள்ளுப் பேரர்) என்பவரை மணந்துகொள்ள வேண்டுமென்ற யோசனையைத் தெரிவித்தார். கத்தோலிக்கரான ஃபிலிப்பை மணந்து கொண்டால், புதிய பலம் பெற்றவராக இன்னும் ஊக்கத்துடன் தாம் விரும்பிய கத்தோலிக்க சமயத்தை இங்கிலாந்தில் இன்னும் தீவிரமாகப் பரப்ப முடியுமென நம்பியே மேரி, ஸ்பானிய திருமண உறவை விரும்பினார்.

ஏற்கெனவே, இவ் வரசியாரின் சமய கொள்கையினால் கசப்புணர்ச்சி கொண்டிருந்த மக்களில் சிலர், இத் திருமணத் திட்டத்தினால் மேலும் கொதிப்படைந்ததால், இதன் விளைவாக நாட்டிலே கலகங்கள் ஏற்பட்டன.

**சப்போக் பிரபுவின் தலைமையில் மத்தியப் பகுதியில் (Midlands) தொடங்கிய கலகமும், டெவான்ஷயரில் கேரிவ்**

(Carew) என்பாரின் தூண்டுதலால் ஏற்பட்டிருந்த இன்னொரு கலகமும் அடக்கப்பட்டுவிட்டதெனினும், கென்ட் பகுதியில் தோன்றிய கலகமே, மேரியின் ஆட்சியைச் சற்று கதிகலங்கச் செய்தது.

**தாமஸ் வையட் (Wyatt) கலகம்:** அரசியாரின் கத்தோலிக்க சார்பான கொள்கைகளை எதிர்த்தும், குறிப்பாக, ஸ்பானிய திருமணத் திட்டத்தை வெறுத்தும் கி.பி. 1554ஆம் ஆண்டு ஜனவரியில் சர். தாமஸ் வையட் என்பவர், தம் ஆதரவாளர்களுடன் மேரிக்கு எதிராகக் கென்டில் கலகக் கொடியை உயர்த்தினார். மேரியைப் பட்டத்திலிருந்து விலக்கி, அவரது ஒன்றுவிட்ட சகோதரியான (Half-sister) எலிசபெத்தை அரியணையில் அமர்த்துவதே வையாட்டின் நோக்கமாக இருந்தது. தம் கென்ட் ஆதரவாளர்களுடன் இலண்டனை நெருங்கிக் கொண்டிருந்த தாமஸ் வையாட்டுக்கு, மேற்கொண்டு ஆள்பலம் சேர்ந்ததால், அரசியாரின் நிலைமை ஆபத்தாகவே இருந்தது.

அரசியார், தம் தற்காப்பைக் கருதி இலண்டன் நகரைவிட்டு வெளியேற வேண்டுமென்ற யோசனையும் தெரிவிக்கப்பட்டது. ஆயினும், மனத்திடங் கொண்ட மேரி அரசி, இலண்டன் மாநகர் மக்களைக் கில்டு ஹால் (Guild Hall) என்னுமிடத்தில் சந்தித்துப் பாராளுமன்றத்தின் சம்மதமில்லாமல் தாம ஃபிலிப்பை மணந்து கொள்ளப் போவதில்லையெனவும், ஆகவே மக்கள் தமக்கு விசுவாசமாக இருக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டதற்கிணங்க, இலண்டன் நகரை அடைந்துவிட்ட தாமஸ் வையாட்டுக்கும் ஆதரவு குறையலாயிற்று. இலண்டன் பாலத்தைக் கைப்பற்றும் முயற்சியில் தோல்வியடைந்து, கிங்ஸ்டனுக்கு அருகே தேம்ஸ் நதியைக் கடந்து லூட்கேட் ஹில் (Ludgate Hill) வரை முன்னேறியிருந்த வையாட்டும் அவரது ஆதரவாளர்களும் அரசியாரின் படைகளால் தோற்கடிக்கப்பட்டனர்.

இக் கலகம் அடக்கப்பட்டதைத் தொடர்ந்து, தாமஸ் வையாட் கொலைக்களத்திற்கு அனுப்பப்பட்டார். இதுநாள் வரை சிறையிலடைபட்டிருந்தவளும், முன்பு சில நாட்கள் பெயரளவுக்கு இங்கிலாந்தின் அரசியாகவும், பிராடஸ்டன்டு சமயத்தைச் சார்ந்தவளாகவும், பதினெட்டு வயதே நிரம்பப் பெற்றவளாகவும் இருந்த சீமாட்டி ஜேன் கிரேயும், (நார்த்தம்பர்லாந்து பிரபுவின் மருமகள்) இவளது கணவரான கில்டுபோர்டு டட்லியும், இச் சந்தர்ப்பத்தில் கொலைத் தண்டனை அடைந்தனர். இக் கலகத்தில் பங்கு கொண்டிருந்தாரென்ற சந்தேகத்தில்

எலிசபெத்தையும் சில நாட்கள் மேரி சிறையிலடைத்தார். ஸ்பானியத் தூதுவர் தம் பேரரசரின் சார்பில் எப்படியாவது எலிசபெத்தைத் தொலைக்க வேண்டுமென்றே விரும்பினர். ஆனல், இவ்வரசியின் மீது சாட்டப்பட்ட சதிக்குற்றம் நிரூபணம் செய்யப்பட முடியாத நிலையில், கார்டினர் யோசனையின்பேரில் மேரி இவரை விடுவித்திருந்தாள். இக் கலகங்கள் அடக்கப்பட்ட நிலையில் சற்றுத் தன்னம்பிக்கைக் கொண்டிருந்த மேரி, அடுத்துத் தம் விருப்பம்போல் நடந்துகொள்ள முற்பட்டார்.

**ஸ்பானியத் திருமணம் :** தம் சொந்த வாழ்க்கையில் பெருத்த ஏமாற்றத்தையும் நாட்டு மக்களிடையே அதிருப்தியையும் வெறுப்பையும் வருங்காலத்தில் உண்டாக்கப்போகும் இத் திருமணத்தை மேரி தானகவே தேடிக்கொண்டார். சமய காரணங்களுக்காகப் ஃபிலிப்புடன் திருமண உறவை நாடிய இவ்வரசியார், பாராளுமன்றத்தை வற்புறுத்தி அதற்கான சம்மதத்தைப் பெற்றிருந்தார். ஸ்பானியப் பேரரசின் வாரிசாகவும், தீவிரக் கத்தோலிக்கராகவும் இருந்துவந்த ஃபிலிப்பை அதுவரை மேரி கண்டிராதவராக இருந்தும், ஒரு தலைப்பட்சக் காதலைக் கொண்டு திருமணத்திற்குத் தம் இசைவை இறுதியாகத் தந்ததால், இவ்வரசர் கி.பி. 1554ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் இங்கிலாந்தை வந்தடைந்தார். கத்தோலிக்க சடங்குகளின் படி மேரிக்கும் ஃபிலிப்புக்கும் வின்செஸ்டர் திருக்கோயிலில் கார்டினர் தலைமையில் திருமணம் நடந்தேறியது.

இத் திருமணத்தின்போது நான்கு நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருந்தன. இங்கிலாந்தின் ஆட்சிப்பொறுப்பு முழுவதும் மேரியரசியாரிடமே இருக்கவேண்டுமென்றும், அரசியார் இங்கிலாந்தை விட்டு (ஸ்பெயினுக்கு) அகலக்கூடாதென்றும், அந்நியர்களை (ஸ்பானியர்களை) டைவையில் சேர்க்கக்கூடாதென்றும், ஸ்பெயினின் சார்பில் ஐரோப்பியப் போர்களிலே அரசியார் இங்கிலாந்தை ஈடுபடுத்தக் கூடாதென்றும், கார்டினரின் யோசனையின் பேரில் பாராளுமன்றத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது. இவ் வேற்பாடுகள் இங்கிலாந்தில் ஸ்பானிய ஆதிக்கம் ஏற்படாமல் தடுத்ததெனினும் மேரியின் திருமண வாழ்விற்கு எவ்விதப் பயனையும் கொடுத்ததாக இல்லை.

கத்தோலிக்க சமயத்தை மேம்பாடு அடையச்செய்ய வேண்டுமென்ற இந்த ஒரே ஒற்றுமையைத் தவிர, மேரிக்கும் ஃபிலிப்புக்கும் வேறு எந்தப் பிணைப்பும் இருந்ததாக இல்லை. மேரியைக் காட்டிலும் பதினேராண்டு இளையவராக இருந்த ஃபிலிப், ஆங்கில ஆட்சியை

விரும்பியே இவ் வரசியாரை மணந்து கொண்டிருந்தார். இயல்பாகவே இறுமாப்புக்கொண்டவராக இருந்த ஃபிலிப், பாராளுமன்றத்தினல் திணிக்கப்பட்ட கட்டுப்பாடுகளால் வெகுண்டதோடு, அழகில் குறைந்தவராக இருந்த மேரியையும் சில நாட்களுக்குள் வெறுக்க ஆரம்பித்துவிட்டார். அரசியார், தம் மணவாழ்க்கையில் அடைந்த ஏமாற்றம், அவரது மனத்தை வாட்டியதோடு பெண்மைக்கே உரிய இரக்க உணர்ச்சியையும் அகற்றிவிட்டது. இதன் விளைவாகவே மேரி அரசியார், தம் சமய கொள்கையில் கடுமையைக் காட்டத் தொடங்கினர்.

**மேரியின் தீவிர சமய கொள்கை:** ஸ்பானியத் திருமண உறவினல் கத்தோலிக்கத் தலைமைப் பீடமான ரோமாபுரியுடன் நெருங்கிய தொடர்பை மட்டும் தமக்கு ஒரு சாதகமான விளைவாகக் கொண்டிருந்த மேரி அரசியார், இங்கிலாந்தை மீண்டும் போப்பாண்டவரின் சமய ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டுவர முனைந்தார். இவரது வேண்டுகோளின்படி, போப்பாண்டவரான மூன்றும் ஜூலியஸ் (Julius III) தாம் முன்பு சமயப் பிரதிநிதியாக எட்டாம் ஹென்றியால் நாடுகடத்தப் பட்டிருந்த கார்டினல் ரெஜினல்டு போல் (Cardinal Reginald pole) என்பவரை கி. பி. 1555 நவம்பரில் இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார்.

முன்பு எட்டாம் ஹென்றியின் காலத்தில் கார்டினல்போல் மீது சுமத்தப் பட்டிருந்த துரோகச் சட்டத்தை ரத்து செய்யும்படி மேரி கேட்டுக் கொண்டதற்கிணங்க, இவரது மூன்றும் பாராளுமன்றம் அதை நிறைவேற்றி வைத்தது. இங்கிலாந்தை அடைந்திருந்த கார்டினல்போல், பெருந்தன்மை கொண்டவராகப் போப்பாண்டவரின் ஆதிக்கத்தை எதிர்த்து, முந்திய ஆட்சிகளில் ஆங்கிலப் பாராளுமன்றமும் அரசாங்கமும் செய்திருந்த பாவங்களை எல்லாம் மன்னித்து விட்டதாக அறிவித்தார்.

கார்டினல்போலின் ஆசியைப் பெற்றிருந்த இப் பாராளுமன்றம் போப்பாண்டவருக் கெதிராக எட்டாம் ஹென்றியின் காலத்தில் கொண்டுவரப்பட்ட சட்டங்களையும் ஆதிக்கச் சட்டத்தையும் மேரியின் விருப்பத்திற்கிணங்க ரத்துச் செய்தது.

கத்தோலிக்க விதிமுறைகளை மீறித் திருமணம் செய்து கொண்டிருந்த 2 000 பாதிரிமார்களை அரசியாரின் வற்புறுத்தலின் படி இம்மன்றம் பதவி நீக்கம் செய்தது.

ஆறும் எட்வர்டு காலத்தில் வெளியிடப்பட்டிருந்த பிராடஸ்டன்டு கருத்துகளடங்கிய நாற்பத்திரண்டு விதிகள் தள்ளுபடி செய்யப்பட்டுக் கத்தோலிக்க கொள்கைகளை

வற்புறுத்திய எட்டாம் ஹென்றியின் 'ஆறு விதிகள்' அமுலாக்கப் பட்டது. ஆயினும், அரசியாரும், கார்டினலும் கேட்டுக்கொண்டிருந்தும், அபகரிக்கப்பட்ட கத்தோலிக்க சமய நிலையங்களின் சொத்துகளைத் திருப்பி ஒப்படைக்க இம் மன்றம் மறுத்துவிட்டதென்பது குறிப்பிடத்தக்கது.

ஆரும் எட்வர்டு காலத்தில் சோமர்செட் பிரபுவால் தள்ளுபடி செய்யப்பட்ட 'சமய விரோதிகளை எரித்தல் சட்டம்' மீண்டும் இம் மன்றத்தினுல் கொணரப்பட்டது.

இச் சட்டத்தைக் கொண்டு கத்தோலிக்க சமயத்தில் தமக்கிருந்த ஈடுபாட்டைப் படுகொலைகள் மூலம் மேரி அரசியார் காட்டத் தொடங்கினர்.

**பிராடஸ்டன்டுகளின் தியாக மரணம்:** மேரி அரசியார், தம் ஆட்சியின் கடைசி நான்கு ஆண்டுகளில், சமயத்தின் பெயரால் செய்திருந்த படுகொலைகள் இவரது ஆட்சியைக் கறைப்படுத்தியிருந்ததுடன், 'இரத்த வெறி பிடித்த மேரி' (Bloody Mary) என்ற அவப் பெயரையும் பிராடஸ்டன்டுகளிடையே தேடிக்கொடுத்தது. சமயத்தின் பெயரால் கத்தோலிக்க அரசுகள் பிராடஸ்டன்டுகளையும், பிராடஸ்டன்டு அரசுகள் கத்தோலிக்கர்களையும் படுகொலை செய்து வந்த பதினரும் நூற்ருண்டில், மேரியின் செய்கை அக் கால மரபின்படி பெருங் குற்றமாகக் கருதப்படுவதற்கு இல்லை.

கத்தோலிக்க வழிபாட்டை ஒப்புக்கொள்ள மறுத்தவர்களை 'சமய பகைவர்கள்' எனக் குற்றம் சாட்டி, 'டி ஹெரிடிகோ கேம்புருண்டோ' என்ற சட்டத்தின்படி மேரியின் அரசாங்கம் தண்டித்தது. இங்ஙனம் மரண தண்டனை அடைந்தவர்களில் விவிலியத்தை இலத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருந்த ஜான் ரோஜர்ஸ் (John Rogers) என்பவரே முதல் பலி அடைந்தவராஞர். பிராடஸ்டன்டு பிஷப்புகளான ஹூப்பர், லாட்டிமர், ரிட்லி, ஃபெர்ரர் டெய்லர் (Ferrar Taylor) ஆகியோர் ஆக்ஸ்ஃபோர்டு நகரில் கொலைத் தண்டனையைப் பெற்றனர். சமூகத்தின் பல நிலைகளிலிருந்து ஆண்களும் பெண்களுமாக காண்டர்பரி, இலண்டன், நார்விச், சிச்செஸ்டர், மேலும் உள்நாட்டுக் கோட்டங்களைச் சார்ந்த 300 பேர் சமய விரோதிகளாகக் கொல்லப்பட்டனர். இவர்களில் பலர் ஸ்மித் ஃபீல்டு (Smith-field) என்னுமிடத்தில் உயிரோடு எரிக்கப்பட்டனர்; ஃஸ்மித் பீல்டு ஒரு மயானக் காடாகக் காட்சியளித்தது; இங்ஙனம், உயிரோடு எரிக்கப்பட்டவர்களில் தாமஸ் கிரான்மர் குறிப்பிடத்தக்கவர் ஆவார்.

**கிரான்மர் கொல்லப்படல்:** எட்டாம் ஹென்றியின் காலத்தில் தம் தாயார் காதரீனுக்கு மணவிலக்குக் கொடுத்த தாமஸ் கிரான்மரை ஆர்ச் பிஷப் பதவியிலிருந்து, மேரி அரசியார் ஏற்கெனவே நீக்கியிருந்ததன்றி, தாம் இதுவரை பின்பற்றி வந்த சமய சீர்திருத்தக் கொள்கை தவறானதென்று இவரை மறுப் பளிக்கவும் செய்தார்.

உயிரோடு எரிக்கப்படும் மரண தண்டனைக்கு மேரியால் உள்ளாக்கப்பட்ட தாமஸ் கிராமன்மர், சாவையும் துணிவுடன் ஏற்ருர்; எந்த ஒரு வலக்கை, சமீபகாலத்தில் கொள்கை மறுப்புப் பத்திரங்களில் கையெழுத்திட்டதோ, அதையே கிரான்மர் முதலில் நெருப்பில் காட்டி பொசுக்கிக் கொண்டார். "உண்மைச் சமயத்தைத் துறந்ததாக எழுதித்தந்த இக் கை முதலில் சாகட்டும். இயேசுபிரானே, என்னுடைய ஆவியைப் பெற்றுக்கொள்" என்ற கடைசி வாசகத்துடன் இவரது உயிர் பிரிந்தது.

திடமான சமய கொள்கையினைக் கொண்டிராத கிரான்மர், இதுவரை, ஆறு முறைகள் எழுத்துமூலமாகவும் வாய்ச் சொல்லாகவும் தம்முடைய பிராடஸ்டன்டு கொள்கை தவறான தென்று பின்வாங்கியிருந்தார்; இருப்பினும், சிறையிலடைக்கப் பட்ட கிரான்மருக்கு மேரி விடுதலை அளிக்க மறுத்து வந்தார். கி. பி. 1556 ஆம் ஆண்டு அக்டோபர் 21-ல் ஆக்ஸ்ஃபோர்டிலிருந்த செயின்ட் மேரி திருக்கோயிலில், பிரார்த்தனைக்காக வந்திருந்த பலர் முன்னிலையில், மீண்டுமொருமுறை தம் கொள்கை மறுப்பைப் பகிரங்கமாகச் சொல்லும்படி கிரான்மர் வற்புறுத்தப்பட்டார். அரசியாரின் கருணையை எதிர்பார்த்து ஏமாற்றமடைந்த கிரான்மர், தமக்கு எப்படியும் மரண தண்டனை தப்பாது என உணர்ந்தவராக, மேடையில் ஏறித் தாம் சீர்திருத்தக் கருத்து களையே ஏற்றுக்கொண்டவரென்றும், கட்டாயப்படுத்தப்பட்ட சூழ்நிலையிலேயே தாம் முன்பு கொள்கை மறுப்புக் கொடுத்திருந்த தாகவும் துணிவுடன் எடுத்துக் கூறினர். கிரான்மரின் இந்த இறுதிக் காலத்து கொள்கைத் தீவிரமே இவரது உடினடிக் கொலைத் தண்டனைக்குக் காரணமாயிற்று.

**விளைவுகள்;** கத்தோலிக்க சமயத்தை மறுபடியும் நாட்டில் மலரச் செய்யும் முயற்சியில், மேரி பல சமய சீர்திருத்தக் காரர்களைக் கொடுமைப்படுத்திக் கொலை செய்ததால், அப் புனிதத் தியாகிகள் சிந்திய இரத்தம் பிராடஸ்டன்டு இயக்கம் இங்கிலாந்தில் மேலும் வளர்வதற்கான உரமாகவே அமைந்தது. மேரியின் தண்டனையிலிருந்து தப்பித்துக்கொள்ள, பல பிராடஸ்

டன்டுகள் நாட்டை விட்டும் வெளியேறினர்கள். இவர்களில் 'தியாகிகள் வரலாறு' (Book of the Martyrs) என்னும் அரும்நூலை எழுதிய ஜான் பாக்ஸ் (John Fox) என்பவரும் ஒருவராவர்.

மேரியின் இக் கொடூரக் கொள்கை நாட்டு மக்களிடையே கத்தோலிக்க சமயத்தின்மீது வெறுப்பை வளர்த்துவிட்டது. திருமணமாகிச் சென்றதிலிருந்து வராமலிருந்து, கி.பி. 1557-ல் இங்கிலாந்துக்கு வருகை புரிந்திருந்த 'கத்தோலிக்க சமயத்தின் காவலரென'த் தம்மைச் சொல்லிக் கொண்ட இரண்டாம் ஃபிலிப்பும் இக் காலத்தில் மேரியினல் பின்பற்றப்பட்டு வந்த தீவிர சமயக்கொள்கையிலிருந்த கொடுமையைச் சுட்டிக் காட்டினர். ஆண்டொன்றுக்கு 90 பேர்கள் சமய காரணத்திற்காக, மேரியின் கோபத்திற்கு இலக்காகியிருந்தனர். கணவரால் புறக்கணிக்கப்பட்டவராக இருந்த இவ் வரசிக்கு மகப்பேறு எதுவும் இல்லாதிருந்த குறையும் பெரிதாக இருக்கவும், வாழ்க்கையில் விரக்தி அடைந்திருந்த மேரி, தம் பயங்கர சமய வெறியை மாற்றிக் கொள்ளவில்லை.

**மேரியின் வெளிநாட்டுக் கொள்கை:** இவ் வரசியாரின் கணவரும் பேரரசர் ஐந்தாம் சார்லஸின் வாரிசும், ஸ்பானிய அரசருமான இரண்டாம் ஃபிலிப் கி.பி. 1557-ல் இத்தாலியில் முழு ஆதிக்கம் பெறுவதற்காக ஃபிரெஞ்சு மன்னர் இரண்டாம் ஃபிரான்சிசுடன் போர் தொடுத்திருந்தார். அன்றைய போப்பாண்டவரான நான்காம் பால் (Paul IV) என்பவரின் பிறப்பிடமான நேப்பிள்சை இரண்டாம் பிலிப் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டதால், போப்பாண்டவர் ஸ்பானிய அரசரைச் சமய விலக்குச் செய்திருந்தார். கத்தோலிக்க மதத்தில் அசையாத நம்பிக்கை கொண்டிருந்த மேரிக்குத் தம் கணவர் போப்பாண்டவரால் இங்ஙனம் தண்டிக்கப்பட்டதால் பெருத்த கவலை உண்டாகியிருந்தது. இதே சமயத்தில், இவரது ஆட்சிக்கெதிராக நாட்டில் ஃபிரெஞ்சுக்காரர்களும் சதிகள் சில செய்து வந்ததாலும் மேரிக்குக் கோபம் மேலிட்டிருந்தது.

**கலே இழப்பு:** இதன் விளைவாக, மேரி அரசியார் இங்கிலாந்தைப் போப்பாண்டவரின் உதவி பெற்றிருந்த ஃபிரான்சுக் கெதிராகப் போரில் ஈடுபடுத்தினர். பெம்புரோக் எர்ல்லின் தலைமையில் அனுப்பப்பட்ட 7,000 ஆங்கில வீரர்கள், எமானுவல் ஃபிலிபெர்ட் (Emmanuel Philipert) என்ற ஸ்பானிய தளபதியின் படைகளுடன் சேர்ந்து, இதே ஆண்டு ஆகஸ்டு 10ஆம்

நாளில் ஃபிரெஞ்சுப் படைகளைச் செயின்ட் குயென்டின் என்னு மிடத்தில் தோற்கடித்து வெற்றி கண்டனர். எனினும், குயிஸ் பிரபுவின் (Guise) கீழ் பெரும்படை கொண்டு சில மாதங்கள் கழித்து எதிர்த் தாக்குதல்களைத் தொடங்கிய ஃபிரெஞ்சுக் காரர்கள் கி. பி. 1558 ஜனவரியில் ஆங்கிலேயர்களுக்குப் ஃபிரான் சிலிருந்த ஒரே உடைமையான கலே நகரத்தைத் திடீரெனத் தாக்கிக் கைப்பற்றிக் கொண்டனர்.

நூறுண்டுப் போரின் ஆங்கில வெற்றிக்கு ஒரே காரணமாக இருந்து வந்த கலே நகரம் இழக்கப்பட்டது, மேரிக்கு பெருத்த அதிர்ச்சியாக இருந்தது.

கலே இழப்பிற்குப் பின், சில மாதங்களே மேரி அரசியார் உயிர் வாழ்ந்திருந்தார். டியூடர் மரபுக்கே உரித்தாக இருந்த தேச பக்தியையும், இனப் பெருமையையும் கொணடிருந்த மேரி தாம் இறக்கும் தருவாயில் தமது இருதயம் திறக்கப்பட்டுப் பார்க்கபபடுமாளுல் கலே என்ற எழுத்துகளே அதில் பதிந்திருக்கும் என அடிக்கடி சொல்லிக் கொண்டார். திருமண வாழ்விலும் சமய கொள்கையிலும் வெளி விவகாரத்திலும் ஏமாற்றங்களையே சந்தித்த மேரி அரசியார், கி.பி. 1558 நவம்பர் 17ஆம் நாளில் காலமாகி விட்டார்.

சுய வாழ்வில் தூய்மையானவராகவும், அரசியல் வாழ்வில் நேர்மையானவராகவும் இருந்திருந்தும், மிகத் தவருன அறிவுரைகளைக் கேட்டு அறிவு மயக்கம் கொண்டிருந்த மேரி, இதனுல், தம் வாழ்க்கையைமட்டுமன்றி, ஆட்சிக் காலத்தையும் ஒரு துன்ப இயலாக ஆக்கிக்கொண்டார்.

# 11. டியூடர்கள் ஆட்சி (தொடர்ச்சி)

## முதலாம் எலிசபெத் (கி.பி. 1558 - 1603)

எட்டாம் ஹென்றியின் இரண்டாம் மனைவியான ஆன் பொலீனுக்குப் பிறந்திருந்த எலிசபெத் (Elizabeth), தம் ஒன்றுவிட்ட மூத்த சகோதரியான மேரி டியூடர் பிள்ளைப்பேறின்றி காலமாகி விட்டதை யொட்டி, பாராளுமன்றத்தாலும் அரச கவுன்சிலாலும் இங்கிலாந்தின் அரசியாக அறிவிக்கப்பட்டார். கி.பி. 1558-நவம்பர் 24ஆம் நாளில் இலண்டன் மாநகருக்குள் எலிசபெத் தம் பட்டத்தைப் பெறுவதற்கு வருகை தந்தபோது, அந் நகரமக்கள் பெருமகிழ்ச்சியோடு வரவேற்கப்பட்டதிலிருந்து, நாட்டு மக்களிடையே இவர் பெற்றிருந்த நன்மதிப்பு தெரிபவரும். தம்மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைப் பொய்யாக்காத வகையில், தம் ஆட்சிக்காலத்தில் எலிசபெத் இங்கிலாந்திற்குப் பல வகைகளில் பெருமை தேடிக் கொடுத்தவரானார்.

**குணவியல்புகள் :** தம் இருபத்தைந்தாவது வயதில் பட்டம் பெற்ற எலிசபெத், அரசியல் கலையிலே தேர்ச்சி பெற்றவராக இருந்தார். இக் கலைக்குத் தேவையான மன உரமும், பரந்த மனப்பான்மையும், ஏமாற்று வித்தையும் இவ்வரசிக்கு இருந்த தோடல்லாமல், ஆதிக்க ஆசையும் அதை நிறைவேற்றத்தக்க உறுதியான குறிக்கோளும் இவரிடம் இருந்தன. தந்தை எட்டாம் ஹென்றியின் கொடிய உள்ளத்தையும், தாய் ஆன் பொலீனின் சாகசப் பண்புகளையும் ஒருங்கே பெற்றிருந்த எலிசபெத், தாம் எண்ணியதை முடித்துக்கொள்ளும் இயல்பினராகவும் அதற்குத் தடையாயிருந்தவர்களை ஒழித்துக்கட்டும் குணமுடையவராகவும் இருந்தார்.

தம் பேச்சாலும், தோற்றத்தாலும் பிறரைக் கவரும் திறன் கொண்டிருந்த இவ் வரசியார், மனத்தில் உள்ளாழம் கொண்டவராகவும் இருந்தார். இவ் வரசியாரை மற்றவர்கள் புரிந்து கொண்டார்களென்பதைவிட, இவரே அடுத்தவர்களை அதிகமாகத் தெரிந்துகொண்டாரென்பதே மிகப் பொருத்தமாகும். உதட்டில் ஒன்றுபேசி, உள்ளத்தில் ஒன்று நினைத்துக் கபட வேடதாரியாக

இருந்த எலிசபெத், விட்டுக்கொடுக்கும் நேரத்தில் பணிந்து, தம் அதிகாரத்தை வெளிக்காட்ட வேண்டிய நேரத்தில் ஆரவார மிட்டுத் தாம் நினைத்ததைச் சாதிக்கும் தனித்திறமையைக் கொண் டிருந்தார்.

**எலிசபெத்தின் திருச்சபை ஏற்பாடு** (Church Settlement): இவ்வரசியாரின் ஆட்சிக்காலத்திலேயே ஆங்கிலேய சமயப் புரட்சியின் நான்காவது கட்டத்தைக் காணமுடிகிறது.

போப்பாண்டவரின் ஆதிக்கத்திற்கெதிராக எட்டாம் ஹென்றி யின் காலத்தில் இங்கிலாந்தில் தோன்றியிருந்த சமயபுரட்சி, ஆறும் எட்வர்டு காலத்தில் மதசீர்திருத்தமாக மாறி, மேரி அரசியார் காலத்தில் ஓரளவு நசுக்கப்பட்டதின் விளைவாக முன்னை விடத் தீவிரமடைந்து, இவ் வரசியாரின் காலத்தில் ஒரு நிரந்தர சமய ஏற்பாடாக இறுதிக் கட்டத்தை அடைந்தது.

எலிசபெத் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றபோது, இங்கிலாந் தில் கத்தோலிக்கரென்றும், பிராடஸ்டென்டுகள் என்றும் இரு சமய பிரிவுகள் ஒன்றுக்கொன்று எதிராக இயங்கி வந்தன. இங்கிலாந்தின் கிழக்கு, தெற்குப் பகுதிகளில் பிராடஸ்டன்டு களும், மேற்கு, வடக்குப் பகுதிகளில் கத்தோலிக்கர்களும் செல் வாக்கைப் பெற்றிருந்தனர். இங்கிலாந்திலிருந்த மக்கள் பிராடஸ் டன்டுகள் என்றும், கத்தோலிக்கர்கள் என்றும் வேறுபட்டு நிற்காமல் ஒற்றுமையுடன் ஆங்கிலேயர்களாகச் சேர்ந்து செயல் படவேண்டுமென்று நினைத்த இவ் வரசிக்கு எந்த சமய பிரிவி லும் ஆழ்ந்த பற்று இல்லை. தமக்குச் சமயத்தில் ஓரளவு பற்று இருந்ததாக எலிசபெத் காட்டிக் கொண்டாரெனின், அது மக்களைக் கவர்ந்து நாட்டின் ஒற்றுமையைக் காக்க கடமைப்பட்டிருந்த இவ் வரசியாரால் கையாளப்பட்ட அரசியல் தந்திரமே யாகும்.

நாட்டின் ஒற்றுமையையும் அமைதியையும் காத்து இங்கிலாந்தைப் பல துறைகளில் முன்னேற்றமடையச் செய்து, சர்வதேச அரசியலில் தம் நாட்டுக்கு ஒரு சிறப்பான தனி இடத்தைத் தேடிக் கொடுக்க விரும்பிய எலிசபெத் அரசியாருக்கு, தம் முந்திய இரு ஆட்சிகளில் பின்பற்றப்பட்ட சமயக்கொள்கையின் விளைவுகள் நன்கு தெரிந்திருந்தது. ஆறும் எட்வர்டு காலத்தில் கையாளப்பட்ட சமய சீர்திருத்தக் கொள்கையினால், எங்ஙனம் மக்களில் ஒரு சாரார் தொல்லைகளுக்குட்பட்டிருந்தனர் என்ப தையும், மேரி டியூடர் காலத்தில் வற்புறுத்தப்பட்ட சமய சீர்திருத்த எதிர்ப்புக் கொள்கையினால் எவ்வாறு மக்களின்

இன்னொரு பிரிவினர் தொல்லைகள் அடைந்தனர் என்பதையும் நன்கு புரிந்து கொண்டிருந்த எலிசபெத், அவ்விரு தீவிர சமய கொள்கைகளும் அந்தந்த ஆட்சியாளர்களுக்குத் தாங்கள் எதிர்பார்த்த முழுபலனையோ, வெற்றியையோ கொடுத்திருக்க வில்லையென்பதையும் தெரிந்து வைத்திருந்தார்.

தம் தந்தை எட்டாம் ஹென்றியின் காலத்தில், போப்பாண்டவரின் ஆதிக்கம் நீங்கலாகப் பின்பற்றப்பட்ட கத்தோலிக்க சார்பாளர் கொள்கை இவ் வரசியாருக்கு ஓரளவு பொருத்தமாகப் பட்டிருந்தும், காலமாற்றம் அதைப் பின்பற்ற முடியாதபடி செய்திருந்ததையும் எலிசபெத் உணர்ந்திருந்தார்.

தமக்குப் போட்டியாக, ஆங்கில வாரிசுரிமையைக் கோரி வந்த ஸ்காட்டிய அரசி மேரியும், தமக்கெதிரான செயல்களில் ஈடுபட்டு வந்த ஸ்பானிய அரசரான இரண்டாம் ஃபிலிப்பும் தீவிர கத்தோலிக்கர்களாக இருக்க, தம் பட்டத்தைக் காத்துக்கொள்ள ஆங்கில பிராடஸ்டன்டுகளின் அபிமானத்தையே இவ் வரசியார் பெறவேண்டியிருந்தது. மேரி டியூடரின் காலத்தில் பின்பற்றப்பட்ட தீவிர சமய சீர்திருத்த எதிர்ப்புக் கொள்கையினல், நசுக்கப் பட்டிருக்கவேண்டிய பிராடஸ்டன்டியம் இன்னும் தீவிரமாக நாட்டில் பரவியிருந்த வேளையில், அவ் வரசியாரால் நாடுகடத்தப் பட்டிருந்த பல பிராடஸ்டன்டுகள் இப்போது நாடு திரும்ப ஆரம்பித்தனர். இவர்கள் தம் ஆட்சிக்கு உறுதுணையாக இருப்பார்களென்றும் எலிசபெத் நம்பினர். அரசியல் காரணத்திற்காகச் சீர்திருத்தமடைந்த மதத்தினை ஆதரிக்க முன் வந்த எலிசபெத் இதே சமயத்தில், நாட்டு கத்தோலிக்கர்களின் மனமும் புண்படாத வகையில் தம் சமய கொள்கையினை அமைத்துக் கொண்டார்.

ஆகவே, எந்தவொரு சமயப் பிரிவினரின் சார்பிலும் தீவிரமாக ஈடுபடாமல், நாட்டின் நன்மையினைக் கருதி நடுவழிக் கொள்கையைப் பின்பற்ற விரும்பிய எலிசபெத், தம் முயற்சியால் இங்கிலாந்தில் இரு பிரிவினரும் ஒப்புக்கொள்வதற்கேற்ப, ஒரு தேசியத் திருச்சபையை உருவாக்கவே எண்ணினர்.

சோமர்செட் பிரபுவின் (ஆரும்எட்வர்டின் காலம்) காரிய தரிசியாகச் சமய சீர்திருத்த இயக்கத்தில் பங்கு கொண்டிருந்த வரும், சூழ்நிலையினல் உந்தப்பட்டு மேரி டியூடர் காலத்தில் கத்தோலிக்கச் சார்பாளராகவும் இருந்த வில்லியம் செசில் (William Cecil) அரசியாரின் கண்ணோட்டத்தையே கொண்டு,

எலிசபெத்தின் சமயக் கொள்கைகளுக்குப் பெரிதும் உதவியாக இருந்தார்.

**திருச்சபை ஏற்பாட்டின் அம்சங்கள்:** ஆட்சியாளர் எம் மத பிரிவினைச் சேர்ந்தவராக இருந்தாரோ, நாடும் அதையே பின்பற்ற வேண்டிய அவசியத்தில் இருந்தது. இக் கூற்று, எட்டாம் ஹென்றியின் காலத்திலிருந்தே இங்கிலாந்திற்குப் பொருந்தி இருந்தது. அக் காலத்திலிருந்தே ஆங்கிலப் பாராளுமன்றமும் தத்தம் சமய கொள்கையினை ஆட்சியாளர்கள் பின்பற்றுவதற்கு உறுதுணையாகவும் இருந்து வந்தது. இந்த நியதியிலிருந்து எலசபெத் காலமும் விதிவிலக்கானதாக இல்லை.

எட்டாம் ஹென்றியின் காலத்தில் போப்பாண்டவரை எதிர்த்த ஆங்கிலப் பாராளுமன்றம், ஆரும் எட்வர்டு காலத்தில் பிராட்டஸ்டன்டியத்தையும், மேரி டியூடர் காலத்தில் கத்தோலிக்கத் தையும் ஆதரித்திருந்தது. எலிசபெத் அரசியார் காலத்தில் இவர் வேண்டியதை நிறைவேற்றும் கருவியாக இதே ஆங்கிலப் பாராளுமன்றம் செயல்பட்டது.

கி.பி. 1559ஆம் ஆண்டில் இவ் வரசியாரால் கூட்டப் பட்ட பாராளுமன்றம் எலிசபெத்தின் விருப்பத்திற்கிணங்க, முந்திய ஆட்சியில் (மேரி டியூடர்) கொண்டுவரப்பட்ட கத்தோலிக்க சார்பான சட்டங்களையெல்லாம் ரத்து செய்தது.

மேற்கொண்டு இதே ஆண்டில், 'ஆதிக்கச் சட்டம்', (Act of Supremacy) ஒன்றையும் இயற்றும்படி எலிசபெத் அரசியாரால் இம் மன்றம் கேட்டுக்கொள்ளப்பட்டது. இதன்படி, போப்பாண்டவருக்கு இங்கிலாந்தில் யாதொரு சமய ஆதிக்கமும் இல்லையெனத் திருச்சபையோர்களும், லௌகீகர்களும் உறுதிமொழி தரவேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். நாட்டின் அரசியலிலும் சமய விவகாரங்களிலும் தம் ஆதிக்கத்திற்கெதிராக எந்தவொரு ஆதிக்கமும் இருக்க முடியாதென்பதற்கும் இச் சட்டம் விளக்கவுரையாக இருந்தது. சமயம், அரசியல் தொடர்புள்ள விவகாரங்களில் முழு அதிகாரம் செலுத்தக்கூடிய உரிமையையும், அதனை எதிர்ப்பவர்களைத் தண்டிக்கும் உரிமையையும் இச் சட்டம் எலிசபெத் அரசியாருக்கு அளித்தது. தம் சமய அதிகாரத்தை ஒப்புக்கொள்ளாத ஆங்கில கத்தோலிக்கர்களை ஒடுக்கும் நோக்கத்தில் இச் சட்டத்தை இவ் வரசியார் இயற்றியிருந்தும் முடிந்தவரையில் அவர்களின் ஆதரவையும்பெற முயன்றார்.

தம் தந்தை எட்டாம் ஹென்றியினுல் ஆங்கில அரசர்களுக்கு உரித்தாக்கப்பட்டிருந்த, 'ஆங்கிலத் திருச்சபையின் மாபெரும் தலைவர்' (Supreme Head) என்ற பட்டத்தை உதறி, 'சமய விவகாரங்களின் மாபெரும் பிரதிநிதி' (Supreme Governoress) என்ற பட்டத்தையே எலிசபெத் ஏற்றுக்கொண்டார். ஆண்ட வரையும் அவரது பிரதிநிதியாகக் கருதப்பட்ட போப்பாண்டவரைத் தவிர, வேறு எவரும் சமயத்திற்கு, 'மாபெரும் தலைவராக' இருக்க முடியாதெனவும், இருக்கக்கூடாதெனவும் குரல் கொடுத்துவந்த தீவிரக் கத்தோலிக்கர்களைச் சமாதானப் படுத்தவே, இவ்வரசியார் இப் பட்ட மாற்றத்தைச் செய்திருந்தார்.

அரசின் கீழ்ப் பணியாற்றும் யாவரும் குறிப்பாக, நீதிபதிகள், நகரத் தந்தையர் (Mayors) போன்ருேர் தமக்கு விசுவாசப் பிரமாணம் செய்து தரவேண்டுமென் ஆதிக்கச் சட்டத்தினுல் வற்புறுத்திய இம் மகாராணியார், கி.பி. 1552ஆம் ஆண்டில் ஆரும் எட்வர்டால் வெளியிடப்பட்டு இருந்த இரண்டாம் பிரார்த்தனை நூலை (Second prayer book) சில மாற்றங்களுடன் வெளியிடச் செய்தார். பிராட்டஸ்டன்டு கருத்துக்களைக் கொண்டிருந்த இந் நூலிலிருந்து, மிகத் தீவிரமான கோட்பாடுகள் இப்போது செய்யப்பட்ட மாற்றங்களால் விலக்கப்பட்டிருந்தன. கத்தோலிக்கர்களின் மனம் அதிகமாகப் புண்படக்கூடாதெனவே இம் மாற்றங்கள் செய்யப்பட்டன. திருத்தப்பட்ட இப் பிரார்த்தனை நூலையே நாட்டிலுள்ள எல்லாச் சமய நிலையங்களிலும் பின்பற்ற வேண்டுமென அறிவித்த ஒருமைச் சட்டமொன்றும் (Act of Uniformity) இதே ஆண்டில் கொண்டுவரப்பட்டது.

ஆதிக்கச் சட்டமும், ஒருமைச் சட்டமுமே எலிசபெத் அரசியாரால் செய்யப்படப் போகும் திருச்சபை ஏற்பாட்டுக்கு அடித்தளங்களாக அமைந்தன. இவ்விரு சட்டங்களுக்கு உடன்பட மறுத்தவர்கள், குறிப்பாகத் திருச்சபையினர், பதவி நீக்கம் அடைந்ததோடு உயர் ஆணை நீதிமன்றத்தினுல் (Court of High Commission) தண்டிக்கப்பட்டனர். கி. பி. 1559ஆம் ஆண்டிலேயே 190 பாதிரிமார்கள் இதனுல் ஒடுக்கப்பட்டனர்.

ஆரும் எட்வர்டு காலத்தில் பிராடஸ்டன்டு சமயத்தின் அம்சங்களாக வெளியிடப்பட்ட, 'நாற்பத்திரண்டு விதிகளை', சிறிது மாற்றியும் சிலவற்றை நீக்கியும் கி. பி.1563ஆம் ஆண்டில் 'முப்பத்தொன்பது விதிகளாக' (Thirtynine Articles) இவ்வரசியார் வெளியிட்டார். கத்தோலிக்கரின் பெருத்த எதிர்ப்புகளுக்கு இலக்காகியிருந்த அம் மூன்று விதிகளை இவ் வரசியார்

நீக்கியிருந்தது அச் சமய பிரிவினரின் அபிமானத்தைப் பெறுவதற்கே என்பது குறிப்பிடத்தக்கது. இச் சமய விதிகளே, 'ஆங்கிலிக்கன் சமயத்தின்' (Anglican Religion) அடிப்படைகளாக விளங்கின.

இரு சமய பிரிவினருக்கும் இடையே ஓர் உடன்பாட்டை ஏற்படுத்திய இவ்வரசியார், எவர் மனமும் புண்படக் கூடாதென தம் திருமண வாழ்க்கையையே தியாகம் செய்தாரென்பதும் குறிப்பிடத்தக்கது. தாம் பிராடஸ்டண்டு ஒருவரை மணந்து கொண்டால், அது கத்தோலிக்கரின் எதிர்ப்பைத் தூண்டும்; அல்லது, தாம் ஒரு கத்தோலிக்கரைக் கணவராக வரித்தால், அவ் வேற்பாடு பிராடஸ்டன்டுகளின் வெறுப்பைக் கிளறும் என அஞ்சியே நடுநிலைக் கொள்கையைப் பின்பற்ற விரும்பிய இவ்வரசியார், தம் காலம் முழுவதும் கன்னியரசியாகவே இருந்தாரென்பது மெச்சத் தக்கதாகும்.

மேரி டியூடர் காலத்தில் மறுக்கப்பட்ட சமய தொடர்புடைய சட்டங்களை மீண்டும் இயற்றியும், அவ் வரசியாரால் நிறுவப்பட்டு இருந்த கத்தோலிக்க சமய நிலையங்களின் சொத்துகளை மீண்டும் பறிமுதல் செய்தும், பிராட்டஸ்டன்டு இயக்கத்தில் தமக்கிருந்த நம்பிக்கையை இவ் வரசியார் காட்டிக் கொண்ட போதும், தம் ஏற்பாடுகளையொட்டி நிறுவப்பட்ட திருச்சபையின் பிரார்த்தனைக் கூட்டங்களுக்குப் போகாத லௌகீக கத்தோலிக்கர்களைத் தண்டிக்காமல் விட்டு, மாறாக அவர்கள்மீது அபராதத் தொகையை மட்டும் விதித்தது போற்றத்தக்கதாகும்.

தம் சமய ஏற்பாடுகளை ஏற்றுக் கொள்ள மறுத்த கார்டினல்போல் என்பவரைக் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப் பதவியிலிருந்து நீக்கி (கி.பி. 1559) இவருக்குப் பதில் மேத்தியூ பார்க்கர் (Mathew Parker) என்ற சமய சீர்த்திருத்தவாதியை இப் பதவியில் அமர்த்தியிருந்த இவ் வரசியார், ஆதிக்கச் சட்டத்தையும் ஒருமைச் சட்டத்தையும் ஒருமுறை ஏற்றுக்கொள்ள மறுத்த கத்தோலிக்க லௌகீகர்களை உடனடியாகத் தண்டிக்காமல், அடுத்த முறையாவது அவற்றை ஒப்புக்கொள்ளும் படியான அவகாசத்தை அளித்திருந்தாரென்பது குறிபிடத் தக்கது.

**திருச்சபை ஏற்பாட்டின் தன்மைகள்:** எலிசபெத் அரசியாரால் செய்யப்பட்ட இந்தத் திருச்சபை ஏற்பாடு, அவ்விரு முக்கிய சட்டங்களின்படி (ஆதிக்கச் சட்டம், ஒற்றுமைச்

சட்டம்) இங்கிலாந்தில் ஆங்கிலிக்கன் திருச்சபை ஏற்படுவதற்கான ஓர் உடன்பாடாக அமைந்தது. இந்த உடன்பாட்டின்படி ஆங்கிலிக்கன் திருச்சபை (Anglican Church) அரசியாரையே தலைமைப் பிரதிநிதியாகக் கொண்டதே ஒழிய, போப்பாண்டவரை அன்று. பிரார்த்தனையும் போதனைகளும் ஆங்கிலத்திலேயே செய்யப்பட்டதே ஒழிய, இலத்தீன் மொழியில் அல்ல. நாடு முழுவதற்கும் சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்டிருந்த ஒரே மாதிரியான பிரார்த்தனை நூல் பிரசுரிக்கப்பட்டது. மற்றபடி, சமயபுரட்சிக்கு முன்பாக எங்ஙனம் பிஷப்புகளாலும் பாதிரிமார்களாலும் திருச்சபை பரிபாலிக்கப்பட்டு வந்ததோ, அந்த முறையில் எம் மாற்றங்களும் செய்யப்படவில்லை.

எலிசபெத்தின் இத் திருச்சபை ஏற்பாடு,பிராடஸ்டன்டுகளின் முழு கோரிக்கைகளையோ, கத்தோலிக்கர்களின் முழுத்தேவைகளையோ பூர்த்தி செய்வதாக இல்லை. இதனால், தீவிர பிராடஸ்டன்டுகளும் கத்தோலிக்கர்களும் ஏமாற்றமே அடைந்தனர். எந்த ஒரு சமயப் பிரிவினரின் கோரிக்கைகளை முழுதும் ஏற்காமலும், அதேநேரத்தில் அவர்களை முழுவதும் வெறுப்பு அடையச் செய்யாமலும் எலிசபெத் ஒரு நடுவழிக் (Middle) கொள்கையினையே பின்பற்ற முனைந்தார்.

நாட்டிலே உள்பூசல்கள் தவிர்க்கப்படவேண்டுமாயின், அமைதி காக்கப்படவேண்டுமாயின், ஒரு வலுவான தேசீய அரசாங்கம் ஏற்படவேண்டுமாயின், இவ் விரு சமயத்தினரின் ஆதரவும் தமக்குத் தேவையென்ற அரசியல் உணர்வின் விளைவாகவே, இச் சமய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இவ் வேற்பாடு தேசீயப் பொது நலனை மனத்தில் கொண்டு ஒரு தேசிய ஆட்சியாளராலும் செய்யப்பட்ட ஓர் உடன்பாடாகவே இருந்ததே தவிர, ஒரு சமயவெறி பிடித்த கொள்கையாரால் செய்யப்பட்டதாக இல்லை.

இவருடைய ஆட்சியின் முதல் பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில், நாட்டில் சமயத்தின் காராணமாக எவ்விதப் பூசலும் இன்றி அமைதி நிலவியிருந்ததென்றால், எலிசபெத் அரசியாரால் செய்யப்பட்ட இத் திருச்சபை ஏற்பாடே இதற்குக் காரணமாயிற்று.

**கத்தோலிக்க எதிர்ப்பு :** ஓரளவு பிராடஸ்டன்டு கோட்பாடுகளைத் தழுவி, நாட்டிலே அமைக்கப்பட்ட இத் திருச்சபை ஏற்பாட்டை எலிசபெத் அரசியார் வலுக்கட்டாயமாக,

எச் சமய பிரிவினர்மீதும் திணிக்கவில்லை யென்பதும் நினைவில் வைக்கத்தக்கது. திருக்கோயில்களுக்குச் செல்ல வேண்டி யிருந்தது கடமை யாக்கப்பட்டிருந்தபோது, பிடிவாதமாக அங்குப் போக மறுத்தவர்கள்மீது (Recusants) அபராதமே விதிக் கப்பட்டது. அத்தகையோர் மாதம் ஒன்றுக்கு ஒரு ஷில்லிங், அல்லது குடும்பம் மொத்தமாக ஒரு பவுன் தண்டப்பணத்தைக் (Fine) கட்டவேண்டுமென வற்புறுத்தப்பட்டது.

கத்தோலிக்கர்கள் இச் சமய ஏற்பாட்டை முழு மனதாக ஏற்றுக்கொள்ளாதவர்களாக இருந்திருந்தும், மறைவிடத்தில் தங்கள் வழிபாட்டு முறைகளைச் செய்ய அரசு அனுமதித்திருந்த தாலும் திருச்சபைக்கும் செல்லவேண்டி கட்டாயப்படுத்தப்படா திருந்ததாலும் அதிகம் குறைபட்டவர்களாக இல்லாமல் தண்டப் பணத்தைக் கட்டிவிட்டுத் தத்தம் இல்லங்களிலேயே கத்தோலிக்க வழிபாடுகளை நடத்தி வந்தனர்.

ஆனால், கி.பி. 1570ஆம் ஆண்டில் இவ் வரசியார் அரசியல் காரணங்களுக்காகக் கத்தோலிக்கர்களை ஒடுக்க முற்பட்டபோது அன்றைய போப்பாண்டவரான ஐந்தாம் பயஸ் (Pius-V), எலிச பெத்தைத் தாம் பட்ட நீக்கம் செய்வதாக அறிவித்தார்; இதன்படி, ஆங்கிலக் கத்தோலிக்கர்கள் எலிசபெத்தை அரசியாக ஏற்றுக் கொள்ளக் கூடாதெனவும் இவருக்கு விசுவாசமாக இருக்கத் தேவையில்லை யெனவும் போப்பாண்டவரால் ஆணையிடப்பட்ட னர். போப்பாண்டவரையே திருச்சபையின் தலைவராக ஏற்றுக் கொண்டு, எலிசபெத்தின் சமய ஏற்பாட்டை உள்ளூர வெறுத்து வந்த ஆங்கில கத்தோலிக்கர்கள், அரசியாருக்கு எதிரான நட வடிக்கைகளில் இறங்கவும் இவ் வரசியாரும் கடுமையாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது.

தம் வாரிசுக்குப் போட்டியாயிருந்த மேரிக்கும் (ஸ்காட்டிய அரசி), தம்முடன் போர் தொடுக்கத் துடித்துவந்த இரண்டாம் ஃபிலிப்புக்கும் (ஸ்பானிய அரசர்) சாதகமாக, அவர்கள் கத்தோலிக்கர்கள் என்ற ஒரே காரணத்தினால் சில தீவிர ஆங்கிலேய கத்தோலிக்கர்கள் அரசியாருக்கு எதிராகச் சதித் திட்டங்களைத் தீட்டிவந்த வேளையில் அடுத்த போப்பாண்டவரான பதின்மூன்றும் கிரகெரி (Gregary-XIII) சமய பிரச்சாரத்திற் காகச் சில கத்தோலிக்க ஜெசூட் பாதிரிமார்களை (Jesuit Missionaries) இங்கிலாந்துக்கு அனுப்பிவைத்தார். வில்லியம் ஏலன் (William Allen) என்ற ஆங்கிலேய கத்தோலிக்கரால் பயிற்றுவிக்கப்பட்ட பாதிரிமார்கள் (Seminary Priests) நாட் டிலே, மதமாற்றும் முயற்சியிலே இரகசியமாக ஈடுபட்டிருந்தனர்.

இச் சமயத்தில்தான் எலிசபெத் அரசியார், நிலைமை மேலும் சீர்கெடாமல் இருக்க, கி.பி. 1571ஆம் ஆண்டில் தம் பாராளு மன்றத்தின்மூலமாகக் கத்தோலிக்கருக்கு எதிராகக் கடுமையான சட்டங்களைக்கொண்டு வந்தார்.

பிராடஸ்டன்டுகளைக் கத்தோலிக்கராக மாற்ற முயல்வது அரசத் துரோகமென்றும், இச் சமய ஏற்பாட்டை மேற்கொள்ள மறுப்பவர்களின் உயிரும் உடைமையும் பறிக்கப்படுமென்றும், நாற்பது நாட்களுக்குள்ளாக எல்லா ரோமானியக் கத்தோலிக்கர் களும் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டது.

இவ் வாணைகளின்படி, எட்மண்டு கேம்பியன் (Edmund Campion) என்ற ஜெசூட் சமய பிரச்சாரகர் உள்பட 120 கத்தோலிக்கப் பாதிரிகள் கொலைத்தண்டனை அடைந்த துடன், பலர் சிறையில் தள்ளப்பட்டனர். கத்தோலிக்கரின் தனித்தொழுகை, சட்ட விரோதமாக்கப்பட்டதுடன் திருக்கோயி லுக்குச் செல்லாத தண்டமாக மாதமொன்றுக்கு இருபது பவுண்டுகள் வசூலிக்கப்பட்டன.

இங்ஙனமாக, கட்டாயப்படுத்தப்பட்ட சூழ்நிலையிலேயே எலிசபெத் அரசியார் கத்தோலிக்கர்கள்மீது தம் ஏற்பாட்டைக் (ஆங்கிலிக்கன் சமயம்) திணிக்க முனைந்தார்.

**பியூரிடானியரின் எதிர்ப்பு:** எலிசபெத் அரசியாரால் செய் யப்பட்ட சமய ஏற்பாட்டைத் தொடக்க காலத்திலிருந்தே தீவிர பிராடஸ்டன்டுகள் விரும்பாதவர்களாக இருந்தனர். இருப்பினும், இவ் வேற்பாடு இங்கிலாந்தைப் பிராடஸ்டன்டு நாடாகச் செய்யப்படும் முயற்சியின் முதல் கட்டமென இவர்கள் நம்பிச் சில காலம் அமைதியாக இருந்தனர். ஆனால், இவ் வரசியாரால் செய்யப்பட்ட சமய ஏற்பாட்டின்படி நாட்டில் நிறுவப்பட்ட ஆங்கிலிக்கன் திருச்சபையே சமய புரட்சியின் இறுதிக்கட்டமாக அமையப்போகின்றதென்று இவர்கள் உணர்ந்த போது, அதிருப்தி அடைய ஆரம்பித்தனர்.

இதற்கிடையே, மேரி டியூடரின் காலத்திலிருந்து மேற்கு ஐரோப்பாவின் பல பகுதிகளில் அடைக்கல வாழ்வு நடத்திவந்த ஆங்கிலப் பிராடஸ்டடுன்கள் பல புதிய சமய சீர்திருத்தக் கருத்துகளோடு இங்கிலாந்திற்குத் திரும்பியிருந்தனர்.

இங்கிலாந்துக்கு வந்திருந்த இப் பிராடஸ்டடுன்கள் ஜான் கால்வின் (Jhon Calvin) என்ற சமய சீர்திருத்தக்காரரிடு.

கொள்கைகளைப் பின்பற்றியவர்களாக இருந்தனர். இவர்களின் செல்வாக்கிற்குட்பட்டிருந்த ஏனைய தீவிரப் பிராடஸ்டன்டுகள் நாட்டில் ஒருவகை சமய கட்சி ஏற்படக் காரணமாயினர். இக் கட்சியினரே பியூரிட்டானியர்கள் ((Puritans) என அழைக்கப் பட்டனர்.

பியூரிடானியர்களுக்கு, 'பரிசுத்தர்' அல்லது 'தூயர்' எனவும் பெயர்கள் உண்டு. ஏனைய பிராடஸ்டன்டு சமய பிரிவினர்களில் தாங்களே தூய்மையான சமய கருத்துகளை மேற்கொண்டவர்களாகவும் தங்கள் கொள்கையிலும் கோட்பாட்டிலும் செயலிலும் சிந்தனையிலும் தூய்மைக்குச் சிறப்பிடம் கொடுத்தவர்களாகவும் இருந்த பியூரிட்டானியர்கள் கத்தோலிக்க சமயத்தின் தீவிர எதிரிகளாக இருந்ததுடன் சில சடங்குகளையும் சம்பிரதாயங் களையும் வெறுத்தவர்களாவும் இருந்தனர்.

மத குருமார்கள் வெண்ணிற அங்கியை (Surplices) அணிந்து கொள்ளும் வழக்கத்தையும் ஞானஸ்நான விழாவில் (Babtism) சிலுவையைப் பயன்படுத்தும் மரபினையும் திருமணத்தில் மோதிரம் அணிவிக்கப்படுவதையும் எதிர்த்த இப் பியூரிடானி யர்கள், திருச்சபைகள் பிஷப்புகளால் பரிபலிக்கப்படுவதையும் பிரார்த்தனை முறையையும் வெறுத்தவர்களாயினர். திருக்கோயில் களில் படிம வழிபாடு செய்வதையும், திருச்சபையினரின் உற்சவங் களையும், திருக்கோயில்களில் ஓவியம் தீட்டப்பெற்ற வண்ணச் சாளரங்களை அமைக்கும் பழக்கத்தையும் இவர்கள் விரும்பாதவர் களாகவும் இருந்தனர்.

நாளடைவிலே, இச் சமய பிரிவினர் ஒருமைச் சட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்ததால் "ஒருப்படாதர்" (Non-Conformists) என்றும், எலிசபெத் அரசியாரின் சமய சட்டங்களால் 'நிறுவப் பெற்ற ஆங்கிலிகன் திருச்சபையின்' (Established Anglican Church) கொள்கைகளை ஏற்க மறுத்ததால் 'இணங்காதார்' (Dissenters) எனவும் பெயர் பெற்றிருந்தனர்.

நாட்டின் நன்மையைக் கருதி சில காலம் பொறுமையாக இருந்த இவ் வரசியார், கி. பி. 1565 ஆம் ஆண்டில் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பாக மேத்யு பார்க்கர்மூலமாக 'விளம்பரங்கள்' (Advertisements) என்ற அறிவிப்பை வெளியிடச் செய்தார். இதன்படி, ஆங்கிலிக்கத் திருச்சபையின் கோட்பாடுகளையும் பழக்கங்களையும் பியூரிடானியர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டு மென வற்புறுத்தப்பட்டனர். ஆங்கிலிக்க சமய விதிகளைப்

பியூரிடானியர்கள் மீற முயன்றபோது கடுமையான தண்டனைகள் இவர்கள்மீது விதிக்கப்பட்டிருந்தும் பார்க்கரின் செல்வாக்கினால் இக் கட்டத்தில் பியூரிடானியர்கள் தப்பினர். இரு பியூரிடானிய பாதிரிமார்கள் கி. பி. 1572ஆம் ஆண்டில் திருச்சபை அமைப்பி லிருந்து பிஷப்புகளின் பரிபாலனத்தை அகற்றக் கோரி 'பாராளுமன்றத்திற்கு எச்சரிக்கை' (Admonishment to Parliament) என்ற நூலை வெளியிட்டிருந்தது, பியூரிடானிய இயக்கம் நாட்டிலே வளர்ந்து வந்ததைச் சுட்டிக்காட்டியது.

கேம்பிரிட்ஜில் சமயப் பேராசிரியராக இருந்து வந்த தாமஸ் கார்ட்ரைட் (Thomas Cartright) என்பவர், பியூரிடானிய கருத்துகளைப் பரப்பும் பணியினை மேற்கொண்டவராக நாட்டின் பல பாகங்களில் சமய கழகங்களை நிறுவியிருந்தார். இத்துடன், எலிசபெத் அரசியாரின் சமய ஏற்பாட்டினையும் இவரும் மற்ற ஆதரவாளர்களும் வெளிப்படையாகக் கண்டிக்கவும் முற்பட்டனர்.

பியூரிடானியர்களின் எதிர்ப்பு தீவிரமடைந்தபோது, அரசி யாரும் கடும் நடவடிக்கையிலே இறங்கினர்.

பார்க்கருக்குப் பின் கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாக பதவி பெற்றிருந்த கிரின்டால் (Grendal) என்பவர், பியூரிடானியர் கருத்துகளுக்கு ஆதரவாளராக இருந்தபோது, எலிசபெத் இவரைப் பதவி நீக்கம் செய்து ஜான் விட்கிவ்ட் (John Whitgift) என்பவரை அடுத்த ஆர்ச் பிஷப்பாக அமர்த்திப் பியூரிட்டானி யர்கள்மீது கடும் நடவடிக்கை எடுக்கச் சொன்னர்.

உயர்நீதி ஆணைமன்றத்தினால் பல பியூரிடானிய தலைவர்கள் தண்டிக்கப்பட்டனர். பலர் தங்கள் பதவிகளிலிருந்து விரட்டப் பட்டனர். இவ் வியக்கம், இதனால் சற்றுத் தீவிரம் குறைந்த தாயிற்று. ஆனால், எலிசபெத் அரசியாரின் கடைசிக் காலத்தில் மீண்டும் செல்வாக்கை அடைந்துவிட்ட இச் சமயப் பிரிவினர்களே பாராளுமன்றத்தின் உரிமைக் காவலர்களாக அடுத்த தலை முறையில் ஸ்டுவர்டு (Stuarts) மன்னர்களின் வரம்பற்ற அதிகாரத்தை எதிர்த்துப் போராடியவர்களாயினர்.

**பிரௌனிஸ்ட்கள் எதிர்ப்பு:** கத்தோலிக்கர், பியூரிடானி யர்கள் அல்லாது, மற்றொரு சமய பிரிவினரும் எலிசபெத் அரசியாரின் திருச்சபை ஏற்பாட்டை எதிர்த்தவர்களாக இருந்தனர். கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் சமயப் பேராசிரிய ராயிருந்த இராபர்ட் பிரௌவுன் (Robert Brown) என்பவரைப்

பின்பற்றிய 'பிரௌனிஸ்டு' களே (Brownists) அவர்களாவர். திருச்சபையின்மீதிருந்த அரசியாரின் ஆதிக்கத்தை எதிர்த்த இப் பிரிவினர், ஒவ்வொரு திருக்கோயிலும் சுதந்திரமாகச் செயல் பட வேண்டுமென விரும்பினர். இதனால் இவர்கள், 'சுதந்திர வாதிகள்' (Independents) எனவும் அழைக்கப்பட்டனர். எலிசபெத் அரசியார் இவர்களையும் உயர்நீதி ஆணை மன்றத்தினால் ஒடுக்கலானார் அரசியாரின் தண்டனைக்குப் பயந்து பல 'சுதந்திர வாதிகள்' நாட்டை விட்டே அகன்றனர். ஹாலந்து நாட்டில் அடைக்கலம் புகுந்த இந்தப் பிரௌனிஸ்டுகளே பின்னர், அங்கிருந்து, 'மே பிளவர்' (May flower) கப்பலில் ஏறி கி. பி. 1620ஆம் ஆண்டு அமெரிக்காவை அடைந்து ஒரு வரலாறு படைக்கப்படுவதற்குக் காரணமாயினர்.

**திறனாய்வு :** கி. பி. 1559ஆம் ஆண்டில் எலிசபெத் அரசியாரால் செய்யப்பட்ட திருச்சபை ஏற்பாடு, கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக இங்கிலாந்தில் நடந்து வந்த சமய சச்சரவுகளுக்கு முடிவாக இருந்ததென்றால், இன்னொரு வகையில் அடுத்த நூறாண்டுகளுக்குத் தொடரப்போகும் ஓர் நீண்ட சமய போராட்டத்திற்கும் காரணமாக விருந்தது என்பதை மறுக்க முடியாது.

எலிசபெத் அரசியாரின் கடைசிக் காலத்தில், இவரால் செய்யப்பட்ட சமய ஏற்பாட்டின் விளைவாக, நாட்டிலே மூன்று சமய கட்சிகள் தோன்றியிருந்தன. இவ் வரசியாரின் சமய ஏற்பாட்டினை ஏற்றுக்கொண்டிருந்த ஆங்கிலிக்கன்கள் (Anglicans) அரசியாரின் சமய ஆதிக்கத்தை எதிர்த்த போப்பாண்டவரின் கும்பலான கத்தோலிக்கர்கள், மேற்கொண்டு சமய சீர்திருத்தங்களைக் கோரிய பியூரிடானியர்களே அவர்களாவர். கி.பி. 1668ஆம் ஆண்டு வரையிலான இங்கிலாந்து வரலாறு இம் மூன்று சமய பிரிவினரிடையே ஏற்பட்டிருந்த சச்சரவுகளையே மையமாகக் கொண்டிருந்ததென்றால் அது மிகையாகாது.

**எலிசபெத் சமய ஏற்பாட்டின் விளைவுகள் :** சமயத்தின் காரணமாக ஐரோப்பிய நாடுகளில் பூசலும் போராட்டமும் நடந்துகொண்டிருந்தால், இங்கிலாந்தில் பிராடஸ்டன்டுகளுக்கும் கத்தோலிக்கருக்குமிடையே உள்நாட்டுச் சமய போரைத் தவிர்த்த இத் திருச்சபை ஏற்பாடு தேசிய அமைதியைக் காத்ததோடு நாட்டின் ஒற்றுமையையும் பல ஆண்டுகள் குறிப்பாக, கி. பி. 1570ஆம் ஆண்டுவரையில் பாதுகாத்திருந்தது.

நாட்டு மக்களின் சக்தி, சமய போர்களில் வீணுக்கப் படாமல் பல நல்ல ஆக்கத் தொழில்களுக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் பயன்படுவதற்குக் காரணமாயிருந்த இவ்வரசியாரின் சமய ஏற்பாடு, எல்லாச் சமய பிரிவினரும் ஒப்புக்கொள்ளும்படியாக ஒரு தேசிய திருச்சபை ஏற்படுவதற்கும் காரணமாயிற்று. சில காலம், இவ் வேற்பாட்டிற்கு ஒரு சில தீவிர வாதிகளால் எதிர்ப்புகள் இருந்தபோதிலும் நாளடைவில் இவ்வுடன்பாட்டின்மீதே ஆங்கிலேயரின் திருச்சபை நிர்மானிக்கப்பட்டதென்பதை மறுப்பதற்கில்லை.

**இவ்வேற்பாடு வெற்றிபெறக் காரணங்கள் :** எலிசபெத் அரசியாரால் செய்யப்பட்ட சமய ஏற்பாடு, இவரது ஆட்சியில் முதல் பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் நாட்டுக்கு அமைதியைக் கொடுத்திருந்ததை மறுப்பதற்கில்லை. இவரது இந்த ஏற்பாட்டில் சில குறைபாடுகள் இருந்திருப்பினும், வெற்றிகரமாகவும் திருப்திகரமாகவும் அவ் வுடன்பாடு அமைந்ததெனின், அதற்குச் சில காரணங்கள் இல்லாமலில்லை.

மேரி டியூடர் காலத்தில் கையாளப்பட்ட தீவிர சமய சீர்திருத்த எதிர்ப்புக் கொள்கை, பிராடஸ்டன்டியத்தை நசுக்குவதற்குப் பதிலாக மேலும் உயிரூட்டியிருந்தது. தாங்கள் கொண்டிருந்த சமய கொள்கைக்காக உயிர் நீக்கம் அடைந்த அந்தத் தியாகிகளின் புனித மரணம், அதுவரை பிராடஸ்டன்டியத்தில் சேர மனமில்லாமல் ஒதுங்கியிருந்த பல தடுமாறிகளை (waverers) அம் மதத்தில் சேரும்படி ஊக்குவித்திருந்தது.

தேசிய உணர்ச்சி வளர்ந்திருந்த இக் காலத்தில், தங்கள் அரசியாரான எலிசபெத்தைக் கவிழ்ப்பதற்குச் சூழ்ச்சிகள் செய்து வந்த மேரி (ஸ்காட்), இரண்டாம் ஃபிலிப் (ஸ்பெயின்) ஆகியோர் கத்தோலிக்க சமயத்தினைச் சார்ந்தவர்களாக இருந்ததால், அச் சமயத்தை வெளிநாட்டினர் மதமாக, பற்றுமாருத (loyal) ஆங்கிலேயர்கள் நினைத்ததால், அது பிராடஸ்டன்டியத்திற்குச் சாதகமாக இருந்தது.

இச் சூழ்நிலையிலே, கத்தோலிக்க சார்பாளர் கொள்கையினைப் பின்பற்ற முடியாமலிருந்த எலிசபெத் அரசியார், பிராடஸ்டன்டுகளைச் சார்ந்த சமய தன்மையினை ஏற்றுக்கொண்டிருந்தும் எந்தவொரு சமய பிரிவினரின் மனமும் நோகாதபடி ஒரு நடுவழிக் கொள்கையினை நடைமுறையில் கொண்டு வந்திருந்ததே இவரது சமய திட்டத்திற்கு வெற்றியைத் தேடிக் கொடுத்ததாகியது.

ஆறும் எட்வர்டு காலத்தில் பின்பற்றப்பட்டிருந்த தீவிர சமய சீர்திருத்தக் கொள்கையினாலும், மேரி டியூடரால் திணிக்கப்பட்ட தீவிர சமய சீர்திருத்த எதிர்ப்புக் கோட்பாடுகளிலும் வெறுப்பும் சலிப்பும் அடைந்திருந்த ஆங்கில மக்கள், அவசியத்தின் பேரில் இவ் வரசியாரின் சமரச சமய திட்டத்தை ஒப்புக்கொள்ள முன்வந்தனரென்பதும் குறிப்பிடத் தக்கது.

நாட்டில் ஒரு சில தீவிரவாதிகளுக்கு இவ் வேற்பாடு ஒப்புக் கொள்ள முடியாத அமைப்பாக இருந்திருப்பினும், பெருவாரியான ஆங்கில மக்கள் இச் சமய திட்டத்தை ஏற்றுக்கொண்டிருந்ததே இவ் வுடன்பாட்டுக்கு நிரந்தரத் தன்மையினைக் கொடுத்திருந்தது.

## எலிசபெத்தின் வெளிநாட்டுக் கொள்கை

எலிசபெத் அரசியார், ஆங்கில அரசுரிமையை அடைந்திருந்த சமயத்தில், சர்வதேச அரசியலில் இங்கிலாந்தின் நிலை, சற்றுப் புறக்கணிக்கப்பட்டதாகவே இருந்தது.

மேரி டியூடர் காலத்தில் நடத்தப்பட்ட அவசியமற்ற ஃபிரெஞ்சுப் போர்களால் நாட்டின் பொருளாதார நிலையும் பாதிக்கப்பட்டிருந்தது; அப் போரின் முடிவில், கி. பி. 1347 ஆம் ஆண்டிலிருந்து ஆங்கிலேயர் வசமிருந்த கலே, ஃபிரெஞ்சுக்காரர்களால் மீட்கப்பட்டதால் இங்கிலாந்தின் பெருமை ஆட்டங் கண்டிருந்தது. ஃபிரான்சுடன் போர் நிலைமை இன்னும் நீடித்து வந்த இவ் வேளையில் ஸ்காட்டிய அரசி மேரி, தமக்கு ஆங்கில வாரிசுரிமையைக் கோரி, அரசியல் குழப்பத்தை விளைவிக்கக்கூடிய ஆபத்தும் இருந்திருந்தது. இங்கிலாந்து, முந்திய ஆட்சியில் ஸ்பானிய சார்பான கொள்கையைப் பின்பற்றியிருக்க, ஆங்கிலேயர்களின் விவகாரங்களில் தலையிடக்கூடிய துணிச்சலைப் பெற்றிருந்த ஸ்பானிய அரசர் இரண்டாம் ஃபிலிப், ஒரு தீவிர கத்தோலிக்கராதலால், எலிசபெத்தின் சமய கொள்கையினால் வெகுண்டவராக இந் நாட்டின்மீது போர் தொடுக்கக்கூடிய அபாய நிலையும் இருந்தது.

ஃபிரான்சிலிருந்தோ, ஸ்காட்லாந்திலிருந்தோ, அல்லது ஸ்பெயினிலிருந்தோ படையெடுப்புகள் ஏற்படக்கூடிய அபாய நிலைமை இருந்துவர, நாட்டின் பாதுகாப்பும் அசட்டை செய்யப்பட்டது.

காவல் அரண்களான கோட்டைகள் உதாசீனப்படுத்தப்பட்டிருந்தன; நாட்டுப் படையும் கடற்படையும் புறக்கணிக்கப்பட்டிருந்தன.

இந் நிலைமையிலேயே எலிசபெத் அரசியார், தம் வெளி விவகாரக் கொள்கையை அமைத்து நடத்த வேண்டியவரானர்.

**இவ் வரசியாரின் கொள்கை :** ஐரோப்பிய அரசியலிலே தம் நாட்டுக்கு முக்கிய ஓர் இடத்தைப் பெற்றுக்கொடுக்க விரும்பிய எலிசபெத் அரசியார், போரை விரும்பாதவராகவே இருந்தார். முடிந்தவரையில் தம் இராஜதந்திரத்தினல், ஐரோப்பிய சக்தி சமநிலையைப் பாதுகாத்து, அமைதிக் கொள்கையைப் பின்பற்றியே தம் நாட்டினருக்குச் சிறப்பினைத் தேடித்தர விரும்பினர்.

தம் ஆட்சியின் முதல் எட்டாண்டுகளில் இவ் வரசியார், ஐரோப்பிய அரசியல் விவகாரங்களிலிருந்து ஒதுங்கியவராக இருந்து, அந்த அமைதிக் காலத்தில் இங்கிலாந்தின் வளத்தையும் பலத்தையும் பெருக்கியிருந்தார். இக் காலவரையறையில் எலிசபெத் எச்சரிக்கையுடனும் தயக்கத்துடனும் தம் வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்றியிருக்க, இதுவே வருங்காலத்தில் அரசியாரின் எண்ணத்திற்கேற்ப இங்கிலாந்துக்குச் சர்வதேச அரசியலில் சிறப்பினைத் தந்திருந்தது.

**அரசியாரின் முன்னெச்சரிக்கை :** வளமுள்ள அரசே ஓர் வலுவுள்ள அரசாக இருக்க முடியுமென நம்பிய எலிசபெத், உள்நாட்டுச் செலாவணிமுறையைச் சீர்திருத்தியும் வேறு சில பொருளாதார ஆக்கப்பணிகளை மேற்கொண்டும் நாட்டின் வளத்தைப் பெருக்கியிருந்தார்.

நாட்டின் பாதுகாப்பிற்கான பணிகளை மேற்கொள்ள விரும்பிய எலிசபெத் அரசியார், நாடு முழுவதும் புதிய கோட்டைகளைக் கட்டச் செய்தும், கடற்கரையோரம் புதிய கொட்டில்களைக் கட்டச் செய்தும் அங்குப் படைக்கலங்களைச் சேகரித்துவைத்தார். யுத்தம் புதுவகைப் போர்ச் சாதனங்களான பித்தளைப் பீரங்கிகளும் வெடிமருந்துச் சாலைகளும் தோற்றுவிக்கப்பட்டன. நாட்டுப் படையும் கப்பற்படையும் சீராக வைக்கப்பட்டன. கடற்படைக்கான மரக்கலங்களின் தகுதியும் அளவும் விருத்தி செய்யப்பட்டன. இதனல், அந்நியப் படையெடுப்பிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ளக்கூடிய திறனை இங்கிலாந்து பெற்றிருந்ததுடன் ஒரு கடல் வலிமை பெற்ற நாடாகவும் ஆக்கப்பட்டிருந்தது.

**அரசியாரின் இராஜதந்திரம் :** தம் நாட்டுக்கு வளத்தையும் பலத்தையும் தேடிக் கொடுக்கவேண்டியிருந்த எலிசபெத் அரசியார், போர்களிலிருந்து விடுபட்ட அமைதியான வெளிநாட்டுக்

கொள்கையினாலேயே அது சாத்தியமாகும் என்பதையும் உணர்ந்தவராக இருந்தார். கன்னியான தமது திருமண விவகாரத்தினால் தம் நாட்டுக்கு அத்தியாவசியமாக இருந்த அமைதி குலையக்கூடாதென மிகவும் எச்சரிக்கையுடனும் தந்திரத்துடனும் நடந்து கொண்டார்.

ஐரோப்பிய அரசர்களில் பலர், இவரை மணந்து கொள்ள விரும்பினர். இவர்களில், ஆஸ்திரியா ஆர்ச் டியூச் சார்லஸ், ஸ்விடிஷ் மன்னர், ஃபிரெஞ்சு மன்னரான இரண்டாம் ஹென்றி, ஸ்பானிய மன்னரான இரண்டாம் ஃபிலிப் ஆகியோர் முக்கியமானவர்கள். ஃபிரெஞ்சு அரசரை மணந்துகொள்ள எலிசபெத் ஒரு சமயம் விரும்பியிருந்தாராயினும், இரண்டாம் ஃபிலிப்பையே இவர் மணந்துகொள்வாரென எதிர்பார்க்கப்பட்டது. இவ்வரசியாரின் பெற்றோர்களின் (எட்டாம் ஹென்றி-ஆன்பொலின்) திருமணம் செல்லாதென முன்பு போப்பாண்டவரால் வெளியிடப்பட்ட அறிவிப்பை மாற்றச்செய்து. இவரது பிறப்பைச் சட்டரீதியாக்கி, எலிசபெத்தை மணந்துகொள்ள இரண்டாம் ஃபிலிப் துடித்தார்.

செல்வத்திலும், சிறப்பிலும் செழித்திருந்த ஆங்கில அரசியான தம்மை, பலர் மணக்கத் துடித்தனரேயன்றி, அழகும் அறிவும் கொண்ட மங்கையான தம்மை அன்று என்பது எலிசபெத்துக்குப் புலப்பட்டிருந்ததோடு, பல அரசர்கள் தம்மை மணக்க விரும்பிய இக் காலத்தில் தாம் எவரை மணந்தாலும் அதனால் மற்றவர்கள் வெகுளுவர் என்பதையும் இவர் தெரிந்து கொண்டிருந்தார். தம்மை மணக்க விருப்பம் தெரிவித்த ஒவ்வொருவர் மனத்திலும் இவர் தன்னையே மணந்து கொள்வாரென்ற நப்பாசையைப் பல ஆண்டுகள்வரை விட்டுப போட்டி, பொறாமைப் போர்களை எலிசபெத் அரசியார் தவிர்த்திருந்தார்.

தாம் நினைத்த எண்ணம் கைக்கூடி, நாடு அதன் பயனை அனுபவித்த காலத்திலேயே தாம் ஒருவரையும் மணக்காமல் கன்னிப் பேரரசியாகக் காலம் கழிக்க விரும்புவதாக எலிசபெத் அறிவித்திருந்தது குறிப்பிடத்தக்கது.

**எலிசபெத்தும் ஃபிரான்சும் (கி.பி. 1558—1585):** மேரி டியூடர் காலத்தில் தொடங்கியிருந்த ஃபிரெஞ்சுப் போரைத் தொடர்ந்து நடத்துவதால் எப் பலனுமில்லை என உணர்ந்தவராக எலிசபெத், அந் நாட்டுடன் சமாதானம் செய்துகொள்ள விழைந்தார்.

**கேட்டியோ கேம்பிரசஸ் :** ஃபிரெஞ்சு அரசரான இரண்டாம் ஹென்றி, தாம் எலிசபெத் அரசியாரை மணந்துகொள்வதற்கான

அனுமதியைப் போப்பாண்டவரிமிமிருந்து பெறத் தயாராக விருந்தும் இவ் வரசியார், இத் திருமண உறவை நாடாமல் கி.பி. 1559ஆம் ஆண்டில் ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டார். இதுவே கேட்டியோ கேம்பிரசிஸ் உடன்படிக்கை (Treaty of Cateau Cambresis) என அழைக்கப்பட்டது. இவ் வுடன்பாட்டின் படி, எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு, கலே நகரத்தை ஆங்கிலே யருக்கு ஒப்படைப்பதாகவும், அதற்கு ஈடாக இங்கிலாந்து 500,000 கிரௌவுன் நாணயங்களை ஃபிரான்சுக்குத் தரவேண்டு மெனவும் ஏற்பாடாகியது. ஆனால், இவ் வுடன்பாடு கையெழுத் தாகியிருந்த சில நாட்களுக்குள்ளாக ஃபிரெஞ்சு மன்னரான இரண்டாம் ஹென்றி காலமடைந்துவிட்டார்.

இவரைத் தொடர்ந்து இரண்டாம் ஃபிரான்சிஸ் பட்டத்தை அடைந்தார். எலிசபெத்தின் உறவினரும், ஸ்காட்டிய அரசியு மான மேரியை மணந்துகொண்டிருந்த இம் மன்னர், தமக்கு ஆங்கில வாரிசுரிமை உண்டென்று ஓர் அரசியல் குழப்பத்தை உருவாக்க நினைத்தார். ஆனால், எலிசபெத் அரசியாருக்குப் பாதகம் எதுவும் ஏற்படுவதற்கு முன்னரேயே இந்த ஃபிரெஞ்சு மன்னரும் இறந்துவிட்டார்.

ஃபிரான்சில் அரச பதவி பெற்றிருந்த ஒன்பதாம் சார்லஸ், பாலகப் பருவத்தினராக இருந்ததால், அந்நாட்டு அரசியல் அதிகாரங்கள் குயிஸிஸ் (Guises) என்ற குடும்பத்தினர் வசம் இருந்தது. குயிஸிசுகள் ஆங்கில வாரிசுரிமைக்கு ஸ்காட்டிய அரசி மேரியே உரியவளென்று எலிசபெத் அரசியாருக்கு எதிராகச் செயல்பட நினைத்தனர். ஆனால், இச் சமயத்தில் ஃபிரெஞ்சு பிராடஸ்டன்டுகளான ஹியூகிநாட்டுகளுக்கும் (Hugenots) கத்தோ லிக்கர்களுக்கும் அந் நாட்டில் உள்நாட்டுப் போர் மூண்டதால், இவ் வரசியார் அதைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார். தமக்கெதிராக நடத்தப்படும் சதிகளில் பங்கு கொண்டிருந்த ஃபிரான்சு அரசாங்கத்தின் கொட்டத்தை அடக்கு வதே எலிசபெத்தின் முக்கிய நோக்கமாக இருந்தது.

இதற்கேற்ப, எலிசபெத் அரசியார், கி.பி. 1562ஆம் ஆண்டில் ஹியூகிநாட்டுகளுடன் ஓர் இரகசிய உடன்பாட்டைச் செய்து கொண்டார். இதன்படி, ஃபிரெஞ்சு அரசாங்கத்திற்கு எதிராகக் கலகச் செயலில் இறங்கியிருந்த அவர்களுக்குப் பண உதவியும் படை உதவியையும் கொடுக்க எலிஸபெத் ஒப்புக்கொண்டார். இதற்குக் கைம்மாறாக, லா ஹேவ்ரி (Law Haure) என்ற இடத்தை ஹியூகிநாட்டுகளிடமிருந்து ஈடாக எலிஸபெத் பெற்றார். ஆனால்

ஃபிரெஞ்சு பிராட்டஸ்டன்டுகளுக்கு உதவியாக வார்விக் பிரபுவின் தலைமையில் அனுப்பப்பட்ட ஆங்கிலப்படை தோல்வியைப் பெற்றதோடு, ஹேவ்ரி நகரத்தையும் காக்க முடியாமல் இழந்திருந்தது (கி.பி. 1563).

போரும் அமைதியும் அற்ற சூழ்நிலையிலேயே சில ஆண்டுகள் ஆங்கில—ஃபிரெஞ்சு உறவு உழன்றது.

**பிளாயிஸ் உடன்பாடு:** மேரியின் (ஸ்காட்) இரண்டாம் கணவரான டார்ன்லி பிரபு கொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து, ஃபிரெஞ்சு நாட்டில் இந்த ஸ்காட்டிய அரசிக்குச் செல்வாக்குக் குறையலாயிற்று: இதனால் தமக்கு எதிராக ஃபிரெஞ்சு-ஸ்காட்டிய கூட்டுறவு, இனி ஏற்பட வழியில்லை என்பதை எலிஸபெத் உணர்ந்தார். இதே சமயத்தில் இரண்டாம் ஃபிலிப்பின் ஆக்ரமிப்புக் கொள்கையினால் ஃபிரெஞ்சு-ஸ்பானிய உறவும் சீர் கெட்டுவந்தது. இதற்கிடையே, எலிஸபெத்தைப் பட்டவிலக்கம் செய்து ஒரு சமய ஆணையைப் பிறப்பித்திருந்த போப்பாண்டவர் கத்தோலிக்க வெறியரான இரண்டாம் ஃபிலிப்பை இங்கிலாந்தின் மீது படையெடுக்கும்படி தூண்டிவந்தார். ஆகவே, ஸ்பெயின் இக் கட்டத்தில் இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்கும் ஒரு பொது எதிரியாகவே கருதப்பட்டது. இதன் விளைவாகவே, இவ் விரு நாடுகளுக்கிடையே கி.பி. 1571ஆம் ஆண்டில் பிளாயிஸ் (Blois) உடன்பாடு ஏற்பட்டது. இவ் வுடன்பாடு, எலிஸபெத் அரசியாருக்கு நன்மை பயக்கத்தக்கதாகவே அமைந்தது. மேரி ஸ்காட் சார்பில் ஸ்காட்டிய விவகாரங்களில் தலையிடுவதில்லை என்ற வாக்குறுதியைப் பெற்றிருந்த எலிஸபெத், ஃபிரெஞ்சுப் படையெடுப்பு அபாயத்திலிருந்து இங்கிலாந்தைத் தப்புவித்தார். இவ் வுடன்பாட்டினால், ஸ்பெயினுக்கு எதிராக ஃபிரான்சின் உதவியுடன் எலிஸபெத் நெதர்லாந்து சுதந்திரப் போரிலும் தலையிட முடிந்தது.

திருமண ஏற்பாடு: பிளாயிஸ் உடன்படிக்கையையொட்டி இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்குமிடையே நல்லுறவு ஏற்பட்டிருந்த இவ் வேளையில், ஃபிரெஞ்சு இளவரசரான ஆன்ஜூ கோமகனை எலிஸபெத் அரசியாருக்கு மணமுடித்து வைக்க, கேதரீன் டி மெடிசி (Catherine De Medici) என்ற ஃபிரெஞ்சு அரசரின் தாயார் (Queen mother) ஒரு யோசனையைத் தெரிவித்திருந்தார். அரசியல் சூழ்நிலை கருதி, இத் திருமணத்திட்டத்தை ஏற்றுக்கொள்ள முடியாதவராகவும், ஃபிரெஞ்சு உறவைக் கருதி இதை நிராகரிக்க முடியாமலும் எலிஸபெத் தயங்கிவந்த நிலையில் ஃபிரான்ஸ் நாட்டில்

ஒரு பயங்கர நிகழ்ச்சி ஏற்பட்டது. கி.பி. 1572ஆம் ஆண்டில் செயின்ட் பர்த்தலமியு தினத்தன்று (St. Bartholomeu's day) ஃபிரான்சு நாட்டிலிருந்த 10,000-க்கு மேற்பட்ட ஹியூகிநாட்டு கள், பாரிசு நகரில் பிரார்த்தனைக்காகக் கூடியிருந்தனர். கேதரீன் டி மெடிசியால் தூண்டிவிடப்பட்ட கத்தோலிக்கர்கள், முன் ஆராய்ந்து முடித்திருந்த திட்டப்படி, ஹியூகிநாட்டுகளைத் தாக்கி, அவர்களில் 4,000-க்கும் மேற்பட்டவர்களைப் படுகொலை செய்தனர். இதுவே, 'செயின்ட் பார்தலமியு நாள் படுகொலை' என அழைக்கப்பட்டது.

பிராட்டஸ்டன்டியத்தைத் தாம் ஆதரித்தவராக இருந்த போதிலும் ஃபிரான்சுடன் செய்துகொண்டிருந்த நட்புக்கொள்கையினால், 'செயின்ட் பார்தலமியு நாள் படுகொலையை' எலிசபெத் அரசியார் கண்டிக்க முன்வரவில்லை. ஆயினும், இந் நிகழ்ச்சியால் ஆங்கில பிராட்டஸ்டன்டுகளின் மனம் கொதிப்படைந்ததால், இதைக் காரணமாகச் சுட்டிக்காட்டி, ஃபிரெஞ்சுக்காரர் கோரிய திருமணத் திட்டத்தைத் தள்ளிவைக்கும்படி இவ் வரசியார் கேட்டுக்கொண்டார். கி. பி. 1581ஆம் ஆண்டு வரையில் தாம் ஃபிரெஞ்சு இளவரசரை மணக்கத் தயாராகவே இருப்பதாகச் சொல்லிக்கொண்டு, அந் நாட்டை எலிஸபெத் நட்புக் கொள்கையினால் பிணைத்திருந்தார்.

ஆன்ஜூ கோமான் காலமடைந்ததால், அவரது சகோதரனை ஆலன்கான் டியூக்கை (Duke of Alencon) எலிசபெத் மணந்துகொள்ள வேண்டுமென் ஃபிரெஞ்சுக்காரர் கோரிய போதும் அரசியார் மறுப்பளிக்காமலும் உடன்படாமலும் சில ஆண்டுகள் காலத்தைக் கடத்தினர். எப்படியும், ஒரு நாள் தங்கள் இளவரசரை எலிசபெத் அரசியார் மணந்து கொள்வார் என்ற நம்பிக்கையில் ஃபிரெஞ்சுக்காரர் இங்கிலாந்துடன் இருந்து வந்த நட்பைப் பேணிக் காத்தனர்.

ஃபிரான்சின் நல்லுறவைத் தம் இராசதந்திரத்தால் பெற்றதோடன்றி, அதைத் தொடரச் செய்திருந்த இவ் வரசியார், இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தமது நாட்டின் பலத்தைப் பெருக்கி வந்தார். அத்துடன், ஸ்பானிய அரசரான இரண்டாம் ஃபிலிப்பின் கெடுபிடிக் கொள்கையினைப் ஃபிரெஞ்சுக்காரர் உதவியுடன் நெதர்லாந்தில் எதிர்ப்பதற்கும் எலிசபெத் இந் நல்லுறவினால் ஓர் அரிய வாய்ப்பினைப் பெற்றிருந்தார். சுருக்கமாகக் கூறின், ஆங்கில ஃபிரெஞ்சு உடன்பாட்டினால் இங்கிலாந்திற்கே அதிக நன்மைகள் கிடைத்திருந்தன. கி. பி. 1585ஆம்

ஆண்டு வரையில், ஆங்கில ஃபிரெஞ்சு உறவு எவ்வித மாற்றமும் இன்றிச் சுமுகமாகவே இருந்து வந்தது. ஆயினும், மூன்றும் ஹென்றியின் காலத்தில், ஃபிரான்சில் கத்தோலிக்கர்களுக்கும், ஹியூகிநாட்டுகளுக்கும் சமய சச்சரவு உச்ச கட்டத்தை அடைந்திருந்தபோது, ஃபிரெஞ்சு அரசின் சமய கொள்கையினை ஒப்புக்கொள்ளாதவராக, எலிஸபெத் அந் நாட்டுடன் மேற்கொண்டு நட்புக் கொள்கையை வளரவிடுவதில் ஆர்வம் காட்ட மறுத்து விட்டார்.

**எலிசபெத்தும் ஸ்காட்லாந்தும் (மேரி ஸ்காட்):** எலிசபெத் ஆட்சிக் காலத்தில் இவருக்கும் ஸ்காட்டிய அரசியான மேரிக்கும் (Mary of Scots) ஏற்பட்டிருந்த சச்சரவு, ஆங்கிலேயரின் வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெறுகின்றது.

ஏழாம் ஹென்றியின் காலத்தில் அவரது மகள் மார்கரெட், அன்றைய ஸ்காட்டிய அரசரான நான்காம் ஜேம்சுக்கு மண முடிக்கப்பட்டிருந்தும், பிளாடன் சண்டையினை ஒட்டி (எட்டாம் ஹென்றியின் காலம்) ஆங்கில-ஸ்காட்டிய உறவு சீர்கெட்டிருந்தது.

எலிசபெத் ஆங்கிலப் பட்ட உரிமையைப் பெற்றிருந்தபோது ஸ்காட்லாந்துக்கு மேரி அரசியாக இருந்தார். இவ் வரசியார் எலிசபெத்துக்குத் தம் தந்தை வழியிலே உறவினராவர்.




அழகும் வசீகரமும் கொண்டிருந்த மேரி ஸ்காட்டை ஆறும் எட்வர்டு காலத்தில் அரசியல் காரணத்திற்காக ஆங்கில அரசருக்கு மணமுடித்து வைக்க சோமர்செட் பிரபு போட்டிருந்த

திட்டம் கூடிவராததுடன், இவ்வரசியாரையும் ஃபிரான்சில் தஞ்சம் அடையச் செய்திருந்தது. ஃபிரான்ஸ் நாட்டிலேயே கல்வி பயின்று, தற்காப்புக்காக மேரி அங்கேயே தங்கியிருக்க, இவரது தாயார் மேரி குயிஸ் ஸ்காட்லாந்தில் காப்பாளர் ஆட்சியை அமைத்து ஆண்டுவந்தார். ஸ்காட்லாந்துக்குத் திரும்பி வராமலேயே இருந்து வந்த மேரி, கி.பி. 1558ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு இளவரசரான ஃபிரான்சிஸ் என்பவருக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டார். அடுத்த ஆண்டே இவரது கணவர் ஃபிரெஞ்சு மன்னர் இரண்டாம் ஃபிரான்சிஸாகப் பட்டமடைய, மேரி (ஸ்காட்) ஃபிரான்சு நாட்டுக்கும் அரசியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தார்.

மேரி (ஸ்காட்)-இரண்டாம் ஃபிரான்சிஸ் திருமணத்தினல் ஸ்காட்டிய-ஃபிரெஞ்சு உறவு மேலும் பலப்படுத்தப்பட்டிருந்தது. இவ்விரு நாடுகளுமே கத்தோலிக்க சார்பான கொள்கையினை ஏற்றுக் கொண்டிருந்ததால், ஒரு சமரச சமய திட்டத்தை இங்கிலாந்தில் புகுத்த முயற்சி செய்து வந்த எலிசபெத் அரசியாருக்குச் சற்று கலக்கம் இருந்து வந்தது. இதல்லாமல், எலிசபெத்தின் பெற்ருேர்களால் செய்துகொள்ளப்பட்டிருந்த திருமணம் போப்பாண்டவரின் அனுமதி இல்லாமலேயே முன்பு நிறைவேறியிருந்ததால், அத் திருமணக் கலப்பில் பிறந்த எலிசபெத், முறைப்படி பிறந்தவரல்லாதவராகவே கத்தோலிக்க திருச்சபையினரால் இன்னும் நினைக்கப்பட்டு வந்தார். எலிசபெத், ஏற்கெனவே ஆங்கிலப் பட்ட உரிமையை அடைந்திருப்பினும், ஐரோப்பிய கத்தோலிக்க நாடுகளுக்கு இவ் வரசியார் சட்டபூர்வமான ஆட்சியாளராகத் தென்படவில்லை. இங்கிலாந்தில் வாழ்ந்து வந்த கத்தோலிக்கர்களும் இதே எண்ணத்தைக் கொண்டவர்களாக இருப்பார்களென எலிசபெத் நினைத்திருந்ததில் வியப்பெதுவுமில்லை.

இந் நிலையில், ஃபிரான்சு நாட்டிலேயே இன்னும் இருந்துவந்த மேரி (ஸ்காட்), இங்கிலாந்தை ஆண்ட ஏழாம் ஹென்றியின் மகள் வழியில் தான் பிறந்திருந்ததால், ஆங்கிலேய அரசுக்கு வாரிசு கேட்கக்கூடிய அபாயமும் இருந்தது. மேரியை மணந்து கொண்டிருந்த இரண்டாம் ஃபிரான்சிஸ், தம் மனைவியே ஆங்கிலப் பட்டத்திற்கு உரியவர் எனக் கூறிக்கொண்டதோடன்றி, தம்மையும் இங்கிலாந்தின் மன்னரெனத் தம்பட்டம் அடித்துக் கொள்வதில் வீண் பெருமை கொண்டவராக இருந்தார்.

பிராடஸ்டன்டு சார்பான கொள்கையினை ஓரளவு தழுவி எலிசபெத் அரசியார், இங்கிலாந்தில் தம் திருச்சபைத் திட்டத்

தைச் செயல்படுத்தி வந்த நேரத்தில், அவ் வேற்பாடுகளைக் கண்டித்து ஸ்காட்டியர் ஆட்சி இருந்து வந்ததால், தம் அண்டை நாடான அத் தேசத்தில் கத்தோலிக்க மதம் தழைத்தோங்கி வருவதை இவ் வரசியார் விரும்பியவரா கவும் இல்லை.

மேற்கண்ட காரணங்களால், எப்படியும் ஸ்காட்டிய விவகாரங்களில் தலையிட்டுத் தம் ஆதிக்கத்தை அங்கு உறுதிப்படுத்த வேண்டுமென எலிசபெத் அரசியார் நினைத்து வந்த வேளையில், ஜான் நாக்ஸ் (John Knox) என்னும் பிராடஸ்டன்டியர் தலைமையில் ஸ்காட்லாந்தில் கத்தோலிக்க எதிர்ப்பியக்கம் தோன்றியது.

நாளுக்குநாள் தீவிரமடைந்த இவ் வியக்கம், ஸ்காட்லாந்தில் ஒரு கொந்தளிப்பான நிலைமையை உருவாக்கியது. நாட்டிலிருந்த சில கத்தோலிக்க திருக்கோயில்களும், மடங்களும் சூறையாடப்பட்டன. இங்ஙனம், வன்முறை தலை தூக்கியிருந்த நேரத்தில், பிராடஸ்டன்டியரின் கோபம் காப்பாளரான மேரி (குயிஸ்) மீது திரும்பி யிருந்தது. நிலைமையைச் சமாளிக்க முடியாதிருந்த ஸ்காட்டிய அரசாங்கம், இச் சந்தர்ப்பத்தில் ஃபிரான்சின் உதவியைக் கோரியது.

ஜான் நாக்ஸின் தீவிரப் பிராடஸ்டன்ட் கொள்கையினை எலிசபெத் அரசியார் விரும்பாதவராக இருந்தபோதிலும், அந் நாடு ஃபிரெஞ்சுக்காரர் ஆதிக்கத்தின்கீழ் வருவதை எதிர்ப்பவராக இருந்தார். இதனால், கி.பி. 1560ஆம் ஆண்டில் இவ் வரசியார் ஓர் ஆங்கிலக் கப்பற்படையை அனுப்பி, ஸ்காட்டிய பிராடஸ்டன்டுகளுக்கு உதவி புரியலானார். தக்க சமயத்தில் ஆங்கிலேய அரசி அளித்திருந்த உதவியால், ஸ்காட்டிய (பிராடஸ்டன்டு) பிரபுக்களால் அமைக்கப்பட்ட ‘இயேசு கிறிஸ்துவின் திருக்கூட்டம்’ (Congregation of Jesus Christ) என்ற கட்சியினர் லீபத் (Leith) நகரைக் கைப்பற்றி, ஸ்காட்டிய அரசரைப் பணியவைக்க முடிந்தது.

ஃபிரெஞ்சுப் படையெடுப்பு அபாயத்தைத் தவிர்த்ததிலும், பிராடஸ்டன்டியத்தை ஸ்காட்லாந்தில் காத்ததிலும் தம் மேலாதிக்கத்தை அங்கு ஓரளவு உணரச்செய்திருந்ததிலும் எலிசபெத் அரசியாருக்குப் பரம திருப்தியிருந்தது.

இதற்கிடையே, இரண்டாம் ஃபிரான்சிஸ் காலமடைந்ததால், கி.பி. 1560ஆம் ஆண்டில் விதவையாகிவிட்ட மேரி, தம் தாயகமான தாம் பட்ட உரிமை பெற்றிருந்த ஸ்காட்லாந்துக்குத் திரும்பினார்.

**எலிசபெத் மேரி சச்சரவு :** இக் கட்டத்திலிருந்தே எலிசபெத் மேரி (ஸ்காட்) சச்சரவு தோன்றலாயிற்று. தத்தம் குணங்களில் இரு துருவங்களாக இருந்த இவ் விரு பெண்ணரசிகளும் ஒருவரையொருவர் மிஞ்சும் வகையில் ஒருவருக்கொருவர் எதிராகச் சூழ்ச்சிகளைச் செய்து கொண்டிருந்தது எலிசபெத் அரசியாரின் இருபத்தெட்டு ஆண்டுக்கால வரலாறாக அமைகிறது.

மேரி (ஸ்காட்) நாடு திரும்பியிருந்தும் ஆட்சிப் பொறுப்பினை நேரிடையாக ஏற்றுக் கொள்ளாமல், தம் ஒன்றுவிட்ட சகோதரரும், மர்ரே எர்ல்லுமான ஜேம்ஸ் ஸ்டூவர்டு (James Sturat-Earl of Murray) என்பவரிடமே ஒப்படைத்திருந்தார். இக் காலத்தில் ஜான் நாக்ஸின் தீவிரப் பிரச்சாரத்தினால் ஸ்காட்லாந்தில் பிராடஸ்டன்டியம் வேகமாக வளர்ந்து வந்தது. ஆனாலும், மேரி, தொடர்ந்து கத்தோலிக்கச் சமயத்தில் பற்றுக்கொண்டவராக இருந்து வந்தார்.

தம் அண்டைய நாடான ஸ்காட்லாந்தில் அமைதி நிலவ வேண்டுமென அக்கறை கொண்டிருந்த எலிசபெத் அரசியாருக்கு, அந் நாட்டின் அரசியும் தம் செல்வாக்கிற்கு உட்பட்டிருக்க வேண்டுமென்ற பேராசையும் இருந்து வந்தது. அதனால், கணவனை இழந்த மேரிக்குத் தம் நட்புக்குக் கட்டுப்பட்டிருந்த லீசெஸ்ட்டர் எர்லை (Earl of Leicester) மறுமணம் செய்வித்து, ஸ்காட்லாந்தில் தம் அரசியல் அதிகாரத்தை வளர்க்க எலிசபெத் திட்டமிட்டார். இதற்கேற்ப, இப் பிரபுவையும் அரசியார் ஸ்காட்லாந்துக்கு அனுப்பி வைத்தார். ஆனால், மேரியின் திட்டம் வேறு விதமாக இருந்தது. தம் அரண்மனையில் விருந்தினராக லீசெஸ்ட்டர் பிரபு தங்கியிருக்க, அவரைப் புறக்கணித்துவிட்டுத் தம் நெருங்கிய உறவினரான டார்ன்லி பிரபுவை மேரி மறுமணம் செய்து கொண்டார்.

இத் திருமணமே வருங்காலத்தில் மேரி அரசியாருக்கு இன்னல்களைக் கொடுக்கக் கூடியதாக அமைந்தது. டார்ன்லி பிரபு, ஒரு கத்தோலிக்கராக இருந்ததுடன், ஆங்கிலப் பட்டத்தைத் தம் சார்பில் கேட்கக்கூடிய உரிமையையும் கொண்டவராக இருந்ததால், தம் திருமணத் திட்டம் தோற்றியிருந்த ஆத்திரத்தோடு இப்போது பயம் கலந்த வெறுப்பும் எலிசபெத்துக்கு ஏற்பட்டிருந்தது.

டார்ன்லி பிரபு ஒரு தீவிரக் கத்தோலிக்கராக இருந்ததால் ஸ்காட்டியப் பிராடஸ்டன்டுகளுக்கும் இத் திருமணம் எரிச்சலைக்

கொடுத்தது. இத் திருமணத்தை எதிர்த்துக் கலகம் செய்த மர்ரே எர்லும் நாடு கடத்தப்பட்டுவிட்டார்.




காதலிப்பதில் கண்மூடித்தனமாக நடந்து கொள்ளக்கூடிய மனநிலையைப் பெற்றிருந்த மேரி (ஸ்காட்), வெறுப்பைக் காட்டுவதிலும் கண்மூடித்தனமாகவே இருந்தார். உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்த இவ் வரசியார், அரசியல் கலையை உதாசீனப்படுத்தியவராகவே இருந்தார். சபல புத்தியையும் சந்தேக மனப்பான்மையினையும் கொண்டிருந்த டார்ன்லி பிரபுவுக்கும் சுயநலமும் காம வெறியும் கொண்டிருந்த மேரி ஸ்காட்டுக்கும் நாளாக ஆக, கசப்புணர்ச்சி மெல்லத் தோன்றி வந்தது.

தம் கணவர், தமக்கு உகந்தவராக இல்லாமலும் பயனற்றவராகவும் இருக்க, மேரி அரசியாருக்கும் டேவிட் ரிஜியோ (David Rizzio) என்ற இத்தாலிய இசைப் புலவருக்கும் பழக்கம் ஏற்பட்டது. ரிஜியோவைத் தம் காரியதரிசியாக மேரி அமர்த்தியதாலும் இந் நட்பினாலும் டார்ன்லி பிரபு பொறாமை கொண்டவரானார். மேரிக்கும், டேவிட் ரிஜியோவுக்குமிடையே கள்ளக் காதல் இருந்து வந்ததோ என்று பலர் ஐயப்பட்டு வந்தனர். அரசியாரின் பெயருக்கும் இதனால் இழுக்கு ஏற்பட்டது. ஏற்கெனவே பொருமிக்கொண்டு வந்த டார்ன்லி பிரபு தம்

பொறுமை இழந்தவராக ஒரு சில நண்பர்களுடன் சேர்ந்து சதித் திட்டமொன்று தீட்டினர். கி.பி. 1566ஆம் ஆண்டில், ஹாலிருடு அரண்மனையில் அரசியாரின் தனி அறையில் மேரியுடன் ரிஜியோ இரவு உணவு அருந்திக் கொண்டிருந்த வேளையில், டார்ன்லியும் அவர் ஆட்களும் திடுமென நுழைந்து அப் புலவரைத் தாக்கினர். ரிஜியோ, தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள மேரி அரசியாரின் மேசைக்கருகே பதுங்கிய போதும் எதிரிகள் அவரைப் பலவந்தமாக இழுத்து, அரசியாரின் கண் முன்னுலேயே துடிதுடிக்கக் கொன்றனர். இச் சம்பவம் டார்ன்லி பிரபுவை மேரி இன்னும் அதிகமாக வெறுக்கச் செய்திருந்தது.

ஆனாலும், மேரி தம் எண்ணத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாததுடன், டார்ன்லியுடன் நேசமாக இன்னும் தாம் இருப்பதாகப் பாவனை செய்து, தம் கணவரின் உதவி கொண்டே, மற்ற எதிரிகளிடம் இருந்து தப்பி, எடின்பர்க் நகரிலிருந்து மேரி, ஸ்டர்லிங் (Sterling) என்ற பாதுகாப்பான இடத்தை அடைந்தார்.

மூன்று மாதங்கள் கழித்து, இங்குத்தான் மேரி அரசியார் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார். இவரே கி.பி. 1603ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் அரசராக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியவரானர்.

கி.பி. 1567ஆம் ஆண்டில் டார்ன்லி பிரபு கடுமையாக நோய் வாய்ப்பட்டார். இன்னும், மேரி இவரிடம் அன்பு கொண்டவராகவே பாவனை செய்து வந்தார். எடின்பர்க் நகருக்கருகேயிருந்த 'கிர்க்-ஓ-ஃபீல்டு' என்ற மாளிகையில், 'அம்மை நோயினுல்' பீடிக்கப்பட்டிருந்த தம் கணவர் டார்ன்லி பிரபுவை ஒரு நாளிரவு மேரி தனியாகத் தங்கச் செய்திருந்தார். அன்றிரவு, அம் மாளிகை வெடிமருந்தினுல் தகர்க்கப்பட்டது; மறுநாள் காலை உயிரற்ற டார்ன்லியின் சடலம் அம்மாளிகைத் தோட்டத்திற்கு வெளியே கண்டெடுக்கப்பட்டது. இக் கொலைக்கு முக்கிய பொறுப்பாளியாகப் பாத்வெல் எர்லான (Earl of Bothwell) ஜேம்ஸ் என்பவரே சந்தேகிக்கப்பட்டார். இவர் கொலையுண்ட டார்ன்லி பிரபுவின் முக்கிய விரோதி என்பது நாடறிந்த உண்மை.

இக்கொலைக்கு மேரி அரசியார் உடந்தையாக இருந்தாரா என்பது சர்ச்சைக்குரியதாகவே இருந்தது; இன்னும் இருந்து வருகிறது.

சில காலத்திற்குப் பின்னர், சித்ரவதை தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள, பாத்வெல் பிரபுவின் ஆளொருவனுல்

காட்டப்பட்ட 'பேழைக் கடிதங்கள்' (Casket letters) இவ் வரசியாரைக் குற்றவாளியாக்கியிருந்தது. கி.பி. 1566ஆம் ஆண்டி லிருந்தே மேரி அரசியார், டார்ன்லி பிரபுவை ஒழித்துக்கட்ட, பாத்வெல் பிரபுவுக்கு இரகசியமாக எழுதியிருந்த கடிதங்களைப் பின்னவர் ஒரு வெள்ளிப் பேழையில் வைத்துப் பாதுகாத்து வர, அதுவே, இவ் வரசியாருக்கு எதிர்சாட்சியமாக அமைந்தது. ஆனால், உண்மையிலேயே அப் பேழையில் காணப்பட்ட கடிதங்களை மேரி எழுதினரா என்பது இன்னும் தீர்க்கப்படாத சந்தேகமாகும்.

எது எப்படியாயினும், டார்ன்லி பிரபுவின் கொலைக்குப் பாத்வெல் எர்ல் காரணமெனத் திட்டவட்டமாகத் தெரிந்திருந்தும், பாத்வெல்மீது அதற்கான வழக்குத் தொடரப்பட்டிருந்தும் தீர விசாரணை செய்யாமல் இவரை அரசியார் மன்னித்திருந்தது மற்றவரின் சந்தேகத்தைக் கிளறிவிட்டது.

இது மட்டுமன்றி, ஏற்கெனவே ஜேனட் கார்டன் (Janet Gordon) என்ற பெண்ணை மணம் புரிந்து கொண்டிருந்த பாத்வெல் எர்ல், அவளை விவாகரத்துச் செய்துவிட்டு, மேரி அரசியாரை மணந்து கொண்டார். இத் திருமணம் நாட்டிலே பலத்த எதிர்ப்பை உருவாக்கியது. பாத்வெல் எர்லும் ஓர் கத்தோலிக்க ராதலால் ஸ்காட்டிய பிராடஸ்டன்டுகள் தீவிரமாக, மர்ரே பிரபு வின் தலைமையில் கலகத்தில இறங்கினர். இவர்களுடன் பாத்வெல் எர்லின் மற்ற விரோதிகளும் பொறாமை கொண்டோரும் கொலையுண்ட டார்லியின் நண்பர்களும் சேர்ந்து கொண்டனர். பாத்வெல் துணையைக் கொண்டிருந்த மேரி அரசியார், இக் கலகக் காரர்களை அடக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தார்.

இரு தரப்பினரும், நாட்டிலே தங்கள் கட்சிகளுக்கு ஆதரவு தேடலாயினர். மர்ரே பிரபுவுக்கே உதவி அதிகமாகக் குவிந்தது. இரு தரப்பினரின் படைகளும் கார்பெரி குன்றுக்கருகே (Carberry Hill) மோதிக் கொண்டன. அரசியாரின் படைகள் செம்மை யாகப் புடைக்கப்பட்டன. இச் சண்டைக்கே காரணமான பாத்வெல் பிரபு, போர்க்களத்திலிருந்து தப்பியோட அனுமதிக்கப் பட்டார். அரசியாரைக் கௌரவமாக நடத்துவதாக வாக்களித்து, அவரது சரணாகதியைப் பெற்று, அக் கலகக்காரர்கள் மேரியை எடின்பர்க் நகருக்கு அழைத்துச் சென்றனர்.

மேரிக்குக் கொடுத்திருந்த வாக்குறுதியை புறங்கணித்தவர் களாக மர்ரே பிரபுவும் அவரது ஆட்களும் எடின்பர்க்கை

அடைந்ததால், இவ் வரசியாரை வற்புறுத்திப் பட்ட விலக்குப் பத்திரத்தில் கையெழுத்தைப் பெற்றனர். பட்டவிலக்குப் பெற்ற மேரி, லோச் லெவன் (Loch Leven) கோட்டையில் அடைக்கப்பட்டார். இதனைத் தொடர்ந்து, கடந்த ஆண்டு மேரி பெற்றெடுத்த பிள்ளையை ஸ்காட்லாந்தின் அடுத்த அரசராக (ஜேம்ஸ் VI) ஸ்காட்டியப் பிரபுக்கள் அறிவித்ததோடு, நாட்டின் காப்பாளராக மர்ரே பிரபுவை அமர்த்தினர்.

ஒன்பது மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்டிருந்த மேரி, அக் கோட்டையிலிருந்து தப்பி, இழந்த ஆட்சியை மீண்டும் பெறுவதற்கு எத்தனித்தார். இவருக்கு ஆதரவாக வடபுறத்துப் பிரபுக்களான ஹேமில்ட்டன் போன்றோர் உதவி செய்தனர். இருப்பினும், கி.பி. 1568ஆம் ஆண்டில் லாங்சைடு (Longside) என்னுமிடத்தில் நடந்த சண்டையில், மர்ரே பிரபுவினால் மீண்டும் மேரி தோற்கடிக்கப்பட்டார். ஆயினும், இம் முறை எதிரிகள் கையில் சிக்காமல் மேரி தந்திரமாகப போர்க்களத்திலிருந்து தப்பி, இங்கிலாந்தின் எல்லையை நோக்கி வந்தார்.

தாம் இழந்த ஆட்சியைப் பெறுவதற்கு எலிசபெத் அரசியாரின் உதவியை நாடியே மேரி இங்கிலாந்தின் எல்லையைக் கடந்து வந்ததால், ஆங்கிலேய அரசியார் ஸ்காட்டிய மாஜி அரசியார்மீது தம் பிடியை இறுக்கலானார். என்றைக்கிருந்தாலும் கத்தோலிக்கர்கள் ஒன்று சேர்ந்து, மேரியை மீண்டும் ஸ்காட்லாந்துக்கு அரசியாக்க முயலுவார்களென நினைத்த எலிசபெத், தமது பிடியிலிருந்து அவரைத் தளர்த்துவதில்லையென உறுதி கொண்டு, யார்க்ஷயரிலுள்ள போல்ட்டன் (Boulton) கோட்டையில் மேரியைச் சிறை வைத்தார்.

தமது எண்ணத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாது மேரியின் மீதிருக்கும் கொலைக்குற்றம் (டார்ன்லி கொலை) பொய்யென நிரூபணம் ஆகும் வரையில், தம்மால் அவளுக்கு எந்த உதவியும் கொடுக்க முடியாதெனத் திட்டவட்டமாக எலிசபெத் அறிவித்திருந்ததோடு, அவ் வழக்கினையும் தொடங்கினார். தம் மீது சுமத்தப்படும் குற்றத்தை விசாரிக்க அவருக்கு உரிமையில்லை என மேரி முதலில் அடம் பிடித்தபோதிலும், தன்மீது கொலைக் குற்றம் சுமத்தியிருந்த மர்ரே பிரபுவுடன் சேர்ந்து ஆங்கிலப் பிரபுக்களும் வெளி நாட்டுத் தூதுவர்களும் அடங்கியிருக்கக்கூடிய ஒரு மன்றத்தால் விசாரிக்கப்படுவதற்கு ஒப்புக் கொண்டார். இதன்படி, நார்ஃபோக் பிரபுவின் தலைமையில் இலண்டன் நகரில் விசாரணைக் குழுவொன்று கூடியது.

விசாரணைக்கு வரவழைக்கப்பட்ட மர்ரே பிரபு, இங்குத்தான் அந்த 'பேழைக் கடிதங்களை'க் காட்டினர். மேரி அக் கடிதங்களை எழுதினரென்று நிருபணம் செய்வதற்குப் போதிய சான்றுகள் இல்லை. அக் கடிதங்களைத் தாம் பார்வையிட வேண்டுமென மேரி கேட்டுக் கொண்டபோது, மர்ரே பிரபு அதற்கு மறுத்தார். இச் சூழ்நிலையில், இவ் விசாரணை ஓர் கண் துடைப்பாகவே இருந்தது.

**வடபுறத்துக் கலகம் :** மேரியின்மீது அனுதாபம் கொண்ட நார்ஃபோக் பிரபு, அவரது சார்பில் கி. பி. 1569ஆம் ஆண்டுக் கலகத்தில் ஈடுபட்டார். செஸில் பிரபுவைப் பதவியிலிருந்து விரட்ட வேண்டுமென்பதும் ஸ்பெயினுக்குச் சாதகமான வெளிநாட்டுக் கொள்கையையே எலிசபெத் பின்பற்றவேண்டுமென்பதும் இவரது இதரத் தேவைகளாக இருந்தன. நாட்டிலிருந்த சில கத்தோலிக்கர்களும் இவருக்கு ஆதரவாக ஆயுதந் தாங்கலாயினர்.

நார்ஃபோக் பிரபு சிறைப் பிடிக்கப்பட்டு விட்டார். ஆனல், இவரது ஆதரவாளர்கள் வடக்கு நோக்கிச் சென்று, நார்த்தம்பர்லாந்து, வெஸ்ட் போர்லாந்து பிரபுக்களுடன் சேர்ந்து கொண்டு, பெருங் கலகத்தில் இறங்கினர். மேரிக்கு ஆதரவாகவும், கத்தோலிக்க சமயத்தினர் சார்பாகவும் செயல்பட்ட இக் கலகக்காரர்கள், டர்ஹாம் நகரைக் கைப்பற்றி, ஆங்கிலப் பிரார்த்தனை நூலைப் பகிரங்கமாக எரித்ததோடன்றிக் கத்தோலிக்க வழிமுறைகளைச் செய்து காட்டினர். யார்க்ஷயரிலிருந்த டெட்கேஸ்ட்டர் (Tadcaster) வரை முன்னேறிவிட்ட இக் கத்தோலிக்க ஆதரவாளர்கள், தங்களுக்கு ஸ்பெயினிடமிருந்து உதவி கிடைக்குமெனவும் எதிர்பார்த்தனர். ஆனல், எந்த மேலுதவியும் இவர்களுக்குக் கிடைக்க வழியில்லாத நேரத்தில், எலிசபெத் இக் கலகத்தைக் கடுமையாக அடக்கினர். நார்த்தம்பர்லாந்து பிரபு உள்படப் பலர் தூக்கிலிடப்பட்டனர்.

இக் கலகத்திற்கு மேரி மறைமுகக் காரணமாக இருந்தாரென்பதை எலிசபெத் மறந்தவராக இல்லை.

கி. பி. 1570 ஆம் ஆண்டிலிருந்து ஸ்காட்லாந்தில் குழப்பமான நிலை தொடங்க அங்கு, காப்பாளராக இருந்த மர்ரே பிரபு கொல்லப்பட்டார்; அடுத்து அப் பதவியைப் பெற்றிருந்த லினக்ஸ் எர்லுக்கும் அதே கதி ஏற்பட்டது. மேரியை விடுதலை செய்து ஸ்காட்லாந்துக்கு அனுப்புமாறு அந் நாட்டுக் கத்தோலிக்

கர்கள் கேட்டுக் கொண்டபோதும் எலிசபெத் மறுத்தார். ஆங்கில அரசுக்கு வாரிசுரிமை கேட்ட மேரி, சுதந்திரமாக இருக்கக் கூடாதெனவும் அண்டை நாடான ஸ்காட்லாந்தில் கத்தோலிக்க அரசும் இருக்கக் கூடாதெனவும் எலிசபெத் நினைத்ததே இதற்குக் காரணமாகும்.

**ரிடால்ஃபி சதி:** எலிசபெத்தின் வலையில் சிக்குண்டு கிடந்த மேரி, அதிலிருந்து தப்பும் முயற்சியில் சில வழிகளைத் தேடலானார். இதில் ரிடால்ஃபி சதி முதலிடம் பெறுகிறது.

வடபுறத்தில் கலகம் செய்துவந்த கத்தோலிக்கர்களை எலிசபெத் இரக்கமில்லாமல் அடக்கியதையொட்டி, போப் பாண்டவர் இவ் வரசியாரைப் பட்டநீக்கம் செய்ததால், மேரி இதைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். ஃபிளாரன்டைன் வங்கியாளரான ரிடால்ஃபி (Ridolfi) என்பவரை மேரி தம் கையாளாக இரண்டாம் ஃபிலிப்பிடம் அனுப்பி, தமக்கு உதவியைக் கோரினார். இதன்படி எலிசபெத் கொலை செய்யப்படவேண்டுமென்றும், இதனைத் தொடர்ந்து ஆல்வா டியூக் தலைமையில் ஸ்பானியர் இங்கிலாந்தின் மீது படையெடுத்து மேரியை விடுவித்து, ஆங்கில அரசியாக்க வேண்டுமென்றும் ஸ்பானிய மன்னருக்கு யோசனைகள் தெரிவிக்கப் பட்டன. இரண்டாம் ஃபிலிப் இதைச் செயல்படுத்தத் தயங்கி வந்த வேளையில், இச் சதியின் விவரம் செசில் அமைச்சர்மூலமாக எலிசபெத்துக்குத் தெரிந்துவிட, மேரியின் இம் முதல் முயற்சி பிசுபிசுத்தது. இச் சதிக்கு உடந்தையாக இருந்தவர் என்று சந்தேகிக்கப்பட்டவரும், மேரியை மணக்கத் துடித்தவருமான அவரது அனுதாபி நார்ஃபோக் பிரபு, கொலைத்தண்டனை அடைந்தார். பாராளுமன்றம் இச் சதிக்கு மூலகாரணமாக விருந்த மேரியையும் தண்டிக்க விரும்பியபோது, அரசியல் குழப்பங்களைத் தவிர்க்க எலிசபெத் அதற்கு மறுப்பளித்தார்.

**துரோக்மார்ட்டன் சதி:** மேரி கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்தவராதலால், இவரது சார்பில் கி.பி.1583ஆம் ஆண்டில், ஃபிரான்சும், ஸ்பெயினும் இணைந்து, எலிசபெத்தை எதிர்க்க ஏற்பாடுகள் செய்தன. ஆங்கிலேயரின் காவலிலே அடைக்கப் பட்ட மேரி, இவ்விரு நாடுகளுடனும் இரகசியத் தொடர்பு கொண்டிருந்தார். துரோக்மார்டன் (Throckmorton) என்பவனே மேரிக்கும், குறிப்பாக ஸ்பானிய அரசரான இரண்டாம் ஃபிலிப்புக்கும் இரகசிய இடையாளாக இருந்து வந்தான்.

தமக்குப் படையுதவி கொடுத்தால் மூன்றே மாதங்களில் தாம் இங்கிலாந்தின் அரசியாக முடியுமென்றும், இங்குக் கத்தோலிக்க சமயத்தைப் புகுத்த முடியுமெனவும் மேரி செய்தியனுப்பினர். ஆனால், இம் முறையும் இரண்டாம் ஃபிலிப் தயங்கியதால், இச்சதி அம்பலமாகி விட்டது. துரோக்மார்ட்டன் பிடிபட்டுக் கொல்லப் பட்டதோடு, கட்டுக்காவல் அதிகமான டட்பரி கோட்டைக்கு (Tutbury Castle) மேரி அப்புறப்படுத்தப்பட்டதும் இவ் விரண்டாம் முயற்சியின் விளைவுகளாக இருந்தன.

**பாபிங்டன் சதி:** தம் இரண்டு சதித் திட்டங்களும் பயனில்லாமல் முறிந்ததால், அந்நிய உதவியும் கிடைக்க வழியில்லாமலிருக்க, தம் மகனும், ஸ்காட்டிய அரசருமான ஆரும் ஜேம்ஸாவது தம் உதவிக்கு வருவாரென்று மேரி எதிர்பார்த்தார். தம்மிடம் சிறைப்பட்டுக் கிடக்கும் மேரிக்கும், ஸ்காட்டிய அரசருக்கும் எவ்வித உடன்பாடும் ஏற்படாதபடி எலிசபெத், மிக விழிப்புடன் தம் அரசியல் தந்திரத்தைக் கையாண்டு வந்தமையால், மேரியின் இந்த எண்ணமும் பகற்கனவாக முடிந்தது.

மேரியின் நம்பிக்கையெல்லாம் நப்பாசையாக முடிந்ததால், கி.பி. 1586ஆம் ஆண்டில் இவரது ஆதரவாளர்கள் இன்னொரு சதித் திட்டத்தை உருவாக்கினர். எலிசபெத்தைக் கொன்று, ஸ்பானியரின் உதவியால் மேரியை ஆங்கிலப் பட்டத்திற்கு உரியவராக்கவேண்டுமெனத் தீட்டப்பட்ட இச் சதிக்கு அந்தோணி பாபிங்டன் (Antony Babington), பாதிரி பேலர்டு (Ballard) என்ற இரு கத்தோலிக்கர்கள் தலைவர்களாக இருந்தனர். இச் சதித் திட்டத்தை மையமாகக் கொண்டு மேரிக்கும், பாபிங்டனுக்கும் இடையே கடிதங்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டன. மேரியின் பணியாளரான கிஃபோர்டு (Gifford) என்பவனை எலிசபெத் அரசியாரின் உளவாளிகள் வயப்படுத்தி, அக் கடிதங்களின் நகல்களைத் தயாரித்து வைத்திருந்தனர். இத் திட்டத்திற்கே அரசியாரின் பேரமைச்சர் வால்ஷிங்காம் மிக முக்கிய துணையாக இருந்தார். இச் சதி முன்கூட்டியே கண்டு பிடிக்கப்பட்டு விட்டதால், அந்தோணி பாபிங்டனும் அவரது உதவியாளர்களான மற்ற பதின்மூன்று பேர்களும் பிடிக்கப்பட்டு விசாரணையின் பின்னர் கொல்லப்பட்டனர்.

**மேரியின் கொலை:** மேரிக்கும் இச் சதியில் பங்குண்டு எனக் கருதப்பட்டதால், கி.பி. 1586ஆம் ஆண்டில் போதரிங்கேய் (Fotheringhay) கோட்டையில் தனி விசாரணையொன்று ஏற்பட்டாயிற்று. தமக்குப், பாபிங்டன் சதிக்கும் எவ்விதத் தொடர்பும்

இல்லையென்றும், 'சுதந்திர அரசியான' தம்மை விசாரிக்கவும் பிறருக்கு அதிகாரம் இல்லையெனவும் குறுக்கு வாதம் செய்த மேரிக்கு எதிராக அவரால் எழுதப்பட்ட அக் கடிதங்களின் நகல்கள் சாட்சியங்களாகத் தாக்கல் செய்யப்பட்டன. தம்மீது சாட்டப்பட்ட குற்றங்களை இனிமேலாவது ஓரளவு ஒப்புக் கொண்டுவிட்டால், தமக்குத் தண்டனை கிடைக்காது என நம்பி, இப் பேதை மேரி, தமக்கும் அச் சதியில் பங்குண்டு என அரை மனத்துடன் ஒப்புக்கொண்டார்.

'மேரி உயிரோடு இருக்கும் வரையில் எலிசபெத் அரசியாருக்குப் பாதுகாப்பு இருக்க முடியாது' என நம்பிய இவ் விசாரணைக் குழு, அதற்கேற்ப பாராளுமன்றத்திற்குச் சிபாரிசு செய்ய, இம் மன்றமும் மேரிக்கு மரண தண்டனை விதித்தது.

இரண்டு மாதங்கள், அத் தண்டனையை நிறைவேற்றக்கூடிய அவ் வுத்தரவில் எலிசபெத் கையொப்பமிடாமல் தயங்கி வந்தார். இறுதியில், தம் காரியதரிசி டேவிசன்மூலமாக உத்தரவை அனுப்பி மேரியின் கொலைத்தண்டனையை நிறைவேற்றினர்.

துணிவுடன், கம்பீரமாகத் தம் சாவை ஏற்றுக்கொண்ட மேரி, கத்தோலிக்க சமயத்தின் மேன்மைக்காக உயிர் துறப்பதாகச் சொல்லித், தண்டனையை ஏற்றார்.

மேரியின் தலை கொய்யப்பட்டது. மேரியைக் கொன்றதில் தமக்கு விருப்பமில்லையென்று பிறர் நம்பும்படி எலிசபெத் கூறிக் கொண்ட போதிலும், அதற்கு இவரே பொறுப்பாளி என்பது வரலாற்றின் முடிவு.

எலிசபெத் ஆட்சியின் முதல் ஒன்பது ஆண்டுகளில் ஸ்காட்டிய அரசியாகவும், அடுத்த பத்தொன்பது ஆண்டுகளில் அவரது சிறைக் கைதியாகவும் இருந்த மேரியின் சரிதை, மனித வரலாற்றின் சோகக் கதைகளில் ஒன்றாக அமைகிறது.

## எலிசபெத்தும் ஸ்பெயினும் (இரண்டாம் ஃபிலிப்)

தம் தமக்கை மேரி டியூடரை மணந்து, 'இங்கிலாந்தின் மன்னர்—தோழர் பிரான்' (England's King-Consont) எனப் பட்டத்தை முன்பு கொண்டிருந்த ஸ்பானிய அரசரான இரண்டாம் ஃபிலிப், எலிசபெத் அரசியாரின் காலத்தில் இங்கிலாந்தின் முக்கிய எதிரியாக விளங்கினர்.

இரண்டாம் ஃபிலிப் (கி.பி 1556—1598) வளமும், பலமும் கொண்ட ஒரு பேரரசுக்குத் தலைவராக இருந்தவர். எலிசெபத், தாம் பட்டத்திற்கு வந்திருந்தபோது தம் நாடு இருந்த நலிந்த நிலைமையை மனத்தில் கொண்டவராக இப் பேரரசருடன் சமாதானக் கொள்கையே கொண்டிருந்தார். ஃபிரான்சு நாட்டுடன் போர் நிலைமை ஏற்கனவே நீடித்துவந்த அந் நேரத்தில, மேரியின் (ஸ்காட்) ஃபிரெஞ்சுத் திருமணத்தைத் தொடர்ந்து இங்கிலாந்துக்கு எதிராக, ஃபிரெஞ்சு-ஸ்காட்டிய உடன்பாடும் ஏற்படக் கூடிய அபாய நிலைமை இருந்து வந்தது. அங்ஙனம், ஒரு கூட்டு ஏற்பட்டால், அப்போதிருந்த நிலைமையில் அந் நாடுகளை எதிர்க்கக்கூடிய திறன் தம் நாட்டுக்கு இல்லையென்பதை எலிசெபத் உணர்ந்து ஸ்பெயின் நாட்டுடன் நட்புறவைக் கொள்ள வேண்டியவரானார்.

ஆங்கில அரசுக்குத் தாம் எசமானராகவேண்டுமென்ற ஆசையால் எலிசபெத்தை மணக்க இரண்டாம் ஃபிலிப், தம் எண்ணத்தைத் தெரிவித்துக்கொண்டபோதும் இந்த யோசனையை அவ் வரசியார் ஏற்றுக்கொள்ளாமலும் நிராகரிக்காமலும் காலங் கடத்தி வந்தார். என்றாவது ஒருநாள் தம் திருமணத் திட்டம் பலிக்குமென்ற நப்பாசையில் இரண்டாம் ஃபிலிப்பும் ஆங்கிலேயரின் அரசியுடன் நட்புறவுக் கொள்கையைக் கொண்டிருந்தார். எலிசபெத் அரசியாருக்கு அவரது எதிரிகளிடமிருந்து எவ்வித ஆபத்தும், வராதபடி கண்காணிக்கும்படியும் இரண்டாம் ஃபிலிப், இங்கிலாந்திலிருந்த தம் ஸ்பானியத் தூதுவரைப் பணித்திருந்தார். மேலும் எலிசபெத்துடன் தாம் கொண்டிருந்த நல்லுறவைத் தெளிவாக்குவதும்போல், 'கேட்டியோ காம்பிரசஸ், (கி.பி. 1559) உடன்பாட்டின்போது இங்கிலாந்துக்குக் கலே நகரத்தைக் கொடுத்து விடும்படி இரண்டாம ஃபிலிப், ஃபிரெஞ்சு அரசரைக் கேட்டுக்கொண்டார். எல்லாவற்றிற்கும் மேலாக, எலிசபெத்மீது எவ்விதச் சமய தண்டனையையும் போப்பாண்டவர் விதிக்காதபடியும் இரண்டாம் ஃபிலிப் தவிர்த்தார்.

ஆனல், ஆரம்ப கால இந்த நட்புறவு, இரு நாடுகளுக்கிடையே தொடர்ந்து நீடிக்க முடியாதபடி சூழ்நிலை சந்தர்ப்பங்கள் தோன்றின.

**நெதர்லாந்து போர் :** அரசியல், பொருளாதார, சமய காரணங்களால், ஸ்பெயினின் ஆட்சிக்குட்பட்டிருந்த நெதர்லாந்தில் (Netherlands) கி. பி. 1566ஆம் ஆண்டில் சுதந்திரப் போர் தொடங்கியிருந்தது.

அந் நாட்டின் வடபகுதியில் பிரபலமடைந்து வந்த பிராடஸ்டன்டியத்தைப் பல தடைச்சட்டங்களாலும், கடுமை வாய்ந்த உயர் வழக்குச் சமய மன்றத்தினலும் (Court of Inquisition) தீவிரக் கத்தோலிக்கரான இரண்டாம் ஃபிலிப் அடக்க முற்பட்ட போது, அங்கிருந்த பெரும்பாலோரான பிராடஸ்டன்டுகள், ஆரஞ்சு வில்லியம் (William of Orange) என்பவரது தலைமையில் கலகம் செய்தனர்.

பிராடஸ்டன்டு சமயத்திற்கு உதவியளிக்கக் கடமைப்பட்டிருந்த எலிசபெத் அரசியார், அக் கலகக்காரர்களுக்கு மறைமுக உதவியைக் கொடுத்து வந்தது இரண்டாம் ஃபிலிப்புக்குக் கோபத்தைக் கிளறியிருந்தது.

**கடலோடிகளின் கொள்ளை :** அமெரிக்காவில் தமக்கு உரியதாக இருந்த பல குடியேற்றங்களிலிருந்து, அக் காலத்தில் ஏராளமான வெள்ளியும் விலைமதிக்க முடியாத பிற பொருள்களும் கப்பல்களிலே அட்லாண்டிக் மாகடல் வழியாகத் தாய் நாடான ஸ்பெயினுக்கு அனுப்பப்பட்டு வந்தன. ஸ்பெயின்மீது பொருமையும் கொள்ளைமீது ஆர்வமும், வீரதீர காரியங்களைச் செய்ய வேண்டுமென்ற ஆசையும் ஹாக்கின்ஸ், டிரேக், வால்ட்டர் ரேலே போன்ற சில துணிச்சல்காரர்களைத் தூண்டியதால், நடுக் கடலில் வழிமறித்து ஸ்பானிய (பொக்கிஷக்) கப்பல்களை அவர்கள் அப்போதைக்கப்போது கொள்ளையடிக்கலாயினர். சிற்சில சமயங்களில் ஸ்பானியருக்குச் சொந்தமான அமெரிக்கக் குடியேற்றங்களையும் தாக்கிக் கொள்ளையடித்தனர். இவர்களே 'கடலோடிகள்' என அழைக்கப்பட்டனர்.

இவர்களின் தொல்லைகளால் மிகவும் அவதிக்குட்பட்டிருந்த ஸ்பெயினின் அரசரான இரண்டாம் ஃபிலிப், அதைக் கண்டிக்கும்படி பலமுறை கேட்டுக்கொண்டும், எலிசபெத் வாளாவிருந்தார். தமக்கும் அக் கடலோடிகளுக்கும் எவ்வித உறவும் இல்லையெனவும் ஸ்பானிய தூதுவரிடத்தில் கொல்லிக் கொண்டார். இதை ஓரளவு இரண்டாம் ஃபிலிப் நம்ப வேண்டியவரானர்.

ஆனல், கடலோடிகளில் மிக முக்கியமானவரான டிரேக், கி.பி. 1577 ஆம் ஆண்டில் தம் கப்பலில் உலகம் சுற்றி, வழியெல்லாம் ஸ்பானியக் குடியேற்றங்களைத் தாக்கி நாடு திரும்பியிருந்த போது, அவரது அச் செய்கையைப் பாராட்டி எலிசபெத் அரசியார் டிரேக்குக்கு 'நைட்' (Knight) பட்டத்தைச் சூட்டிப் பெருமைப் படுத்தியபோது ஃபிலிப் மன்னர் பெருத்த ஆத்திரம் கொண்டார்.




எலிசபெத் காலத்திய கடலோடிகள்

**மேரி ஸ்காட் விவகாரம்:** போப்பாண்டவரான ஐந்தாம் பயஸ், கி.பி. 1570ஆம் ஆண்டில், எலிசபெத்தின் சமய கொள்கையினைக் கண்டிக்கும் வகையில் இவ் வரசியார் பட்டவிலக்கம் செய்யப்பட்டிருந்ததையொட்டி, ஆங்கில அரசுக்கு எதிராகத் தீட்டப்பட்ட ஒவ்வொரு சதி முயற்சியிலும் இரண்டாம் ஃபிலிப், தம்மை நேரிடையாகவோ மறைமுகமாகவோ உள்படுத்திக் கொண்டிருந்தார். இங்கிலாந்திலிருந்த ஸ்பானியத் தூதுவர் மென்டோசா (Mendoza) என்பவர், இரண்டாம் ஃபிலிப்பின் கையாளாக இதற்கெல்லாம் நாயகமாக விளங்கினர்.

எலிசபெத்தைக் கொன்று, அவரால் சிறைப்படுத்தப்பட்ட மேரியை (ஸ்காட்) இங்கிலாந்தின் அரசியாக்குவதே அந்தச் சதிகளின் குறிக்கோளாக விளங்கின. மேரி கத்தோலிக்கர் ஆதலால், இரண்டாம் ஃபிலிப் அவருக்கு ஆதரவு காட்டியதில் வியப்பில்லை.

ரிடால்ஃபி (கி.பி. 1571), துரோக்மார்ட்டன் (கி.பி. 1583), அந்தோணி பாபிங்டன் (கி.பி. 1586) போன்றோர்களின் சதிகள் எல்லாம் இரண்டாம் ஃபிலிப்பின் உதவியைக் கோரியே தீட்டப் பட்டன. இச் சதிகளைச் செயல்படுத்துவதில் இரண்டாம் ஃபிலிப் தயக்கம் காட்டிய போதிலும், இவற்றால் இங்கிலாந்து—ஸ்பானிய உறவு முறிந்து வந்தது.

மேரி (ஸ்காட்) கொலைத் தண்டனை அடைந்ததில் பெரும் அதிர்ச்சி கொண்ட இரண்டாம் ஃபிலிப், அதற்குக் காரணமான எலிசபெத்மீது ஆத்திரமடைந்ததில் வியப்பேதுமில்லை. இஃதன்றி, மேரியின் கொலை இன்னொரு வகையிலும் எலிசபெத்—இரண்டாம் ஃபிலிப் சச்சரவுக்குக் காரணமாக அமைந்தது.

தாம் உயிரோடு இருந்த நாள்வரையில் ஆங்கில அரியணைக்கு உரிமை கொண்டாடி வந்த ஸ்காட் மேரி கொல்லப்பட்டதால், இரண்டாம் ஃபிலிப் ஆங்கில வாரிசுக்கு உரிமை கொண்டாடினர். பட்டவிலக்கம் அடைந்த எலிசபெத், இங்கிலாந்தை ஆள அருகதை யற்றவர் என விளக்கம் கொடுத்த இரண்டாம் ஃபிலிப், தம் மனைவியும் முன்னள் அரசியுமான மேரி டியூடரின் உயில்படி, ஆங்கில அரச பட்டம் தம்மையே அடையவேண்டுமெனக் குரல் கொடுத்தார். இரண்டாம் ஃபிலிப்பின் இக் கோரிக்கை ஏற்கெனவே கெட்டிருந்த இரு நாடுகளின் உறவை மேலும் பாதித்தது.

**இதர காரணங்கள்.** இங்கிலாந்தில் பிராட்டஸ்டன்டு சமயத்தை ஆதரிக்க வேண்டியிருந்த எலிசபெத், ஐரோப்பாவில்

ஏற்பட்ட சமய சீர்திருத்த எதிர்ப் புரட்சிக்குத் தம்மைத் தலைவராக ஆக்கிக்கொண்ட இரண்டாம் ஃபிலிப்பிடம் வெறுப்பு வளர்ந்து வந்த சூழ்நிலையில், தம் ஆட்சிக்கெதிராகச் சதித் திட்டங்களையும் தீவிர சமய பிரச்சாரங்களையும் செய்து வந்த கத்தோலிக்கர்களுக்கு எதிராகப் பாராளுமன்றத்தின்மூலம் பல தடைச் சட்டங்களைக் கொண்டு வந்தார். ஐந்தாம் சிக்ஸ்டஸ் (Sixtus V) என்ற போப்பாண்டவர், இங்கிலாந்தின்மீது படையெடுத்து, எலிசபெத்தின் ஆட்சியை அகற்றும்படி இரண்டாம் ஃபிலிப்பைத் தொந்தரவு கொடுத்து வரலானர். இங்கிலாந்தைத் தாக்கும் எண்ணம் கொண்டவராகத் தகுந்த சந்தர்ப்பத்தை இரண்டாம் ஃபிலிப் எதிர் நோக்கிக்கொண்டிருந்ததைத் தெரிந்து கொண்ட எலிசபெத், தம் கடலோடிகளை மேலும் தூண்டிவிட்டதோடன்றி, நேரிடையாகவே நெதர்லாந்து விவகாரத்தில் தலையிட்டார்.

அரசியாரின் அனுமதியைப் பெற்ற மமதையில், டிரேக் போன்ற கடலோடிகள், இன்னும் தீவிரமாகக் கொள்ளைச் செயல்களில் ஈடுபட்டனர். பெரு (Peru) பகுதியில் ஸ்பெயினுக்கு அனுப்பப்படுவதற்காகக் குவித்து வைக்கப்பட்டிருந்த வெள்ளி சூறையாடப்பட்டது (கி. பி. 1572). ஸ்பானிய குடியேற்றங்களின் முக்கிய துறைமுகங்களான லீமா (Lima), வால்பெராயிசோ போன்ற நகரங்கள் சூறையாடப்பட்டன (கி. பி. 1577). நடுக்கடலில் கடலோடிகளின் வேட்டை இன்னும் தீவிரமாகியது. பல ஸ்பானியக் கப்பல்கள் கொள்ளையடிக்கப்பட்டதோடு, அதன் மாலுமிகளும் கடலோடிகளால் சிறைப்பிடிக்கப்பட்டனர்.

கடலோடிகளின் இந்த அடாத செயல்கள் இரண்டாம் ஃபிலிப்பின் வெறியைத் தூண்டிவிட்டது.

நெதர்லாந்து சுதந்திரப் போரில் வட மாகாணங்களுக்குத் (ஹாலந்து) தலைவராக இருந்த ஆரஞ்சு வில்லியம் என்பவர் இரண்டாம் ஃபிலிப்பினல் ஏவி விடப்பட்ட கத்தோலிக்க வெறியன் ஒருவனல் கொல்லப்பட்டதால், அந் நாட்டு பிராடஸ்டன்டுகள் எலிசபெத் அரசியாரை நெதர்லாந்தின் பட்டத்தை ஏற்றுக் கொள்ளும்படி கூறினர். இவ் வரசியார் அதற்கு மறுப்பளித்தபோதிலும், பார்மா பிரபுவின் (Duke of Parma) தலைமையில் ஸ்பானிய வீரர்கள் அங்கு அடாத செயல்களைச் செய்து எதிர்ப்பாளர்களை அடக்கியதால், இதனல் மனம் பொறுக்காத எலிசபெத் அரசி, கி. பி. 1585 ஆம் ஆண்டில் லீஸ்ட்டர் எர்லின் தலைமையில் ஓர் ஆங்கிலப் படையை நெதர்லாந்துக்கு அனுப்பி வைத்தார்.

எலிசபெத்தின் இச் செய்கையும் இரண்டாம் ஃபிலிப்புக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது.

இங்கிலாந்துக்கும், ஸ்பெயினுக்கும் இடையே தப்பாது இனி, போர் என்ற ஒரு சூழ்நிலை கி. பி. 1587 ஆம் ஆண்டில் உருவாகி விட்டது.

கத்தோலிக்க எதிர்ப்பாளர்களுக்கும் கடலோடிகளுக்கும் ஸ்பானிய ஆதிக்க எதிர்ப்புக்கும் தலைமை தாங்கி வந்த எலிசபெத்தின் ஆட்சியைக் கவிழ்ப்பதையே தம் முக்கிய கடமையாக இரண்டாம் ஃபிலிப் நினைத்து. இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற்கான திட்டத்தைத் துரிதப்படுத்தினர்.

இந் நிலையில், ஸ்பானியக் கப்பற்படையை இரண்டாம் ஃபிலிப் இங்கிலாந்தின் மீது ஏவுவதற்கு முன்னரேயே, தம் கடலோடிகளை ஸ்பெயின்மீது ஏவிவிட எலிசபெத் துணிந்தார். டிரேக் என்பவரின் தலைமையில் 24 கப்பல்கள் கொண்ட ஒரு கப்பற்படை ஸ்பெயினுக்கு அனுப்பப்பட்டது. ஸ்பானியக் கப்பற்படையின் தலைமையிடமான காடிஸ் (Cadiz) என்னும் துறைமுகத்தைத் தாக்கி, அங்கிருந்த நூற்றுக்கு மேற்பட்ட ஸ்பானியக் கப்பல்களை டிரேக் தீக்கிரையாக்கினர்.

தாம் இரண்டாம் ஃபிலிப்பின் தாடியைப் பொசுக்கிவிட்டு வந்ததாகப் ('Singeing the Spanish King's beard') பெருமை பேசி, இங்கிலாந்துக்குத் திரும்பிய டிரேக், அரசியாரால் பாராட்டுப் பெற்றார்.

இங்கிலாந்துக்கும் ஸ்பெயினுக்கும் இடையே தொடங்கவிருந்த போருக்கு இதுவே இறுதியான காரணமாக இருந்தது.

**ஸ்பானிஷ் ஆர்மாடா (கி. பி. 1588):** அன்றைய உலகப் பேரரசான ஸ்பெயினை எதிர்த்து நின்ற இங்கிலாந்துக்கு உதவி செய்ய நட்பு நாடுகள் எதுவுமில்லை. ஆனால், சுயபலத்தை நம்பியிருந்த ஆங்கிலேயருக்குத் தன்னம்பிக்கை நிறைய இருந்தது.

டிரேக்கின் நண்பரான ஃபென்னர் (Fenner) என்பவர், தன்னம்பிக்கை தொனிக்க, ஆங்கிலேயரின் 12 கப்பல்கள் ஸ்பெயினின் கடற்படையை அழிக்க வல்லது எனக் குறிப்பிட்டிருந்ததை நாட்டு மக்கள் அப்படியே நம்பவில்லையெனினும், ஸ்பானிய படையெடுப்பைக் கண்டு அஞ்சாமல் போருக்குத் தோள் தட்டித் தயாராகவே இருந்தனர்.

இங்கிலாந்தைத் தாக்கும் திட்டமாக, இரண்டாம் ஃபிலிப் ஓர் இராணுவ ஏற்பாட்டைச் செய்திருந்தார். அத் திட்டத்தின்படி, 18,000 போர் வீரர்களையும், 8,000 கப்பற்படை வீரர்களையும், 2,600 பீரங்கிகளையும் கொண்ட 132 ஸ்பானிய போர்க் கப்பல்கள், மெடிஞ சிடோனியா (Duke of Medina Sidonia) என்பவரின் தலைமையில் ஆங்கிலக் கால்வாயில் ரோந்து சுற்றிவரும் ஆங்கிலக் கப்பல்களை விரட்டியடிக்க வேண்டும். அச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு, நெதர்லாந்தில் இருந்து வரும் புகழ் பெற்ற ஸ்பானியத் தளபதி, தம் 30,000 வீரர்களுடன் ஆங்கிலக் கால்வாயைப் படகுகள்மூலம் கடந்து, இங்கிலாந்தின்மீது படையெடுக்க வேண்டுமென முடிவாகியிருந்தது.

இரண்டாம் ஃபிலிப் கூட்டியிருந்த இப் பெரிய (கப்பல்) படையே 'தோல்வி பெற முடியாத கப்பற்படை' (The Invincible Armada) என் ஸ்பானியர்களால் பெருமையுடன் அழைக்கப் பட்டது.

இரண்டாம் ஃபிலிப்பின் ஆர்மாடாவைப்பற்றி இங்கிலாந்துக்குச் செய்தி எட்டியதால், நாட்டின் பாதுகாப்பைக் கோரி எலிசபெத் தனக்கு உதவி செய்யும்படி மக்களுக்கு அறை கூவல் விடுத்தார். தங்களின் நாட்டுப்பற்றினைக் காட்ட வேண்டிய சந்தர்ப்பத்தைப் பெற்றிருந்த பெருவாரியான ஆங்கில மக்கள், எலிசபெத் அரசியாருக்கு வேண்டிய உதவியைக் கொடுக்க முன் வந்தனர். பார்மா பிரபுவின் தலைமையிலிருக்கும் அப் பெரும் படை, இங்கிலாந்தை எப்படியும் அடைய விடாமல் தடுக்க வேண்டுமாயின், ஆர்மாடாவைக் கடலிலேயே முறியடிக்கவேண்டிய பெரும் அவசியம் ஆங்கிலேயருக்கு இருந்தது. வாழ்வா, தாழ்வா என்பது ஆங்கிலேயரின் கற்படைத் தயவிலேயே இருந்தது.

எலிசபெத் அரசியாருக்குச் சொந்தமான 34 போர்க் கப்பல்களும் 160 சிறிய கப்பல்களும் அவசர அவசரமாக வரப்போகும் சண்டைக்குத் தயார்ப்படுத்தப்பட்டன. 800 சிறு பீரங்கிகளையும், 7,000 வீரர்களையுமே கொண்டிருந்த ஆங்கிலக் கப்பற்படைக்கு எஃப்பிங்காம் பிரபுவான ஹோவார்டு (Howard of Effingham) என்பவர் தலைவராக்கப்பட்டார். புகழ்பெற்ற கடலோடிகளான ஹாக்கின்ஸ், டிரேக், வால்ட்டர் ராலே போன்றோர் ஹோவார்டுக்கு உதவியாளர்களாக அமர்த்தப்பட்டனர். எண்ணிக்கையில் ஆங்கிலக் கப்பற்படை சிறியதாக இருப்பினும், கடற் போரிலே பயிற்சியும் அனுபவமும் பெற்றிருந்த மாலுமிகளும் வீரர்களும் தளபதிகளும் குவிந்திருந்ததால், இது பெருங் குறை

யாகப் படவில்லை. எண்ணிக்கையில் அதிகமாக இருந்த ஸ்பானியர் கப்பற்படை, சமயத்திற்கேற்றபடி, போர்ப் பணிக்கு மாற்றப்பட்டிருந்த சாதாரண கப்பல்களைக் கொண்டதாகவும் கடற்போரில் தேர்ச்சி இல்லாதவர்களைத் தளபதிகளாகவும் வீரர் களாகவும் கொண்டிருக்க, கடுமையான கடற்போருக்குப் பொருத்தமில்லாததாகவே இருந்தது.

இரண்டாம் ஃபிலிப்பினுல் சமீபத்தில் (கி.பி. 1580) கைப்பற்றப் பட்டு ஸ்பெயின் அரசுடன் இணைக்கப்பட்டிருந்த போர்ச்சுகலின் துறைமுகமான லிஸ்பனிலிருந்து (Lisbon) போப்பாண்டவரின் ஆசிபெற்று ஸ்பானிய ஆர்மாடா கி.பி. 1588 மே மாதத்தில் புறப்பட்டது. தொடக்கத்திலிருந்தே கடற்காற்று நிலை ஸ்பானிய கப்பல்களுக்குப் பாதகமாகவே இருந்தது. இந்த இயற்கை இடர்ப்பாடுகளைச் சமாளித்துக்கொண்டு, ஆர்மாடா ஜூலை மாதம் 20ஆம் நாள் சனிக்கிழமையன்று ஆங்கிலக் கால்வாயை அடைந்தது, அப்போது பிளிமத் (Plymouth) துறைமுகத்தி லிருந்து புறப்பட்டு வந்த ஆங்கிலக் கப்பற்படை எதிர்ப்பட்டது. ஸ்பானியர்களின் யூகத்திற்குப் புறம்பாக ஆங்கிலக் கப்பல்கள் நெருங்கி வந்து சண்டையிடாமல், எட்டியிருந்தபடியே சுட ஆரம்பித்தன. ஆர்மாடாவைக் குறுக்கும் நெடுக்குமாகக் கடந்து சென்ற ஒவ்வோர் ஆங்கிலக் கப்பலும், தூரத்திலிருந்தபடியே ஸ்பானியக் கப்பல்களைப் பீரங்கிகளால் தாக்கிச் சேதப்படுத்தின.

போர்ட் லாந்துக்கருகே (Portland) நடந்த இச் சண்டையில் ஸ்பானியக் கப்பல்களின் எதிர்த்தாக்குதல் பலனளிக்கவில்லை. மிக உயரமாயிருந்த அக் கப்பல்களின் தளத்திலிருந்து சுடப் பட்ட பீரங்கிக் குண்டுகள் குறி தவறியே விழுந்தன. மேலும், ஆங்கிலேயக் கப்பல்கள் சிறியவையானதால், வேகமாகச் செல்லக் கூடியவைவாக இருந்தன. இக் கப்பல்கள், நினைக்கும் நேரத்தில் செல்லும் திசையிலிருந்து சுலபமாகத் திரும்பக் கூடியனவாகவும் இருந்தன. இக் கப்பல்கள், ஆர்மாடாவைச் சுற்றிச்சுற்றி வந்து பலமாகச் சேதப்படுத்தின. நிறைய சேதங்களுடன் மெல்ல மெல்ல ஊர்ந்து டோர்செட் (Dorset) பகுதியை அடைந்த ஆர்மாடா, மீண்டும் அங்கிருந்து ஆங்கிலக் கப்பல்களினுல் விரட்டி யடிக்கப்பட்டன.

இங்கிருந்து விரட்டியடிக்கப்பட்ட ஸ்பானியக் கப்பல்கள் கலே கரையினை அடைந்து நங்கூரம் பாய்ச்சி நின்றன. ஆர்மாடா வின் தலைவரான மெடினு சிடோனியா இங்கிருந்து, நெதர்லாந்தில் படையெடுப்புக்காகக் காத்துக்கொண்டிருக்கும் பார்மா பிரபு

வுக்கு, நிலைமையைத் தெரிவித்துச் செய்தியை மட்டும் அனுப்ப முடிந்ததேயன்றி, தமக்குக் கொடுக்கப்பட்ட பொறுப்பினைச் செய்து முடிக்க முடியாதவராக இருந்தார். இருப்பினும், கலேயில் தம் கப்பல்களைப் பழுதுபார்த்து மீண்டும் போரில் இறங்கி, வெற்றியைப் பெறலாமென்ற நப்பாசையும் மெடினாவுக்கு கொஞ்சம் இருக்கத்தான் செய்தது. ஆனால், ஆங்கிலக் கப்பற்படை மீண்டும் தாக்குதலைத் தொடங்கியது. நெருப்பு வைக்கப்பட்ட சில ஆங்கிலப் படகுகளை, ஸ்பானியக் கப்பல்களுக்கு இடையே டிரேக் மிக சாமார்த்தியமாகச் செலுத்தினார். இதனால், மிக நெருக்கமாக நங்கூரம் பாய்ச்சப்பட்டிருந்த பல ஸ்பானியக் கப்பல்கள் தீக்கிரையாயின. எஞ்சி இருந்த ஆர்மாடாக் கப்பல்கள் ஸ்பெயினுக்குத் திரும்ப முடியாமல் வடக்கு நோக்கிச் சென்றன.

அக் கப்பல்களை ஆங்கில நாவாய்ப் படை துரத்திச் சென்று ஜூலை, 29ஆம் நாளில் கிரெவ்லைன்ஸ் (Gravelines) என்னுமிடத்தருகே எட்டிப்பிடித்தன. தொடர்ந்து நடந்த சண்டையில் முன்பு போர்ட்லாந்து சண்டையில் பின்பற்றப்பட்ட அதே போர் முறைகளை ஆங்கிலேயர் கடைப்பிடிக்க, ஆர்மாடா மேலும் சேதப் படுத்தப்பட்டது. கடலில் வீசிய காற்றும் ஸ்பானியருக்குப் பாதகமாகவே இருந்தது.

இங்கிலாந்தின் கரையில் தம் படைகளை இறக்குவதற்காகக் காத்துக்கொண்டிருந்த பார்மா பிரபுவுக்கும் நம்பிக்கை குறைய ஆரம்பித்தது. ஸ்பானிய ஆர்மாடாவுக்குத் தலைமை தாங்கியிருந்த மெடினாவுக்கும் தோல்வி மனப்பான்மை ஏற்பட்டிருந்தது. நெதர்லாந்தில் இருந்த பார்மாவுக்கும், கடலில் இருந்த மெடினாவுக்கும் தொடர்பு ஏற்பட வழியில்லை.

ஆங்கிலக் கால்வாயில் மீண்டும் நுழைவதற்கு அஞ்சி, சுற்று வழியில் ஸ்பெயினை அடையத் திட்டமிட்டு மெடினா, இன்னும் வடக்காக ஆர்மாடாவைச் செலுத்தினார். ஆர்கனித் தீவுகளை (Orkney) வலம் வந்து அயர்லாந்தைச் சுற்றி, அட்லாண்டிக் கடலை அடைந்து, ஸ்பெயினுக்குத் திரும்புவதே அவரது திட்டமாக இருந்தது. அதே வழியில், ஆர்மாடா கப்பல்கள் செலுத்தப்பட்ட போதிலும், சண்டைகளிலே பலத்த சேதமடைந்திருந்த பல கப்பல்கள், அந்த நீண்ட பிரயாணத்திற்கு அருகதையற்றவையாகவே இருந்தன. அப் பகுதியில் வீசிய சூறாவளிக் காற்றினால் அலைக்கழிக்கப்பட்டு, வடஸ்காட்டியக் கரைகளை அணுகியிருந்த பல ஸ்பானிய வீரர்கள் கொல்லப்பட்டனர். அயர்லாந்திலும் சாதகமான வரவேற்பு இல்லை. இறுதியாக, ஸ்பெயினை

அடைந்த ஸ்பானிய ஆர்மாடாவில் எஞ்சியிருந்த கப்பல்கள் 50 மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது.




ஸ்பானிஷ் ஆர்மடா சென்ற வழி.

இங்கிலாந்தைத் தாக்க வேண்டுமென்ற முயற்சி, இங்ஙனம் படுதோல்வியில் முடிந்தது.

ஸ்பானிஷ் ஆர்மாடாவின் படுதோல்வி இங்கிலாந்தின் சுதந்திரத்தையும் எலிசபெத்தின் திருச்சபை ஏற்பாட்டையும் காப்பாற்றியதோடு, ஆங்கிலக் கடல் ஆதிக்கத்திற்கும் வழி கோலியது. இதனால், இங்கிலாந்து வருங்காலத்தில் 'கடல் சார்ந்த வல்லரசு' என்ற சிறப்பினையும் பெற ஏதுவாயிற்று.

**எலிசபெத் வெளிநாட்டுக் கொள்கை (கி.பி. 1589—1598):** ஸ்பானிஷ் ஆர்மாடாவின் படுதோல்வியை அடுத்து, இங்கிலாந்து கடலாதிக்கம் பெற்றிருந்த இக் காலத்தில், இந் நாட்டின் புகழ் ஐரோப்பிய அரசியலில் வளர்ந்தோங்கியிருந்தது.

**நெதர்லாந்துக்கு உதவி:** பார்மா டியூக்கின் ஸ்பானியப் படைகளையும், அவருக்குப் பின் நெதர்லாந்தில் பொறுப்பேற்றிருந்த மற்ற ஆளுநர்களையும் எதிர்த்து வீராவேசமாகக் கொலை செய்யப்பட்ட ஆரஞ்சு வில்லியத்தின் மகனை மௌரைஸ் (Maurice) என்பவரின் தலைமையில் வடநிலத்து (ஹாலந்து) பிராடஸ்டன்டுகள் தொடர்ந்து போராடி வர, எலிசபெத்தும் தம்மாலான உதவிகளைச் செய்து வந்தார். கி.பி. 1597ஆம் ஆண்டில், நெதர்லாந்தின் வடமாநிலங்கள் சுதந்திரமடைந்ததற்கு எலிசபெத் கொடுத்திருந்த ஆதரவு ஒரு முக்கியக் காரணமாகும்.

**ஃபிரெஞ்சு விவகாரம்:** ஃபிரான்சு நாட்டில் மூன்றும் ஹென்றியின் ஆட்சியில் கத்தோலிக்கர்களுக்கும் ஹியூகிநாட்டுகளுக்கும் இடையே உள்நாட்டுப் போர் தொடர்ந்து நடந்துவர, ஹென்றி குயிஸ் (Henry Guise) என்பவர், முன்னவர்களுக்கும் ஹென்றி நெவேரே (Henry Navarre), என்பவர், பின்னவர்களுக்கும் தலைமை தாங்கி வந்திருந்த வேளையில், இரண்டாம் ஃபிலிப் கத்தோலிக்கருக்குத் தம் ஆதரவைக் கொடுக்க முன்வந்தபோது எலிஸபெத் தம் உதவியை ஹியூகிநாட்டுகளுக்குத் தர இசைந்தார். அங்கு நடந்து வந்த சமய போரில் ஃபிரெஞ்சு அரசர் மூன்றும் ஹென்றியும், கத்தோலிக்கத் தலைவரான ஹென்றி குயிசும் கொல்லப்பட்டபோது, எலிஸபெத் அரசியாரின் ஆதரவு பெற்றிருந்த ஹென்றி நெவேரே என்பவரே, இறுதியில் நான்காம் ஹென்றி என்ற பட்டத்துடன் ஃபிரான்சின் அரசரானார்.

ஃபிரான்ஸில் பெருவாரியான மக்கள் கத்தோலிக்கர்கள் என்பதாலும், அண்டைய நாட்டரசரான இரண்டாம் ஃபிலிப் ஒரு

கத்தோலிக்க வெறியரென்பதாலும் நாட்டின் நலனையும் பாதுகாப்பையும் கருதி, நான்காம் ஹென்றி தம்மைக் கத்தோலிக்கராக அறிவித்துக்கொண்டபோதும் ஃபிரெஞ்சு பிராட்டஸ்டன்டுகளான ஹியூகிநாட்டுகளுக்குச் சமய, அரசியல் உரிமைகளை அளிக்கும் வகையில் நான்டிஸ் ஆணைகளைப் (Edict of Nantes) பிறப்பித்தாரென்றால், அதற்கு எலிஸபெத்தின் செல்வாக்கே காரணமாகிறது.

**ஸ்காட் உறவு:** மேரி ஸ்காட், தம் ஆணையினால் கொலை செய்யப்பட்டிருந்தும், அதனைத் தொடர்ந்து ஸ்காட்டிய விவகாரங்களில் இவ் வரசியார் தலையிடவில்லை. அங்கு ஆட்சி புரிந்து வந்த ஆறாம் ஜேம்சுடன் (மேரி ஸ்காட்டின் மகன்) சமாதான உறவை வளர்த்துக் கொண்ட இவ் வரசியார், பரஸ்பரம் சில ஒப்பந்தங்களையும் செய்து கொண்டார்.

கன்னியாகவே வாழ்ந்து வந்த எலிசபெத், தாம் கன்னியாகவே இருக்கப் போவதை எதிர் நோக்கித், தம் வாரிசுப் பிரச்சினையைத் தீர்க்கும் முயற்சியாக ஆறாம் ஜேம்ஸையே இங்கிலாந்தின் அடுத்த வாரிசாக அறிவிக்கத் திட்டமிட்டுத் தாம் இறப்பதற்கு முன் அதையே பகிங்கரமாக அறிவித்தார்.

**ஸ்பானிய போர்கள்:** அமைதியைக் காப்பதிலும் போர்ச் செலவுகளைத் தவிர்ப்பதிலும் மிகவும் அக்கறை கொண்டிருந்த இவ் வரசியார், அக் கடல் வெற்றிக்குப் (ஆர்மாடா) பிறகு, மேற்கொண்டு ஸ்பெயின் நாட்டுடன் போரை நீடிப்பதாக இல்லை. ஆனால், ஒரு கடற்போரில் ஆங்கிலேயர் பெற்றிருந்த வெற்றி, பேரமைச்சர் வால்ஷிங்காம், வெற்றி வீரர் டிரேக் போன்றோரின் போர் வெறியைத் தூண்டியிருந்தது. இவர்கள், அரசியாரைக் கட்டாயப்படுத்தி இங்கிலாந்தை மீண்டும் ஸ்பானியப் போரில் ஈடுபடுத்தினர்.

இத் தருணத்தில் ஸ்பெயினின் ஆதிக்கத்திலிருந்து விடுபட போர்ச்சுகலில் (Portugal) டாம் அந்தாணியோ (Dom Antonio) என்பவரின் தலைமையில் கலகம் மூண்டது. இதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள அந்தப் போர் விரும்பிகள் நினைத்து, அரசியாரின் அனுமதியுடன் ஸ்பானிய ஆர்மாடாவை விடப் பெரிதான ஓர் ஆங்கில கடற்படையைப் போர்ச்சுகலுக்கு அனுப்பினர். 15,000 வீரர்களைக் கொண்ட அப் படைக்கு டிரேக் தலைமை தாங்கினார். கொருனா (Corunna) என்னுமிடத்தில் கரையிறங்கிய ஆங்கிலப்படை, அந் நகரை நாசமாக்கிவிட்டு,

லிஸ்பனை (Lisbon) நோக்கி விரைந்தது. டாகுஸ் ஊடுவழி (Passage) வரை முன்னேறிய இப் படைகளிடம், நகர் முற்றுகைக்குப் பெரிய பீரங்கிகள் இல்லாததால், லிஸ்பனை அடைந்ததும் தாக்குதலை நடத்த முடியவில்லை. மேலும் எதிர்பார்த்தபடி ஸ்பெயின் ஆட்சியை எதிர்த்து லிஸ்பனில் கலகங்கள் எதுவும் ஏற்படவில்லை. இந் நகரைக் கைப்பற்ற முடியாமல், அதே நேரத்தில் ஏராளமான ஆள் சேதத்துக் குள்ளான ஆங்கிலப்படை நாடு திரும்பியது. போர்ச்சுகலில் தங்கள் படைகளை இறக்கிச் சில பட்டணங்களைத் தாக்க முடியுமென ஆங்கிலேயர் இப் படையெடுப்பால் நிரூபித்தனரே தவிர, ஆங்கிலேய ஆர்மாடாவும் தன் குறிக்கோளில் தோல்வி யடைந்தது.

போர்த்துகீசிய விவகாரத்தில் தலையிட்டு எதிர்பார்த்த வெற்றியை டிரேக் பெருததால், அரசியாருக்கு மிகுந்த ஏமாற்றமே ஏற்பட்டிருந்தது. இப் படையெடுப்பினல் ஏற் பட்ட ஆள் சேதம், பொருள் நஷ்டம், ஆங்கில—ஸ்பானியப் போரில் அடுத்த சில ஆண்டுகளுக்கு மந்த நிலையை ஏற்படுத்தியது.

கி. பி. 1591ஆம் ஆண்டில் மீண்டும் எலிசபெத் அரசியார், ஸ்பானியர்களோடு போரிடத் திட்டமிட்டார். ஸ்பானிய ஆட்சிக் குட்பட்டிருந்த போர்ச்சுகலைத் தாக்கும் முயற்சியில் ஏற்பட்ட தோல்வியை அப் பேரரசின் மற்ற பகுதியைத் தாக்கிச் சரிக்கட்ட நினைத்த இவ் வரசியார், ஒரு சிறிய கப்பற்படையை அட்மிரல் தாமஸ் ஹோவர்டு, சர் ரிச்சர்டு கிரான்வெல் (Sir Richard Gron-well) என்பவர்களின் தலைமையில் அனுப்பி வைத்தார். அஜோரிஸ் தீவுகளை நோக்கிச் சென்ற இப் படையை ஸ்பானியர் தங்கள் முழுப்பலத்துடன் எதிர்த்தனர். ஸ்பானியர்களின் கடுமையான எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல், தம் கப்பல்களோடு ஹோவார்டு திரும்பிவிட்டார். ஆனால், கிரான்வெல் மட்டும் தம் கப்பலில் ('ரிவென்ஜ்') இருந்து கொண்டு ஒரு நாள் முழுவதும் ஸ்பானியக் கடற்படையை எதிர்த்து வீரப்போர் செய்தார். பொழுது சாய்ந்து இருள் கவிழும் வரையில் இச் சண்டை நீடித்தது. விடிந்தால், நிச்சயம் ஸ்பானியக் கப்பற்படை 'ரிவென்ஜை சுற்றி வளைத்துக் கொண்டு, கிரான்வெல்லைச் சரணடையச் செய்திருக்கும். ஆனால், அன்றிரவு வீசிய கடுமை யான புயல், இத் தனி ஆங்கிலக் கப்பலையும் மற்ற ஸ்பானியக் கப்பல்களையும் மூழ்கடித்தது.

தம் நாட்டின்மீது ஆங்கிலேய அரசி காட்டி வந்த தீவிர எதிர்ப் புக் கொள்கையினல் வெகுண்ட, இரண்டாம் ஃபிலிப்

இங்கிலாந்தைத் தாக்க இன்னொரு ஆர்மாடா முயற்சியில் இறங்கியிருந்தார். இதனைக் கேள்வியுற்ற எலிஸபெத், கோபங் கொண்டு கி.பி 1595ஆம் ஆண்டில் ஹாக்கின்ஸ், டிரேக் என்ற கடலோடிகளின் தலைமையில் ஸ்பானிய மேற்கத்தியத் தீவுகளைத் (West Indies) தாக்க ஓர் ஆங்கிலக் கப்பற்படையை ஏவி விட்டார். மேற்கிந்தியத் தீவுகள்மீது நடத்தப்பட்ட இத் தாக்குதல் ஆங்லேயருக்கு எவ்விதப் பலனையும் அளிக்கவில்லை. ஆனால், நோம்ப்ரி டி டையஸ் வளைகுடாவில் (Nombre de Dios Bay) ஆங்கிலக் கப்பற்படையை ஸ்பானியர் தீவிரமாக எதிர்த்தனர். இங்கு நேர்ந்த கைகலப்பில் புகழ்பெற்ற ஹாக்கின்ஸ் காயமடைந்து தம் கப்பலிலேயே சில நாட்களில் உயிர் நீத்தார். சில நாட்களுக்குப் பிறகு, கடல் வியாதியினால் (Sea Sickness) பீடிக்கப்பட்டு, ஏனைய சில ஆங்கில வீரர்களும் இறந்துவிட்டதால் இப் படையெடுப்பும் தோல்வியாகவே முடிந்தது.

இப் படையெடுப்பு வெற்றிகரமாக முடியவிருந்தும், மனம் தளராத எலிசபெத், கி.பி. 1596ஆம் ஆண்டில் 8,000 வீரர்களைக் கொண்ட இன்னொரு கப்பற்படையைத் தாமஸ் ஹோவார்டு, சர் வால்டர் ராலே (Sir Walter Raleigh) என்பவர்களின் தலைமையில் ஸ்பெயினையே தாக்கும்படி அனுப்பி வைத்தார். இப் படை, ஸ்பானியத் துறைமுகமான காடிஸ் நகரைத் தாக்கி, கொள்ளையிட்டு எரித்தது. இதனால் பெரும் ஆத்திரம் கொண்ட இரண்டாம் ஃபிலிப், தம் தளபதிகளின் யோசனைகளையும் புறக்கணித்து இரண்டாம் ஆர்மாடாவை இங்கிலாந்தின்மீது ஏவினர். ஆனால், நடுக்கடலிலேயே இந்த ஸ்பானிய கப்பற்படை கடுமையான புயலில் சிக்கி நாசமாயிற்று.

இரண்டாம் ஃபிலிப்பின் படையெடுப்பு முயற்சிக்குப் பதிலடி கொடுப்பதுபோல் கி.பி. 1597ஆம் ஆண்டில் சர் வால்டர் ராலே, எஸ்ஸெக்ஸ் பிரபு ஆகியோரின் தலைமையில் எலிஸபெத், மற்றொரு ஆங்கிலக் கப்பற்படையை அஜோரஸ் தீவின்மீது ஏவினர். ஸ்பானிய பொக்கிஷக் கப்பல்களைத் தாக்கி, அதன் பொருள்களைக் கொள்ளையடிக்கும் நோக்கத்தைக் கொண்டிருந்த இக் கப்பற்படை, சில மணி நேரம் தாமதமாக அவ்விடத்தை அடைந்ததால், அவ் வாய்ப்பினைத் தவறவிட்டது. இருப்பினும், எவ்வித எதிர்ப்பும் இல்லாமல் ஆங்கிலக் கப்பற்படை நாடு திரும்பியது.

எலிசபெத் செய்கைகளால் மனம் குமுறிக்கொண்டிருந்த இரண்டாம் ஃபிலிப், தம் கடைசி முயற்சியாகக் கி.பி. 1598ஆம்

ஆண்டில் மற்றோர் ஆர்மாடாவைக் கூட்டி இங்கிலாந்தின் மீது ஏவினர். ஆனல் இதுவும் புயலால் அழிக்கப்பட்டது.

சில நாட்களில், தம் எண்ணம் நிறைவேருதவராக' இரண்டாம் ஃபிலிப் காலமாகிவிட, ஆங்கில-ஸ்பானியப் போர் இப்போதைக்கு ஓய்ந்தது.

அப்போதைக்கப்போது எழுந்த அவசியங்களை மனத்திற் கொண்டு, இராசதந்திரத்தினுலும், போர்களாலும் தம் வெளி நாட்டுக் கொள்கையை அமைத்திருந்த எலிஸபெத் அரசியார், அதில் பெரும் வெற்றி கண்டவராகவே இருந்தார்.

தமக்கும் தம் ஆட்சிக்கும் இதனல் சிறப்பைக் தேடிக்கொண்ட தோடு, தம் நாடான இங்கிலாந்திற்கும் ஒரு சிறப்பான தனி யிடத்தை ஐரோப்பிய அரசியலில் தமது கொள்கையினல் அளித்திருந்தார்.

ஐரோப்பியப் பேரரசாக விளங்கி வந்த ஸ்பெயினை மட்டம் தட்டி ஃபிரான்சு, ஹாலந்து போன்ற ஏனைய நாடுகளில் தம் பெருமையை நிலைநிறுத்தி ஆங்கிலேயர்களைப் பெருமைப்படச் செய்த எலிசபெத் அரசியார், தம் நாட்டுக்குக் கடல் ஆதிக் கத்தினையும் தேடிக் கொடுத்து இங்கிலாந்தை ஒரு கடல் சார்ந்த வல்லரசாக உயர்த்தியும் இருந்தார்.

## எலிசபெத் அரசியாரின் காலச் சிறப்பு

தம் சமய ஏற்பாட்டினல் (Religious settlement) உள்நாட்டில் அமைதியையும், தமது வெளிநாட்டுக் கொள்கையினல் இங்கிலாந் துக்குப் பெருமையையும் அளித்திருந்த எலிசபெத் அரசியாரின் ஆட்சி வேறு சில பெருமைகளுக்கும் உரித்தாக இருந்தது.

**கடல் வீரர்கள் (Sea Men):** நன்னம்பிக்கை முனை கடல் வழியைக் கண்டு பிடித்த போர்த்துகீசியர், ஆப்பிரிக்கா, இந்தியா, தென் கிழக்கு ஆசியாவில் சில இடங்களிலும் கொலம் பசின் கடல் பிரயாணத்தைத் தொடர்ந்து ஸ்பானியர்கள் அமெரிக்கக் கண்டங்களிலும் வர்த்தக ஆதிக்கத்தைப் பெற்றிருந்த காலத்திலேயே எலிசபெத், ஆட்சியைப் பெற்றிருந்தார்.

உலகத்தின் இப் பகுதிகளில் தங்கள் வியாபாரத் தலங்களை அமைக்க ஆங்கிலேய வியாபாரிகள் விரும்பியபோது, அது முடியாததாக இருந்தது. ஏனெனில், அப் பகுதிகளை ஆங்கிலே யர்கள் அண்டவிடாமல் போர்த்துகீசியரும், ஸ்பானியரும்

தடுத்து வந்தனர். தங்கள் வர்த்தகத்திற்குப் போட்டியாக ஆங்கிலேயர் வரக்கூடாதென்பதே இதற்குக் காரணமாக இருந்தது. இத்துடன் சமய புரட்சியின் விளைவாக, இங்கிலாந்து பிராடஸ்டன்டியத்தை ஏற்றுக்கொண்டதால், கத்தோலிக்க நாடுகளான ஸ்பெயினும் போர்ச்சுகலும் ஆங்கில வியாபாரி களைத் தீவிரமாக எதிர்த்தன. குறிப்பாக, ஸ்பெயின் ஆங்கிலேய வியாபாரிகளை அறவே வெறுத்தது. அப்படியும் தடைகளை மீறிக் கள்ள வியாபாரத்தில் சில ஆங்கிலேய வியாபாரிகள் ஈடுபட் டனர். அவர்களில் சிலர் அவ்வப்போது பிடிபட்டபோது, ஸ்பானியர்களால் மிகவும் கொடுமையாகத் தண்டிக்கப்பட்டனர்.

இந் நிலையில், ஆங்கிலேய வியாபாரிகளுக்கு இரு யோசனைகள் இருந்தன. போர்ச்சுகீசிய, ஸ்பானிய ஆதிக்கத்திற்குட்பட்ட வழிகளையும், (Routes) அந்தப் பகுதிகளையும் தவிர்த்து, புதிய வழிகளைக் கண்டுபிடித்து உலகின் பிற நாடுகளோடு வியாபாரம் செய்வதென்பதும், அல்லது அந்த இரு நாடுகள் குறிப்பாக, ஸ்பெயின் வியாபார ஆதிக்கம் பெற்றிருந்த அப் பகுதிகளில் வன்முறையைப் பயன்படுத்தி வர்த்தகச் சலுகைகளைப் பெறு வதென்பதுமே அவையாகும்.

இந்த இரண்டாவது யோசனையைப் பின்பற்றியவர்களே 'கடலோடிகள்' என அழைக்கப்பட்டனர்.

**ஜான் ஹாக்கின்ஸ்:** மேரி டியூடர் காலத்திலேயே, போர்ச்சு கீசியருக்குச் சொந்தமான கினியாப் (ஆப்பிரிக்கா) பகுதியுடன் அத்துமீறி, தாமஸ் வைண்ட்ஹாம் (Thomas Wyndham), ஜான் லோக் (John Lok) என்போர் அடிமை வியாபாரத்தைச் (Slave Trade) செய்து வந்தனர். எலிசபெத் காலத்தில், இதே வியாபாரத்தை ஜான் ஹாக்கின்ஸ் (Jhon Hawkins) என்பவர், தீவிரமாக மேற்கொண்டார். கினியாக் கரையை அடைந்து, 300 நீக்ரோக்களைக் (ஆப்பிரிக்க கறுப்பர்கள்) கைப்பற்றி ஸ்பானிய அரசுக்குச் சொந்தமான மேற்கிந்தியத் தீவுகளுக்குக் கொண்டு சென்று விற்றார். ஆப்பிரிக்க அடிமைகளை வாங்குவதில் ஸ்பானியக் குடியேறிகள் ஆர்வம் காட்டியபோதிலும், தம் அனுமதியின்றி ஹாக்கின்ஸ் செய்த இவ் வியாபாரத்தை ஸ்பானிய அரசாங்கம் கண்டித்தது. இதைப் பொருட்படுத்தாத ஹாக்கின்ஸ், கி.பி. 1562-1564ஆம் ஆண்டுகளில் மேலும் இருமுறை தாம் கைப்பற்றியிருந்த நீக்ரோக்களை அந்த ஸ்பானியக் குடியேற்றத்தில் விற்றார்.

இந்த அடிமை வியாபாரத்தில் பெருத்த இலாபமிருந்ததால், கி.பி. 1567 ஆம் ஆண்டு ஹாக்கின்ஸ் தம் நெருங்கிய உறவினரான

ஃபிரான்சிஸ் டிரேக் (Francis Drake) என்பவருடன் சேர்ந்து, மீண்டும் ஆப்பிரிக்கக் கறுப்பர்களைக் கைப்பற்றி மேற்கிந்தியத் தீவுகளில் விற்பனை செய்தார்.

ஒரே சமயத்தில், தம் செயல்களால் போர்ச்சுகீசியர், ஸ்பானியர்களின் வர்த்தக உரிமைகளை ஹாக்கின்ஸ் குலைத்து வந்தார். இம்முறை தம் கப்பல்களோடு நாடு திரும்பிக்கொண்டிருந்த ஹாக்கின்ஸ், புயல்காற்றினால் அலைக்கழிக்கப்பட்டு மெக்ஸிகோ கரையோரமாக இருந்த சேன் ஜீவன் டி உல்லோ (San Jeean d' ulloa) என்ற ஸ்பானியத் துறைமுகத்தில் அடைக்கலம் அடையவேண்டியவரானார். துரதிருஷ்டவசமாக இச் சமயம் பதின்மூன்று ஸ்பானியக் கப்பல்கள் அத் துறைமுகத்தை வந்தடைந்தன. சண்டை எதுவும் நடக்குமோ என அஞ்சப்பட்ட இந் நிலையில், ஸ்பானியர்கள் ஆங்கிலேயக் கடல் வீரர்களைத் தண்டிக்கப்போவதில்லையென்றே வாக்களித்தனர். ஆனால், சில நாட்களுக்குப் பின்னர், ஹாக்கின்ஸின் கப்பல்கள் ஸ்பானியர்களால் தாக்கப்பட்டது. 'ஜீசஸ்' (The Jesus) என்ற கப்பல் உள்பட மூன்று கலங்களையும், 100 கடல் வீரர்களையும் இத் திடீர்த் தாக்குதலால் பறிகொடுத்துவிட்ட ஹாக்கின்ஸ், 'மினியன்' (Minion) என்ற கப்பலில் தப்பித்துக்கொண்டு நாடு அடைந்தார். இவருடன் இருந்த ஃபிரான்சிஸ் டிரேக்கும், 'ஜூடித்' (Judith) என்ற இன்னொரு கப்பலில் தப்பித்து நாடு திரும்பினார்.

**ஃபிரான்சிஸ் டிரேக் :** ஜீவன் டி உல்லோ சண்டை ஆங்கிலேயருக்கு ஒரு படிப்பினையைக் கற்றுத் தந்ததாக இருந்தது. அதன்படி, ஸ்பெயினுக்குச் சொந்தமான தென் அமெரிக்கக் குடியேற்றங்களோடு வாணிகம் செய்வதைவிட, ஸ்பானியர்களோடு போர் தொடுக்க வேண்டுமென்ற எண்ணம் நிலவியது. அக் குடியேற்றங்களோடு தொடுக்கப்படும் போர், ஸ்பானிய அரசுக்கெதிராக நடத்தப்படும் போராக மாறுமாதலால், அதை அரசியார் ஆதரிக்கமாட்டாரென்பதையும் ஸ்பானியக் குடியேற்றங்கள் அதே சமயத்தில் தனிப்பட்ட ஆங்கிலேயக் கடலோடிகளால் தாக்கப்பட்டால் கண்டிக்கமாட்டாரென்பதையும் சில துணிச்சல்காரர்கள் நம்பினர். இவர்களிலே டிரேக் என்ற அக் கடலோடி மிகவும் குறிப்பிடத்தக்கவர். டிவான்ஷயரைச் சேர்ந்த டேவிஸ்டாக் (Tavistock) என்ற இடத்தில் ஒரு பாதிரியாருக்குப் பிறந்த டிரேக், ஏற்கெனவே கடல் பிரயாணங்களிலும் போர்களிலும் பழக்கப்பட்டவராக இருந்தார்.

இவரே கி.பி. 1572ஆம் ஆண்டில் தம் இரு கலங்களுடன் பிளிமவுத் துறைமுகத்தை விட்டுக் கிளம்பி, பனமா வளைகுடாவை

(Gulf of Panama) நோக்கிப் புறப்பட்டார். நோம்பிரி டி டியாஸ் (Nombre de dios) என்னுமிடத்தில் கரையிறங்கி, டிரேக் அங்கு வாழ்ந்த சுதேச மக்களுடன் (Natives) நட்புக் கொண்டு, ஸ்பெயினுக்கு அனுப்பப்படவேண்டிய வெள்ளி, இதர பொக்கிஷங்களைப் பற்றி உளவறிந்துகொண்டு, அருகிலிருந்த ஒரு குன்றுக்கருகே காத்துக்கொண்டிருந்தார். இங்கிருந்துதான், டிரேக் ஏககாலத்தில் மேற்கேயிருந்த பசிபிக் பெருங்கடலையும், கிழக்கே இருந்த அட்லாண்டிக் பெருங்கடலையும் கண்டதாகச் சொல்லப்படுகிறது. சில நாட்களுக்குள்ளாக, அவ்வழியில் ஸ்பானியர்களால் கொண்டுவரப்பட்ட வெள்ளி மூட்டைகளை, அவர்களைத் தாக்கிக் கைப்பற்றித் தம்மால் முடிந்தவரையில் எடுத்துக்கொண்டு டிரேக் நாடு திரும்பினார். இங்ஙனமாக, பெரு (Peru) பகுதியிலிருந்து ஸ்பெயினுக்குக் கப்பலில் அனுப்பப்படுவதற்காகப் பனாமா பூசந்தியை (Isthumus) அடைந்த வெள்ளிக் கனிப்பொருள்களைக் கொள்ளையடித்துப் பத்திரமாக நாடுதிரும்பிய டிரேக்கை மக்கள் வானுயரப் போற்றினார்கள். எலிசபெத் அரசியார், தம் உள்மனத்தில் வரவேற்றாலும், அரசியல் சிக்கல்களைத் தவிர்ப்பதற்காகக் கண்டும் காணாதவராக இருந்தார்.

ஆங்கில மக்களின் போற்றுதலுக்கு உரியவராக இருந்த டிரேக், அடுத்துத் தம் புகழ் என்றென்றைக்கும் நிலைத்திருக்க வேண்டுமென்ற ஆர்வம் கொண்டவராக, தம் உலகப் பயணத்தைத் (Voyage arround the world) தொடங்கினார்.

கி.பி. 1577, நவம்பர் 15ஆம் நாளில், 'பெலிகன்,' 'எலிசபெத்,' 'ஸ்வேன்,' 'கோல்டன் ஹிண்டு' (Golden Hind) என்ற கப்பல்களுடனும் 164 வீரர்களுடனும் பிளிமவுத்திலிருந்து தென் அமெரிக்காவை நோக்கி டிரேக் புறப்பட்டார். கேப் வெர்டியைக் கடந்து, அட்லாண்டிக் பெருங்கடல் வழியாக ஸ்பானியருக்குத் தெரியாமல் தென் அமெரிக்காவின் தென் முனையான மெகல்லன் ஜலசந்தி (Strait of Magellan) வழியாகப் பசிபிக் பெருங்கடலை அடைவதே இவரது திட்டமாக இருந்தது.

அதுவரையில் எந்த ஆங்கிலேயரும் நினைத்திராத, சாதிக்க முடியாத ஒரு புரட்சி ஏற்பாடாகவே டிரேக்கின் திட்டம் இருந்தது.

அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து பேடாகோனியாக் (Potagonia) கரையை அடைந்த டிரேக், தம் வீரர்களுக்கு வேண்டிய குடிநீரையும் சேர்த்துக்கொண்டு தம் பயணத்தைத் தொடங்கினார். தவிர்க்க முடியாத சில காரணங்களால் 'கோல்ட்ன் ஹிண்டு' என்ற தம் பிரதான கப்பலைத் தவிர,

ஏனையவை இங்கிலாந்துக்குத் திருப்பி அனுப்பப்பட்டன. சிலியின் (Chile) கரையோரமாக, மெகல்லன் ஜலசந்தியை நோக்கி டிரேக் சென்ற வழியிலிருந்த லீமா (Lima), வால்பெராய்சோ (Valperaiso) போன்ற முக்கிய (ஸ்பானிய குடியேற்றங்கள்) துறைமுகங்களைக் கொள்ளையடித்துத் தங்கம், வெள்ளி ஆகிய பொருள்களை ஏராளமாகக் கைப்பற்றி, அச் ஜலசந்தியைக் கி.பி. 1578, செப்டம்பர் 6ஆம் நாள் கடந்தார். பசிபிக் பெருங்கடலை அடைந்த முதல் ஆங்கிலேயர் இவரே என்பது குறிப்பிடத்தக்கது.

வடக்கு நோக்கிச் சென்று கொண்டிருந்த டிரேக், தம்வழியில் நியூ ஆல்பியன் (இன்றைய கலிபோர்னியா) என்னுமிடத்தை அடைந்து, பிரிட்டிஷ் கொடியைப் பறக்கவிட்டு, இங்கிருந்து மேற்கே தம் பயணத்தைத் தொடர்ந்து பசிபிக்கடலைக்கடந்தார். சில வாரங்களுக்குப் பின்னர், கிழக்கிந்தியத் தீவுகளில் ஒன்றான ஜாவாவை (Java) டிரேக் அடையவும், அப்பகுதியில் ஆதிக்கம் பெற்றிருந்த போர்ச்சுகீசியர் பிரமித்தனர். வருங்காலத்தில் ஆங்கிலேயர்களும் இப் பகுதியில் வர்த்தகப் போட்டியைத் தொடங்குவார்களென்பதற்கு இஃது ஓர் அறிகுறியாக இருந்தது. தாம் வந்த வழியிலேயே திரும்புவதானால், மெகல்லன் ஜலசந்திக் கருகே தம்மை எதிர்ப்பதற்கு ஸ்பானிய கற்படை தயாராகக் காத்துக்கொண்டிருக்குமென நினைத்த டிரேக், தம் பயணத்தை இந்து மாக்கடல் (Indian Ocean) வழியாகத் தொடர்ந்தார். நன்னம்பிக்கைமுனை வழியாக, சியீரா லியோனைக் (Sierra Leone) கடந்து, இறுதியில் கி.பி. 1580, செப்டம்பர் 26ஆம் நாளில் தம் கப்பலுடன் பிளிமவுத் துறைமுகத்தை டிரேக் அடைந்தார்.

உலகம் சுற்றிய முதல் ஆங்கிலேயர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றுவிட்ட டிரேக்கை, டெப்த்ஃபோர்டு கப்பல் தளத்தில் எலிசபெத் அரசியார் சந்தித்து, 'சர்' பட்டத்தை வழங்கியதோடு அவர் கொள்ளையடித்த பொருளில் £ 10,000 (பவுண்டுகளை) அவரையே வைத்துக்கொள்ளும்படி அனுமதித்தார்.

டிரேக்கின் வெற்றிகரமான உலகக் கடல் பிரயாணத்தால், பொறாமை கொண்ட ஸ்பானியர், தங்களுக்குச் சொந்தமான துறைமுகங்களில் இனி ஆங்கிலேயர்கள் வியாபாரச் சரக்குகளை ஏற்றவோ இறக்கவோ கூடாதெனத் தடைவிதித்தனர். இதற்குப் பழி வாங்குவது போல் ஐந்தாண்டுகள் கழித்து, அரசியாரின் ஆசி கொண்டு டிரேக், மீண்டும் தம் கப்பல்களுடன் புறப்பட்டார். ஸ்பானியருக்குச் சொந்தமான கேப் வெர்டி தீவுகளை அடைந்து, அங்கு இரு பட்டணங்களைக் கொள்ளையடித்து டிரேக் எரித்தார்.

அட்லாண்டிக் பெருங்கடலைக் கடந்து சேன்டோ டோமிங்கோ (Santo Domingo), கார்த்தஜீனு (Carthagena) என்ற ஸ்பானிஷ் மெயின் (Spanish Main) இடங்களையும் தாக்கிக் கொள்ளையிட்டு, இறுதியில் ஃபிளாரிடாவில் (Florida) இருந்த செயின்ட் அகஸ்டின் என்ற நகரையும் தீக்கிரையாக்கி வெற்றிகரமாக நாடு திரும்பினர்.

இரண்டாம் ஃபிலிப் இங்கிலாந்தின்மீது போர் தொடுத்ததற்கு இதுவும் ஒரு காரணமாக விளங்கியது.

கி.பி. 1587லிருந்து 1595-ஆம் ஆண்டு வரையில், ஆங்கில-ஸ்பானியப் போரில் ஹாக்கின்ஸ், டிரேக் போன்ற கடலோடிகள் ஆற்றிய வீரப்பணிகள் போற்றுதற்குரியன.

**வர்த்தகக் கம்பெனிகள்** (Trading Companies)**:** கடலோடிகளின் அடாத செய்கைகளால் பிற நாடுகளுடன் போர் ஏற்படலாமெனக் கருதி, அவர்களின் கொள்ளைகளை ஆரம்பத்திலிருந்தே உள்ளுக்குள் வெறுத்த பேரமைச்சர் செசில், போட்டியையும் பூசலையும் தவிர்த்து இங்கிலாந்தின் அயல்நாட்டு வியாபாரத்தைப் பெருக்கும் வழிகளை மேற்கொண்டார். ஆர்வம் கொண்ட ஆங்கில வியாபாரிகளை உற்சாகப்படுத்தி, இவர் எடுத்துக் கொண்ட அரும்பெரும் முயற்சியால் நாளடைவில் இங்கிலாந்தில் சில வர்த்தகக் கம்பெனிகள் தோன்றலாயின.

**வில்லியம் ஹார்பர்ன்:** கி.பி. 1578ஆம் ஆண்டில் சில இலண்டன் வியாபாரிகளால் தொடங்கப்பட இருந்த லெவன்ட் கம்பெனி (The Levant), வில்லியம் ஹார்போர்ன் (William Harborne) என்பவரைக் கான்ஸ்டாண்டிநோபிளுக்கு அனுப்பித் துருக்கியருடன் வியாபாரம் செய்வதற்கான அனுமதியை அதன் சுல்தானிடமிருந்து பெற்று வரும்படிப் பணித்திருந்தது. இத்தூதுவரின் கடும் முயற்சியாலேயே, சில ஆண்டுகளுக்குப் பின்னர், 'துருக்கிக் கம்பெனி' (Turkey Company) என்ற வியாபாரச் சங்கம் தொடங்கப்பட்டது. போதைப் பொருள்களை (lucrative) துருக்கி நாட்டில் இறக்கி, இக் கம்பெனி மிகவும் இலாபகரமான வியாபாரத்தை நடத்தியது.

**அந்தோனி ஜென்கின்சன்:** மேரி டியூடர் காலத்திலேயே (கி.பி. 155.) ருஷ்யாவுடன் வியாபாரம் செய்வதற்கான அனுமதியை ரிச்சர்டு சேன்சலர் என்ற தூதுவரால் பெற்று, 'மாஸ்கோவி (Moscovy) கம்பெனியை ஆங்கிலேயர் நிறுவியதால், எலிசபெத் அரசியாரின் காலத்தில் அந்தோனி ஜென்கின்சன்

(Antony Jenkinson) என்ற ஆய்வாளர் ருஷ்யா வழியாகத் தரைமார்க்கத்தில் சீனு, இந்தியா போன்ற நாடுகளுடன் வியாபாரம் சாத்தியப்படுமா எனக் கண்டறிய அனுப்பப்பட்டார். வால்கா (Volga), காஸ்பியன் கடல் (Caspian sea) ஆகியவற்றைக் கடந்து, பொக்காரோ (Bokharo) என்ற பழம் பெரும் பட்டணத்தின் வழியாக மாஸ்கோவை அடைந்த ஜென்கின்சன், அப்போது மத்திய ஆசியாவில் நிலவிவந்த குழப்பமான நிலையில் ஆசிய நாடுகளுடன் வியாபாரம் செய்வதற்கில்லை எனத் தெரிந்துகொண்டு நாடு திரும்பினர். ஆனாலும் கி.பி. 1562ஆம் ஆண்டில் அந்தோனி ஜென்கின்சன், பாரசீகம் (Persia) சென்று ஆங்கில-பெர்ஷிய வியாபார உறவுக்கு வழி வகுத்தார்.

**மார்டின் ஃபிரோபிஷர் :** கி.பி. 1576ஆம் ஆண்டில் ஆசியாவுக்குக் கடல்மார்க்கமாக வடமேற்கு வழியைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் மார்ட்டின் ஃபிரோபிஷர் (Martin Frobisher) என்பவரால் 'காதே (Cathey) கம்பெனி' ஒன்று நிறுவப்பட்டது. இக் கம்பெனி சீனுவுக்கோ, இந்தியாவுக்கோ கடல்மார்க்கமாக வேறெந்த வழியையும் கண்டுபிடிக்கவில்லையெனினும், ஆங்கிலேயர்கள் வருங்காலத்தில் பேவ்வின்லாந்து (Baffinland), கிரீன்லாந்து (Green Land) பகுதிகளுக்கிடையே தங்கள் கடல் ஆய்வுகளை நடத்த உதவியிருந்தது.

**ஜேம்ஸ் லங்காஸ்டர் :** வடகிழக்காகவும் வடமேற்காகவும் புதிய வழிகளைக் கண்டுபிடிக்கும் முயற்சி பலனளிக்காத இக் காலத்தில் நன்னம்பிக்கைமுனை வழியாகவே தென்கிழக்கு ஆசிய நாடுகளுடன் வியாபாரம் செய்வதற்காக முயற்சி செய்யப்பட்டது. இதற்கேற்ப, கி.பி. 1582ஆம் ஆண்டில் எட்வர்டு ஃபென்டன் (Edward Fenton) என்பவரால், கிழக்கிந்தியத் தீவுகளுடன் வியாபாரம் செய்வதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ஸ்பானியர்களின் எதிர்ப்பால், இவ் வேற்பாடு பலனளிக்காது போகவே, மூன்று ஆண்டுகள் கழித்து, ஜேம்ஸ் லங்காஸ்ட்டர் (James Lancaster) என்பவரால் இன்னொரு முயற்சி செய்யப்பட்டது. இதனைத் தொடர்ந்துதான், வருங்காலத்தில் இந்தியாவில் ஆங்கிலேயருக்கு ஒரு பேரரசையே உருவாக்கிக் கொடுத்த கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company) அரசியாரின் அனுமதியில் தொடங்கப்பட்டது (கி.பி. 1600).

இவையன்றி, பால்டிக், ஜெர்மனி, மத்தியதரைப்பகுதிகளுடனும் வியாபாரம் செய்வதற்கான கம்பெனிகள் நிறுவப்பட்டு இருந்தன.

**குடியேற்றங்கள் (Colonisation) :** இந்தியாவுக்கு ஜான் கேபட் காலத்திலிருந்து வடமேற்குக் கடல்வழியைக் கண்டுபிடிக்க செய்துவரப்பட்ட முயற்சிகள் நிறைவேறாதிருக்க, சர் ஹம்பரி கில்பர்ட் (Sir Humphrey Gilbert) என்ற கடல்வீரர், நாட்டிலிருந்து வந்த மக்கள் நெரிசலைத் தீர்க்க வட அமெரிக்காவில் ஆங்கிலேயருக்குக் குடியேற்றமொன்றை அமைத்திட நினைத்தார். இதற்கான அனுமதியை எலிசபெத் அரசியாரிடம் பெற்ற இச் செயல் வீரர், 1583ஆம் ஆண்டில் 'நியூஃபவுண்டுலேண்ட்' என்ற தீவினை அடைந்து, ஆங்கிலேயருக்கு உடைமையாக்கினர்.

இரண்டாண்டுகள் கழித்து, சர் ரிச்சர்டு கிரென்வெல், சர் வால்ட்டர் ரேலே ஆகியோரின் முயற்சியால், வடஅமெரிக்காவின் கிழக்குக் கரையில் ரோனேக் (Roanoke) தீவுக்கருகே ஓர் ஆங்கிலேயக் குடியேற்றம் அமைககப்பட்டது. இதற்கு, கன்னி அரசியாரின் நினைவாக 'வர்ஜீனியா' எனப் பெயர் கொடுக்கப்பட்டது. வருங்காலத்தில் அமைக்கப்படப்போகும் பதின்மூன்று அமெரிக்கக் குடியேற்றங்களுக்குள் இதுவே முதலாவதாக விளங்கியது.

அடுத்த நூற்ருண்டில் வடஅமெரிக்காவிலும் இந்தியாவிலும் ஆங்கிலேயர்கள், பேரரசு அமைத்தார்களென்ருல், அதற்கு வித்திடுவதாக இவ் வரசியாரின் காலம் அமைந்தது.

**இலக்கிய மறுமலர்ச்சி :** உலக நாடுகளிடையே இங்கிலாந்தைக் கடல் ஆதிக்கத்திலும் வியாபாரத்திலும் குடியேற்றங்களிலும் ஒரு முக்கிய நாடாக அறிமுகப்படுத்திய பெருமையோடு எலிசபெத் அரசியார், ஆங்கில இலக்கியத்தில் உருவாக்கப்பட்ட மலர்ச்சியால் மேலும் சிறப்பினை அடைந்தார்.

'இசைபாடும் இங்கிலாந்து', எனப் பெருமையுடன் அழைக்கப்படும் எலிசபெத்தின் இங்கிலாந்தில் பல கவிஞர்கள், இலக்கியக் கர்த்தாக்கள், நாடக ஆசிரியர்கள் போன்றவர்கள் பெரும் புகழுடன் வாழ்ந்தனர்.

சமய பாடல்களை இனிமையாகப் பாடக்கூடிய திறமை கொண்ட பல இன்னிசைக் குரல் மன்னர்களும், அதனை இயற்றிய பாடலாசிரியர்களும் (எலிசபெத்தின்) இங்கிலாந்துக்குப் புகழ் தேடிக்கொடுத்தனர். அவர்களிலே டேலிஸ் (Dalis), பைரடு (Byrd), ஆர்லண்டோ கிப்பன்ஸ் (Orlando Gibbons) என்போர் முக்கியமானவர்கள். எழுத்துலகத்தில் ஷேக்ஸ்பியர் (Shakespeare) பெற்ற பெருமைக்கு ஈடாக இசையுலகில் பைரடு

(Byrd) புகழ் பெற்றிருந்தாரென்றால் அது மிகையாகாது. ஐரோப்பா முழுவதும் அவர்களின் கீர்த்தி பரவியிருந்தது.

இசைச் செய்யுளிலும் (Lyric) பிரமாதமான முன்னேற்றம் இருந்தது. அத் துறையில் வேறெந்த மொழியிலும் இல்லாத ஆசிரியர்கள் இருந்தனர் என்பது (எலிசபெத்) இங்கிலாந்தின் தனிச் சிறப்பாகிறது. மகாகவி ஷேக்ஸ்பியரால் புகழப்பட்ட பெருமைக்குப் பாத்திரமான பென் ஜான்சன் (Ben Johnson), தாமஸ் ஃபோர்டு (Thomas Ford) என்ற இசைச் செய்யுள் கர்த்தாக்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

கவிதைகள் (Poetry) பலவும் இக் காலத்தில் எழுதப்பட்டன. சர் ஃபிலிப் சிட்னி (Sir Philip Sydney), எட்மண்டு ஸ்பென்சர். (Edmund Spencer) போன்றவர்கள் அதில் புகழ் பெற்றிருந்தனர். குறிப்பாக, சரித்திரப் பின்னணியில் ஸ்பென்சரால் அமைக்கப்பட்ட பல கவிதைகள் நீங்காப்புகழ் பெற்றன. அவருடைய நீளமான கவிதையாக, 'தேவதை இராணி' (Fairy Queen) அமைந்தது. 'சர் கயான்' (Sir Guyon), 'டெம்பரன்ஸ்' (Temperance), செஞ் சிலுவை வீரர்' (Red Cross Knight) போன்ற மற்ற கவிதை களும் புகழ்க் காவியங்களாக அமைந்தன. நிகழ்ச்சிகளைத் தத் ரூபமாகக் கவிதைகளில் வடித்து காட்டிய ஸ்பென்சர், அத் துறை யில் அக் காலத்திய முடிசூடா மன்னராகவே விளங்கினர்.

உரைநடை (Prose) இலக்கணத்திற்குச் சிறப்பளிக்கும்படியாகப் பல படைப்புகள் சில ஆங்கில இலக்கிய மேதைகளால் இயற்றப் பட்டன. ஹூக்கர் (Hooker) எழுதிய, 'சமய அரசியலின் விதிகள்' (The Laws of Ecclesiastical Polity), ரோஜர் ஆஷோமி (Roger Ashomi) எழுதிய 'ஸ்கூல் மாஸ்டர்' (School Master), ஃபிரான்சிஸ் பேக்கன் (Franci's Bacon) எழுதிய, 'எண்ணங் களும் உருக்கோவையும்' (Thoughts and Expressions), கேம்டன் (Camden) எழுதிய 'பிரிட்டானியர்', ஹாரிசன் (Harrizon) எழுதிய 'பிரிட்டனின் அழகுரை' (Description of Britain), ஹாக்லுய்ட் (Hakluyt) எழுதிய 'இங்கிலாந்தின் கடற்சிறப்பு' என்ற நூல்களும், இக் கால ஆங்கில உரைநடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகவும் இம் மொழிக்குச் சிறப்பளித்தனவாக வும் அமைந்தன.

நாடகக் கலையில் எலிசபெத் இங்கிலாந்து, உச்சநிலையை அடைந்தது எனச் சொல்லலாம். பீல் (Peele), கிரீன் (Greene), நேஷ் (Nash) போன்ற நாடகாசிரியர்கள் சமய தொடர்பற்ற நாடகங்களை எழுதிப் புகழ் பெற்றனர். அவ் வரிசையில் வந்தவரே

கிறிஸ்டோஃபர் மார்லோவ் (Christopher Marlowe) என்ற புகழ் பெற்ற நாடகாசிரியர். ஷேக்ஸ்பியரின் முன்னோடியாகக் கருதப் படும் மார்லோவின் எழுத்துகளே அம் மகா கவியின் நாடக ஆக்கத்திற்கு உற்சாகம் கொடுத்தனவாம். மார்லோவ் எழுதிய 'யூதன்' என்ற நாடகப் பாத்திரமே ஷேக்ஸ்பியர் வடித்த, 'ஷைலாக்' என்ற பாத்திரமாக அமைந்தது. மார்லோவ் எழுதிய, 'இரண்டாம் எட்வர்டு', ஷேக்ஸ்பியரின் 'இரண்டாம் ரிச்சர்டு' என்ற நாடகத்துக்கு முன்னோடியாக அமைந்தது.

நாடக ஆசிரியர்களிலே உலகப் புகழ் பெற்றுவிட்ட மகாகவி ஷேக்ஸ்பியர் (Shakespeare), தம் இலக்கியத் தொண்டைத் தொடங்கியது இக் காலத்திலேயே.

ஸ்டேரட்-ஆன்-ஆவன் (Strat-on Avon) என்னுமிடத்தில் ஒரு வியாபாரியின் மகனாகக் கி.பி. 1564-ல் பிறந்த வில்லியம் ஷேக்ஸ்பியர், இலக்கணப் பள்ளியிலேயே தம் கல்வியை முடித்துக் கொண்டார். 1588-ல் இலண்டனுக்கு வந்த ஷேக்ஸ்பியர், நாடக நடிகர்களுக்கு வசனம் எழுதித்தரும் பணியில் அமர்ந்தார். அந்த அனுபவத்தில் தேர்ச்சிபெற்றுப் பல புகழ்பெற்ற பாடகர்களுக்கு ஆசிரியர் என்ற புகழைப் பிற்காலத்தில் பெற்றவரானார்.

அக் காலத்திய மன்றத்தின் குறைகள் நிரம்பிய பேச்சை நையாண்டி செய்து எழுதிய, 'Love's Labour's Lost,' என்ற நாடகமே அவரது முதல் படைப்பு. உலகக் காதல் நாடகங்களில் அமரத்துவம் பெற்றிருக்கும் 'ரோமியோ அண்டு ஜூலியட்' (Romeo and Juliet) என்ற புகழ்பெற்ற நாடகமும், ஆறும்ஹென்றி, இரண்டாம் ரிச்சர்டு, மூன்றும் ரிச்சர்டு, அரசர் ஜான் போன்ற நாடகங்களும் ஆரம்ப காலத்தில் எழுதப்பட்டனவாகும்.

அவரது இடைக்காலத்தில் 'தி மெர்ச்சன்ட் ஆஃப் வெனிஸ்' (The Merchant of Venice) மிட் சம்மர் நைட்ஸ் ட்ரீம் (Mid-Summer Nights Dream), டுவல்த் நைட் (Twelfth Night), ஆஸ் யு லைக் இட் (As you like it) போன்ற இன்ப வியல் (Comedy) நாடகங்கள் எழுதப்பட்டன.

கி.பி. 1599-1609-ல் ஜூலியஸ் சீசர் (Julius Caesar), ஹாம் லட் (Hamlet), ஒத்தல்லோ (Othello), மாக்பெத் (Macbeth), அரசர் லியர் (King Lear), அன்டோனி கிளியோபாட்ரா (Antony Clepopatra) போன்ற அற்புதமான சோக நாடகங்களை யும் எழுதினர். அவரது கடைசிக் காலத்தில் ஸிம்பலென்

(Cymbeline), வின்டர்ஸ் டேல் (Winters Tale), டெம்பஸ்ட் (Tempest) போன்ற நாடகங்களையும் அம் மகாகவி உருவாக்கினர்.

டியூடர்களின் காலத்திய அரசியல் சிக்கல்களையோ கத்தோலிக்க பிராடஸ்டன்டு சமய பிரச்சினையையோ ஷேக்ஸ்பியர் தாம் எழுத்தில் வடித்த நாடகங்களில் புகுத்தவில்லை. அரசியல் முக்கியத்துவம் கொடுக்காமலேயே இரண்டாம் ஜான் ரிச்சர்டு, மூன்ரும் ரிச்சர்டு, நான்காம் ஹென்றி, ஐந்தாம் ஹென்றி, ஜூலியஸ் சீசர்.அந்தோனி கிளியோபாட்ரா போன்ற வரலாற்றுப் பாத்திரங்களை ஷேக்ஸ்பியர் படைத்தார். ஆயினும், அவருடைய நாடகங்களிலே நாட்டுப்பற்று மிகுந்திருந்தது. ஷேக்ஸ்பியரின் நாடகங்களும் அவரால் படைக்கப்பட்ட கதாப்பாத்திரங்களும் எல்லாக் காலத்திற்கும் பொருந்துவனவாக எழுதப்பட்டபோதிலும், அவர் வாழ்ந்த (எலிசபெத்) இங்கிலாந்தின் பிரதிபலிப்பாக அந் நாடகங்கள் அமைந்தன. ஷேக்ஸ்பியர், தம் அமர எழுத்துகளால் தமக்கும் தம் நாட்டுக்கும் தம் அரசிக்கும் அழியாபபுகழைத் தேடிக்கொடுத்தார்.

இலக்கிய மலர்ச்சியுடன் இசை, நடனம், கட்டடக்கலை ஆகிய நுண்கலைகளிலும் இவ் வாசியாரின் காலம் சிறப்புற்று விளங்கியதால் எலிசபெத்தின் இங்கிலாந்து, ஒரு 'பாடும் பறவைகளின் கூடு,' (A nest of singing birds) எனப் பெருமையுடன் அழைக்கப்பட்டது.

'தன்னகத்தே இசையுணர்வு இயல்பாகவே இருக்கப் பெருதவனும் இசையொருமையில் தன் உள்ளத்தைப் பறிகொடாதவனும் நல்ல குடிமகன் அல்லர்...' என்ற சொற்ருெடர் எலிசபெத் காலத்திலேயே சொல்லப்பட்டது; உணரப்பட்டது. இதிலிருந்து, இவர் காலத்திய கலைகளின் மேம்பாட்டினை உணரலாம்.

# 12. டியூடர் காலத்திய அயர்லாந்தும் ஸ்காட்லாந்தும்

## அயர்லாந்து

முன் வரலாறு : பிரிட்டிஷ் தீவுகளில் ஒன்றான அயர்லாந்தில் கெல்டுகளும் (Celts) சாக்சானியர்களும் (Saxons) பரவலாக வாழ்ந்து வந்தனர். செயின்ட் பேட்ரிக் (St. Patrick) என்ற மத பிரசாரகரின் சமய தொண்டினால் கி.பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்தே அங்குக் கிறித்தவ மதம் பரவ ஆரம்பித்தது. மடாலயங்களை மையமாக வைத்து அயர்லாந்தில் மக்கள் தங்கள் வாழ்க்கை முறையை அமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தனர்.

அயர்லாந்து ஐந்து பகுதிகளாகக் குடித் தலைவர்களால் ஆளப்பட்டு வந்தது. அல்ஸ்டர் (Ulster), மன்ஸ்டர் (Munster), லின்ஸ்டர் (Leinster), கோன்னட் (Connaught), மீத் (Meath) என்ற அந்த ஐந்து பகுதிகளின் தலைவர்களும் தங்களுக்குள் அடிக்கடி சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். அத்தகைய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டே இங்கிலாந்தின் அரசரான இரண்டாம் ஹென்றி அயர்லாந்துக்குப் படைகொண்டு வந்து தம் ஆதிக்கத்தை ஓரளவு அங்கு நிலைநிறுத்த முயன்றார். அதற்கிடையே ஆங்கிலேயரின் பிரபுத்துவ முறையும் (Nobility) மற்ற சில பழக்கங்களும் அயர்லாந்தில் புதுக் குடியேறிகளால் (New Settlers) புகுத்தப்பட்டன.

முதலாம் எட்வர்டு காலத்தில் அயர்லாந்தில் மேலும் சில பகுதிகள் வெல்லப்பட்டிருந்தும், ஆங்கில ஆதிக்கமோ நாகரிகமோ இத் தீவில் முழுக்க பரவாமலேயே இருந்தது. டண்டாக் (Dundalk) என்ற இடத்திலிருந்து டப்ளின் (Dublin) வரையில் கிழக்குக் கரையோரமாக இருந்த பேல் (Pale) என்ற சிறு நிலப்பரப்பிலேயே ஆங்கில அரசரின் அதிகாரம் சற்று வேரூன்றியிருந்தது.

ஆங்கில அரசரின் சார்பில் இப் பகுதியிலேயே இரட்சகப் பிரபு (Lord Protector) என்ற உயர் அதிகாரி அயர்லாந்தை

ஆண்டு வந்தார். பேலேயும் அதைச் சுற்றியிருந்த சில பட்டணங்களின் சார்பிலும், ஒரு பாராளுமன்றமும் இருந்து வந்தது.




(டியூடர்கள் காலத்திய அயர்லாந்து)

இப் பகுதியிலேயே ஆங்கிலேயர்களின் குடியேற்றமும் வளர்ந்து வந்தது. இப் பகுதியில் வாழ்ந்துவந்த ஆங்கிலக் குடியேறிகளின்

நாகரிகத்தைக் காக்கும் வகையில், மூன்றும் எட்வர்டு காலத்தில் கில்கென்னி சட்டம் (Statute of Kilkenny) கொண்டுவரப்பட்டது. இதன்படி ஐரிஷ் குடிகளுடன் திருமண உறவை ஏற்படுத்திக் கொள்ள முடியாதபடி குடியேறிகள் தடுக்கப்பட்டனர். பிளான்டாஜெனட் குடியின் கடைசி அரசரான இரண்டாம் ரிச்சர்டு, அயர்லாந்தில் தன் செல்வாக்கை உயர்த்த முயன்று இருந்தும், அதற்குள் அவர், பட்டநீக்கம் பெற்றுக் கொலை செய்யப்பட்டதால் அம் முயற்சி முற்றுப்பெறவில்லை. அடுத்துத் தொடங்கிய லங்காஸ்ட்டிரியர்கள், யார்க்கியர் காலத்தில் ஒருவர் பின் ஒருவராகப் பல ஆளுநர்கள் இங்கிலாந்திலிருந்து இத் தீவுக்கு அனுப்பப்பட்ட போதும், அயர்லாந்தின் பெரும் பகுதியில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் முழுக்க பரவாமலேயே இருந்தது.

**டியூடர்களின் காலம்:** டியூடர்களின் காலத்திலேயே ஐரிஷ் தீவு ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின்கீழ்ப் பூரணமாகக் கொண்டு வரப்பட்டது.

ஏழாம் ஹென்றி, ஆங்கில வாரிசைப் பெற்றிருந்தபோது (கி. பி. 1485), அயர்லாந்தில் கில்டாரா (Kildara), டெஸ்மாண்டு (Desmond) என்ற இரு பிரபுக்களின் குடிகள் செல்வாக்குப் பெற்றிருந்தன. கில்டாராக் குடியைச் சார்ந்த கெரால்டு ஃபிட்ஜ்கெரால்டு (Gerald Fitzgerald) என்பவரையே, ஆங்கில அரசர் ஐரிஷ் தீவுக்கு உயர் அதிகாரியாக (Lord Deputy) நியமித்திருந்தார். ஆனால், இவர் ஏழாம் ஹென்றியிடம் விசுவாசமாக இராமல் ஆங்கிலப் பட்டத்திற்கு உரிமை கோரிய லேம்பர்ட் சிம்னெல், பெர்க்கின் லார்வெக் ஆகிய யார்க்கிய கலகக்காரர்களுக்கு உதவிகளைக் கொடுத்துவந்தார். இதனால் சில ஆண்டுகளுக்குப் பின்னர், இந்த ஆளுநர் தம் பதவியிலிருந்து விரட்டப்பட வேண்டியவரானார்.

பெர்க்கின் வார்பெக் என்ற அக் கலகக்காரர் அயர்லாந்தில், மேன்மேலும் செல்வாக்கைப் பெற்று வந்த நேரத்தில் ஹென்றி, தம் பிரிவி கவுன்சில் அங்கத்தினரான சர் எட்வர்டு பாய்னிங்ஸ் என்பவரை ஆளுநராக அயர்லாந்துக்கு அனுப்பி வைத்தார். வார்பெக்குக் கலகத்தை ஒடுக்கிப் பெருமை கொண்ட பாய்னிங்ஸ், கலகங்களாலும் உள்நாட்டுப் பூசல்களாலும் அமளிப் பட்டுவந்த அயர்லாந்தை, ஆங்கில ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரத் தகுந்த ஏற்பாடொன்றைச் செய்தார். அதுவே 'பாய்னிங்ஸ் சட்டம்' (Poyning's Law) என அழைக்கப்பட்டது. தயக்கமும்

எதிர்ப்பும் காட்டிய ஐரிஷ் பிரபுக்களுக்கு பாய்னிங்ஸ் பரிசுகளைக் கொடுத்தும் பதவிகளைக் கொடுப்பதாக ஆசை வார்த்தைகள் சொல்லியும் ட்ரோகீடா (Drogheda) என்னுமிடத்தில் கூடிய ஐரிஷ் பாராளுமன்றத்தைக் கட்டாயப்படுத்திக் கி.பி. 1494ஆம் ஆண்டில் அச் சட்டத் தொகுப்பினைக் கொண்டு வந்தார். ஆங்கில அரசரின் அனுமதியில்லாமல் ஐரிஷ் பாராளுமன்றம் கூட்டப்படக் கூடாதெனவும் அரசரின் ஆலோசனையில்லாமல் அம் மன்றம் எந்த வொரு மசோதாவையும் கொண்டுவரக் கூடாதெனவும் அம் மன்றத்தினால் இயற்றப்படும் எந்தச் சட்டத்தையும் நிராகரிக்கும் உரிமை ஆங்கிலப் பாராளுமன்றத்திற்கு உண்டு எனவும் அச் சட்டம் வலியுறுத்தியது.

இச் சட்டத்தினால், அயர்லாந்து ஆங்கிலேயரின் அரசியல் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டது.

தற்காலிகமாக, அவசியத்தின் பேரில் பதவியைப் பெற்றிருந்த பாய்னிங்ஸ், நாடு திரும்பியதும் அரசர் ஹென்றி, மீண்டும் கில்டாரா பிரபுவையே அயர்லாந்தில் ஆளுநராக அமர்த்தினார்.

ஆங்கிலேய வியாபாரிகளின் நலன்களைப் பாதுகாக்க ஐரிஷ், வர்த்தகத்திற்குத் தடைகள் பல இவ் வரசர் காலத்தில் போடப் பட்டிருந்தும், பொதுவாக இவ்விரு நாடுகளும் முன்பைவிட நெருங்கிய தொடர்பைக் கொண்டனவாகவே இருந்தன.

எட்டாம் ஹென்றியின் காலத்தில் ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்துப் பிட்ஸ் கெரால்டுகள் கலகம் செய்தும், அதனால் அயர்லாந்து எவ்வித அரசியல் சுதந்திரத்தையும் பெறவில்லை. தம் படைகளை அயர்லாந்திற்கு அனுப்பியிருந்த இவ் வரசர், அங்கு அமைதியை நிலைநாட்டியதுடன் வருங்காலத்தில் கலகம் எதுவும் ஏற்படவொட்டாமல் தடுக்கவும் சில முயற்சிகளை மேற் கொண்டார். கலகத்தில் ஈடுபடுபவர்கள் ஆங்கிலேயக் குடியேறி களாக இருந்தாலும், ஐரிஷ் பூர்வக் குடிகளாக இருந்தாலும், ஒரே விதமான தண்டனை கொடுக்கப்படுவதற்கான சட்டமொன்றும் இயற்றப்பட்டது. கலகத்தில் ஈடுபட்ட கில்டாரா பிரபுக்கள் சிறைத் தண்டனையோடு நாடு கடத்தல் தண்டனையையும் அடைந்தனர்.

அயர்லாந்தில் தம் ஆதிக்கத்தை இங்ஙனமாக நிலைநிறுத்திய இவ் வரசர் கி.பி. 1542-ல் 'அயர்லாந்தின் அரசர்,(King of Ireland) என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார்.

இவ் வரசரின் காலத்திலேயே இங்கிலாந்தில் சமய புரட்சி தோன்றியிருந்தது. இதனைத் தொடர்ந்து எட்டாம் ஹென்றி, தம்மை ஐரிஷ் திருச்சபைக்கும் தலைவராக அறிவித்து கொண்டார் இத்துடன் இங்கிலாந்தில் கொண்டு வரப்பட்ட சமய எதிர்ப்புச் சட்டங்களையும் இத் தீவின்மீது திணிக்க முற்பட்டார். எல்லாவற்றிற்கும் மேலாக, ஐரிஷ் மடாலயங்களையும் கலைத்து அதன் சொத்துகளையும் பறிமுதல் செய்து கொண்டார்; பறிமுதல் செய்யப்பட்ட அச் சொத்து, ஆங்கிலேயக் கொள்கைக்குச் சாதகமாக இருந்த ஐரிஷ் பிரபுக்களுக்கே கொடுக்கப் பட்டன. தம் சமய போக்கினை எட்டாம் ஹென்றி, ஐரிஷ் குலத் தலைவர்களின்மீது திணிக்க முற்பட்டிருந்தும் இவ் வரசர் எதிர் பார்த்த பலனைப்பெற முடியாமல் போய்விட்டது. ஐரிஷ் மக்களில் பெரும்பான்மையோர் போப்பாண்டவரின் அதிகாரத்தை மீறிய வர்களாக நடந்துகொள்ள மறுத்தனர். அயர்லாந்திலிருந்த பிரபுக்களில் பலர், எட்டாம் ஹென்றியின் சமய கொள்கையினை ஒப்புக்கொண்டவர்களாக இருந்தும், பாமர மக்களில் ஏராள மானவர் இதை உள்ளூர வெறுத்தவர்களாகவே இருந்து வந்தனர். ஆனாலும் இவ் வரசர், அம் மக்களை ஒறுக்கவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது.

சமய விவகாரங்களில் ஓரளவு தலையிட்டிருந்தும், தம் ஆட்சிக் காலத்தில் எட்டாம் ஹென்றி, ஐரிஷ் அரசியல் விவகாரங்களி லிருந்து முடிந்தவரையில் ஒதுங்கியே இருந்தார். பெயருக்கு அங்கு ஓர் ஆங்கில ஆளுநர் அனுப்பப்பட்டிருந்தும், நாட்டின் நிர்வாகம் ஐரிஷ் பிரபுக்களிடத்திலும் மற்ற பெரும் நிலச் சொந்தக்காரர்களிடத்திலும் இருந்து வந்தது.

அடுத்த ஆங்கில அரசரான ஆறும் எட்வர்டு காலத்தில் அயர்லாந்தில் பிராடஸ்டன்டு சமயத்தைப் புகுத்துவதற்கான முயற்சி செய்யப்பட்டது. ஆனால், அங்குக் கிளம்பிய கடுமையான எதிர்ப்பினால் அம் முயற்சி சாத்தியப்படாமல் போய்விட்டது.

மேரி டியூடர் காலத்தில் அயர்லாந்தின் மத்தியப் பகுதியில் இருந்த நிலங்களில் சில, ஆங்கிலேயர்களால் கைப்பற்றப் பட்டிருந்தன. இவற்றை 'அரசர் கவுன்டி' (Kings County), 'அரசி கவுன்டி' (Queen's County) எனவும் அழைத்தனர். ஃபிலிப்ஸ் டவுன் என்பது, அரச கவுன்டிக்கும், மேரி பரோ (Mary Borough) என்பது அரசி கவுன்டிக்கும் முக்கிய பட்டணங் களாக விளங்கின. ஆங்கிலேயர்களின் இவ்விரு புதிய குடியேற்றங்கள் ஐரிஷ் மக்களிடையே எதிர்ப்புணர்ச்சியை

ஏற்படுத்தியதால், ஓ' கூனர்ஸ் (O' Connors), ஓ' மோர்ஸ் (O' Mores) என்பவர்களின் தலைமையிலே கலகங்கள் ஏற்பட்டன. ஆனல், இக் கலகங்கள் ஆங்கிலேயர்களால் மிக எளிதாக அடக்கப்பட்டுவிட்டன.

மேரி தம் ஆட்சிக் காலத்தில் கத்தோலிக்க சார்பான கொள்கையை இங்கிலாந்தில் புகுத்தியிருந்ததோடு, அயர்லாந்திலும் அதை அமலாக்கியிருந்ததால், அங்கிருந்த பெருவாரியான கத்தோலிக்கர்கள் அவ்வேற்பாட்டை வரவேற்றவர்களாகவே இருந்தனர். ஆனல், பிராடஸ்டன்டுகள் இவ் வரசின் சமய கொள்கையை எதிர்க்க வேண்டியர்களாக இருந்தனர். ஆகவே, மேரி டியூடர் காலத்திலும் அயர்லாந்தில் அமைதி நிலவியதாக இல்லை.

கன்னியரசி எலிசபெத் காலத்தில் அயர்லாந்து முழுவதும் ஆங்கிலேயர் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரப்படுவதற்கான முயற்சி செய்யப்பட்டது.

பிராடஸ்டன்டு சமய சார்பான திருச்சபை ஏற்பாட்டைச் செய்திருந்த இவ் வரசியார், அதை அயர்லாந்தில் புகுத்த விரும்பினர். அதுமட்டுமன்றி, அத் தீவை ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் முழுக்க முழுக்க கொண்டுவரவும் எண்ணினர். இவ் வரசியாரின் சமய, அரசியல் கொள்கைகள் இங்கிலாந்திற்கு எதிராகச் சில கலகங்களைத் தூண்டிவிட்டன.

ஆங்கிலேயர் ஆதிக்கம் இன்னும் பரவாமலிருந்த அல்ஸ்டர் (Ulster) என்ற அயர்லாந்தின் வடபகுதியில் கி.பி. 1567-ல் ஷேன் 'ஓ' நீல் (Shane O' Neill) என்பவரின் தலைமையில் ஒரு மாபெரும் கலகம் தோன்றியது. இக் கலகக்காரர்கள், அங்கு ஆங்கில ஆளுநராக இருந்த சஸ்ஸெக்ஸ் பிரபுவைத் தோற்கடித்ததால், அயர்லாந்து ஆங்கிலேயரின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுவிடுமோ என்ற நிலைமை உருவாகியது. அதனல் இவ் வரசியார், ஓர் ஆங்கிலப் படையை சர். ஹென்றி சிட்னி (Sir Henry Sydney) என்பவரது தலைமையில் உடனடியாக அனுப்பிவைத்தார். கி.பி. 1567-ல் நடந்த ஒரு சிறு கைகலப்பில் ஓ' நீல் கொல்லப்பட்டதால், இக் கலகமும் ஓய்ந்தது. ஆங்கிலேயர் ஆதிக்கமும் தொடர்ந்தது.

எலிசபெத் அரசியாரின் சமய கொள்கைக்கு விரோதமாக மன்ஸ்டர் (Munster) பகுதியில் ஓர் எதிர்ப்புச் சூழ்நிலை உருவாகி வந்தது. இந் நிலையைப் பயன்படுத்திக்கொண்ட போப்

பாண்டவர் சில கத்தோலிக்கப் பாதிரிமார்களை அங்கே அனுப்பி வைத்து, ஐரிஷ் கத்தோலிக்கர்களுக்கு வெறி உணர்ச்சியை உண்டாக்கினர். இதற்கிடையே ஸ்பெயினிலிருந்தும் இரண்டாம் ஃபிலிப்பினால் சில வீரர்கள் இப் பகுதிக்கு அனுப்பப்பட்டதைத் தொடர்ந்து, கி.பி. 1575-ல் டெஸ்மாண்டு எர்ல் (Earl of Desmond) என்பாரின் தலைமையில் ஒரு கலகம் தோன்றியது. இவ்விதச் சிக்கலையும் திறமையாகச் சமாளிக்கக் கூடிய மன வலிமையைப் பெற்றிருந்த இவ்வரசியார், கிரேல் எர்ல் தலைமையில் ஒரு படையை அனுப்பி வைத்தார். சில ஆண்டுகள் கலகப்படைகளுக்கும் ஆங்கிலப்படைகளுக்கும் போர் தொடர்ந்து நடந்தும் கி பி 1583-ல் டெஸ்மாண்டு எர்ல் பிடிபட்டுக் கொல்லப்பட்டார். இக் கலகக்காரர்களின் நிலங்கள் பிடுங்கப்பட்டன. எதிர்ப்புக் கேந்திரமாக இருந்த மன்ஸ்டர் பகுதி அழிக்கப்பட்டது. அடுத்த ஆண்டு இதே பகுதியில் ஆங்கிலக் குடியேறிகளால் ஒரு புதிய குடியேற்றம் அமைக்கப்பட்டது.

சில ஆண்டுகளுக்கு அயர்லாந்தில் அமைதி நிலவியிருந்தும் கி.பி. 1598-ல் மீண்டும் ஹியு ஓ' நீல் (Hugh O' Neill) என்பவரின் தலைமையில் ஒரு கலகம் ஏற்பட்டது. முன்பு (கி.பி. 1567) கொல்லப்பட்ட ஷேன் ஓ' நீலுக்கு நெருங்கிய உறவினரான இக் கலகத் தலைவர், டைரோன் (Tyrone) பகுதிக்கு எர்ல்லாக இருந்தவர்.

எலிசபெத் அரசியாரின் தீவிரக் கத்தோலிக்க எதிர்ப்புக் கொள்கையில் மனம் குமுறியிருந்த டைரோன் எர்ல், போப் பாண்டவரால் கலகம் செய்யும்படி தூண்டி விடப்பட்டார். இவர் உயர்த்தியிருந்த கலகக் கொடி, அயர்லாந்தில் ஆங்கிலேயர் ஆட்சியையே அஸ்தமிக்க வைத்து விடுமோ என அஞ்சப்பட்டது. கலகம் தொடங்கிய சில காலத்துக்குள்ளாகவே இத் தலைவர், அயர்லாந்தில் பேராதிக்கம் பெற்றவராக விளங்கினர். அல்ஸ்டரில் தொடங்கிய இக் கலகம், மன்ஸ்டருக்கும் பரவியதால் வேறு ஐரிஷ் பகுதிகளுக்கும் இக் கலகம் பரவக்கூடிய அபாய நிலைமை உருவாயிற்று. நிலைமை கட்டுக்கடங்காமல் போவதற்கு முன், அதைச் சமாளிக்க எண்ணிய இவ் வரசியார், எஸ்ஸெக்ஸ் பிரபுவின் தலைமையின்கீழ் 20,000 பேர் கொண்ட ஒரு படையை அனுப்பி வைத்தார். ஆனால், இந்த ஆங்கிலேயப் படைத்தலைவர், தம் முயற்சியில் தோல்வியுற்றதோடு, கலகக்காரர்களுடன் ஓர் அவமானகரமான உடன்படிக்கையையும் செய்துகொண்டு நாடு திரும்பினர். எஸ்ஸெக்ஸ் பிரபுவின் திறமையின்மையால் ஆத்திரமடைந்த எலிசபெத் அரசி, அவரைக் கொலைக் களகத்திற்கு அனுப்பி வைத்து, கி.பி. 1601-ல் மவுன்ட்ஜாய்

பிரபுவின் (Lord Mountjoy) தலைமையில் இன்னொரு படையை அனுப்பி வைத்தார். இத் தலைவர் கடும் முயற்சி செய்து இக் கலகத்தை ஒடுக்கியதோடு டைரோன் எர்லை அடிபணியவும் செய்தார். இக் கலகத்திற்குப் பின்னர், எலிசபெத் அரசியாரின் காலத்தில் ஐரிஷ் தலைவர்கள் படைகொண்டு வேறு எந்தவொரு முயற்சியையும் செய்யவில்லை.

இங்ஙனமாக, அயர்லாந்தில் அடுத்தடுத்து நேர்ந்த எதிர்ப்புகள் அடக்கப்பட்டதால், அத் தீவு ஆங்கிலேயரின் அரசியல் ஆதிக்கத்தின்கீழ் முழுவதுமாகக் கொண்டு வரப்பட்டது.

**ஸ்காட்லாந்து (முன் வரலாறு)**

பாணக்பர்ன் வெற்றிப் புகழ் இராபர்ட் புரூஸ் (கி.பி. 1314) என்பவரது காலத்திலிருந்தே ஆங்கிலேய-ஸ்காட்டிய உறவு சீர் கெட்டிருந்தது. இவ் வரசரின் மகன் இரண்டாம் டேவிட், பிள்ளைப் பேறு ஏதுமின்றிச் காலமானதால், கி.பி. 1370-ல் ஒரு புதிய அரச மரபு ஸ்காட்லாந்தில் ஆட்சியைப் பெற்றிருந்தது.

டேவிட்டின் சகோதரியான மார்கரெட், அவரது கணவர் வால்டர் ஸ்டூவர்ட் என்பவர்களுக்குப் பிறந்த இரண்டாம் இராபர்ட் என்பவரே அம் மரபின் முதல் அரசராக விளங்கினர். கி.பி. 1390-ல் இவ் வரசர் காலமடைந்ததால், அடுத்த வாரிசான மூன்றும் இராபர்ட்டும் கொலை செய்யப்படவே பதினொரு வயதே நிரம்பிய முதலாம் ஜேம்ஸ், அப்போது ஸ்காட்டிய வாரிசுரிமைக்கு உரிமையாளரானர். ஆனல், அச் சமயம் அவர் ஆங்கிலேயரிடம் சிறைப்பட்டுக் கிடந்தார். இருபது ஆண்டுகள் கழித்து இவர் விடுதலை செய்யப்பட்டும் தம் சொந்த அரண்மனையிலேயே சில ஸ்காட்டிய பிரபுக்களால் கொலை செய்யப்பட்டார். இவரது அடுத்த வாரிசான இரண்டாம் ஜேம்சுக்கும் கி.பி. 1488-ல் இதே சதி ஏற்பட்டது. அடுத்துப் பட்டத்திற்கு வந்தவரே ஐந்தாம் ஜேம்ஸ் (கி.பி. 1488-1513) என்பவராவர்.

**ஏழாம் ஹென்றியின் காலம்:** ஏழாம் ஹென்றி இங்கிலாந்தின் அரியணையைப் பெற்றிருந்தபோது, யார்க்கியக் கடைசி அரசரான மூன்றும் ரிச்சர்டு என்பவரிடம் சமாதானம் செய்து கொண்ட ஸ்காட்டியர்களுக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. இந்த டியூடர் அரசருக்கு எதிராக லேம்பர்ட் சிம்னெல், பெர்க்கின் வார்பெக் போன்ற யார்க்கியர்கள் கலகம் செய்தபோது, ஸ்காட்டிய அரசரான ஐந்தாம் ஜேம்ஸ், அவர்களுக்கு உதவி

செய்திருந்தார். அது மட்டுமன்றி, கி.பி. 1496-ல் வார்பெக்கின் சார்பில் ஸ்காட்டியர் இங்கிலாந்தின்மீது படையெடுத்துத் தோல்வி அடைந்தார். கடந்த சில நூற்றாண்டுகளாக இங்கிலாந்தின் வட எல்லையிலிருந்த ஸ்காட்லாந்து, ஆங்கிலேயர்களுக்கு எதிரிகளாக இருந்துவரும் நிலைமையை மாற்றவும் குறிப்பாக, ஸ்காட்டியர்கள் இனி கலகக்கார வார்பெக்குக்கு உதவி செய்யக்கூடாது என்பதற்காகவும் ஏழாம் ஹென்றி, ஒரு முயற்சியை மேற்கொண்டார். ஸ்பானிய அரசரான பெர்டினண்டு என்பவரது உதவிகொண்டு ஸ்காட்டிய அரசருடன் ஒரு திருமண உறவு ஏற்படுத்திக்கொள்ளப்பட்டது. இதன்படி, தம் மகளான மார்க்ரெட் என்பவளை ஸ்காட்டிய அரசர் நான்காம் ஜேம்சுக்குத் திருமணம் செய்வித்தார். இதனைத் தொடர்ந்து, இவ் வரசரின் கடைசிக் காலம்வரை ஆங்கில-ஸ்காட்டிய உறவு அமைதியாகவே இருந்தது.

**எட்டாம் ஹென்றியின் காலம் :** இவ் வரசர் பட்டத்திற்கு வந்த சில காலத்திற்குள்ளாகவே மீண்டும் ஆங்கில-ஸ்காட்டிய உறவு முறிய ஆரம்பித்தது.

கி.பி. 1513-ல் ஆங்கில அரசர் ஸ்பர்ஸ் சண்டையில் ஃபிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடித்ததால், அவர்களிடம் நட்புக் கொள்கையைக் கொண்டிருந்த நான்காம் ஜேம்ஸ், பழி வாங்கும் நோக்கத்தில் இங்கிலாந்துமீது படை எடுத்தார். ஆனால், பிளாடன் ஃபீல்டு என்னுமிடத்தில் நடந்த சண்டையில் சர்ரே எர்லான தாமஸ் ஹோவர்டு என்பவரது தலைமையில் போரிட்ட படைகள் ஸ்காட்டியரை வெற்றி கண்டன. இச் சண்டையில் நான்காம் ஜேம்ஸ் உள்பட ஏராளமான ஸ்காட்டியப் பிரபுக்களும் கொல்லப்பட்டனர். அடுத்துப் பட்டத்திற்கு வந்த ஐந்தாம் ஜேம்ஸ், இரண்டு ஆண்டுகளே நிரம்பியிருந்த பாலகனாக இருந்ததால், இவர் சார்பில் தாயார் மார்கரெட், ஸ்காட்லாந்தில் காப்பாளர் பொறுப்பை ஏற்றிருந்தார். இவ் வரசியார் ஆட்சிப் பொறுப்பினைப் பெற்றிருந்த காலம்வரையில் ஆங்கில ஸ்காட்டிய உறவிற்கு எந்தப் பாதகமும் ஏற்படவில்லை. ஆங்கில-ஸ்காட்டிய உறவை மேலும் நிலைப்படுத்தும் முறையில் எட்டாம் ஹென்றி, இவரது மூத்த மகளான மேரியை ஸ்காட்டிய அரசருக்கு மணம் முடித்து வைக்கக்கூடிய ஒரு யோசனையைத் தெரிவித்தார். ஆனால், ஆங்கில அரசரின் சமய கொள்கையை விரும்பாதவராகவும், ஃபிரான்சின் செல்வாக்கிற்குக் கட்டுப்பட்டவராகவும் இருந்த ஐந்தாம் ஜேம்ஸ், இந்த யோசனையை நிராகரித்ததுடன் தம் தந்தையாரின் கொள்கையைப் பின்பற்றிய

வராக, கி.பி. 1542-ல் இங்கிலாந்தின்மீது படையெடுத்தார். அடுத்து நடந்த சோல்வே மால்ஸ் சண்டையில் ஸ்காட்டியர் படுதோல்வியடைந்தனர். இந்த அதிர்ச்சியால் மனம் தளர்ந்த ஐந்தாம் ஜேம்ஸ் சில நாட்களுக்குள்ளாக காலமடைந்து விட்டார்.

அடுத்து ஸ்காட்லாந்தில் பட்டத்தைப் பெற்றவர் சிறு வயதினரான மேரி என்பவராவார். இவர் சார்பிலே ஸ்காட்டிய ஆட்சிப் பொறுப்பு மேரி (குயிஸ்) என்ற அரசியின் தாயாரிடம் இருந்து வந்தது.

எப்படியும் தம் வாழ்நாளிலேயே ஆங்கில-ஸ்காட்டிய உறவைச் சுமுகமாக்கி அந்நாட்டை இங்கிலாந்தின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்துவிட வேண்டுமென்ற எண்ணங் கொண்டிருந்த எட்டாம் ஹென்றி, இன்னொரு திருமணத்திற்காக யோசனையைத் தெரிவித்தார். தம் மகனை எட்வர்டை ஸ்காட்டிய பாலக அரசி மேரி மணந்துகொள்ளவேண்டுமென்பதே அந்த ஏற்பாடாகும். இந்த யோசனை ஸ்காட்டிய கத்தோலிக்கர்களால் பலமாக எதிர்க்கப்பட்டதால், இம் முயற்சி கைக்கூடாமல் போய்விட்டது. இதற்கிடையே எட்டாம் ஹென்றியும் காலமாகிவிட்டார்.

**ஆறும் எட்வர்டின் காலம் :** இவரது ஆட்சியில் காப்பாளர் பதவியைப் பெற்றிருந்த சோமர்செட் பிரபுவும், முடிக்கப் படாமலிருந்த அந்தத் திருமண ஏற்பாட்டை நிறைவேற்றி வைத்து, ஆங்கில-ஸ்காட்டிய உறவைச் சுமுகப்படுத்த நினைத்தார். ஆனால், இம் முறையும் ஸ்காட்டியர் அத் திருமணத் திட்டத்தை ஒப்புக் கொள்ளாததால், கோபங்கொண்ட சோமர்செட் பிரபு, ஆங்கிலப் படையொன்றை ஸ்காட்லாந்தின்மீது ஏவினர். இக் காப்பாளரின் இந்த அவசரச் செய்கை ஆங்கிலேயருக்கெதிராக எல்லா ஸ்காட்டிய மக்களையும் ஒன்றுபடுத்திவிட்டது. இருப்பினும், கி.பி. 1547ஆம் ஆண்டில் நடந்த பிங்கி சண்டையில் ஆங்கிலேயரே வெற்றி பெற்றனர். இச் சண்டையை யொட்டி, ஆங்கிலேயர்மீது ஸ்காட்டியர்களுக்கு ஏற்கெனவே இருந்து வந்த வெறுப்பு மேலும் அதிகரித்தது. வெற்றி கொண்ட ஆங்கிலப் படையினரால், இள வயதினரான தங்கள் அரசிக்கு எவ்வித ஆபத்தும் வரக்கூடாதென நினைத்து, ஸ்காட்டியர் இரகசியமாக அவரைப் ஃபிரான்சு நாட்டுக்கு அனுப்பி வைத்து விட்டனர். அங்கேயே வளர்ந்த இவ் வரசியார், ஃபிரெஞ்சு இளவரசருக்கு (வருங்கால இரண்டாம் ஃபிரான்சிஸ்) மணம் முடிக்கப்பட்டார்,

இங்ஙனமாக, சோமர்செட்டின் மதியற்ற படையெடுப்பு, நட்பு நாடாக இருந்திருக்க வேண்டிய ஸ்காட்லாந்தை எதிரியின் முகாமிற்குச் செலுத்திவிட்டது. இக் காப்பாளர் தம் பதவியை இழந்த பின்னர், அடுத்து இங்கிலாந்தில் ஆட்சி அதிகாரங்களைப் பெற்றிருந்த நார்தம்பர்லாந்து பிரபு, இரு நாடுகளுக்கிடையே நிலவிவந்த விரோத மனப்பான்மையை ஓரளவாவது குறைக்கும் முயற்சியில் ஸ்காட்லாந்திலிருந்த ஆங்கிலப்படைகளைத் திருப்பி அழைத்துக்கொண்டார்.

இதற்கிடையே, ஆறும் எட்வர்டு காலமடையவே அவரது ஆட்சியும் முடிந்தது

**ஜான் நாக்ஸ் :** ஐரோப்பாவிலும் இங்கிலாந்திலும் போப்பாண்டவரின் ஆதிக்கத்திற்கும் கத்தோலிக்கச் சமயத்திற்கும் எதிராகத் தொடங்கப்பட்ட சமய புரட்சி இயக்கம், ஆரம்ப காலத்தில் ஸ்காட்லாந்தைப் பாதித்ததாக இல்லை. இருப்பினும், சமய புரட்சி இந் நாட்டிலும் ஏற்படுவதற்கான சூழ்நிலைகள் ஐந்தாம் ஜேம்ஸின் காலத்திலேயே தென்பட்டன. புதிய சமய சீர்திருத்தக் கருத்துகளை ஏற்றுக்கொண்ட குற்றத்திற்காக, கி.பி. 1525ஆம் ஆண்டிலேயே பேட்ரிக் ஹேமில்டன் (Patrick Hamilton) என்பவர், செயின்ட் ஆண்ட்ரூஸ் (St. Andrews) என்னுமிடத்தில் எரிக்கப்பட்டார். இருபது ஆண்டுகளுக்குப் பின்னர், அதே குற்றத்திற்காக ஜார்ஜ் விஷார்ட், (George Wishart) என்ற மற்றொரு பிராடஸ்டன்ட் பாதிரியார் அதே இடத்தில் எரிக்கப்பட்டார். இவரது கொலையினால் கொந்தளிப்படைந்த விஷார்ட்டின் நண்பர்கள், செயின்ட் ஆண்ட்ரூஸ் கோட்டையைத் தாக்கி அங்கிருந்த ஸகாட்டிய திருச்சபைத் தலைவரான கார்டினல் பீட்டன் என்பவரைக் கொலை செய்து விட்டனர். இங்ஙனமாக, 'இரத்தத்துக்கு இரத்தம்' என்ற கொள்கை ரீதியில் சமயபுரட்சி ஸ்காட்லாந்தில் தொடங்கியது.

ஸ்காட்லாந்தில் பீட்டன் கொலையைத் தொடர்ந்து ஏற்பட்ட அபாய நிலையைச் சமாளிக்க இந் நாட்டு அரசாங்கம் ஃபிரெஞ்சுக்காரர் உதவியை நாடியது. ஃபிரான்சும் தன் படையை அனுப்பி வைத்தது. விஷார்ட்டின் நண்பர்கள், இன்னும் அக் கோட்டையைத் தங்கள் ஆதிக்கத்திலேயே வைத்திருந்தனர். இக் கோட்டை ஃபிரெஞ்சுப் படையினரால் தாக்கப்பட்டு, அங்கிருந்த பிராடஸ்டன்டியர்கள் கைப்பற்றப்பட்டனர். அவர்களில் ஜான் நாக்ஸ் என்ற பிராடஸ்டன்டியரும் ஒருவராவர்.

ஃபிரெஞ்சுக்காரர்களால் இரண்டு ஆண்டுகள் சிறையில் அடைக்கப்பட்டிருந்த ஜான் நாக்ஸ், அத் தண்டனைக் காலத்தில் ஒரு தீவிரக் கத்தோலிக்க எதிர்ப்புவாதியாக மாறிவிட்டார். கி.பி. 1548ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுச் சிறையிலிருந்து விடுதலை பெற்ற நாக்ஸ், இங்கிலாந்துக்கு வந்து ஆறும் எட்வர்டிடம் அரச சேவகம் புரிந்தார். கி.பி. 1553ஆம் ஆண்டில் கத்தோலிக்க மதத்தைத் சேர்ந்த மேரி டியூடர், ஆங்கில அரியணையைப் பெற்றபோது ஜான் நாக்ஸ், ஐரோப்பாவிலுள்ள ஜெனீவா (Geneva) என்ற பகுதிக்குச் சென்றார். இவ்விடத்தில்தான் இவருக்கும் லூதரின் சீடர்களில் ஒருவரான ஜான் கால்வினுக்கும் (John Calvin) சந்திப்பு ஏற்பட்டது. பிராடஸ்டன்டு சமய கருத்துகளில் சில புதிய கோட்பாடுகளை வற்புறுத்தியிருந்த ஜான் கால்வினின் கொள்கையினால் நாக்ஸ் மிகவும் கவரப் பட்டார்.

இவரே ஸ்காட்லாந்தில் கத்தோலிக்க மத எதிர்ப்பிற்கு அடுத்த சில ஆண்டுகளில் காரணமானார்.

**மேரி டியூடரின் காலம் :** தீவிரக் கத்தோலிக்க கொள்கையை இங்கிலாந்தில் இவ் வரசியார் புகுத்த முயன்றபோது, ஸ்காட் லாந்தில் காப்பாளர் ஆட்சி நடத்திவந்த மேரி (குயிஸ்) என்பவரும் பிராடஸ்டன்டுகளை ஒடுக்கி வரலானார். ஃபிரான்சு நாட்டிலேயே இன்னும் தங்கி வாழ்ந்து வந்த ஸ்காட்டிய அரசி மேரியின் தாயாரான குயிஸ் மேரி, பிராடஸ்டன்டுகளை ஒடுக்க ஒடுக்க, அவர்களின் பலமும் செல்வாக்கும் பெருகியே இருந்தன. மேரி டியூடரின் சமய கொள்கையினால் ஊக்குவிக்கப்பட்டே மேரி குயிஸ் ஸ்காட்லாந்தில் பிராடஸ்டன்டு எதிர்ப்பு இயக்கத்தைத் தீவிரமாகப் பின்பற்றி வரலானார்.

இதற்கிடையே (கி.பி. 1558) மேரி ஸ்காட் ஃபிரெஞ்சு இளவரசரான ஃபிரான்ஸிஸை மணந்துகொண்டார். இத் திருமணத்தினால், ஸ்காட்டிய அரசி ஃபிரான்சுக்கும் அரசியாகக்கூடிய வாய்ப்பினைப் பெற்றிருந்ததுபோல், இவரது கணவர் ஃபிரான்சிசும் ஸ்காட்லாந்துக்கு 'அரசராகக் கூடிய' உரிமையை அடைந்தார்.

போப்பாண்டவரின் ஆதிக்கத்தை எவ்வளவுக்கெவ்வளவு தீவிரமாக ஜான் நாக்ஸ் வெறுத்து வந்தாரோ, அதே அளவிற்கு ஸ்காட்லாந்தில் ஏற்படக்கூடிய ஃபிரெஞ்சு அதிகாரத்தையும் வெறுத்தவரானார். ஜெனீவாவில் இருந்தபடியே தம் சமய கொள்கைகளைத் தம் ஆட்கள் மூலமாக ஸ்காட்லாந்தில் ஜான்

நாக்ஸ் பரப்பி வந்ததால், இந் நாட்டின் கத்தோலிக்க சமயத்திற்கு எதிர்ப்பாக 'சமய திருக்கூட்டக் குழு' (Lords of the Congregation) என்ற ஓர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இதுவே ஸ்காட்லாந்தில் சமய இயக்கம் தோன்றியதற்கான முதல் முக்கிய நிலையாக அமைந்தது. இத்துடன் ஸ்காட்டிய அரசியலிலும் வருங்காலத்தில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தியதாகவும் இருந்தது.

கத்தோலிக்க சார்பான கொள்கையினைப் பின்பற்றிய மூன்று மேரி அரசிகளை (மேரி டியூடர், மேரி ஸ்காட், மேரி குயிஸ்) கடுமையாகத் தாக்கிப் பெண்கள் ஆட்சியையே பழித்துரைப்பதாக ஜான் நாக்ஸ் ஒரு சிறு குறிப்பு நூலை (The First Blast of the Trumpet against the Monstrous Regiment of Women) வெளியிட்டார்.

சில நாட்களுக்குப் பிறகு, மேரி டியூடர் காலமாகவே இங்கிலாந்தில் எலிசபெத் அரசியாரின் ஆட்சி தொடங்கியது.

**முதலாம் எலிசபெத்தின் காலம்:** எலிசபெத் ஆட்சியைப் பெற்ற ஓராண்டுக் காலத்திற்குள்ளாகவே (கி.பி. 1559) ஸ்காட்லாந்தைப் பாதிக்கும் வகையில் இரு சம்பவங்கள் நடந்தன.

ஜெனிவாவிலிருந்து ஸ்காட்லாந்து திரும்பிய ஜான் நாக்ஸ், பெர்த் (Perth) என்னுமிடத்தில் தம் முதல் சமய பிரசாரத்தைத் தொடங்கினார். இவரது சமய சொற்பொழிவில் இருந்த வேகம், கேட்போரை வெறியர்களாக்கி விட்டது. நாளாக ஆக, ஜான் நாக்ஸின் கொள்கை தீவிரமடைந்தது போல் ஸ்காட்டிய பிராடஸ்டன்டுகளின் சமய வெறியும் அதிகரித்தது.

இதே சமயத்தில் மேரி ஸ்காட் மணந்து கொண்ட ஃபிரான்சிசும் ஃபிரான்சின் மன்னராக்கப்பட்டார்.

ஜான் நாக்ஸினால் வளர்த்து விடப்பட்ட கத்தோலிக்க எதிர்ப்பு இயக்கம் நாட்டிலே வேகமாகப் பரவிவர, அதன் விளைவாகக் கி.பி. 1560ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்திய மடாலயங்கள் தாக்கப்பட்டன. செயின்ட் ஆண்ட்ரூஸ் திருக்கோயிலும் அழிக்கப்பட்டு, அதன் அரிய பொருள்கள் சூறையாடப்பட்டன. 'சமய திருக்கூட்டக் குழு' மேரி குயிஸினால் பொறுப்பேற்கப்பட்ட ஸ்காட்டிய அரசாங்கத்தின்மீதே போர் தொடுத்ததாக இருந்தது. நாட்டிலே ஒரே அமளி, குழப்பம். மேரி குயிஸ், தம் உயிருக்குப் பயந்து, எடின்பர்க் கோட்டையில் பதுங்கிக் கொண்டார். ஃபிரான்சில் இன்னும் இருந்துவந்த மேரி அரசியின்

(ஸ்காட்) சார்பில் அவளது கணவர் இரண்டாம் ஃபிரான்சிஸ் தம் படைகளை 'சமய திருக்கூட்டக் குழுவிற்கு' எதிராக அனுப்பி வைத்தார். இந்த ஃபிரெஞ்சுப் படையெடுப்பினால் ஸ்காட்லாந்தில் பிராடஸ்டன்டியம் அழிந்துபடுமோ என்ற நிலைமை ஏற்பட, அந் நாட்டு பிராடஸ்டன்டு தலைவர்கள் எலிசபெத்தின் உதவியைக் கோரினார்கள்.

ஆரம்பத்தில் தயக்கம் சிறிது கொண்டாலும், அரசியல், சமய காரணங்களுக்காக எலிசபெத், கி.பி. 1560ஆம் ஆண்டில், ஸ்காட்டிய விவகாரத்தில் தலையிட முடிவெடுத்தார். இதன் விளைவாகவே, ஆங்கிலப் படையொன்று ஸ்காட் பிராடஸ்டன்டுகளுக்கு உதவி புரிய அனுப்பப்பட்டது.

ஃபிரெஞ்சுப் படைகள் லியத் (Leith) என்னுமிடத்தில் முகாமிட்டிருக்க, ஆங்கிலப் படையுதவி பெற்ற ஸ்காட்டியர், அவர்களை முற்றுகையிட்டுப் பணியச் செய்தனர். இதனை அடுத்தே எடின்பர்க் உடன்பாடு (Treaty of Edinburgh) ஏற்பட்டது. இவ்வுடன்பாட்டின்படி, ஃபிரெஞ்சுப்படைகள் நாட்டைவிட்டு அகற்றப்பட்டதுடன், ஸ்காட்டிய ஆட்சிப் பொறுப்பும் ஜான் நாக்ஸின் தலைமையில் இயங்கிய சமயதிருக்கூட்டக் குழுவினரிடம் ஒப்படைக்கப்பட்டது.

எலிசபெத், சரியான சந்தர்ப்பத்தில் ஸ்காட்டிய விவகாரத்தில் தலையிட்டு ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை அங்கிருந்து விரட்டியதோடு, பிராடஸ்டன்டு சமயத்தினையும் அந் நாட்டில் காப்பாற்றிவிட்டார்.

தீவிரப் பிராடஸ்டன்டுக் கொள்கையின் அடிப்படையில் கால்வினின் கோட்பாடுகளுக்கேற்ப, ஸ்காட்லாந்தில் பிரஸ்பிடேரியனிசம் (Presbyterianism) அதிகாரப் பூர்வமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலைமையில் மேரி ஸ்காட், தம் கணவர் காலமாகி விட்டதைத் தொடர்ந்து தாம் வளர்ந்த, விரும்பிய ஃபிரான்ஸ் நாட்டைவிட்டு மனமில்லாமல் விலகிக் கி.பி. 1561ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்து திரும்பினார். எடின்பர்க் உடன்பாட்டுக்கு முன்னரேயே, மேரி (குயிஸ்) காலமாகிவிட்டதால் நாடு திரும்பி அரசியாருக்குத் தன்னாட்சி நடத்த சந்தர்ப்பம் இருந்தது.

அரசாங்கப் பொறுப்பினை மேரி ஏற்றுக்கொண்ட காலத்தில் நாட்டிலுள்ள எல்லாச் சமய பிரிவினர்களுக்கும் சகிப்புத் தன்மை காட்டப்போவதாக இவ் வரசியார் சொல்லியிருந்தும், உள் மனத்தில் கத்தோலிக்கத்தையே விரும்பியவராக இருந்தார். ஃபிரான்சில் தமக்கிருந்த செல்வாக்கு இரண்டாம் ஃபிரான்சிஸ்

மன்னரின் மரணத்திற்குப்பின் குலைந்துகொண்டு வந்ததால், அதற்கு ஈடாக, மேரி ஸ்காட் ஆங்கிலேய கத்தோலிக்கர்களிடையே ஆதரவு தேட முயற்சி செய்தார். இதன் காரணமாகவே, ஆங்கில கத்தோலிக்கர்களின் தலைவரும் தம் உறவினருமான டார்ன்லி பிரபுவை, ஸ்காட்டிய பிராடஸ்டன்டுகளின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் மணம் செய்து கொண்டார். எலிசபெத் தம்மை ஆங்கில பட்டத்திற்கு வாரிசாக அறிவிக்கவேண்டுமெனவும் மேரி உரிமைக்குரல் எழுப்பினர்.

இக் கட்டத்திலிருந்தே, எலிசபெத் அரசியார் தம் சூழ்ச்சி வலையைப் பின்னத் தொடங்கினர். மேரி ஸ்காட்டின் வீழ்ச்சிப் படலமும் தொடங்கியது.

எலிசபெத்-மேரி ஸ்காட் விவகாரம் ஆங்கில அரசியாரின் வெளிநாட்டுக் கொள்கையில் (கி.பி. 1559-1589) ஒரு சிறப்பு அம்சமாக விளங்குகிறது.

மோரே பிரபுவின் கலகத்திலிருந்து (கி.பி. 1565) அந்தோனி பாபிங்டன் சதித்திட்டம் (கி.பி. 1586) வரையிலான நிகழ்ச்சிகள், இவ் விரு பெண்ணரசிகளின் வரலாற்றில் மறக்க முடியாதவையாகும்.

எலிசபெத் ஆட்சிக் காலத்தின் முதல் பத்து ஆண்டுகள் ஸ்காட்டிய அரசியாக இருந்ததுடன், அடுத்த பதினெட்டு ஆண்டுகள் அவரது சிறைக் கைதியாகவும் இருக்கவேண்டிய கொடூர விதியைக் கொண்டிருந்த மேரி, ஆங்கிலேயரின் கொலைக் களத்திலேயே உயிர் நீத்தார்.

மேரி பட்ட நீக்கம் அடைந்த ஆண்டிலிருந்தே (கி.பி. 1567) காப்பாளர்கள் உதவியுடன் ஆட்சி புரிந்து வந்த அவர் மகனை ஆறும் ஜேம்சுடன் கி.பி. 1587ஆம் ஆண்டிலிருந்து எலிசபெத் நட்பாகவே இருந்து வந்தார். ஸ்காட்டிய விவகாரங்களில் குறுக்கிடாமல் ஒதுங்கிப் பரஸ்பர நல்லெண்ணத்தை இரு நாடுகளுக்கிடையே இவ் வரசியார் வளர்த்து வந்தார்.

கி.பி. 1603, மார்ச்சு மாதம் கன்னி அரசியார் காலமான போது, இவரது நெருங்கிய பிராடஸ்டன்டு உறவினர் என்ற முறையில், கத்தோலிக்க சமய எதிப்பு இயக்கத்தினரால் வளர்க்கப்பட்ட ஸ்காட்டிய அரசர் ஆறும் ஜேம்ஸ், இங்கிலாந்தில் மன்னராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

முதலாம் ஜேம்ஸ், என்ற பட்டப் பெயருடன் ஆங்கில முகுடத்தை இவ் வரசர் பெற்ற காலத்திலேயே இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஒரே அரசரின்கீழ் இணைந்தன.

# 13. டியூடர்களின் வல்லாட்சியும் அரசியலமைப்பும்

இங்கிலாந்தின் வரலாற்றில் சிறந்ததோர் இடத்தைப் பெற்றிருக்கும் டியூடர்களின் ஆட்சிக் காலம் கி. பி. 1485ஆம் ஆண்டில் தொடங்கி, கி. பி. 1603ஆம் ஆண்டில் முடிந்தது. டியூடர் வம்சம் ஆட்சி புரிந்த 118 ஆண்டுகளில் முடியாட்சியின் அதிகாரம் விவேகத்துடனும் வலிமையுடனும் நடத்தப்பெற்றது. டியூடர்களால் அமைக்கப்பட்ட ஆட்சி, 'வரம்புக்குட்ப்படாத' வல்லாட்சியா அல்லது 'வரம்புக்குட்பட்ட' வல்லாட்சியா என்பதில் சில கருத்து வேறுபாடுகள் காணப்படினும் அது, நாட்டுக்கேற்ற நல்லாட்சியாக இருந்ததென்பதை மறுக்க இயலாது.

'எம் முறையான ஆட்சி நாட்டில் அமைக்கப்படவேண்டும் என்பதுபற்றி, முட்டாள்கள் மோதிக்கொள்ளட்டும். எம்முறையான ஆட்சியாக இருந்தாலும், எது நல்லாட்சியை நாட்டுக்கு தருகிறதோ, அதுவே சிறப்பான ஆட்சி' என்ற ஒரு முதுசொல் டியூடர் காலத்திற்கு மிகவும் பொருத்தமாயிற்று.

**வல்லாட்சிக்கான சூழ்நிலை :** டியூடர்கள் காலத்தில் மன்னர் ஆதிக்கம் ஓங்கியிருந்ததற்குப் பல காரணங்கள் இருந்தன.

உள் நாட்டுப் பூசல்களாலும், போர்களாலும் கடந்த நூற்றாண்டில் இங்கிலாந்துப் பிரபுக்களால் அலங்கோலப் படுத்தப்பட்டு வந்ததால், நாட்டில் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து ஏற்ப்பட்டிருந்ததை மக்கள் அறியாமலில்லை. இத்தகைய சீர்கேடுகள் நாட்டில் ஏற்படாமலிருக்க வேண்டுமென்றால், ஒரு வலுவான மன்னராட்சி தேவை என்பதையும் மக்கள் அறிந்திருந்திருந்தனர். இச் சூழ்நிலையிலேயே டியூடர்களின் வல்லாட்சிக்கு அடிக்கல் இடப்பட்டது.

இதற்கேற்றாற்போல், இதுவரை நாட்டின் அரசாங்கத்தையே தங்கள் செய்கைகளால் நிலைகுலைத்துவந்த பிரபுக்களினமும் சீரழிய ஆரம்பித்தது. எஞ்சியிருந்த பிரபுக்களும் தங்களின் பழைய குணங்களை மறந்து கடமையுணர்ச்சி கொண்டவர்களாக இருந்தனர்.

டியூடர் அரசர்களின் தயவினால் அதிகாரப்பலத்தையும் பொருள் வளத்தையும் பெற்றுச் சமீபத்தில் நாட்டில் தோன்றிய புதிய இனப் பிரபுக்கள் அரச விசுவாசிகளாக இருந்ததுடன் டியூடர்களின் பல ஆக்கத்திட்டங்களுக்கு ஆதரவாக இருந்தனர். இவர்களின் ஒத்துழைப்பைக் கொண்டுதான் டியூடர் அரசர்கள் தங்களின் ஆட்சி அதிகாரங்களைப் பலப்படுத்திக் கொண்டனர்.

இத்துடன் அன்றி, டியூடர்களின் வியாபாரக் கொள்கையினால் உருவாக்கப்பட்ட புதிய வர்த்தக இனமும் இம் மரபு அரசர்களுக்கு விசுவாசமாக இருந்தது. நாட்டிலே ஓர் அமைதியான சூழ்நிலை நிலவினாலொழிய தாங்கள் வர்த்தகத்தில் பெரும் பொருள் ஈட்ட முடியாது என்பதை உணர்ந்தவர்களாக, இவ் வியாபாரிகள் அரசரின் அதிகாரங்களைப் பலப்படுத்தவேண்டுமென விரும்பி அதற்கேற்ப செயல்பட்டனர்.

புது இனப் பிரபுக்களும், வர்த்தகக் குடியினரும் அல்லாது, பரவலாக நாடுமுழுவதுமிருந்த மக்களின் ஆதரவு இம் மரபு மன்னர்களுக்கு இருந்தது.

தேசிய உணர்ச்சி வீறுகொண்டு எழுந்த இக் காலத்தில் மக்களின் மனநிலையைப் புரிந்துகொண்டு, அதற்கேற்ப தங்களின் கொள்கைகளையும் திட்டங்களையும் அமைத்துக்கொண்ட டியூடர் மன்னர்களை மக்கள் மதித்து விரும்பியதில் வியப்பேதுமில்லை. தகுதியும். திறமையும், நற்பண்புகளும் கொண்டிருந்த டியூடர் மன்னர்கள், நாட்டில் ஏற்கெனவே இருந்த அரசியல் நிறுவனங்களை மதித்து ஆட்சி செய்து வந்திருந்ததால், எவ்வித எதிர்ப்புக்கும் இடமில்லாமலிருந்தது. வெளிப்பார்வைக்கு வரம்புக்குட்படா வல்லாட்சியாளர்களாக டியூடர்கள் இருந்த போதிலும், மக்களின் நலத்தை மனத்தில் கொண்டு புதிய முறையில் பழைய நிறுவனங்களின் உதவியால் தங்கள் ஆட்சியை நடத்தி வந்ததால், அது மக்கள் நலன் கருதிய வல்லரசாகவே (Benevolent Despotism) மதிக்கப்பட்டது.

டியூடர் மன்னர்கள் பற்பல வழிகளிலே வருவாயைப் பெற்றுத் தன்னிறைவு கொண்டிருந்ததால், அடிக்கடி பணத்திற்காகப் பாராளுமன்றத்தின் தயவை நாடவேண்டிய அவசியம் எழவில்லை. அரசரின் அதிகாரத்தைத் தட்டிக் கேட்கக்கூடிய ஒரே நிறுவனமான பாராளுமன்றம் அடிக்கடி கூட்டப்படாமல் இருக்க, அது டியூடர்கள் தங்கள் அதிகாரத்தை நிலைப்படுத்திக் கொள்ளக்

கூடிய வாய்ப்பினைக் கொடுத்திருந்தது. இருப்பினும், டியூடர் அரசர்கள் பெருவாரியான மக்களின் எண்ணத்திற்கேற்ப தங்கள் ஆட்சியை நடத்தியதால், அரசரின் அதிகாரத்தைப் பறித்துக் கொள்ளவண்டுமென்றோ பகிர்ந்து கொள்ள வேண்டுமென்றோ பாராளுமன்றமும் நினைக்கவில்லை.

இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலையில் டியூடர்கள் தங்கள் வல்லாட்சியை அமைத்துக்கொள்ள முடிந்தது.

**வல்லாட்சியின் தன்மை:** நாட்டிலே இருந்த அரசியல் நிறுவனங்களின் முக்கியத்துவத்தை டியூடர்கள் புறக்கணித்தவர்களாக இருந்தும், அந்த நிறுவனங்களின் அமைப்பு முறைகளை அங்ஙனமே பாதுகாத்தனர். நிர்வாகம் (Executive), சட்டம் (Legislative), நீதி (Judiciary) ஆகிய மூன்று ஆட்சித்துறைகளிலும் டியூடர்கள் உயர் அதிகாரம் செலுத்தினர் என்றாலும், பெரும்பான்மையான மக்களின் விருப்பத்திற்கு உகந்தவாறே அவை இருந்தன என்பதே குறிப்பிடத்தக்கது. உதாரணமாக, ஆலோசனை மன்றங்களின் உதவியுடனே நிர்வாகத்தை நடத்தலாயினர். பாராளுமன்றத்தைத் தங்கள் அதிகாரத்தின் அடிப்படையாகவே கருதினர். நீதிமன்றங்களை நல்லாட்சிக்குரிய கருவிகளாகவே பயன்படுத்தினர்.

மக்களின் பொதுநலன்களுக்கே முக்கியத்துவம் கொடுத்து தேசீய உணர்வின் அடிப்படையிலே நிலைமைக்கேற்றவாறு மாற்றங்களையும் புதுமைகளையும் செய்வதற்கேற்ப டியூடர் அரசர்கள் தங்களிடத்தில் அதிகாரங்களைக் குவித்துக்கொண்டிருந்ததால், இவர்களது ஆட்சி 'குடிதழீஇய வல்லரசு' (Popular Despotism) என்றே கருதப்பட்டது.

அரசியலமைப்பில் எந்த ஒரு புதிய மாற்றத்தினை ஏற்படுத்தாமலும் அதே சமயம் நாட்டு நிறுவனங்களின் துணைகொண்டு தாங்கள் நினைத்ததை டியூடர்கள் சாதித்துக் கொண்டதால் இவர்களின் ஆட்சி, 'சர்வாதிகார ஆட்சி' என்ற இழிவுப் பெயர் பெருது 'அதிகாரச் செறிவு கொண்ட வல்லரசு' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றது.

**கவுன்சில்கள் (Councils) :** பதினைன்காம், பதினைந்தாம் நூற்றுண்டுகளில் நாட்டை அவலப்படுத்தியிருந்த பிரபுக்களின் வீழ்ச்சிக்கே முக்கிய கருவிகளாக இம் மன்றங்கள் அமையலாயின. இதனைக் கொண்டே டியூடர் மன்னர்கள் தாங்கள் பெற்றிருந்த அதிகாரச் செறிவை மக்களுக்கும் மற்றவர்களுக்கும்

உணர்த்தினர். டியூடர்கள் வல்லாட்சிக்கு இவர்கள் காலத்திய ஆலோசனை மன்றங்களே ஆணிவேருக அமைந்ததால் இவர்கள் ஆட்சி, 'கவுன்சிலைச் சார்ந்த அரசாங்க அமைப்பாக' விளங்கியது.

சட்டம், அரச தந்திரம், நிர்வாகம், நீதி, சமயம் ஆகிய பல் வேறு துறைகளில் மிகத் திறமை வாய்ந்தவர்களை டியூடர் மன்னர்கள் தங்கள் பல கவுன்சில்களில் அங்கத்தினர்களாக்கி, அவ்வப்போது அவசியத்திற்கேற்றவாறு அவர்களின் ஆலோசனையையும் உதவியையும் நாடிவந்தனர்.

**அரச கவுன்சில்** (King's Council) : டியூடர் அரசரின் முக்கிய ஆலோசனை சபையாக இம் மன்றம் விளங்கியது. ஆட்சி சம்பந்தப் பட்ட முக்கிய விவகாரங்களில் அரசருக்கு அறிவுரையோடு வேண்டிய உதவியையும் கொடுக்கக்கூடிய அருகதை இம் மன்றத் திற்கு இடைக்காலத்திலிருந்தே இருந்து வந்தபோதிலும், டியூடர்கள் காலத்தில் முக்கியமான சில மாறுதல்கள் செய்யப் பட்டன. இக் கவுன்சிலில் அரசர் நம்பிக்கைக்கு உகந்த சில பிரபுக்களும். வேண்டப்பட்ட சில திருச்சபையினரும், சான்சலர் பிரபு, பொருளாளர் போன்ற முக்கிய அரச அலுவலர் களும், அரச குடும்பத்தினரும், பொதுமக்களின் சார்பில் சில முக்கிய பிரமுகர்களும் அங்கத்தினர்களாக இருந்தனர். கி.பி 1540 ஆம் ஆண்டில் அரச கவுன்சிலின் அமைப்பில் ஒரு முக்கிய மாற்றம் ஏற்படுத்தப்பட்டது. இதுவே, பிரிவி கவுன்சில் (Privy Council) என்ற பிரத்தியேக சபை உருவாவதற்குக் காரணமாயிற்று.

**பிரிவி கவுன்சில்** (Privy Council) : நெடுநாளைய சோதனைக் குப்பின், டியூடர்கள் காலத்திலேயே இக் கவுன்சில் நிலையான அமைப்பைப் பெற்றதால், இஃது அந்த அரச மரபினரின் காலத்திய முக்கிய ஆக்கமாகக் கருதப்படுகிறது.

அரச கவுன்சிலில் அங்கத்தினர்களாக இருந்த சிலரும் பிரிவி கவுன்சிலில் உறுப்பினர்களாக இருந்தனர். டியூடர்கள் காலத் தில் நடுத்தர வகுப்பினருக்கே இக் கவுன்சிலில் உறுப்பினர் களாகக் கூடிய வாய்ப்பு அதிகமாகக் கொடுக்கப்பட்டது. நில மானிய பிரபுக்களோ, சமயம் சார்ந்த பிரபுக்களோ செல் வாக்கைப் பெற்றிராத இக் கவுன்சிலில் அரசரால் அமர்த்தப் பட்ட நடுத்தர வர்க்கத்தினரே அதிகமாக இருக்க, டியூடர் மன்னர்கள் இதைத் தங்கள் வல்லாட்சிக்கு முக்கிய கருவியாகப் பயன்படுத்திக்கொண்டனர். பிரிவி கவுன்சில் நிர்வாகம், சட்ட மியற்றுதல், நீதி வழங்குதல் ஆகிய துறைகளில் முக்கிய பணி களுக்குப் பொறுப்பேற்றிருந்தது.

உள்நாட்டு நிர்வாகத்தில் இக் கவுன்சில் நிறைய அதிகாரங்களைப் பெற்றிருந்தது. எந்தெந்த வரிகளை அரசர் விதிக்கலாம், ரத்துச் செய்யலாம், கூட்டலாம், குறைக்கலாம் என்பனபற்றி ஆலோசனை சொல்லக்கூடிய நிதி சார்ந்த அதிகாரம் இக் கவுன்சிலுக்கு இருந்தது. அரசருக்குச் சில பொருள்கள்மீது தனி உரிமை வழங்குவதற்கான அதிகாரத்துடன் அரசாங்கத்தின் சார்பிலே கடனைத் திரட்டக்கூடிய செல்வாக்கும் இக் கவுன்சிலுக்கு இருந்தது. மேலும், அரசாங்கத்தின் அங்கங்களான பல இலாக்காக்களையும் இது பார்வையிட்டது. நாட்டின் வியாபாரம் வர்த்தகம் ஆகியனவும் இதன் அதிகாரத்திற்கே உட்பட்டிருந்தன.

இக் கவுன்சிலின் சில உறுப்பினர்கள் பாராளுமன்றத்திலும் அங்கத்தினர்களாக இருந்ததால், அரசரின் அதிகாரம் அங்குச் செல்லுபடி ஆகும்படியான வழிமுறைகளும் பிரிவி கவுன்சிலால் உண்டாக்கப்பட்டிருந்தன. அரசருக்கு வேண்டிய சட்டங்கள், பாராளுமன்றத்தில் கொணரப்பட்டதற்கும் இம் மன்றம் பொறுப்பாக இருந்தது. இக் கவுன்சில் அங்கத்தினர்கள் மூலமாகவே அரசர் பாராளுமன்றத்திடமிருந்து பொருள்மானியத்தையும் கேட்க வேண்டியிருந்தது. பாராளுமன்றக் கூட்டம் நடைபெறாத போது அரசரின் சார்பில் அவசரச் சட்டங்களையும் அவர் உத்தரவின்மீது தனி ஆணைப் பேரறிவிப்புகளையும் வெளியிடக்கூடிய அதிகாரம் இக் கவுன்சிலுக்கு இருந்தது.

வெளிநாட்டு விவகாரத்திலும் அரசருக்கு ஆலோசனை சொல்லக்கூடிய தகுதிகளைப் பிரிவி கவுன்சில் பெற்றிருந்தது.

எல்லாவற்றிற்கும் மேலாக இக் கவுன்சிலின் ஒரு கிளை, 'விண் மீன் நீதிமன்றம்' என்ற பெயரில் நீதி பரிபாலனத்தை நடத்தியது.

**விண்மீன் நீதிமன்றம் (Star Chamber) :** நாட்டைத் தங்கள் அத்துமீறிய செய்கைகளினால் அலங்கோலப்படுத்தி வந்த பிரபுகளைத் தண்டிப்பதற்காகவே கி.பி. 1487ஆம் ஆண்டில் ஏழாம் ஹென்றியால் இம் மன்றம் நிறுவப்பட்டது. வெஸ்ட்மின்ஸ்டர் நகரில் நிரந்தரமாக ஓர் இடத்தைத் தம் இடமாக இம் மன்றம் கொண்டிருந்ததேயொழிய, அரசர் போகுமிடமெல்லாம் உடன் செல்லவில்லை. இம் மன்றம் கூடிய அறையில் அடையாளமாக ஒரு நட்சத்திரச் சின்னம் பொறிக்கப்பட்டிருந்ததால் அப் பெயரே இதற்கு நிலைத்துவிட்டது.

சான்சலர், பொருளாளர், முத்திரைக் காப்பாளர், பிஷப், ஒரு பிரபு, இரண்டு ஜூரிகள் ஆகியோரை இக் கவுன்சில் முக்கிய உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. இம் மன்றத்தில் பணியாற்றும் நீதிபதிகள் அரசருக்குக் கட்டுப்பட்டவர்களாகவே இருந்தனர்.

வில்லைச் சேவகம், கலகம், சட்டவிரோதமான கூட்டம், ஜூரிகளுக்கு லஞ்சம் கொடுத்தல் போன்ற குற்றங்களை விசாரிக்கும் பொறுப்பே இம் மன்றத்தின் முக்கியப் பணிகளாக இருந்தன. பிரபுக்களே இத்தகைய குற்றங்களைப் பெரும்பாலும் செய்து வந்ததால், இவர்களே இதனால் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர்.

நாட்டிலே இருந்த சாதாரண நீதிமன்றங்களின் நீதிபதிகளை இதுவரை குற்றம் செய்த பிரபுக்கள் மிரட்டித் தண்டனைகளிலிருந்து தப்பி வந்தனர். பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை உபயோகித்தும் லஞ்சம் கொடுத்தும் பொதுச் சட்ட நீதிமன்றங்களை வாயடைக்கச் செய்தனர். இக் குறைகள் எல்லாவற்றையும் போக்கவே விண்மீன் நீதிமன்றம் உருவாக்கப்பட்டது.

அரசரே இதன் தலைவராவார். சட்ட நுணுக்கத்தில் தேர்ச்சி பெற்றவர்களும், அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்தவர்களும், நேர்மைக்கு உதாரணமாக இருந்தவர்களுமே இம் மன்றத்தில் நீதிபதிகளாக அமர்த்தப்பட்டனர். பொதுச் சட்ட நீதிமன்றங்கள் போல எவ்விதக் குறிப்பிட்ட முறைகளுக்கும் கட்டுப்படாமல் நீதியையும் நாட்டில் அமைதியையும் நிலைநிறுத்தவேண்டுமென்ற ஒரே எண்ணத்தில் பல குறுக்குவழிகளைப் பயன்படுத்தி, இம் மன்றம் விரைவாகவும் பாரபட்சமின்றியும் தன் தீர்ப்பை வழங்கியது.

இதன் குற்ற விசாரணைமுறை மற்ற நீதிமன்றங்களிலே பின்பற்றப்பட்ட முறைகளிலிருந்து வேறுபட்டதாகவே இருந்தது. இதன்முன் கொண்டுவரப்பட்ட குற்றவாளியை, உண்மையை வரவழைக்கும் நோக்கத்தில், சித்திரவதை செய்யவும் இம் மன்றம் தயங்கவில்லை. இம் மன்றத்தின்முன் கொண்டுவரப்பட்ட வழக்கை விசாரித்த நீதிபதிகள், தங்களது தீர்ப்பைத் தனித்தனியாக எழுதி வைத்துக் கொண்டனர். பெரும்பான்மை நீதிபதிகளின் கருத்துப்படியே தீர்ப்பு சான்சலர் பிரபுமூலமாக அறிவிக்கப்பட்டது. இதன் தீர்ப்புக்கு, மேல்வழக்காடும் உரிமை எவருக்கும் இல்லை. பொது நீதிமன்றங்களிலே குற்ற விசாரணை செய்த ஜூரிகள் பொருத்தமற்ற தீர்ப்புக்குச் சிபாரிசு செய்திரு ்ப ர

களானல், இம் மன்றத்தின்முன் அவர்கள் பதில் சொல்லக் கடமைப் பட்டிருந்தார்கள்.

கொடிய குணம் கொண்ட பிரபுக்களால் அவதிப்பட்டுவந்த பாமர மக்களுக்கு இம் மன்றம் ஒரு வரப்பிரசாதமாக அமைந்தது. செல்வாக்கு, பலம், அதிகாரம், பிறப்புரிமை போன்ற பல தகுதிகளைப் பிரபுக்கள் பெற்றிருந்தாலும், அவர்கள் அரசுக்கு எதிராக அமைதிக்குப் பங்கம் விளைவித்திருந்தாலோ மக்களை வருத்தும்படியான காரியங்களைச் செய்திருந்தாலோ, இம் மன்றத்தினல் ஈவு இரக்கமின்றித் தண்டிக்கப்பட்டனர். குற்ற நெஞ்சம் கொண்ட பிரபுக்களுக்கு இந் நீதிமன்றம் எமனக விளங்கியது. இதன் பிடியிலிருந்து எவரும் தப்ப முடியாது என்ற நிலைமை உருவானதாலும், ஊழல்களுக்கு இங்கு இடமில்லை எனத் தெரிந்திருந்ததாலும் நீதி விரைவாகவும் மிக்க செலவின்றியும் கிடைக்குமென அறியப்பட்டிருந்ததாலும் இம் மன்றம் நாட்டு மக்களிடையே, குறிப்பாக ஏழை எளியோர்களிடையே நன்மதிப்பைப் பெற்றிருந்தது. சுருக்கமாகக் கூறின், நீதியையும், அமைதியையும் நிலை நாட்டும் ஒரு முக்கிய நீதிமன்றமாகவே விண்மீன் நீதிமன்றம் பணியாற்றியது.

வருங்காலத்தில் அரசருக்கு வேண்டப்படாதவர்களையும் பொய்க் குற்றம் சாட்டி இம் மன்றம் தண்டித்திருந்தது. இதன் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தியிருந்தாலும், டியூடர்கள் காலத்தில் நாட்டின் நலனைப் பேணிக் காக்க, அவர்களால் அமைக்கப்பட்டிருந்த வல்லாட்சிக்கு இது ஒரு முக்கியக் கருவியாக இருந்த தென்பதை மறுப்பதற்கில்லை.

**பிற மன்றங்கள் :** நாளடைவில் இம் மன்றத்தின் வேலைகளும் பொறுப்புகளும், அதிகமானதால் வேறு சில கிளை மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவையே மேலை நீதிமன்றம் (Council of West), வட நீதிமன்றம் (Council of North), வேண்டுகோள் மன்றம் (Council of Request), உயர் ஆணை நீதிமன்றம் (Court of High Commission) என அழைக்கப்பட்டன.

வேல்ஸ் பகுதியைச் சார்ந்தவர்களுடைய நீதி பற்றிய விவகாரங்களைக் கவனிக்க அமைக்கப்பட்ட மன்றமே, மேலை நீதிமன்றமென அழைக்கப்பட்டது. இங்கிலாந்தின் வடபுறத்தில் ஏற்பட்ட வழக்கு விவகாரங்களைத் தீர்க்க, நட்சத்திர (விண்மீன்) நீதிமன்றத்தின் ஒரு கிளையாகச் செயல்பட்ட மன்றமே வட நீதிமன்றம் எனப் பெயர் பெற்றது. ஏழைகளின் வழக்குகளைக் குறைந்த செலவில் தீர்த்துவைக்க, வேண்டுகோள் நீதிமன்றம் அமைக்கப்

பட்டிருந்தது. இம் மன்றம் பொதுவாக, சிவில் விவகாரங்களைக் கவனித்துவந்தது. மதச் சீர்திருத்த இயக்கத்திற்குப் பிறகு திருச்சபை விவகாரங்களைக் கவனிக்கவும் ஆங்கிலிக்க மத ஏற் பாட்டிற்கு உடன்படாதோரைத் தண்டிக்கவும் உயர் ஆணை நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டது.

நாட்டில், டியூடர்களால் அமைக்கப்பட்ட பல்வேறு நீதி மன்றங்கள், பிரிவி கவுன்சிலின் அங்கங்களாக இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. சுருக்கமாகச் சொன்னால், டியூடர் மன்னர்கள் கவுன்சிலின் துணைகொண்டே தங்கள் ஆட்சியை நடத்திவந்தனர். ஆகவேதான் இவர்களது ஆட்சிக் காலத்தைக் கவுன்சில்களின் பொற்காலம் (Golden Age of the Councils) என அழைக்கின் றனர்.

**பாராளுமன்றங்கள்**

டியூடர் அரசர்கள் தங்கள் பாராளுமன்றத்தைத் தமக்குப் போட்டியான எதிரியாகவோ, எசமானனாகவோ, கீழ்ப்படிந்த தாகவோ கருதாமல், அதிகாரத்தின் அடிப்படையாகவே கருதினர் என்பது குறிப்பிடத்தக்கது.

டியூடர்கள் காலத்தில் அரசர்கள் அழைத்த நேரத்தில் கூடி, அழைத்த நேரத்தில் பணியாற்றி, ஆணையிட்ட நேரத்தில் கலைந்து போகக்கூடிய ஒரு நிறுவனமாகவே பாராளுமன்றம் இருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**ஏழாம் ஹென்றியின் காலம் :** ஏழாம் ஹென்றி, தாம் பட்டத் திற்கு வந்தபோது (கி.பி.1485) பாராளுமன்றம் ஒரு பலவீன மான நிலையிலேயே இருந்தது. ரோசாச் சின்னப் போரில் கலந்து கொண்ட பல பிரபுக்கள் கொல்லப்பட்டதால், பிரபுக்கள் சபையிலே (House of Lords) 29 பெரும் பிரபுக்களே இருந்துவந்தனர். நாட்டிலே, நிலமானியப் பிரபுத்துவத்திற்கு ஏற்கெனவே செல்வாக்குக் குறைந்துவந்த இக் காலத்தில் பிரபுக் களால் அரசரின் அதிகாரத்தைத் தட்டிக் கேட்க வழியில்லாமல் இருந்தது.

காமன்ஸ் சபையின் நிலைமையும் இம் மன்னரின் ஆட்சிக் காலத்தில் பலவீனமாகவே இருந்தது. 40 ஷில்லிங் வருமானம் கொண்ட சிறு நிலக்கிழார்களே (யோமென்கள்) வாக்குரிமை பெற்றிருந்ததால் நாட்டில் வாழ்ந்த எல்லா மக்களின் சார் பாளர்களும் இச் சபையில் பிரதிநிதித்துவம் பெறாமல் இருந்

தனர். அப் பதவி ஒரு சுமையாகக் கருதப்பட்டதால் காமன்ஸ் சபையில் அங்கத்தினராகவேண்டும் என்ற ஆர்வமும் அப்போது குறைந்திருந்தது.

ஏழாம் ஹென்றி ஆட்சி புரிந்த இருபத்து நான்கு ஆண்டுகளில் பாராளுமன்றம் ஏழு முறைகளே கூட்டப்பட்டது. கி.பி. 1497-க்குப் பிறகு, இவ் வரசர் ஒரே ஒரு தடவையே பாராளுமன்றத்தைக் கூட்டினர். இவர் காலத்தியப் பாராளுமன்றம், அரசரின் அதிகாரம் வல்லாட்சியை ஒத்ததாக இருக்கவேண்டுமென நினைத்ததால், இரு முக்கியச் சட்டங்கள் கொண்டுவரப்படுவதற்குக் காரணமாக அமைந்தது.

பிரபுக்கள் இனி ஆயுதம் தாங்கிய உடன்துணைவர்களை வைத்திருக்கவொட்டாமல் தடுக்கவில்லை, (அடையாளச் சின்னம்) சேவகச் சட்டம் ஒன்று கொண்டுவரப்பட்டது. இத் துணைவர்களைப் பராமரிக்கும் பொறுப்பைக் கொண்டிருந்த பிரபுக்கள், அதற்கு ஈடாக, அவர்களின் படைச் சேவையைப் பெற்றிருந்தனர். நாட்டிலே இந்த உடன்துணைவர்களைக் கொண்டே பிரபுக்கள் தங்களுக்குள் போரிட்டு அமைதியைக் குலைத்ததோடு, அரசரை எதிர்க்கக்கூடிய துணிவையும் பெற்றவர்களாக இருந்தனர். ஹென்றியின் பாராளுமன்றத்தினல் கொண்டு வரப்பட்ட இச் சட்டம் (Statute of Livery and Maintenance) வில்லைகளை வழங்குபவர்களையும் பெறுபவர்களையும் பிரிவி கவுன்சில் மூலமாகக் கடுமையான தண்டனை அடையும்படி வழிவகுத்தது.

தங்கள் பலத்தைத் தவறான வழியில் பயன்படுத்தி, நாட்டின் அமைதியைக் குலைத்ததோடு, தங்கள் செல்வாக்கையும் பயன்படுத்திச் சாதாரணப் பொது நீதிமன்றங்களிலிருந்து தண்டனை பெறாமல் தப்பித்து வந்த பிரபுக்களைத் தண்டிக்கவும் இவ் வரசரின் பாராளுமன்றம் விண்மீன் நீதிமன்றத்தைஉருவாக்கியது.

ஏழாம் ஹென்றியின் காலத்தில் பாராளுமன்றம் அரசரின் ஆணைகளை நிறைவேற்றக்கூடிய ஒரு முக்கியக் கருவியாகவே இருந்தது. இவ் வரசர், தமக்குத் தேவையானபோதே பாராளுமன்றத்தைக் கூட்டி, அதன் உதவியைப் பெற்றவராக இருந்தார். இடுவரி, நன்கொடை அல்லது கட்டாய வசூல் போன்றவற்றால் ஏழாம் ஹென்றி பொருளாதார நிறைவு பெற்றிருந்ததால், பணத்திற்காகப் பாராளுமன்றத்தை அடிக்கடி கூட்டவேண்டிய அவசியம் இவருக்கு இல்லாமல் இருந்தது.

**எட்டாம் ஹென்றியின் காலம் :** எட்டாம் ஹென்றியின் காலத்திலேயே ஆங்கிலப் பாராளுமன்றம் முக்கியத்துவத்தைப் பெற்றதாக அமைகின்றது.

இவ் வரசரின் முதல் பாராளுமன்றம், ஹென்றிக்கு அவரது வாழ்நாள் முழுவதற்கும் டன்னேஜ் (Tonnage), பவுண்டேஜ் (Poundage) போன்ற சுங்க வரிகளை அனுமதித்தது. கி.பி. 1523 வரை இவ் வரசரால் கூட்டப்பட்ட நான்கு பாராளுமன்றங்கள் ஃபிரான்சுடன் போரை நடத்துவதற்காகத் தாராளமான உதவித் தொகைகளை வழங்கியிருந்தன. ஆனால், அரசரின் ஃபிரெஞ்சுப் போர்கள் எதிர்பார்த்த பலனைக் கொடுக்காத நேரத்தில், ஹென்றி கேட்டிருந்த மொத்தப் பணத்தைப் பாராளுமன்றம் கொடுக்கத் தயங்கிய வேளையில், சான்சலர் உல்சியின் யோசனைப்படி ஹென்றி கி.பி. 1523-ல் தம் பாராளுமன்றத்தைக் கலைத்தார். உல்சியின் வீழ்ச்சிக் காலம்வரை, அடுத்த ஆறு ஆண்டுகளுக்கு இவ் வரசர் பாராளுமன்றத்தைக் கூட்டவே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அரசர் ஹென்றி, போப்பாண்டவருடன் சச்சரவு கொண்டதைத் தொடர்ந்து, அவரது ஆதிக்கத்தைக் குலைக்கும் வகையில் பல சட்டங்களைக் கொண்டுவர நினைத்தபோது, அரசர் மீண்டும் தம் பாராளுமன்றத்தின் தயவை எதிர்பார்க்க வேண்டியிருந்தது. இச் சமயத்தில் கூட்டப்பட்டிருந்ததே 'சமயப் புரட்சியின் நீண்ட பாராளுமன்றம்' (Long Parliament of the Reformation) என அழைக்கப்பட்டது. ஏழு ஆண்டுகள் (கி.பி. 1529-1536) வரை தொடர்ந்துசெயல்பட்ட இப் பாராளுமன்றமே போப்பாண்டவரின் அதிகாரத்தைக் குலைக்கும் வகையில் அன்னேட் சட்டம், மேல்முறையீடு சட்டம், ஒருமைச் சட்டம், ஆதிக்கச் சட்டம் போன்றவற்றை நிறைவேற்றி இங்கிலாந்தின் வரலாற்றிலே ஒரு முக்கிய இடத்தைப் பெற்றது.

எட்டாம் ஹென்றியின் காலத்தில் பாராளுமன்றம் முழுக்க முழுக்க ஒரு தலையாட்டி மன்றமாக இல்லை என்பதும் குறிப்பிடத் தக்கது. இவர் ஆட்சியின் கடைசியில் கூட்டப்பட்ட பாராளுமன்றங்கள், அரசர் கேட்ட பண மசோதாக்களை நிராகரித்தோ, அல்லது தேவையான மாற்றங்களைச் செய்தோ நிறைவேற்றியது. பேராணை அறிவிப்புகளை வெளியிடக்கூடிய அதிகாரத்தை அரசருக்குத் தொடர்ந்து பாராளுமன்றம் அளித்த தென்றாலும், அப் பேராணைகள் நாட்டின் அடிப்படைச் சட்டங்களுக்குப் புறம்பாகவோ, மக்களின் பொது நலனுக்குப் பாதக

மாகவோ இருக்கக் கூடாதென்ற சில கட்டுப்பாடுகளையும் இத்துடன் விதித்தது. இதே சமயத்தில் வாரிசுரிமை விவகாரத்தில் அரசருக்கு முழுச் சுதந்திரத்தைப் பாராளுமன்றம் கொடுத்தது என்பதையும் மறப்பதற்கில்லை. அரசரின் விருப்பத்திற்கேற்றபடியே, ஒரு வாரிசுரிமைச் சட்டத்தைப் பாராளுமன்றம் கொண்டுவந்தது.

எட்டாம் ஹென்றியின் காலத்தில் ஆங்கிலப் பாராளுமன்றம் இரு முக்கிய உரிமைகளைப் பெற்றிருந்தது. இதன்படி, பாராளுமன்ற அங்கத்தினர்களுக்கு மன்றக் கூட்டத்தில் விவாதம் செய்வதற்கான முழுப் பேச்சுச் சுதந்திரம் அளிக்கப்பட்டது; பாராளுமன்றக் கூட்டம் நடைபெறும்பொழுது, எந்த ஓர் அங்கத்தினரும் கைது செய்யப்படக்கூடாது என்ற மற்றொரு சிறப்பு அதிகாரமும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

பாராளுமன்றத் தேர்தலிலே தம் செல்வாக்கைப் பயன்படுத்தித் தமக்கு வேண்டியவர்களையே ஹென்றி தேர்ந்தெடுக்கச் செய்தார் என்ற ஒரு குற்றச்சாட்டு சொல்லப்படினும், இதனால், அரசருக்கும் பாராளுமன்றத்திற்கும் தகராறு எதுவும் ஏற்படவில்லை. ஒருவரையொருவர் மதித்து நடந்ததால் ஏழாம் ஹென்றிக்கும் பாராளுமன்றத்திற்கும் கருத்து ஒற்றுமையே நீடித்திருந்தது.

மடாலயங்கள் ஒழிப்பிற்குப் பிறகு, பிரபுக்கள் சபையிலிருந்து மடாதிபதிகள் அகற்றப்பட்டதால், இவ் வரசரின் காலத்தில் அச் சபையின் எண்ணிக்கை குறைவுபட்டதோடு அதிகாரமும் குலைந்திருந்தது. பொதுமக்கள் (காமன்ஸ்) சபை ஹென்றி மன்னரின் விருப்பத்திற்கேற்றபடியே நடந்து கொண்டதால், அரசரின் வல்லாட்சி தொடர வழி இருந்தது.

**ஆறும் எட்வர்டு — மேரி டியூடர் காலம்:** ஆறும் எட்வர்டு காலத்தில் பாராளுமன்றம் ஆண்டுக்கு ஒரு முறை கூட்டப்பட்டு வந்தது. பிராடஸ்டன்டுக் கொள்கையை ஏற்றுக்கொண்ட இவ் வரசரின் காலத்தில், பாராளுமன்றம் சமயச் சீர்திருத்த இயக்கத்தை இங்கிலாந்தில் கொள்கை ரீதியிலே புகுத்துவதற்கேற்ப, முந்தைய ஆட்சியில் கொண்டுவரப்பட்ட 'ஆறு விதிச் சட்டத்தை' ரத்துச் செய்து வழிபாட்டு ஒருமைச் சட்டத்தைக் கொண்டு வந்தது. இது மட்டுமன்றி, பிராடஸ்டன்டு சமய சாராம்சம் அடங்கிய 'நாற்பத்திரண்டு விதிகள்' என்ற கோட்பாடும் வெளியிடப்பட்டு இருந்தது. இவ் வரசரின் காலத்தில்

பாராளுமன்றம், அரசரின் விருப்பத்தை நிறைவேற்றும் நிறுவன மாகத் தொடர்ந்து இருந்துவந்தது.

மேரி டியூடரின் காலத்தில் கூட்டப்பட்ட பாராளுமன்றம், முந்தைய ஆட்சியில் இயற்றப்பட்ட சமயத் தொடர்புள்ள சட்டங் களை அரசியாரின் விருப்பத்திற்கிணங்கி ரத்துச் செய்ததால், இந் நிறுவனம் அரச அதிகாரத்திற்கு உட்பட்ட ஒரு கருவியாகவே பயன்படுத்தப்பட்டது என்பது தெரியவரும். ஆனால், அதே சமயத்தில் அரசியார் கேட்டுக்கொண்டிருந்தும், எட்டாம் ஹென்றி காலத்தில் அபகரிக்கப்பட்ட மடாலயச் சொத்துகளைத் திருப்பி ஒப்படைக்கப் பாராளுமன்றம் மறுத்து விட்டது என்பது குறிப் பிடத்தக்கது.

டியூடர் காலத்தில் எந்த ஓர் ஆட்சியாளரும் பாராளு மன்றத்தைப் புறக்கணிக்கவில்லை. தங்கள் விருப்பத்திற்கேற்றபடி அம் மன்றங்களை உபயோகத்திற்குரிய ஒரு கருவியாகவே பயன் படுத்திவந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**எலிசபெத் காலம்:** அரச - பாராளுமன்ற உறவு முறையில் இவ் வரசியாரின் காலம் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறது.

இவரது ஆட்சியில் சிலகாலம் பாராளுமன்றம், அரசியாரின் விருப்பத்திற்கு உடன்பட்டதாக இருந்தது. நாட்டில் நிலவிவந்த உள் நாட்டுப் போருக்கான அபாயமும் நாட்டைப் பயமுறுத்தி வந்த வெளிநாட்டுப் படையெடுப்புக்கான நெருக்கடியும், அரசி யாரையும் பாராளுமன்றத்தையும் இணைந்து செயலாற்றும்படி கட்டாயப்படுத்தியது.

தம் ஆட்சியின் ஆரம்பத்திலேயே, மேரி டியூடர் காலத்தில் ரத்துச் செய்யப்பட்ட சமயச் சட்டங்களைப் பாராளுமன்றத்தின் வாயிலாக எலிசபெத் இயற்றியிருந்தார். ஆங்கிலப் பாராளு மன்றம் அரசி வேண்டியதைச் செய்யும் கருவியாகப் பயன் படுத்தப்பட்டது இதிலிருந்து தெரியவருகிறது. இவ் வரசியாரின் சில பாராளுமன்றங்களின் கூட்டத் தொடர்கள் தொடர்ந்து நடந்தன என்பது குறிப்பிடத்தக்கது. இவரது பாராளுமன்றம் நான்கு ஆண்டுகளும் (கி. பி. 1563–1567), நான்காம் பாராளு மன்றம் கி.பி. 1572-லிருந்து கி.பி. 1583 வரை கூட்ட அமர்வைக் (Sessions) கொண்டிருந்தது இரு மேற்கோள்களாகும்.

கி. பி. 1588 ஆம் ஆண்டிற்குப் பின்னர், எலிசபெத்-பாராளு மன்ற உறவு முறையில் மாற்றம் ஏற்பட்டது. நாட்டிலே உள்

நாட்டு அமைதி நிலவியும், வெளிநாட்டுப் படையெடுப்பு அபாயம் நீங்கியும் இருந்த நிலையில் பாராளுமன்றம், தன் பழைய உரிமைகளைப் பெறும் வகையில் அரசியாரைத் தட்டிக் கேட்க முயன்றது. அரசியாரும் இதனல் அடிக்கடி பாராளுமன்றத்தைக் கூட்டத் தயங்கினர்.

தம்முடைய நாற்பத்தைந்து ஆண்டுக் கால அரசாட்சியில் எலிசபெத், பதின்மூன்று முறையே பாராளுமன்றத்தைக் கூட்டியிருந்தார். அதாவது, சராசரியில் மூன்றரை வருடங்கட்கு ஒரு முறை பாராளுமன்றம் கூட்டப்பட்டது.

வல்லாட்சியில் அதிக நாட்டம் கொண்டிருந்த இவ் வரசியார், தம் பிரத்தியேக அதிகாரங்களைப் பயன்படுத்தி, பாராளுமன்றத்தின் பிரதிநிதித்துவ முறையிலும் குறுக்கிட்டார். அறுபத்துமூன்று புதிய பரோக்களை உண்டாக்கி, காமன்ஸ் சபைக்கு அவற்றிலிருந்து தாம் விரும்பிய அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கச் செய்தார். இஃது அரசியாரின் வரம்பற்ற ஆட்சிக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்தது. தம் அதிகாரத்திற்குக் குறுக்கீடாகயிருந்த நாடாளுமன்ற உறுப்பினர்களையும் அரசி தண்டித்தார். தேசியப் பிரச்சினைகளை விவாதிப்பதற்கு மன்றத்தில் பேச்சுரிமை கேட்ட பீட்டர் வென்ட்வொர்த் (Peter Wentworth) என்ற அங்கத்தினர் சிறைக்கு அனுப்பப்பட்டது இவ்வரசியாரின் அதிகாரச் செறிவிற்கு ஓர் உதாரணமாகக் காணப்பட்டது.

கி. பி. 1598 வரை தம்மிடம் மன்றத்தினல் சமர்ப்பிக்கப்பட்ட 91 மசோதாக்களில் 48ஐ, இவ் வரசியார் தம் மறுப்பு அதிகாரத்தைப் பயன்படுத்தி ரத்துச் செய்தார் என்பதிலிருந்து, அவர் மன்றத்திற்கு உடன்பட்டு ஆளவில்லை என்பது புலனகும். இருப்பினும், எலிசபெத் அரசியார், தம் ஆட்சியின் கடைசிக் கட்டத்தில் பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டே ஆள வேண்டியிருந்தது. கி. பி. 1601-ல் கூட்டப்பட்ட இவ்வரசியாரின் கடைசிப் பாராளுமன்றம் இரு மனுக்களைக் கொணர்ந்து, அவற்றை ஏற்றுக் கொள்ளும்படியாக அரசியாரைக் கட்டாயப்படுத்தியிருந்தது. நாட்டில் இருந்த இரவலர்களைப் பாதுகாக்கும் பொறுப்பைத் தல நிருவாகிகளான பாரிஷ் மேற்பார்வையாளர்களுக்குக் கொடுத்திருந்த இரவலர் சட்டம் என்பது ஒன்ருகும். மற்ருென்று, அரசியாரின் சிறப்பதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதாக இருந்தது. உப்பு, எண்ணெய், இரும்பு, தோல் முதலிய பொருள்களை விற்பனை செய்யக்கூடிய முற்றுரிமையை (Monopoly) வேண்டிய சிலருக்குக் கொடுப்பதற்கான அதிகாரம் அரசியாருக்கு இருந்து

வந்தது. வியாபாரிகள் தாங்கள் விரும்பியபடி உயர்விலை வைத்து அப் பொருள்களை விற்க, மக்கள் அதனால் வருந்தியபோது மன்றம் அதைச் சுட்டிக்காட்டியதோடு, அரசியாரின் முற்றுரிமை அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் வகையில் ஒரு சட்டத்தைக் கொண்டுவந்தது.

கெஞ்சினால் மிஞ்சுவதும் மிஞ்சினால் கெஞ்சுவதும் என்ற வகையில், எலிசபெத்துக்கும் பாராளுமன்றத்திற்கும் தொடர்பு இருந்தது. இவ் வரசியாரின் கடைசிக் காலத்தில் அரசியல் உரிமை கோரிய பியூரிட்டானியர்கள், பாராளுமன்றத்தின் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்தே, இம் மன்றம் அரசியாரின் பிரத்தியேக அதிகாரங்களை எதிர்க்க ஆரம்பித்தது.

எட்டாம் ஹென்றியின் ஆட்சியில் அடிமை மன்றமாக இருந்த ஆங்கிலப் பாராளுமன்றம், இவ் வரசியாரின் கடைசிக் காலத்தில் (தமது உரிமைகளுக்காக) ஒரு முணுமுணுத்த மன்றமாக மாறியிருந்தது. இதுவே, ஸ்டுவர்டுகள் காலத்தில் கலக மன்றமாகவும் (James I), புரட்சி மன்றமாகவும் (சார்லஸ் I) மாற்றம் பெற்றது என்பதை மறுக்க முடியாது.

**டியூடர் காலத்தில் பாராளுமன்றத்தின் உரிமைகள்:** ஜனநாயக அரசியல் அமைப்பிற்கே முக்கிய அடித்தளமாக விளங்கும் பாராளுமன்றம், டியூடர் காலத்தில் நான்கு முக்கிய உரிமைகளைப் பெற்றதாக இருந்தது. ஆட்சி சம்பந்தப்பட்ட அத்தனை விவகாரங்களும் இதனால் விவாதிக்கப்பட்டன. மன்றக் கூட்டங்களில் கலந்துகொள்ளும் அங்கத்தினர்களுக்கு முழுப் பேச்சுச் சுதந்திரம் (எலிசபெத் ஆட்சியின் பிற்காலம் விதிவிலக்கு) அளிக்கப்பட்டது. மன்ற அங்கத்தினர்களை சிறைப்படுத்தக் கூடாதென்ற உரிமையும் வற்புறுத்தப்பட்டது. பாராளுமன்றத்தைப்பற்றி இழிவாகப் பேசுபவர்களையும் எழுதுபவர்களையும் அபராதம், சிறைத்தண்டனை மூலமாகத் தண்டிப்பதற்கான சிறப்பு அதிகாரமும் இந் நிறுவனத்திற்கு அளிக்கப்பட்டது.

**அதிகாரங்கள்:** டியூடர் காலத்தில் ஏற்கெனவே பாராளுமன்றம் பெற்றிருந்த அதிகாரங்கள் புதிய பொலிவுடன் விளங்கின. நாட்டின் பழைய சட்டங்களைப் புதுப்பிப்பதற்கும் புதிய சட்டங்களைக் கொண்டு வருவதற்கும் ஆணைகளைப் பிறப்பிப்பதற்கும் மன்றத்தின் அனுமதி தேவைப்பட்டது. முக்கியமாக, வரி சம்பந்தப்பட்ட விவகாரங்களில் பாராளுமன்றத்தின் சம்மதமில்லாமல் ஆட்சியாளர் செயல்படவே முடியாது என்ற வழக்கம் வற்புறுத்தப்பட்டது. சமய விவகாரங்களிலும் பாராளுமன்றம்

குறுக்கிடத் தொடங்கியது, ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். கி.பி. 1571ஆம் ஆண்டு பாராளுமன்றத்தின் கூட்டத் தொடரில் எலிசபெத் அரசியாரை வற்புறுத்தி, மத சீர்திருத்தங்களைக் கோரி ஏழு மசோதாக்களை மன்றத்தினர் கொண்டுவந்ததை ஓர் உதாரணமாகக் கொள்ளலாம். ஆனால், ஆட்சி நிருவாகத்தில் பாராளுமன்றம் இன்னும் அதிகாரத்தைப் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு பாராளுமன்றத்தின் முதல் கூட்டத்தில் சபாநாயகர் (Speaker) அரசரிடமிருந்து பாராளுமன்றத்தின் உரிமைகளைப்பற்றி உறுதிமொழி பெறும் வழக்கம் டியூடர் காலத்திலேயே கொண்டு வரப்பட்டதென்பது நினைவில் வைக்க வேண்டிய ஒன்று.

**பாராளுமன்ற சபைகளின் நிலை :** ரோசாச் சின்னப் போரினால் பல பிரபுக்கள் உயிரையும் உடைமைகளையும் இழந்திருக்க, டியூடர் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்திலிருந்தே அவர்கள் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த பிரபுக்கள் சபை பலமற்று விளங்கியது. மடாலயங்கள் கலைப்பிற்குப் பிறகு, அந்த நிலை மேலும் மோசமாயிற்று. ஆகவே, ஆட்சியாளரை எதிர்க்கத் திறனற்று அவர் விரும்பியதை ஏற்ற ஒரு தலையாட்டி மன்றமாகவே இச் சபை இருந்துவந்தது.

பரோக்களிலிருந்து, காமன்ஸ் சபைக்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நாற்பது ஷில்லிங் நில வருமானமுள்ள யோமென்களுக்கே வாக்குரிமை வழங்கப்பட்டிருந்தது. டியூடர் ஆட்சியின் முதற்பகுதியில் காமன்ஸ் சபையில் அங்கத்தினர் ஆவதை ஒரு சுமையாகவே மக்கள் கருதினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ஏழாம் ஹென்றி காலத்தில் கம்பர்லாந்து பகுதியின் சார்பில் ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்படி அரசர் அவசரச் செய்தியை அனுப்பியிருந்தது ஓர் உதாரணமாகும். ஆனால், நாளடைவில் சேவை மனப்பான்மை கொண்டு தங்களை மக்களின் பிரதிநிதிகளாக பாவித்து, காமன்ஸ் சபையின் அங்கத்தினர்கள் நடந்து கொண்டனர். அவசியமேற்பட்டபோது ஆட்சியாளரைக் கண்டிக்கவும் இப்பிரதிநிதிகள் தயங்கவில்லை.

**திறனாய்வு :** டியூடர்கள் காலத்திலேயே ஆட்சி முறையில் பாராளுமன்றத்திற்குப் பயிற்சி அளிக்கப்பட்டது.

பிரிவி கவுன்சிலின் அங்கத்தினர்கள் பாராளுமன்றக் கூட்டங்களில் கலந்து கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்

பட்டிருந்தனர். ஆட்சி நிருவாகத்தைப்பற்றி மன்றத்தினர் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இவ் வேற்பாடு செய்யப் பட்டது. வருங்காலத்தில் (ஸ்டூவர்டுகள் காலம்) அரசருடன் பாராளுமன்றம் ஓர் உரிமைப் போராட்டத்தை நடத்தியதென்ருல், அஃது இக் காலத்தில் பெற்ற அரசியல் பயிற்சியின் விளைவே ஆகும்.

எல்லாவற்றிற்கும் மேலாக, டியூடர்கள் காலத்தில் ஆட்சி யாளருக்கும் பாராளுமன்றத்தினருக்கும் தகராறு எதுவும் ஏற்பட்டு ஒரு போராட்டமாக மாறவில்லை என்பது மிகவும் சிறப்பான அம்சமாகும். இதற்குக் காரணம் அவர்களுக்கிடையே நிலவிய நாட்டு நலனைச் சார்ந்த கருத்து ஒற்றுமையேயாகும்.

டியூடர்கள், வல்லாட்சியை அமைத்தவர்களாக இருந்த போதிலும், பாராளுமன்ற முறையை மதித்தவர்களாக நிருவாகம் செய்தனர். டியூடர் ஆட்சியாளர்களின் விருப்பமும் அவர்கள் காலத்திய பாராளுமன்றங்களின் விருப்பமும் ஏறக்குறைய ஒன்ருக இருந்தமையே இவர்கள் வெற்றிக்கு மூல காரணமாக விளங்கியது. சுருக்கமாகச் சொன்ருல் சட்ட உணர்ச்சி நிரம்பியவர் களான டியூடர்கள், நாட்டின் அடிப்படைச் சட்டங்களை மதித்தவர் களாகப் பாராளுமன்றத்தைக் கொண்டே தங்களது காரியங் களைச் செய்து முடித்தனர்.

**தல அரசாங்கம்** (Local Governments): நாட்டிலே டியூடர்கள் நல்லாட்சியை அமைத்திருந்தாலும், நாடு முழுவதற்குமான நிருவாகப் பொறுப்பினை நேரடியாகக் கண்காணிக்க முடியாதவர் களாக இருந்தனர். மத்திய அரசாங்கம் (Central Government) பிரிவி கவுன்சில் மூலமாகச் செயல்பட்டது போல, ஷயர் (கவுன்டிகள்) விவகாரத்தைக் கவனிக்க ஒரு செயலாண்மை நிலையம் (Agency) தேவைப்பட்டது. தங்கள் வல்லாட்சி சிறப்புப் பெற்று விளங்க வேண்டுமென்ருல், தல அரசாங்கமும் விருத்தி யடைய வேண்டுமென்றே டியூடர்கள் விரும்பினர்.

தல அரசாங்கத்தின் விவகாரங்களை அந்தந்த நிறுவனங் களுக்கு ஒப்படைத்ததோடு, அப் பொறுப்புகளை அந்த நிறுவ னங்கள் ஒழுங்காகச் செய்கின்றனவா என்றும் டியூடர்கள் கண் காணித்தனர். மத்திய நிருவாகத்தைப் போன்றே தல நிருவாகத் தையும் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் டியூடர்கள் வைத்துக்கொண் டிருப்பினும், அவை சிறந்த முறையில் பணியாற்றுவதற்கான வழி முறைகளை வகுத்துக் கொடுத்தனர்.

டியூடர்கள் ஆட்சிக் காலத்திற்கு முன்பு ஷெரீஃபுகளே தல அரசாங்கத்தின் முக்கிய அதிகாரிகளாக விளங்கினர். பதவி வெறி பிடித்தவர்களாகவும், லஞ்ச ஊழல் திலகங்களாகவும், அதிகாரத் துஷ்பிரயோகிகளாகவும் விளங்கிய ஷெரீஃபுகள், தல அரசாங்க அமைப்பை அர்த்தமற்றதாகச் செய்ததோடு, அப் பகுதிகளின் அமைதியையும் கெடுத்தவர்களாக இருந்தனர். இக் குறையைப் போக்க டியூடர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில் ஷெரீஃபின் அதிகாரங்களைப் பெரிதும் குறைத்தனர்.

ஷயர் நிருவாகத்தினைப் பொறுத்தஅளவில், டியூடர் காலத்தில் ஷெரீஃபுகள் சில குறிப்பிட்ட பணிகளுக்கே பொறுப்பாளிகள் ஆக்கப்பட்டனர். பாராளுமன்றத் தேர்தல் நடத்துதல், சுற்றி வரும் நீதிபதிகளை வரவேற்றல், தண்டனைகளை நிறைவேற்றுதல் போன்ற காரியங்களை மட்டுமே இவர்கள் கண்காணித்தனர். இவர்களுக்கு உதவியாக இருக்கும்பொருட்டுத் துணை ஷெரீஃபுகளும் (Deputy Sherif) நியமிக்கப்பட்டனர். இதற்குமுன் ஷெரீஃபுகள் பெற்றிருந்த அதிகாரம் வேறு பணியாளருக்கு ஒதுக்கப்பட்டது.

**லெப்டினன்ட் பிரபு:** கவுன்டிகளின் தல அதிகாரியாக, டியூடர் மன்னர்களால் நியமிக்கப்பட்டவர்களே லெப்டினென்ட் பிரபு (Lord Lieutenant) என்ற உயர் அதிகாரிகளாவர். இது வரை ஷெரீஃப் கவனித்துவந்த சில முக்கியப் பொறுப்புகள் இவருக்கே கொடுக்கப்பட்டன. படைவீரர்களைத் திரட்டுதல், படையில் சேர்க்கப்பட்டவர்களுக்குப் போர்க் கருவிகளைக் கொடுத்தல், படைக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்லல் போன்ற பணிகளோடு தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட பகுதிகளில் கலகங்களை ஒடுக்கி, சட்டத்தைக் காத்து, அமைதியை நிலைநிறுத்த வேண்டிய முக்கியப் பொறுப்பும் இந்த உயர் அதிகாரிகளுக்கு இருந்தது. இராணுவச் சட்டம் அளித்திருந்த அதிகாரத்தைத் தங்கள் பகுதிகளிலேயே செயல்படுத்தவும் இவர்கள் உரிமை பெற்றிருந்தனர்.

லெப்டினென்ட் பிரபு, அரசரால் அமர்த்தப்பட்டதைப் போல், இவர்களின் சிபாரிசின் பேரிலேயே இன்னொரு முக்கிய தல அதிகாரியான அமைதிக் காவலர், சான்சலர் பிரபுவினால் பதவி பெற்றனர். லெப்டினென்ட் பிரபு, மத்திய அரசாங்கத்தின் தனிச் சின்னமாக விளங்கிய பிரிவி கவுன்சிலுக்கும், தல அரசாங்கத்தின் ஒரு முக்கிய அடையாளமாக இருந்த அமைதிக் காவலருக்கும் ஓர் இணைப்புப் பாலமாக இருந்தார். கவுன்டி

களின் (ஷயர்) முக்கிய அதிகாரியாக விளங்கிய லெப்டினென்ட் பிரபுவுக்கு ஷெரீஃபுகளும் அமைதிக் காவலர்களும் தல நிருவாகத்தில் உதவி புரிய வேண்டியவர்களாயினர்.

தங்கள் ஆட்சிக்கு உள்பட்ட ஷயர் பகுதிகளில் ஏற்பட்ட நிலைமைகளை அவ்வப்போது ஆலோசனைச் சபைக்கு அறிவித்து, தல ஆட்சி நிருவாகத்தில் காணப்பட்ட குறைகளை அகற்ற வேண்டிய பொறுப்பும் அமைதிக் காவலர்களின் வேலைகளை மேற்பார்வையிட வேண்டிய பொறுப்பும் லெப்டினென்ட் பிரபுவுக்கு இருந்தது.

**அமைதிக் காவலர்கள் :** தல அரசாங்கத்தின் உயிர் நாடியாக இருந்தவர்களே அமைதிக் காவலர்கள் அல்லது அமைதி காண் நீதிபதிகள் (Justices of Peace) என அழைக்கப்பட்டவர்களாவர்.

லெப்டினென்ட் பிரபுவின் அனுமதியின் பேரில் பதவி பெற்ற இவ் வதிகாரிகள், தாங்கள் பதவி பெற்ற காலத்தில் சில உறுதிமொழிகளைக் கொடுக்க வேண்டியவர்களானார்கள். அதன்படி, கறைபடாத கரங்களோடு, நீதி தவறு மனப்பான்மையுடன் ஏழை எளியோருக்கு உதவ வேண்டும் என்ற உறுதிப் பிரமாணத்தைத் தாங்கள் லெப்டினென்ட் பிரபுவின் சிபாரிசின் பேரில் சான்சலர் பிரபுவால் பதவி கொடுக்கப்பட்ட காலத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியவர்களானார்கள்.

இந்த அதிகாரிகள் ஒழுக்க சீலர்களாகவும், கடமை வீரர்களாகவும், நிருவாகச் செம்மல்களாகவும் இருக்க வேண்டியவர்களானார்கள். குறைந்தபட்சம் இருபது பவுன்களை ஆண்டொன்றுக்கு வருமானமாகக் கொண்டிருந்தவர்களே இப் பதவிக்கு அமர்த்தப்பட்டனர். மற்ற தகுதிகளைக் கொண்டிருந்து, ஆனால் வருவாயை மட்டும் பெற்றிராமல் இருந்த ஒருசிலருக்கு மேற்கண்ட விதியிலிருந்து சில சமயங்களில் விதிவிலக்கு அளிக்கப்பட்டது. இவ் வதிகாரிகளுக்குச் சம்பளமாகப் பணம் எதுவும் கொடுக்கப்படவில்லை. சில பிரத்தியேக சந்தர்ப்பங்களிலேயே இவ் வதிகாரிகளுக்குச் செலவுப்படி (allowance) தரப்பட்டது. கௌரவ அதிகாரிகளாகவே அமைதிக் காவலர்கள் பணியாற்ற வேண்டியிருந்தும், இப் பதவிக்குப் பலத்த போட்டி இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

பாலங்கள், பாதைகளைச் செப்பனிடுதல், தொழிலாளர்களின் கூலிகளை நிர்ணயித்தல் போன்ற பணிகளைப் பெற்றிருந்ததுடன்

தங்கள் பகுதிகளிலே குற்றங்கள் நடக்கவிடாமல் தடுத்து, குற்ற வாளிகளைச் சட்டத்தின்முன் நிறுத்த வேண்டிய பொறுப்பையும் பெற்றிருந்தனர். அரசுக்கு எதிராக நடத்தப்படும் ஆர்ப்பாட்டங் களையும் குழப்பங்களையும் தவிர்க்க வேண்டியதும் இவர்களின் பொறுப்பாக இருந்தது.

மேலும் பொருள்களின் விலையினை நிர்ணயித்தல், எடை அளவு (Weight and Measures) போன்றவற்றைக் கண்காணித்தல் போன்ற சில பணிகளுடன் வாணிபம் ஒழுங்காக நடக்கின்றதா என்பதைக் கண்காணிக்கும் அதிகாரிகளாகவும், மதுக்கடை திறக்க அனுமதி வழங்கும் அதிகாரிகளாகவும் இவர்கள் செயலாற்றினர். சட்டத்தை மீற முயன்றவர்களையும் மீறினவர்களையும் தண்டிக்கும் அதிகாரமும் இவர்கள் பெற்றிருந்தனர். குற்றங்களைப்பற்றிய செய்திகளை இவர்களுக்கு அப்போதைக்கப்போது தெரிவிக்கக் கான்ஸ்டபிள் என்ற ஒரு தல அதிகாரியை நியமிக்கும் பொறுப் பையும் இவர்களே கொண்டிருந்தனர்.

நாட்டிற்கு வரும் அன்னியர்கள் சந்தேகத்திற்குரியவர்களாக இருந்தால், அவர்களைக் கண்காணிக்கும் பணியும் இவர்களுக்கே அளிக்கப்பட்டது. போப்பாண்டவர் சார்பிலே டியூடர் காலத்தில் அரசுக்கு விரோதமான காரியங்களில் ஈடுபட்டவர்களைத் தண்டிக்க வேண்டிய அதிகாரமும் இவர்களுக்கே கொடுக்கப் பட்டிருந்தது.

இரவலர் சட்டங்களை அமல்படுத்த வேண்டிய மிக முக்கிய மான பொறுப்பும் இவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது. அச் சட்டத்தின்படி வேலைக்கு உதவாத இரவலர்களைப் பராமரித்தும் வேலைக்கு உகந்த உடல்பலத்தைப் பெற்றிருந்தோரைத் தொழில் இல்லங்களில் சேர்த்தும், அங்கிருந்து தப்பியோட முயற்சித் தோரைத் தொழில் இல்லச் சிறைச்சாலையில் கட்டாயமாக அடைத்தும் இவர்கள் தங்கள் பணிகளைச் செய்துவந்தனர். இரவலர் சட்டத்தின்படி வேலை செய்ய மறுப்பவர்களுக்குத் தண்டனை வழங்கும் அதிகாரமும், இரவலர் நிவாரணத்திற்காகச் செலவிடப்படும் தொகைக்கு ஈடாகப் பாரீஷில் உள்ள நிலம், வீடு ஆகியவற்றின்மீது வரிகளைச் சுமத்தவும், அவ் வரிகளை வசூலித்துத் தக்க வழியில் செலவிட நியமிக்கப்பட்டிருந்த தனிப்பட்ட அதிகாரிகளான மேற்பார்வையாளர்களை நியமிக்கும் அதிகாரமும் இவர்களுக்கே இருந்துவந்தது.

தல ஆட்சியாளர்களாக விளங்கிய இவ் வதிகாரிகள், நீதிபதி களாகவும் பணியாற்றினர். வழக்குகளைப்பற்றிய பூர்வாங்க

விசாரணை நடத்திச் சிறு வழக்குகளைத் தீர்த்து வைத்தனர். ஆண்டுக்கு நான்குமுறை ஒரு குறிப்பிட்ட ஷயரைச் சேர்ந்த எல்லா அமைதிக் காவலர்களும் ஒன்றுகூட வேண்டும் என்ற ஏற்பாடு ஒன்று செய்யப்பட்டிருந்தது. அங்ஙனம் அவர்கள் கூடிய கூட்டத்திற்குக் 'காலாண்டுப் பருவ மேல் வழக்கு மன்றம்' (Quarter Session) என்று பெயரளிக்கப்பட்டது. இம் மன்றம் முக்கியமான வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தைப் பெற்றிருந்தது.

பற்பல அலுவல்களைக் கொண்ட இப் பதவியைப் பெற்றிருந்த அமைதிக் காவலர்கள் நாளாவட்டத்தில் அரசியல் துறையில் பயிற்சி பெற்றவர்களாக விளங்கினர். இவர்களிலிருந்தே பாராளுமன்ற உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தல அரசாங்கத்தில் பெற்ற அனுபவம் இவர்களுக்கு மத்திய அரசாங்கத்தில் பயன் கொடுத்தது.

தல அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் டியூடர் ஆட்சியாளர்களுக்குக் கண்களாகவும் காதுகளாகவும் விளங்கிய இவ்வதிகாரிகள், அரசரின் விசுவாசிகளாகவும் உண்மை ஊழியர்களாகவும் இருந்து, அரசுக்கும் மக்களுக்குமிடையே ஒரு பிணைப்பை ஏற்படுத்தியிருந்தனர்.

டியூடர் காலத்தில் நீதி நிருவாகம் தல ஆட்சியுடன் இணைந்தே இருந்தது. அரசரின் ஆலோசனைச் சபையைச் சார்ந்த சுற்றிவரும் நடுவர்கள் தங்கள் பயணத்தின்போது நீதி விசாரணையை நடத்தியதுடன், அமைதிக் காவலர்களின் வேலையினையும் மேற்பார்வையிட்டனர்.

டியூடர்களின் அரசியல் அமைப்பில் பிரிவி கவுன்சில், அரசரின் வல்லாட்சிக்கு உறுதுணையாகச் செயல்பட்டதுபோல அதன் அடித்தளத்தில் அமைதிக் காவலர்களடங்கிய தல ஆட்சியும் விளங்கியது.

டியூடர்கள் அமைத்துவிட்டுச் சென்ற தல ஆட்சி முறையானது, அவர்களது ஆக்கத் திறனின் அழியாத நினைவுச் சின்னமாகவே விளங்குகிறது.

# 14. எலிசபெத் காலத்திய சமூகப் பொருளாதார நிலைமை

**சமூகம் :** எலிசபெத் அரசியாரின் காலம், இங்கிலாந்தின் பொற்காலமாக (Golden Age) மதிக்கப்படும் அளவுக்கு அதன் தேசியத் திருச்சபை உருவாக்கப்பட்டிருந்தது; சுதந்திரம் காக்கப் பட்டிருந்தது; கடல் ஆதிக்கம் பெறப்பட்டது; வர்த்தக, குடியேற் றங்களில் வளர்ச்சி இருந்தது; இலக்கிய மறுமலர்ச்சி உச்ச கட்டத்தை அடைந்திருந்தது. இவற்றுடன் இவ் வரசியாரின் காலத்தில் ஆங்கில சமூக, பொருளாதாரத் துறைகளிலும் சில மாற்றங்கள் ஏற்பட்டிருந்தன. இவற்றுள் சில, பெருமைப் படத்தக்கனவாகவும் சில, சிக்கல்களை உருவாக்கியனவாகவும் இருந்தன.

ரோசாச் சின்னப் போரின் விளைவாக நிலமானியப் பிரபுத் துவம் அழிந்துபட்டதுபோல், மடாலயக் கலைப்பினால் சமயம் சார்ந்த பிரபுக்களும் (Ecclesiastical Lords) சிதைவுபட்டனர். இதனை ஒட்டி டியுடர் ஆட்சியாளர்களால் ஒரு புதிய வகுப்பு, நாட்டிலே உருவாக்கப்பட்டது. இவ் வகுப்பினரே எலிசபெத் காலத்தின் பல ஆக்கச் செயல்களுக்குக் காரணமாக விளங்கினர்.

ஆங்கிலச் சமுதாயத்தில் தங்களின் பூர்வ குணங்களை மறந்த பிரபுக்களும், பெரு நிலக்கிழார்களான ஸ்கொயர்களும் (Squires), சிறு நிலக்கிழார்களான யோமென்களும் (Yeomen), நாட்டில் பெருவாரியாக இருந்த உழவர்களும், நகர்ப் புறங்களில் இருந்த வணிகர்களும், வேறு பல தொழிலாளர்களும், கலைஞர் களும் இருந்தபோதிலும் அப் புதிய உயர் வகுப்பை (New Aristocracy) மையமாகக்கொண்டே அச் சமுதாயம் உழன்றது.

சமுதாயத்தின் மேல்தளத்தில் இருந்த கனவான்களும் பிரபுக் களும் பழைய நிலைமையை மறந்து, தங்களது வாழ்க்கை முறை களை மாற்றியமைத்துக் கொண்டனர். இருப்பினும், இவர் களில் இன்னும் சிலர் பழைய நிலைமையிலேயே வாழ்ந்துவந்த னர். புதிய நிலைமையில் வாழ்ந்தவர்களாகட்டும், பழைய

நிலைமையில் இன்னும் வாழ்ந்து வந்தவர்களாகட்டும் தற்போது புதிய பொறுப்புணர்ச்சியைப் பெற்றிருந்தனர். கேளிக்கைகளும் கோலாகலமும் விருந்தும் வேடிக்கையும் நிரம்பியிருந்த இவர்களின் வாழ்க்கையில் இப்போது புதிய கட்டுப்பாடும் கடமையுணர்ச்சியும் தோன்றியிருந்தன. கனவான்களுக்கு அடுத்த நிலையில் ஆங்கில சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த ஸ்கொயர்கள் கல்வியறிவு இல்லாதவர்களாக இருந்திருந்தும் நல்ல அரசியல் உணர்வு பெற்றவர்களாக விளங்கினர். இவர்களுக்கு அடுத்தபடியாகச் சமுதாயத்தில் முக்கிய இடத்தைப் பெற்றவர்களே யோமென் வகுப்பினராவர். வருடத்திற்கு நாற்பது ஷில்லிங் நில வருமானத்தைப் பெற்றிருந்த இவர்களே பாராளுமன்றத் தேர்தலுக்கான வாக்குரிமையையும் அடைந்திருந்தார்கள். சமுதாயத்தின் பெரும்பகுதியினரான யோமென்களே இந் நாட்டின் முதுகெலும்பாகத் திகழ்ந்தனர். சமுதாயத்தின் கடைநிலையில் ஏழை எளிய விவசாயிகள் இருந்தனர். இவர்களின் உரிமைகள் இன்னும் மதிக்கப்படவில்லை; குறைகளும் போதிய அளவிற்குத் தீர்க்கப்படவில்லை. ஆங்கில சமுதாயத்தில் இக் கடைநிலை மக்களே எல்லோராலும் புறக்கணிக்கப்பட்டவர்களாக இருந்தனர். இவ் வகுப்பினரின் இன்னல்கள் தீர்க்கப்படும் வகையில் எலிசபெத் அரசியார், ஓர் இரவலர் சட்டத்தைக் கொண்டு வந்ததை இங்கு நினைவுப்படுத்திக்கொள்ள வேண்டும்.

சுருக்கமாகச் சொன்னால், அரசியல் பணிகளிலும் போர்ச் சேவைகளிலும் புதிய உயர் வகுப்பும் பழைய கனவான்களும் இவ் வரசியாருக்கு உதவியாக இருந்துவர, ஸ்கொயர்கள் தல ஆட்சியிலும் சிறு நிலக் கிழார்களும் விவசாயக் குடியினரும் அரசியல் விழிப்புணர்ச்சி பெற்றவர்களாகவும் உரிமை எதுவும் இல்லாதவர்களாகவும் இருந்து வந்தனர்.

இவர்களுக்கு அடுத்தபடியாக, வர்த்தக வகுப்பும் நாட்டிலே. முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. இவ் வரசியாரின் காலத்தில் துவக்கப்பட்ட பல வியாபாரக் கம்பெனிகள் இவ் வகுப்பினரின் ஊக்கத்தினால் கிடைத்த ஆக்கங்களாக இருந்தன. இவர்கள் தங்களுக்குள்ளாகச் சங்கங்களை ஏற்படுத்திக் கொண்டு அரசியாரிடமிருந்து உரிமைச் சாசனங்களைப் பெற்றுப் பிற நாடுகளோடு இலாபகரமான வியாபாரம் செய்து தங்கள் நாட்டுக்குப் பொருளீட்டிக் கொடுத்தனர்.

இங்கிலாந்திலும் வேல்ஸிலும் எலிசபெத் அரசியார் காலத்தில் நூறு மில்லியன் மக்களுக்குமேல் வாழ்ந்தனர்; இவர்களில்

ஐந்தில் நான்கு பங்கினர் நாட்டுப்புறங்களிலும் ஏனையோர் நகரங்களிலும் வாழ்ந்து வந்தனர். யார்க், நார்விச், பிரிஸ்டல் ஆகிய நகரங்கள் ஜனத்தொகையில் நிறைந்து விளங்கின. நாட்டின் தலைநகரமான இலண்டன் 2,00,000 மக்களைக் கொண்டதாயிருந்தது. இந் நகரில் உள்ளவர்களுக்குத் தேவையான உணவுப் பண்டங்களும், மற்றப் பொருள்களும் உள்நாட்டுக் கவுன்சில்களிலிருந்து கிடைத்து வந்தன. நாட்டின் அரசியலில் உயிர் நாடியாக விளங்கிய இலண்டன் மாநகரம் வியாபாரத்திற்கும் கேந்திரமாக விளங்கியது. சர் தாமஸ் கிரெஷாம் (Sir Thomas Gresham) என்ற பிரபல வியாபாரி, இலண்டனில் 'ராயல் எக்ஸ்சேஞ்ச்' (Royal Exchange) என்ற பொருளாதார நிறுவனத்தை ஸ்தாபித்தார்.

**பொருளாதாரம் :** இங்கிலாந்தின் லேக் மாவட்டத்தில் செம்பும் மெந்திப் (Mendip) மலைகளில் ஈயமும் மிகுதியாகக் கிடைத்ததால் இரும்பு, நிலக்கரித் தொழில்களோடு இவையும் சேர்ந்து வளர்ந்தன. இங்கிலாந்தில் கிடைத்த இரும்பு முதல் தரமாகக் கருதப்பட்டதால் இதற்கு நிறைய கிராக்கி இருந்தது. டின்சைடு, டர்ஹாம் பகுதிகளில் நிலக்கரியும் மிகுதியாகக் கிடைத்து வந்தது. இதன் விளைவாகச் சுரங்கத் தொழிலும் இதைச் சார்ந்த உலோகத் தொழிலும் நன்கு விருத்தியடைந்தன.

நாட்டில் இதுவரையிலிருந்து வந்த உப்புத் தயாரிப்பும் இரண்டு மடங்காக அதிகரித்தது.

சமய புரட்சியின் எதிரொலியாக ஐரோப்பிய நாடுகளிலிருந்து (ஃபிரான்சு, நெதர்லாந்து) இங்கிலாந்துக்கு ஓடிவந்த பிராடஸ்டன்டுகள், ஆங்கிலேயருக்குப் பல தொழில்களையும் கைத்திறன் இரகசியங்களையும் கற்றுக்கொடுத்தனர். ஆங்கிலேயருக்கு லினன் துணி நெய்யும் கலை ஃபிரெஞ்சுக்காரர்களால் கற்றுக்கொடுக்கப்பட்டதெனின், பேய்ஸ் (Baiz) என்ற நேர்த்தியான வேலைப்பாடமைந்த துணிகளைத் தயாரிக்க டச்சுக்காரர்கள் கற்றுக் கொடுத்தனர். துணி தயாரிப்புத் தொழில் அல்லாமல், கண்ணாடித் தொழிலும், வெயின் ஸ்காட் என்ற மரச்சிற்ப வேலைப்பாட்டுத் தொழிலும் வளர்ந்தன. நாட்டின் தொழில்களை அந்நிய நாடுகளின் வியாபாரப் போட்டியிலிருந்து காப்பாற்ற 'மெர்கன்டைல் முறை'யும் பின்பற்றப்பட்டது.

சில்டெர்ன்ஸ் (Chilterns), டார்செட் ஹைட்ஸ் (Dorset Heights), வைட் தீவு, காட்ஸ் வோல்டு, லிங்கன். நார்ஃபோக்

ஆகிய இடங்களிலிருந்து கம்பளி அதிகமாகக் கிடைத்து வந்த தால் கம்பளித் தொழிலும் சிறப்புற்று விளங்கியது.

அயல்நாட்டு வியாபாரத்தில் கம்பளி அல்லாது, விளைச்சல் மிகுதியாக இருந்த ஆண்டுகளில் உணவுத் தானியங்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. அன்டிங்டன்ஷயர் (Huntingdonshire), கேம்பிரிட்ஜ்ஷயர் (Cambridgeshire), மற்றும் அவுஸ் (Ouse) பள்ளத்தாக்கிலிருந்தும் ஏராளமான உணவுத் தானியங்கள் வெளி நாட்டுக்கு (மேற்கு ஐரோப்பாவுக்கு) ஏற்றுமதி செய்யப்பட்டன.

உள்நாட்டு வியாபாரமும் சீரிய முறையிலே இருந்து வந்தது. ஸ்டூர்பிரிட்ஜ் (Stourbridge) என்ற இடத்தில் நடந்த சந்தை, இங்கிலாந்திலேயே பெரிய அங்காடியாக விளங்கியது. இங்கு எல்லா விதமான பொருள்களும் மொத்தமாகவும் சில்லறை யாகவும் விற்கப்பட்டன.

நாட்டில் வளர்ந்து வந்த பற்பல தொழில்களின் தரத்தை உயர்த்துவதற்காக இவ் வரசியார், தொழிற்பயிற்சி பெறுவோர் சட்டமொன்றையும் (Statute of Apprentices) கொண்டு வந்தார். ஒரு தொழிலில் ஈடுபட விரும்புவோர், அத் தொழிலில் ஏழு ஆண்டுகள் பயிற்சி பெறவேண்டுமென்றும், இருபத்துநான்கு வயது முடிவதற்குமுன் தனிமுறையில் தொழில் தயாரிப்பில் இறங்கக் கூடாதெனவும் கட்டுப்படுத்தப்பட்டனர்.

தொழில், வியாபார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டையிட்டு வந்த கில்டு முறை, எலிசபெத் ஆட்சியில் முற்றிலும் மறைந்தது. இதனால், வியாபாரத்தில் உற்சாகம் மிகுந்த பலரால் கூட்டு முதல் போடப்பட்ட கூட்டுக் கழகங்கள் (Joint Stock Companies) நாட்டிலே உருவாக்கப்பட்டன.

பிரபுக்களின் படைக்கலைப்பினாலும் மடாலயக் கலைப்பினாலும் நாட்டிலே இருந்துவந்த வேலையில்லாத் திண்டாட்டம், கம்பளி வியாபாரத்தில் நிறைய இலாபம் பெறவேண்டிப் பல விளைச்சல் நிலங்கள் வேலியிடப்பட்ட மேய்ச்சல் நிலங்களாக மாற்றப் பட்டதால் மேலும் அதிகரித்திருந்தது. இதனால், நாட்டில் பல எளியோர் பிச்சையெடுக்கத் தொடங்கினர். இத் தொல்லையைத் தீர்க்க எலிசபெத், கி.பி. 1601ஆம் ஆண்டில் இரவலர் சட்டம் (Poor Law) ஒன்றைக் கொண்டு வந்தார்.

இதன்படி, உழைக்கச் சக்தியற்ற இரவலர்களுக்கு அரசாங்கம் உதவியளித்தது. சோம்பேறிகள், உழைத்து வாழ

மறுத்தவர்கள் தொழில் நிலையங்களில் பலவந்தமாகச் சேர்க்கப்பட்டு வேலை வழங்கப்பட்டனர். இதற்கு மறுத்தோர், ஒழுக்கத் திருத்த நிலையங்களில் (House of Convection) அடைக்கப்பட்டனர்.

ஒவ்வொரு நாட்டுப் பிரிவிலும் (பாரீஷ்) அமைதிக்காவலர் (Justice of Peace) தலைமையில் இப் பிச்சைக்காரர் தொல்லைகளைத் தீர்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இரவலர் சட்டத்தை அமல்படுத்த ஒவ்வொரு பாரிஷிலும் மூன்று கண்காணிப்பாளர்கள் (Overseers) அமர்த்தப்பட்டனர். இரவலர்களுக்கு உதவ, பண வசூல் செய்ய வேண்டியிருந்த பாரிஷ்கள், தத்தம் நிர்வாகச் சபையான 'வெஸ்ட்ரிக்கள்' (Vestry) மூலமாகப் பாரிஷ் மக்களிடமிருந்து 'வறியோர் வரி' (Poor rate) என்ற வரியை வசூல்செய்தன.

எலிசபெத் அரசியாரால் கொண்டு வரப்பட்ட இரவலர் சட்டம், அடுத்த இருநூறாண்டுகளுக்கு இங்கிலாந்தில் அமலில் இருந்து வந்தது. இச் சட்டத்தில் சில குறைகள் இருந்தும், நாட்டில் இருந்துவந்த இரவலர் தொல்லைகளை இஃது ஓரளவு சமாளித்ததாகவே இருந்தது.

தம் ஆட்சிக்காலத்தில் ஒரு புதிய இங்கிலாந்தை உருவாக்கி, அதன் வரலாற்றுத் தலைவியாக வாழ்ந்த முதலாம் எலிசபெத், கன்னியரசியாகவே தம் எழுபதாவது வயதில் (கி.பி. 1603) காலமானார்.

இத்துடன், டியூடர் அரச மரபு முடிந்தது.

எட்டாம் ஹென்றிக்கு வேறு வாரிசு இல்லாததாலும், மேரி டியூடருக்கு மகப்பேறே இல்லாததாலும், எலிசபெத் கன்னியாகவே காலமானதாலும், ஸ்காட் மேரியின் மகனை ஆறும் ஜேம்ஸ் (James VI) என்ற ஸ்காட்லாந்து மன்னர், தம் தாய் வழியிலேயே ஏழாம் ஹென்றிக்கு உதவியாளரானதால், கி.பி. 1603-ல் எலிசபெத்தின் வாரிசாகவும் இங்கிலாந்தின் மன்னராகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

அவரால், முதலாம் ஜேம்சுடன் தொடங்கியதே ஸ்டுவர்டுகளின் காலமாகும்.


மெர்சிய மன்னர்கள்
பென்டா (626 - 655)
அயோவா (இற - 641)
உல்ஷியர் (657 - 674)
எதெல்ரெடு (674 - 740)
சென்ரெடு (704 - 709)
சியோல்ரெடு (709 - 716)
ஆபா கொள்பெயர் (755 - 796)
தெல்பால்டு (பெயர்) (716 - 755)

## நார்த்தம்பிரிய ஆதிக்கம்



**வெஸ்ஸெக்ஸ் ஆதிக்கம்**

ஜன் (688 - 729)
இன்கில்டு
மூன்று தலைமுறைகள்
எக்பெர்ட் (802 - 839)
எதல்வுல்ப் (839 - 858)

எதல்பால்டு (858 - 860)
எதல்பெர்ட் (860 - 865)
முதலாம் எதல்ரெடு (865 - 871)
ஆல்ஃபிரடு (மகா) (871 - 899)

மூத்த எட்வர்டு (899 - 924)
எதல் பிலேடு (மெர்சிச் சீமாட்டி) (இற 918)

எதல்ஸ்டன் (924 - 939)
எடித்-ஆட்டோ (மகா)
எட்மண்டு (939 - 946)
எட்ரெடு (946 - 955)
எட்கிபு = எளிய சார்லஸ்

எட்வி (955 - 959)
எட்கார் (959 - 975)

தியாகி எட்வர்டு (975 - 978)
இரண்டாம் எதல்ரெடு (978 - 1016)

எட்மண்டு (அயரன் சைடு) (1016)
ஆல்ஃபிரடு (கொலையுண்டவர்) (1036)
எட்வர்டு (கன்பெசர்) (1042 - 1066)

எட்வர்டு (இற-1057)

எட்கார் ஏதெலிங்
மார்கரெட் ஸ்காட்லாந்து அரசி

## நார்மானியரும் ஆஞ்சுவினரும்

இராபர்ட்
நார்மண்டி டியூக்
(இற - 1035)
|
வெற்றி வீரர் வில்லியம் = பிளான்டர் மாடில்டா
(இற - 1087)

- இராபர்ட்
  - வில்லியம் கிளிட்டோ
- வில்லியம் ரூபஸ் (இற - 1100)
- அடிலா = பிலாய் ஸ்டீபன்
  - ஸ்டீபன் (இற - 1154)
- முதலாம் ஹென்றி = எடித் (ஸ்காட்டிய அரசி மார்கரெட்டின் மகள்)
  (இற - 1135)
  - மாடில்டா பேரரசி = ஆஞ்சு ஜியாப்ரே
    - இரண்டாம் ஹென்றி = அக்குவிடெய்ன் எவியனர்
      (இற - 1189)
      - ஹென்றி இளையவர் (இள - 1183)
      - மாடில்டா = சிங்க நெஞ்சர் ஹென்றி
        - பேரரசர் நான்காம் ஆட்டோ
      - முதலாம் ரிச்சர்டு (இற. 1199)
      - ஜியாப்ரே = பிரிட்டானி யின் கான்ஸ் டன்ஸ்
        - ஆர்தர்
      - ஜான் (இற- 1216)
        - மூன்றாம் ஹென்றி (இற - 1272)
        - கார்ன்வால் பிரபு ரிச்சர்டு
        - ஜோன் = ஸ்காட்டிய அரசர் இரண்டாம் அலெக்ஸாந்தர்
        - இசபெல்லா = பேரரசர் இரண்டாம் ஃபிரடெரிக்
        - எவியனர் = சைமன் டி-மான்ட்ஃபார்ட்
      - ஜோன் = சிசிலி இரண்டாம் வில்லியம்
      - எவியனர் = காஸ்டில் அரசர் ஒன்பதாம் அல்பான்சோ

## டேனியரும் நார்மானியரும்



## லங்காஸ்டிரிய, யார்க்கிய வமிசங்கள்



# இங்கிலாந்தை ஆண்ட அரசர் அரசியரின் பட்டியல்

## நார்த்தம்பிரியாவின் முக்கியமான மன்னர்கள்

| | கி. பி. |
|---|---|
| எதல்பிரித் | 593 — 616 |
| எட்வின் | 616 — 632 |
| ஆஸ்வால்டு | 633 — 641 |
| ஆஸ்வி | 655 — 670 |
| எக்பிரித் | 670 — 685 |

## மெர்சியாவின் முக்கியமான மன்னர்கள்

| | |
|---|---|
| பெண்டா | 626 — 655 |
| எதல்பால்டு | 716 — 755 |
| ஆபா | 755 — 796 |
| சேனுல்ப் | 796 — 821 |

## வெஸ்ஸெக்ஸின் முக்கியமான மன்னர்கள்

| | |
|---|---|
| எக்பெர்ட் | 802 — 839 |
| எதல்வுல்ப் | 839 — 858 |
| எதல்பால்டு, எதல்பெர்ட், எதல்ரெடு | 858 — 871 |
| ஆல்ஃபிரடு | 871 — 899 |

## ஆங்கிலோ சாக்சானியர்கள்

| | |
|---|---|
| எக்பர்டு | 802 — 839 |
| எத்தல் உல்ஃப் | 839 — 858 |
| எத்தல்பால்டு | 858 — 860 |
| எத்தல்ரெடு | 866 — 871 |
| ஆல்ஃபிரடு | 871 — 901 |
| மூத்த எட்வர்டு | 901 — 925 |
| ஏத்தல்ஸ்டன் | 925 — 940 |
| எட்மண்டு | 940 — 946 |
| எட்ரெடு | 946 — 955 |
| எட்வின் | 955 — 959 |
| எட்கர் | 959 — 975 |
| தியாகி எட்வர்டு | 975 — 978 |
| எத்தல்ரெடு | 978 — 1016 |
| எட்மண்டு அய்ரன்சைட் | 1016 — |

## டேனியர்கள்

| | கி.பி. |
|---|---|
| கான்யூட் | 1016 — 1035 |
| ஹெரால்டு | 1035 — 1040 |
| ஹார்டி கான்யூட் | 1040 — 1042 |

## நார்மண்டியர்

| | |
|---|---|
| முதலாம் வில்லியம் | 1066 — 1087 |
| இரண்டாம் வில்லியம் | 1087 — 1100 |
| முதலாம் ஹென்றி | 1100 — 1135 |
| ஸ்டீஃபன் | 1135 — 1154 |

## பிளன்டாஜெனட்டுகள்

| | |
|---|---|
| இரண்டாம் ஹென்றி | 1154 — 1189 |
| முதலாம் ரிச்சர்டு | 1189 — 1199 |
| ஜான் | 1199 — 1216 |
| மூன்றும் ஹென்றி | 1216 — 1272 |
| முதலாம் எட்வர்டு | 1272 — 1307 |
| இரண்டாம் எட்வர்டு | 1307 — 1327 |
| மூன்றும் எட்வர்டு | 1327 — 1377 |
| இரண்டாம் ரிச்சர்டு | 1377 — 1399 |

## லங்காஸ்டிரியர்கள்

| | |
|---|---|
| நான்காம் ஹென்றி | 1399 — 1413 |
| ஐந்தாம் ஹென்றி | 1413 — 1422 |
| ஆறும் ஹென்றி | 1422 — 1461 |

## யார்க்கியர்கள்

| | |
|---|---|
| நான்காம் எட்வர்டு | 1461 — 1483 |
| ஐந்தாம் எட்வர்டு | 1483 — |
| மூன்றும் ரிச்சர்டு | 1483 — 1475 |

## டியூடர்கள்

| | |
|---|---|
| ஏழாம் ஹென்றி | 1485 — 1509 |
| எட்டாம் ஹென்றி | 1509 — 1547 |
| ஆறும் எட்வர்டு | 1547 — 1553 |
| மேரி டியூடர் | 1553 — 1558 |
| முதலாம் எலிசபெத் | 1558 — 1603 |

# முக்கிய கால விவரப் பட்டியல்

| | | |
|---|---|---|
| கி.மு. 54—55 | | சீசரின் படையெடுப்பு |
| கி.மு. 30—14 | கி.பி. | அகஸ்டஸ், முதல் ரோமப்பேரரசர் |
| 43 | ,, | ரோமானியப் படையெடுப்பு ஆரம்பம் |
| 47—53 | ,, | செய்ன்ட் பௌலின், கிறித்துவப் பிரச்சாரப் பயணங்கள் |
| 122 | ,, | ஹாட்ராய்ன் மதில் |
| 306 | ,, | கான்ஸ்டான்டைன் (முதல் கிறித்துவப் பேரரசர்) |
| 410 | ,, | பிரிட்டனிலிருந்து ரோமானியர் விலகுதல் |
| 410 | ,, | ரோம்மீது கோத்துகள் படையெடுப்பு |
| 450—500 | ,, | ஆங்கிலோ - சாக்சானியர்கள் வருகை |
| 476 | ,, | ரோமப் பேரரசு வீழ்ச்சி |
| 597 | ,, | செய்ன்ட் அகஸ்டின் வருகை |
| 590—604 | ,, | (போப்பாண்டவர்) மகா கிரிகரி |
| 613—685 | ,, | நார்த்தம்பிரியாவின் பேராதிக்கம் |
| 800 | ,, | பேரரசர் சார்லமேன் |
| 871 | ,, | ஆல்ஃபிரடு பட்டமெய்துதல் |
| 885—886 | ,, | மெர்சியாவின் பேராதிக்கம் |
| 886 | ,, | ஆல்ஃபிரடு, கத்ரம் சமாதானம் |
| 960 | ,, | டன்ஸ்டன் ஆர்ச் பிஷப்பாதல் |
| 962 | ,, | புனித ரோமப் பேரரசர், ஓடோ |
| 1018 | ,, | ஹார்ஹாம் சண்டை |
| 1016—35 | ,, | கான்யூட் (டேனிய) மன்னர் |
| 1042—66 | ,, | எட்வர்டு அதிபக்தர் |
| 1066 | ,, | ஹேஸ்டிங்ஸ் சண்டை |
| 1066—87 | ,, | படையெடுப்பாளர் வில்லியம் |
| 1073—85 | ,, | போப், ஏழாம் கிரிகரி |
| | ,, | டூம்ஸ் டே புத்தகம் |
| 1076 | ,, | துருக்கியர்களால் ஜெருசலம் கைப்பற்றப்படல் |
| 1096 | ,, | முதல் சிலுவைப் போர் |
| 1153 | ,, | வாலிங்போர்டு உடன்பாடு |

| | | |
|---|---|---|
| 1154—89 | கி.பி. | மூன்றும் சிலுவைப் போர் |
| 1215 | ,, | மகா சாசனம் |
| 1264 | ,, | லீவ்ஸ் சண்டை |
| 1265 | ,, | சைமனின் பாராளுமன்றம் |
| 1265 | ,, | ஈவ்ஷாம் சண்டை |
| 1282–84 | ,, | வேல்ஸ் இணைக்கப்படல் |
| 1295 | ,, | மாதிரிப் பாராளுமன்றம் |
| 1314 | ,, | பானக்பர்ன் சண்டை |
| 1338 | ,, | நூறாண்டுப் போர் ஆரம்பம் |
| 1340 | ,, | ஸ்லுயிஸ் சண்டை |
| 1346 | ,, | கிரெஸி சண்டை |
| 1347 | ,, | கலே துறைமுகம் முற்றுகை |
| 1348–49 | ,, | கருங்கொள்ளை நோய் |
| 1356 | ,, | பாய்டியர்ஸ் சண்டை |
| 1360 | ,, | பிரிடெக்னி உடன்பாடு |
| 1376 | ,, | நல்ல பாராளுமன்றம் கூட்டப்படல் |
| 1381 | ,, | குடியானவர் கலகம் |
| 1382 | ,, | விக்ளிஃபின் விவிலியம் |
| 1403 | ,, | ஷ்ரூஸ்பரி சண்டை |
| 1415 | ,, | அஜின் கோர்ட் சண்டை |
| 1420 | ,, | டிராய்ஸ் உடன்பாடு |
| 1431 | ,, | வீர ஜோனின் மரணம் |
| 1453 | ,, | நூறாண்டுப் போர் முடிவு |
| 1553 | ,, | கான்ஸ்டான்டிநோபிள் துருக்கியர் வசமாதல் |
| 1455 | ,, | ஆல்பான்ஸ் சண்டை |
| 1460 | , | வேக்ஃபீல்டு சண்டை |
| 1461 | ,, | டௌடன் சண்டை |
| 1471 | ,, | பார்னட் சண்டை |
| 1471 | ,, | டியூக்ஸ்பரி சண்டை |
| 1476 | ,, | காக்ஸ்டன் அச்சு இயந்திரம் |
| 1485 | ,, | போஸ்வர்த் சண்டை |
| 1492 | ,, | கொலம்பஸ் அமெரிக்கக் கண்டு பிடிப்பு |
| 1498 | ,, | வாஸ்-கோ-ட-காமா இந்தியாவுக்கு வழிகாணல் |
| 1516 | ,, | 'உதோபியா' வெளியிடப்படல் |
| 1517 | ,, | மார்டின் லூதரின் சீர்திருத்தம் |
| 1529–36 | ,, | சமயப்புரட்சியின் நீண்ட பாராளுமன்றம் |

